17-3




ஸ்ரீ

ஸ்ரீபாண்டுரங்காயநம:

# ஸ்ரீமகா பக்தவிஜய அட்டவணை.

(மூன்றும்பாகம்)

# காபிரைட் அறிவிப்பு.



இந்த 71-தாசர்கள் சரித்திரம் கொண்ட ஸ்ரீமகா பக்தவிஜயம் மூன்றும்பாகம். நான்காம்பாகம் என்னும் நூலை, ம-ா-ா-ஸ்ரீ தக்கோலம். இராமசாமி நாயுடு அவர்கள் முயற்சியினுல், வேலூர். கன்னையதாசர் அவர்களைக்கொண்டு எழுதுவித்துத் தன் பெயரால் ரிஜிஸ்டர் காபிரயிட்செய்து விற்பனைசெய்து வந்தனர். அவருக்குப்பின் ஷை த. இராமசாமிநாயுடு அவர்கள் ஜேஷ்ட குமாரர் T. R. கன்னையநாயுடு அனுபவித்துவந்ததை, 1927-ஹு நவம்பர்மீ 21வ ஷை நாயுடுயிடம் அக்காபிரயிட்டின் சுதந்தரத்தை, ம-ா-ா-ஸ்ரீ, C. A. பாலசுந்தர முதலியார் கிரயத்திற்குப் பெற்றனர். அதனை அடியில் கையொப்பமிட்டுள்ள யான் ஷை முதலியாரிடம் மேற்படி புத்தகத்தின் காபிரயிட் சுதந்தரத்தைக் கிரயத்திற்குப்பெற்று அதனையே மூன்றும்பாகம், நான்காம்பாகம், ஐந்தாம்பாகமாகவும் பாகுபடுத்தியதுடன் பிரம்மஸ்ரீ ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீனிவாச ஐயங்கார் அவர்களைக்கொண்டு ஆறும்பாகம் எழுதுவித்து அச்சிட்டு, மகாகனம்பொருந்திய கவர்ன்மெண்டார் அவர்கள் காப்பிரைட் சட்டத்தின்படி ரிஜிஸ்டர் செய்திருக்கின்றேன். ஆகையால் இதனை எனது உத்தரவின்றி யாரேனும் அச்சிடுவரேல் யான் கோரும் சகல கஷ்ட நஷ்டங்களுக்கும் உட்படுவார்கள் என்பதை இதன்மூலம் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு.

அ. முத்துவடிவேல்முதலியார்

நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி,

சென்னை.

ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநமஃ

# ஸ்ரீமகா பக்தவிஜயம் மூன்றாம்பாகம்.

முதலாவது

## துருவ சரித்திரம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வாடினேன்வாடிவருந்தினேன் மனத்தால் பெருந்துயரிடும்பையில்பிறந்து
கூடினேன்கூடி இளையவர்தம்மோடு அவர்தரும்கலவியேகருதி
ஓடினேன் ஓடிஉய்வதோர்பொருளால் உணர்வெனும்பெரும்பதம்தெரிந்து
நாடினேன்நாடிநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம்.

கலி விருத்தம்.

தூரியமாமனதுள்ள துருவனும்
ஹரியைஸ்தோத்திரஞ் செய்தேயவரிடத்
தரியநிதிவர மெதிலா மடைந்துதன்
னூரியராச்சிய மாண்டதுரைசெய்வாம்.

துருவனனவன் ஹரியை ஸ்தோத்திரம்பண்ணி அவரிடத்தில் நின்றும் அபீஷ்டமான வரங்களெல்லாம் அடைந்த பிரீதியினல் பிதாவினலே கொடுக்கப்பட்ட ராச்சியத்தைப் பரிபாலனஞ் செய்தானென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீமகாலட்சுமி கடாக்ஷம்பொருந்திய கமலாபுரமென்னும் நகரமானது கிருதயுகத்து ஆதியில் பிரமதேவனல் சிருஷ்டிசெய்யப்பட்டது. அந்நகரத்தை ஆதியில் மநுவென்பவர் ஆண்டுக்கொண்டிருந்தனர். அம்மநுவுக்குச் சதரூபையென்னும் மனைவியால் பிரியவிரதனென்றும் உத்தானபாதனென்றும் இரண்டுமக்கள் சனித்தார்கள். அவ்விருவரையும் சதரூபையென்னும் உத்தமமாது மிகவும் பிரியமாய் வளர்த்துவர, அவர்களிருவரும் சுக்கிலபக்ஷத்துச் சந்திரனைப்போல நாளுக்குநாள் ஓங்கி வளர்ந்து, ஐந்துவயதான உடனே அவர்களிருவரையும் பள்ளியில்வைத்துக் கல்வியில் தேர்ச்சியடையச்செய்வித்து, சகல சாஸ்திரபுராண சுருதி ஸ்மிருதி இதிகாசங்களால், தெளிவடைந்த இருவரில் மூத்தோனகிய பிரியவிரதன் உலகமாய்கை யென்னும் அவமாய்கைக்குள்ளாகிய ஜகம் யாவும் பொய்யென்றும், பகவானொருவனே அழியாத மெய்ப்பொருள் என்று உணர்ந்து, சகலசங்க பரித்தியாகஞ் செய்து, இல்லறதருமத்தை விடுத்து, துறவறத்தை யடுத்துக் காட்டிற் சென்று பகவானை நோக்கித் தவஞ்செய்து முத்திபதத்தைப் பெற்றான். இளையவனகிய உத்தானபாதனே சுநீதி சுருசியென்ற இரண்டு கன்னிகைகளை மணந்து நீர்வளம் நிலவளம் குடிவளத்தினலுஞ் சிறந்து சாலைகளுஞ் சோலைகளாலும் நிறைந்து மணிமாடமாளிகைகளாலும், ஆகாயத்தை யளாவிய உப்பரிகைகளாலும், மந்திரி தந்திரிகளாலும், ரதசஜதுரக பதாதிகளாலும், பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களென்னும் நான்கு வருணத்தவர்களாலும், கோட்டை அகழிகளாலும், இணைசொல்லுவதற்கு ஒன்றுமில்லாததாகியும் விளங்கும் அக்கமலாபுர பட்டணமடைந்து முப்பத்திரண் டறங்களாலும் ஏழை பரதேசிகளை இரக்ஷித்துக்கொண்டு வெகுநீதியாக அந்நகரத்தை யாண்டிருந்தான்.

இப்படிக்கிருக்கையில் மூத்தமனைவியாகிய சுநீதி யென்பவள் சிலநாளில் கெர்ப்பந்தரித்திருப்பதைத் தெரிந்து, உத்தானபாதனென்னும் அரசன் மூத்த மனையாள்மீது வெறுப்பும் இளையாளாகிய சுருசி

யின்மீது விருப்பமுங்கொண்டு நாளுக்குநாள் இளையாள்மீது மோகமதிகரித்து மூத்தமனையாளைக் கண்ணெடுத்துப்பாராம லிருந்தான். ஏனெனில் இளையாள்மீது தனக்கிருக்கும் அன்பினுல் மூத்தாளிடத்தில் பேசினுல் இளையவளுக்கு எங்கே கோபமுண்டாகி சக்களத்தி யிடத்திற்கே தன்னை எங்கே போகும்படிக்குச் சொல்லுகிருளோ என்ற பயத்தினுலே சுருசியைவிட்டு ஒருகணநேரமாயினும் பிரியாமல் தன்னுயிரை அவளுக்குத் தத்தஞ்செய்திருந்தான். இவ்வாறு அரசன் இருப்பதை சுநீதியறிந்து மனமார அரசனுக்கு நாமொரு அபசாரமுஞ் செய்யவில்லை; பிராணநாயகருடைய பத்தியென்னும் விரதமே நமக்கு மேலான விரதமென்றும், அவருடைய திருவடியே நாமடையும் முத்தி வீடென்றுங் கருதி, இரவும்பகலும் சிந்தித்துக்கொண்டும் தொண்டு செய்வதிலும் அறுசுவையுண்டிபடைப்பதிலும் ரதிகேளிக்கையிலும் மற்றுமுள்ள காரியங்களிலும் அவர் மனது கோணுமல் அன்பாய் இன்பாய் நடந்துக்கொண்டிருக்க, நமது பேரில் பிராணநாயகருக்கு இத்தனைவெறுப்பும் அருவருப்பும் உண்டாவதற்குக் காரணம் யாதோ? தெரியவில்லையே என்று மனக்கவலையுற்று, நெடுநேரம் ஆலோசித்து விசனமுற்றிருந்து, முடிவில் தனக்குத்தானே ஒருவாறுதேறி எந்தெந்தகாலத்தில் எந்தெந்த கர்மங்களை யனுபவிக்க வேண்டுமோ அந்தந்தக் காலத்தில் அந்தந்த கர்மங்களை யனுபவித்தே தீரவேண்டும். இதற்குத் திருஷ்டாந்திரம் என்னவெனில்: தேவர்களுக்கெல்லாம் அதிபதியாயும் வசிப்பதோ வெள்ளிமலை. தன்கரத்திற் பிடித்திருப்பதோ பொன்மலை. தனக்குச் சினேகனே நவநிதிகளுக்கும் அதிபதியாகிய குபேரன். இப்படியிருந்த சாம்பசிவனை நீலகண்ட உமாமகேசுரன் கபாலத்தைக் கையிலேந்திப் பிச்சையெடுக்கும்படி நேரிட்டது. இதற்குக்காரணம் கர்மமேயாம். என்று கணவனையும் நோகாமல் சக்களத்தியையும் நோகாமல் விதியின்படி நடக்கட்டுமென்று திடஞ்செய்துக்கொண்டிருந்தனள். அரசனே நாளுக்குநாள் மூத்தமனைவியாகிய சுநீதியின் மீது அதிகவெறுப்பும் இளையமனைவியாகிய சுருசியின்மீதுஅதிகவிருப்பமுமுண்டாகி மூத்தமனைவியை அந்தப்புரத்தை விட்டு வெளிப்பட்டுப் போகும்படி கட்டளையிட்டான். அந்தப்படியே அவளும் வெளிப்பட்டுப்போவதை மந்திரி கண்டு மனந்தாளாமல் அம்மாதை அருகிலிருக்கும் மாளிகையிலிருக்கும்படிச்சொல்லி ஆதரித்துக்கொண்டு வருகையில் உத்தமியாகிய சுநீதிக்குக் கோசலையின் கர்ப்பத்தடைந்த மகாவிஷ்ணுவைப்போலவும், சுமித்திரையின் கருவிலடைந்த ஆதிசேஷனைப்போலவும், பிறர்குற்றத்தை நாடாப் பெரியோர்களின் வாழ்வைப்போலவும், ஜீவகாருண்ணியமுள்ளோர் செய்யுந் தவத்தைப்போலவும், கற்புள்ள ஸ்திரீகளுக்குண்டாகுஞ் சுபத்தைப்போலவும், மோட்சவிச்சையுள்ளோர் அன்புடன் செய்யுஞ் செபத்தைப்போலவும், பெருமை சற்றுமில்லார் குடும்பத்தைப்போலவும், விரத்தியடைந்து பூரணமாயினபின் திவ்விய மங்கள விக்கிரகத்தைப்போன்ற திருவுருவுடன் அவதரித்தான்.

இவ்வாறு அவதரித்த அழகிய புதல்வனைக் கண்ட அன்னை அன்புடன்பார்த்து மார்புடன் சேர்த்துப் பிறவிக்குருடன் கண்பெற்றதைப் போலவும், மலடி மைந்தனைப் பெற்றதைப்போலவும், தரித்திரனுக்கு நிதி கிடைத்ததைப்போலவும், யாசகனுக்கு ராஜரீகங் கிடைத்தாற்போலவும், அகமகிழ்ந்து அரியைப்புகழ்ந்து கண்ணைக்காக்கும் இமையைப்போலவும், கன்றைக்காக்குங் கபிலையைப்போலவும், கர்ப்பைக்காக்குங் காந்தையைப்போலவும், உயிரைக்காக்கும் உடலைப்போலவும் காப்பாற்றிக் கர்த்தனைப் போற்றி தருமஞ்செய்து தனக்குற்ற சங்கற்பத்தைக் கொய்து பிராமணர்களுக்கு விருந்திட்டுத் துருவனென்று பேரிட்டு ஐந்துவயதானதே நற்சுபதினத்தில் பலவாத்தியங்கள் முழங்க, பிராமணேத்தமர்கள் சூழ, உபநயனஞ்செய்துப் பள்ளியில் ஓதவிட்டான். இவ்வண்ணம் மந்திரியானவன் சிறுவனுகிய துருவனையும் அவன் அன்னையையும் போஷித்துக்கொண்டு வருகையில் துருவன் பள்ளிக்குச்சென்று வாசித்துவர, ஒருநாள் அப்பள்ளியிலுள்ள பிள்ளைகளில் சிலர்கூடி துருவனைநாடி இவன் தந்தையில்லாத பிள்ளையென்று தலையிற் குட்டக்கண்ட துருவன், அவர்களுடன் ஒன்றும் பதில்பேசாமல் உபாத்தியாயரிடமுஞ் சொல்லாமலும் பாடத்தை ஒப்பிவித்து உபாத்தியாயரிடம் விடைபெற்று விரைவில் நடந்து வீடுசேர்ந்து அன்னையை நோக்கி, ஒ அம்மணி! என்தந்தை எங்குற்ருர்? அவரைவிட்டு நீ தனித்திருக்குங் காரணமென்ன? நீ என்ன குற்றஞ்செய்தாய்? உன்னைப் பரிகரித்து அவர் மற்றொரு மனைவியுடன் அந்தப்புரத்தினில் சகல சம்பத்துகளையும் அனுபவித்துக் கொண்டிருக்க, நீ இந்த கேவலமான வீட்டினில் வசிக்கவும், ராஜபோஜனத்தைவிட்டு அற்பபோஜனம் புசிக்கவும், அவர்கள் மிகவும் அற்புதமான

ஆபரணங்களைத் தரித்தும், ஆடைகளைத் திருத்தியும், வாசனையுள்ள சந்தன தாம்பூல புஷ்பங்களால் அலங்கரித்து அம்சதூளிகா மஞ்சத்தில் சயனிக்கவும் கேளிவிலாசமாயிருக்கவும் நீ மாத்திரம் ஆருமற்ற அனுதையைப்போ லிருப்பது எப்படியிருக்கிறதெனில்? சூரியனில்லா பகலைப்போலவும், சந்திரனில்லா இரவைப்போலவும், தாமரையில்லாத் தடாகம்போலவும், இராஜனில்லாப் பட்டணம் போலவும், மந்திரியில்லாத அரசாக்ஷி போலவும், தீபமில்லாத வீட்டைப்போலவும், நீதியில்லா நாட்டைப்போலவும் இருக்கின்றது. இப்படிக்கு நீ யிருப்பதற்கு ஏதுவென்ன? சீக்கிரஞ் சொல் அம்மணி என்று கோபக்குறியைக் காட்டிய சுதனை சுநீதி வாரியெடுத்து மார்புடன் தழுவி உச்சி முகந்து கண்களில் நீர்சோரவிட்டபடியே தனையனை நோக்கி, அடா புத்திரசிகாமணியே! அற்புதமாகிய கண்மணியே! விற்பன விவேகமிகுந்த மாசிலாமணியே! எனக்குற்ற கவலையைப் போக்கவந்த சிகாமணியே! என்று பலவாறு புகழ்ந்தும் புதல்வனை நோக்கிச் சொல்லத் தொடங்கினள்.

புத்தியிலும் விற்பத்தியிலும் சிறந்த புதல்வனே! கேளும்: நினது தந்தை என்னையும் நினக்கு சிற்றன்னையாகிய சுருசியையும் கன்னிகைப் பருவத்திலே மணம்புரிந்தார். அதில் யான் மூத்தவளும் பட்டத்து ஸ்திரீயுமா யிருந்தபடியினலே மணஞ் செய்துக்கொண்ட நாட்டொடங்கி நினது சிற்றன்னை என்மீது அசூயைகொண்டு விரோதத்தினலே அரசனுக்கேதேதோ போதித்து சிலநாளில் அரசனுக்கும் எனக்கும் விரோதமுண்டாக்கி என்னுடன் நின்தந்தையைப் பேசவொட்டாமல் மனதைக் கரைத்துத் தீராக்கோப முண்டாகும்படி மூட்டி அந்தப்புரத்தைவிட்டு என்னையோட்டி, மந்திரியால் யான் ஆதரிக்கப்பட்டு அந்த சிமாட்டி மேட்டானமேட்டி யாயினள். இது கடந்த விருத்தாந்தம் எந்நாளிலும், யான் உன்தந்தையை மறவாமல் அவருக்கு எவ்வித கஷ்டமுந் தாராமல் பதியே பரமேஸ்வரனென்றும், பதியே ஜெகதீசனென்றும், பதியே முக்தியளிக்கும் நாதனென்றும், பதியே ஞானமளிக்கும விநோதனென்றும், பதிக்குச்செய்யும் பணிவிடையே மேலான பூசையென்றும், பதிசொல்லைக்கடவாதிருப்பதே பரகதியடையும் ஆசையென்றும், பதிவிரதத் தன்மையைக் காத்தலே மேலான ஞானமென்றும், பதியினது நாமத்தைப் பஜித்தலே பிரமத்தியானமென்றும், பதியுடனிருத்தலே மோக்ஷமென்றும், பதியிறந்த அக்கணமே தன்னுயிரை விட்டு விடுதலே மோக்ஷமடையும் சூக்ஷமென்றும், அன்றியும் கற்புள்ளவளே விற்பன முடையவளென்றும், கற்புள்ளவளே அற்புதகுண முடையவளென்றும், கற்புடையவளே முத்திக் குடையவளென்றும், கற்புடையவளே நற்பத்தியுடையவளென்றும், கற்பில்லாதவள் கார்த்தநபதிக் கிணையானவளென்றும், கற்புடையவளே காமதேனுவுக் கிணையானவளென்றும், கற்பிலாதவளே கணிகைக்குங் கீழ்ப்படிந்தவளென்றும், கற்புடையவளே கமலைக்கிணையானவளென்றும், கற்புடையவள் யாதொரு தியானமுஞ் செய்யவேண்டிய தில்லையென்றும், கற்பைக்காத்தலே பெண்மைக்குரிய சகல கிரியைகளென்றும், கற்பழிந்தவள் செய்யுஞ் சகல தருமங்களும் கருமங்களாய் முடியுமென்றும், கற்பே பரலோகத்தைக் காட்டுமென்றும், கற்புள்ளவளாலேயே இக்காசினி நிற்கின்றதென்றும், கற்புள்ளவளுக்குத் திரிமூர்த்திகள் முதலானவர்கள் பயப்படுவார்களென்றும், பெரியோர்களால் யான் கேட்டிருப்பதன்றிச் சாஸ்திரங்களும் இப்படியே முறையிடுகின்றன. அன்றியும் சாவித்ரியம்மை தன் கற்பின் மகத்துவத்தால் இறந்தபுருடனை உயிர்பெற்றெழச்செய்தனள். தமயந்தி தன்கற்பை அழிக்க எத்தனப்பட்ட வேடனை யெரித்தனள். சந்திரமதி அக்கினியை ஜலம்போலக் குளிர்ச்சி யடையும்படி செய்தனள். ஆகையால் யானும் இந்தக் கற்பென்னும் வலைக்குட்பட்டு எனது கணவன் சொல்லைக்கடவாமல் இடுக்கண் பட்டு விதியை நொந்துக்கொண் டிருக்கின்றேன். என்ற அன்னையின் மொழிகளைக்கேட்டு துருவன் மெத்த சந்தோஷமடைந்து தாயை நோக்கிச் சொல்லலுற்றுன்.

ஓ என்னை ஈன்றெடுத்த அம்மணி! யான் என் தந்தையைப் பார்த்துப் பேசி வரவேணு மென்கிற அபேட்சை மிக யிருப்பதால் தயவுசெய்து விடைதந்தால் போய்வருகிறேன் என்ற மைந்தனை நோக்கி, அப்பா மகனே! தந்தையின்மீது உனக்கிருக்கும் ஆசையில் அணுவளவேனும் உன்தந்தைக்கு உன்மீதிருக்குமாயின் ஐந்து வருடகாலமாய் உன்னைப்பாராமலும் உன்னையெடுத்து முத்தமிட்டுக் கொஞ்சாமலும் இருப்பரோ? அவருக்கு இரண்டாவது பத்தினியாகிய சுருசியின்மீது மோகமதிகரித்து அவள்வயிற்றிற்பிறந்த பிள்ளையான உத்தமனையெடுத்து மார்புடன்றழுவி முத்தமிட்டுக் கொஞ்சிக் கொஞ்சி விளையாடிக்கொண் டிருக்கும்போது, நீ அங்குசெல்வையாகில் உன்னைக் கண்டமாத்திரத்

தில் உன்னுடன்பேச நின் தந்தைக்குப் பிரிய மிருந்தபோதினும், சுருசி என்னசொல்லுவாளோ எவ்வாறு கோபஞ்செய்வாளோ என்ற பயத்தினல் உன்னை வாடாகுழந்தாய் என்று அழைத்து ஆதரிக்கமாட்டார். அன்றியும் உன்னுடைய சிற்றன்னை உன்னைக் கண்டுவிட்டாலோ வயிறெரிந்து ஏதேனுஞ் சொல்லுவள். ஆகையால் இன்னுஞ் சிலநாள் சென்றபின் போசுலாம். பிள்ளை தந்தையினிடம் போக அவாக்கொண்டால் போகவேண்டாமென்று மறுக்குங் கொடும்பாவிகளு முண்டோ? இப்படி உன்னைப்போக வேண்டாமென்று தடுப்பதற்குக் காரணம் நின் தந்தையினிருப்பை யுணர்ந்தே சொல்லுகிறேன். இப்போது போகவேண்டாம் வேண்டாம் அப்பா என்று சொல்லலும், அன்னையை நோக்கித் துருவன், ஓ அன்னையே! நான் துஷ்டப்பிள்ளைகளுடன் கூடி விளையாடும் பொருட்டா போகிறேன். அதற்குப் போனலல்லவோ வேண்டாமென்று நீ தடுத்தால் யான் அவசியம் உமதிஷ்டப்படி நடப்பேன். என் தந்தையைப் பார்த்து வருகிறேனென்றால் அதற்கு நீ ஏதேதோ சாக்குகளைச் சொல்லிப் போகவேண்டாமென்று தடுப்பது தர்மமோ? இது பூர்வத்தில் யான்செய்த கர்மமோ? அல்லது என்னவர்மமோ? மர்மமோ? என்று கவலைப்படுகிற மைந்தனை நோக்கி சுநீதி சொல்லுகின்றனள். கேளும் அப்பா மகனே! துருவா! உன்னை நின் தந்தையிடம் போகவேண்டாமென்று மறுக்கவில்லை. இப்போது உன் தந்தையிருக்கும் நோக்கத்தை யறிந்து போகவேண்டாமென்று உனக்கு அநுகூல முண்டாகும் பொருட்டுச் சொன்னேனேயன்றி பிரதிகூலமடையும் பொருட்டு உனக்குச் சொன்னேனென்று எண்ணவேண்டாம். அன்றியும் நினது சிற்றன்னை உன்னைக் கண்டமாத்திரத்தில் இழிவாகப்பேசி யேசுவாள். ஆதலால் நீ போவது சரியல்ல. இன்னுஞ் சிலநாள் போகட்டுமென்ற அன்னையை நோக்கித் துருவன் ஓ என்னம்மணி! உன் சொல்லைக்கடந்து நடக்க என்மனம் அணுவளவேனும் சம்மதமில்லை. ஆகினும் தந்தையைப் பார்க்க வேணுமென்கிற அவா மெத்த விருக்கிறபடியால் தடைசொல்லாமல் உன் வாக்கினல் அன்புடன் போய்வாடாவென்று விடைதந்து அனுப்பும்படி மிகவும் வேண்டுகிறேனென்று பணிந்த சுதனையெடுத்து மார்போடணைத்து உச்சி முகந்து, அடா! கண்மணியே! மாசிலாமணியே! சிகாமணியே! சிந்தாமணியே! உனக்குத் தந்தையைப் பார்க்கவேணுமென்ற ஆசை மெத்தவுண்டாயிருக்கிறதோ? ஆனல் நீ உன் தந்தையைப் பார்த்து சீக்கிரம் இவ்விடம் வந்து சேரும் அப்பாவென்று மிகவும் பரிவுடன் விடைதந்தனள். துருவன் மிகவுங் களிப்புடன் தந்தையைப் பார்க்கும்பொருட்டு நடந்தான்.

இப்படி துருவன் தன் அன்னையிடம் விடை பெற்றுக்கொண்டு நடந்து இணையில்லாத சந்தோஷங்கொண்டு என்பாக்கியமே பாக்கியம் என்று விண்டு அங்கு சபையில் சிங்காதனத்தின்மீது தன் தம்பியாகிய உத்தமனைக் கையிலெடுத்துக்கொண்டு கொஞ்சிக் கொஞ்சி முத்தமிட்டுக் கலிதீரவந்த கண்மணியே! என விண்டு அருகில் சிற்றன்னை மருவியிருக்கக் கண்டு பிறவிக்குருடன் கண்பெற்றதைப் போலவும், தரித்திரனுக்குப் பொக்கிஷங் கிடைத்தாற்போலவும், யாசகனுக்கு ராஜரீகங் கிடைத்தாற்போலவும், அடங்கா மகிழ்ச்சி யடைந்து சமீபத்திற்செல்ல சற்று நாணமுற்றிருந்து, உடனே தனக்குத்தானே திடங்கொண்டு நவரத்தினங்களினு லிழைத்துள்ள படிகளின் மீதேறி மெல்ல நடந்து தடுமாறி ஆயாசம்மீறிப் படிகளைக்கடந்து தந்தையினருகிற்சென்று நின்றான். அப்படி நின்ற புதல்வனைக்கண்டு அரசனுக்கு ஆதரிக்க மனமிருக்கினும் சமீபத்திலிருக்கும் இரண்டாவதுமனைவியாகியசுருசி என்ன சொல்லுவாளோ? ஏதுவைவாளோ? இவ்வருமைப் புதல்வனை யழைத்துப் பேசினலென்ன கோபிப்பாளோ? தன் மனதிலென்ன பாவிப்பாளோ? என்ன வூகிப்பாளோ? என்ன சோகிப்பாளோ? என்றும் தன்னிடம் பேசாமல் கோபித்துக்கொண் டிருந்துவிட்டால் என்னமாய் மனஞ்சகித்திருப்போ மென்றும் பலவாறு சிந்தித்து அவள் மீதிருக்கும் மோகத்தினலே சுதனை யழைக்காமலும் அவனுடன் பேசாமலும் மௌனமாக விருந்து விட்டான். இதையுணர்ந்து சுருசி அளவிலாச் சந்தோஷத்தை யடைந்து சக்களத்தி மகனை நோக்கி, அடா துருவா? நிகரில்லாத ராஜசிங்காதன மேறுவதற்கு நீ தக்கவனுகாததால் உனக்கு எப்படி கிடைக்கும்? இடைவிடாமல் சதாகாலமும் கோசலைக்கு அன்பான புதல்வனுகிய ஸ்ரீராமபரமாத்துமாவை உள்ளத்தில் வைத்து சேவித்தனையா? அல்லது எனக்கு மகனுகப் பிறந்தனையா? அன்றியும் மனிதசஞ்சார மில்லாத காட்டில் ஏழைப் பரதேசிகள் சிரமந்தீர தங்கவும் படுக்கவும் சத்திரங்களைக் கட்டினையா? மேலும் வயிற்றுக்கில்லாத மெத்த ஏழைகளை யாதரித்து அவர்கள் வயிறார அறுசுவை யன்னம் படைத்தனையா? அல்லது எனக்கு மக

னைப் பிறந்தனையா? பசியினால் ஆகாரத்தை அபேக்ஷிக்காமலும் நடப்பதினால் கால்வலியுண்டாக அவ்வலியை லக்ஷியஞ்செய்யாமலும் நடந்து நூற்றெட்டுத் திருப்பதிகளைச் சேவித்தனையா? அன்றியும் இவ்வுலகின்கண் சமர்த்தனாகி ஆலிலைமேற் பள்ளிகொண்ட நீலமேக சியாமளனை சேவித்தனையா? பூர்ண சந்திரனையொத்த முகத்தையுடைய பகவானைப் பஜனைசெய்தனையா? என்று சொல்லாகிய அம்புகளைப் பிரயோகித்துத் துருவன் பிடரியைப் பிடித்து நெட்டிக்கொண்டே வந்து இச்சிங்காதனமேறுவதற்கு என்பிள்ளையே தக்கவனன்றி நீதக்கவனல்லவென்று வெளியிற் றள்ளினாள்.

அப்போது துருவன் ஆறாத் துயரடைந்து கால்வாயைப்போலக் கண்களில் நீர்பெருகவிட்டு அடிபட்டுத் தப்பியோடிவரும் சர்ப்பத்தைப்போல சிற்றன்னை மொழிகளாகிய சுடுசரங்களால் அடிப்பட்டு, ஓவென்று கதறி யழுதுக்கொண்டே தன் தாயாரிருக்குமிடத்தை நோக்கி வந்துகொண் டிருக்கையில், இராஜசபையிலிருந்து சில தோழிகளோடி வந்து சுநீதியைக்கண்டு வணங்கி, ஓ அம்மணி! நின் புதல்வனைக்கண்டு அரசன் ஆதரிக்காமற்போகவே சுருசிக்கு இளக்காரமுண்டாகி நின்புதல்வன் பிடரியைப் பிடித்து நெட்டிக்கொண்டே வந்து இந்த சிங்காதன மேறுவதற்கு நீ தக்கவனல்லன்; என் குமாரனாகிய உத்தமனே தக்கவனென்று சொல்லி வெளியிற் றள்ளிவிட்டனள். என்றதாதிகள் வசனங்களைக்கேட்ட சுநீதி என்றுமில்லாத துக்கமும் வெட்கமுமடைந்து தன் புதல்வனை வைது அனுப்பிய சக்களத்தியின் சுதந்திரத்தைப்பற்றி வெகுவாயாலோசித்து, ஓ பகவானே! சுகவானே! என்று பலவாறு மகாவிஷ்ணுவின் நாமத்தையே கோஷித்து இஃது யாங்கள் செய்த வினையோவென்று பாவித்து புதல்வன் வரவை ஆசித்து சுருசியை தூஷித்து நாராயணன் திருவடியை விசுவாசித்து இருக்கையில், துருவன்வந்து அன்னையைப் பணிந்து சிறியதாயார் சொல்லிய மொழிகளைப் பகர்ந்து துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கும் புதல்வனை நோக்கி, அடாமகனே! அற்பமாகிய இச்சிங்காதன மேறுவது ஒரு விசேஷமல்ல; இது சிலநாளில் அழிந்துபோகும். பிரமன்முதல் சகல தேவர்களுக்கும் அரிதாகியும் நிகரற்றதாகியும் என்றும் அழியாததாகியு மிராநின்ற வைகுந்தபதவி உனக்குக் கிடைக்கும். இதைப்பற்றி நீ சிந்திக்கவேண்டாயென்கிற அன்னையை நோக்கி துருவன் ஓ அம்மா! ஹரியென்று சொல்லும்படியானவன் யார்? அவன் வசிக்கும்படியான ஊரெது? அவன் ரூபம் குணம் அவனது மனைவி யார்? இவைகளையெல்லாம் விபரமாகவும் விரிவாகவுந் தெரியச்சொல்லுமென்று பணிய, சுநீதி, அடா மகனே! அழகானமுகனே! அந்தப்பகவான் வாசஞ்செய்யும்படியான ஊரும் அவன்பேரும் ரூபமும் குணமுஞ் சொல்லுகிறேன்; கவனமாகக் கேட்கக் கடவாய். அந்தப்பகவான் பாற்கடலில் ஆதிசேஷன்மீது சயனித்திருப்பவனும், சொர்க்கமாகிய நவரத்தினங்கள் பதித்துப் பத்தரைமாற்றுத் தங்கத்தினால் இழைத்தும், இணை சொல்லக்கூடாத பரமபதத்தில் வசிப்பவனும், ஜகத்துக்கெல்லாம் ஈசனும், சகலலோக சொரூபனும், உக்கிரமாகுஞ் சக்கரந்தரித்தவனும், தவத்திற்கும் வேதங்கள் முதலானவற்றிற்கும் தவனாகி, கோக்களுக்கும் பிரமநிஷ்டர்களுக்கும் நேசனாகி, சகல பிரபஞ்சங்களுக்கு மிரக்ஷகனாகி ஸ்ரீமந்நாராயணனென்றும் கோவிந்தனென்றும் திவ்விய நாமங்களுடன் கூடி பிரமரூபனாகி, ஜகத்துக்களை சிருஷ்டித்தும், சுயசொரூபத்தினால் ரக்ஷித்தும், கல்பஅந்தியத்தில் ருத்திரரூபனாகி சங்கரித்தும், திரிமூர்த்திசொரூபனாகி பிரகாசித்தும், தேவ அசுர கந்தர்வ கின்னர சித்தசாத்திய பன்னக யக்ஷ ராக்கத பைசாச மனித பசுபக்ஷி ஸ்தாவர பிபீலிகாதிகள், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசங்கள், சத்த ஸ்பரிச ரூபரச கந்தங்கள், மனம் புத்தி சித்த மகங்காரங்கள், காலம் அதன்குணங்கள் எனது பரமார்த்தமாகும். ஆத்துமா இவையாவும் அவனே. அவிவித்தைகள் சத்திய அசத்தியங்கள், பிரவிருத்தி நிவர்த்திகள், வேத சம்மத சகல கருமங்கள், இவைகள் யாவும் அவனே. சகல கருமபோகங்களையும் அனுபவிக்கு மவனும் கருமசாதனங்களாகும் திரவியங்களும் சகல கரும பலன்களும் அவனே. என்னிடத்திலும் அன்னியர்களிடத்திலும் சேஷபூதங்களாகும் சகல உலகங்களினிடத்திலும் அவன் வியாபித்திருப்பது உபாதான நிமித்த காரணமாகும். பொருள்களும் அனந்த ஞானசக்தியாதி கல்யாணகுணங்களையும் நன்முக விருக்கின்றது. பரமயோகிகள் அவனையே துதி செய்கிறார்கள். அவனே பிதுர்ரூபத்தையும் தேவ ரூபத்தையுந் தரித்து அவ்விய கவ்வியங்களைப்புசிக்கின்றான். எமது அகங்காராதி சூக்ஷமங்கள் பிருதிவி முதலான பூதங்களும் அதனிடத்திலிருக்கும் சூட்சுமமாகும் ஆத்துமதத்துவமுமாகி இந்த சூட்சும பிரபஞ்சம் யாவும் எவ்விடத்தி லிருக்கின்றதோ எங்கிருந் துண்டாயிருக்கின்றதோ அது சொரூப

குணங்களினுல் பெருத்ததாகும். அவனது மகாரூபமாகி யிருக்கின்றது. சூக்குமாதி வெகுசூனியமாகி சிந்திக்கக்கூடாததாகியிருக்கும் ரூபம் அவனது பரமாத்தும சொருபமாகி யிருக்கின்றது. இப்படிப்பட்ட புருஷோத்தமனுடைய குண விசேஷங்களை உனக்குச்சொன்ன எனக்கும் ஒரு லாபமுண்டாயிற்று. உனக்கும் லாபமுண்டாயின என்ற அன்னையை நோக்கி, ஒ அம்மனி! இப்போது நீ எடுத்துரைத்த அதிக மகத்துவமுடைய ஸ்ரீமந்நாராயணனைச் சேவித்து மறுபடியுந் திரும்பி வரும்படியாக எனக்கு ஆசிகூறி யனுப்புமம்மாவென்ற துருவனை நோக்கி சுநீதி சொல்லத் தொடங்கினுள்.

அடா என் கட்டித்தங்கமே! அமிர்தமழை பொழியும்பிரசங்கமே! பகவானைச்சேவித்துத் திரும்பி வருகிறேனென்றும், ஆசிகூறி யனுப்புமம்மாவென்றும், அதிபாலியனுன நீ கூறியது மெத்தவும் நன்றே. இதையின்றே தேடிச்செல்ல முயல்வது எப்படி யாகுமெனில்? சக்தியற்றவன் பெருத்தமலையையும், கல்வித்திறமறியாதவன் தர்க்கஞ்செய்யப் புறப்பட்டதைப்போலவும், வாசாஞானம்பேசுமவன் திடஞானியைப்போலவும், கன்னிப்பருவமுடையவள் புருடனுேடுசேர வெண்ணினதைப்போலவும், முடவன் ஆகாயத்தில் பறக்கிறேன் என்சமர்த்தைப் பாருங்களென்றதைப்போலவும், மனோதிடமில்லாதவன் வெகு தைரியமுடையவன் போலவும்,சிறுபிள்ளை பதட்டம்விளையாடாமை வீடுவந்து சேராதென்னும் பழமொழியைப்போலவுமிருக்கின்றது. அந்தப்பகவான் எப்படிப்பட்டவனெனில்; சகலலோகங்களுக்கும் மூன்றுவித காரணமானவன்; மனதி லெண்ணின மாத்திரத்தில் சிருஷ்டி திதி சங்காரங்களுண்டாகின்றது; அந்த ஜன்மரகிதனுயிருந்தும் பக்தர்களுக்காக நாமரூபங்களுடன் கூடியிருப்பன்; அவனது திவ்ய ஆத்மசொருபத்தைத் தரிசிக்க முடியாமல் தேவேந்திராதி தேவர்கள் விக்கிரக ஆராதனை செய்கிருர்கள். சகலலோகங்களுக்கும் அவன் தந்தையாகி ரக்ஷிக்கிறவனுகி சேஷியாகி பர்த்தாவாகி நேசனுகி சுவாமியாகி ஆதாரமாகி ஆத்மாவாகி போக்தாவாகியும் சகல பிராணிகளுக்கும் அவன் நிருபாதிக பந்துவாகி சகல லாபங்களையும் உண்டாக்கி தன் தொண்டர்களுடைய துக்கத்தை சகிக்காதவனுகி அசுரர்களை சங்கரித்தும் பிராணிகளுடைய துக்கத்தைச் சகிக்காதவனுகி விசனப்பட்டும் வாக்குக்கும் மனதுக்கு மெட்டாத அந்த ஸ்ரீமந் நாராயணனைத் தேடி நாடிப் பாடிச் சேவித்து வருகிறேனென்பது எளிதோ? அளவிட்டுச் சொல்லப்படாத பரமபதமானது சமீபத்தில்தா னிருக்கிறதோ? நாரதாதி மகரிஷிகளாலும் அந்தப்பகவானை சேவிக்கத் தரமாகாமலிருக்க; நீயோ சிறுவன்; ஐந்துவயது பாலன் உன்னுலாகுமோ பகவானைச் சேவித்து வருவதற்கு? அன்றியும் கொடிய கானகமார்க்கத்தில் உனக்குப் பசிதாப முண்டாயினுல் அன்னபானுதிகளைக் கொடுத்து பசியாற்றுவதற்கு அங்கு யாரேனும் இருக்கின்ருர்களா? ஒருவருமே கிடையாதே. அன்றியும் கணப்பொழுது உன்னைவிட்டுப் பிரிந்து உயிர் தரிப்பேனு? தரித்து இவ்வுலகில் உயிரோடிருப்பேனு? உன்னைப் பார்த்தல்லவோ என்விசனம்மாறி சந்தோஷமீறி தக்கவயது உனக்கு வருவதெப்போது எனக்கோரி என்மனந்தேறி யிருக்கிறேன்.

இப்படிக்குத் தீராவிசனமாறி யிருக்கும் என்னைத் தனியேவிட்டுப் போகவும் உனக்கு மனம் வந்ததோ? உன் சிறியதாயார் சொல்லிய வசைமொழிகளால் உன்மனம் நொந்ததோ? அந்தக் கடுஞ்சொல்லாகிய அக்கினியினுல் உன்மனம் வெந்ததோ? இப்படி என்னை அனுதியாய் விட்டுப்போக உன்மனம் உகந்ததோடா?என்றும் அறியாத புத்தியினுல் உன்மனம்போனபடி நடக்க யோசிக்காதே? என்சொல்லை மறுத்துப் பதில் கோஷிக்காதே? நம்மையிவ்வாறு சிற்றன்னை வைதாளேபென்று துவேஷிக்காதே? இனிவேறொருவசனமும் பாஷிக்காதே? என்று பற்பல நீதிகளை யோதியும், துருவன் அவைகளையெல்லாஞ் செவியிற் கொள்ளாமல் வைராக்கியமதிகரித்து, ஓஅம்மணி! இவ்வுலகத்திலுள்ள சேதனுசேதனர்களுக்கும் மனித சஞ்சாரமில்லாத கானகத்திலுள்ள மிருகங்கள் பறவைகள் மரங்கள் புல் பூண்டு முதலானவைகளுக்கும் ஆகாரங்களைக் கொடுத்துக் காப்பாற்றுகிற ரக்ஷகன் எனக்கு இவ்வளவு அன்னங் கொடுத்து ரக்ஷிக்காமற் போவானு? அப்படி கொடாமற்போனுல் சர்வரக்ஷகனுவனு? கருணுநிதியாவனு? யாவரையும் ரக்ஷிக்கிறேனென்று தரித்துக்கொண்ட விருதை யிழப்பனு? என்று பல நீதிவாக்கியங்களையும் வேதவாக்கியங்களையும் உரைத்துத் தன் அன்னையை சம்மதிக்கச்செய்து விடைபெற்றுக்கொண்டு தண்டத்தில் அடிபட்டுக்கொண்டு ஓடும் சர்ப்பத்தைப்போலவும், உலகமாய்கையி லகப்பட்டு வெகு யிடுக்கண்பட்டு சகலத்தையும் வெறுத்துத் துறவறியாகிக் காட்டை நாடிப்போகும் மெய்ஞ்ஞானவானைப்போலவும் வலை விடுவித்துக்கொண்டு ஓடும் மானைப்போலவும் துருவனுனவன் நாட்

டைவிட்டுக் காட்டைநாடி மிகவும் வேகமாய் நடக்கத் தொடங்கினன்.

அஃதெப்படி யெனில், அரிமேற் காமமோங்கி அச்சுதனைப்பார்க்க ஏங்கி அரைக்கணம் நிற்கப் பின் வாங்கித் தன்னெதிரில் யார்வந்து மறித்தாலும் ஓ ஐயமாரே! நீங்கள் ஆனந்தமா யிருக்கிறீர்களே; அரியைப்பார்த்தீர்களா? அவரடியிற்றலையைச் சேர்த்தீர்களா? ஆசைகளை யெல்லாம் மாய்த்தீர்களா? அடியோடு அகந்தையைச் சாய்த்தீர்களா? அரி இவ்வழியாய் வந்தாரா? அரியசேவை தந்தாரா? அரியைக்கண்டு புகழ்ந்தீரா? அன்பாயுருகி மகிழ்ந்தீரா? அரி! நீயென்முன் வாராயோ! அரியசேவை தாராயோ! அடியேன்மேற் கிருபைகூருயோ! அருட் கண்ணுல் என்னைப் பாராயோ! ஐயோ! வீணில் நாள்போச்சு; அடியேன் ஆயுள் வீணுச்சு; மெய்யோர்க்கு இது மிகவுமேச்சு; விதியோவென்று பெருமூச்சு அடிக்கடி விட்டுக்கொண்டே பேயன் போலவும் பித்தன்போலவும் பேசிக்கொண்டே கன்றையிழந்த பசுவைப்போலவும், புதல்வனையிழந்த பூவைபைப்போலவும், பதியையிழந்த பாவைபைப்போலவும், பதறிக் கதறிக்கொண்டு ஹரி! ஹரி! என்ற வார்த்தையல்லாமல் வேறு வார்த்தை சொல்லாமல் எங்குந் தங்கி நிற்காமல் கற்களென்றும் முட்களென்றும் பாராமல், காடென்றும் நாடென்றும் தேருமல் கர்த்தனைக்கான நடந்தான். அப்போது சுநீதியோவெனில் தன்புதல்வன் தன்னைப் பிரிந்துப் போனதுமுதல் ஊண் உறக்கமின்றி, அடா மகனே! அழகானமுகனே! உன் சிற்றன்னை சொல்லிய கடுஞ்சொல்லால் மனம்நொந்ததோ! சிங்காரமேடைமீ திருந்துக்கொண்டே தியானஞ் செய்யலாகாதோ! அஞ்ஞானம் நாசமாய்ப்போகாதோ! ஓ என் அருமைக்குழந்தாய்! உன் தந்தையும் என்னை அகற்றிவிட்டாரே! நீயும் என்னைத் தனியே விட்டுப் பிரிந்துபோனுயே! நான் யாருமற்ற அனுதையைப்போலத் தனித்திருக்க லாயிற்றே! இன்னமும் என்னுயிர்போகாம லிருக்கின்றதே! என் மனமோ பதறுகின்றதே! நானென்ன செய்தேனடா! மகனே! மகனே!! என்று துக்கித்துக்கொண்டிருந்தாள். இச்செய்தியைத் தாதிகள் மந்திரிக்குத் தெரிவிக்க, மந்திரி மெத்த விசனத்துடன் அரசனுக்கு அறிவித்தான். அரசனே அடா என்னருமைப் பாலனே! தவத்திற்சிறந்த சீலனே! உனக்கும் இப்படிப்பட்ட விதிவந்ததோ? உன் சிறியதாயார் சொன்ன கொடியமொழிகளால் மனம் நொந்ததோ? யான் உனை ஆதரியாமற் போனதைப்பற்றி உன்மனம் வெந்ததோ? உன் தாயைவிட்டுத் தனித்துப்போக மனம் எப்படி துணிந்ததோ? இப்படிப் போவது உனக்குகந்ததோ? எங்களை யிப்படி துக்க சாகரத்தில் மூழ்கச்செய்துபோக உனக்கு எப்படி மனம் வந்ததோ? கானகத்தில் எந்தப்புலிகளாலோ கரடிகளாலோ யானைகளாலோ சிங்கங்களினுலோ இன்னும் எந்த மிருகங்களாலோ பயந்து எப்படி யானுயோ? அப்போது எங்களை நினைத்து முகத்திலும் விழிக்கப் போகாதென்று மரணமடைந்து போனுயோ? அடா மகனே! அக்கானகத்தில் நீ ஒருவனே தனித்துத் திரிந்துக்கொண்டு மழையென்றும் வெயிலென்றும் பனியென்றும் காற்றென்றும் பாராமல் எப்படி திரிகின்ருயோ? அங்கங்கறுத்து கோடைக்கும் பொறுத்து எலும்பு மாத்திரமாகி எப்படி யலைகின்ருயோ? அடா என்கண்மணியே! அறுசுவை யன்னம்புசித்து நிச்சலசித்தனுகி மேடைமாளிகையி லிருந்ததுபோய் மரத்தடிகளிற் றங்கியும் பஞ்சணைமேற் சயனிப்பதுபோய் புழுதியி லனந்தல் செய்யவும் விதிவாய்த்ததோ? பாதங்கள் பிளந்து உதிரம்பெருக நடக்கவும் நேரிட்டதோ? என்று பலவாறு புலம்பிக்கொண்டு கண்ணீர் விட் டழுதுக்கொண்டிருந்தனன்.

அங்கே கானகத்தில் சிறுவனுகிய துருவன் அவ்வனத்தில் வசிக்கும் மிருகங்களை நோக்கி ஓ மிருகேந்திரரே! நாராயணனைப்பார்த்தீரா? நயனங்களை அவர்பதத்திற் சேர்த்தீரா? இழிவான வெண்ணங்களைப்பேர்த்தீரா? எல்லா ஆயாசங்களையுந் தீர்த்தீரா? அடியேன் அரியைக் காணவில்லை. அதனல் ஒன்றுந் தோணவில்லை. கொடியேன்மே லருள்கூறவில்லை. கோதுகளின்னுந் தீரவில்லை. பச்சைவண்ணனைக் கமலக்கண்ணனை அச்சுதனை சுதாற்புதனை சங்குசக்கர ஹஸ்தனை குறைவிலாச் சொஸ்தனை இலக்குமிமணுளனை தேவர்கன்னுளனை பத்மநாபனை பரமசொருபனை கதிதருமுதல்வனை அன்பானுகூலனை மாதவர்நேயனை மதிதருமாயனைக் கண்குளிரக்கண்டு ஆனந்தங்கொண்டு பல வசனங்களைப் பெற்றுக்கொண்டு திரும்பி வருகிறேன். இன்றைக்கு அகத்தியம் பகவான் வருவார். தரிசனந் தருவார். இன்றைக்கு என்விரதம் நிறைவேறும். சமஸ்தகுறைகளுந் தீரும். எனப் பற்பல வசனங்களாடி அரியைத்தேடிக் காணுமல் வாடி பல கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டே போகிறபோது, அக்காட்டினுள்ள மிருகங்களின் ஆரவாரமானது கோடையிடிக்கு நிகரான ஓசையினுலும், குயில்களின் இனியமொழிகளாலும், கிளிகளின் மிருது வசனங்

களினாலும், இன்னும் பலபறவைகளின் ஒலியினு லும, காரிருட்டினாலும், மேடென்றும் பள்ளமென் றும் தெரியாமையினாலும், கற்கள் கால்களில் அடிப் பட்டதாலும், அக்கால்களில் உதிரம்பெருகி வடிய வும், புதர்களிலுள்ள முட்கொடிகள் தேகமெங்கும் பட்டு உதிரம் வடியவும் பசிதாபத்தையும் ஆயாசத் தையும் சிறிதேனுங் கவனியாமல் மிகு வைராக்கி யத்துடன் அரியைத்தேடி நடந்தான்.

இங்கே கமலாபுரத்தில் சுநீதியானவள் மகனை நினைந்து நினைந்து பெருமூச்சுவிட்டு, அடாமகனே! பசியினால் எந்த மரத்தடியில் களைபட்டு வீழ்ந்திருக் கின்றாயோ? எப்படியானாயோ? என்று விசனப் பட, உத்தானபாத மகாராஜனுக்கு மகவாசையோ ங்கி மனமிகத்தேங்கி, அப்பா மகனே! அழகான முகனே! ஆ என்கண்மணியே! ஆ சிகாமணியே! ஆ என் புத்திரா! அடியர்கள்மித்திரா! ஆசைப்பெரு க்கே! அடியேனன்பே! என்னுருயிரே! என்மனத் தெளிவே! ஜீவசஞ்சீவியே! தெருள் சிரஞ்சீவியே! மாசிலாயுருவே! மகிழ்வருள்திருவே! நீ எவ்வனத் திற்குள் புகுந்து அலைகின்றாயோ? அப்படி யலைவ தாற் பஞ்சுபோன்ற பாதங்கள் நோகாதோ? உன்னையாதரியாத என்னுயிர் பிரிந்துபோகாதோ? சும்மாவிருக்கலாகாதோ? துரிசுகளெல்லாஞ் சாகா தோ? எலும்பாய் வாடிப்போனாயோ? தேகம் புழுதிபடியலானாயோ? அரியைத் தேடித்திரிகின்றா யோ? அரியைக்காண உருகுகின்றாயோ? உன்னை ஆரணிய மேகவிடுத்து யான் நாட்டிலிருந்து சுக போகங்களை யனுபவித்திருக்கும் பாவியானேனெ ன்று பற்பலவிதங்களாய்ப் பிரலாபித்துக்கொண் டிருந்தான்.

அங்கே காட்டை நாடிச்சென்ற சிறுவனாகிய துருவன் பலவனங்கள் வனாந்திரங்களைக்கடந்து அரியென்ற சத்தமன்றி வேறொன்றும் சிந்தியாமல் கடந்து போகிறபோது திரிலோக சஞ்சாரியாகிய நாரதர் காவி காம்பர தண்டுகமண்டல ருத்திராக்ஷ மாலை பாதக்குறடோடும் வீணையைக் கையிற்பிடி த்து அரிநாமத்தைப் பாடிக்கொண்டே எதிர்வந்து நின்றார். அவரைக் கண்டவுடனே ஆனந்தங்கொ ண்டு அவரை வலம் வந்து பணிந்து அவர் பாதங்க ளில் தன் திருநயனங்களை யணிந்து, ஒ சாந்தசொ ரூபனே! உபசாந்தனே! யோகாந்தனே! வேத வேதாந்தனே! நாதநாதாந்தனே! யோகாந்தனே! ஏகாந்தனே! தங்களுடைய தரிசனம்பெற யான் என்ன புண்ணியஞ் செய்தேனோ? எந்த பெரியோர் களைக் கண்டபலனோ? எனதுஅன்னையின்ஆசீர்வாதத் தின்பயனோ? ஆதவனைக்கண்ட பனிபோல என்னு டைய பாவந்தொலைந்து போகலாச்சுது. மனித சஞ்சாரமில்லா இக்காட்டினில் அலையும் எளியே னைக் காக்கும்பொருட்டு இவ்வுருவத்துடன் வந் தீரே. அரிதான சேவை தந்தீரே! தங்களுடைய தரிசனங் கிடைத்த எனக்கு அரியின் தரிசனங் கிடைத்ததற்கு நிகராகும். எனக்கு இனி அநுகூல மாகாத காரியமுமுண்டோ? எனப் பற்பலவிதங்க ளால் புகழ்ந்து அடியற்ற பனைபோல் விழுந்து அவர் திருவடிகளில் நயனங்க ளிரண்டையும் பதி த்து எழுந்திராமற் கிடந்தனன்.

இவ்வாறு கிடக்கும் துருவனை நாரதர் ஆசீர் வதித்து இருகரங்களாலெடுத்து, அப்பா குழந் தாய்! நீயார்? எந்தவூர்? உன்பேரென்ன? என்ன காரணத்தால் இக்கொடுங் கானகத்திற்குள் போகி ன்றாய்? அழகான முகம்வாடி தேகமிளைத்து கற் களாலடிப்பட்டும் முட்கள் தைக்கப்பட்டும் உதிரம் வழிய உன் சிறியபாதங்கள் நோய்கொள்ள புதர் களிலுள்ள முட்களால் கீறப்பெற்று உடலெங்கும் காயமுண்டாகப் பசிதாகத்தால் தவித்து பகலென் றும் வெயிலென்றும் மழையென்றும் காற்றென் றும் இரவென்றும் இருளென்றும் பனியென்றும் பாராமலும் கோபமேலிட்டு வைராக்கியத்துக்கு உட்பட்டு எங்கு செல்லுகின்றாய்? உனக்கு என்ன குறையுண்டாயிற்று? என்னகாரியங் கெட்டுப்போ யிற்று? இச்சிறுவயதில் நீ தாய்தந்தைகளுக்கு உட ன்பட்டுக் கல்வியைக்கற்று சுகத்தை யனுபவித்துக் கொண்டு நாட்டினில் வசிக்கவேண்டியிருக்க, அவை களை விடுத்துத் தனித்து வரவும் போமோ? உன் னிஷ்டப்படி நடக்கலாமோ? என துருவன் ஒ சுவாமி! நான் வாசஞ்செய்யும் பூமி கமலாபுரம். அந்நகரைப் பரிபாலனஞ்செய்யும் உத்தானபாத மகாராஜன் என்தந்தை. அவருக்கு இரண்டு மனைவி களுண்டு. அதில் மூத்தாளுடைய புதல்வனாகும் யான். என்பேர் துருவன். சிறியமனையாள் மீது மெத்த மோகங்கொண்டு என் தந்தையானவர் எனது அன்னையை அந்தப்புரத்தை விட்டோட்டி எனது சிற்றன்னையுடன் அந்தப்புரத்தில் வீற்றிருந் தார். இப்படியிருக்க நான் என் தந்தையைப்பார் க்க வேணுமென்ற அவாமிகுதியால் எனது அன்னை யிடம் விடைபெற்றுக் கொண்டு அரண்மனையை நோக்கிச் சென்றபோது, என் தந்தையானவர் சிறியமனையாள் புதல்வனாகிய உத்தமனையெடுத்து உச்சிமோந்து முத்தமிட்டுக்கொண்டு சிங்காதனத் தின்மீது இருக்கக்கண்ட யான் மெத்த ஆவலாய்

பசுவைத் தேடிச் செல்லுங் கன்றைப்போலவும், பதியைநாடிச்செல்லும் பதிவிரதையைப்போலவும், குருவை நாடிச்செல்லுஞ் சீடனைப்போலவும், சந்திரனை நாடிச்செல்லுஞ் சகோரத்தைப்போலவும், மேகத்தை நாடிச்செல்லுஞ் சாதகப் பட்சியைப் போலவும், விரைவாகப் படிகளைக் கடந்து தந்தை வீற்றிருக்குஞ் சிங்காதனத்தி னருகிற்சென்றேன். வெகு இடுக்கண்கள்பட்டுச்சென்ற என்னை, தந்தை யானவர்கண்டும் வாடா மகனே! என்று அழைத்து இனிய மொழிகளைப் பகராமல் சிறிய பெண்டிற்குப் பயந்து ஆதரிக்காம லிருந்துவிட்டார். இதையறிந்த என் சிற்றன்னை வெகுண்டு என்னைநோக்கி, பொறுமைமேற்கொண்டு அடா துருவா! இந்தச்சிங்காதன மேறுவதற்கு என்னுடைய புதல்வனாகிய உத்தமனே தக்கவனல்லாமல் என் சக்களத்தி வயிற்றிற் பிறந்த நீ இச்சிங்காதன மேறுவதற்குத் தக்கவனல்ல. அன்றியும் என்வயிற்றில் பிறந்திருப்பாயாகில் நீ தக்கவனே. அல்லது அரியைப்பஜித்து விசுவாசித்து அவனது அரிய சேவைசெய்து வருவையாகில் நீ இச்சிங்காதனமேறலாம். அன்றியும் ஏழை பரதேசிகள் தங்கியிருக்கும்படியான கானகமார்க்கங்களில் சத்திரங்கள் கட்டிவைத்தனையா? மேலும் இடுக்கண்படுந் தொண்டர்களுக்காக உடன்பட்டு அவர்கள் துக்கங்களைப் போக்கடித்தையா? அல்லது புசிக்கவும் நடக்கவும் யோசிக்காமல் வெளிப்பட்டு திவ்விய தேசயாத்திரை செய்தையா? என்று பலவாறு புண்ணிற் கோலிட்டாற்போலப் புகன்ற என் சிற்றன்னை மொழிகளென்னுஞ் சரங்களானது என்மனதில் நாடியபடியால் எனக்கு ஆக்ருஷமும் ரோஷமும் அதிகரித்து, எனது அன்னையிடம்வந்து நடந்தவைகளைப் புகன்று, சம்மதிப்படுத்தி விடைபெற்று, இவ்வண்ணம் வந்தேன் அரியைத் தரிசிக்கும்பொருட்டு என்றான். நாரதர் என்னடா! கத்திரிக்காய்க்குக் கால் கை முளைத்தாற்போல, பிஞ்சிலே பழுத்து ராகத்தை யிழுத்து அத்தனே! யுத்தனே! முத்தனே! சித்தனே! என்று உளறுகிறாய். வாயில் வந்தபடி குளறுகிறாய். நீயென்ன? உன் வயதென்ன? உனக்கு ரோஷமுந் துவேஷமு முண்டோ? மயிருள்ளவள் வாரிமுடிப்பது போலவும், வாயுள்ளவள் பாடுவதுபோலவும், சஷ்டகல்வியைப் பேசுகின்றாய்; துஷ்டக் கைகளை நீட்டுகின்றாய்; இனி துஷ்ட மிருகங்களும் பறவைகளும் வசிக்குங் கடுங்காட்டிற்குள் செல்லாதே; என் வார்த்தையைத் தள்ளாதே; அரியைக் காணவேணுமென்று விள்ளாதே; நானென்கிற ஆணவங் கொள்ளாதே; தலைகீழாய்விழுந்து துள்ளாதே; மறுத்து ஒன்றுஞ் சொல்லாதே; அரியின் சேவையைச் செய்யும்பொட்டு கற்பகோடிகாலமாய் அனேக முனிவர்கள் தவஞ்செய்துங் காண்பது அரிதாகி இன்னுந் தவமியற்றிக்கொண்டிருக்க, நீ எவ்வளவு? உன்னால் அந்த அரிபரந்தாமனைக் காண்பது எளிதோ? ஆகையால் நீதிரும்பி உன்நகரத்தையடைந்து தாய் தந்தையர் மனது கோணாமல் நடந்து இராஜபோகத்தை யனுபவித்துச் சுகத்துட னிருக்கக்கடவாயென, துருவன் அம்முனிவரது பாதங்களில் பணிந்து, ஓ சுவாமி! கக்கினது பாயாசமானாலும் நக்குவாருண்டா? அதுபோல அற்பமான இராஜாங்க சுகத்தின்மேல் நிராசையாய் அனித்திய வாழ்வைச் சொற்பனத்திலும் நினையாமல் அற்புதமாகியும் ஒருவரும் அடையாததாகிய பதவியைக் கோரிய வென்னை அகற்றலாமோ? தந்தை தாய் மித்திர களத்திராதி அரசராலும்நித்தியானந்தத்தை அடையப்போமோ? அனித்திய மலபாண்ட தேகத்தை சத்தியமென்று அடைந்தோர்க்கல்லவோ இராஜ போகம் வேண்டியது. மேலான பதவியைப்பெற அபேக்ஷித்தவர்கள் அற்பமான விஷய போகங்களைப் பரமென நம்புவார்களோ? நம்பி வெம்புவார்களோ? ஓ மாதவனே! நித்தியாநித்தியவஸ்து விவேகம் அறிந்தவர்கள் அனித்திய தேகசுகத்தைத் தேடுவார்களோ? இகபோகத்தை நாடுவார்களோ? இக பரயோசன விராகமுள்ளவர்கள் தேவலோக அபேக்ஷை கொள்ளுவார்களோ? சற்குருசேவை தள்ளுவார்களோ? சமாதிநிஷ்டை சம்பத்துடையோர்கள் மனோவிச்சைப்படி நடப்பார்களோ? குருவாக்கினையைக் கடப்பார்களோ? விஷவஸ்துக்களைத் தொடுவார்களோ? வைராக்கியத்தை விடுவார்களோ? ஆசிரியரைப் பிரிவார்களோ? முனிவுகொள்ள வறிவார்களோ? சற்சங்கத்தை நீங்குவார்களோ? ஜன்மசாகரத்துக்குட்பட்டு ஏங்குவார்களோ? முமூட்சத்துவ பாவ மறிந்தவர்கள் மோகாந்தகாரத்தில் மூழ்குவார்களோ? ஏகாந்தியாகாமல் மாழ்குவார்களோ? ஓ எந்தனத்தனே! என்னையும் போகச்சொன்னையே? என்று அம்முனிவரின் தாள்களின்மேல் வீழ்ந்து ஓவென்று அழத்தொடங்கினன்.

நாரதர் இருகரங்களாலும் துருவனை வாரியெடுத்துப் பல ஆசிகள்கூறி ஆதரித்து, அப்பா துருவா! நீ பயப்படவேண்டாம். என்னால் உனக்கு ஆக வேண்டியதைத் தெரியப்படுத்துமென, துருவன் ஓ சுவாமி! வைராக்கியங்கள் எத்தனைவகையோ அவைகளையும், பிரமஞானமும்போதித்து, யான்கோரிய

அரிதான பதவியை அடையும்படியாகக் கிருபா நோக்கம் புரியுமையாவென்று பணிய, நாரதர் அப்பா துருவா! நீ சிறுவனுதலால் உன்னுல் அப்பதவியடையும் சாமார்த்தியம் போதாது. அதற்கு வெகு கஷ்டப்படவேண்டிவரும். ஆகையால் நீ என் வார்த்தையைத் தள்ளாமல் காட்டைக்கடந்து நாட்டையடைந்து சுகபோகங்களையனுபவித்துக்கொண்டிருந்து தக்கவயது வந்தபோது பட்டணத்தை விட்டு வெளிப்பட்டு இக்கானகமடைந்து என்னை நினைப்பாயாகில் நான்வந்து உனக்குப் பிரமோபதேசஞ் செய்கிறேனெனத், துருவன் ஓ சுவாமி! இக்காயமோ அநித்தியம். நீர்மேற்குமிழி, நிலையில்லாப்போகம், இதை யுண்மையென நம்பி சிற்றின்பத்திலமிழ்ந்து அற்ப போகங்களை யனுபவித்துக் கொண்டு வாழ்நாளையெல்லாம் வீணுளாகக்கழித்து முடிவில் நரகத்துக்காளாதல் நலமோ? பேரின்ப சுகத்திலாழ்ந்து மேலானபதவியை யடைவதே நலமாதலால் ஓம் நமோ பராபரா! சர்வ வியாபக நிர்விகாரா! ஆனந்தமளிக்குஞ் சர்வேஸ்வரா! அடியேனை யாட்கொள்ளுங் கருணகரா! உம்முடைய கிருபை ஆகாமியமேசெய்யும் மோகாந்தகாரன்மேல் வருமோ? வந்தால் பாவனுைப் போகமாட்டேனே? ஓ அநாதிகாரணு! சர்வ பரிபூரணு! ஆத்துமானுபவத்தையுஞ் சொல்லி யாட்கொள்ளுமையாவென்று பணிந்து நிற்கும்போது, கருணநிதியான நாரதமகாமுனிவர் இவன் அதிதீவிர பக்குவமுடையோனென்றறிந்து மார்புடனணைத்துக்கொண்டு, ஓ இராஜகுமாரனே! வைராக்கியத்திற் சிறந்த வீரனே! சர்க்கரையெனச் சொல்வதால் மதுரந்தோன்றுமா? அன்னமென்று உரைப்பதால் பசி நீங்குமா? பாகீரதியென்று அறைவதால் பாபநிவாரணமாகுமா? தீபமென்று இசைப்பதால் இருள் நீங்குமா? கிரியா பத்தியால் நானற்றுப்போகுமா? வேதாந்தமென்றிசைப்பதால் சகல சந்தேகங்களும் நிவர்த்தியாகுமா? மந்திரமென்று ஓதலால் சித்தியுண்டாகுமா? ஔஷதமெனச் சொல்வதால் பிணி நீங்குமா? குருவெனப் பகர்வதால் கிருபை யுண்டாகுமா? தெய்வமெனச் சொல்லுவதால் அன்புண்டாகுமா? உண்டாகாததுபோலவே வாசக்ஞானத்தால் ஆனந்த முண்டாகுமா? ஓ இராஜகுமாரனே! மோக்ஷாபேக்ஷை யுள்ளவனுக்கு முன்னம் வைராக்கிய மில்லாத க்ஞானம் நிஷ்பிரயோசனமாய்முடியும். ஆனல் வைராக்கியங்கள் அநேகவிதம் உண்டு. அவையாவன: சாஸ்திரங்களைக் கேட்கும்போது மாத்திரம் அப்படியிருக்கவேண்டும்; இப்படியிருக்கவேண்டும்; பாபஞ் செய்யவேகூடாது; புண்ணியமே செய்ய வேண்டும்; எப்போதும் பகவானை தியானிக்கவேண்டும்; என்று நினைப்பது புராணவைராக்கியம். பிரேதத்தைக் கொண்டுபோகும்போதுமாத்திரம் என்ன வாழ்வு? என்ன சுகம்? என்ன சம்சாரம்? எல்லாம் நிஷ்பிரயோசனம். பிரபஞ்சம் இந்திரஜாலத்துக்கிணையானது என்று நினைப்பது மயான வைராக்கியம். வேதனை பொறுக்கமாட்டாமல் இனி புருடனைப் புணரவே கூடாதென்று உறுதியாய் நிச்சயஞ் செய்துகொள்ளும் ஸ்திரீயைப்போலக் குடும்பத்தில் ஓர் சங்கடம் வருங்காலத்தில் இகபோகங்களில் துன்பமேயன்றி இன்பம் அணுவளவுமில்லை. ஆதலால் இல்வாழ்வைநீக்கிப் பேரின்பத்தை யடைய வேண்டுமென்று நிச்சயித்துக்கொள்வது பிரசூத வைராக்கியம். சம்சாரத்தில் கலகம் நேரிட இனி இவர்களுடன் கூடியிருப்பது கூடவேகூடாதென்று அயல்நாட்டையடைந்து கோபமேலிட்டால் தனியாயிருப்பது சலனவைராக்கியம். அக்கிரமம்செய்த இவர்களைவெட்டி இரண்டுதுண்டாக்கவேண்டுமென்கிற குரோதங்கொண்டு தன் பிரதிக்கினையை முடித்துச் சன்னியாசியாய்ப்போவது மூடவைராக்கியம். இச்சையான பதார்த்தங்களைப் புசித்துப் போக போக்கியங்களில் அமிழ்ந்து சோம்பலின்றி இரவும் பகலும் உழன்று எதிர்த்தவர்களை வென்று யாது ஒன்றுக்கும் அஞ்சாதவனுய்க் கர்வமடைந்திருப்பது இராக்கதவைராக்கியம். பரமசிவன் தன்னை யடைந்த பிரமத்தியை விஷ்ணுவால் அகற்றிக் கொண்டதால் நாராயணனே ஆதிதெய்வமென்றும் திருமாலும் பிரமனும் அடிமுடியைத்தேடிக்காணுததால் பரமசிவனே ஆதிதெய்வமென்றும் எங்களுடைய சமயத்தில் பிரவேசித்துக் காரண குருவைத் தொழுதவர்களுக்கே மோக்ஷமுண்டென்று தேவதைகளைத் தாஷிப்பது மதவைராக்கியம். காரண குருவைத்தேடி, அவரருளால் தனது யதார்த்த சொருபத்தையும் பிரமத்தையும் உணராமல் காரிய குருக்கள் போதிக்கும். நானென்பது விர்த்தியடையும். நிலைகளில்நம்பிக்கைவைத்திருப்பது அஞ்ஞான வைராக்கியம். அனித்திய மலபாண்ட தேகத்தை என்றைக்கும் அழியாமல் வைக்கும்பொருட்டு காய கற்பங்களைப்புசித்து பிராணவாயுவையடக்கி நாதாந்தவசமாகிச் சோதியைத்தரிசித்து முடிவில் சூனிய பாவத்தையடைந்து இருப்பது ஹடவைராக்கியம். வேதாந்த சாஸ்திரங்களைச் சற்குருமுன்னிலையில் விசாரித்துப் பிரபஞ்சம் நித்தியமென்றும், தானும் நித்தியமென்றும், பிரமமே தானென்றும், எல்லாம்

பிரமமென்றும், திடப்பிரக்ஞையால் ஆனந்தவசமாகும் ஞானநிஷ்டையைசாதிக்காமல் இருமாந்திருப்பது அபலவைராக்கியம். இன்னும் பற்பல அஞ்ஞான வைராக்கியங்களிருக்கின்றன. இதனல் கற்பகோடி காலமானபோதிலும் ஆனந்த மடையப்போகிறதில்லே. ஏனெனில், நான் என்னும் மதமானது மதத்தையே தரும். அன்றி இதத்தையும் சம்மதத்தையும் ஒருநாளுந்தராது. ஞானியானவன் இரணக்களத்தில் தன்னை எதிர்த்தவன் எவனுனும் அவனை யெதிர்த்து ஜெயம்பெறும் அதிசூரனைப்போலவும், ஞாயசபையில் உற்றோர் மற்றோர் எளியோர் வலியோரென்கிற பாரபக்ஷம் பாராமல் தீர்ப்புசெய்யும் சத்திய ஞாயாதிபதியைப்போலவும் சகலரும் சம்மதிக்கும் சம்மதமான ஞானமார்க்கத்தைக் கண்டிப்பா யுரைக்கவேண்டுமன்றி பந்தியில் சகலருக்கும் சமமாகப்படையாத அநீதனைப்போலவும், ஈ எறும்பு முதலான ஜீவர்களிடத்துச் சமபாவம் பார்க்காத அஞ்ஞானியைப்போலவும், தன்மக்கள் பிறர்மக்களென்று சிசுக்களிடத்தில் துவிதபாவமாய்ப் பார்க்கும் உலுத்தனைப்போலவும், பிறர்மானம் தன்மானமென்று நினையாப் பாவியைப்போலவும், தன் ஜீவனைப்போலவே அன்னிய ஜீவர்களைப் பாராத அசடனைப்போலவும், பூஷணைக்கு மகிழ்வது தூஷணைக்குக் காதுகொடாத அவிவேகியைப்போலவும், மனதிலொன்றும் வாக்கிலொன்றுமாயிருக்குங் குரோதியைப்போலவும், சைவமே முக்கியமென்றும் வைஷ்ணவமே பிரதானமென்றும் சொல்லக்கூடாது. ஏனெனில் ஆயிரம் ஞானிகளின் மார்க்கம் ஆயிரம்விதங்களாகவிருக்கும். சாக்கிரதை சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்தவஸ்தைகளும் சகல ஜீவராசிகளுக்கும் பொதுவாயிருக்கின்றன.

இவ்வவஸ்தைகள் ஐந்தையும் சற்குரு முன்னிலேயில் நன்ருய் விசாரித்தறிந்தாலொழிய ஞானமார்க்கந் தெரியாது. ஞானமில்லாதவர்க்கு நான் என்பது அற்றுப்போகாது. நான் என்பது அற்றுப்போவதே ஞான மென்று உரைக்கத்தகும். ஞானமில்லாத பக்தியும் சித்தியும், ஞானமில்லாத வைராக்கியமும் யோக்கியமும், சூக்ஷமமில்லாத தியானமும் மோனமும் ஓர் பிரயோசனமுங்கொடுக்காது. மோக்ஷமென்பதை எளிதில் அடைவதற்கு ஞான வைராக்கியங்கள் முக்கியமாய் வேண்டும். அதாவது, அணுமுதல் பிரம்மாண்ட பரியந்தம் பிரமமே நிறைந்திருக்கிறதென்றும், பரிபூரணமாகிய பரப்பிரம்மத்தைவிட நானென்பது வேறில்லவேயில்லேயென்றும், எப்போதும் அழியாமலிருப்பது பிரமமென்றும், நானென்னும் அகம்பாவத்தையும் எனதென்னும் அகங்காரத்தையும் தலேயெடுக்காமல் சர்ப்பமுண்ணுந் தவளேயைப்போலப் புசித்துவிடுவது பூரண வைராக்கியம். கானற்சலத்துக்கு இணேயான பிரபஞ்சத்தைச் சுத்தமாய் மித்தையென்றுன்னி ஸ்திரீயாதி போகங்களேக் காகத்தின் எச்சத்தைப்போல் எண்ணி மனதில்வருகிற நினைப்புகளேயெல்லாம் மாய்த்துக் காமக்குரோதாதிகளென்னும் கள்வரை அடியோடே வெட்டிச் சாய்த்துக் குடும்பத்தை விர்த்திசெய்ய வேணுமென்கிற ஜீவேச்சையைத் தேய்த்து ஆனந்த சமுத்திரத்தில் கருவிகரணுதிகளேத் தோய்த்துத் தன்னையறிந்து பிரமமாத்திரமாயிருப்பது எதார்த்த வைராக்கியம். ஆசாரியர்மீது அதிகப் பிரீதியுடையவனுய் எப்போதும் சாதுக்கள் கூட்டத்தைவிடாமல் அனுசரித்துச் சந்ததமும் தான் பிரமமென்று மனனம்பண்ணி சரீரபாவனையைநீக்கி சங்கற்பவிகற்பங்களேப் போக்கிப் பாமரத்தைத் தூளாக்கி அகமுகத்தில் பரப்பிரமத்தை நோக்கித் தன்னை பிரம்மத்துக்குள்ளாக்கி நிர்விகற்பனுய் அகண்டானந்த நிராமயமான சாட்சியாயிருப்பது சத்பாவ வைராக்கியம். கர்மங்களெல்லாம் குணங்களால் பிரவர்த்திக்கின்றது நானே குணுதீதன் தன் கர்மபத்தி யோகங்களால் ஓர் பிரயோசனமும் இல்லேயென்று நிரேதுவாய் ஒன்றையுங் கேளாத வாக்கு மௌனமும், ஒன்றையும் நினையா மனமும், ஒன்றையும் இச்சிக்காத ஜீவமௌனமும் பெற்று, சமாதி நிஷ்டாபரனுய் த்வைதமாயிருப்பது அபாவ வைராக்கியம். எல்லாவற்றையும் சொற்பனமாய் நினைத்து சுகதுக்காதீதனுய் துவிதியுக்த சந்துஷ்டனுய் நான் நீயென்னும் துருதபாவமில்லாதவனுய்த் தானே தானுய்ப் பிரபஞ்ச வெத்தனத்தைத் தள்ளிப் பிரவபிக்கிய வெத்தன மேலிட்டுச்சொற்பனத்திலும் இகபோகங்களே நினையாமலிருப்பது ஸ்தாபன வைராக்கியம். சுகதுக்கமயமான சரீரம் பிராப்தாதீனமென்றும், பிராப்தபயனே சுகதுக்கமென்றும், தேகபோஷணையையும் தேகபீதியையும் விடுத்து விதிநிஷேதங்களேத் தள்ளி துக்கமுஞ் சுகமும்வந்தால் சமமாய்ப் பாதுகாத்துச் சகல சந்தேகங்களேயும் பேய்த்துத் துரியதிருஷ்டியை மேவியிருப்பது த்ருடவைராக்கியம். பிராப்தமென்னும் ஆசனத்தின்மீது உறுதியா யிருந்துக்கொண்டு ஞானக்கினியால் அஞ்ஞான ஆபரண விக்ஷேபாதிகளேப்பஸ்பமாக்கிக் காலபயத்தைநினேக்காமல் பித்தன் உன்மத்தன் சிசுராஜன் சுபாவத்தை

யடைந்து நிர்த்தொந்தனுயிருப்பது விச்சிரம வைராக்கியம். ஆலஸ்யம் நித்திரை நிந்தாஸ்துதியை விட்டு தேகஸ்மரணைகெட்டு அகண்ட சிரவண மனனங்களால் பூர்த்தியடைந்து பரமாத்மாவில் ஐக்கியமாய் மௌனமாயிருப்பது சம்மத வைராக்கியம். பேரிடிவிழுந்தாலும் பயப்படாமல் நான்விஞசன் அவிசேஷன் அதுலன் அசலன் அநாமயன் பரிபூரணன் ஆதலால் எனக்கு மரணமேது? ஜனனமேது? பாவமேது? புண்ணியமேது? நரகமேது? மோக்ஷமேது? எனக்குள்ளாகவே இப்பிரபஞ்சம் முழுமித்தையா புதித்து ஒடுங்குகின்றதென்று நிர்ச்சலனமாயிருப்பது விசாரவைராக்கியம். யாதொரு வியாகூலமும் இல்லாமல் பிர்ம்ம நிர்வசனவனுதி அதற்கேது உபாதியென்று நிர்ச்சிந்தனுய் ஐக்கிய சுபுத்தியுடையவனுய்ப் பிரம்ம நிர்விகாரம் நமக்கேது விகாரம் நமக்கேது விகாரம் என்று கல்பநாமரூபத்தைக் கெடுத்துச் சுயம்புவாய் சாவகாசமாய் ஒரே நிதானமாய்ச் சித்திர தீபம்போலவும் நிஸ்தாங்க சமுத்திரம்போலவும் இருப்பது நிர்வாண வைராக்கியம். என்று இன்னும் அனேக ஞான வைராக்கியங்கள் சாஸ்திரங்களில்சொல்லியிருக்கின்றன. இதுஞானம் புத்திவைராக்கியம். இதனுல் வஸ்து லாபபாக்கியம். வஸ்து லாபத்தால் வருஞ் சிலாக்கியம். தருமம் மேலான யோக்கியம். யோக்கியர்க்கு உரைக்கத் தகுந்தது மகாவாக்கியம். மேற்சொன்ன ஞான வைராக்கியங்களன்றி மற்ற வைராக்கியங்கள் விட்ட டம்பனம் உத்தண்டகல்பனம் என்றும் சொல்லப்படும் எதெது மனுேவாக்குக்குக் கோசரமாயிருக்கின்றதோ அவைகளெல்லாம் கற்பிதமென்றே நினைக்கத்தக்கது. மனுேவாக்குக்குக் கோசரமாய் வேதாதிதமாய் மூவரும் தேவரும் மற்றியாவரும் போற்றும் பொருளானது எதுவோ அது மூகபாவத்தைக் கொடுக்கும் வஸ்து வெதுவோ அதுவே சத்திய ஞானனந்த நித்திய நிர்மலமாயிருக்கும். பரப்பிரம்மமென்றும், அப்பரப்பிரம்மமே ஆதிதெய்வமென்றும் இதில் ஐக்கியப்பட்டவர்க்கே ஆனந்தமென்றும் அவ்வானந்தமே மோக்ஷமென்றும் சொல்லப்படும். சந்திரகிரணத்தைப் புசித்துத் திருப்தியடையும் சகோரபக்ஷியைப்போல ஞானரசமான பிர்மானந்தத்தைப்புசித்துத் துரியபூமியில் வசித்து; நானென்பது நசித்து தேகேந்திரியங்கள் முடித்து பரப்பிரம்மத்துக்குள் ஐக்கியப்பட்டு இளைப்பாற்றி யிருத்தலும் எழுதலும் மறந்து பிர்ம்மானந்தம் நிறைந்துநடத்தலும் பேசலுங்குறைந்து தேசாபிமானத்தையுந் துறந்து சொஸ்தனுய்ச் சகோரபட்சிக்கு உணவாகியும் எங்குஞ் சீதளப்பிரகாசமாய் நிறைந்திருக்கும் சந்திரனைப்போல உனக்குள்ளே குளிர்ச்சியடைந்து, அந்தக்கரணுதிகளுக்குஞ் சீதளத்தைத்தந்து குறையாமல் பரிபூரண சொரூபமாகிப் பிரபஞ்சமயமாகாமல் அதிகுப்தனுயிருமப்பாவென்ற பரமாசாரியராகிய நாரதமாமுனிவர் திருவடித்தாமரைகளில் பணிந்து இருகண்களையும்பதித்து இவரே பராபரவஸ்துவெனத் துணிந்து நானென்னும் அகங்காரந்தணிந்து துருவன் எழுந்துநின்று கைகட்டி வாய்பொத்தி ஓ என் சற்குருராயனே! மதுரமொழிகளை யுரைக்கும்வாயனே! இவ்வுலகிலுள்ள சகலருமேத்துந்தாயனே! என்னைப் போன்ற எளியோர்களுக்கு மிகவும் நேயனே! இப்படிக்கு யதார்த்தமாய் சன்னல்பின்னலாய்த் திருவாய் மலர்ந்தருளினுல் முழுமூடனுகிய அடியேன் தெரிந்துக்கொள்வ தெப்படி யென்று துருவன் பிரார்த்திக்க, திரிலோக சஞ்சாரியாகிய நாரதமுனிவர் சொல்லத்தொடங்கினுர்.

கேளும் இராஜகுமாரனே! பிரம்மானந்தத்தை விரும்பினவன் முன்னம் சகுணமாகிய திரிமூர்த்திகளையாவது நிர்குணமாகிய பரப்பிர்ம்மத்தையாவது அன்பாய் உபாசிக்கவேண்டும். இதனுல் அக்கினியில் வீழ்ந்த சருகைப்போலச் சகல ஆகாமியபாபங்களும் பஸ்பமாய் புண்ணியம் மேலிடும். இப்புண்ணியமேலிட்டால் அனித்தியமாகிய சம்சாரம் துன்பமாய்த் தோற்றுவதன்றி நித்தியமாகிய மோக்ஷமார்க்கத்தைக் காட்டும். சற்குருதரிசனங் கிடைக்கும். அந்த சற்குருநாதனுக்கு அன்புடன் பணிவிடைசெய்வதால் பெருங்காற்றில் சிதறிப்போகும் மேகத்தைப்போலச் சஞ்சித கர்மங்களெல்லாம் சிதறுண்டுபோம். இதனுல் அதிக சந்தோஷமுண்டாகும். பின்னர் ஆசாரியர் உபதேசிக்கும் மகாவாக்கியத்தை ஏகாந்தஸ்தானத்தி லிருந்து தைலதாரைபோல தியானிக்கவேண்டும். இதனுல் காற்றில்லாவிடத்துள்ள தீபத்தைப்போலச் சகல சஞ்சலங்களும் நீங்கி ஏகாக்கிரசித்தமுண்டாகும். பிறகு சற்குருமுன்னிலையில் தேகத்தையும், இதிலிருக்குந் துவாரங்களையும், இதனுள்ளுலாவுஞ் சுவாசத்தையும், இதற்குள்ளிருந்து உதிக்கும் அந்தக்கரணங்களையும், இவைகளையெல்லாம் நானென்றிருக்குஞ் சீவனையும், இதற்கு ஆதாரமான சுத்தசூனியமாகிய அஞ்ஞானத்தையும், ஜாக்கிராவஸ்தையில் கருவிகளின்சேஷ்டையையும், சொற்பனத்தில் மனக்கூத்தையும், சுழுப்தியில் சூனியத்தையும் அறிந்துக் கொண்டிருக்கும். சாக்ஷியாகிய தானும் இப்படியே

சராசரங்களிலுஞ் சாக்ஷியாகியிருக்கும். சர்வசாக்ஷியாகிய பிர்மமும் ஒன்றேயெனக்காட்டும். முக்கியமாய் மகா வாக்கியார்த்தத்தை சிரவணஞ் செய்ய வேண்டும். இதனால் சூரியோதயத்தால் நீங்குமிருளைப்போல அஞ்ஞானம் நீங்கிப்போம். பின்பு தேகம் நித்தியம், நாம்நித்தியம், இந்திரியங்கள் துக்கமயம், நாம் ஆனந்தமயம், அந்தக்கரணஞ் சலனசுபாவம், நாம் நிர்ச்சலனசுபாவம், வாயுதேகத்துக்கு ஆதாரம், நாம் சமஸ்தத்துக்கும் ஆதாரம், ஜீவன்நானென்னும் பாவம், நாம் நானற்றபாவம், அஞ்ஞானம் சுத்த சூனியம், நாம் அகண்டபரிபூரணமென்று மண்டுகத்தின் கண்டத்தைபோலவும் சிசுக்களின் உச்சியைப்போலவும், மானிடர்கள் இருதயத்தைப் போலவும், சமாதானம் பண்ண வேண்டும். இதனால் தீர்மானமானபின் வாதியின் சந்தேகமற்றதுபோல சகல சந்தேகங்களுந் தலையெடுக்காமல் சாகும். பிறகு தேகாதிகள் நாமல்லாததால் நமக்கு தர்மமா? தர்மபந்தமோக்ஷ ஜராமரணங்கள் முக்காலத்திலுமில்லை. பலதுளிகளுங் கூடி பெருவெள்ளமானதுபோலச் சகல சாக்ஷிகளின் கூட்டமே சர்வசாக்ஷியாகிய பிரமமென்றும், அந்தப்பிர்மமே சாக்ஷிசொரூபமாகிய நானென்றும், ஜனனமில்லாவெனக்கு மரணமேதென்றும், ரூபமில்லாவெனக்கு விகாரமேதென்றும், சங்கற்பமில்லாவெனக்கு விகற்பமேதென்றும், மரணமில்லா எனக்குப் பயமேதென்றும், எங்கும் பரிபூரணமாயிருக்கும் உனக்குத் தேகமேதென்றும், முக்காலத்திலும் ஒரியல்பாயிருக்கும் எனக்குக் காலமேதென்றும், என்றைக்கும் அழியாமலிருக்கு மென்பால் முன்னும்பின்னு மித்தையான இந்திரஜால வித்தையைப்போன்ற . இப்பிரபஞ்சம் முழுமித்தையென்றும் என்றும் அழியாதிருக்கும் பிர்மமே நானென்பதற்குச் சந்தேகமே இல்லையென்றும், திடமான நிதித்தியாசனத்தால் தெளிந்துக் கொள்ளவேண்டும்.

இதனால் தீபமேற்றியபின் சர்ப்பபயம் நீங்கிப் பழுதையென்று காலாற்றள்ளி விடுவதுபோலப் பிரபஞ்சம் மெய்யென்றும், தேகம் தானென்றும், பந்தமோக்ஷங்க ளுண்டென்றும், நினைக்கச்செய்யும் விபரீதபாவனை ஒழிந்துப்போம். பிறகு தேகமிருந்தாலென்ன? மரித்தாலென்ன? காட்டிலிருந்தாலும் நாட்டிலிருந்தாலும் பிராப்தாதீனமான இத்தூலம் சுகத்தையும் துக்கத்தையும் அநுபவித்தே நீக்கவேண்டுமென்றும், பலதரம் இச்சித்து நினைத்தாலும் வாராதுவாரா. பலதரம் வேண்டாமென்று நிக்கிரகித்தாலும் போகாது போகா என்றும் நிரேதுவாய்ச் சகல இச்சைகளுமற்று, புற்றினுள்ளிருந்து புறப்படும் ஈசலைப்போல உள்ளத்திலிருந்துதிக்கும் சங்கற்பங்களை இந்திரியங்களின் வழியாய்ச் செல்லாமல் மீனையுண்ணுங் கொக்கைப் போல் உண்டு, இச்சையென்னும் மடுவிலிருக்கும். நினைப்பென்னும் மச்சங்களையெல்லாம் நாசஞ்செய்து, இச்சையின் வழியால் மனதைச் செலுத்தாமல் நிக்கிரகித்து நிஷ்தரங்க சமுத்திரம்போல் அசைவற்று கூடஸ்தப் பிர்ம்மமாத்திரமா யிருப்பது சமாதியென்று சொல்லப்படும். இதனால் சுழுத்தியிலுண்டாகுஞ் சுகத்தைப்போல ஆனந்தமுண்டாக்கும். இப்பேர்க்கொத்த எல்லையில்லாச் சுகானந்தக் கடலிற்படிந்து தன்னைமறந்து தலைவனிற்கலந்து, திக்குத் தேகாதிகளிறந்து, திருக்கு சொரூபத்திற் கரைந்து, எங்கணும் நிறைந்து, முகபாவத்தையடைந்து, தான் இன்னானென்றுந் தெரியாமல் சுத்தா சுத்தத்தையுங் குறியாமல் பேசுவதும் உண்ணுவதும் சொற்பனத்தில் கண்டுங்காணாத காட்சிபோல் உணர்ந்தும் உணராமல், பேயன் பித்தன் உன்மத்தன் சிசுவைப்போலாகி, அரி அராதிகள் பிரத்தியக்ஷமானாலும் மாயாமயனென்று அறிந்து தலையறிவதுந் தெரியா ஆனந்தாவேசம் மேலிட்டு ஜாக்கிரசுழுத்தியின் நிலையை மேவி பிரமமாத்திரமாயிருப்பது சாக்ஷாத்காரம். இதனால் கற்புள்ள கன்னிகைக்குச் சாயுச்சியங் கிடைப்பதுபோலச் சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்னும் நாலு பதவிகளுக்கு அப்பாற்பட்ட ஐந்தாம்பதமாகிய ஆனந்தமாத்திரமான கைவல்லியங் கிடைக்கும். ஆதலால் சகல பற்றுக்களுமற்ற இராஜகுமாரனே! பிரம்மமே இஷ்டதெய்வமென்றும், தெய்வமே சற்குருவென்றும், குருசேவையே சகல கிரியைகளென்றும், குரு உபதேசமே வேதமென்றும், வேத முடிவே வேதாந்தமென்றும், வேதாந்த சிரவணமே மோக்ஷமார்க்கமென்றும், மோக்ஷயிச்சையேதபோபலனென்றும், தபோபலனே மனனமென்றும், மனனமே நிதித்தியாசனமென்றும், நிதித்தியாசனமே சமாதிநிஷ்டை யென்றும், நிஷ்டையே சாக்ஷாத்காரமென்றும், சாக்ஷாத்காரமே பிர்மமென்றும், பிர்மமே ஆனந்தமென்றும், ஆனந்தமே முக்தியென்றும், நிச்சயமாய் அறிந்துக்கொள்ள வேண்டுமென்று பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

ஓ இராஜகுமாரனே! முக்கியமாகப் பரமாசாரியர்மீதும் இஷ்டதேவதையின்மீதும் சிரவணார்த்தங்களின்மீதும் சிரத்தை பூரணமா யிருக்கவேண்டும்.

பரமாசாரியர் மீதிருக்கும் சிரத்தையானது பரமக் ஞானத்தைக்கொடுக்கும். இஷ்டதேவதை மீதிருக்கும் சிரத்தையானது பாபவிமோசனமாக்கும். சிரவணார்த்தத்தின்மீது சிரத்தை யில்லாதவனுக்கு ஞானம் லபிக்கமாட்டாது. அஃதெப்படியெனில், பருவமாகாக் கன்னிகைக்கு எப்படி கர்ப்பந்தரிக்க மாட்டாதோ அப்படியே சிரத்தையில்லாதவனுக்கு ஞானார்த்தம் மனதில் தரிக்கமாட்டாது. சிரத்தையே ருது. உபதேசமே பிந்து. ஞானமே கர்ப்பம். ஆனந்தமே சிசுவென்று உரைக்கத்தகும். குருகிருபை யில்லாதவனுக்கு சிரவணாதிகள் பலிக்கமாட்டாது. தன்னை மறக்கிறபரியந்தம் மேற்சொன்ன மூன்றிடத்திலும் சிரத்தை பூரணமா யிருப்பவருக்கே பிர்ம்மானந்தம் உதயமாகும். எப்போது ஆசாரியருடைய பரிபூரண கிருபையைப் பெறுவாரோ, அப்பொழுதே ஞானப்பிரகாசம் உதயமாகும். அஞ்ஞானம் அற்றுப்போகும். பாசம் விஸ்தரிக்கும். ஆத்மவிலாசம் இருக்காது. சிந்தை லவலேசம் சஞ்சிதகர்மங்கள் போகும். நாசம் தன்னை மறக்கச்செய்து விடும். அப்பா! பிர்மோபதேசம் சகல பற்றுக்களும் அற்றுப்போகும்படி செய்யும். சாதுக்கள் நேசம் இவ்வளவு மேன்மையானது. குருவிசுவாசம் ஓ இராஜகுமாரனே! தேகம் சேதனம் மூடசடம் நீ, நித்திய சுக்ஞான சேதனம் தேகம் கண்டரூபநாமம் நீ, அகண்டபரிபூரண நிர்நாமம் தேகம் விகாரபலதுக்கம் நீ, நிர்விகார நிர்மலானந்தம் முத்தனான உனக்கேன் இனி தேகாபிமானம். உன்னுடைய ரூபம் என்றைக்கும் ஒரே நிதானம். உன்னை இப்படி யார் செய்யப்போகிறார் சமாதானம்? உன்னுடைய ரூபம் யாராலுஞ்சொல்லுதற் கரியமோனம். இதுவே வேதமுடிவான பதார்த்தஞானம், மற்றவைகளெல்லாம் மூடக்ஞானம், மூடபாவத்தை யடைந்திருப்பதே பிர்மத்தியானம். தற்சுதந்தர மற்றிருப்பதே ஆசாரியருக்கு அளிக்குந் தானம். நானென்பதற்றவர்க்கு முண்டோ யீனம். நானற்ற பிர்மக்கியானியோ மூவர்க்குஞ்சமானம். நானற்றபேர்களுக்குண்டு சனகாதிகள் சன்மானம். ஓ இராஜகுமாரனே! தேகத்தை நடப்பிப்பதும், பிராணனை நடப்பிப்பதும், ஜீவன் ஜீவனை விளக்கச்செய்வது ஆத்மக்ஞானம். ஆதலால் தேகாதிகளை நானல்லவென்றே இருக்க வேண்டும். பிராப்தாதீனமான தேகத்தைக் குறித்து உனக்கு அக்கரையென்ன? தேகாபிமானத்தை இன்றுடன் விட்டுவிடு. உன்னை நீயே நன்றாய் ஆராய்ந்துப்பார். தனக்குள் ஆராய்பவர்க்கே எல்லையற்ற ஆனந்தம் உண்டாகும். தேகாதிகளை அசைவற நிறுத்தினவனுக்கு நித்தியானந்தம் வந்து அடைவதுபோல் துரியதிருஷ்டிமேவி பிரமமாத்திரமா யிருப்பவர்க்கே ஆனந்தோதயமாகும். நித்திரையானது தன்னை மறக்கச் செய்வதுபோல ஆனந்த நித்திரை உன்னை மறக்கச்செய்யும் நீ முற்காலத்திலும் முக்தனாகவே இருக்கின்றாய். இனிமேல் சங்கை செய்வாயானால் பந்தத்துக் குட்பட்டுப் போய் திரிகுணங்களும் திரிகுணசேஷ்டைகளும் பஞ்சபூதங்களும் பஞ்சகர்த்தர்களும் மாயையால் நிர்மாணிக்கப்பட்டது. மாயையோ மித்தையால் நிர்மாணிக்கப்பட்டது. நீயே சர்வசாக்ஷி. இவைகளையெல்லாஞ் சாக்ஷியாயிருந்த ரிஷிஉனக்கு மாயையும் திரிகுணங்களும் பஞ்சபூத விகாரங்களும் ஒருகாலத்திலுமில்லை. நீ பிருதிவி அப்பு வன்னி வாயு ஆகாசங்களிலும் நிறைந்திருக்கும் பிரமமேயாம். இவ்வித ஐக்கிய வித்விதானுபவத்தினாலேயே நானென்னுஞ் சீவபாவம் ஒழிந்துபோம் என்கிற பற்பல வேதாந்த இரகசியங்களுள் உரைத்து, ஓ இராஜகுமாரனே! இந்த அனுபவமே நான்கு வேதத்திலும் வசிஷ்டசங்கிதை சூதசங்கிதை பகவத்கீதை ஆத்மகீதை ராமகீதை உத்தரகீதை ரிபுகீதை குருகீதை பிரமகீதை அஷ்டவக்கிர கீதையிலும் தச்சிபுராணங்களிலும் நான்கு விஷ்ணுபுராணங்களிலும் சொல்லியிருப்பதை மதபேதத்தால் திரஸ்கரிப்பவர்களுக்கு இரௌரவாதி நரகமே பிராப்தியாகுமென்று சொல்லும். பின்னும் ஓ சிறுவனாகிய துருவனே! யான் சொல்லியவண்ணம் அதோ சோலைகள் நெருங்கிய யமுனாநதிக்குச்சென்று ஸ்நானுஷ்டானங்களை முடித்து அந்நதிக்கரையின் மீதிருந்து தவம்புரிந்து உனது கோரிக்கையின்படி பகவானைச் சேவித்து, வரத்தைப்பெற்று, நீடூழியாயிருக்கக் கடவாயென்று ஆசிகூறி இச்சையின்படி நடந்தார்.

உடனே துருவன் பிறவிக்குருடன் கண்பெற்றதைப்போலவும், மலடி மைந்தனைப்பெற்றதைப் போலவும், தரித்திரனுக்கு நிதிகிடைத்தாற் போலவும், யாசகனுக்கு இராஜரீகம் கிடைத்தாற்போலவும், அகமகிழ்ந்து முகமலர்ந்து குருநாதரைப் பலவாறு புகழ்ந்துக்கொண்டே, அவர் நேமித்தபடி யமுனாநதியை யடைந்து ஸ்நானுஷ்டானங்களை முடித்துக் கரையேறி அங்கு ஓரிடத்தைத் திருத்தி, அக்காட்டிலுள்ள சில கனிகளைப் புசித்துத் தண்ணீரருந்தி, ஒருகாலை பூமியிலூன்றி மற்றொருகாலை மேலெடுத்து இருகரங்களையும் மார்பினிடமேந்தி

இருகண்களையும் ஆகாயத்தைப் பார்க்கும்படி ஊர்த்துவப் பார்வையா யிருந்துகொண்டு தவஞ்செய்யத் தொடங்கினன். அஃதெப்படியெனில், பரமாசாரியரான நாரதமாமுனிவர் தனக்கு உபதேசித்த மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டு சித்திரதீபம்போலவும், நிஷ்டாங்க சமுத்திரம்போலவும், அசைவற்று நின்று பகவான் திருவடித்தாமரைகளில் தன்மனதை மரத்தாணிபோலப் பதிய வைத்துக்கொண்டு தவம்புரிந்து வாரத்துக்கு ஒருதரம் கண்ணை விழிப்பதும், கனிவர்க்கங்களை நீக்கி சருகு பட்சணம் பண்ணிக்கொண்டிருந்து, பின்பு வாயு பட்சணம் செய்துக்கொண்டும் இருக்கிறபோது தபோவக்கினியானது தேவேந்திரனது பட்டணத்தை யடையக்கண்ட இந்திரன், தனக்குள்தானே யோசிக்கின்றான்; அதென்னவெனில், இவனோ சிறுவன். இவன் எந்த பதவியைவேண்டி இப்படிப்பட்ட அகோரமான தவஞ்செய்கின்றானோ தெரியவில்லை, இதைக்கண்டு அறியவேணுமென்றால் அரம்பை ஊர்வசி மேனகை திலோர்த்தமைகளால் தெரிந்துக்கொள்ள முடியாது. ஏனென்றால் அவனோ சிறுவன்; காமத்துக்குறிய வயதை யடையாதவனாக விருக்கின்றான். இதற்கு என்னசெய்கிறதென்று ஆலோசித்து இவன் எதைக் குறித்துத் தவஞ்செய்தபோதிலும் நமக்கு என்ன பயமென்றும், பூதங்களைக்கொண்டு பயமுறுத்தித் தவத்தைவிட்டு தன் நாட்டை யடையும்படிச் செய்யவேண்டுமென்று தீர்மானித்து, இரண்டு பூதங்களை யழைப்பித்து. "நீங்கள் விரைவில் யமுனாநதியை யடைந்து அங்கு தவஞ்செய்துக் கொண்டிருக்கும் சுவாயம்பூமனுவிற்குப் பேரனும், உத்தானபாத மகாராஜன் குமாரனுமான துருவனை பயமுறுத்தித் தவத்தைக் கலைத்து அவனைப் பட்டணம் அடையும்படியான முயற்சி செய்துவிட்டு வரக்கடவீர்கள்" என்று கட்டளையிட்டு அனுப்ப, அந்தப்படியே பூதங்களிரண்டும் யமுனாநதியைக்கிட்டி, அங்கு அகோரமான தவஞ்செய்துக்கொண்டிருக்குந் துருவனைக்கண்டு, தங்கள் சுயரூபத்தைக்காட்டி, கொக்கரித்துக் கைகளை நீட்டிக் கயிற்றைக்கொண்டு மாட்டி, பம்பரம்போலாட்டி, "நீயாரடா? தவஞ்செய்கிறவன்; கண்களைத் திறந்து எங்களைப்பாரடா? உனக்கு என்னவரம் வேண்டும் கோரடா? எங்களைக்கண்டு உன் மனந் தேரடா? சீக்கிரம் பதில் உத்தரங்கூறடா?" என்று ஆர்ப்பரித்துப் பலவாறு தவத்தைக்கெடுக்க முயன்றும், துருவன் சற்றும் பயப்படாமலும், கண்களைத் திறக்காமலும், பதில்வார்த்தை யுரைக்காமலும், பகவத்தியானத்தை மறக்காமலும், திடச்சித்தனாய்ச் சிறிது மிளைக்காமல் வைராக்கிய சீலனாகி யிருந்தான். இதைக்கண்ட பூதங்களிரண்டும் வெட்கி நாணமடைந்து, ஏமனும் நமது குரலோசையைக் கேட்டமாத்திரத்தில் நடுநடுங்கித் திகைத்துத் தடுமாறி நாவுலர்ந்து பெருமூச்சிவிட்டுக் கதறுவனென்றால், இவன் எம்மாத்திரம்; மிகவும் சிறு பயலாயிருந்தும் 'பனங்காட்டுநரி சலசலப்புக்கு அஞ்சாது' என்பதுபோல, அந்த ஏமனையும் நம்மையுஞ் சுண்டாங்கியைப்போல வெண்ணி, கிஞ்சிற்றேனும் பயப்படாமலிருக்கின்றான். ஆஹாஹா! இப்படிப்பட்ட திடசித்தமுடைய சிறுவனை நாம் இதுபரியந்தங் கண்டதுமில்லை. கேட்டதுமில்லையென்று தங்கள் வீரங்குன்றி இச்சிறுவனை பயமுறுத்தி யோட்டாத நமது வீரமும் ஒரு வீரமோ? இச்செய்தியை நமது அரசனான இந்திரன் கேட்டால் நம்மை என்ன தண்டனைக்கு உட்படச் செய்வானோ? என்று மெத்த விசனத்துடன் பொன்னுலகை யடைந்து நடந்தவற்றைச் சொல்ல, பின்னடைந்து துக்கமிகுந்து மனந்தளர்ந்து இந்திரசபையைச் சேர்ந்து, அவ்வரசனுக்கு வந்தனை வழிபாடுகள் தந்து, நடந்த செய்தியைப்பகர்ந்து, ஓவென்று கூக்குரலிட்டழுது, வாடும் பூதங்களைத் தேவேந்திரன் ஆதரித்து, விடைதந்தனுப்பி, துருவனுடைய திடவைராக்கியத்திற்கு வியந்து வெகுவாகப் புகழ்ந்து, மகிழ்ந்து உடனே இகழ்ந்து தீராக்கவலை கொண்டு, என்செய்வேன் என்றும் இவனைத் தவத்திலிருந்து எப்படி யோட்டுகிறதென்றும் முகவாட்டமும் மனக்கிலேசமும் அடைந்திருப்பதைக் கண்டு தேவகுருவான பிரகஸ்பதி பகவான் தன் யோகதிருஷ்டியினால் தேவேந்திரனுக்குற்ற கவலையைத் தெரிந்துக்கொண்டு பொன்னுலகத்தரசனை நோக்கிச் சொல்லத்தொடங்கினர்.

கேளும் தேவராஜனே! "உத்தானபாத மகாராஜன் புதல்வனான துருவன் பிரம சிருஷ்டிக்குள்ளாகாத பதவியை யடையவேண்டுமெனத் தவஞ்செய்துக்கொண் டிருக்கின்றானே யன்றி, நீ யாளும் பொன்னுலகை யடையவெண்ணித் தவஞ்செய்யவில்லை. அப்படியிருக்க, இதை யுணராமல் அவனைத் தூஷிப்பதன்றியும் கவலை ஏன்படுகின்றாய்? இனி அவன் விஷயமான கவலையையொழித்து சந்தோஷத்துடன் அவனுக்கு அநுகூலமான காரியங்களைச்செய்ய முயற்சி செய்யுமையா தேவராஜனே" என்ற குருவார்த்தையைக்கேட்டு அரசனானவன் இனியில்லாச் சந்தோஷமடைந்து அவனுக்கு இடை

பூறு செய்வதற் கிடைந்து சகாயமேசெய்ய மன முவந்து தன்னைத்தானே இகழ்ந்து துருவன் செய்யுந் தவத்துக்கு ஒழிவும் நேரிடாவண்ணம் அவன் மீதே மனதைச் செலுத்திக்கொண்டு வெகு ஜாக்கிரதையா யிருந்தான். காட்டில் தவஞ்செய்யுந் துருவனே மனதை அரியின்பால் செலுத்தி முன்னினும் அதிக வைராக்கியத்துடன் தவஞ்செய்துக் கொண்டிருந்தான்.

திரிலோக சஞ்சாரியாகிய நாரதர் துருவனுக்கு உபதேசஞ் செய்துவிட்டு விரைவில் கமலாபுரத்தை நோக்கிச் சென்று, உத்தானபாத மகாராஜனுடைய சபையை யடைந்தார். நாரதர் வரவையறிந்த அரசன் திடுக்கிட்டெழுந்து எதிர்சென் றழைத்துவந்து தக்க ஆசனத்தில் எழுந்தருளப்பண்ணி சோடசோபசாரங்களுஞ்செய்து, அடிபணிந்து வாட்டத்துடனிருக்கும் அரசனை நோக்கி, ஓ வேந்தனே! 'எவர்களுக்கும் உபசாந்தனே! நீ ஏதோ ஒரு, மனக்கவலை யுற்றிருக்கிறப்போலத் தெரிகின்றது. அதென்ன விசாரம். அதைத் தெரியச்சொல்லுமென," அரசன் ஓ முனிநாதரே! மூத்தமனைவியின் புதல்வனன துருவன் எங்களையெல்லாம் விட்டுத் தனித்து பரதேசியைப்போல நாட்டைக் கடந்து காட்டிற்குப் போய்விட்டான், அவன் எந்நாள் போயினனே அந்தநாள் தொடங்கி அன்னகாரம் தூக்கமின்றி ஏக்கமிருந்து அதேகவலையாகி எது விஷயத்திலும் மனஞ்செல்லாமல் மிகவும் துக்கத்துட னிருக்கின்றேன். இதுவே என்மனதில் குடிகொண்டிருக்குங் கவலையன்றி அன்னிய மொன்று மில்லையென்று அழுதகண் ணுந் தொழுதகையுமாய்ப் பணிய, அம்முனிவர் அரசனுக்குப் பல ஆசிகள் கூறி, ஓ அரசனே! பிரஜைகளுக்குள் சரசனே! இளைய மனையாள்மீது உனக்கிருந்த அதிக மோகத்தால் அவளுக்குப் பயந்து மகனை ஆதரிக்காத முழு மூடன் இவ்வுலகத்தில் உன்னைப்போல எவரையும் நான் கண்டதில்லை. இதற்கு ஒரு திருஷ்டாந்தம் உண்டு. அதென்னவெனில், சிந்துதேசமென்று ஓர் நகரம் உண்டு. அந்நகரத்தை வெகுநீதியாய் ஆண்டிருந்த சிந்துபூபாலனென்னும் அரசனுக்கு ஓர் புதல்வன் வெகு அருமையாகப் பிறந்தான். அப்புதல்வனுக்குக் காலத்தில் சௌளம் உபநயனதிகளை நடத்தி செல்வமாகக் காப்பாற்றிக்கொண் டிருந்தான். அச்சிறுவனும் தந்தையின் சொற்படியே கல்வியிலும் யானையேற்றங் குதிரையேற்றம் வில் வித்தைகளிலுந் தேர்ந்து, விவாகத்துக்குரிய வயதடைந்தவனகி யிருக்கிறபோது, சிந்துபூபாலன் தன் புதல்வன் விவாகஞ் செய்துக்கொள்ள இஷ்டம் எப்படியோ அதையறிந்து வரக்கடவாயென்று மந்திரியினிடஞ் சொல்லி யனுப்ப, அந்தப்படியே மந்திரிசென்று இராஜகுமாரனைக்கண்டு, இளவரசே! விவாகஞ் செய்துக்கொள்ள உமதிஷ்டம் எப்படியோ? அதை யறிந்துக்கொண்டு வரும்படி நின் தந்தை எனக்குக் கட்டளையிட்டார். ஆகையால் உமது இஷ்டம் எவ்வாறோ? அதை ஒளிக்காமல் வெளியிட்டால் அந்தப்படியே நின் தந்தைக்குத் தெரியப்படுத்தி உமது எண்ணப்படி செய்விக்கும்படி செய்கிறேன் என்ற மந்திரியை நோக்கி இராஜகுமாரன் சொல்லுகின்றான். ஓ மதிமந்திரியே! "நூறுகன்னிகைகளை ஏககாலத்தில் மணஞ்செய்வித்தால் எனக்குச் சம்மதி, அப்படிக்குச் செய்விக்க மனமில்லாவிடில் எனக்கு விவாகமே வேண்டியதில்லை" என மந்திரிகேட்டு; ஓ இராஜகுமாரனே! ஏககாலத்தில் நூறுகன்னிகைகளை விவாகஞ் செய்துக்கொள்ள வெண்ணங் கொள்ளுவையாகில் ஒருவரைப்போல் கிடைப்பதரிது. அன்றியும் அழகிலுங் குணத்திலும் குலத்திலும் வித்தியாசமாகவே யிருக்கும். ஆகையால் மாதத்திற்கு இரண்டுபேராக மணஞ் செய்விக்கின்றேன். உன்னிஷ்டமெப்படி சொல்லுமென இராஜகுமாரன் மந்திரியை நோக்கி, ஐயா மந்திரியே! நீர் சொல்லியவண்ணம் மாதத்திற்கு இரண்டு கன்னிகைகளையே மணம்புரிகிறேனென்று சம்மதிக்க, மந்திரி அந்தப்படியே செய்விக்கிறேன் என்று இராஜகுமாரனிடம் விடைபெற்றுக்கொண்டு அரசன் பக்கலடைந்து இராஜகுமாரன் சொல்லியதையும், அதற்குத் தந்திரமாகத் தான் சொல்லியதையும் தெரியப்படுத்த, அரசன் அந்தப்படியே செய்து வைக்கிறேனென்றுசொல்லி, தக்க அழகுவாய்ந்த இரண்டு கன்னிகைகளைப்பேசி சந்தனம்பூசித் திருந்திய செல்வமும் அருந்தவம் கல்வியும் செவ்விய தேகமும் திவ்விய யோகமும் கண்டுபோல் மொழிகளும் கெண்டையின் விழிகளும் கமல நிகர்த்ததாள்களும் விமலமுள்ள தோள்களும் மேகத்தைப்போன்ற கூந்தலும் சந்திரனைப் போன்ற முகமும் பவளம்போன்ற வாயும் முத்தைப்போன்ற பற்களும் மெதுவான நடையும் மெலிவான விடையும் உள்ள கன்னிகைகளைக்கூட்டி பந்து வர்க்கத்துடன் பலருஞ் சேர்ந்து விந்தையாய் மணஞ்செய்ய மிகக்களிகூர்ந்து அன்பாய் தெம்பாய் அருமையாய்ப் பெருமையாய்ப் பச்சைப் பந்தல் பட்சமாய்ப் போட்டு உச்சித வாழைகள் உயர்ந்ததாய் நட்டு மலர்களின் தோரணம் மாவி

லைத்தோரணம் பலரும் மெச்சப் பரிவாகக்கட்டி மாப்பிள்ளைக்கு மணனீராட்டி, நயகன்னிகைகளுக்கு நகைபலசூட்டி மணக்கோலஞ்செய்து ஓமம் வளர்த்தி உச்சிதம்நடத்தி நேமமனைத்தும் நேசமாய்ச்செய்து க்ஷேமமிவேளையிற் றெரிவையர் சூழ, க்ஷேமமா யவர்கள் சேர்ந்தொன்றும் வாழ, வேதியர் வேதகோஷ்டங்களையோத கோதையர் மங்கள கோஷ்டமுமோத தாளமும் மேளமும் சதிருடன் முழங்க ஆளும்பதிபதம் அன்புடன் வணங்க அமரர்கள் சாக்ஷியாய் அக்கினிசாக்ஷியாய் குமாரன் கைகளாற் கோதைகள்கழுத்தில் மங்கிலியத்தை வகையுடன்தரித்து அங்கையாற்பலரும் அக்ஷதைத்தூவி ஆசிகள்செய்து அவர்மழைபெய்து மாசகோத்தமர்கள் மனமிக மகிழ பந்துவர்க்கத்துடன் பலரும் உண்டு விந்தையீதென்று மெச்சி உட்கொண்டு உள்ளங்களித்து உடலம் பூரித்து விள்ளொணா வன்பினை மேவியே வியந்து வதுவை முடிந்தபின் சகலருந் தங்கள் தங்கள் இருப்பிடமடைந்தார்கள். பின்பு இராஜகுமாரன் மூத்தமனையாளைக் கீழறையிலும் இளையமனையாளை மேலறையிலும் வைத்து இன்றைக்கு மூத்தவளிடமும் நாளைக்கு இளையாளிடமும் தான் வருகிறதாய் முறை யேற்படுத்தி அம்முறையின்படியே தப்பாமல் நடத்திக் கொண்டு வருகையில், மூத்தமனையாளிட முறையினான்று இராஜகுமாரன் இளையமனையாளிடம் தனக்கிருக்கும் மோகத்தால் ஒருநாள் மூத்தமனையாளிடம்வருவதுபோல அவளுக்கு அபிநயங்காட்டி திடீரென்று இளையமனையாளிடம் போகும்பொருட்டு மெத்தைபடி மூன்றுகடந்து போவதை மூத்தமனையாள்கண்டு ஓடோடியும்வந்து இராஜகுமாரனது இரண்டுகால்களையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள். இதையறிந்து இளையமனையாள் திடுதிடென்றோடிவந்து இராஜகுமாரன் சிகையை எட்டிப்பிடித்துக்கொண்டாள். இவ்விருவரும் இவளிங்கிட்டும் அவளங்கிட்டும் இழுப்பதால் இராஜகுமாரன் நடுவில் தொங்கிட்டுமாகி வெகு கஷ்டத்தையடைந்து தன்னைவிட்டால் போதுமென்று சமயம்பார்த்து இருவர் கைப்பிடியையுந் தட்டிவிட்டு கெட்டேன் கிழிந்தேனென்று ஓட்டமாயோடி உத்தியானவன மண்டபத்தை யடைந்து அங்கு இரவெல்லாம் படுத்து நித்திரை வராமல் ஏக்கங்கொண்டு, முன்னம் நம்மை மந்திரி விவாகஞ்செய்துக்கொள்ளும்பொருட்டு கேட்டதற்கு நாம் நூறுபேர் கன்னிகைகளை ஏககாலத்தில் மணஞ்செய்வித்தால் செய்துக்கொள்ளுவேனேயன்றி ஒருவரிருவரைமணம்புரியச்சொன்னால் மணம்புரியவே மாட்டேனென்று சொல்லியது அவிவேகமே. இரண்டு பெண்டை மணம்புரிந்துக் கொண்ட விஷயத்திலேயே நமது பிராணனுக்கு வந்துவிட்டதே. நூறு பெண்டிரை மணம்புரிந்தால் நமதுகதி எப்படியாமோ? அது கடவுளுக்கே பிரீதியென்று தனக்குத்தானே யோசித்துக்கொண்டிருந்து காலைப்பொழுது விடிந்தவுடன் எழுந்து அங்கு ஓர் தடாகக்கரையில் உட்கார்ந்து, தந்தசுத்தி செய்துக்கொண்டிருந்தான். அப்போது தலையாரிகள் ஓர் கள்வனைப் பிடித்துக்கொண்டு அவ்வழியாக வர அவர்களை இராஜகுமாரனழைத்து அச்சோரனைக் காட்டி இவன் என்னகுற்றஞ் செய்தான்? இவனை ஏன் பிடித்துக்கொண்டு போகிறீர்கள்? என, தலையாரிகள் இராஜகுமாரனுக்குத் தெண்டனிட்டு ஓ சுவாமி! இக்கள்வன் நமது அரண்மனையில் சில ஆபரணங்களைத் திருடினான். ஆதலால் இவனை இராஜசபைக்குக் கொண்டுபோகிறோமென, இராஜகுமாரன் தலையாரிகளை நோக்கி, அடா தலையாரிகளே! இச்சோரனுக்கு வேறு எந்த தண்டனையும் செய்ய வேண்டாம். இரண்டு கன்னிகைகளைப்பேசி விவாகஞ் செய்துவைக்கும்படி நான் சொன்னதாக என் தந்தையிடஞ்சொல்லுங்கள் என்று திட்டஞ்செய்து அனுப்பினான். ஆகையால் உனக்கு இரண்டு மனைவிகள் இருந்தபடியால் மூத்தமனைவியையும் அவள் புதல்வனையும் அந்தப்புரத்தைவிட்டோட்டி, இளைய மனைவியின்மீதிருக்கும் மோகத்தால் மூத்த புதல்வனை ஆதரிக்காமல் நாட்டைவிட்டுக் காட்டையடையும்படி செய்வித்தாய். இப்படி நீயும் உன் இளைய மனையாளுஞ்செய்த கொடுமையினால் உன் மூத்த மகன் நாட்டைத்துறந்து காட்டையடைந்து பகவானைக்குறித்து அகோரமான தவஞ் செய்துக் கொண்டிருக்கிறான். இன்னுஞ் சிலநாளில் பகவானைக்கண்டு சேவித்து உத்தமோத்தமமாகிய வரத்தைப் பெற்றுக்கொண்டு வருவான். ஆகையால் அவனைப்பற்றி நீவிசனப்படவேண்டாம். சந்தோஷமாகயிரும். ஐயா! அவனுக்கு யாதொரு குறைவும் வரமாட்டாது என்றுசொல்லி நாரதமாமுனிவர் அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடஞ் சேர்ந்தார்.

இவ்வண்ணமாக நாரதர் துருவன் 'தவஞ்செய்துக்கொண்டிருப்பதைச்சொல்லக்கேட்ட அரசனும் மூத்தமனையாளும் இனியில்லாத ஆனந்தமடைந்து சோதிநக்ஷத்திரத்தில் மழைத்துளிக்காக முத்துச் சிப்பிகள் வாயைத் திறந்துக்கொண் டிருப்பது போல் அரசனும் அரசியும் மகனெப்போ வரு

வானே? மனக்கவலை எப்போது தீருமோ? என்று கானகத்தின்மீது தாங்கள் கண்ணோக்கம் வைத்துக் கொண்டிருந்தார்கள். இங்கே இவர்கள் இப்படியிருக்க, அங்கே காட்டில் தவஞ்செய்துகொண்டிருந்த துருவனுடைய செய்தி என்னவெனில், நாளுக்கு நாள் தபம் அதிகரித்து தபாக்கினியானது சத்திய லோகத்தை யளாவியபடியால் தேவேந்திராதிதேவர்களும் யக்ஷ கின்னர கிம்புருட சித்த வித்தியாதரர்களும் அஷ்டவசுக்களும் முனிவர்களும் ராக்கதர்களும் இன்னும் மற்றுமுள்ள ராஜரிஷி தேவரிஷி பிரம்மரிஷிகளும் சொல்லுகின்றார்கள். அதென்னவெனில், இச்சிறுவனைப் பெற்ற தாய்தந்தையர்கள் என்ன புண்ணியஞ் செய்தவர்களோ என்பார்சிலர். இச்சிறுவன் எந்தகுருவின் கடாக்ஷம் பெற்றவனோ என்பார் சிலர். இவனுக்கு எந்த மகாத்மாவின் ஆசிர்வாதப்பலனோ என்பார் சிலர். இவனைக்கண்ட பூதங்கள் வெட்கித் தேவலோகத்தை யடைந்தது விந்தையிலும் விந்தையென்பார் சிலர். தவத்துக்கு உரியயிடம் யமுனாநதிக்கரையென்று இவனுக்கு எப்படி தெரிந்ததென்பார் சிலர். வாரத்துக்கொருதரம் கண்களைத்திறப்பது விந்தையல்லவா என்பார் சிலர். இவனுடைய வயதுக்குக் கனிகளைத்தின்று தண்ணீரருந்தித் தவஞ்செய்வ தருமையல்லவா என்பார் சிலர். இவன் சருகுபக்ஷணஞ்செய்யுங் காலமோ என்பார் சிலர். இவன் வாயுவை ஆகாரமாகக் கொண்டு நின்றநிலையிலிருப்பது அருமையாகுமென்பார் சிலர். விளையாட்டில் காலங் கழிக்கவேண்டிய இவனுக்குக் கொடிய தவஞ்செய்ய மனமெப்படி யுண்டாயிற்றோ என்பார் சிலர். தாய் தந்தையர்களாகிலும் இவனைத் தேடிவரவில்லையே? அவர்கள் மனந்தானென்ன கல்லோ என்பார் சிலர். இவ்விதமாகப் பற்பலவிதங்களாய்ப் பேசிக்கொண்டிருந்து தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு பகவான் துருவன்செய்கிற தவத்துக்குச் சந்தோஷித்துக் கருடன்மீ தூர்ந்துவந்து, யமுனாநதியையடைந்து துருவனைக்கண்டு, அப்பா! துருவா! இச்சிறுவயதில் உன்னைப்போல அகோரமான தவம்புரிந்தவர்களை நான் என்றுங் கண்டது இல்லை. இனி யொழிந்தது நினது தொல்லை. நினக்கு நிகரான புத்தர்களும் வைராக்கிய சீலர்களும் இல்லை. இன்றோடு உனைவிட்டொழிந்தது காமக் குரோதாதிகளென்னுஞ் சள்ளை. மேலான பதவியை அடைந்தாயே கொள்ளை. இனி தவத்தையொழித்துக் கண்களைத் திறந்துபார். அப்பா! என்னைப்பார்த்து நினக்கு வேண்டிய வரங்களைக் கேள் தருவேன். என்ற பகவான்வாக்கியங்களைத் துருவன் சிரவணஞ் செய்தும் பேசவுங் கண்களைத் திறக்கவும் ஆயாசத்தால் சக்தியற்றவனாகி யிருப்பதைப் பகவானறிந்து தன்னுடைய பாஞ்சசன்னியத்தினால் முகத்தைத் துடைத்த மாத்திரத்தில் துருவனுக்கு ஆயாசம் நீங்கித் தைரிய மோங்கிக் கண்களை மூடினபடியே இப்போது என்முன்வந்து வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள் என்று சொன்ன நீர் யார்? உம்முடைய பேரென்ன? சொல்லுமையா வென, பகவான் அப்பா துருவா! இத்தனைநாளாய் எந்த தெய்வத்தை நோக்கி தவஞ்செய்தாயோ அந்தத் தெய்வமாகிய அரி என்பேர். நான் வசிப்பது வைகுந்தம் க்ஷீராப்தி. எனக்கு மனையாள் சாக்ஷாத் லட்சுமி. ஆகையால் சீக்கிரங் கண்களைத்திறந்து என்னைச் சேவித்து உனக்கு வேண்டியவைகளைக் கேட்டுக் கொள்ளுமப்பா! எனத் துருவன் ஓ சுவாமி! நீர் அரியாயிருப்பது உண்மையாகில் நான்கு கரங்கள் இருக்கவேண்டும் என்று தன் அன்னை சொல்லியபடியால் அந்தப்படியே எனது அன்னை சொல்லிய தெய்வமானால் கண்களைத் திறப்பேனென, பகவான் அப்பா துருவா! எனக்கு நான்கு தோள்களிருப்பது மெய்யே. உனது அன்னை சொல்லிய தெய்வமும் நானே. இதில் எள்ளளவும் சந்தேகமேயில்லை. ஆதலால் சீக்கிரங் கண்களைத் திறந்துபாருமப்பா வென, துருவன் அம்மொழிகளை நம்பிக் கண்களைத் திறந்து பகவானைச் சேவித்தான். அவர் எப்படிப்பட்ட ரூபத்துடன் விளங்கினாரென்றால்: பூரணச்சந்திரனைப் போலொத்த முகாரவிந்தமும், கூட்டமாகிய வண்டுகளையொத்த கருத்தரோமங்களும், வளர்பிறைச் சந்திரனைப்போன்ற முகவாய்க்கட்டையும், கண்ணாடியையொத்த கன்னங்களும், தாமரை மலரைப்போன்ற நேத்திரங்களும், எள்ளு மலரைப்போன்ற நாசியும், வள்ளையிலையைப்போல் விளங்குஞ் செவிகளும், மல்லிகை மொக்குகளைப்போன்ற தந்தவரிசைகளும், வலம்புரிச் சங்கைப்போன்ற கண்டமும், விசாலமானமார்பும், ஏடுப்பாகிய புயங்களும், யானைத் துதிக்கையைப்போன்ற இரண்டு கைகளும், பங்கய மலரைப்போன்ற அஸ்தங்களும், பயிற்றங்காயைப்போன்ற விரல்களும், நக்ஷத்திரங்களைப்போன்ற நகங்களும், கூந்தலைவாரி அழகிய கொண்டை யொன்று போட்டு அக்கொண்டையினில் மயில் இறகுகளை அமைத்து முத்துகளாலும் இன்னுமுள்ள ரத்தினகசிதமாகிய தலைச்சாமான்களும் ரத்தினகசிதமாகிய பட்டங்களும் கஸ்தூரி திலர்தமும், கண்களில் மையும், காதுகளில் குண்ட

லங்களும் நாசியில் நவநிதிகளாகிய முத்துகளும் உத்தரசஞ்சமும் முத்துகளாரமும் கௌஸ்துபமணியும் கண்டசரங்களும் நவரத்தின பதக்கங்களும் தளதளவென்று ஜொலிக்கும் ஆரங்களும் மோகனமாலையும் மகரகண்டியும் புலிநகங்களாலாகியபதக்கங்களும்புஜகிரீடங்களும் கைகளில் சங்கும் சக்கர சாரங்கமென்னும் வில்லும் கெதையும் செந்தாமரைந் தாள்களில் நாதமுடைய கெஜ்ஜை கொலுசும் தண்டையும் அநாதிகளை ரக்ஷிக்கும் பிருதும் இடையில் பொன்னுடையுடன் தெரிசனந்தந்தார். அதில் ஈடுபட்டுத் துருவன் தன்னை மறந்து ஆனந்தக்கடலில் மூழ்கினவனுகிப் பலவாறுதுதித்து முக்காலும் வலம்புரிந்து பணிந்து தொழுது எழுந்துநின்று இருகரங்களைக் குவித்துக்கொண்டு எதிரில்நின்று பரமபக்தியுண்டாகி, ஓ புண்டரீகாக்ஷா! உனக்கு வந்தனம். புருஷோத்தமா! உனக்கு வந்தனம். சகல லோக சொரூபா! உனக்கு வந்தனம். உக்கிரமாகும் சக்கரத்தைத் தரித்த தேவே! உனக்கு வந்தனம். தவமும் வேதமும் முதலானவைகளுக்கு தெய்வமாகி கோக்களுக்கும் பிரம நிஷ்டர்களுக்கும் ஹிதனுகி சகல பிரபஞ்சங்களுக்கும் ரக்ஷகனுகி ஹரியென்றும் நாராயணனென்றும் திவ்விய நாமங்களுடன் கூடியிருக்கும் உனக்கு அனந்த வந்தனங்கள். பிரமரூபமாகி ஜகங்களை சிருஷ்டித்தும் சுயசொரூபத்தினல் ரக்ஷித்தும் கற்பாந்தத்தில் உருத்திரரூபமாகிச் சங்கரித்தும் திரிமூர்த்தி சொரூபமாகிப் பிரகாசிக்கும் உனக்கு வந்தனங்கள். ஓ அச்சுதனே! தேவ அசுரசுர கந்தர்வ கின்னர சித்த சாத்திய பன்னக யக்ஷ பிசாச மனித பசு பக்ஷி தாவர பிபீலிகாதிகள் பிரிதிவி அப்பு அக்கினி வாயு ஆகாசங்களும், சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்சள் மனம் புத்தி சித்த அகங்காரங்கள் காலம் அதன் குணங்கள் இதன் பரமார்த்தமாகும். ஆத்துமா இவையாவும் நீயே. வித்தை அவித்தைகள் சத்திய அசத்தியங்கள் பிரவிர்த்தி நிவர்த்திகள் வேத புக்த சகல கர்மங்கள் இவையாவும் நீயே. ஓ பகவானே! சகல கர்மபோகங்களை அநுபவிக்குமவனும் கர்ம சாதனங்களாகும். திரவியங்களும் சகல கர்மபலன்களும் நீயே. ஓ மகாப்பிரபுவே! என்னிடத்திலும் அன்னியர்களிடத்திலும் சேஷ பூதங்களாகும் சகல லோகங்களினிடத்திலும் நீ நிறைந்திருப்பது உபாதான நிமித்தகாரண ரூபமாகும். சமத்தும் அன்ந்த க்ஞானசத்தியாதி கலியாணரூபங்களும் நன்ருக நுட்பமாய்த் தெரிவித்துக்கொண்டிருக்கின்றது. பரமயோகிகள் உன்னைத் தியானிக்கிறர்கள். யாகசீலர்கள் நின்னை உத்தேசித்து யாகங்கள் செய்கிறர்கள். நீயே பிதுர்க்கள் ரூபமும் தேவரூபமுந்தரித்து அவ்யகவ்யங்களைப் புசிக்கின்றய். ஓ அனந்தனே! என்னுடைய ஆங்காராதி நுட்பங்களும் பிரிதிவிமுதலான பூதங்களும் அதனிடத்திருக்கின்ற நுட்பமாகும். ஆத்மதத்துவமுமாய் இந்த சூக்ஷமப்பிரபஞ்சம் யாவும் எங்கிருக்கின்றதோ? எதிலிருந்து உண்டாகின்றதோ? அது சொரூப குணங்களினல் பெருத்தது ஆகும். நினது மகாரூபமாகியிருக்கின்றது. சூட்சுமாதி விசேஷசூனியமாகி சிந்திக்கக்கூடாததாகி யிருக்கும். ரூபம் மனது பரமாத்தும சொரூபமாகி யிருக்கின்றது. இப்படிப்பட்ட புருஷோத்தமனுகும் நினக்கு வந்தனம். சர்வ பூதங்களிடத்திலும் சத்வாதி குணங்களுடன் கூடியிருக்கும் நினது ஜீவசொரூபத்திற்கு நமஸ்காரஞ் செய்கின்றேன். எது வாக்குக்கும் மனதிற்கும் எட்டாததோ? எந்த விசேஷத்தினுலும் விசேஷித்துச் சொல்லக்கூடாததோ? ஞானிகளுடைய ஞானத்தினல் நிரூபிக்கக்கூடாததோ? அப்படிப்பட்ட சிலாக்கியமாகும். நினது முக்தாத்தும சொரூபத்திற்கு வந்தனஞ் செய்கின்றேன். எவனுக்குத் தனக்கிதரமாகும் பதார்த்தங்கள் இல்லையோ? எவன்யாவற்றிற்கும் அன்னியனுகியிருக்கின்றனே? அப்படிப்பட்டபகவானுகும் நாராயணனுக்கு நமஸ்காரஞ் செய்கின்றேன். கர்மாதீனமாகும் நாமரூபங்களில்லாமல் கேவலவிலக்ஷணசொரூபனுகும் மகாத்துமனுக்கு நமஸ்கரிக்கின்றேன். தேவர்கள் எனது பராத்பர ரூபத்தைத் தெரிசிக்கமாட்டாமல் மச்சகூர்மாதி அவதாரரூபங்களையே அர்ச்சனை செய்துக்கொண் டிருக்கின்றர்களோ அப்படிப்பட்ட பரமாத்துமனுக்கு வந்தனஞ் செய்கின்றேன். எவன் உருத்திரன் முதலான சகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாகி சுபாசுபங்களைப் பார்த்துக்கொண்டிருப்பனே அந்த சர்வசாட்சியும் பரமீசனுமாகும் விஷ்ணுதேவனுக்கு நமஸ்கரிக்கின்றேன். வியர்த்தமாகும் இந்த ஜெகமெல்லாம் எவனுக்குள் பேதமின்றி யிருக்கின்றதோ அந்த விஷ்ணுவுக்கு வந்தனஞ் செய்கின்றேன். சகலத்திற்கும் ஆதியாகிய ஸ்ரீஹரி எனக்குப் பிரசன்னமாகி முன்தோன்றிய உனக்கு வந்தனம். எழுத்தும் நாமரூபமும் உண்டாகி இருக்கின்ற எவனிடத்தில் பிரபஞ்சம் யாவும் நூலிழை வஸ்திரத்தில் கலந்திருப்பதுபோலவும், நூலில் மணிகள் கோத்திருப்பதுபோல, கோத்திருக்கப்பட்டிருக்கின்றதோ அந்த தியானிக்கத்தக்கவனுகும் அச்சுதனே உனக்கு வந்தனம். சர்வ சுவாமியாகி சர்வ சேஷியாகியிருக்கும் ஓ மகாவிஷ்

னுவே உனக்கு வந்தனம் புரிகின்றேன். எவனிடத்தில் சர்வமும் லயிக்குமோ எவனிடத்திலிருந்து சர்வமும் சிருஷ்டி காலத்தினில் உற்பத்தியாகுமோ எவன் சர்வசரீரியாகி சகலாதாரமாகி யிருப்பவனே அந்தச் சர்வ சுவாமியாகிய உனக்கு அனேக வந்தனம். ஓ அனந்தனே! எதற்கும் ஆத்துமாவாகி உள்ளும் புரம்பும் வியாபித்து ஞானனந்தமயமாகி நிறைந்திருப்பதனல் நானும் நீயேயாகின்றேன். ஆகையால் சமஸ்தமும் என்னல் உண்டாயிற்று. நானே சர்வமாகி யிருக்கின்றேன். நித்தியனுகும் என்னிடமே சர்வமுமிருக்கின்றது. நானே அவ்யயனுகி நித்தியனுகி வேறொரு ஆதாரமின்றி தனக்குள் தானிருப்பவனுகியிருக்கும் பரமாத்துமா வாகின்றேன். நான் சிருஷ்டிக்குமுன்னம் பிர்மபென்னும் நாமத்துடன் கூடியிருந்தேன். பிரளயகாலத்தில் சகலமும் எனக்குள் ஐக்கியமாக யடைய பரமபுருஷனுகியிருப்பேன் என்று தன்னை மறந்து தன்மயனுகி தியானித்துக்கொண் டிருந்தார்.

இப்படி ஆனந்தப்பரவசனுகி பிரபஞ்சத்தை மறந்து பகவானைத் துதிசெய்துக்கொண்டிருக்கும் துருவன் பக்தி வைராக்கியத்திற்குப் பகவான் மெத்த சந்தோஷித்து, ஓ பக்தசிரோன்மணியே! நான் இப்போது உன் பக்திவைராக்கிய தவமென்னும் வலைக்குள்சிக்கி உனக்குப் பரதந்திரனுகி யிருக்கின்றேன். உனக்கு நிகரான திடவிரதர்கள் மூவுலகத்திலுமில்லை. உன் விஷயத்தில் எனக்கு எல்லையில்லாச் சந்தோஷமுண்டாயின. இனி உனக்கு என்ன வரம்வேண்டுமோ? கேளும். தருகிறேனென, துருவன் ஓ சுவாமி! சகல ஆத்துமகோடிகள் உயிருக்குயிராகியுமிருக்கிற உனக்கு என்மனதில் எண்ணியிருக்கும் வரம் இன்னதென்று தெரியாதோ? தெரிந்தேயிருக்கும். அப்படிக் கிருந்தபோதினும் என் வாய்மொழியை யறிந்து கொடுக்கவேணுமென்கிற எண்ணங்கொண்டது விளையாட்டன்றோ? ஆகினும் கேட்டுக்கொள்ளும்படி தாங்கள் நேமித்தபடியே யான் கேட்பதைத் தடையின்றித் தரல்வேண்டும். கருணைக்கடலே! அதென்னவெனில், சொர்க்கமும் வேண்டேன்; வைகுந்தமும் வேண்டேன்; நூதனமாய் ஒரு பதவியைச் சிருஷ்டித்து அதிலிருக்கும்படி எனக்கு அருள்புரியவேண்டும். மறறும் எந்தப் பொருள்களிலும் இச்சையில்லை. இந்த வரத்தைத் தயவுபுரியுமையா என்றும் அழிவில்லாக்கடவுளேயென்றும் வேண்டிக்கொள்ள, பகவான் புன்னகை புரிந்து, ஓ பரமபக்தசிகாமணியே! உமது இஷ்டப்படியே நீகேட்ட நூதன பதவியைத்தந்தேன். அப் பதவி உனக்கு இப்போதே கிடைக்கமாட்டாது காட்டைக்கடந்து நாட்டையடைந்து சிலகாலம் தாய் தந்தையர் சொற்படிநடந்து இல்லறத்திலிருந்து பட்டாபிஷேகனுகி அரசுபுரிந்து புத்திரர்களைப் பெற்று அந்தியகாலம் சம்பவிக்கிறபோது அப்பதவியை நீயடையக்கடவாய் என்றுர். அப்போது பகவானைநோக்கி துருவன் ஓ சுவாமி! நான் பிரமசாரி. ஆச்சிரமத்தையனுஷ்டித்து உத்தம நெறியைப்பெறவேணுமென்று நினைத்திருக்க, நீரேன் என்னைத் தயவின்றி சம்சாரக் கடலிற்றள்ள யத்தனஞ்செய்கின்றீர்? கிருகஸ்தாசிரமம் பெருத்த இடுக்கண்களுக்குக் காரணமாகியது சித்தத்தைப் பகவானிடத்தில் சேர்க்க ஒட்டாமற்செய்யும். சம்சாரமென்னுஞ் சமுத்திரம் ஆசையென்னுஞ் ஜலத்தோடும் மன்மதனென்னும் வாயுவினல் விருத்தி செய்யப்பட்டு மோகமென்னும் அலைகளுடனும், மனைவியென்னும் சுழலுடனும், புத்திர சகோதரரென்னும் முதலைகளாலும் கூடி மகா பயமாகித் தாண்டக்கூடாததாகியிருக்கும். இப்படிப்பட்ட கொரமான சம்சாரக் கடலில் முழுகாமல் தப்பித்துக்கொண்டிருக்கும் என்னை நீர் ஏன் நிர்த்தயனுகி அவலக்கடலில் தள்ளப்பார்க்கின்றீர். யான் உமக்கு என்ன அபசாரஞ் செய்தேன்? என்று பயங்கராத்திரனுகி விண்ணப்பஞ்செய்த துருவனைப்பார்த்துப் பகவான்சொல்லுகின்றுர். ஓ பரமபாகவதரே! சோதிக்கவேண்டாம். ஒருவன் மனைவி மக்களுடன்கூடி இல்லறத்தில் வசிப்பதனல் சம்சாரியாவனென்றும் அதுவில்லாத விஷயத்தில் விரக்தனென்றும் நினைக்கவேண்டாம். விரக்தர்களாகிச் சம்சாரத்தை நீக்கி வாயுவை இலைசருகுகளை ஆகாரமாகக்கொண்டு மனித சஞ்சாரமில்லாத காட்டில் வாசஞ்செய்துக்கொண்டிருந்த சௌபரிகண்டு பரதாதிகள் பட்ட பாடுகளைக் கேட்டறியாயோ. சம்சாரத்திலிருந்து பிள்ளைப்பூச்சியைப் போல எதிலும் ஒட்டாமல் வைராக்கியம் முதலான நற்குண நற்செய்கைகளால் உலகத்தோர் துதிக்கப்பட்டவர்களாகி உத்தமகெதியை யடைந்த ஜனக மகாராஜன் விதுரன் முதலானவர்களுடைய சரிதைகள் புராண இதிகாசங்களினிடத்தில் பிரசித்தமாகக் கேள்விப்படவில்லையா? என் அறிவுக் கெட்டினமட்டில் உனக்கு ஹிதோபதேசஞ் செய்கின்றேன். கேளும் ஜெகத்து தத்வத்ரய ஆத்மாவாகியிருக்கும் அதில் சிலசித்துகள் பகவானுக்கு சேஷமாகி பரதந்திரமாகியும் சுதந்திரமாகியிருக்கும். இதில் சித்து என்னப்பட்ட ஆத்துமா பரமசித்தாகும் பரமாத்துமாவுக்கு மார்பு ஸ்தானமாகியிருக்கும். சண்டாளன்

விட்டிற்குப் பிராமணன் பிரவேசிப்பதற்கு யோக்கிய மாகாததுபோல ஆங்கார மமகாரங்களென்னும் சண்டாளர்கள் வசிப்பதனல் அந்த ஹிருதயம் பகவான் வசிப்பதற்கு யோக்கியமாக இராது. புத்திமான்கள் இந்தச் சண்டாளர்களிருவரையும் தூரமாக ஓடவோட்டி இருதயத்தைப் பகவானுக்கு இருப்பிடமாகும் ஆலயமாகச்செய்து சபதபங்களென்னும் ஜலத்தினல் தலசுத்திசெய்து அதில் பகவானை எழுந்தருளச்செய்து ஒரு ஜீவனை இம்சை செய்யாமலிருக்கும் மலர் ஒன்று இந்திரியத்தை நிக்கிரகஞ் செய்திருக்கும். மலர் இரண்டு சகல பிராணிகளினிடத்தும் நீங்காத தயை வைத்திருக்கும். மலர் மூன்று யார் எக்குற்றஞ் செய்தபோதிலும் க்ஷமித்து ரக்ஷிக்கும். மலர் நான்கு யாரேனும் உன்னைக்கொல்ல வந்தபோதிலும் சாந்தமாயிருக்கும். மலர் ஐந்து சதாகாலமும் இடைவிடாமல் பகவானைப் பஜித்துக் கொண்டிருக்கும். மலர் ஆறு மனதிலேயே தியானித்துக் கொண்டிருக்கும். மலர் ஏழு தலைபோகிற காரியம் உனக்கு வந்து சம்பவித்தபோதிலும் சத்தியந் தவருமலிருக்கும். மலர் எட்டு இவைகளெட்டையும் யாவனெருவன் அநுஷ்டித்துக்கொண் டிருக்கின்ருனே அந்த மகாத்துமாவினிடத்தில் பகவானுக்கு மெத்தப் பிரியமுண்டாகும். அன்றி, இந்த எட்டு புஷ்பங்களைக் கொண்டு பகவானுக்கு அர்ச்சனை புரிந்தால் அதிக பிரீதிகரமாம். அன்றியும், மேற்சொன்ன ஹிம்சை முதலான எட்டு மலர்களைக்கொண்டு அனவரதமும் அர்ச்சித்துக்கொண் டிருக்கவேணும். நமக்கு ஈஸ்வரன் அரிதாகிய மனிதஜென்மங் கொடுத்ததற்குப் பலன் இதுவே. இப்படியிருக்க இதற்கு அன்னியமாக இந்திரிய வியாபாரஸ்தர்களாகிவீணுகக்காலங் கழிக்கின்ற அவனுக்கு மேலே யமபாசந்தப்பாது. இந்தநிஷ்டையுடையவன் எப்படிநடந்தபோதிலும் பரிசுத்தனுகி யிருப்பன். புத்திரமனைவி மனைக்ஷேத்திராதிகளே மமகாரவர்த்தகமென்று நினைக்கவேண்டாம். இதனை நிவர்த்திசெய்து காஷாயவஸ்திரம் கமண்டல ஆஸனதிகள் மமகாரயோக்கியங்கள் அல்லவா? இதனை நிக்கினவனுக்குச் சரீரம் மமகார காரண மாகாதவிஷம் கிஞ்சித்தானுலும் அதிகமானுலும் பிராணனை போக்கடிப்பதற்கு வலுவாகிறதல்லவா? அப்படி மமகார யோக்கியங்களாகும் பதார்த்தங்கள் ஏகமாகிலும் அனேகமாகிலும் சேதனனுடைய பதிவிரதத் தன்மையைக்கெடுத்து பகவந்நாமத்தைத் தியானியாமலிருக்கக் காரணமாகி பவரோகவர்த்தகமாகி யிருக்கும். ஆகையால் தனந்தனில் வசித்து மனதை நிறுத்துவதற்குச் சமர்த்தனுகாமல் தேகத்தினிடத்திலும் அதற்கு அனுகுணமான பதார்த்தங்களினிடத்திலும் மமகாரஞ் செய்வதற்காகிலும் இல்லறத்தினில் வசித்து பெண்டு பிள்ளை சகலமும் ஈஸ்வர சொரூபமென்றும் தனக்கு எதனிடத்திலும் சம்பந்தமில்லை யென்றும் வசித்து மமகாரத்தை விட்டவனுகி யிருக்குமவனுக்கு தேகவியோக காலத்தில் மறுபடியும் ஜென்மமில்லாத மோக்ஷம் சித்திக்கும் என்பதற்கு அணுவளவும் சந்தேகமே இல்லை. எந்தப்புருஷன் தான்செய்யுங் கர்மங்களை பிர்ம்மார்ப்பணஞ்செய்து சர்வ சங்கற்பங்களையும் ஒழித்து அனுஷ்டித்துக்கொண்டிருக்கின்ருனே, அந்தப்புருஷன் தாமரை யிலையினில் ஜலம் ஒட்டாததுபோல பாபத்தினலே பீடிக்கப்படமாட்டான். ஆகையால் நீ என் இதோபதேசத்தை அங்கிகரித்துப் பட்டணத்தை யடைந்து விவாகஞ் செய்துக்கொண்டு பட்டாபிஷேகனுகி சுகத்துடன் இருமப்பாவென்று பின்னுஞ் சொல்லுகின்ருர்.

கேளும் பரமபாகவதனே! இஃது இப்படியிருக்க இல்லற தருமத்தைச் சொல்லுகின்றேன் கேளும். புத்திமானுனவன் பிரமசாரி யாசிரமத்தை நடத்தின பின்பு, விதிப்படி ஒரு கன்னிகையை மணம்புரிந்து தனக்குத்தக்க காரியங்களினல் திரவியத்தைச் சம்பாதித்து கிரகஸ்த தர்மத்தை நடத்தவேண்டும். பர்வகாலங்களில் பிண்டப் பிரதானத்தினுலும் எள்ளு சம்பந்தமான ஜலத்தினுலும் பிதுர்க்களையும் யாகங்களினல் தேவர்களையும், அன்னத்தினல் அதிதிகளையும், வேதமோதுவதால் ரிஷிகளையும், சந்ததியினல் பிரமனையும், பலிகர்மங்களினல் சகல பூதங்களையும், பிரிய வசனங்களினல் சகல லோகங்களையும் திருப்திப்படுத்தவேண்டும். இப்படிசெய்யும் கிரகஸ்தன் தன்னுடைய சத்கர்மங்களால் சம்பாதிக்கப்பட்ட அனேக புண்ணிய லோகங்களை அடைவன். சன்னியாசிகளும் பிர்மசாரிகளும் கிரகஸ்தனை ஆசிரயித்து ஜீவிக்கிருர்கள். ஆகையால் இல்லறதர்மம் மிகவும் பெருத்ததா யிருக்கின்றது. மேலும் வேதங்களைப் படிக்கவும், தீர்த்த யாத்திரை செய்யும்பொருட்டும் புண்ணிய ஸ்தலங்களைத் தரிசிக்கும் நிமித்தியமும் பிராமணர்கள் சொந்த தேசங்களை விடுத்து சஞ்சரித்துக்கொண் டிருப்பார்கள். சிலர் ஓரிடத்தில் வசிக்காமல் சூரியன் அஸ்தமிக்கு மிடத்தைச் சொந்த வீடாக நினைத்தும் சஞ்சரித்துக்கொண் டிருப்பார்கள். இப்படிப்பட்டவர்கள் யாவர்களுக்கும் கிரகஸ்

தன் போஷகனுகி யிருப்பன். அப்படிப்பட்ட தேசாந்தரவாசிகள் வரும்போது க்ஷேமம் விசாரித்து இனிய வசனங்களைப்பேசி ஆசன போஜனசயனங்களை யீய்ந்து சந்தோஷிக்கச் செய்யவேண்டும்.

அதிதியாகுமவனே இல்லறத்தானிடத்திற்கு வந்து தன் மனோரதம் பலிக்காமல் போய்விடுகின்ருனே அந்த அதிதி அந்த இல்லறத்தானுக்குத் தன் பாவங்களை யீந்து அவன் புண்ணியத்தைக் கொண்டு போகின்ருன். இல்லறதர்மத்தினில் இருப்பவனுக்கு அன்னிய அவமானமும் ஆங்காரமும் டம்பமும் ஒருவனுக்கு ஒரு வஸ்துவைக் கொடுத்துப் பின்பு கிரகிப்பதும் புடைப்பதும் வைவதும் இவைகள் யாவும் மேலானவைகளல்ல. இப்படிப்பட்ட துர்க்குணங்களில்லாமல் நற்குணவானுகி எந்த இல்லறத்தான் சுயதர்மத்தை நன்ருக அனுபவிப்பானே, அவன் சகல அனர்த்தங்களுக்குத் தப்பி உத்தமலோகத்தை யடைவான். இப்படி இல்லறதர்மத்திலிருந்து கிருத்தியங்களை நடத்தி முதுமைப்பருவத்தில் இல்லறதர்மத்தைப் பெண்டுபிள்ளைகளுக்கு ஒப்பித்தாலும் அல்லது மனையாளுடன் கூடியாகிலும் வனத்திற்குப் போகலாம். ஓ பரமபக்தனே! உத்தமமாகும் இல்லற தர்மத்திலிருந்து ஆங்கார மமகாரத்தை நிவர்த்திசெய்து சகல பதார்த்தங்களும் பகவானுடையதென்று சர்வமுஞ் செய்பவனும் செய்விப்பவனும் அந்த ஜெகதீசனேயென்று காணப்படுவதாகும். சகல பதார்த்தங்களும் அவனது ரூபங்களென்றும், அன்னியர்களுக்கு நம்மால் செய்யப்படும் உபகார அபகாரங்கள் நம்மையே யடையுமென்றும், திடமாக நினைத்து முன்னம் என்னல் சொல்லப்பட்டபடியே அனவரதமும் மானசிகத்தில் பகவதாராதனையினல் சீலனுகி வசித்திருப்பையாகில், பகவான் உன்னைவிட்டு நீங்காமல் உன் அருகிலேயே வசித்துக்கொண்டிருப்பார் என்று சொல்ல, அந்தத் துருவன் பகவானைப் பார்த்து, ஓ மகானுபாவரே! எனது புண்ணியபலனுனது தேவரீரே வந்து எளியேனுக்கு ஞானவிளக்குத் தந்தீர். என்னை அஞ்ஞானக்குகையில் சருக்கி விழாமல்காப்பாற்றின தேவதேவா! மகானுபாவா! உம்முடைய கிருபையினுல் என்னுடைய அவிவேகம்நீங்கி ஞானமுண்டாயிற்று. சந்தேகங்களைப் போக்கித் திடவைராக்கிய முடையவனுனேன். இனியுமது நேமனப்படி நடந்துக்கொள்ளுகிறேன் என்று வினயமாகச்சொல்ல, பகவான் துருவன்மீது கருணைமழைபெய்து, ஓ பக்தசிகாமணி! நீ சீக்கிரம் நினது பட்டணத்தை யடைந்து, தாய் தந்தையர்கள் சந்தோஷிக்க நடந்து விவாகஞ் செய்துக்கொண்டு பட்டாபிஷேகனுகி புத்திரர்களைப்பெற்று சுகமாக வாழ்ந்திருந்து முடிவில் உனது கோரிக்கையின்படி நூதனமாகிய பதவியை அடையக்கடவாயென்று வரந்தந்து மாயமாய் மறைந்துபோயினர்.

உடனே துருவன் எல்லையில்லாத பரமானந்தமடைந்து, தவவேடத்தை மாற்றி பகவானைப் போற்றி நாமசங்கீர்த்தனங்களைக் கோஷித்து எனைப்போல பாக்கியவானும் யோக்கியவானும் உண்டோவெனப் பூஷித்து, அன்னிய விஷயங்களைத் துவேஷித்து, அக்கானகத்தை விடுத்து, நகரத்துக்குச் சமீபமான ஓர் சோலையை அடுத்து, அச்சோலையிலுள்ள ஓர் காவலனைத் தன் வரவு தெரிவிக்கும்பொருட்டுத் தூதாகவிடுத்து அனேகநாளாய் சயனஞ் செய்யாது தேகத்துக்கு உண்டான இளைப்பு ஆறுதலடையும்பொருட்டு அங்கு ஓர் உச்சிதஸ்தானத்தில் படுத்துத் தன்னை மறந்து நித்திரை செய்துக்கொண்டிருந்தார். இதற்குள் தூதன் ஓடி அரசன் சபைக்குள் புகுந்து வந்தனந்தந்து, ஓ மண்டலேஸ்வரா! தேவரீருடைய பெரிய புதல்வராகிய துருவமகாராஜன் பட்டணத்துக்கு அடுத்த சோலையில் வந்திறங்கித் தன் வரவை உமக்குத் தெரியப்படுத்தும்படி என்னை யனுப்பினர் என்ருன். அரசன் அதைக் கேட்டமாத்திரத்தில் என்றுமில்லாத ஆனந்த பரவசமடைந்து அத்தூதனுக்குப் பல பரிசுகளளித்து, "இதோ நான் உன்னைப் பின்தொடர்ந்தே வருகிறேன்" என்று சொல்லி யனுப்பிவிட்டு, மந்திரியை நோக்கி, ஓ மதிமந்திரியே! எனது மூத்த புதல்வனுகிய துருவன் நமது பட்டணத்துக்கு அருகிலிருக்கும் சோலையில் வந்திருக்கிறதாக ஓர் தூதன் வந்து சொல்லினுன். ஆதலால் நால்வகைச் சேனைகளையும் மங்கள வாத்தியங்களுடனும் தயார்செய்துவிட்டு நகரவீதிகள்தோறும் தோரணங்கள் நாட்டி, ஏராளமான கோலங்கள் தீட்டி, அலங்கரிக்கும்படி தண்டோரா போடும்படி சிலரையோட்டி வாழை கமுகுகள் நாட்டி, களப கஸ்தூரிகளைத் தூற்றி பூர்ணகலசங்கள் நிறுத்தி, மங்கள தீபங்களேற்றிவைத்து எனக்குச்செய்தி தெரியப்படுத்தக் கடவாயென்று கட்டளையிட, மந்திரியும் அந்தப்படியே சென்று நகரை அலங்கரித்து நால்வகைச் சேனைகளையும் தயார்படுத்தி தண்டோரா போடுவித்து வந்து அரசனைக்கண்டு, வேந்தனே! தங்களுடைய கட்டளையின்படி யாவும் தயார்செய்து வைத்தேனென அரசன் தன் இரண்டு மனைவிகளுடனும் இளையகுமாரனுன உத்தமனுடனும் இன்னுமுள்ள பந்துவர்க்

கங்களுடனும் சகல ஆடையாபரணங்கள் அணிந்து துருவமகாராஜனுக்கும் ஆடையாபரணங்களை எடுத்துக்கொண்டு அரண்மனையை விட்டுப் புறப்பட்டு இரதத்தின்மீது ஆரோகணமாகி மனைவிகளோ இரத்தினச் சிவிகைகளேறிப் பாங்கியர் சூழ அரசனுக்குப் பின்செல்ல பூரி-பேரி-தாரை-சின்னம்-மிருதங்க தாளம்-எக்காளம் முதலான மங்களவாத்தியங்கள் கோஷிக்கக் கட்டியக்காரர் கட்டியம்கூற பெண்கள் பாடிக் கொண்டாட எச்சரிக்கைபேச கவரிவீச வெகுநேர்த்திமிகுந்த கீர்த்திபெற்ற மூர்த்தியுமாகிய உத்தானபாதமகாராஜன் ரதத்தைச் செலுத்திக் கொண்டு பட்டணத்தைக்கடந்து சோலைக்கருகில் செல்லுகிறபோது, கடலொலிபோல முழங்கும் வாத்திய கோஷ்டங்களினால் துருவமகாராஜன் நித்திரை தெளிந்து அன்னையும் தந்தையும் வருகிறார்களென்று ஓடோடியும் வந்து தந்தையை வணங்கினான். அப்படி வணங்கின புதல்வனை இருகரங்களாலு மெடுத்துப் பல ஆசிகள்கூறி கட்டி ஆலிங்கனஞ்செய்து அழகிய தனயனைக் கண்டமாத்திரத்தில் அரசனுக்கு அகமுமுகமுமலர்ந்து தேகம்பூரித்து மயிர்கூச்சிட்டு பிறவிக்குருடன் கண்களைப் பெற்றதைப்போலவும், மலடி மைந்தனைப் பெற்றதைப்போலவும், தரித்திரனுக்கு இராஜரீகங் கிடைத்தாற்போலவும், தேசாந்திரகதனை மைந்தனைக் கண்ட அன்னையைப்போலவும் ஆனந்தமடைந்தான். இதற்குள் அன்னைகள் இருவரும் சிவிகையை விட்டிறங்கி அரசனிடம் வருவதைக்கண்ட துருவன் திடுதிடென்றோடி அவர்களிருவருக்கும் வலம்புரிந்து அடியில் விழுந்து பணிந்தான். அப்படி பணிந்த மைந்தனை வாரியெடுத்து உச்சிமுகந்து முத்தமிட்டு மார்பிறுகத் தழுவிக்கொண்டு பல ஆசிகள் கூறினார்கள். அப்போது துருவன் சிறிய தாயாரை நோக்கி, ஓ அம்மணி! உன்னுடைய தூண்டுகோலால் வனப்பிரதேசத்தை யடைந்து, நாரதமாமுனிவர் ஓதிய பக்தி மார்க்கத்தைக்கொண்டு தவம்புரிந்து, பிரம்மாதிகளும் அடைவதற்கரிதான மகாவிஷ்ணுவின் சேவையைச்செய்து, அவரிடம் நித்தியமாகிய நூதன பதவியை யடையும் வரத்தைப் பெற்றுக்கொண்டு யாதொரு குறைவுமின்றி வந்து சேர்ந்தேனென சுருசியானவள் துருவனை நோக்கி, அடா என் கண்மணியே! அற்பமாகிய நாடு நகரமென்னுஞ் செல்வமானது மூத்தோனாகிய உனக்கே சேருமென்றும், கெட்ட எண்ணங்கொண்டு என் புதல்வனே நாடாளவேணும் நீ காடாளவேணுமென்று நினைந்து, முன்னம் சபையை நாடிவந்த உன்னைப் பிடரிபிடித்துத் தள்ளி துர்ப்பாஷைகள் பேசினேன். அப்படிப் பேசினதற்குக் காரணம் சகல சம்பத்துக்களையும் என் மகனே யனுபவிக்கவேணும். எல்லா சம்பத்துக்களையும் எனக்குட்பட்டிருக்கும்படியும் உன்னைப் பட்டணத்தைவிட்டு ஓட்டிவிடவேணுமென்ற துர் அபிப்பிராயமே கொண்டு உன்னை வெறுத்துக் கொண்டேன் ஏதேதோ வாயில் வந்தபடி விண்டேன். உலகமெல்லாம் நிந்திக்கக் கண்டேன். இக்கொடுமை செய்தபடியினாலே நான் பட்டபாடு போதும். உன்னை அலையச்செய்த கொடும்பாவியாகிய என்னை இக்கணமே உன்வாளுக்கு இரையாகச்செய்யும். என் புதல்வனாகிய உன்தம்பியுடன் வெகுகாலம் வாழ்ந்து உய்யும். அப்பா மகனே என்று விசனப்படும் சிறிய தாயாரை ஆதரித்துத் தந்தையினால் கொடுக்கப்பட்ட ஆடையாபரணங்களை யணிந்துக்கொண்டு, தாய் தந்தையருடன் இரதமேறிக்கொண்டு சகல மேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்க, அச்சோலையைவிட்டுப் புறப்பட்டு நகரத்தையடுத்து இராஜவீதியாக வலஞ்செய்துக்கொண்டு அரண்மனைக்குட் புகுந்து வெகு சந்தோஷமாக இனிது சுகித்திருந்தான்.

இந்தப்படியாக துருவன் அரண்மனையை யடைந்து சில வருடங்கள் சுகித்துக்கொண்டு யானையேற்றம் குதிரையேற்றம் அஸ்திர சஸ்திர வித்தைகள் கற்று தேர்ந்து இருக்கிறபோது, உத்தானபாத மகாராஜன் தன் மரபினுதித்த உத்தம கன்னிகையைப்பேசி சகலருக்கும் சந்தனம்பூசி நீண்டகுழலும் நிறைமதிமுகமும் கமலக்கண்களும் கற்கண்டு மொழிகளும் பவளவாயும் பரிமளவுடலும் அன்ன நடையும் சின்னயிடையும் அதிக செல்வமும் துதிசெய் கல்வியும் உள்ள உஷையை மணக்கோலஞ்செய்து உறவோர் மற்ற பெரியோருடனே சகலரும் மெச்ச, சந்தோஷத்துடனே அரசனும் வரிசை முதலியவைகளை அன்பாய்க்கொண்டு அருகினில் நிற்கப் பலபேர் மொய்க்க, உறவினர் களிக்கப் பன்னீர்குளிக்க விந்தையாகக் கலியாணஞ் செய்து முடித்து சுகித்திருக்கச் செய்தான். பின்பு துருவனும் உஷையும் அன்புடன் இன்பபோகங்களை யனுபவித்துக்கொண் டிருந்தார்கள். எப்படியெனில், உடல் வேறாக உயிரொன்றாக வடிவிரண்டாக மனமொன்றாக ஒருவர் மொழியை யொருவர் தள்ளாமல் பிரியமில்லாப் புன்மொழிகள் விள்ளாமல் இருவருமொன்றாய் ஏகமாய்ப் போகமாய் மருவித் திருமால் மாயையிலிருந்து கடினமில்லாமற் கசிந்து

பேசாமல் விடியுமுன் எழுவார்; வேதமோதிடுவார், ஆதிநாராயணன் அரிநாமங்களை ஒதி எந்நாளும் உளங்களிகூர்வார்; பெரியோர்க்கு ஏவல் பிரியமாய்ச் செய்வார்; உரியோர் வந்தாலும் வகையோடழைப்பார்; சொர்ன்னதானங்கள் சோர்விலாமற் செய்வார்; அன்னதானங்கள் அன்புடன் செய்வார்; அனித்திய வாழ்வில் ஆசையேனென்பார்; ஜெனித்ததில் வாஞ்சையாற் றெளிந்தோ மென்பார்; நித்தியப்பொருளை நேசிப்போமென்பார்; சத்தியமானது தபசே என்பார்; துர்ச்சன சங்கந்தொல்லையாமென்பார்; சத்ஜனசங்கஞ் சதானந்தமென்பார்; சாதுக்கள் வந்தால் சாந்தமாய்ப் பணிவார்; போத மீந்தெமையாள் புனிதரே யென்பார்; இவ்வித நன்மொழிக ளாடிக்கொண்டு இருவரும் மனமொத்து மூவருந்தேவரும் முத்தரும் சித்தரும் யாவரும் மனமகிழ வாழ்கிறகாலத்தில், ஒருநாள் உத்தானபாத மகாராஜனும் மனைவி சுநீதியின்கனவில் பகவான் எழுந்தருளி, "ஓ புண்ணியவானே! புண்ணியவதியே! நீங்கள் இருவரும் ஜென்மசாபல்யமாகுந் தவத்தைச்செய்து நமதுபதவியை அடையக்கடவீர்கள்'' என்று வரந்தந்து மறைந்துபோயினர். உடனே அரசன் விழித்துக்கொண்டு மனைவியை நோக்கி, ஒ பெண்கள் நாயகமே! பகவான் நம்மிருவரையும் கானகமடைந்து அரிதான தவமிழைத்து ஜென்மசாபல்யமாகும் விதத்தைத்தேடி முடிவில் தன் பதமாகிய 'வைகுந்தநாட்டை யடையும்படி கனவில் வந்து வரந்தந்து மறைந்து போயினரென, சுநீதியும் ஓ பிராணநாயகரே! என்னுடைய கனவிலும் அந்தப்படியே பகவான் தோன்றி தவமிழைக்கும்படி சொல்லி மறைந்து போயினரென, அரசன் களிக்கடலில் மூழ்கினவனாகி, ஓ பெண்ணே! பகவான் வாக்கியப்படி நீயும் என்பின் தவத்திற்கு வருகின்றனையா? அல்லது பட்டணத்தில்தானே இருக்கின்றனையா? உன் இஷ்டமெப்படியோ சொல்லுமென, சுநீதி தேவரீரைப் பிரிந்து ஒருக்கணமேனும் உயிர்தரிப்பேனோ? பகவான் கட்டளையையுந் தட்டி நடப்பேனோ? உமது சாயையைப்போல அடியாளும் பின்தொடர்ந்தே வருகிறேனென, அரசன் சபையையடைந்து சிங்காதனத்தின் மீதிருந்து மந்திரியை நோக்கி, ஓ மதிமந்திரியே! "யானும் என்மனைவியும் நாட்டைவிட்டுக் காட்டையடைந்து பகவானை நோக்கித் தவமியற்றி முத்தியடையும்படி யெண்ணங் கொண்டுபோக நிச்சயித்திருப்பதால் இளவரசரான துருவமகாராஜனுக்கு இந்நகரத்தைப் பட்டாபிஷேகம் செய்விப்பதற்காக வேண்டியவைகளைச் சித்தப்படுத்தக் கடவாயென்று" கட்டளையிட்டான். மந்திரியும் அரசனுக்கிணையின்படி பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய வஸ்துக்கள் அனைத்தும் தயார் செய்ததன்றியும் தேசதேச ராஜாக்களுக்குந் திருமுக மெழுதிவிட்டு சுபலக்கினத்தில் பந்தக்கால் நட்டு பெருத்த பந்தலிட்டு வாழை கமுகுகள் நாட்டித் தோரணங்கள் கட்டி பூரண கும்பங்கள் நிறுத்தி மலர்மாலைகளைத் திருத்தி ஏராளமான முத்துகளால் கோலங்களெழுதி களபகஸ்தூரிகள்தெளித்து எங்கேபார்த்தாலும் பரிமளம்வீசவும் பட்டாபிஷேக மண்டபத்தைச்சிராக அலங்கரித்து, பூரி பேரி தாரை சின்ன முரசு முதலாகிய மங்கள வாத்தியங்கள் அண்டகடாக மதிரும்படி முழங்கச் செய்து மந்திரியானவன் அரசனுக்குத் தெரியப் படுத்தினன். உடனே அரசன் பட்டாபிஷேக மண்டபத்தருகில் வந்து நல்ல சுபமுகூர்த்தத்தில் துருவனை யழைப்பித்து, பிராமணோத்தமர்களாலே புண்ணிய தீர்த்தங்களைக்கொண்டு அபிஷேகஞ் செய்வித்து, தம்பதிகளுக்கு ஆடையாபரணங்களைத் திருத்தி, நல்ல கடிகையினில் சிங்காதனத்தின் மீதிருத்தி, வேதியர் வேதகோஷ்டஞ்செய்ய மந்திரவிதிகளை நடத்தி பிராமண ஸ்திரீகள் மங்களங்கள்பாட, நாட்டியக்காரர்களாட, கணிகைமாதர்கள் ஆலாத்தியேந்த, பூசுரர்கள் பல்லாண்டுகூற, தவமுனிகள் பல ஆசிகள்கூற, யோகேஸ்வரர்கள் வாழ்த்த, மகுடஞ்சூட்டி மந்திரவிதிகளால் அக்ஷதைகளைச் சிரசிற்றூவி பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் முதலான அரசர்கள் அகமும் முகமுமலர்ந்து ஆனந்திக்கப் பிராமணர்கள் அதிதி அப்பியாகத்தார் யாவருக்கும் கோதானம் பூதானம் வஸ்திரதானம் சொர்ன்னதானம் கன்னிகா தானங்களென்னுஞ் சோடசதானங்களும் அபாரமாகக்கொடுத்து அரசர் முதலானவர்களுக்கும் பலநாட்கள் விருந்துகள் நடத்தி சகலருக்கும் விடைகொடுத்து அனுப்பிவிட்டு சிலநாளிருந்து ஒருநாள் சபைக்கு வந்து உச்சிதமான ஆசனத்தின்மீதிருந்து மந்திரி-சாமந்திரி-தண்டத்தலைவர்-அணித்தலைவர்-படைத்தலைவர் முதலான யாவரையும் நோக்கி, யான் தவவேடம் புனைந்து நாட்டைவிட்டுக் காட்டையடைந்து தவமியற்றி முத்தி யடையும்பொருட்டு நாளையதினம் புறப்படப் போகின்றேன். ஆகையால் நீங்கள் அனைவரும் நானிருக்கிறதுபோலவே என் புதல்வனைப் பாவித்து நீதிதவறாமல் அரசுசெலுத்தும்படி தக்க விதிகளையோதி தர்மங்குன்றாமல் செய்து வரக்கடவீர்கள். இத்தனையும் உங்களுக்குச் சொல்ல

வேண்டிய தென்னவென்றால் என்புதல்வனுக்கோ அரசுபுரியும் மார்க்கம் பழக்கமில்லை. இத்தனைநாளுந் தவத்தில் செலுத்திவந்து இருப்பவனுதலாலும், வைதிகமார்க்கமே அவன் மெத்த மேன்மையாகப் பாவித்து மனதைச் செலுத்திக்கொண்டிருந்தவனுதலால் இராஜாங்க முறைமை தெரியாது. ஆகையால், நீங்களவனைச் சபையில் தனித்துவிடாமல் சூழ்ந்துக்கொண்டிருந்து சமயத்துக்குத்தக்க யுக்திகளைக்கூறி இராஜாங்கத்துக்கு வழிபடச்செய்து, பேருங்கீர்த்தியுந் துலங்கவும், குலமானது நீடித்துவிளங்கவும், வேற்றரசர்கள் கண்டால் கலங்கவும், பாபகர்மங்கள் கண்ணுக்குக் காணுமல் விலங்கவுஞ் செய்துக்கொண்டு வருவது உங்கள் பாரம். இனி விசேஷித்து நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லையென்று கூறிச் சபையைவிட்டு அந்தப்புரஞ் சேர்ந்தான்.

இவ்வாறு உத்தானபாதமகாராஜன் சொல்லிப் போயினபின்பு முதல்மந்திரியானவன் அரசன்நாட்டைவிட்டுத் தவவேடம் புனைந்து காட்டையடைந்து முக்தியடையப் போகிறேனென்று சொல்லியதற்கு பிரிவாற்றுமல் வெகுவாகக் கலக்கமுற்று ஒருவாறுகத்தேறி சபையைவிட்டு யாவருடனும் சொல்லாமல் தன்னிருப்பிடஞ்சேர்ந்தான். இங்கே துருவமகாராஜனும் சபையைவிட்டு அந்தப்புரஞ்சேர்ந்து தனித்துத் தன்னைவிட்டுத் தந்தை தவஞ்செய்யப் போகின்றேனென்றனரே இதற்கு என்ன செய்கிறதென்று பலவாறு மனக்கவலைபட்டுக் கொண்டிருக்கிறபோது, அன்னையாகிய சுநீதி தனையனிடம் வந்து அப்பா மகனே! அழகான முகனே! நான் நாளையதினம் நின் தந்தையுடன்சென்று காட்டையடைந்து தவமியற்றப்போகின்றேன். ஆகையால் நீ உன் சிறியதாயாருடனும் தம்பி உத்தமனுடனும் சுகமாக அரசாண்டுக்கொண்டு சிரஞ்சீவியாயிருக்கக்கடவாயென்று ஆசிர்வதிக்கக் கேட்டு, துருவன் வெகுவாகப் பிரலாபித்தான். அப்படி பிரலாபிக்கும் புதல்வனுக்குப் பல நீதிகளைச் சொல்லியதன்றியும் அடா கண்மணியே! பகவான் கனவில்வந்து தவமியற்றும்படி சொல்லியபடியால் யான் போகத் துணிந்தேன். அன்றியும், இதென்ன செல்வம்? என்ன வாழ்வு? என்றைக்கிருந்தாலும் மரணம் ஒருநாளைக்கு இருந்துக்கொண்டே யிருக்கின்றது. அன்றியும் இக்காயம் நிலையல்ல. நீர்மேற்குமிழி. எதிரிகையிற் பிடித்துக்கொடுக்கும் அகழி. மலம் நிறைந்த பாண்டம். இதை யுற்றுநினைக்கில் வரும் வெகுகெண்டம். இதனுலேயாதொருபலனுமில்லை. வினைசுமக்குந் தெண்டம். ஒன்றுக்கு முதவியில்லாப்பண்டம். இதைநம்பி ஆவிசரயித்துத் திரிந்தால் கானலைக் கண்ட ஜலமென்று இச்சித்து ஒடிய மானுக்கு நிகராம். ஆதலால் சகலமுந்தெரிந்த வுனக்கு விசேஷித்து நான் சொல்லவும் வேண்டுமோ? வேண்டியதில்லை. ஆதலால் சந்தோஷமாக விடைதாரும் என்றுள். அதைக்கேட்ட துருவன் பகவானை நோக்கித் தவஞ்செய்யப் போகிறவர்களை தடைப்படுத்தினுல் இரௌரவாதி நரக சம்பிராப்தி யுண்டாகுமென்று பல சுருதிகளிலும் கூறியிருப்பதால் மெத்தப்பாதகம்வந்து நம்மைச் சூழ்ந்துக்கொள்ளுமென்றுகருதி பூரணச் சந்தோஷத்துடன் ஓ அம்மணி! உனது இஷ்டப்படியேசென்று தவமியற்றிப்பேரின்பத்தையடையுமென்றுசொல்லி விடைதந்தனன். அதனைப் பெற்றுக்கொண்டு சுநீதி தன் படுக்கையறைக்குட் சென்றுள். உடனே உத்தானபாத மகாராஜனும் தாதிகளால் புதல்வனை யழைப்பித்துப் பல நீதிகளையோதி விடை பெற்றுக்கொண்டு படுக்கைக்குச் சென்றுன். இந்தப்படி தாய் தந்தையர்கள் இருவரும் விடைபெற்றுக் கொண்டபின் துருவமகாராஜனும் பஞ்சணைமேற் சயனித்து நித்திரை செய்தான்.

இப்பால் மூன்றுஞ்சாமத்திற்கே உத்தானபாத மகாராஜாவும் சுநீதியும் நித்திரைநீங்கி எழுந்து ஸ்நானஞ்செய்து அனுஷ்டானங்களை முடித்து மரவுரிதரித்து சிக்கையைச்சேர்த்து சடைமுடிபோல் கட்டி வனமாலை வனசமாலைகள் கண்டத்திற்றரித்து தண்டு கமண்டலங்களைப் பிடித்துப் பாதக்குறடணிந்து பெருத்த தவசியைப்போல வேடம்புனைந்து காவலர்களை எச்சரித்து அரண்மனையை விட்டு வெளிப்பட்டு விடியற்கால மாகாமுன்னம் பட்டணத்திலுள்ளவர்கள் கண்களிற்படாமல் நடந்து வெகுதூரஞ்சென்றனர். அரசனும்அரசியும்என்றும் நடந்தறியாதவர்களானதால் கால்கள் நோயாலும் பசி தாக மிகுதியாலும் ஆயாசமேலிட்டு வைராக்கியத்திற்குட்பட்டு மானபிமானங்களைவிட்டுதொன்றுதொட்டு அங்கங்குள்ள பட்டணம் கிராமங்கள்தோறுஞ் சென்று பிச்சைவாங்கிப் புசித்துக்கொண்டே கானகத்தையடைந்து; அங்குள்ள காய் கனிகளைப் புசித்துத் தண்ணீரருந்தி அம்சதூளிகா மஞ்சத்திற் படுத்து நித்திரைசெய்யும் சொகுசான தேகத்தைப் பெற்ற இவ்விருவரும் கற்களின்மீதும் புற்களின் மீதும் மரத்தினடிகளிலும்படுத்து ஆயாசங்களையும் கால்கள் நோய்களையும்பாராமல் இருண்டும் கடுமையாகியும் துஷ்டமிருகங்கள் வசிப்பதாகியுமுள்ள ஓர்

வனத்திற்குட்சென்று வானப்பிரஸ்த ஆசிரமத்தை யடைந்து அங்கு ஓர் பர்னசாலையியற்றி அதிலிருந்துக்கொண்டு அகோரமான தவமியற்றி நெடுங்காலங் கழித்து முடிவில் கருடவாகனருடனாகிய பகவான் எழுந்தருளி தம்பதிகளிருவரையும் புகழ்ந்து தன்னுடைய வைகுந்தமாநகரத்தை யடையும்படி வரமளித்து மாயமாய் மறைந்துபோயினர். அந்தப்படியே தம்பதிகளிருவரும் சிலகாலம் அவ்வனத்தில் வசித்திருந்து அந்தியத்தில் பகவான் அளித்த வரத்தின்படி வைகுந்தமா நகரத்தை யடைந்தார்கள்.

பின்பு துருவன் சிலவருடகாலம் அரசாக்ஷி செய்துக்கொண்டிருந்து இரண்டு பிள்ளைகளைப்பெற்றும் தன் தம்பியாகிய உத்தமனுக்கு விவாகஞ்செய்து முடித்தும் வெகு சந்தோஷமாகவும் நீதியாகவும் அரசு புரிந்துக்கொண்டிருக்கிறபோது தம்பியாகிய உத்தமன் தேசசஞ்சாரஞ் செய்யவேணுமென்கிற அபிப்பிராயங்கொண்டு ரதகஜதுரகபதாதிகளென்னும் நால்வகைச் சேனைகள்சூழ வெகு தேசங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு வடதேசத்தைநாடிப் போகிறபோது அப்பட்டணத்தை யாளும் அரசன் தன்னுடைய சேனைகள் புடைசூழ எதிர்கொண்டு வந்து, நீர் எந்த தேசத்தரசன் புதல்வர்? என்று வினவ, உத்தமன் கமலாபுரத்தை அரசாக்ஷிசெய்திருந்த மனுவுக்குப் பேரன். உத்தானபாத மகாராஜன் புதல்வன். எனது அன்னையின்பேர் சுருசி. யான் தேசசஞ்சாரஞ் செய்யும்படி புறப்பட்டு வெகு தேசங்களையெல்லாம் பார்த்துக்கொண்டே வடதேசங்களையும் பார்த்துக்கொண்டு போகலாமென்று இங்குவந்தேன் என்றான். அதைக்கேட்ட அவ்வரசன் வெகுண்டு கோபங்கொண்டு, பற்பல தூஷணவார்த்தைகள் விண்டு, பற்களை நெறநெற வென்று கடித்து, மீசைகள் படபடவென்று துடிக்க, அடா பயலே! படுபாவியான சுருசியின் புதல்வனு? நீ உனது! அண்ணனை துருவனைக் காட்டிலோட்டி சகல சம்பத்துக்களையும் தானும் தன் பிள்ளையாகிய நீயும் அநுபவிக்கும்படி வஞ்சக எண்ணங்கொண்ட அந்தக் குடிகேடியின் பிள்ளையா? நீ உன் பாட்டனை மனு அநுஷ்டித்துவந்த மனுநீதியென்னும் தர்மநீதியை நீங்களே கடந்து நடந்தால் மற்றுள்ளவர்கள் யார்தான் தவறாமல் நடப்பார்கள். வெகு கஷ்டப்பட்டு செய்த நூலை அசட்டையால் விலக்கி துரோக வெண்ணங்கொண்ட நின்தாயை நான் காண்பேனேயாகில் மனுசாஸ்திரவிதியின்படி அவளை அப்போதே இரண்டு துண்டாகும்படி என் வாளுக்கு இரைகொடுப்பேன் என்றான். அவ்வாறு ஆர்ப்பரிக்கும் வடதேசத்தரசனைநோக்கி உத்தமன் சொல்லுகின்றான்.

கேளும் வடதேசத்தரசனே! புருடர்களாகிலும் பெண்களாகிலும் நற்கர்மமோ அல்லது துற்கர்மமோ யாரார் எந்த கர்மங்களைச் செய்கின்றார்களோ அவரவர்கள் அந்தந்த கர்மத்துக்குத் தக்க பலனை யனுபவிக்கிறார்கள். அதைப்பற்றி நீர் சொல்லியபடியால் அப்பலனில் பாதிபலன் உம்மை யணுகியதே! இந்த தோஷத்துக்கு என்செய்வாய்? என் தாய் எண்ணின துரோகத்திற்கு அவளை வெட்டியெறிவேனென்று கடுகடுத்துப் பேசிய பாவத்தால் உம்மைக் கர்மம் வந்து சூழ்ந்துக்கொண்டதே. இதற்குப்பிராயச்சித்தம் நீர் என்ன செய்துக்கொள்ளப்போகிறீர்? என்று மாறுத்தரங்கூறினன். அவ்வாறு கூறிய உத்தமன்மீது அடங்காக்கோபமீறி சர்ப்பத்தைப்போலச்சீறி பலவிதமாகத்தூறி இனி உன்னை உயிருடன் விடுவதில்லையெனக்கூறித் தன் சேனைகளுக்கு சைகைசெய்து அணிகள் வகுத்து யுத்தசன்னத்தனாகி நின்று இரணபேரிகை வெண்கலபேரிகை முழங்கச்செய்து கியாவென்று சிங்கநாதஞ்செய்தான். இதனைக்கண்ட உத்தமன் திடுக்கிட்டு இதென்ன கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டாற்போலவும், பிள்ளை வரத்துக்குப்போய் புருஷனைப் பறிகொடுத்தாற் போலவு மிருக்கின்றது. தந்தை சொன்மிக்க மந்திரமில்லை யென்றறிந்தும், தந்தைக்கு நிகரான தமையன் வார்த்தையைத் தள்ளிப் பலதேசங்களில் திரிந்துவந்தும், இந்த அரசனுடைய வசனங்களைக் கேட்டு மறுத்து உரைத்த பாவமே யுத்தத்திற்கு உடன்படச் செய்யும்போலிருக்கின்றதே. இதற்கு என்னசெய்கிறதென்று சற்றாலோசித்து, அரசனைவணங்கி இணங்கி, ஓ ஐயா! யாதொரு குற்றஞ்செய்யாத இவ்வேழையின் மீது முனிவுகொள்வது தர்மமோ? இது யான் முன் செய்த கர்மமோ? இதென்ன வர்மமோ? மனதிற் குடிகொண்ட மர்மமோ? இதற்குத்தானா எத்தனையோ அன்பாயழைத்து குல கோத்திரங்களை விசாரித்து உபசரித்தது. நான்வருவேன் என்னோடு யுத்தஞ்செய்ய வேண்டுமென்று முன்னமே யெண்ணங் கொண்டிருந்தீரோ? என்று பலவாறு வேண்டிக் கொண்டும், அவ்வரசன் ஏதேது யுத்தஞ்செய்து நீயாவது நானாவது ஜெயமடையாமல் உன்னைப் போகவிடமாட்டேன் என்று வைராக்கியமாகப் பேசும் அரசனைநோக்கி, ஓ மகாராஜனே! வடதேசங்களைச் சுற்றிப்பார்த்து என்மனோவெண்ணங்

களைப் பூர்த்தி செய்துகொண்டு திரும்பிவந்து யான் உம்முடன் போர்புரிய சித்தமாகிறேனென்ற உத்தமனை நோக்கி, அடா பயலே! நீயோ எனக்குச் சமாதானஞ் சொல்லுகிறவன். உன் சொற்படியே யான் நடக்கவேணுமல்லவா? ஆஹா! ஹா!! மெத்த நன்று யிருக்கிறதென்றும், நீ க்ஷத்திரியனுக்குப் பிறந்தவனாயிருந்தால் சண்டைக்குப் பின்வாங்குவாயா? பலவாறு என்னை வேண்டி ஏங்குவாயா? இப்படிப்பட்ட நீ இன்னுஞ் சிலகாலம் சென்றபின் பட்டங் கட்டிக்கொண்டு பூமியைத் தாங்குவாயா? உனது பேருக்குத் தக்க உத்தம குணங்கள் உன்னிட மிருக்குமாகில் உன் தமையனைவிட்டுக் கணப் பொழுதும் நீங்குவாயா? அடா ஏழைக்குப் பிறந்தவனே! சண்டைக்குப் பயந்தவனே! என்று பல தூஷணை வார்த்தைகள் நவிலக்கேட்ட உத்தமன் வெகுண்டு தீராரோஷங்கொண்டு கோபமிகுந்து யுத்தத்திற்கு மனமுகந்து தனது சேனைகளை யூகங் காட்டி அணிவகுத்து படைத்தலைவர் அணித்தலைவர்களை எச்சரித்து யுத்தசன்னத்தனுகி ரதாரோகணஞ்செய்து தன் வில்லை மண்டலாகாரமாக வளைத்து குமுகுமுவென்று குணத்தொனிசெய்து வில்லில் இந்திராஸ்திரம் சந்திராஸ்திரம் வாயுவாஸ்திரம் அக்கினியாஸ்திரம் சாணைபிடித்து வைத்ததைப் போல மளமள வென்று பிரகாசிக்கும் நாராச பாணங்கள் முதலான அனேக அஸ்திரங்களை வில்லில் சந்தித்துச் சோனைமாறி பொழிவதுபோல ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் சங்கம் மகாசங்கம் அற்புதமென்று சொல்லப்பட்ட கணக்குமிதமில்லாத சரங்களை வாரிவாரிவிடுத்தான். அந்தப் பாணங்களானது வில்லில்நின்றும் விடுபட்டு சடசட படபடவென்ற தொனியுடனும் நெருப்புப் பொறிகளை வாரி இறைத்துக்கொண்டே போய் ஆகாசத்திற்குச் சரக்கூடுகட்டியதுபோல, விண்ணையளாவி எங்கேபார்த்தாலும் பாணங்கள் மயமாகிச் சென்று எதிரியின்படைகளின்மீது விழுந்து யானைகளின் மத்தகங்களைப் பிளந்தும் துதிக்கைகளைத் துண்டித்தும் இந்தப்படியே குதிரைக்கூட்டங்களும் ரதங்களும் பதாதிகளும் மடியச்செய்கிறபோது, வடதேசத்து அரசன் பார்த்து இரண்டு கண்களும் கோவைப்பழம்போலச் சிவந்து பற்களை நெறநெற வென்று கடித்து மீசைகள் துடிக்க உக்கிராகாரனுகி எறிந்துவிழுந்து தன் வில்லையெடுத்து நிறுத்திப்பிடித்து நாணேறிட்டு குணத்தொனிசெய்து பாசுபதாஸ்திரம் ஒன்றை எடுத்து விதிபூர்வமாக அபிமந்திரித்து தூபதீப நைவேத்தியங்களை மானஸீகமாகத் தந்து வந்தனத்துடன் வில்லிற் சந்தித்து காதளவும் வாங்கிவிடுத்தான். அப்பாசுபதாஸ்திரமானது வில்லில் நின்றும் விடுபட்டு வெகு மகிமையுடன் புறப்பட்டு வந்து உத்தமனுடைய சேனைகளின்மீது விழுந்து ரதகஜதுரகபதாதிகள் யாவற்றையும் கால்வேறு கைவேறு சிரங்கள்வேறு உறங்கள்வேறு வேருகச் சிதைத்து, ரதங்களைப் பொடிப்பொடியாக்கி ஒரு பிராணியையும் விடாது மடித்து முடிவில் உத்தமன்விட்ட பாணங்களையெல்லாம் நடுவது பாதியில் துண்டித்து ரணக்களத்தைத் துடைத்து உத்தமனைநோக்கி அதிக உக்கிரமாக வரக்கண்ட உத்தமன் ஒகோ! மோசம்வந்தது என்று கைகளைப் பிசைந்துக்கொண்டு விரைவில் அதிக தீட்சண்ணியமான அனேக பாணங்களையெடுத்து வில்லில்சந்தித்துப் பாசுபதாஸ்திரத்தின்மீது விடுத்தான். அவ்வஸ்திரங்களுங் காளகூட விஷத்தைப்போல ஜொலித்துக்கொண்டேசென்று பாசுபதாஸ்திரத்தால் துண்டிக்கப்பட்டு பூமியில் விழுந்துபோயின. அதைக் கண்டு உத்தமன் வேறு சில பாணங்களை எடுத்து வில்லில் சந்தித்துப் பிரயோகஞ்செய்வதற்குள் பாசுபதாஸ்திரமானது வந்து உத்தமன் மார்பிற்பட்டு முதுகிலுருகிப்போய்விட்டது. அதனுல் உத்தமன் நிற்பதற்குஞ் சக்தியற்றுத் தேரின்மீது சாய்ந்து சற்றுநேரத்தில் ரதத்தட்டின்மேல் விழுந்து பகவானைத்தொழுது, ஓ என் ஆண்டவனே! உடல் பொருள் ஆவியென்னும் மூன்றையும் முன்னமே உமக்குத் தத்தஞ் செய்திருக்கிறபடியால் இவ் வேழையேன் சிரத்தைத் தறித்துவிட்டாலும் பஸ்பமாய்ப்போக எறித்துவிட்டாலும் தேவரீரை நம்பின அடியேனுக்கு ஓர் குறையுண்டாகுமோ? அப்படி குறைநேரிட்டாலும் உமக்கன்றி எனக்கென்ன சுதந்தரமுண்டோ? ஓ சாந்தஞ்சேர்ந்த சதுர்வேத வேதாந்த உபசாந்தி போதனே! நாதனே! நீதனே! விநோதனே! அதீதனே! நித்தனே! நிமலனே! நிர்க்குணு! சரணம். சத்யனே! சாந்தசத்குணு! சரணம். சுத்தனே! சுகிர்தனே! சோதியே! சரணம். அத்தனே! அமுதனே! ஆதியே! சரணம். கர்த்தனே! கடவுளே! காரணு! சரணம். புத்தனே! புனிதனே! பூரணு! சரணம். நித்தியப்பொருளான நீதியே! சரணம். அச்சுதாத்வித வனுபூதியே! சரணம். சுந்தரானந்த சுயதுரியனே! சரணம். அந்தமும் ஆதியுமில்லாத வரியனே! சரணம். மோக்ஷமீந்து எனையாளும் உத்தனே! சரணம். சாக்ஷியாயிலகு நிர்ச்சாந்தனே! சரணம். கருவி கரணுதிகளை வென்றவா! சரணம். அருவாகி யருளாகி நின்றவா! சரணம். மமதகர்

தையுமிலா மாதவா! சரணம். சமதாதிகளிந்த ஆதவா! சரணம். காக்ஷியருளிய ஞானக் கண் மணியே! சரணம். மாக்ஷியருளுந் தூய மனோன் மணியே! சரணம். தேவர்களேத்தித் துதிசெய் சீலனே! சரணம். மூவரோருருவான மூலனே! சரணம். என்றுபற்பலவிதங்களாய்த் தோத்திரஞ்செய்துக்கொண்டே பிராணனைவிட்டான். அதையறிந்து வடதேசத்தரசன் களிக்கடலில் மூழ்கினவனாகிச் சேனைசைனியங்களைக் கூட்டிக்கொண்டு தன் அரண்மனையிற் புகுந்து சுகமாக வீற்றிருந்தான்.

இந்தப்படி வடதேசத்து அரசனால் மாண்டழிந்த செய்தியை வேவுகாரர்களால் கமலாநகரத்தை யாளும் துருவமகாராஜனுக்குத் தெரியப்படுத்தும்படி யேவினான். அவர்களும் அரசன் கட்டளைப்படி மேவி கமலாபுரத்தையடைந்து துருவமகாராஜனைக் கண்டு வணங்கி, ஓ வேந்தர்களுக்கு வேந்தனே! உனது தம்பியாகியும், இளவரசுக்கு உரியவராகிய உத்தமராஜன் தேசயாத்திரை செய்துக்கொண்டு வந்து வடதேசத்தை யடைந்து, எங்கள் ராஜனோடு போராடி முடிவில் சேனைகளுடனும் இரணக்களத்தில் மடிந்துபோயினர். என்று சொல்லக் கேட்ட துருவன் இடியோசையைக் கேட்ட நாகத்தைப் போலவும், கருடன் வட்டமிடக்கண்ட சர்ப்பத்தைப்போலவும், ஏங்கிக் கலக்கமுற்று மெய்சோர்ந்து பூமியின்மீது விழுந்துவிட்டான். அதை அருகிலிருந்துபார்த்த மந்திரிமுதலானோரும் திடீரென்று ஓடி விழ்ந்த அரசனை எடுத்து சைத்தியோபசாரங்களைச்செய்து மூர்ச்சைதெளியச்செய்து பல நீதிகளையோதித் தேற்றி இரதகஜதுரகபதாதிகளை சித்தப்படுத்தி யுத்தசன்னத்தர்களாய் ரதாரோகணஞ்செய்து பலவாத்தியங்கள் பேரிடி யிடித்தாற்போல முழங்கப் புறப்பட்டு வடதேசத்தை நோக்கிச் சேனைகளை நடாத்திக்கொண்டு சிலநாளில் அப்பட்டணத்தின் அருகிலிருக்குஞ் சோலையிலிறங்கி இரண்டுநாள்வழியின் ஆயாசத்தைப்போக்கும்பொருட்டுச் சேனைகளை இளைப்பாறும்படி யிருக்கச்செய்து மூன்றுநாள் காலையில் சேனைகளைத் திட்டப்படுத்தி இரணபேரிகை வெங்கலபேரிகை அறைவித்து யுத்தசன்னத்தர்களாகி துருவச்சக்கிரவர்த்தியுடன் மந்திரி முதலானோரும் ரதமேறி சாரதியை எச்சரித்து ரணக்களத்தை யடுத்துப் படைகளை யூகங்கள்கட்டி அவைகளுக்குப் படைத்தலைவர் அணித்தலைவர்களை முகப்பில்நிறுத்தி, காத்தல் செய்யும்படி நியமித்து யுத்தஞ் செய்வதற்குச் சர்வசித்தமாய் நின்றிருக்கிற போது வடதேசத்தரசன் ரணபேரிகையின் ஓசையைக்கேட்டு, யாரோ யுத்தத்திற்கு வந்திருக்கிறுப்போல் இருக்கிறதென்று கருதி, தன் சேனைகளைக் கூட்டிக்கொண்டும், தானும் ரதாரூடனாகிப் பட்டணத்தைவிட்டு வெளிப்பட்டு ரணக்களத்தை யடைந்து சேனைகளை அணிவகுத்துத் தன் வில்லை மண்டலாகாரமாக வளைத்து, நாணோசையைக் காட்டிக் கியாவென்று சிங்கநாதஞ்செய்தான். அதையறிந்து துருவச்சக்கிரவர்த்தியின் மந்திரியானவன் தன் ரதத்தை முன்னதாகத்தாண்டி வில்லையெடுத்து வளைத்து குணத்தொனிசெய்து அந்த வில்லினிடமாக அனேக நாராசபாணங்களைச் சந்தித்து விடுத்தான். அந்தப்பாணங்களானது வில்லில்நின்றும் விடுபட்டு ஜடஜட பகபகவென்ற தொனியுடனும், புகையானது எங்கும் கவிழ்ந்துக்கொண்டு சென்று எதிரியின் சேனைகளின்மீதுவிழுந்து கால்வேறு கைவேறு இடைவேறு துடைவேறாகும்படிக்குச் சின்னபின்னஞ்செய்கையில் எதிரியானவரசன்கண்டு ஆக்கிரயவியாக்கிர மிக்குரோதனாகித் தன் வில்லில் அனேக இடியாஸ்திரங்களைத் தொடுத்து மந்திரிவிட்ட நாராசபாணங்களின்மீது பிரயோகஞ்செய்தான். அவ்வஸ்திரங்களும் புறப்பட்டுவந்து மந்திரி விட்ட நாராசபாணங்களின்மீது விழுந்து போராடி முடிவில் நாராசபாணங்களால் அடிபட்டு அத்தனையும் பொடியாகிப் பூமியில் வீழ்ந்துவிட்டன. இதைக் கண்ட வேற்றரசன் சீற்றமிகுந்து தன் வில்லில் அனேக தீக்ஷண்ணியமானபாணங்களைத் தொடுத்து விட்டான். அந்தப் பாணங்களும் அதிக மகிமைகளுடன் புறப்பட்டுவந்து மந்திரிவிடுத்த பாணங்களின்மீது விழுந்து படுசூரணமாக்கிவிட்டு விரைவாகச்சென்று மந்திரி ஏறியிருந்த ரதத்தைச் சக்கைச் சக்கையாகப் பேர்த்தெறிந்தும் குதிரைகளையும் சாரதியையுங் கொன்றுவிட்டுப் போய்விட்டன. அதைக்கண்டு மந்திரி வியப்படைந்து வேறு தேர் ஏறி இவ்வரசனிடத்தில் வெகு ஜாக்கிரதையாய்ப் போராடவேண்டுமென்று கருதித் தன் வில்லில் அனேகம் இந்திராஸ்திரம் சந்திராஸ்திரம் வாயுவாஸ்திரம் வருணாஸ்திரம்அக்கினியாஸ்திரம் என்று சொல்லப்பட்ட பாணங்களைக் கணக்குமிதமில்லாமல் சாரிசாரியாய்ப் பந்திபந்தியாய்த் தொடுத்து விடுத்தான். இதற்குள் வேற்றரசன் பட்டணத்திலிருந்து நால்வகைச் சேனைகளை அழைப்பித்துக் கொண்டு அணிவகுத்துத் தன்வில்லை குண்டலாகாரமாகவளைத்து அதில் அனேகமாயிரம் பாணங்களைத் தொடுத்து விடுத்தான். அவைகளும் வில்லில்நின்று விடுபட்டுவந்து மந்திரிவிடுத்த பாணங்கள்மீது விழு

ந்து ஒன்றுக்கொன்று விடாது போர்புரிந்து முடிவில் மந்திரி பிரயோகித்த பாணங்களால் அடிபட்டு அரசன் பாணங்கள் வலிவு குறைந்து பூமியில் வீழ்ந்துவிட்டன. மந்திரியின் பாணங்கள் அங்கிருந்து புறப்பட்டுவந்து அரசன் சேனைகளின்மீது விழுந்து சின்னபின்னப் படுத்துகிறபோது தன் சேனைகள் மடிந்துபோகிறதைக் கண்ட அரசன் பற்களை நெற நெறவென்று கடித்து மீசைகள் படபடவென்று துடிக்கக் கண்களில் நின்றும் புகை புறப்பட அடங்காப் பெருஞ்சினமடைந்து ஒரு அர்த்தசந்திரபாணத்தால் குதிரைகளையும் இடியாஸ்திரத்தால் ரதத்தையும் நாராசபாணத்தால் மந்திரியை மூர்ச்சையாய் விழத்தள்ளி மேலும்மேலும் பாணங்களைத் தொடுத்துக்கொண்டே யிருந்தான். இதைக்கண்ட துருவச்சக்கரவர்த்தி தன் ரதத்தைத்தூண்டி முன்னுக்குக் கொண்டுவந்து நிறுத்தித் தன்வில்லை குண்டலாகாரமாக வளைத்து அனேகமாயிரம் பாணங்களைத்தொடுத்து விடுத்தான். அரசனும் விடாமல் சரமாரியாக பாணங்களைத் தொடுத்தான். அவ்வண்ணம் துருவச்சக்கரவர்த்தியும் வடதேசத்தரசனும் ஒருவருக்கொருவர் ரோஷத்வேஷத்துடன் தொண்ணூறுநாள் பரியந்தம் போர்புரிந்தும், ஒருவருக்கேனும் ஜெயமின்றிச் சமமாய் யுத்தஞ்செய்வதாலும், ஆகாயவீதியெங்கும் பாணமயமா யிருந்ததாலும், தேவர்கள் முதலான ரிஷிகளும் யோகேஸ்வரர்களும் பயமிகுந்து பகவானைத் துதிப்பதற்கும் மனம் சபலமாகி, இதென்ன ஊழிகாலம்வந்துவிட்டதோ? எல்லாரும் ஏககாலத்தில் மடியும்படியான காலந்தான் நேரிட்டதோ? என்று ஒருவராகிலும் வெளியில் தலைகாட்டுவதற்கில்லாமல் தேவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடத்தை விட்டு வெளிப்படாமல் மறைவாக உள்ளேயிருந்துக்கொண்டு இதற்கென்ன செய்கிறதென்று யோசனையிலிருந்தார்கள். ரிஷிகளோ தங்கள் தங்கள் தவங்குலைந்து பிரம்மை கொண்டு ஒன்றுந் தோன்றுமலிருந்தார்கள். யோகிகளோ தங்கள் தங்கள் ஆசிரமத்தைவிட்டு வெளிப்படாம லிருந்தார்கள்.

இந்தப்படி லோகாலோகங்களெல்லாம் கலங்குகிறபோது ஜெகத்சனும் சர்வ ரக்ஷகனும் சாந்தமே ஒருருவான பகவான் கருடவாகனருடனக யுத்த ரங்கத்தில் நடுவில் தோன்றி இருதிறத்தாரையும் நோக்கிச் சண்டையை நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!! என்று கையமர்த்தி சொல்லத்தொடங்கினர். கேளும் அப்பா துருவச்சக்கரவர்த்தியே! வடதேசத்து அரசனே! நீங்கள் இருவரும் கற்பகோடிகால பரியந்தம் போர்புரிந்தபோதிலும் உன்னை அந்த ராஜனும் இராஜன் உன்னையும் வெல்லப்போகிறதில்லை. இருதிறத்தாரும் புரியும் போரினல் அண்ட ரண்ட சராசரங்களும் கலங்கி ஒடியொளிப்பதற்கு வேறெங்கும் இடமில்லாமல் மனிதர் பறவைக்கூட்டங்கள் மிருகக்கூட்டங்கள் தேவர்கள் முனிவர்கள் யோகிகள் முதலான பிபீலிகாதி பிரம்மாபரியந்தம் நாட்டமின்றி வாட்டத்துடன் மிருகோட்டஞ் செய்து அலமலர்வார்களே. உங்களுக்கு ஜீவ காருண்ணிய மென்பது கிஞ்சித்தும் இல்லையா? எனக்குத்தானே வந்ததொல்லையா? சகலமுங் கற்றுணர்ந்த உங்களுக்கு யான் விரித்துச்சொல்லவா? இதைப் புத்திமான்கள் உணரத்தக்கதல்லவா? ஒருவரிருவர் இவ்வுலகத்திற்குக் கெடுதிசெய்தால் இவ்வுலகத்தில் அடங்கிய பிர்ம்மா பரியந்தமுள்ளவர்கள் உங்கள்மீது சினமிகுத்தே யிருப்பார்களென்பதற்குச் சந்தேகமேயில்லை. இதைக் கவனித்துப் பார்க்கையில் தொல்லையே. இறந்துபோன ஒருமனிதனுக்காக உலகத்திலுள்ள யாவரும் நலியும்படிச்செய்வது தர்மமோ? இதனல் அதிக பாபங்கள் உங்களை வந்தணுகு மென்று நம்புகின்றேன். ஏனெனில், சகல சாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்து தேர்ந்த நீங்கள் இதைக் கவனிக்காமல் போர்புரிவதால் துஷ்கர்மங்களுக்கு உட்பட்டவர்களானீர்கள். அன்னியனுடைய பிராணனை வாங்கினதற்கு இணையாய் அவன் மனம் நோகச்செய்வது அப்படிக்கு ஒருவரிருவரல்ல. உலகத்திலுள்ள சகல பிராணிகளையும் மனம் நோகச்செய்தால் அதிலொரு பிராணியாகிலும் உத்தமபுருடன் இருப்பானல்லவா? அவன் மனம்நொந்தால் எப்படிபெரியோர்கள்மனம் கொதிப்பேரினல் பெருங்காட்டை யெரிக்குந் தீயைப்போல உங்கள் வம்சத்துடன் நசித்துப்போகும்படிநேரிடும். ஆகையால் இத்துடன் யுத்தத்தை நிறுத்திச் சமாதானமாய்க் கலந்துகொள்ளுங்கள். அப்படிக்குச் செய்யாமல் மேலும் போர்புரியக் கருதுவீர்களாகில் மேல்வருங் கஷ்டத்தை இருதிறத்தாரும் அனுபவிக்கும்படி நேரிடும். அன்றி இரௌரவாதி நரகத்தையடைந்து, சொல்லுவதற்கும் அரிதாகிய இடுக்கண்பட்டு அழிந்து போவீர்களென்று கோபக்குறியுடன் சொல்லிய பகவான் மொழிகளைக்கேட்டுத் துருவச்சக்கரவர்த்தி தன் கரத்திலிருந்த பாணங்களை அம்புறாத்தூணியிற்சேர்த்து வில்லின் நாணைத் தளர்த்தி இரதத்தின்மீதுவைத்து அந்த ரதத்தை விட்டுக் கீழே குதித்து ஒடோடியும்வந்து பகவானு

க்கு முக்காலும் வலம்வந்துபணிந்து எழுந்துநின்று சென்னியின்மீது கரங்களைக் குவித்துக்கொண்டு, ஓ பரந்தாமா! பக்தகாமா! பன்னிருநாமா! பாரெங்கும் புகல்சியாமா! பரமதயாளா! பங்கயத்தாளா! பாவை உருக்குமி மணாளா! பக்தர்கள் மனத்துலாவுஞ் சீலா! சத்துவகுணத்தை எப்போதும் நீங்காதிருக்கும் சாந்தமூர்த்தியாகிய தேவரீருக்குத்தாமத குண மேலிட்டால் எம்போலிய ஏழைகள் அக்கோபத்தைத் தாளமாட்டோம். ஓ ஜெகதீசா! தங்களுக்கு இப்போது உண்டாகிய கோபத்தைமாற்றி சாந்தத்தையடைந்து புதல்வராகிய எங்கள்மீது கிருபைக்கண்ணோக்கமருளும் பரமதயாநிதி! என்று தோத்திரம் புரியும் துருவச்சக்கரவர்த்தியைப் பகவான் கண்குளிரக் கடாக்ஷித்து, ஐயா துருவச்சக்கரவர்த்தியே! தாமதகுணத்தில் அதிகமாகப் பிரவர்த்திக்கும் அவனுக்குச் சாந்தகுணத்தைத் தகித்துப் போதித்தால் எள்ளளவும் வழிப்படான். அப்படிப்பட்ட தாமதகுணத்தை எண்மடங்கு அதிகமாக வகித்துக் கடுமையாக வசனித்தால் பயந்து அவன் சாந்தமடைந்து பேசுவதற்குமிடைந்து வழிபடுவான். ஆகையால் எல்லோருக்கும் சாந்த வசனங்களைப் பிரயோகித்தால் அதற்கு இணங்கி நடப்பது அருமை. எங்கேயோ நூற்றில் ஒருவன் இருப்பனே அன்றிச் சகலரும் சாந்தத்தை வகித்திருக்க மாட்டார்கள். ஆதலால் கோபிக்குக் கோபமாகவும் சாதுவுக்குச் சாந்தமாகவுமே வசனித்துத் தன் வழிக்குத் திருப்பவேணும். அப்படிச் சொல்லித் திருப்பாமல் யாவருக்கும் சாந்தமே உரைத்து இணங்கச்செய்வது முடியாதகாரியம். ஆகையால் சாதுவான உனக்குச் சாந்தமொழியே வசனித்த மாத்திரத்தில் வசப்படாமல் தாமசகுணம் தலையெடுத்து ஆடிக்கொண்டிருக்கும். இந்த அரசன் இன்னும் வழிப்படாமல் மூர்க்கனுகவே யுத்தஞ் செய்ய சித்தமாக நிற்கின்ருன். பார்த்தையா? இப்படிப்பட்ட துஷ்டர்களுக்குச் சாந்தவசனங்களைப் போதிப்பதால் பிரயோசனமேயில்லை. தாமசத்தையே காட்டி வெல்லவேணுமென்று பகவான் சொல்ல, துருவச்சக்கரவர்த்தி வெகுவாகச் சந்தோஷித்து இரணக்களத்தில் இறந்துகிடக்குந் தன் சேனைகளையெல்லாம் பகவான் கிருபையினுல் எழுப்பிக்கொண்டு சகல சேனைகளும் புடைசூழப் பகவான் நியமனப்படி நடந்து கமலாபுரத்தை யடைந்து சிலவருடகாலம் அரசுபுரிந்து இரண்டு புதல்வரைப்பெற்று, அதில் மூத்தோனுக்குத் தக்கவயது வந்தவுடன் மணம்புரிவித்து மகுடாபிஷேகஞ் செய்துவைத்து பகவான் முன்னம் வரமளித்தபடி நூதன பதவியாகிய சிம்சுமாரச் சக்கரத்தின் நடுவிலிருந்து இருபத்தேழு நட்சத்திரங்களும் சப்தரிஷிகளும் தன்னைப் பிரதக்ஷணம்செய்துவர, அந்தச் சிம்சுமாரச் சக்கரத்திற்கு அரசனைப்போல நாளைக்கும் சோதிடவல்லோருக்கும் மற்ற யாவருக்குந் தரிசனந் தந்துகொண்டும் இருக்கின்ருர்.

துருவசரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநம:

இரண்டாவது

# அம்பரீஷ சக்கரவர்த்தி சரித்திரம்.

கலிவிருத்தம்.

உம்பர் போற்று முயர்திருப் பாற்கடல்
வம்பி ளுடன் வாழ்ந்தரு ளண்ணகுலம்
அம்ப ரீஷனே யாண்ட பெருந்தகை
செம்பொற் பாதமென் சிரத்திற் கணியரோ.

மாட்சிமை தங்கிய அயோத்திமாநகரத்தை ஆண்டுக்கொண்டும் சகல தேசத்து அரசர்களும் காணிக்கை கப்பங்கட்டி வணங்க, முப்பத்திரண்டு அறங்களும் நடாத்தி, தேவர்கள் முனிவர்கள் மற்ற யாவர்களும் கொண்டாட, நீதியாக அரசுசெலுத்தி யிருந்த நாபாகமகாராஜன் என்று ஓர் அரசன் இருந்தான். அவ்வரசனுக்குப் பூர்வ புண்ணியப்பலத் தாலும் பகவானுடைய கிருபையினாலும் ஓர் புத்தி ரன் பிறந்தான். அப்புத்திரனை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து, ஒருநாள் நாமகரணஞ் செய்விக்கும்பொருட்டு சகலதேசத் தரசர்களையும் வரவழைத்து, பிராமணர்கள் முனி வர்கள் அதிதிகளும் தன்பந்துக்கள் முதலானோரும் சூழ, பிராமணர்கள் பல்லாண்டிசைக்க, முனிவர்கள் ஆசிகூற, சிலர் வேதகோஷ்டமிசைக்க, பிராமண ஸ்திரீகள் மங்களம்பாட, அம்பரீஷச் சக்கரவர்த்தி என்று நாமகரணமிட்டு, பிராமணர்களுக்குக் கோ தானம்-பூதானம்--கன்னிகாதானம்-வஸ்திரதானம்-ஹிரணியதானம் முதலான சோடசதானங்களுஞ் செய்வித்து, அதிதிகள் கோரியவைகளை யீந்து ரிஷி கள் முதலான பந்துக்களுக்கும் விருந்திட்டு புத்தி ரோற்சவத்தைப் பிரமோற்சவமாகநடத்தி வந்திருக் கும் அரசர்களுக்குத் தக்க மரியாதைகளைச்செய்து விடைகொடுத்தனுப்ப, அவர்களும் நாபாகச்சக்கர வர்த்தியினிடம் விடை பெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் சேனைகளுடன் புறப்பட்டு, அவரவர்கள் பட்டணங்களையடைந்தார்கள். பின்பு சக்கரவர்த்தி பிராமண ஸ்திரீகளுக்குத் தக்க வெகுமதிகளைச் செய்து ரிஷிகளையும் பிராமணஸ்திரீகளையும் அனு ப்பிவிட்டு வெகு சந்தோஷகரமாக சுகித்திருக்கிற போது ஐந்து வயதாகவே க்ஷௌளம் உபநயனம் நடத்தி கல்விப்பயிற்சி செய்வித்து யானையேற்றம் குதிரையேற்றம் முதலானதுகளிலும் தேர்ச்சியடை யச்செய்து வெகுபிரியமாகப் போஷித்துக்கொண்டு வருகையில், ஒருநாள் மந்திரி பிரதானிகள் நிறை ந்த கொலுக்கூடத்திற்கு எழுந்தருளி சிங்காதனத் தின்மீது வீற்றிருந்து மந்திரியைநோக்கி, ஓ மதியிற் சிறந்த அமைச்சனே! இப்பூமண்டலத்தை அனேக வருடகாலம் யான் மிகவும் நீதியாகப் பரிபாலனஞ் செய்துக்கொண்டு வந்தது உங்களுக்கெல்லாம் தெரி ந்த விஷயமே. ஆகிலும் இப்போது எனக்கு வயது முதிர்ந்து தள்ளாமைகாலம் வந்தணுகியபடியால் இப்பூமிபாரத்தை வகித்து அரசுபுரிவதற்கு என் னால் முடியவில்லை. வெகு கஷ்டமாக விருக்கின்றது. ஆகையால் இப்போது பூமண்டலத்தை ஏகசக்ராதி பதியாய் ஆளும் சக்தியும், அதற்குத்தக்க வயதும் வாய்ந்திருக்கின்ற எனது அருமைப்பாலனுகிய அம் பரீஷச் சக்கரவர்த்திக்கு இப்பூமண்டலத்தைப் பட் டாபிஷேகஞ் செய்துவைக்க வேண்டுமென்று கரு தினேன். அக்கருத்துக்கு உன்னுடைய இஷ்டம் எப்படியோ? அதை நன்றாய் ஆலோசித்துச் சொல் லும் என, அந்தப்படியே மந்திரியும் பிரதானி முத லானோருடன் யோசிக்கையில், பிரதானியானவன் மந்திரியைநோக்கி, ஓ ஐயா! உலகத்திலுள்ள அரசர்

கள் தங்கள் தங்கள் புதல்வர்களுக்குக் கல்விபயிற்சி செய்வித்து, சில வருடகாலம் மனுதர்மசாஸ்திரத்தை நன்ருய் ஒதுவித்து, அச்சாஸ்திரம் பூரணமாகப்படித்து, அதிலுள்ள நீதிகளை யறிந்து திடத்தை வகித்தபின்பு மனம் புரிவித்துச் சுகபோகங்களை அனுபவிக்கும்படிச்செய்து, பின்னரன்றோ பட்டாபிஷேகஞ் செய்கின்ருர்கள். அன்றியும் மகுடஞ் சூட்டுகிறகாலத்தில் பட்டத்தரசி அவசிய மிருக்க வேண்டுமல்லவா? ஏனெனில், யாகதீக்ஷை வகிக்கிற போது பட்டத்தரசியும் காப்புகட்டிக்கொண்டிருந்தல்லவோ சடங்குகளத்தனையும் நடத்தல்வேணும். இது தர்மசாஸ்திர விதியாயிருக்க, இதைக்கடந்து நடப்பது சாஸ்திரவிரோதமாகும். எப்போது சாஸ்திரத்தை அனுசரிக்காமல் விருத்தமாய் நடப்பவர்களுக்கு சொர்க்கபோகந் தவிர்ந்து நரகபோகத்தை அவசியம் அனுபவிக்கும்படி நேரிடுமென்ருன். அவ்வாறு கூறிய பிரதானியின் மொழிகளைக்கேட்டு மந்திரியானவன் இது தர்மசாஸ்திரவிதிபே. இந்தப்படியே முன்னம் அம்பரீஷச் சக்கரவர்த்திக்கு மணஞ் செய்வித்துப் பின்னர் பட்டாபிஷேகஞ் செய்விப்பதே நீதியென்று கருதி, அந்த நாபாகச் சக்கரவர்த்திக்குத் தர்மசாஸ்திர விதியை எடுத்தோதிச் சக்கரவர்த்தியை இணங்கச்செய்து, சக்கரவர்த்தியின் குலத்தில் நீண்ட குழலும், நிறைமதி முகமும், கமலக்கண்களும், கற்கண்டு மொழிகளும், பவளவாயும், பரிமளவுடலும், அன்னநடையும், சின்னவிடையும், அதிகசெல்வமும், அதிககல்வியும் உள்ள சற்பாத்திரியென்னும் ஓர் கன்னிகையைப்பேசி சகலருக்குஞ் சவ்வாதுபூசி, உறவோர் மற்றப் பெரியோருடனே சகலரும்மெச்ச சந்தோஷத்துடனே சகல அரசர்களும் வரிசை அன்பாய்க்கொண்டு அருகினில் நிற்கப், பலபேர் மொய்க்க உறவினர் களிக்கப் பன்னீரிற் குளிக்க விந்தையாக விவாகஞ்செய்து முடித்து சுகபோகங்களை யனுபவிக்கும்படி விடுத்தான். அப்படி சில வருடகாலங் கடந்தபின்பு அவ்வயோத்திமாநகரத்திற்குச் சக்கரவர்த்தியென்று அனைவருந் துதிக்கப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்து, அப்பா மகனே! அரசருக்கு வேட்டையாடுவது நீதியாயிருந்தபோதிலும் நீ ஒரு ஜீவனையுங் கொல்லாதே. உந்தன்வலி செல்லாதே. அழியும்பொருளைத் தேடாதே. தேடிப் புவியிலோடாதே. ஜபதபங்களை மறக்காதே. தெய்வபக்தியைத் துறக்காதே. கர்மத்தொழில்கள் செய்யாதே. கபடால்வாடி நையாதே. தர்மகுணத்தை நீக்காதே. சண்டாளர்தமைச் சேர்க்காதே. நீதிமார்க்கந் துறக்காதே. சிவவடியாரை மறக்காதே. நல்லோருறவை விடுக்காதே. ஞாய மார்க்கந்தனைக் கெடுக்காதே. குருவையென்றும் வையாதே. குமாரா! என்சொல் மெய். என்கிற சில நீதிவாக்கியங்களை யுரைத்து நீரைப்போல மனதைக் கரைத்துத் தன் மனைவியை நோக்கி, ஓ பெண்ணே! உன் புதல்வனை வெகு பத்திரமாய்க் காப்பாற்றுவதன்றி நமது மருமகளாகிய சற்பாத்திரியை யழைப்பித்துக்கொண்டு சுகமாயிருங்கள். நான் வெகுதபசிகள்வாழும் கானகத்தை யடைந்து தவஞ்செய்ய வேண்டுமென்று உரைக்க, அதற்கு அவர் மனைவி ஓ சுவாமி! உம்மைவிட்டு அரைக்கணமேனும் அடியாள் பிரிந்திருக்கமாட்டேனென்று தானும் பிரயாணத்திற்குச் சித்தமாயிருக்க, நாபாகச்சக்கரவர்த்தி ஓ பெண்ணே! நமது மைந்தனே சிறுவயதுடையவனு யிருக்கின்ருன். நீயும் என்னுடன் வந்துவிட்டால் குமாரனை யார் ஆதரிப்பார்கள்? என் வார்த்தையைத் தள்ளாமல் மறுத்து ஒன்றும் விள்ளாமல் மைந்தனைப் பாதுகாப்பாயாக. என் சொற்படி நடப்பதே உனக்கு முக்கியமான தவமும் விரதமுமாம். பதிவார்த்தையைக் கடவாத சதிக்குப் பரமபதமுண்டென்று பல சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. நானே சகல சாஸ்திரார்த்தங்கள் அறிந்தவனுகயிருந்தும், ஓதினபடியே சாதனஞ்செய்யாமல் கோதுக்குள்ளாயினேன். இனி என்னுடன் வாதிக்கவேண்டாம். சமுசாரத்திலிருந்து அடைந்த பலன் எனக்குப்போதும். உனக்கு எந்தகுறை நேரிட்டபோதிலும் மதுவனத்திற்குத் தடையின்றி வரலாம். சாதுக்கள் தரிசனம்பெறலாம். பிரமானந்தமுறலாம். எனது ஆசிரியரால் போதிக்கப்பட்ட ஞானநிஷ்டைக்கும் இல்லற தர்மத்துக்கும் வெகுதூரம். எனக்கோ தன்னை மறந்து திக்குத் தேசாதிகளிறந்து பிரமானந்தவாரியில் மூழ்கியிருக்கும்படியான ஞாபகம் மேலிட்டு மானிடப்பிறவிக்கு உறுதியாய் தவம் செய்யாதவர்கள் சவத்துக்குச்சமானம். தேகமோநீர்மேற்குமிழி. ஓ பேதை! மானிடரைப்போல நானிருப்பது அழகல்ல. பவசாகரத்தைக் கடக்கும் புணையானது தவமேயாம். தேகேந்திரியப் பிராண காரண ஜீவவிருளைக்கடந்து சுழுப்தி நிலையையடைந்து ஆத்துமாமாத்திரமாயிருக்கும் சமாதி நிஷ்டைபுரிந்து சம்சாரத்திலிருந்து சாதித்தல் வெகு துர்லபம். மனம் அரும்பொருளைப் பற்றமாட்டாது. சாதுக்கள்கூட்டத்திலிருந்து தேர்ந்தாலன்றிச் சகஜ க்ஞானத்தை யடையக்கூடாது. அற்பமான சொர்க்காதி போகங்களுக்கே அற்புதமான தவஞ்செய்தார்களாகில்

செப்புதற்கரிய ஒப்பிலா மோக்ஷமடைவதற்கு எத்தனை பாடுபடவேண்டும்? திரிலோகமும் தொழும் ஞானியென்றுரைக்கும் பழமொழி பொய்யா? மெய்யா? என்று உரைத்துக் கானகத்தை நாடிப் போனார்.

அப்போது அம்பரீஷச்சக்கரவர்த்தி தந்தையுரைத்த விரக்தி வார்த்தைகளைக் கேட்டு மனந் தலக்கமுற்றுத் தந்தையினிடம்போய் அவர் திருவடிகளில் பணிந்து, அவர் பாதங்களைக் கண்ணில் ஒத்திக்கொண்டு, ஓ என் தந்தையே! அடியேனும் உம்முடன் வருகிறேனென்று பின்றொடர, அந்த நாபாகச் சக்கரவர்த்தி ஓ என்னருமைப் புதல்வனே! நீ என்னுடன்வர இச்சித்தது நன்மையே. ஆனாலும் சகல விஷயபோகங்களையும் அனுபவித்து விரக்தியடைந்து சந்நியாசியாக வேண்டுமன்றி ஒருவர் போதனையால் விரக்தியடைந்தவன் சிலநாளில் விஷயபோக யெண்ணங்களால் பீடிக்கப்பட்டு இல்லற தர்மமுங்கெட்டு பிரஷ்டத்துவ மடைவான். அதெப்படியென்றால், அபசாரத்திற் சிறந்த விபசாரி ஒருவள் போதனையால் விபசாரஞ் செய்யாதிருந்தாலும் சிலநாளில் தன் சுயகுணத்தையே யடைவாள். அன்றியும் தானே இது கூடாதென்றும், இச்செய்கையால் நரகத்தை யடைவோமென்றும், அற்பமாகி ஓர் இந்திரிய சொற்ப சுகத்தையே வெல்லாத நாம் வஞ்சகமான சஞ்சலமுள்ள நெஞ்சத்தை வெல்வதெங்கே? பகவான் திருவடிகளை யடைவதெங்கே? தசேந்திரியங்களில் ஓரிந்திரியத்தை யடக்காமல் மானமிழந்து ஈனமடைந்து திரியும் நாம் தசேந்திரியங்களை வெல்வதெப்போ? பரிசுத்த மனதுடன் பகவானைத் தியானிப்ப தெப்போ? இனி கற்பைக்காப்பதே நமக்குரியதபம் ஜெபம் ஓமம் நியமம் விரதம் சீலம் என்று திடநிச்சயங்கொண்டவள் தன் உயிர்நீங்கும் பரியந்தம் பதிவிரதத் தன்மையைக் காத்து சஞ்சலமனதைப் பேர்த்து எளிதில் பரமபதத்தை யடைவாள். இது வுண்மை. இப்படியாக்கும். நீ சிறுபிள்ளையாதலால் விஷய ஞாபகமுள்ளவன். உன்னுடைய மனைவியோ அறியாதவள். அவளைவிட்டு என்னுடன் வருவது கூடாது. இன்னுஞ் சில வருடங்கள் உன்னுடைய ஸ்திரீயுடன் கூடியிருந்து விஷயவாஞ்சையற்று விரக்தியடைந்து மோக்ஷமார்க்கத்தில் நடந்து சமுசாரசாகரத்தைக் கடந்து விஷயாதி போகங்களுக் கிடைந்து சாதுக்களுடன் தொடர்ந்து உண்மை நிலையையறிந்து ஆனந்தத்தை யடைவதே உனக்குகந்த யோக்கியமென்றறைந்தான். இவ்வாறு கூறிவிட்டுத் தனயனைப்பிரிந்து கானகத்தைச் சேர்ந்து சாதுக்களுடன்கூடி களிகூர்ந்து பந்தபாசங்களிலிருந்து பேர்ந்து பிர்ம்ம நிஷ்டையைச் சார்ந்து நிச்சல சமாதியாற்றேர்ந்து சகல சந்தேகங்களுந் தீர்ந்து பிர்ம்மானந்தத்தில் படிந்திருந்தார்.

இவ்வாறு நாபாகச்சக்கரவர்த்தி கானகமடைந்த பின்னர் அம்பரீஷச் சக்கரவர்த்தியும் இவர்தாயும், சக்கரவர்த்தி பிரிந்துபோயினதை யெண்ணி மெத்த விசனமடைந்துக் கொண்டிருந்தார்கள். இதில் அரசி நாயகன்பாதங்களை மனதில் பதித்துத் துதித்துக்கொண்டே தன் மருகியை யழைப்பித்து அப்பா மகனே! இதோ உன்மனைவியை யழைப்பித்தேன். இவளுடன் கலந்து தந்தையின் விசனத்தைத் துறந்து இராஜரீகத்தில் முக்கிய கவனத்தை வைத்து நீதிகுன்றாமல் நின் தந்தையைப்போல அரசுபுரியக் கடவாயென்று சொல்லி, தன் அந்தப்புரத்தை யடைந்தனள். அம்பரீஷச் சக்கரவர்த்தி தாய் தந்தையர்கள் சொல்லியபடி நீதிகுன்றாமல் அரசு புரிந்துக்கொண்டு வெகு சத்தியவானாகவும், தர்மசிந்தை யுடையவனாகவும், ஜீவகாருண்ணியமுடையவனாகவும், பிராமணாளிடத்தில் விசுவாசமும், பக்தியும் தேவபூசையிற் சிறந்தும், சுத்தசத்துவகுணத்தை வகித்திருந்தமையால் தேவர்களும் முனிவர்களும் நாவலர்களும் பூமிகாவலர்களும் சேவலர்களும் மற்றியாவர்களும் புகழ்ந்து கொண்டாட, வெகு நெறியாய்ப் பூமியைப் பரிபாலித்துக் கொண்டிருந்தனன். இவ்வண்ணம் யாவரும் புகழ அரசுபுரிந்து வருகையில் ஒருநாள் அம்பரீஷச் சக்கரவர்த்தி சிங்காதனத்தின்மீது வீற்றிருந்து வைதீக நிஷ்டைகளிற்றேர்ந்த பெரியோர்களாகிய பிராமணர்களை நோக்கி, ஓ பிர்மவித்துக்களாகிய பெரியோர்களே! சாஸ்திரங்களில்சொல்லுகின்ற அனேக விதங்களில் சிறந்த இராஜவிரதமெது? அதனையும் அதின் பெருமையையும் அதனால் அடையும் பலனையும் தெரியப்படுத்தவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அதில் ஒரு விருத்தப்பிராமணர் ஓ சக்கரவர்த்தியே! (சுத்தம் ஏகாதசிவிரதம்) விரதங்களில் ஏகாதசி விரதத்தைவிட மேலானது ஒன்றுமில்லை. அதெப்படியெனில் புண்ணிய புருடர்களுக்குள் புருடோத்தமனைப்போலவும், நவக்கிரகங்களுக்குள் ஆதித்தனைப்போலவும், சப்த சமுத்திரங்களில் பாற்கடலைப்போலவும், பர்வதங்களில் மேருபர்வதத்தைப் போலவும், நான்கு ஆசிரமங்களுக்குள் கிரகஸ்தாஸ்ரமத்தைப்போலவும், விருக்ஷங்களில் கற்பக விரு

க்ஷத்தைப்போலவும், சோடசதானங்களில் அன்ன தானத்தைப்போலவும், நவரத்தின மணிகளில் கௌஸ்துப மணியைப்போலவும், லோகங்களில் சொர்க்கலோகத்தைப்போலவும், பூமிகளில் ரசா தலத்தைப்போலவும், விரதங்களில் இதற்கு நிகராக எதையுஞ் சொல்லக்கூடாத உத்தமமாகியும் விளங்கும் ஏகாதசி விரதத்தை யனுஷ்டித்தால் சகல மங்களகரமும் சம்பத்துக்களும் உண்டாகும். ஆகையால் ஓ சக்கரவர்த்தியே! இந்த ஏகாதசி விரதத்தை நீ அவசியம் அநுட்டிக்கக் கடவாய் என்றும், பின்னுஞ் சொல்லுகின்றூர். ஓ சக்கரவர்த்தியே! எட்டு வயதுக்கு மேற்பட்டும் எழுபது வயதிற்குட்பட்டவர்களும் சுக்ல கிருஷ்ண பக்ஷங்களில் ஏகாதசிவிரதத்தை யனுஷ்டிக்க வேணுமென்று காத்தியாயன சுருதி சொல்லுகின்றது. ஆகையால் அவசியம் இராஜவிரதமான இவ்விரதத்தை யனுஷ்டித்து உத்தமபதத்தை யடையுமையாவென்றுசொல்லி விடைபெற்றுக்கொண்டு சென்றனர். பின்பு அம்பரீஷன் சப்த தீவாந்தரங்களையும் பரிபாலிக்குஞ் சக்தியையும், அளவில்லாத சம்பத்தையும், ஒப்பில்லாத ஆதிபத்தியத்தையும் பெற்றிருந்தாலும், அந்த ஐஸ்வரிய முதலானவைகளுடைய நாசத்தை யறிந்தவனாய், சமஸ்தத்தையும் சொற்பனத்திற்கண்ட வஸ்துவைப்போல அநித்தியமாக நினைத்து, பகவானை வாசுதேவனிடத்திலும் அவருடைய பக்தர்களான சத்புருஷர்களிடத்திலும் பரமபக்தி யடைந்தவனாய் இப்பிரபஞ்சங்களெல்லாம் துரும்புக்கு நிகராகயெண்ணி தன்னுடைய மனதை ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் ஸ்தாபித்து சர்வகாலமும் தன்னுடைய கர்மங்களையெல்லாம் எக்கியப் பிரதான பரமபுருடனிடத்திற் சமர்ப்பித்து, இப்பூமியைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தான். அப்படிப்பட்ட மகாபாகவதனை அம்பரீஷச் சக்கரவர்த்தியானவன் சுதர்மமான கர்மயோத்தோடுங் கூடின பக்தியோகத்தினால் ஸ்ரீஹரியை சந்தோஷிப்பித்துக்கொண்டு மெள்ளமெள்ள சமஸ்தவிஷயங்கள் கிருகங்கள் மனைவி புத்திரர்கள் பந்துக்கள் இரதகஜதுரகபதாதிகள் அக்ஷயங்களான வஸ்திராபரணாதி ஆயுதங்கள் அநந்தமான பொக்கிஷங்கள் இவைகளையெல்லாம் அநித்தியமென்று நீக்கினான். அப்போது ஸ்ரீஹரியானவர் அந்த அம்பரீஷச் சக்கரவர்த்தியினிடத்தில் வெகு சந்தோஷப்பட்டவராய் சத்துருக்களுக்குப் பயங்கரமாயிருக்கிற தம்முடைய சக்கரத்தை அவனுக்குக் கொடுத்தார். அந்த வீரனை அம்பரீஷச் சக்கரவர்த்தியானவன் தனக்குச் சமானமான சீலத்தையுடைய ஸ்திரீகளுடன் கூடிக்கொண்டு ஸ்ரீவிஷ்ணுவை ஆராதிக்க வேணுமென்கிற இச்சையை யுடையவனாய் ஒரு வருஷ பரியந்தம் துவாதசி விரதத்தை அநுசரித்து அந்த விரதத்தினுடைய அந்தியத்தில் கார்த்திகை மாதத்தில் மூன்றுநாள் உபவாசத்துடனிருந்து யமுனாநதியில் ஸ்நானம்பண்ணி மறுதினத்தில் ஸ்ரீஹரியை எழுந்தருளப்பண்ணி திடமான பக்தியினாலும் சுவர்ணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டதாயும் நல்ல கறவையும் வயதையும் ரூபத்தையும் சாதுக்களாயும் கன்றுகளை யுடையவைகளாயும் கறவை பாத்திரமுதலான உபகரணங்களோடிருக்கிற அறுபதுகோடி பசுக்களை சத்புருஷர்களான பிராமணர்களுக்குத் தானஞ்செய்து அவர்களைத் தங்கள் தங்கள் கிரகங்களுக்கு அனுப்பிவிட்டு, அந்த அம்பரீஷச் சக்கரவர்த்தியானவன் துவாதசியில் பாரணைசெய்ய எத்தனம் செய்தார். அந்தச் சமயத்தில் கோபத்தையே ரூபமாகக்கொண்ட தூருவாச மஹாரிஷியானவர் அம்பரீஷச் சக்கரவர்த்திக்கு அதிதியாக வந்தார். அந்தச் சக்கரவர்த்தியும் அதிதியாக வந்த அந்த ரிஷியை எதிர்கொண்டு அர்க்கியபாத்தியாதி உபசாரங்களினால் சாஸ்திரவிதியாகப் பூசைபண்ணி அவருடைய பாதத்தில் சேவித்துத் தன் கிரகத்தில் அவரைப் போஜனம் பண்ண வேண்டுமென்று பிரார்த்தித்தார். அந்தரிஷியும் அதை அங்கீகரித்து மாத்தியான்னிக ஸ்நான முதலான நித்திய கர்மங்களைச்செய்து வருகின்றேன் என்று சொல்லிப்போய் காளிந்திநதியின் சுசியான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பிர்மத்தைத் தியானித்துக்கொண் டிருந்தார். அப்போது துவாதசி திதி அரைமுகூர்த்தமாத்திரம் இருந்தது. அதை யறிந்து அம்பரீஷச் சக்கரவர்த்தியானவர் தூருவாசமுனிவர் வாராமலிருப்பதால் அம்முனிவரை எதிர்பார்த்துக்கொண் டிருக்கையில் காலங்கடந்து போகிறதே; இதற்குள் பாரணைசெய்ய வேண்டுமே; அதிதியில்லாமல் பாரணை செய்வது தர்மமல்லவே என்று பிராமணர்களுடன் அந்தத் தர்மசங்கடத்தை யோசனை பண்ணினான்.

எப்படியென்றால் அதிதியாகிவந்த பிராமணனை விட்டுப் பாரணை செய்தோமேயாகில் பிராமணதிக்கிரமதோஷம் வந்து சம்பவிக்கின்றது. துவாதசியில் பாரணை செய்யாமலிருந்தாலும் மகத்தாகிய தோஷமானது நம்மைவந்து அணுகுவதற்குச் சந்தேகமேயில்லை. ஆகையால் திருத்துளாய்தீர்த்தம் பானம் பண்ணினால் பெரியவர்கள் அசனதுல்லிய

மாகவும் உபவாசதுல்லியமாகவும் அதனால் தோஷமில்லை என்றும் சொல்லுவதுமன்றி, சாஸ்திரசம்மதாகவும் இருக்கிறதென்று தீர்மானித்து, இராஜரிஷியான அம்பரீஷச் சக்கரவர்த்தியானவர் மனதில் ஸ்ரீபகவானைத் தியானஞ்செய்து திருத்துளாய் தீர்த்தத்தை ஸ்வீகரித்துவிட்டு அந்தத் தூருவாசமுனிவரது வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார். அப்போது தூருவாசரும் யமுனாதீரத்தில் நின்றும் ஸ்நானஞ்செய்து சகல கர்மங்களையும் முடித்துக்கொண்டு வந்து, இராஜரிஷியாகிய அம்பரீஷச் சக்கரவர்த்தியினால் பூசிக்கப்பட்டு, தன் யோகதிருஷ்டியினால் சக்கரவர்த்தி திருத்துளாவும் தீர்த்தமுங் கொண்டு பாரணை செய்ததை யுணர்ந்துகொண்டு அடங்காத கோபத்தினாலும் பயங்கரமான முகத்தை யுடையவராகியும் அதிக பசியுடையவராகியுமிருக்கிற அந்த ரிஷியானவர் அஞ்சலிசெய்துகொண்டு எதிரில் நிற்கின்ற சக்கரவர்த்தியை நோக்கி ஒருவசனஞ் சொல்லுகின்றார். ஓ அரசனே! அதிதியாய் வந்த எனக்கு ஆதித்யஞ்சொல்லி அன்னங் கொடாமல் நீ ஒருவனே புசித்தாய். என்னை இப்படிக்கு அவமதித்த உனக்கு அதிதியாகிய என்னுடைய பலத்தை இப்போ அரைநொடிக்குள் காண்பிக்கிறேன் பார். என்றுசொல்லித் தூர்வாசரிஷியானவர் ரோஷத்தினால் ஜொலித்துக்கொண்டு தன்னுடைய ஜடையில் ஒரு ரோமத்தைப் பிடுங்கி அந்த ரோமத்தினால் இராஜரிஷியை நாசம் பண்ணத்தக்கதாகக் காலாக்கினிக்குச் சமானமாக ஒருபூதத்தைச் சிருஷ்டி செய்தார். அப்போது அந்தப்பூதமானது மகாரிஷியை நோக்கி, தபசினும் யோகத்தினும் மெத்த புனிதராகிய ஓ முனிசிரேஷ்டரே! தயவு செய்து என்னைச் சிருஷ்டித்த காரணத்தைச் சீக்கிரம் கிருபைசெய்ய வேண்டும் என்று பணிந்த பூதத்தை நோக்கி, ஓ பூதமே! என்னைப் போஜனத்திற்கு வரும்படி வருந்தியழைத்து நான் ஸ்நானம்பண்ணி வருவதற்குள் என்னை வஞ்சித்துப் புசித்த இக்கொடியனை அம்பரீஷனைக் கொன்றுவரக் கடவாயென்று தூண்டினார். அவ்வசனங்களைக்கேட்ட இப்பூதமானது கையில் ஓர் வாளையேந்திக்கொண்டு பூமி நடுங்க விரைவாக வாராநின்றது. அதனைக் கண்ட இராஜரிஷியானவர் சற்றும் பயப்படாமல் திடசித்தத்துடன் பகவத்தியானஞ்செய்துகொண் டிருந்தார். அப்போது மகாத்துமாவான பரமபுருஷனால் அம்பரீஷ சக்கரவர்த்திக்குக் கொடுக்கப்பட்ட சக்கரமானது கோபத்தினால் சீறி சர்ப்பத்தைப்போல ஓடிவாராநின்ற அந்தப்பூதத்தைத் தகித்துச் சாம்பராக்கிவிட்டுத் தூர்வாசமாமுனிவரை விடாமற் பின்தொடர்ந்துவர, அதனைக்கண்ட தூர்வாசமுனிவர் தன்னுடைய பிரயத்தினம் நிஷ்பலமானதையும் தன்னைச் சக்கரமானது துரத்திக்கொண்டு வருவதையும் யோசித்து மிகவும் பயந்தவராய் திக்குத் திக்குகளாக ஓடினார். அப்படி ஓடும் தூர்வாசரைச் சக்கரமானது விடாமல் பின்தொடர்ந்து துரத்த அந்த ரிஷியானவர் மேருபர்வதத்தின் குகையிலேனும் ஒளித்துக் கொள்ளுவோமென்று ஆலோசித்து ஓடி அக்குகையில் ஒளித்துக்கொண்டார். சக்கரமானது அங்கும் விடாமல் பின்தொடர அந்தத் தூர்வாசமாமுனிவர் மனங்கலங்கிமெத்தவும் பயந்தவராய் ரக்ஷகனைத் தேடிக்கொண்டு சென்று பிர்ம்மதேவரைக் கண்டு சரணமாக அடைந்து, வாரீர் பிர்ம்மதேவரே! ஸ்ரீஹரியினுடைய சக்கரத்தின் சிரமத்தினால் வெகுதூரம் ஓடி அலைந்து வேசாரியானேன். அதைத் தடுத்துக்கொண்டு சுயேச்சையாய்ப்போக சக்தியற்றவனாகித் தேவரீரைச் சரணம் புகுந்தேன். ஆகையால் அந்தச் சக்கரத்தினால் அடியேனுக்கு யாதொரு பாதையும் நேரிடாவண்ணம் அதனை விலக்கி ஆட்கொள்ளவேணும் சுவாமியென்று நயந்த மொழிகள் உரைக்கத் தூர்வாசமுனிவரைப் பார்த்துப் பிரமதேவனானவர் சொல்லுகின்றார்.

கேளும் தூர்வாசமாமுனிவரே! நானும் உருத்திரனும், தக்ஷன் பிருகு முதலான பிரஜாபதிகளும், இந்திரன் முதலான தேவர்களும், அந்தப் பகவானுடைய ஆக்கினையை யடைந்தவர்களாய் அவரால் எங்களுடைய சிரசிலே வைக்கப்பட்ட லோகத்தினுடைய க்ஷேமத்தையே கோரிக்கொண்டிருக்கிறோம். அப்படிப்பட்ட சுவாமியினுடைய உத்தமபக்தனுக்குத் துரோகஞ் செய்துவந்து நின்ற உம்மை நான் இரக்ஷிக்கமாட்டேனென்று பிர்ம்மதேவரால் திரஸ்கரிக்கப்பட்டவராய் அந்தத் தூர்வாசமாமுனிவர் அங்கே நின்றும் ஓட்டமாக வோடிக்கொண்டே பின்தொடர்ந்துவரும் சக்கரத்தைப் பார்த்துக் கையை நீட்டிப் பலவாறு தூஷித்தும் மனங்கொதிப்பேறி வெகுவாகச் சாபமிட்டும் கைலையையடுத்துச் சிவபெருமானைச் சரணமாகவடைந்து, ஓம் அரகரா! சிவசங்கரா! கர்த்தனே! பரிசுத்தனே! ஜடாதரனே! கங்காதரனே! விரூபாக்கனே! நீலகண்டனே! உமைபாகனே! லோகநாயகனே! கபாலபாணியே! கைலாசவாசனே! சுயம்பிரகாசனே! என்று தோத்திரஞ்செய்யச் சங்கரனானவர் தூர்வாசரை நோக்கி வாரீர் தூர்வாசமாமுனிவரே? பர

மாத்மாவான பகவானுடைய பக்தனுக்குத் துரோகம் பண்ணவனே இரக்ஷிப்பதற்கு நானும் சமர்த்த னன்று. மேலும் யானும் சனற்குமாரர் நாரதர் பிரமதேவர் கபிலர் ஆசுரி மரீசி முதலான பிரஜாபதிகள் தபச்சித்தி யுடையவர்களான மற்றுமுள்ள ரிஷிகள் ஆதியாக எல்லோரும் சர்வக்கியாளா யிருந்தாலும் ஆதிமுதல் தேவனான விஷ்ணுவின் மாயையினல் சூழப்பட்டவர்களா யிருக்கின்றோம். ஆகையால் அந்தவிஷ்ணுவையே சரணமாக அடையக்கடவாயென்று உருத்திரனல் சொல்லப்பட்டவராய் தூர்வாசமாமுனியானவர் அந்தக் கைலாசத்தினின் றும் புறப்பட்டு யாதொரு வைகுண்டத்தில் ஸ்ரீ ஹரியானவர் இலக்குமியுடன்கூடி வாசம் பண்ணிக் கொண் டிருக்கப்பட்ட அந்த வைகுந்தமாநகரத்தை யடைந்து அந்தத்தூர்வாசமாமுனியானவர் அந்தப் பகவானுடைய பாதத்தில் விழுந்து, ஓம் நரஹரி! முரஹரி! அச்சுதனே! அனந்தனே! சத்புருடர்களுக்கு இஷ்டநாயகனே! விஸ்வகர்த்தனே! அபராதியான என்னை இரக்ஷிக்கக்கடவீர். உம்முடைய பிரபாவத்தை அறியாமல் தேவரீருக்குப் பிரியரான பக்தருக்கு அபராதம் பண்ணின அடியேனைத் தாங்களே என்னுடைய துக்கத்துக்குச் சாந்தியைப் பண்ணக்கடவீர்களென்று பணிவாக மொழிகின்ற தூர்வாசமுனிவரை நோக்கிப் பகவான் சொல்லுகின்றார். வாரீர் முனிவரே! யானேயானது மாவட்டியானுடைய சொற்படி நடப்பதைப்போல நான் பக்தர்கள் பக்தியென்னும் வலையில் கட்டப்பட்டு பக்த பராதீனனாக விருக்கின்றேன். ஆகையினல் அந்த அம்பரீஷச் சக்கரவர்த்தியையே சரணமாக அடையக்கடவாய். பக்தர்களால் வசீகரிக்கப்பட்ட இருதயத்தை யுடையவனும், பக்த ஜனங்களுக்குப் பிரியனுமு மிருக்கிற நான் சாதுக்களான அந்தப் பக்தர்களைவிட்டு என்னுடைய ஆத்மாவையும் இச்சிக்கமாட்டேன். அப்படிப்பட்ட பக்தர்களை விட்டு என்னையே ஆஸ்ரயித்துக்கொண் டிருக்கிற லட்சுமியையும் அபேட்சிக்கமாட்டேன். என்னுடைய சேவையினலேயே திருப்தியாயிருக்கிற பாகவதர்கள் எனது சேவையினல் அடையப்பட்ட சாலோக முதலான நான்குவித மோக்ஷங்களையும் அபேக்ஷிக்கிறதில்லை. என்னுடைய இருதயத்தில் சாதுக்களும் சாதுக்களுடைய இருதயத்தில் நானுமாகவிருப்போம். என்னைவிட்டு வேறொன்றை அவர்களும் அறிகிறதில்லை. நானும் அவர்களைவிட்டு ஒன்றையும் அறிகிறதில்லை. ஆகையினல் யாரிடத்தினின்றும் உனக்கு உபத்திரவம் உண்டாயிற்றே சீக்கிரமாக அவரை நீ அடையக்கடவாய். உமக்கு மங்கள முண்டாகக்கடவது. ஆகையால், நீர் நாபாகபுத்திரனன அந்த அம்பரீஷனையே அடைந்து மகா பாகவதனான அவனை க்ஷமிக்கும்படி வேண்டிக்கொள்ளும். அதனலே உமக்குச் சாந்தியுண்டாகப் போகிறதென்று பகவானனவர் திருவாய்மலர்ந்தருளினர்.

இவ்வண்ணம் பகவானல் ஆக்கியாபிக்கப்பட்டவராய் தூர்வாசமகாரிஷியானவர் சக்கரத்தின் ஒளியினல் சபிக்கப்பட்டு மகா துக்கத்துடன் விரைவாகச்சென்று உயிரிருந்தால் உப்புமாறிப் புசிக்கலாமென்றும், மானம்போனலும் போகட்டும் பிராணனிருந்தால் போதுமென்கிற எண்ணத்துடன் அம்பரீஷ மகாராஜனை யடைந்து அவருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டார். அப்போது அம்பரீஷ மகாராஜனனவன் அந்தத் தூர்வாசருடைய விசனத்தைப் பார்த்து மகாரிஷியாகிய தூர்வாசர் தன் பாதத்தைப் பிடித்துக்கொண்டபடியினல் தனக்கு லச்சையுண்டாகியவனும் மிகவும் தயையுடையவனும் ஸ்ரீஹரியினுடைய சக்கரத்தைத் தோத்திரம் பண்ணினன். எப்படியெனில், வாரீர் சுதரிசனரே! தேவரீர் அக்கினியும் சூரியனும் சோதிகளுக்கெல்லாம் பதியான சந்திரனும் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசங்களும் சப்தாதி விஷயங்களும் சுரோத்திராதி இந்திரியங்களும் தர்மமும் தைரியமும் சத்தியமும் அதர்மத்தையே சுபாவமாக வுடையவர்களான அசுரர்களுக்குச் சங்காரகர்த்தாவாகியும், மூவுலகங்களையும் இரக்ஷிக்கின்றவராகியு மிருக்கிற நீர் கெதாதரனன பகவானல் துஷ்டர்களுடைய கண்டனத்தின்பொருட்டு நியமிக்கப்பட் டிருக்கின்றீர். ஆகையினல் எங்களுடைய குலத்துக்குப் பாக்கிய லாபத்தின்பொருட்டு தூர்வாசமகாரிஷிக்கு நன்மை செய்யக்கடவீர். அதுவே எங்களுக்கு அநுக்கிரகமாகவிருக்கும். பகவானனவர் ஒருவரே எனக்கு சர்வபூதங்களினலேயும் பரமாத்மா திருஷ்டியினல் கருணையுடையவரானரேயாகில் இந்தப் பிராமணனவர் சந்தாபத்தினின்றும் விடப்படக் கடவரென்று ஸ்தோத்திரம் பண்ணுகின்ற அம்பரீஷச்சக்கரவர்த்தியினுடைய பிரார்த்தனையினல் தூர்வாச மகாரிஷியை நாலுபக்கத்திலேயும் தகியாநின்ற அந்த ஸ்ரீவிஷ்ணுவினுடைய சக்கரமானது சாந்தியை யடைந்தது பிறகு அந்தத் தூர்வாசமகாரிஷியும் சக்கரத்தினலுண்டான அக்கினியினின்றும் விடப்பட்டவராயும், க்ஷேமத்தை அடைந்தவராயும், அம்பரீஷச் சக்கரவர்த்திக்கு அமோகமான

ஆசிர்வாதங்களைச்செய்து அவனைத் தோத்திரஞ் செய்தான். அதெப்படியெனில், வாராய் அம்பரீஷச் சக்கரவர்த்தியே! இது மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. அநந்தனை ஸ்ரீமந்நாராயணனுக்குத் தாசர்களுடைய மகாத்மியம் நம்மால் இப்போது நன்றாக வெளிப்பட்டது. எந்தக்காரணத்தினால் அபராதியான எனக்கு க்ஷேமத்தைக் கோருகின்றாயோ அப்படிப்பட்ட அபசாரத்தை எவர்களும் என்னால் எப்படிப்பட்ட புனிதர்களும் சாதுக்கள் விஷயத்தில் செய்யக்கூடாதென்று கரதலாமலகம் போலக் காணப்படுகின்றது. மேலும் மகாத்துமாக்களுக்கும் விட்டுவிடக் கூடாமலிருக்கிற வஸ்து என்னவிருக்கின்றது? மிகவுந் தயாளகுணமுடையவனான உன்னாலே என்னுடைய பிராணனை இரக்ஷிக்கப்பட்டேன் என்று தூர்வாசமகாரிஷியானவர் சொல்ல, அந்த அம்பரீஷச்சக்கரவர்த்தியும் அந்த மகாரிஷியினுடைய பாதங்களைப்பிடித்து க்ஷமித்துக்கொண்டு அவருக்குப் போஜனம் பரிமாறினான். அந்தத் தூர்வாசமகாரிஷியும் சக்கரவர்த்தியினால் கொண்டு வரப்பட்ட சர்வபோக்கிய வஸ்துக்களோடு கூடின அமிர்தமயமான அன்னத்தைப் புசித்து திருப்திகரமாய் சக்கரவர்த்தியையும் நீர் போஜனம் பண்ணுமையாவென்று சொல்லி அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ஆகாயமார்க்கமாக நித்தியமான பிரமலோகத்தை அடைந்தார்.

இந்தப்படி அந்தத் தூர்வாசமகாரிஷியானவர் சக்கரத்தினால் துரத்தப்பட்டவராய் சகல லோகங்களிலும் புகுந்து புகுந்து சஞ்சரித்துக்கொண்டு எவ்வளவுகாலம் அம்பரீஷச் சக்கரவர்த்தியினிடம் வராமலிருந்தாரோ, அதுவரைக்கும் ஒருவருடம் பூர்த்தியாயிற்று. அந்த ஒருவருடபரியந்தம் அம்பரீஷச் சக்கரவர்த்தியானவர் தூர்வாசருடைய தரிசனத்தை அபேக்ஷித்துத் தீர்த்தத்தையே ஆகாரமாகச் செய்துக்கொண்டிருந்தார். பிறகு தூர்வாசமகாரிஷியானவர் வந்துபோயின பின்பு, அந்த அம்பரீஷச் சக்கரவர்த்தியும் பிராமணர்களுக்குப் போஜனம் பண்ணிவைத்து, மிகவும் பரிசுத்தமான சேஷத்தைப் புசித்துத் திருப்திகரனானான். இப்படிப்பட்ட அனேக நற்குணங்களை யுடையவனான அந்த அம்பரீஷச் சக்கரவர்த்தியானவன் பரமாத்மாவாயும் பரப்பிர்ம்மமாயு மிருக்கிற வாசுதேவனிடத்தில் நன்றாகப் பக்திபண்ணித் தனக்குச் சமான குணங்களை யுடையவர்களான பிள்ளைகளிடத்தில் இராஜ்ஜியத்தை ஒப்புவித்துவிட்டுத் தபோவனத்தில் பிரவேசித்துப் பிரகிருதி குணங்களான சத்வ ரஜ ஸ்தமஸ் முதலான சகல காரியங்களை யெல்லாம்விட்டு ஆத்மாவான வாசுதேவனிடத்தில் மனதை நிறுத்தித் தவம்புரிந்தான். சிலநாள் கனிவர்க்கங்களும், சிலநாள் காய்களும், சிலநாள் கிழங்குகளும், சிலநாள் சருகுகளும், சிலநாள் வாயுவையும் பக்ஷணஞ் செய்துகொண்டி மிருந்து வெகுகாலஞ் சென்றபின்பு இனி ஒருவராலேயும் நிர்மிக்கப்படாததாயும் எக்காலத்திலும் அழியாததாகியும் நித்தியமாகியும் சத்தியமாகியு மிராநின்ற நிரதிசயானந்தமென்னும் பரமபதத்தை யடைந்தார்.

அம்பரீஷ சக்கரவர்த்தி சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநம:

மூன்றாவது

# கூர்மதாசர் சரித்திரம்.

துதி கவி.

வாணிலாமுறுவல் சிறுநுதல் பெருந்தோள் மாதரார்வனமுலைப்பயனே
பேணினேன் அதனைப்பிழையெனக்கருதிப் பேதையேபிறவிநோயறுப்பான்
ஏணிலேனிருந்தே னெண்ணினேனெண்ணி யிளையவர்கலவியின்திறத்தை
நாணினேன் வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய்.

சுலோகம்.

ஸ்ரீவத்ஸவசாம்திபு பூர்ணசந்த்ரம்
ஸ்ரீவெங்கடாசார்ய சுதம்மமேசம்
வஸ்ஸாலயசௌசில்ய குணம்புராசிம்
ஸ்ரீமனுருசிம்மார்யமஹம் நமாமி.

முதலாவது அத்தியாயம்.

சூரியபகவானுடைய சாரதியான அருணன் அம்சத்தால் கூர்மதாசராய் கால்களில்லாதவராய் பிராமணகுலத்தில் ஜனித்து வளர்ந்துவரும் சமயத்தில், நடக்க வயது வந்தபிறகு கால்கள் இல்லாதபடியால் நடக்க சாத்தியமில்லாமல் ஆமைபோல் பூமிமீது நகர்ந்துகொண்டிருந்தார். இவருக்கு ஐந்தாறு வயது வந்தபிறகு எவ்விடத்தில் ஹரிநாம சங்கீர்த்தன கோஷ்டி செய்கிறார்களோ, அவ்விடத்திற்கெல்லாம் பூமிமீது நகர்ந்துகொண்டே சென்று அங்கு அன்பர்கள் பாடுகின்ற கீர்த்தனைகளைக் கேட்டு ஆனந்த மடைந்திருந்தார். இவர் ஆமை போல் பூமியில் நகர்வதைக்கண்டு இவருக்குக் கூர்ம தாசர் என்று அக்காலத்தாரால் பெயர் உண்டாயிற்று. இப்படியிருக்க, ஒருநாள் ஓரிடத்தில் ஸ்ரீபண்டரிபுர மஹாத்மியத்தைப் படித்துக்கொண்டிருக்க, அதைக்கேட்டு ஸ்ரீபண்டரிநாதனைத் தரிசனம் செய்யவேண்டுமென்று அதிக அபேக்ஷை யடைந்து, அவ்விடத்திலிருந்தவர்களைப் பார்த்து, அன்பர்களே! யான் பண்டரிபுரம் போவதற்கு அபேக்ஷை யடைந்தேன். ஸ்ரீருக்குமணி நாதன் என்னை வரவழைத்துக்கொண்டு எனக்குத் தன்னுடைய சேவையைத் தருவாரா? என்று கேட்க, அதற்கு அங்கிருந்தவர்கள் கலீலென்று சிரித்து கால் இல்லாதவனுக்குப் பண்டரிபுரம் போவதற்கு எப்படி சாத்தியமாகும்? எங்களுக்கு அங்கம்பங்கமில்லாமல் நன்றாயிருக்கின்றது. ஈதில்லாமல் வயது அதிகமாயிற்று. பண்டரிபுரத்துக்குப் போகவேண்டுமென்கிற அபேக்ஷை யிருக்கின்றதே தவிர போவதற்குச் சாத்தியப்படவில்லை. அப்படியிருக்க நீ எவ்வாறு நினைத்த மாத்திரத்தில் போவாய்? என்று சொன்னார்கள். இதைக்கேட்ட கூர்மதாசர் துக்கித்து, ஐயோ! எனக்கு அரிதில் பெறக்கூடிய மானிட ஜன்மம் கிடைத்தும் பண்டரிபுரத்துக்குச் சென்று புண்டரீகவரதனைச் சேவித்து ஜீவன்முக்தி யடைந்த நாமதேவ் ஞானதேவ் முதலான பக்திமான்களுடைய கோஷ்டியை சேவிக்காமல்போனால் என் ஜென்மம் வியர்த்தமடையுமேயென்று தனது உள்ளத்தில்தானே எண்ணிக்கொண்டு உடனே பிரயாணப்பட்டு பூமிமீது நகர்ந்துகொண்டு அந்த நாளெல்லாம் இரண்டு நாழிகைதூரம் சென்றார். அவ்விடத்தில் ஆஞ்சநேயருடைய சந்நிதியைப் பார்த்து அதில் பிரவேசித்து தான் நடந்துவந்த அலுப்பைத் தீர்த்துக்கொண்டு அதிக பசியினால் மிகுந்த வருத்தமடைந்து, ஒ பண்டரிநாதா! ருக்மணியுல்லாசா! யானோ அஞ்ஞானன். ஆயினும் என்னை ரக்ஷித்துக் காத்தருளுமையா. எனக்கு ஆத்மபந்துக்கள் நீரே. உம்மைவிட யார் வேறு எனக்கு உளர் என்று பிரலாபித்துக்கொண் டிருந்தார். அந்தச் சமயத்தில் கூர்மதாசருக்குப் பகவான் ஒரு வர்த்தகனைப்போல் பிரத்தியக்ஷமாகி அப்பா! கூர்மதாசனே? உனக்குக் கால்கள் இல்லாதபடியால் இப்படி பிரயாசைப்பட்டு எவ்விடத்திற்குப் போகின்றாய்? அதைச் சொல்லுமென்று கேட்டார். அம்மொழியைக்கேட்ட கூர்மதாசர் ஐயா! யான் பண்டரிநாதனைச் சேவிக்க வேண்டுமென்கிற அபேக்ஷை யடைந்து அவனைத் தரிசிக்கப் போகின்றேன் என்று சொன்னார். அதற்கு அவ்வர்த்தகன் சந்தோஷமடைந்து, ஒ பிராமணோத்தமா! யானும் பண்டரிபுரத்துக்குப் போகின்றேன். நீ எனக்கு நல்ல துணையானாய் என்றார். அதனைக்கேட்ட கூர்மதாசர்

ஐயா! நான் காலில்லாதவன். ஆகையால், நான் எப்படி உமக்குச் சகாயமாவேன்? ஆனாலும், உமது நாடு எது? உமது பெயர் என்ன? என்று கேட்டவுடனே, அதற்கு அந்த வர்த்தகன் என் பெயரோ விடோபா, யான் பண்டரிபுரத்தில் வசிக்கும் வர்த்தகன் என்று சொன்னார். இதைக்கேட்ட கூர்மதாசர் ஐயா! உமக்குக் கால்கள் செவ்வையாய் இருப்பதால், சீக்கிரமாக நடந்துபோகிறீர். யானோ முடவனாகையால், எப்படி உம்முடன் தொடர்ந்து வருவேன்? என்று சொன்னான். அம்மொழியை வர்த்தகன் கேட்டு யானும் மெதுவாக நடந்து போகிறேன். நீ நிற்கும் இடத்தில் நிற்கிறேன். உம்மை என்னுடனே அழைத்துச் செல்கிறேன். நீ எதற்கும் சந்தேகிக்கவேண்டாம் என்று சொல்லி, கூர்மதாசரை சந்தோஷிக்கச்செய்து சமையல் செய்து தானும்புசித்துக் கூர்மதாசரையும் புசிக்கச் செய்து, அவருக்குத் தரிப்பதற்கு ஒரு வஸ்திரம் அளித்து அன்று இராத்திரி அவருடனேயிருந்து நித்திரைசெய்து உதயமானவுடனே கூர்மதாசரைப் பார்த்து நீர் மெதுவாக வாரும். இன்று இராத்திரிக்கு நீ சேரும்படியான ஸ்தலத்திற்கு யான் முன்னதாகச்சென்று சமையல் முதலாகிய கிரியைகள் செய்து வைத்திருக்கின்றேன். ஈதில்லாமல் யான் அநேகதினமாகப் பண்டரிபுரத்துக்கு யாத்திரை செய்யும் பரதேசிகளுக்கு அன்னபானாதிகள் கொடுத்து அவருக்குச் சகாயம் செய்துக் கொண்டிருப்பேன். இதுதான் எனது உத்தியோகம், என்று சொல்லி கூர்மதாசருக்கு வழிகாட்டித் தான் முன்னதாக நடக்கலுற்றார். அதன்பிறகு கூர்மதாசர் அன்று அஸ்தமானம் வரைக்கும் பூமியில் நகர்ந்து இரண்டு நாழிகைதூரம் சென்றபிறகு ஓர் கிராமத்துக்குச் சமீபமாக வந்தார். இதற்குள்ளாக அந்த வர்த்தகன் முன்பாகவே வந்து சாத முதலாகிய பண்டங்களை சித்தஞ் செய்துக்கொண்டு கூர்மதாசர் வந்தவுடனே அவருக்கு அன்னம் பரிமாறி வேண்டிய உபசரணைசெய்து, அந்த இராத்திரி அவருடனே வசித்து மறுநாள் உதயமானவுடனே தான் முன்னதாகச் சென்றனர். பிரதிதினமும் கூர்மதாசர் அஸ்தமானகாலத்தில் சேரும்படியான கிராமங்கள்தோறும் பகவான் இவ்வாறாக வந்து அன்னமளித்து அவருக்கு வேண்டிய உபசரணைகள் செய்து கூர்மதாசர் சாயங்காலவேளையில் சேருமிடத்தில் கிராமமில்லாவிட்டால் தன்னுடைய சங்கற்பத்தால் கிராமத்தை நிர்மித்து, அவரை இதுபோலவே ஆதரித்துக்கொண்டு வந்தார். இப்படியாக கூர்மதாசர் நாலுமாதமாக பூமியில் நகர்ந்துகொண்டு கார்த்திகைமாதத்தில் பண்டரிபுரத்திற்கு பதினன்குநாழிகை தூரத்திலிருக்கும் பஹுளாபுரம் வந்துசேர்ந்தார். இந்தக் கிராமத்திலிருக்கும் பிரஜைகளெல்லோரும் பண்டரிபுரத்தில் நடக்கும் படியான கார்த்திகைசுத்த ஏகாதசி உற்சவத்தைச் சேவிக்கும்பொருட்டு மனங்கொண்டு தசமியன்று புறப்பட்டார்கள். இதைப் பார்த்துக்கொண்டிருந்த கூர்மதாசர் ஐயோ! எனக்குக் கால்களிருந்தால் இவர்களுடன் கூடச்சென்று உற்சவத்தைச் சேவித்து வரலாமே? யான் முடவனாகயிருக்கின்றேனே? இதற்கு நான் என்னசெய்வேன்? என்று துக்கித்து அதிக துரிதமாய் போகின்றவர்களைப் பார்த்து ஐயா! சாதுக்களே? நீங்கள் பண்டரிபுரத்துக்குப் போகிறீர்களல்லவா? ஆம். ஆகையால் நீங்கள் என்மீது கிருபைபுரிந்து பண்டரிநாதனுக்கு எனது வந்தனங்களைச்சொல்லி அநாதியாயும் பரதேசியாயும் கால்களில்லாதவனாயும் இருப்பதால் அடியேனுக்கு ஏகாதசியன்றைக்குப் பகவானுடைய சேவையைக் காண அபேக்ஷையிருந்தும் பிரயோசனப்படவில்லை இதல்லாமல் இந்தப் பஹுளாபுரத்துக்கும் பண்டரிபுரத்துக்கும் பதினான்குநாழிகை தூரமிருக்கிறதாம். இவ்வளவையும் நான் கடந்து பண்டரிபுரத்துக்கு வந்து சேர்வதற்கு ஏழுநாள் பிடிக்குமே; ஆகையால், அநாதைகளுக்குப் பந்துவாயும் கருணை சமுத்திரனும் இருக்கின்ற பண்டரிநாதனைச் சேவிப்பதற்கு, சாதகபக்ஷி மேகஜலத்தை அபேக்ஷிப்பதுபோல் யான் அபேக்ஷித்து இருக்கின்றேன். ஐயா! எனதுதுக்கத்தை ஸ்ரீவிடலநாதருக்குத் தெரியச்சொல்லுங்கள். தாயைவிட்ட கன்றுபோல் ஸ்ரீபாண்டுரங்கனுடைய சேவை அகப்படாமல் மனம் வருந்துகின்றேன். நாளையதினம் அந்தப் பக்தவத்சலன் எனக்குச் சேவைதரும்படி நீங்கள் எல்லோரும் பகவானுக்குப் புருஷதானம் செய்யுங்கள் என்று பிரார்த்தித்துச் சொன்னார். இதைக்கேட்ட அவர்களெல்லோரும் அதுபோலவே செய்கிறோமென்று சம்மதமடைந்து உறுதிகூறி பண்டரிபுரத்துக்கு வந்து சேர்ந்தமாத்திரத்தில் தீர்த்தமாடி சுவாமியுடைய சந்நிதியைச் சமீபித்துக் கோபுரத்தைக்கண்டு அனேக வந்தனங்கள் செய்து சந்நிதிக்குள் பிரவேசித்து அவ்விடத்தில் அந்தரங்கபக்தராகிய நாமதேவ் பகவான்மீது அரிநாமசங்கீர்த்தனம் பாடி நடனம் செய்துக்கொண்டு ஆனந்த சமுத்திரத்தில் மெய்மறந்து சொன்னதாவது:

சுலோகம்.

சமயோதானகாலஸ்ய பிராப்தோஹம்கேஸவத்வயி
ஸ்ரீமதருசிம்ஹசத்பக்திம்தேஹிஸர்வாகஹாரிணிம்

ஒ பகவானே! இதுதான் சமயம். இதுதான் சமயம். இச்சமயத்தில் வந்து எனக்கு ஏதாகிலும் கொடுக்கவேண்டும். அதாவது சகலமான பாபங்களையும் சிக்கறுத்து உனது விஷயமாய்ப் பக்தியை எனக்குத் தரவேண்டும் என்று பலவாறு பிரார்த்தித்து, ஒ சுவாமி! தேவரீர் எனது இருதயத்தில் வசித்து உம்மை நீரே புகழ்ந்துக்கொண்டு அந்த கீர்த்தனைகளுக்கு நீரே ஆனந்தமடைந்து எனது பிராணபொருளாகி இருக்கின்றீர் என்று சொல்லி பக்திமான்களோடு கூடி ஆடிக்கொண்டு இருக்க இவர்களைக்கண்டு பரமானந்தமடைந்து இருக்கின்ற உருக்மணிலோலனை பகவான் பிரத்தியக்ஷமாகி நாமதேவையெடுத்து ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு முகத்தைத் துடைத்து அங்கிருந்த சாதுக்களைப் பார்த்து, ஒ பக்திமான்களே! நிவர்த்திதேவன் எனது தாசன். அவர் ஞானவைராக்கியத்தில் அசஞ்சலநிஷ்டனுய்த் தன் இருதயத்தில் என்னை மறவாமல் தியானித்துக் கொண்டிருக்கின்ருர். இந்த ஞானமோ அப்படி அனுபவத்திற்கு அபாரமான சமுத்திரமாகி யிருக்கின்றது. ஈதில்லாமல் சோபானதேவன்-ரோஹிதாசன்-கோராகும்பர்-வீசோபாகேசு-சோகாபரமானந்தன் - சோகாமேளன்-ஜகன்மித்திரநாதன்-சாரங்கதேவன் - சாகேசவதாசன்-நரஹரி-பானுதாசன், இவர்கள் இப்போது எனக்குப் பிரியமான பக்தரா யிருக்கின்ருர்கள். பீஷ்மன் ருக்குமாங்கதன்-அக்ரூரன் - உத்தவன்-அர்ச்சுனன்-பிரகலாதனன்-துருவன்-நாரதன்-இவர்கள் எல்லோரும் வெகுகாலமாய் எனக்குப் பிரியர்கள். இவர்கள் யாவர்களும் எனது அந்தரங்கத்தைச் செவ்வையாயறிந்தவர்கள். ஆனுலும் சர்வவிஷயத்திலும் விரக்தனுய் இந்த நாமதேவ் நடவடிக்கை அதிக அற்புதமாயிருக்கின்றது என்று சொல்லிக்கொண்டிருக்க, யாத்திரைவந்த பக்தஜனங்கள் துவஜஸ்தம்பத்தைக் கையால் பிடித்துக்கொண்டு, ஜெயஜெய என்று கோஷ்டி சொல்லிக்கொண்டு, தாளங்கள் தட்டிக்கொண்டு, பரமானந்தத்தில் மூழ்கி, உட்பிரவேசித்துச் சங்குசக்கரதாரனுய் நின்றுக்கொண்டிருக்கும் பகவானைத் தரிசனஞ்செய்து, பொற்பாதகமலத்தை நேத்திரத்தில் ஒற்றிக்கொண்டு, ஆலிங்கனம் செய்துக்கொண்டு, மெய்மறந்து, அநேகவிதமாய்த் தியானித்துப் பிறகு சுவாமியைக்கண்டு கூர்மதாசருடைய மனுேபீஷ்டத்தைத் தெரிவித்து, அவருக்குச் சேவை தரும்படி பிரார்த்தித்தார்கள். இதைக்கேட்ட பகவான் அவ்வரிய அன்பன்மீது சந்தோஷமடைந்து இன்றைக்கு எனக்கு நல்ல சுகுணமான தினமாகும். ஆகையால் எனது மனுேபீஷ்டம் இன்றைக்குப் பூரணமாயிற்று என்று சொல்லி ஞானதேவருக்கும் நாமதேவருக்கும் தான் கொண்டிருந்த அந்தரங்கத்தைத் தெரியச்சொல்லி அவர்களையும் தம்முடன் அழைத்துக்கொண்டு கூர்மதாசருக்குச் சேவைதருவதற்குச் சர்வ ஆடம்பரங்களுடன் பக்தர்கள்சூழ பிரயாணமாகினர். இவ்விதமாய் யாவரும் பிரயாணப்பட்டுப் போகையில் பெண்டி என்னும் கிராமத்தைச்சமீபித்து அதைப் பார்த்தவுடனே அவ்விடத்தில் ஒரு நந்தவனத்தைப் பரிபாலித்துக்கொண்டிருந்த சாமந்தனென்னும் பக்தனைக் காணவேண்டுமென்று பகவானுக்கு இச்சையுண்டானபடியினுல் அந்த நந்தவனத்திற்குச் சமீபமாய் வந்தார். அந்தக்காலத்தில் ஞானதேவரையும் நாமதேவரையும் பார்த்து நான் இந்த நந்தவனத்திற் குள்ளாகச்சென்று, கொஞ்சநேரமிருந்து வருகின்றேன். நீங்கள் இங்குதானே இருப்பீர்கள் என்று கட்டளை செய்துவிட்டு அந்த நந்தவனத்திற்குள் பிரவேசித்துச் சாமந்தனைக்கண்டார். அவனுே சதா பகவத்பக்தி செய்துக்கொண்டிருப்பதனுல் பகவானைக்கண்டமாத்திரத்தில் அவருடைய இரண்டு பாத பங்கஜங்களை இருகரத்தால் பிடித்துக்கொண்டு ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கி ஒ சுவாமி! எனது பாக்கியமே பாக்கியம். (பத்பீயாமபிகமாச்சைவ ஸ்நேஹசந்தர்களே நசி) என்ற வாக்கியம்போல் தனியாக நடந்து வந்து என்னுடைய சிநேகத்தைச் சந்தித்தீர் என்று சொல்லி ஆனந்தப்பரவசராய் புனஃ புன பிராணயம் செய்து, பக்தவத்ஸலா! எந்த பக்தருடைய நிமித்தமாய் இப்படி கஷ்டப்பட்டுப் போகிறீர்? என்று சொல்லி சுவாமியைத் தியானிக்க ஆரம்பித்தார்.

சுலோகம். [தில்

கிருஷ்ணகிருஷ்ண கிருபாளோத்வம் அகதீநாம்கவ
சம்சாரார்ணவமக்காணும் பிரசித்தபுருஷோத்தமா.

ஒ சுவாமி! லோகத்தில் எல்லாஜனங்களும் சம்சார மென்னப்பட்ட சமுத்திரத்தைக் கடக்கத் தெரியாமல் துக்கமடைந்திருக்கின்ருரே. அப்படிப் பட்டவர்க்கே நற்கதியைக்காட்டி அருள்செய்வீர் என்று சொல்லி இப்படி அநேகவிதமாய்த் தியானஞ்செய்தார். இதைக்கேட்ட பகவான், ஒ சாமந்தா! இந்தச்சமயத்தில் என்ன பூஜை செய்கின்ருய்? அது இருக்கட்டும். என்னைப் பிடிப்பதற்கு இரண்டு

திருடர்கள் துரத்திக்கொண்டுவருகின்றார்கள். அவர்கள் கையில் அகப்படாமல் ஒளித்துக்கொள்வதற்கு உன்னிடம் ஓடிவந்தேன். ஆகையால் எனக்குக் கொஞ்சம் இடம்தாரும் என்றுசொல்லி இன்னுஞ் சொல்லுகிறார். எப்படியென்றால் கிரகணம்பிடிக்குஞ் சமயத்தில் அந்தச் சூரியனுக்கு அவரவர் செய்யப்பட்ட அர்க்கியம் உருகி, காத்ததன்மையைப்போல் இந்தச்சமயத்தில் நீ செய்யும் பூஜை எனக்கு ருசிப்படமாட்டாதென்று சொன்னார். இதைக்கேட்ட சாமந்தன், ஓ வாசுதேவா! நீர் எவ்விடத்தில் ஒளித்துக்கொள்ளுகிறீர். நீர் ஒளித்துக்கொள்வதற்கு ஒரு இடமாகிலும் எனக்கு அகப்படவில்லை. நீர் இல்லாத விடம் கொஞ்சமாகிலும் தென்படவில்லை. எங்கு தேடினாலும் நீர் ஒளித்துக்கொள்வதற்கு இடம் கிடையாது. அனந்தகோடி பிரமாண்டங்கள் உன்னுள் அடங்கியிருக்க உன்னை ஒளித்துவைப்பதற்கு ஓர் இடம் உண்டா? என்றுசொல்ல, இதைக்கேட்ட பகவான் சாமந்தனைப்பார்த்து உனது அகண்ட ஞானத்தை இப்போது வலைபோல் வீசாதே. இச்சமயத்தில் என்னை எவ்விடத்திலாகிலும் ஒளித்து வையுமென்று சொன்னார். அப்போது சாமந்தன் ஓ சுவாமி! இந்தத்தோட்டத்தில் யான் வசிக்கும்படியான குடிசையிருக்கின்றது. அங்கு உமக்கு இஷ்டமிருந்தால் ஒளித்துக்கொள்ளுமென்றான். இதைக் கேட்டமாதவன் இந்த இடத்தைவிட அதிகமறைவான இடம்வேண்டுமென்றுகேட்க, அதைக்கேட்ட சாமந்தன்சந்தோஷமடைந்து ஓ லட்சுமி உல்லாசா! உனது இஷ்டம் அப்படியிருந்தால் உம்மை ஒளித்துவைப்பதற்கு எனது இருதயமில்லாமல் வேறிடம் கிடையாது. இஃதல்லாமல் உம்மை எனது இருதயகமலத்தில் ஸ்திரமாய் வைத்துக்கொள்ள வேண்டுமென்று அனேகதினமாக என் உள்ளம் பூரித்துக்கொண்டிருந்ததென்று சொன்னான். உடனே பகவான் எனக்கு இப்போது அதுதான் தகுந்த இடம் என்று சொல்லி யான் உனது இருதயத்திற்குப் பிரவேசிப்பதற்குக் கொஞ்சம் இடம் தரவேண்டும் என்றுசொன்னார். உடனே அந்தக்ஷணம் சாமந்தன் சந்தோஷமடைந்து பகவான் என் இருதயத்தில் பிரவேசிப்பதற்கு நான் என்னபாக்கியம் செய்தேனோ? என்று சொல்லி அவ்விடத்திலிருந்த புல்வெட்டியை எடுத்துத் தனது மார்பைக் கீறி சுவாமி! இப்போது என்னுடைய இருதயவீட்டில் சீக்கிரமாகப் பிரவேசியுங்கள் என்று சொன்னான். அதைக்கேட்ட ஸ்ரீஹரி ஆனந்தமடைந்து, அதுபோலவேசெய்தார். அப்பொழுது சாமந்தன் இதர மனிதர் இதை அறியாமலிருக்கும்பொருட்டு தனது இருதயஸ்தலத்தை ஒரு வஸ்திரத்தால் கட்டிக்கொண்டு இருந்தார். இப்படியிருக்க, உட்பிரவேசித்த பகவான் சந்தோஷத்தோடு ஓ சாமந்தா! இப்போது நீ செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரம் செய்வதற்கு அறியேன். சர்வ வியாபகனான பண்டரிநாதன் சாமந்தனுடைய இருதயத்தில் ஒளித்துக்கொண்டிருப்பது எப்படியென்றால், கிருஷ்ணாவதாரத்தில் ததிபாண்டனுடைய பாண்டத்தில் ஒளித்துக்கொண்டு இருந்ததுபோலாம். பிறகு பகவான் ஓ சாமந்தா! எனக்கும் உனக்கும் ரூபபேதமே தவிர சொரூபபேதம் ஒன்றும் கிடையாது என்று சொன்னார். சாமந்தன் அதுகேட்டு அனந்த கல்யாண குணநிதி! உம்மைவிட்டு க்ஷணநேரமாகிலும் ஜீவித்து இருக்க மாட்டேன். யான் எந்த ஜென்மம் எடுத்தாலும் தம்மை மறக்காதபடிக்கு அனுக்கிரகிக்கவேண்டும் என்று பிரார்த்தித்தார். இப்படி சாமந்தனும் பகவானும் ஆனந்தபரவசமடைந்து சரசசல்லாபங்கள் செய்துக்கொண்டிருக்கும் சமயத்தில் அத்தோட்டத்திற்கு வெளியிலிருந்து பகவான் வரவை எதிர்நோக்கிக்கொண்டிருந்த நாமதேவ், ஏன் பகவான் வரவில்லை? என்று சோகாக்கிராந்தனாய் கண்ணீர் விட்டுக்கொண்டு சரீரம்நடுக்கலுற்று ஒன்றுந்தோன்றாமல் முகத்தில் வேர்வைதட்ட பகவானுடைய திருவடிகாண குறிப்பிட்டுக்கொண்டு, ஓ பிராணநாதா! என்னைவிட்டு நீர் எங்கு சென்றீர்? நீங்கள் என்னை இப்படி கைசோர விடுவீரென முன்னமே தெரிந்திருந்தால் உமது பீதாம்பரத்திற்கும் எனது அங்கவஸ்திர முனைக்கும் முடிபோட்டுக்கொண்டு ஏமாந்திருக்காமல் இருப்பேனே; உமது கபடம் தெரிந்திடாமல் மோசம்போனேனே என்று சொல்லிக்கொண்டு அந்த நந்தவனத்திற்குள் பிரவேசித்து சாமந்தனைக்கண்டு ஓ பக்தாக்கிரகண்யா! ஜகந்நாதன் இவ்விடத்திற்கு வந்தாரா? அவரைக்காணாமல் என் பிராணன் தத்தளிக்கின்றது. அந்த மாயா விநோதன் எவ்விடத்தில் ஒளித்தாரோ? என்மீது தயைபுரிந்து அவரைக் காட்டுமென்று பிரலாபித்தார். இதைக்கேட்ட சாமந்தன் மெய்ம்மறந்து பகவத்சொரூபத்தில் தன்மயமாய் லயித்து, ஆனந்த பரவசனாய் இருப்பதால் நாமதேவருக்குப் பதில் மொழி தராமல் மௌனமாயிருந்தார். அந்த அனுபவத்தைப் பார்க்கும் நாமதேவர் தன்னுடைய ஜீவேஸ்வரனான ஸ்ரீருக்மணிகாந்தன் சாமந்தனுடையமார்பில் ஒளித்திருக்கின்றாரென நிச்சயித்துக்

கொண்டு யான் தீனனென்றும் என் பிராணபத மான தெய்வத்தை உனது மார்பில் ஒளித்துவைத் திருக்கின்றாய். ஆகையால் என்மீது கருணைகூர்ந்து அந்த மகானுபாவரை ஒருவிசை எனக்குக்காட்டி னால் அவருடைய திவ்விய மங்கள விக்கிரஹத்தைச் சேவித்து என் துக்கத்தைத் தீர்த்துக்கொள்ளு வேன் என்று சொல்ல, நாமதேவருடைய மொழி களைப் பகவான் கேட்டு, ஓ சாமந்தா! என் பிராண சிநேகிதனாகிய நாமதேவனுக்கு என்தரிசனம் தரும் படிசொல்லி அந்த நாமதேவரைப்பார்த்து இப் போது யான் சாமந்தனுடைய மார்புகிரஹத்தில் மூடப்பட்டிருக்கின்றேன். யான் வெளியில் வருவ தற்குச் சாத்தியப்படாமல் இருக்கின்றேன். இது எப்படியென்றால் பட்டுப்பூச்சி தனது வாயால் கூடு கட்டிக்கொண்டு பிறகு அதைவிட்டு வெளியில் வரு வதற்குத் தெரியாததுபோல் யான் சாமந்தனுடைய மார்பில் அகப்பட்டுக்கொண்டு மறுபடியும் வெளி யில் வருவதற்குத் தெரியாதவனாய் இருக்கின்றேன். என்று சொன்ன மொழியைக்கேட்டு நாமதேவன் ஜலத்தில்விட்ட மீன்போல் தத்தளித்துக்கொண்டு இருப்பதைப் பார்த்துச் சாமந்தன் ஓ நாமதேவா! உன்மீது பகவானுக்குக் கிருபை அதிகரித்திருக்கின் றது. உனது புண்ணியவிசேஷத்தால் கமலலோச னன் சொன்னதாவது, நாமதேவன் என் பிராண சிநேகிதனென்று சொல்லிக்கொண் டிருக்கின்றார். உனது பாக்கியம் ஏதென்று சொல்லலாம். உனது மகிமை பண்டரிநாதரே தெரிந்தவரென்றுசொல்லி, நாமதேவருடைய பாதத்தின்மீது விழுந்து ஆனந்த பரவசராகி இருந்தார். அதுகேட்ட நாமதேவர் பக வானைப்பார்த்து எனது பிராணனுக்குப் பிராண னான கல்யாண குணநிதே! இப்பொழுது உன்னை எனக்குக் காட்டவேண்டுமென்று சொல்லி மிகவும் சங்கடம் அடைவதைச் சாமந்தன்கேட்டு பகவானு டைய உறுதியையறிந்து தனது மார்பில் கட்டிக் கொண்டிருந்த வஸ்திரத்தைச் சீக்கிரமாக அவிழ்த் தான். அப்பொழுது பக்தவத்சலனான பாண்டுரங் கன் நாமதேவருக்குப் பிரத்தியக்ஷ தரிசனந்தந்து நிற்கையில் அந்த விட்டல்நாதனுடைய பாதாம் புஜத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு விக்கி விக்கி யழுதுக்கொண்டிருப்பதைப் பகவான் அறி ந்து அவனை யெடுத்து தன் மார்போடணைத்துக் கொண்டு தாம் தரித்திருந்த பீதாம்பரத்தால் அவ னுடைய முகாரவிந்தத்தைத்துடைத்து நல்லமொழி களாடி ஆசீர்வதித்துப் புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டு, அவரைத் தன் கரத்தால் பிடித்துக்கொ ண்டு தோட்டத்திற்கு வெளியேவந்து அவருடன் அங்கு நடந்த அற்புதங்களையெல்லாம் ஞானதேவ ருக்கும் சொல்லி இனி கூர்மதாசருக்குச் சேவை கொடுப்பதற்குச் செல்லுவோம் என்று சொல்லி சாமந்தனைக்கூட அழைத்துக்கொண்டு நால்வரு மாய் நடக்கும்சமயத்தில் கூர்மதாசருக்கு இடது நேத்திரமும் இடது புஜமும் பதறலாயின. அதனால் அவர் சந்தேகமடைந்து இன்றையதினம் பகவான் நமக்குத் திருவருள் செய்வாரென்று எண்ணிக் கொண்டிருக்கும் சமயத்தில் நால்வரும் கூர்மதாசரு க்கு எதிராகவந்து நின்று, ஓ ஐயா! தாங்கள் இவ் வளவு கஷ்டத்தோடு எங்கு செல்லுகின்றீர்? என்று கேட்டார்கள். இம்மொழி கேட்ட கூர்மதாசர் ஐயா! இன்று ஏகாதசி ஆகையால் ஸ்ரீ பாண்டுரங் கேஸ்வரனை சேவிக்க வேண்டும் என்று போய்க் கொண்டிருக்கின்றேன். இதுவல்லாமல் பூர்வ கர்ம வசத்தால் கால்கள் இல்லாதவனானேன். இப்படி யிருப்பதால் அவ்விடத்திற்குப் போவதற்குச் சாத் தியப்படவில்லை. தீனபந்துவான அப்பகவான் இங்குவந்து சேவை கொடுத்தால் பிழைத்திருப் பேன். இல்லாவிடில் என் பிராணனைப் போக்காம லிருக்கமாட்டேன். இது நிச்சயமென்று சொல்லி னார்.

### இரண்டாவது அத்தியாயம்,

### பகவான் கூர்மதாசருக்குத் தன் சுயரூபத்தைக் காட்டியது.

இந்த வைராக்கியத்தைக்கண்டு பகவான் சந் தோஷமடைந்து கூர்மதாசருக்குத் தமது நிஜரூபத் தைக் காட்டியருளினார். அக்காலத்தில் கூர்மதாசன் தரித்திரனுக்குத் தனம் அகப்பட்டதுபோல் சந் தோஷமடைந்து தாபம்வெறுத்து மாயா கல்மிஷங் களைக் கொய்து ஏகாந்தசித்தனாய் நின்று மெய்ம் மறந்து தன் தேகம் இன்னதென்று அறியாதபடிக் குச் சந்தோஷசாகரத்தில் மூழ்கி சாஷ்டாங்க நமஸ் காரம் செய்து பொற்பாத பங்கயங்களைப் பிடித் துப் பூமியில் கவ்வினவர் எழுந்திருக்காமல் இருந் தார். இதையறிந்த பகவான் அந்த பரமபக்தனைத் தனது அஸ்தத்தால் எடுத்து மார்போடணைத்துக் கொண்டு சந்தோஷகரமாய் உனக்கு என்னவரம் வேண்டுமோ அதைக்கேளும் என்று சொன்ன வுடனே, கூர்மதாசர் மனங்கரைந்து பகவானைத் தியானிக்கலானார்.

எண்சீரடி ஆசிரியவிருத்தம்.

படமாட்டேன் இக்கஷ்டத்தைப் படமாட்டேனையா
படமாட்டேன் புவிசுகத்தைப் பண்புடனேவிட்டேன்
விடமாட்டேன் உன்பதத்தை விட்டுயானும் கெடேன்
விண்ணவர்கள் போற்றிசெய்யும் எங்கள் திருமாலே
கெடமாட்டேன் ஒருவர்சொல்லைக் கேட்டுஇனிதிரிந்து[ய்
கெட்டதெல்லாம் போதுமினி இஷ்டம்வைத்துக்காவா
கெடமாட்டேன் வேறொருவரை நம்பியானுந்திரியேன்
நாதகுண வேதசுடர் நாராயணவந்தீர்.

சுலோகம்.

ஸ்ரீநாதநாராயணவாசுதேவ
ஸ்ரீகிருஷ்ணபத்திபிரயசக்கிராயணே
ஸ்ரீபத்மநாபாச்சிதகைபாரே
ஸ்ரீராமபத்மாக்ஷஹரேமுராரே.

இவ்விதமாய்த் தியானித்து ஒ பக்தவச்சலா! யானோ அகிஞ்சகன், கதி வேறில்லாதவன், நிர்ப்பாக்கியன், ஆகையால் என்மீது கருணைசெய்து எனக்குச் சேவைதந்தீர். அது எப்படி என்றால் பிரமத்திற்கு எட்டாத மேலானபதத்தை யான் பிரார்த்திக்க அதிகலாபம் கிடைக்கும். இதைவிட வேறு லாபமுண்டோ? அது எப்படியென்றால்:—

சுலோகம்.

ஸ்ரீவல்லபேதி வரதேதி தயாபரேதி
பக்தபிரயேதி பவலும்டன கோவிதேதி
நாதேதி நாகசயநேதி ஜகன்னிவாசே
த்யாலாபனம் பிரதிபதம் குருமேமுகுந்தஃ

புத்தி முத்தி தரும்படியான ஒ சுவாமி! ஸ்ரீவல்லபா! உமது நாமங்களை எத்தினமும் யான் தியானிக்கும்படி கருணித்தீரே! இதுவே எனக்குக் கோடி வரப்ரசாதம். உமது நாமாமிருதம் தவிர இதரமான போகபதார்த்தங்களை யான் அறியேன். இப்படி யான் உம்மைப் பிரார்த்திக்க வேண்டிய காரணம் ஒன்றுமில்லை. ஆனாலும் அபரார்த்தமான என்னைப் பக்தனென்று அபிமானித்து, ஜீவன் முக்தியடைந்த ஞானதேவர்-நாமதேவர்-சாமந்தர்-இவர்களுக்கு முன்னே எனக்கு ஒருவரம் கொடுக்க வேண்டும். உம்மீது அபேக்ஷித்து வரம் தாருமென்று கேட்டதற்கு, எனக்குத் தர்மமல்ல; தேவரீர் மனக்குரோதம் வராதபடிக்கு ஒரு வார்த்தை கோருகின்றேன் அது என்னவென்றால்:—

சுலோகம்.

யான்யானிகர்மாணிசரோதிஜந்து
தான்யேவபாபாநிபவந்திதஸ்யாஃ

ஒ பகவானே! மானிடரே எக்காரியங்களும் செய்துக்கொண்டிருக்கின்றார். அவையாவும் பாபங்களாகவே இருக்கின்றன. இப்படிப்பட்டவர் உம்மை எப்படி அறிந்துகொண்டு உபாசித்து உஜ்ஜீவித்திருப்பார்? ஒ கிருபாநிதியே! என்மீது சித்தம் வைத்து எனக்குக்காட்டிய இந்த ரூபத்தை எல்லோரிடத்திலும் காட்டி இவ்விடத்திலேயே வசித்துக்கொண்டிரும். எப்படியென்றால் அவரவர் தாய் வயிற்றிலிருந்து ஜனித்தவுடனே ஏதுந்தெரியாத பாலகனுக்குத் தாயானவள் ஔஷதங்களைக் கொடுத்துக் காப்பாற்றுவதுபோல பகவத்சொரூபத்தை மறந்து தமக்கு குணாதிசயமான பகவத்கைங்கிரியம் விட்டு அநாதையாய் சூன்யனாய் சமுசாரகோள சமுத்திரத்தில் மூழ்கிக் கரையேறுதற்கு அறியாமல் தாபந்திரயத்தால் வருந்திக்கொண்டு சமுசாரிகள் படும்படியான தாபத்தைத் தீர்க்கும்பொருட்டு நீர் இங்கு வசித்து உமது நிஜரூபதரிசனம் தந்து உமது நலமான பாதத்தைத் தியானிக்கும் பக்தரைக் காப்பீர். இதுதவிர, யான் இதரமான வரம் கோரவில்லை என்று சொன்னார். இதைக்கேட்ட பகவான் சந்தோஷமடைந்து புன்சிரிப்புக்கொண்டு அவ்விடத்தில் ஓர் சந்நிதி உண்டாக்கி, அதில் தாசன் வாக்கியம்போல் ஸ்தாபிதமானார். ஆனாலும் கூர்மதாசர் பக்திவைராக்கியத்தை இப்பவும் பிரசித்தம் செய்துக்கொண்டிருக்கின்றார். இந்த பஹுளாபுரம் பண்டரி க்ஷேத்திரத்துக்குச் சமீபமாகி, பக்த ஜனங்களால் கொண்டாடப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆஷாடகார்த்திகை மாதங்களில் பண்டரிபுரத்தில் புண்டரீகவரதனைச் சேவிப்பதற்கு வரும்படியான சாதுஜனங்கள் உற்சவகாலத்தில் பஹுளாபுரத்திற்குச்சென்று, கூர்மதாசவரதரான பகவானைச் சேவித்துச் சேவைசெய்துக்கொண்டிருப்பார். இக்கிரமமானது தாரகபோஷகமான அன்னபானாதிகள் அநுசரித்த பிறகு, யோக்கியமான சந்தன, குங்கும, தாம்பூலம் அநுசரிப்பதுபோ லிருக்கின்றதென்று சொல்லத்தகுந்ததாய் இருக்கின்றது, என்று நாபாஜிசித்தர்சொல்ல, இதைக்கேட்டிருந்த சித்தர், சுவாமி இன்னும் இருக்கின்றவருடைய சரித்திரங்களையுஞ் சொல்லுமென்று கேட்க, நாபாஜி சித்தர்சந்தோஷமடைந்து சொல்லத்தொடங்கினார்.

கூர்மதாசர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணபரப்ரம்மணேநம:

நான்காவது

# ராகா சரித்திரம்.

விருத்தம்.

இமையவர்முதலிய வெண்ணிறந்தோர்துதி
அமைபுரைதோளியெம்மன்னை ருக்மணி
யெமையும்புரந்தருள் செய்குவனிங்குநன்
கமையுப்ராகாவை யாண்டமைபோலரோ.

முதலாவது அத்தியாயம்.

கேட்டீர்களோ, சித்தர்களே! நீங்கள் சகல சாஸ்திரங்களையும் உணர்ந்தவர்களாகையால் பக்தி வைராக்கியத்தில் ஏகமாய் நின்று என்னைப் பக்தர்களுடைய சரித்திரங்களைச் சொல்லும்படி கேட்டீர்கள். ஆகையால் சொல்லுகிறேன் கேளுமென்று சொல்லிச் சிறிதுநேரம் அசைவற்றிருந்து ஸ்ரீபகவானைத் தியானித்துப் பின்னர் சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால், ஸ்ரீபண்டரிபுரத்தில் பரம வைராக்கிய சீலனான இராகா என்ற பெயரடைந்த ஒரு குயவன் இருந்தான். அவன் பதிவிரதாசிரோமணியாகிய பாகா என்று பெயருடைய பத்தினி ஒருத்தியை விவாகம் செய்துகொண்டான். இந்த இருவரும் இல்லறநெறி தவறாமல் கூடி வாழும் நாளில், இவர்களுக்குப் பகவான் கிருபையால் அதி ரூபவதியான பங்கையென்ற ஒரு பெண்ணைப்பெற்றனர். இவர்கள் தினந்தோறும் மண்பாண்டங்கள் செய்து வியாபாரஞ்செய்துகொண்டு காலத்தைக் கழித்துக்கொண்டிருந்தார்கள். இப்படியிருக்க ஒரு காலத்தில் மண்பாண்டங்கள் செய்து சுடாமல் ஒரு வீட்டில் சேர்த்துவைத்திருக்க, அதில் ஒரு பாண்டத்தில் ஒருபூனை கர்ப்பமடைந்து குட்டிகளை அப்பாண்டத்தில் ஜனித்துத் தினந்தோறும் அவைகளுக்கு ஆகாரம் தேடிக்கொண்டு வந்து கொடுத்துக் காப்பாற்றிக்கொண்டிருந்தது. இப்படியிருக்க இக்குறியை அறியாதபடிக்கு இராகா என்பவன் பாண்டங்களைச்சேர்த்து சூளையடுக்கித் தீயிட்டு நின்றான். இப்படித் தீயிடவே, அந்த அக்கினியெங்கும் வியாபித்து நான்கு பக்கமும் எரிந்துக்கொண்டிருக்குஞ்சமயத்தில் ஆகாரம் சம்பாதிப்பதற்குச் சென்றிருந்த தாய்ப்பூனைவந்து தன்னுடைய குட்டிகளைக் காணாதபடியால் அந்த சூளைக்குச் சமீபமாக வந்து கூச்சலிட்டது. அச்சமயத்தில் ராகா என்னும் குயவன் அந்தப்பூனை கூவிக்கொண்டிருப்பதைப் பார்த்துச் சற்றுநேரம் யோசித்து அந்தோ இது என்னபாவம்! இந்தப்பூனையுடைய குட்டிகள் சூளையில் அகப்பட்டுக்கொண்டதுபோ லிருக்கின்றது. ஆகையால் இந்தப்பூனை இச்சூளையைச் சுற்றிச்சுற்றி அழுகின்றதென்று நிச்சயித்துத் தன் தலையை மோதிக்கொண்டு தன்னுடைய பத்தினியைப் பார்த்து, அடிமாதரசே! நமக்கு இக்காலத்தில் என்ன பாவம் சம்பவித்தது? இதோ நிற்கின்ற பூனை தனது குட்டிகளை இந்தப்பாண்டத்தில் சேர்த்திருப்பதால் தெரியாமல் அப்பாண்டங்களை எல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துத் தீயிட்டுவிட்டோமே! இப்போது இப்பூனை சூளையைச் சுற்றிச் சுற்றி வந்து கதறுகின்றதே! இந்தத் துக்கத்தைப் பார்க்க என் மனம் சகிக்கவில்லை என்று சொல்ல, இதைக் கேட்ட அப்பதிவிரதா சிகாமணியாகிய பாகா என்பவள் தானும் கண்ணீர் தாரைதாரையாய் விட்டு அழ ஆரம்பித்தாள். இப்படியாக ஸ்திரீ புருஷர் இருவரும் ஆகாரமில்லாமல் அழுதுக்கொண்டிருந்தார்கள். அச்சமயத்தில் புருஷனானவன் மனோதிடங்கொண்டு ஆபத்பாந்தவனான பண்டரிநாதனைத்தியானித்து, ஓ சுவாமி! கருணா கடாக்ஷா! அனுதரக்ஷகா! அரக்குமாளிகையில் அகப்பட்ட பாண்டவரைக் காத்ததுபோலவும், இரண்யகசிபனால் அக்கினியில் தள்ளப்பட்ட பிரகலாதனைக் காத்ததுபோலவும், இந்தப் பூனைக்குட்டிகளைப் பரமகிருபை வைத்து இரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து, மறுபடியும் பகவானைத் தியானித்து, இந்தப் பூனைக்குட்டிகளுடைய விபத்துகளை உண்டாக்கிய இந்த வியாபாரத்தை இனிமேல் யான் செய்கிறதேயில்லை. அதன் கதி பூர்வீகமாய் லபித்த இந்த ஆபத்தைத்தீர்த்து ரக்ஷியும் என்று பகவானைப் பிரார்த்தித்துக்கொண்டு,

தன்தேகம் மெய்மறந்து, பூமியில் விழுந்து புரண்டு வருத்தப்பட்டுக்கொண் டிருந்தார். இப்படி யிருக்க இவருடைய பத்தினியாரும் வயிற்றில் மோதிக்கொண்டு ஓ, பக்தவத்ஸலா! ஆபத்பாந்தவா! அனுதரக்ஷகா! தீனபந்து! அடியேங்களுக்குச் சீக்கிரமாய்வந்து ரக்ஷித்தருள்புரியுமென்று பகவானைக் குறித்து அநேகவிதமாய் பிரார்த்தித்துக்கொண்டு கண்ணீர்சொரிய அழுதுக்கொண்டிருந்தார்.

இவர்கள் இப்படியிருக்க, அந்தச் சூளையானது இரண்டு இராத்திரி வெந்துக்கொண்டிருந்து, மூன்றுவதுதினம் தணிந்தது அச்சமயத்தில் பாண்டத்திற்குள்ளிருந்த பூனைக்குட்டிகள் தனது தாயின்தொனியைக் கேட்டமாத்திரத்தில் கூவ ஆரம்பித்தது. அந்தச் சப்தத்தை ராகா என்பவன்கேட்டு பரமானந்தமடைந்து, சூளையை அவிழ்த்துப்பார்க்கையில் அக்குட்டிகளிருந்த பானைமாத்திரம் வேகாமல் பச்சையாகவேயிருந்தது. அக்காலத்தில் ராகா அப்பானையை எடுத்து, அதற்குள்ளிருந்த மூன்று குட்டிகளையும் அதனுடைய தாயினிடத்தில்விட்டு ஸ்ரீமத்பண்டரிநாதனுடைய கிருபாகடாக்ஷத்திற்கு சந்தோஷமடைந்தார். இந்த மூன்று ராத்திரியும் நிர்ப்பாக்கியமாயிருந்த இரண்டுபேருக்கும் பூனைக்குட்டிகளைக் கண்டமாத்திரத்தில் துக்கம் தெரியாமல் முகமானது தெளிவை அடையலாயிற்று ராகா என்பவன்,

சுலோகம்.

அக்யமே சபலம் ஜன்மம்
சுப்ர பாதாச மேனிசா.

என்று சொல்லி தனது பத்தினியைப்பார்த்து எனது வைராக்கியத்திற்குச்சம்மதமாய் என்பாவங்களைச் சிக்கறுத்து என் பந்துவாகிய புண்டரீகவரதனுடைய பாதபத்மங்களுக்குப் ப்ரணுஸ்யம் செய்கிறேனென்று சொல்லி, அவ்வூரிலிருக்கப்பட்ட ஏழைகளை யழைத்து சர்வத்தையுஞ் சூறையிட்டுப் பத்தினி புத்திரிகளுடன் வீட்டைவிட்டு காட்டிற்குச் சென்றார்.

உ-வது காட்டிற்குச்சென்ற அத்தியாயம்.

அக்கானகத்தில் இரண்டு விறகுகட்டுகள் இருந்தன. அவைகளை யாரோ சேர்த்து வைத்தாரென்று மனதில் எண்ணாமல் ஒருவிறகைப்பொறுக்கி விற்று அதன்மூலமாக ஜீவித்துக்கொண்டும்,

சுலோகம்.

ரத்யாகர்படவிரசிதகந்தஃ
புண்யாபுண்யவிவர்ஜிதபந்தாஃ
யோகியோகநியோஜிதசித்தஃ
வவதேபாலோன்மத்தவதேவஃ

என்கிற வாக்கியப்பிரகாரம் தெருக்களில் விழுந்து கிடைக்கப்பட்ட கந்தைகளைத்தைத்து அதை உடுத்திக்கொண்டும், புண்ணிய பாபவர்ஜ்ஜிதமான மார்க்கத்தைவிட்டுச் ஜீவனம் செய்து, பாலியர்கள் போல காலங்கழித்துக்கொண்டு வந்தார்கள்.

இப்படியிருக்க ஒருநாள்தினம் ஓர் கடைக்குச் சமீபமாய்ப் போய்க்கொண்டிருக்கையில், அத்தெருவில் ஒரு கந்தைத்துணி விழுந்து கிடப்பதை ராகாவானவர் உடனே அதை அதிகபிரியத்துடன் எடுத்துக்கொண்டார். இதைப்பார்த்துக்கொண்டிருந்த ஒருவன் இத்துணியானது திவட்டிக்கு உபயோகமாகுமென்று சொன்னவுடனே மற்றவர்கள் இதை எடுக்கக்கூடாதென்றார்கள். அம்மொழியை உசிதமென்று அங்கீகரித்து அத்துணியை அவ்விடத்தில் எறிந்துவிட்டு ஒரு எச்சிலையை யெடுத்து மானத்திற்கு மறைவாய் வைத்துக்கொண்டார். அநேகமாகிய விரதத்திலிருந்தும் ஒருவரும் இந்த ராகா என்பவருக்குச் சமமாக மாட்டார்கள். இப்படியிருக்கையில், ஒருநாள் இவருடைய புதல்வியாகிய பங்கை என்னும் பெண்பாவை ஸ்நானம்செய்து பகவத்தாரணம் செய்துக்கொண்டிருக்கும் சமயத்தில், அப்பெண்ணுக்குச் சமீபமாக நாமதேவருடைய புதல்வி வேஷ்டியை சுத்தஞ்செய்துக்கொண்டிருந்தாள். அச்சலமானது அப்பெண்குழந்தைமீது விழவே அதைப்பார்த்து அடி அம்மா! வஸ்திர ஜலமானது என்மீது விழுகின்றது என்று சொன்னாள். இதைக்கேட்ட நாமதேவருடைய புதல்வி, அடி ஏண்டி! போடி! ஜாதியில் குயவராயிருந்தும் ஆசாரம் அதிகமாயிருக்கின்றது. குலாசாரத்தை விட்டுவிட்ட வேங்கைப்போல் திரிந்துக்கொண்டிருக்கின்றீர் அல்லவா? உன்தந்தையானவர் சர்வ பரித்தியாகம் செய்கின்றேனென்று சங்கற்பித்து அப்படிச் செய்யாமல் காமத்தால் சமுசாரயுத்தனுய் பாண்டுரங்கனுடைய மனதிற்கு ஆயாசமுண்டாகும்படிச் செய்கின்றார். ஆகையால் நீங்கள் நிஜமாக விரக்தியடைந்தவரல்லர் என்று சொன்னாள். அம்மொழியைக்கேட்ட பங்கை என்றபெண்பாவை நாமதேவருடைய புதல்வியைப்பார்த்து ஆ! ஆ!! வெகு சந்தோஷம்! நிஜத்தைச் சொன்னாய். ஆனால் உன் தந்தையைப்போல் அழுதழுது பக்தியை சம்பாதித்தாரில்லையென்று நாடெங்கும் கூறுவர். அர்ச்சாவதார சமாதியிலிருக்கும் பாண்டுரங்கனைச் சரணஞ் செய்வித்துப் பேசும்படியும் தன்னோடு போஜனஞ்செய்யும்படியும் உன் தந்தை கஷ்டப்படுவார். என் தந்தை இப்படிப்பட்ட கஷ்டநிஷ்டூரங்களைச்செய்ய

வில்லே. பூனைக்குட்டிகளின் நிமித்தியார்த்தமாய் சமுசாரமென்ற ஆசையைவிட்டுக் காட்டில்விறகுபொறுக்கி விற்று அதன்மூலமாய் குக்ஷிபாதையை நடத்திக்கொண்டு ஒருவருக்கும் உபத்திரவம்செய்யாமல் நிஷ்காமியாய் ஜீவித்துக்கொண்டிருக்கின்றார் என்று சொன்னாள்.

அம்மொழியைக்கேட்ட, அக்குழந்தை கண்ணீர் தாரைதாரையாக விட்டுப் பெருங்குரலெடுத்துக்கொண்டு தனது வீட்டிற்குவந்து தனது தந்தையாகிய நாமதேவரோடு அங்கு நடந்தசங்கதியாவற்றையும் சவிஸ்தாரமாய்ச் சொல்ல, இவைகளைக் கேட்டு அவர் ஆச்சரியமடைந்து பாண்டுரங்கனுடைய சந்நிதி அருகிற்சென்று பாஞ்சசயனனைப் பார்த்து ஓ சுவாமி! அடியேன் விண்ணப்பத்தைத் திருச்செவி சாய்த்துக் கேட்டருளவேண்டும். அதாவது, ராகா என்னும் குயவன் சகாமியோ என்று கேட்டார். அதற்குப் பகவான் ஆயாசமடைந்து ஓ நாமதேவா! ராகா என்பவன்போலொத்த நிஷ்காமநிதி இந்தப்பதினன்கு லோகங்களிலும் கிடையாது என்றுசொல்ல நாமதேவர் இதைக்கேட்டு மனவிருப்பமடைந்து அவருடைய நிரபேக்ஷத்வத்தை எனக்குத் தேவரீர் பரீக்ஷித்துக் காட்டவேண்டுமென்று பிரார்த்திக்கையில், விட்டலநாதன் ருக்மணி தேவியையும், நாமதேவரையும்அழைத்துக்கொண்டு காட்டிற்குச்சென்று பார்க்கையில், ராகா என்பவரும் தன் பத்தினி புத்திரிமாரும் சுப்பல் பொறுக்குவதும் பூமிமீது நடக்கும்போது நகர்வனவான ஜீவிகளுக்கு உபத்திரவமில்லாமல் பூமியைப் பார்த்துக்கொண்டு மெதுவாக நடக்கிறதும், இடைவிடாமல் மூத்துக்கோவை செய்வதுபோல் பகவந்நாம ஸ்மரணைசெய்துக்கொண்டு விகாரமுடைய பிசாசுபோல இருப்பதை ருக்மணிதேவி நாமதேவருக்குக்காட்டி ஓ நாமதேவா! ராகா என்பவருடைய நிஷ்காமபஜனையைக் கண்டீரா? என்று சொல்லிக்கொண்டிருக்கையில், ருக்மணிதேவியானவள் பகவானுடைய எண்ணத்தை அறிந்து தனது கையிலிருந்த நவரத்தின கங்கணத்தை ராகா சுப்பலேப் பொறுக்கிக்கொண்டிருக்குமிடத்தில் போட்டு, அதன்மீது ஒரு சுப்பலே வைத்துவிட்டு பகவான் ருக்மணி நாமதேவரோடு அங்கு ஓரிடஞ்சென்று மறைந்திருந்தார்.

இப்படி இருக்கையில், ராகா தனது பத்தினி புதல்வியோடு சுப்பலே பொறுக்கிக்கொண்டு வந்து இரத்தின கங்கணத்தின்மீது இருந்த ஒரு சுப்பலே எடுத்து அதின்கீழிருந்த கங்கணத்தைப் பார்த்தார். உடனே அந்தக்கங்கணத்தை ஸ்பரிசிக்காமல் தனது பத்தினிக்குக்காட்டி, இந்தக் கானகத்தின் நடுவில் யான் நிஷ்காமியாய் ஜீவித்துக்கொண்டிருக்க இதற்கு விரோதமாக இந்தக்கங்கணம் அகப்பட்டது. என்று சொல்லிப் பொறுக்கிவைத்த கட்டைகளையெல்லாம் பூமியில் எறிந்துவிட்டு, அந்தக் காட்டைவிட்டு பத்தினி புதல்வியோடு பீதியடைந்து ஓடிப்போய்விட்டார். அச்சமயத்தில் நாமதேவர் மிகவும் ஆச்சரியமடைந்து இப்படிப்பட்ட வைராக்கிய நிஷ்டை எனக்கு இல்லேயே என்று மனக்கிலேசம் தீர்த்து, இப்படிப்பட்ட பக்தனுக்கு நீர் சேவை தரவேண்டுமென்று பகவானைப்பிரார்த்தித்து நிற்கையில், பகவான் சந்தோஷமடைந்து ஓடிப்போய்க்கொண்டிருந்த ராகாவுக்கு நிஜரூபத்தோடு சேவை தந்தருளினர். இதைக்கண்ட ராகா சந்தோஷ சமுத்திரத்தில் மூழ்கி பரமானந்தம் அடைந்து ஸாஷ்டாங்க வந்தனம்செய்து பத்தினி புதல்வியோடு நின்றுகொண்டிருக்கும் சமயத்தில் பகவான் ராகாவைப் பார்த்து அதிக கிருபாகடாக்ஷத்தோடு ஆலிங்கனம் செய்துக்கொண்டு நாமதேவருக்காக உன்னைஇப்படி பரீக்ஷித்தேன். உனது சித்தத்தில் கலக்கம் விட்டு எப்போதும்போல நிஷ்காமபஜனை செய்துக்கொண்டு எனக்கு ஆனந்தம் உண்டாகும்படி செய்வாயாக. யான் எக்காலமும் உனது இருதயத்தில் வசித்துக்கொண்டு உனக்குச் சேவை தந்துக்கொண்டும் இருப்பேன் என்றுசொல்லி தான் மறைந்தருளினர். இதைக்கேட்ட பக்தர்களெல்லாம் சந்தோஷமடைந்து, அவரவர்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்றார்கள்.

இப்படியிருக்க, மறுநாள் உதயமானவுடனே பக்தர்கள் எழுந்து ஸ்நான சந்தியாவந்தனமென்கிற ஷட்கர்மங்களையும் முடித்துக்கொண்டு, குருநாதராகிய நாபாஜிசித்தர் எதிரில்வந்து, அநேககோடி வந்தனம்செய்து, சுவாமி! தாங்கள் இதுவரைக்கும் எங்களுக்குச்சொல்லிவந்த பக்தர்களுடைய சரித்திரங்களைக்கேட்டு நாங்கள் கிருதார்த்தரானோம். ஆகையால் இன்னும் அடியேங்களுக்கு அவ்வாசை விடவில்லே. ஆனதுபற்றி இன்னம் எந்தப்பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லியாவது எங்கள் பாவங்களைத்தீர்த்து மோக்ஷவீட்டைக்காட்டி ஆட்கொள்வீரென்று அடியற்றபனைபோல் விழுந்து நமஸ்காரஞ்செய்தார்கள். அதுகேட்ட குருநாதர் சம்மதமடைந்து ஓ அன்பர்களே! உங்களிஷ்டப்படிக்குச் சொல்லுகிறேன், கேளுங்களென்று சொல்லத் தொடங்கினர்.

ராகா சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

பாண்டுரங்க பரப்பிர்ஹ்மணே நமஃ

ஐந்தாவது

# ஸ்பர்ஸயபாகவதர் சரித்திரம்.

கண்ணன்துதி விருத்தம்.

முந்தியபிறப்பிற்செய்த நல்வினைமுடிந்ததேயோ
பிந்தியபிறப்பின்முன்னோர் பெருந்தவம்படிந்ததேயோ
சந்திரவதனத்தென்றும் தாமரைச்செல்விமேவும்
சுந்தரவகலத்தானைத் துதிக்கநாவசைந்தவாறே.

சீதக்கட லுள்ளமுதன்னதேவகி
கோதைக்குழலா ளசோதைக்குப்போத்தந்த
பேதைக்குழவி பிடித்துச்சுவைத்துண்ணும் [ரே.
பாதக்கமலங்கள்காணீரே பவளவாயீர்வந்துகாணீ

முதலாவது அத்தியாயம்.

சுலோகம்.

நமஃ கிருஷ்ணயசுத்தாயபிரம்மணேநம்தசக்த்தியே
யோகேஸ்வராயயோகாயதுனம் பதயேநமஃ

கேட்டீர்களோ பக்தர்களே! பண்டரிபுரத்தில் ஒருபாகவதர் எக்காலமும் பகவத்பஜனை செய்து வசித்துக்கொண் டிருந்தார். அவருக்கோ கமலா பாய் என்று ஒரு பத்தினியிருந்தார். இவர்களிருவரும் ஸ்ரீருக்மணிதேவியை ஆராதித்துக்கொண்டு வருகையில் ஒருநாள் அந்த லோகமாதாவானவள் பிரத்தியக்ஷமாய் உனக்கு என்ன வரம்வேண்டும்? என்று அந்தப் பாகவதரைக்கேட்க, இதைக்கேட்டு அவர் ஒ ஜானகி! எனக்கு சமுசாரநிமித்தியமாய் எக்காலத்திலும் கஷ்டமென்பது அணுகாமல் கிருபைசெய்ய வேண்டுமென்று கேட்டார். அதற்கு உருக்மணிதேவி ஒரு மூலிகையைக்கொடுத்து இதனுடன் இரும்பைச்சேர்த்து உருக்கினல் தங்கமாகும். அதன் மூலமாய் நீ ஜீவிக்கலாம் என்று சொல்லி அந்தர்த்தானமாயினர். அந்தப் பாகவதர் அம்மூலிகையைக் கொண்டுவந்து அதிக பிரியத்துடன் இதனுடைய ரகசியமெல்லாம் சொல்லி இதாருக்குச் சொல்லாதே. இதைப் பத்திரமாய் வைத்துக்கொள்ளென்று தன் பத்தினி கையில் கொடுத்தார். அதுகேட்ட பத்தினி ஒ நாதா! இந்த ரகசியம் சாதுக்களுக்குத் தெரிந்தால் என்னை உபத்திரவஞ் செய்வாரென்று சொல்லி ஏகாந்தமாய் இரும்பைத் தங்கமாக்கி அதன் மூலமாய் இஷ்டமான பதார்த்தங்களை அனுபவித்துக்கொண்டு உலகத்தாருக்கு மர்மத்தைத் தெரிவிக்காதபடி தரித்திரவானைப்போல வைராக்கியசீலனைய் நடித்துக்கொண்டிருந்தார். இந்த மூலிகை மகிமையால் இவருக்கு ஸ்பர்ஸயபாகவதரென்று பிரசித்தி அடைந்தார்.

இப்படி யிருக்கையில் ஒருநாள் கமலாபாய் சந்திரபாகாநதிக்குச் சென்று ஜலமெடுத்துக்கொண்டு வருவதற்குப் போகும்சமயத்தில் நாமதேவருடைய பத்தினியாகிய இராதாபாயி என்னும் உத்தமி இம்மாதைப் பார்த்து அம்மா! இதோ யானும் ஜலம் எடுப்பதற்கு வருகிறேன்; சற்று நில்லும் என்றுசொல்லி இருவரும் ஏகோபித்துச் சந்திரபாகாநதிக்குச்சென்று குடத்தில் நீர் எடுத்துக் கொண்டு கமலாபாயியோடு கலந்து இருவருமாக வரும்சமயத்தில் பரஸ்பரமாய் அவரவருடைய சமுசாரங்களின் ரஹஸ்யத்தைப் பேசிக்கொண்டு வந்தார்கள். இப்படி யிருக்கையில் கமலாபாயி இராதாபாயைப் பார்த்து ஒ சகியா! நீங்கள் ஏன் அன்ன வஸ்திரத்துக்குக் கஷ்டப்படுகின்றீர்? என்று கேட்க, இம்மொழியைக்கேட்ட இராதாபாய் அம்மா! எனது புருஷன் இதரமான சிந்தையில்லாமல் பண்டரிநாதனே கதியென்று இருக்கின்றார். அவரை நம்பினேம். நாங்கள் என்னசெய்யலாம் என்று இராதாபாய் சொல்ல, அம்மொழியைக்கேட்ட கமலாபாய் அம்மா! உனது கணவன் ஸ்ரீபண்டரிநாதனை நிதமும் தியானித்துக் கொண்டிருக்கின்றாரே? அப்பரமபுருஷன் உங்களுக்கு ஒன்றும் கொடுக்கவில்லையா? பலன்தராத விருக்ஷத்திற்கு ஜலம் கொட்டி வளர்த்தால் என்னபலன்? ஜீவனத்திற்கு ஏதும் கொடுக்காதவனை ஏன் வியர்த்தமாய்ப் பூஜிக்கவேண்டும்? என்கணவனுனவர் உருக்மணிதேவியை உபவாசித்து வந்ததனல் அந்த ஜெகதீஸ்வரி பிரத்தியக்ஷமாகி ஒரு மூலிகையைத் தந்தார். அதை வைத்துக்கொண்டு நாங்கள் தங்கம்செய்து விக்கிர

யஞ்செய்து காலம் கழித்துக்கொண்டு வருகிறோம்
என்றாள். இதைக் கேட்டவுடனே இராதாபாய்
இந்த ஸ்பரிஸவேதி எப்படியிருக்கும்? அதை எனக்
குக் காட்டுமென்று கேட்டார். அதற்கு அவர்
ஓ இராதாபாய்! நீ எனது வீட்டிற்கு வருவாயானல்
அதனை உனக்குக் காட்டுகிறேன் என்று கமலாபாய்
சொல்ல, அதற்கு இராதாபாய் சம்மதமடைந்து
தன்வீட்டிற்குச் சென்று தண்ணீர்க்குடத்தை யிற
க்கிவிட்டு கமலாபாய் வீட்டிற்கு வந்தாள். இம்மாது
வந்தவுடனே ஸ்பரிஸவேதியை யெடுத்து இராதா
பாய் கையில் கொடுத்து துரிதமாய் உனது வீட்டிற்
குச்சென்று யாருமறியாதபடிக்கு உங்களுக்கு வே
ண்டியமட்டும் தங்கம் செய்துக்கொண்டு இந்த
ஸ்பரிஸவேதியைத் துரிதமாக எனக்குக் கொண்டு
வந்து கொடுத்துவிடும். அல்லாமல் இந்த ரகசியத்
தை உன்புருஷனுக்குச் சொல்லவேண்டாமென்று
சொல்லி திட்டம்செய்து அனுப்பினாள். இராதா
பாய் அதற்குச் சம்மதமடைந்து உனது இஷ்டப்
படி செய்கிறேன் என்று தன் வீட்டிற்குவந்து தன
க்கு வேண்டியமட்டும் தங்கம் செய்துக்கொண்டு
அதன்மூலமாய் வேண்டிய பதார்த்தங்களைக் கொ
ண்டுவந்து சந்தோஷகரத்துடன் சமையல் செய்துக்
கொண்டிருந்தனள். அச்சமயத்தில் நாமதேவ் தன்
வீட்டிற்குவந்து இவைகளையெல்லாம் பார்த்து, ஓ
பெண்ணுயகமே! இந்தப் பதார்த்தங்களை எங்கிரு
ந்து கொண்டுவந்தாய்? நிஜமாய்ச் சொல்லுவாய்?
பொய்ம்மொழி கூறினல் நான் புசிக்கமாட்டேன்
என்றுசொல்ல, அம்மொழியைக்கேட்ட இராதா
பாய் நடந்த சங்கதிகளையெல்லாம் உண்மையாகச்
சொல்லவே அதைக்கேட்டு அந்த ஸ்பரிஸவேதியை
நான் பார்க்கவேண்டும் கொண்டுவாவென்று சொ
ல்ல, அதைக்கொண்டுவந்து அவர்கையில் கொடுத்த
வுடனே அதைப் பெற்றுக்கொண்டு சந்திரபாகா
நதிக்குச்சென்று அத்தடாகத்தில் எறிந்துவிட்டு
ஸ்ரீ கிருஷ்ணகாமோச்சாரணம் செய்துக்கொண்டு
சுகமாயிருந்தார்.

'நிஷ்ப்ருஹஸ்ய துருணம்-ஜெகத்'

என்னும் மொழியின் பிரமாணம் நாமதேவர்
ஸ்பரிஸவேதியை ஒரு திரணமாக வெண்ணியதன்றி
அதையும் மறந்துவிடுவது நலமல்லவாவென்று எறி
ந்துவிட்டார். இதற்குள்ளாக கமலாபாயி தன் ஸ்ப
ரிஸவேதியைத் தருவாயென்றுகேட்டால் அம்மா
துக்கு யான் என்ன சமாதானம் சொல்வேன்
என்றுசொல்லி இராதாபாய் பயமடைந்து அழுது
கொண்டிருந்தாள். இப்படியிருக்க ஸ்பரிஸபாகவதர்
வீட்டிற்குவந்து ஸ்பரிஸவேதியைக் காணுமல் எவ்
விடத்தில் இருக்கிறதென்று தன் பத்தினியைக்
கேட்க, அம்மாது கணவனுக்கு பொய்பேசலாகா
தென்று மனதை யொன்றுக்கி நடந்த வர்த்தமான
ங்களைச்சொல்ல அதைக்கேட்ட ஸ்பரிஸபாகவதர்
நீஇப்படி மோசம்போவாயென்று முன்னமே என
க்குத் தெரிந்திருந்தும் என்புத்தியீனத்தால் உன்
கையில் கொடுத்தேன். தவிர சென்றதைப்பற்றி
யோசித்தல் நிஷ்பிரயோஜனம். அடி பயித்தியம்
பிடித்தவளே! சீக்கிரமாய்ச்சென்று இராதாபாயைக்
கேட்டு அந்த ஸ்பரிஸவேதியைக் கொண்டுவாவெ
ன்று சொல்ல, அம்மொழியைக்கேட்ட கமலாபாய்
உடனே நாமதேவர் வீட்டிற்குச்சென்று அழுது
கொண்டிருந்த இராதாபாயைக்கண்டு ஸ்பரிஸவேதி
யைத் தருவாயென்று கேட்டாள். அம்மொழியைக்
கேட்டமாத்திரத்தில் அம்மாதை அழைத்துக்கொ
ண்டு தன் பர்த்தாவிடத்திற்குச் சென்று, ஓநாயகா!
ஸ்பரிஸவேதியைக் கமலாதேவி கேட்கின்றாளென்று
சொல்ல, அம்மொழியைக்கேட்டு நாமதேவர் கலகல
வென்று சிரித்து அம்மா பயித்தியக்காரி! நான் அப்
போதே அதை எடுத்துச் சந்திரபாகாநதியில் எறி
ந்துவிட்டேனென்று சொன்னவுடனே, இருவரும்
இதைக்கேட்ட மாத்திரத்தில் ஒன்றும் தோன்றாமல்
அழுதுக்கொண்டிருந்தார்கள். அச்சமயத்தில் அவ்
வழியாய்ப் போய்க்கொண்டிருந்த பாடசாரிகள்
இந்தச் சங்கதிகளையெல்லாம் அறிந்து ஆச்சரிய
மடைந்து அதில் சிலர் பரதிரவியத்தை அபகரித்
துக்கொள்ள பொய்ம்மொழிகளாடி தப்பித்துக்கொ
ள்வதற்கு உச்சிதமாயிருக்கின்றது என்றார். இன்
னம் சிலர் இவர் நிர்மலகுணஸ்தர். ஆகையால் அந்த
ஸ்பரிஸவேதியைத் திரணமென்று மனதிலெண்ணி
அதை யெறிந்துவிட்டார் என்று சிலர் சொன்னர்.

இப்படியிருக்க, இந்தச் சங்கதிகளையெல்லாம்
கேள்வியடைந்து ஓட்டமாய் ஸ்பரிஸபாகவதர்
வந்து என் குடும்பத்தைத் துக்கசாகரத்தில் ஆழ்ந்
தச்செய்தீரே! விரக்த வேஷதாரியான நீர் என் ஸ்ப
ரிஸவேதியைப் பத்திரப்படுத்திவிட்டு மடுவில் எறி
ந்துவிட்டேனென்று பொய்சொல்லுகின்றீர். இது
உமக்கு நீதியல்ல. ஆகையால் நீர் என் ஸ்பரிஸவே
தியை எனக்குக்கொடும் என்று கேட்க நாமதேவர்
ஸ்பரிஸபாகவதரைக்கண்டு விரக்தியாய் நடக்கும்
உனக்கு ஸ்பரிஸவேதியால் காரியமென்ன? ஆனல்
நான் சொல்வதைக்கேளும்,

சுலோகம்.

அர்த்தசம்பத்விமோஹாய
விமோஹோநரசகாய
தஸ்மாதர்த்தமனர்த்யாக்கியம்
ஸ்ரேயோரீத்தாதஸ்த்யஜேத்
யஸ்யதர்மார்த்தமர்த்தேயஹா
தஸ்யாநீஹைவகோபஹ
மிரக்ஷாளாநாத்திபங்கஸ்ய
தூராதர்ஸ்பர்ஸநம்பரம்.

எப்படியென்றால் உலகத்தில் திரவியமா மோஹகாரணம். ஆகையால் மோஹமானது நவகாஸ்பதம் என்று அர்த்தம். அல்லது அநர்த்தமென்று சொல்வார். கீர்த்தியை அனுசரித்தவன் இந்த அர்த்தத்தைத் தூரமாகத்தள்ளுவான். ஒருவேளை தர்மார்த்தத்துக்கு அர்த்த அபேக்ஷை கூடுமென்று சொல்லுவாய். ஆனால் அப்படிப்பட்டவனுக்கும் நிராபேக்ஷை சௌபான காரியாயிருக்கும். தேகத்தை மிதித்துக் காலைச் சுத்திசெய்து கொள்வதை விட அந்தச்சேற்றைப் பார்த்துத் தூரமாக நடந்தால் சுகமல்லவா. அப்படி அர்த்தத்தை ஆர்ஜ்ஜிக்காமலிருப்பது உத்தமம். ஏனென்றால் இராகுகேதுக்கள் சமயம்பார்த்து சூரிய சந்திரரை அனுசரித்துத் திரிந்ததுபோல் அரிஷ்டவர்க்கங்கள் தனவானை அனுசரித்துதிரிந்துகொண்டிருக்கும். ஆனால் சம்ரக்ஷணை காமியான பகவான்.

"யஸ்யானுக்கிரஹ மிச்சாமி தஸ்ய
விரதம் ஹராம்யாஹம:"

என்றால், எனக்கு எவன்மீது அபேக்ஷையுண்டாகின்றதோ, அவன் திரவியத்தை நான் அபகரிப்பேன் என்றால், ஈதில்லாமல் நீ என் பிரியவசனத்தை நம்பி நிஜமாக நவராச்சிய காரியாவாய் என்று சொல்லி, இனி நீ ஸ்பரிஸவேதியென்ற அபேக்ஷையை விட்டுவிடு என்று நாமதேவர் அதிக பிரியமாய்ச்சொல்ல, அம்மொழியைக்கேட்டு ஸ்பரிஸபாகவதர் உனது உபதேசம் போதுமானது; மடுவிற்குவந்து எனது ஸ்பரிஸவேதியை ஜலத்தில் தேடி யெடுத்துக்கொடுப்பாய் என்று கடினமாய்ச் சொல்ல, நாமதேவர் இதைக்கேட்டு அப்படியே செய்கிறேன் என்று சந்திரபாகா நதியினிடத்திற்கு வந்து ஜலத்தில் இறங்கி, இரண்டு கைகளால் கற்களை எடுத்து, இதில் உமது ஸ்பரிஸவேதியை எடுத்துக்கொள் என்று சொல்லவே, அச்சமயத்தில் கற்கள்யாவும் ஸ்பரிஸவேதியா யிருந்தது. அதைப்பார்த்து எல்லோரும் ஆச்சரியமடைந்து, சமலோஷ்டாஸ்மகாஞ்சன:' இதுபோல் ,, ப்படையும். தங்கமும் ஞானபுருஷனுக்கு துய்யமா யிருக்குமென்று கீதாவசனம்போல் இன்று நமது நாமதேவர் விஷயத்தில் அநுபவசித்தமாச்சுது என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டிருந்தார். இந்த விந்தையைப் பார்த்தமாத்திரத்தில் ஸ்பரிஸபாகவதருக்கு நாமதேவருடையஅநுக்கிரஹத்தால் ஞானோதயமாகி, ஓசுவாமி! எனக்கு ஞானோபதேசம்செய்து அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். நாமதேவர் சந்தோஷமடைந்து தன் கையிலிருந்த கற்களை சந்திரபாகாநதியில் எறிந்துவிட்டு ஸ்பரிஸபாகவதருக்கு அகண்டஞானத்தை உபதேசித்து இருவரும் சந்தோஷமாய் அவரவர் கிருகம்போய்ச் சேர்ந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே! இப்படி வைராக்கியம் அடைந்தவர்க்கு முக்தி அதிக துரிதமாக ஸ்ரீபகவானனவர் திருவருள்செய்வார் என்று சொன்னார்கள். இதைக்கேட்டு சித்தர்கள் மனச்சந்தோஷமடைந்து திவ்விய புஷ்பங்கொண்டு நாபாஜிசித்தருடைய பாதகமலங்களைப் பூஜித்து, சுவாமி! இதுவரைக்கும் தாங்கள் சொல்லிவந்த பக்தர்களுடைய சரித்திரங்களைக் கேட்டு சித்த உறுதியை அடைந்தோம். ஆயினும் இன்னுங்கேட்க வேண்டுமென்கிற ஆசை விடவில்லை. ஆகையால் இன்னம் இதுபோல ஓர் சரித்திரம் சொன்னால் கேட்க ஆவலுடையவர்களா யிருக்கிறோம் என்று சொன்னார்கள். நாபாஜிசித்தர் இம்மொழியைக் கேட்டு சந்தோஷமடைந்து ஓ சித்தர்களே! உங்கள் இஷ்டப்படி சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சொல்லத் தொடங்கினார்.

ஸ்பரிஸபாகவதர் சரித்திரம் மூற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணபரப்ரம்மணேநமஃ

ஆறுவது

# ஜகன்மித்ர நாகநாதர் சரித்திரம்

ஆசிரிய விருத்தம்.

அரிநமோநாராயணாவென் றுள்ளத்திலோதினேன்
ஆடிவருமூவாசை கொய்வீர்
பிரியாதமாய்கையை வாள்கொண்டுவெட்டிட
புத்தியெனக்கருள் செய்குவீர்
கரிபோல்மதங்கொண்டு ஓடுமைவரைக்கண்டு
கண்டதுண்டம் செய்யவருவீர்
உரிவானதெய்வமே ஆதிலக்ஷிமிராயனே
உன்னுள்ளத்தி லாடும்பரஞ்சோதியே.

சுலோகம்.

நான்யம்வதாமினக்ரோணோயிநசிந்தயாமி
நான்யம்ஸ்மராமிநபஜாமிநகாஸ்ரயாமி
பக்தயாத்வதீயசரணாம்புஜமாத்ரியெஹம
ஸ்ரீஸ்ரீநிவாசபுருஷோத்தமதேஹிதாஸ்யம்.

கேட்டீர்களோ சித்தர்களே! நீங்கள் இன்னும் பக்தர்களுடைய சரித்திரங்களைக் கேட்க விரும்புகின்றபடியால் இப்போது பகவானுடைய கிருபையை முன்னிட்டு ஜெகன்மித்ரநாகநாதருடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். எப்படியென்றால், வேதவேத்தியமான புருஷோத்தமராயிருக்கும் புண்டரீகாக்ஷா! யான் இதர தெய்வத்தை வாயால் சொல்லமாட்டேன். காதால் கேட்கமாட்டேன். மனதில் தியானிக்கமாட்டேன். நான் நின்னை எக்காலத்திலும் சேவியாமல் இருக்கமாட்டேன். ஆகையால் நீயே என்மீது நின்கருணையைப் பொழிந்து எப்படிப்பட்டவர்களுக்கும் அகப்படாத பேரின்பப் பதவியை எனக்குக் காட்டி ஆட்கொள்ள வேண்டுமென்று மனதில் ஒரேதிடமாய் நிறுத்தி, யான் சொல்லும்படியான சரித்திரத்தைக் கேட்பீரென, ஜெகன்மித்ரநாகநாதருடைய சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினர் அது எப்படியென்றால்:

ஓ சித்தரே! வைத்தியநாதமென்னும் புகழ்பெற்றோங்கிய பட்டணத்தில் நாகநாதனென்று ஒரு பாகவதர் பிராமணகுலத்தில் ஜனித்து,

சுலோகம்.

ஸ்மோதமஸ்தபசௌசம்
க்ஷாம்தீரார்ஜவமேவச
ஞானம்விஞ்ஞானமாஸ்திக்யம்
பிராம்ஹம்சர்மஸ்யபாவஜம்.

என்னும் கீதாவசனரீதியாய் சப்தமாதி கல்யாணகுண சம்பன்னராய் விஷ்ணுபக்தி யுடையராயிருந்தார். மேலும் இவர் குடும்பியாகையால் அவ்வூரில் ஐயமெடுத்து ஜீவித்துக்கொண்டு இராக்காலத்தில் பகவன்னாம 'சங்கீர்த்தனை பாடிக்கொண்டிருந்தார். அவ்வூரிலிருந்த பிரஜைகளெல்லாம் இவர் கீர்த்தனைகளை அதிக பிரியத்தோடு கேட்டு ஆ! ஆ! இவர் சாக்ஷாத் பாண்டுரங்க அவதாரமென்று கொண்டாடிக்கொண்டிருந்தார்கள். இவர் தன்னுடைய சுகுணாதிசயத்தால் எல்லோருக்கும் மித்திரராய் இருந்தபடியால், இவருக்கு ஜகன்மித்ரநாகநாதரென்னும் பெயரிட்டு இவரைப் புகழ்ந்து வந்தார்கள்.

சுலோகம்.

வசதிஹரிதிசணுதநேசவிஷ்ணௌ
பகவதிபூமான் ஜெகதோஸ்யசௌம்யரூப:
க்ஷிதிரசமதிரம்யமாத்மநோம்த
கதயதிசாருதயைவசாலபோத:

எப்படியென்றால் ஒரு சாலவிருக்ஷம் தான் இருக்கும் பூமியினுடைய சாரத்தைத் தன் தலையில் காட்டுவதுபோல் எந்தப் புருஷனுடைய இருதயத்தில் சனுதனுண்டான விஷ்ணுவானவர் வசித்துக் கொண்டிருக்கிறாரோ அப்படிப்பட்ட புருஷன் உலகத்தாருக்கு அசௌமரூபியாய் இருப்பானென்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் எமகிங்கர சம்மாரத்தில் சொல்லப்பட்டிருக்கும் லக்ஷணங்கள் இந்த ஜெகன் மித்திர நாகநாதருக்குப் பிரத்தியக்ஷமாயிருந்தது. இப்படியிருக்க அவ்வூரில் வாசம் செய்துக்கொண்டிருந்த சில துஷ்டர்கள் அசூயக்கிராந்தராய் துர்ப்போதனுதி துஷ்ட பரிஜனங்கள் "மமபிராணாஹி பாண்டவா:" என்பதுபோல் ஸ்ரீகிருஷ்ணருக்குப் பிராணபதமான பாண்டவரை நிந்தித்ததுபோல் சஜ்ஜன பிரியராகிய ஜகன்மித்ரநாகநாதரைக் கண்டால் துஷ்டமொழிகள் ஆடிக்கொண்டிருந்தார்கள். அதிலொருவன் ஒருதினம் நடுநேரத்தில் ஜகன்மித்திர நாகநாதருடைய வீட்டை நெருப்பிட்டு எரியச்செய்தான். அந்த நெருப்பானது எங்கும் வியாபித்து, வீடு எரியுங்காலத்தில் அந்தப் பரமபாகவதன் நித்திரை தெளிந்து ("கிருத் கிருத்ய: பிரதீக்ஷம்தேமிருத்தியும் பிரயமிவாதிதிம்") என்னும் வாக்கியம்போல தான் பகவத்விஷயமாய் இருக்கப்பட்டவராதலால், இன்று நமக்கு விரோதியான சமுசாரபந்தத்தைப் பகவான் நம்மை விட்டுப் பிரியும்படி அனுக்கிரகித்தாரென்று நிச்சயித்து பகவத்தியானபரராய் இருந்தார். அப்பொழுது பண்டரிநாதன் பிரத்தியக்ஷமாய் இவனருகில் வசித்து கர்பஸ்தனை பரீக்ஷித்தை அஸ்வத்தாமனுடைய பாணக்கினியால் எரிபடாமல் க்ஷமித்ததுபோல் ஜகன்மித்திர நாகநாதனை பூர்ண கடாக்ஷத்தால் இரக்ஷித்தார். இப்படியிருக்க அவ்வூரிலிருக்கும் ஜனங்கள் ஓடிவந்து அநுதாபயுக்தராய் விசனமடைந்து, பாகவத ஜனங்கள் இந்த சத்புருஷருடைய வீட்டில் எவனோ நெருப்பிட்டான். பக்தவத்சலனை அந்தப் புண்டரீகவரதன் இந்தச்சமயத்தில் பிரத்தியக்ஷமாய் இந்த மஹாத்மாவை இரக்ஷிக்க வேண்டுமென்று துதித்தார்கள். இன்னும் சில துஷ்டர்கள் அவ்வீடு எரிந்தமைக்குச் சந்தோஷித்துக் கொண்டிருந்தார்கள். அவ்வீடு இராமுழுது மெரிந்துக்கொண்டிருந்தும், ஒருதிரணமாகிலும் உட்பிரவேசிக்காமல் நீருகி ஆகாசமார்க்கமாய்ப் பறந்துபோயிற்று. பாகவத சிகாமணியான ஜகன்மித்திரநாகநாதருக்கு ஆபத்தில்லாமல் ஹிரண்யகசிபனால் அக்கினியில் தள்ளப்பட்ட பிரகலாதனுக்கு அந்த நெருப்பு எப்படி தண்ணீர்போலிருந்ததோ அதுபோலவே இவருக்குக் குளிர்ச்சியாயிருந்து ஸ்ரீபண்டரிநாதன் சாந்நித்தியமாய்க் குடும்பத்தோடு சந்தோஷ மடைவித்திருந்தார். இந்த விந்தையைப்பார்த்த பக்தஜனங்களெல்லாம் ஸ்ரீமத் பாண்டுரங்கருடைய கிருபாகடாக்ஷத்தை அநேகவிதமாய்க் கொண்டாடிக்கொண்டிருந்தார்கள். இந்த வைஷ்ணவ புருஷருடைய விஷயத்தில் நிஷ்காரணமாய்ப் பயந்தவராயும், இருந்தவர்கள் எல்லோரும் பகவத் கடாக்ஷத்தினால் அவர்மீது பிரியமுண்டாகி ஜகன்மித்திர நாகநாதருடைய சந்நிதிக்கு வந்து சரணாகதி அடைந்து, பாபனுதக்ஷாபனை செய்துக்கொண்டு அவரால் இதோபதேசங்களைப்பெற்று பரம சாதுக்களானார்கள்.

ஆகையால் அந்தக் கிராமத்தார் இவரிடத்திற்கு வந்து ஐயா விப்பிரோத்தமா! உமது குடும்ப சம்ரக்ஷணைக்குக் கொஞ்சம் பூமி ஏற்பாடு செய்கிறோம். தேவரீர் அங்கீகரிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். இம்மொழியைக் கேட்டவுடனே ஐயா! பக்ஷிகள் காட்டுப்பழத்தைப் பக்ஷித்து தடாகத்தில் தீர்த்தமுண்டு ஜீவிப்பதுபோல் நான் ஒருவருக்கும் பாதையில்லாமல் ஜீவித்துக்கொண்டு ஸ்ரீமத் பாண்டுரங்கன் பாதங்களைப் பூஜித்துக்கொண்டு, அவருடைய கலியாண குணங்களைத் தியானித்துக்கொண்டும், அவரைப் போன்ற அதிதியருக்கு ஆராதித்துக்கொண்டு என் தேகத்தை வளர்த்துக்கொண்டு சுசியாயிருக்கின்றேன். எனக்கு என்னிமித்தியங் குறைவு கிடையாது. என்னால் பரிக்கிரகிக்கப்பட்ட பாத்திரம் அக்ஷயபாத்திரம். ஆகையால் எனக்காக நீங்கள் விசனமடையாதீர்கள். உங்களுக்குப் பகவான் உயர்வு செய்வானேதவிர தாழ்வு செய்யமாட்டான் என்றுசொல்ல, இவர்சொன்ன மொழிகளையெல்லாம் கேட்டு இவர் உத்தரவில்லாமல்போனாலும் போகட்டும். ஆனால் இவர்பேரால் ஒரு கிராமத்தை ஏற்பாடு செய்துக்கொண்டு தருவோமென்று தீர்மானித்து அதற்குத்தக்க ஏற்பாடுகள் செய்தார்கள். இப்படியிருக்க சிலநாள் சென்ற பிற்பாடு அக்கிராமத்திற்கு ஒரு துலுக்கன் அதிகாரியாக வந்து ஜகன்மித்திர நாகநாதருடைய பேரிலிருக்கும் பூமிகளை நகர்பூமியோடு சேர்த்துக்கொண்டான்.

---

ஜகன்மித்திரநாகநாதர் பகவானைப்

புலியாகப் பிடித்துக்கொண்டுவந்த அத்தியாயம்.

இதையறிந்த அந்தவூர் ஜனங்களெல்லாம் அந்த அதிகாரியிடத்திற்குச் சென்று, ஐயா! இந்தப் பூமியானது ஜகன்மித்திரநாகநாதருக்கு ஏற்பாடு செய்துவைத்ததென்றும், அவர் மகத்துவங்களைச்சொல்லி இதில் வரும்படியை தர்மத்திற்கு உபயோகித்துக்கொண்டு வருகின்றோம். ஆகையால் எப்போதும்போலவே இப்பூமியை அவர் சுவாதீனஞ் செய்யுங்களென்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். இதைக்கேட்ட அந்த அதிகாரி ஜகன்மித்திரநாகநாதரை வரவழைத்து உனதுபேர் என்ன? என்று கேட்டு, இப்பூமி உன்னுடையதா? என்று கேட்க, அதற்கு அவர் ஐயா அதிகாரியே! எனது நாமதேயம் ஜெகன்மித்திர நாகநாதரென்று சொல்லுவார்கள், அப்பூமியோ பகவானுக்குச் சொந்தமே தவிர எனக்குச் சொந்தமல்லவென்று சொன்னார். இதைக்கேட்ட அதிகாரி நீர் ஜகன்மித்திரன் என்பது யதார்த்தமானால் சர்வ பிராணிகளுக்கும் மித்திரனா யிருக்கவேண்டுமல்லவா? ஆகையால் எங்களுக்குப் பரம்பரையாய் வியாக்கிரம் குலதெய்வமா இருக்கிறதை இப்போது அதைப் பூஜிக்கவேண்டிய காலம் வந்தது. நீர் காட்டிற்குச் சென்று சாயங்காலத்திற்குள்ளாக ஒரு புலியைப் பிடித்துக்கொண்டு வாரும். அப்படி செய்வீராகில், இப்பூமியைத் தங்களுக்கே தருவேன். இல்லாவிடில் இப்பூமி உன்பேரில் செய்யப்பட்ட நாள் முதல் இதுவரைக்கும் அதற்குச் சேரவேண்டிய கப்பங்களைக் குறித்து உன்னை வாதித்து வசூல் செய்வேன். நீர் புலியைக் கொண்டுவந்தால் நிஜமான ஜகன்மித்திரனென்று நிச்சயிப்பேன் என்று சொல்ல, அதற்கு அவர் சம்மதமடைந்து, காட்டிற்கு மத்தியில் சென்று, ஸ்ரீபாண்டுரங்கரைத் தியானித்துக்கொண்டிருந்தார். பக்த பரதந்திரனை பண்டரிநாதன் ஒரு பெருத்த வியாக்கிரமாய் இவர்க்கெதிரில் பிரத்தியக்ஷமானார். இதைக்கண்டு ஜகன்மித்திரநாகநாதர் வியாக்கிரரூபியான பகவானைப் பிரதக்ஷணம் வந்து நமஸ்காரம் செய்து தியானித்து ஓ சுவாமி! இந்நாட்டைப் பரிபாலிக்கும் அதிகாரி என்னை வருத்தமடையும்படி செய்து காட்டிற்குச்சென்று, வேங்கையைப் பிடித்துவந்தால் எனக்கு ஐக்கியமான பூமியைத் தருகிறதாய்ச் சொன்னார். ஆகையால் இங்குவந்தேன் என்று நடந்தவைகளையெல்லாம் சவிஸ்தாரமாய்ச் சொல்லி ஓ ஜெகதீசா! நீர் அவர்வீட்டிற்கு வந்து அவர் பூஜையை அங்கீகரித்து அவரை இரக்ஷிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தார்.

இதைக்கேட்ட பண்டரிநாதன் சம்மதமடைந்து அப்பா பக்தனே! உன்னுடைய உத்தரியை என் கழுத்திற்குக்கட்டி என்னைப் பட்டணத்திற்குப் பிடித்துக்கொண்டு போவென உத்திரவளிக்க, அதுபோலவே ஜகன்மித்திரநாகநாதன் புலியைப் பிடித்துக்கொண்டு பட்டணத்தின் சமீபமாய்வருஞ் சமயத்தில் அங்கிருந்த சேவகர்களும் மனிதர்களும் பயமடைந்து கோட்டையில் பிரவேசித்து ஒளித்துக்கொண்டார்கள். அனேக பக்தஜனங்கள் ஜகன்மித்திரநாகநாதருடைய பிரபாவத்தையும், அந்தக் கிராமத்திற்கு நடக்கும் அனர்த்தத்தையும், அநேக விதமாய்ச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இப்படியிருக்க கிராமாதிகாரி இந்த விருத்தாந்தத்தைக் கேட்டுப் பயமடைந்து வீட்டிற்குள் ஒடிக் கதவை மூடிக்கொண்டார். இதற்குள்ளாக ஜகன்மித்திரநாகநாதன் கோட்டைவாயில் முன்னதாக வரக் கதவு மூடியிருந்ததை வியாக்கிரரூபியான பகவான் அதிக ஆங்காரத்தோடு கர்ஜ்ஜித்துத் தன் கையாலே அடித்து அந்தக்கதவைத் தட்டினார். ஜகன்மித்திர நாகநாதன் உள்ளே பிரவேசித்தார்.

இப்படி பிரவேசிக்கும் சமயத்தில் வியாக்கிரத்தைக் கண்டு பயப்படும் சாதுக்களைக்கண்டு நீங்கள் பயப்படாதீர் என்று சொல்லி, அதிகாரி வீட்டின் வாயிலுக்கு வருகையில், அங்கு மூடியிருந்த கதவை வியாக்கிரம் ஒடித்தது. இச்சமயத்தில் ஜகன்மித்திரநாகநாதன் அதிகாரியைக் கூப்பிட்டு உன்னுடைய குலதெய்வம் இதோ வந்தது. ஏன் பூஜிக்காமல் கதவை மூடிக்கொண்டீர் என்று சொன்னார். இம்மொழியைக் கேட்ட அதிகாரி பயமடைந்து ஒருமூலையில் ஒளித்திருந்தார். அச்சமயத்தில் அப்புலியானது பயங்கரத்தோடு கர்ஜ்ஜித்தது. இதைக்கண்டு ஜகன்மித்திரநாகநாதன் அப்புலியை அனேகவிதமாகப்பிடித்து ஆடிக்கொண்டிருந்தார். அப்பொழுது அதிகாரி உள இருந்ததுபோல் குடும்பத்தோடு ஜகன்மித்திரநாகநாதனைப் பிரார்த்தித்து ஓ மஹாத்மா! உனது பிரபாவத்தை அறியாமல் அபசாரஞ்செய்தேன். ஆகையால் இதோ சரணாகதி அடைந்தேன். என்னை இது சமயத்தில் இரக்ஷிக்க வேண்டுமென்று சொ

ல்லி பிரார்த்தித்தார். அப்பொழுது அங்கிருந்த சாதுக்களெல்லோரும் கலீலென்று சிரித்தார்கள். இதைக்கண்டு ஜகன்மித்திரநாகநாதன் மந்தஸ்மிதி யடைந்தார். வியாக்கிரமும் சாந்நிதியாய் நின்றது. பிற்பாடு அந்த அதிகாரி கொஞ்சம் தைரியங்கொண்டு வீட்டைவிட்டு வெளியில்வந்து ஜகன்மித்திர நாகநாதரைச் சாஷ்டாங்க வந்தனம் செய்து தூரமாய் நின்றுக்கொண்டு பத்தலஞ்சலியாய் ஓ பாகவ தோத்தமரே! எனக்குப் புத்திவந்தது. ஜெகன்நாதன் பாகவதபரதந்திரனென்று நான் அறிந்துக் கொண்டேன். ஐயா! இனி எக்காலத்திலும் இப்படிப்பட்ட அபசாரம் செய்யமாட்டேன். நீர் ஜெகன்மித்திரனென்று, இந்த ஜெகத்தை இரக்ஷிக்கப்பட்டவராவீர். ஈதன்றி ஓ மெய்யனே! அன்பரைக்காக்கும் செய்யனே! நானும் இன்னமிருக்கப்பட்ட பிரஜைகளும் அதிக பயமடைந்திருக்கின்றோம். நீர் எம்மீது தயைசெய்து புலியை எப்போதும்போலவே காட்டில் விட்டுவிட்டு, பீதியடையும் எங்களை இரக்ஷியுமென்று பிரார்த்திக்கவே, ஜகன்மித்திரநாகநாதன் இம்மொழிக்குக் கருணித்து இனிமேல் இப்படி அக்கிரமம் செய்யாதிர்; சாதுக்களை ஆதரித்துக்கொண்டு பகவானுடைய நாமதேயங்களை ஸ்மரித்துக்கொண்டு பிரஜைகளை இராஜநீதியோடு இரக்ஷித்துக்கொண்டு சுகமாயிருவென்று சொல்லிவிட்டு, புலியைப் பிடித்துக்கொண்டு காட்டிற்குச்சென்று, அதன் கழுத்தில் கட்டிய தன் உத்தரீகத்தை அவிழ்த்துக் கொண்டு நின்றார்.

கடவுள் தரிசனங்கொடுத்த அத்தியாயம்.

உடனே விட்டலநாதன் நிஜரூபத்தோடு ஜகன்மித்திரநாகநாதருக்கு பிரத்தியக்ஷமாய் அவரை ஆலிங்கனம் செய்துக்கொண்டு ஓ பக்தனே! எனக்குகந்த உத்தமனே! நீ எப்போதும்போலவே பட்டணத்திற்குச்சென்று, என்னை தியானித்துக்கொண்டு சுகமாயிரு என்று ஆசீர்வதித்து, அந்தர்த்தானமடைந்தார். இப்படியிருக்க பிறகு அந்தப் பாகவதசிரோமணி பட்டணத்திற்கு வரும் சமயத்தில் அங்கிருக்கும் அதிகாரி முதலான கிராமஸ்தாதிகள் பயபக்தி விஸ்வாசத்தோடு ஜலபூர்ண கும்பங்களைக்கழுவி சாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்து உபசரித்து, பகவன் நாமத்தை கோஷித்துக்கொண்டு, ஜகன்மித்திரநாகநாதரோடு அந்தப்புரமடைந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே! இப்படி வைராக்கியமடைந்தால், அந்த நிர்மலஸ்வரூபனைக் காணும் வல்லமையை அடையலாம் என்றுசொல்லி, எல்லோரும் கோஷ்டியோடு அவரவர்கள் இருப்பிடம் சென்றார்கள்.

ஜகன்மித்ரநாகநாதர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநமஃ

ஏழாவது

# சோகாபரமானந்தர் சரித்திரம்.

மாயன் துதி.

உலகத்தை யளந்தபாதா உம்பர்கள் போற்றுநாதா
மலைதனை யெடுத்தகையா மங்கையைக் காத்தமெய்யா
பலகலை யோதுந்துய்யா பன்னக சயனதேவா
தலமதி லென்னைக்காப்பாய் தருணமே சரணடைந்தேன்.

சுலோகம்.

த்வமேவமாதாசபிதாத்வமேவத்வமே
பந்துஸ்சசசாத்வேமேவ
த்வமேவவித்தியாதிரவிணம்த்வமே
வத்வமேவசர்வம்மமதேவதேவ.

முதலாவது அத்தியாயம்.

இப்படியாக அநேக பக்தர்கள் சரித்திரங்களை யெல்லாம் உள்ளன்போடுதிருவாய்மலர்ந்து நாபாஜி சித்தர் கொலுவமர்ந்திருக்கும்சமயத்தில், அச்சபையைச் சேர்ந்த சித்தரெல்லாம் பிராதக்காலத்தில் எழுந்து நீராடல்முதலிய ஷட்கர்மங்களையும் முடித்துக்கொண்டு குருவாயிருக்கப்பட்ட நாபாஜிசித்தர் சமுகத்தில்வந்து அநேக வந்தனம் புரிந்து, ஓ சுவாமி! நேற்றையதினம் தாங்கள் சொல்லிக்கொண்டுவந்த பக்தருடைய சரித்திரத்தைக் கேட்ட மாத்திரத்தில் எங்களுடைய ஜென்மம் சாபல்யமாயிற்று. ஆகையால் அதுபோல இன்றும் தாங்கள் இந்த ஏழையேங்கள்மீது தயைபுரிந்து இன்னும் ஓர் சரித்திரம் சொல்வீரென எங்கள் உள்ளம் கோருகின்றது என்று சொன்னார்கள். அம்மொழியைக்கேட்டு நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து, அப்பா சிடர்களே! உங்கள் இஷ்டப்படியே இதோ சொல்லுகின்றேன்; நீங்கள் கேட்பீராக. அது எதுவென்றால்: சோகாபரமானந்தர் என்னும் பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன். ஆனால் இந்த பக்தரோ அதிக பக்தி விசுவாசமுடையவர். ஆகையால் இதை அதிகவைராக்கியத்தோடு கேட்க வேண்டுமென்று சொன்னார். உடனே சித்தர் எல்லோரும் பிரமானந்தமடைந்து, நிஷ்டாநுபரராய் யோகம் சாதிப்பதுபோல் ஏகமனதாய் நின்று, குருவே! இச்சமயம் தாங்கள் சொல்லும்படியான ஞானோபதேசங்களைக் கேட்டு சிரவணானந்தமடைகிறோம். தாங்கள் ஏதும் கலக்கமின்றி அச்சரித்திரத்தை வெளிப்படுத்துவீர்களென்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசித்தர் மனமகிழ்ச்சியடைந்து சொல்லத்தொடங்கினார்.

கேட்டீர்களா சித்தர்களே! பாகி என்கிற நாட்டில் அகண்ட வைராக்கியசீலனாய் மாநபிமானத்தை வெறுத்து சதா பகவன்நாமஸ்மரணை செய்துக்கொண்டு சோகாபரமானந்தனென்று ஒருபாகவதர்இருந்தார். அவர்தினந்தோறும் பிராதக்காலத்தில் எழுந்து ஸ்நான சந்தியாவந்தனங்களைத் தீர்த்துக்கொண்டு சர்வோபசாரத்தோடு பகவானை ஆராதித்து பகவத்கீதையைப் பாராயணம் செய்துக்கொண்டு வருந்தொழிலில் இருந்தார்.

சுலோகம்

பகவன்பரமேசாந பக்தியஸ்யபிசாரணி
ப்ராரப்த்யம்புஜ்யபாளஸ்யசதம்யவதிஹேபிரயோ.

இம்மொழி எப்படியென்றால்; ஓ பகவானே! பிராரத்வத்தை அநுபவிப்பவனுக்குப் பகவத்பக்தி எப்படி யுண்டாகுமென்று பூதேவிகேட்டார். அம்மொழியைக்கேட்டுப் பகவான் புன்சிரிப்படைந்து ஓ பூதேவி! யான் சொல்வதைக் கேள், என்று சொல்லத் தொடங்கினார்.

பிராரத்வம் புஜ்யமாரோபி - சிதாப்யாக்வுஸ்ஸதாச முக்தஸ்ஸசுகிலோகே-கர்மணாநோபலிப்யதே-மஹாபாபாதியாயானி-கிதாத்யானம் கரோதிசேத்-க்வசித்ஸ் வரசம்நகுர்வந்தி-நலிகிதரமம்பசா - கிதாயாஃ புஸ்தகம் யத்ர-யத்ரபாடாபிராப்தே-தத்ரசர்

வாணிதீர்தாணி பியாகாதீனிதத்தரவை - சர்வேவே தாக்கருஷயோ - போகிறः பன்னகாச்ஸயே - கோபாலா கோபிகாலாபி நாவிதோத்தவ யார்ஷதைः ஸஹாயே ஜாயதே சிக்கிரம்யத்ர கீதாபிரவர்த்தே- யத்ரகீதாவிசாரச்ஸபடனம் பாடனம் ஸ்ருதம்-தத்ராஹம் நிச்சவிதம்புருத்வி-நிவசாமிசதைவஹி-கீதாஸ்ரயோஹதிஷ்டாமீ-சிதாமேமேசோத்தமம் கிருஹம்-கீதாஞானமுபாஸ்ரத்திய-திரிம்லோகான் பாலபாம்பயஹம்:

எப்படியென்றால் பிராரத்துவத்தை அனுபவிப்பவனும் பகவத்தியானத்தைச் சதா ஆஸ்ரயித்துப் பாராயணம் செய்பவனும் முக்தனாய் சுகியாய் கர்மத்தால் பத்தனாகாமலிருப்பான். இந்தப் பகவத்கீதையை மனனம் செய்யும்பக்ஷத்தில் தாமரையிலையில் எப்படி ஜலம் ஒட்டாமல் இருக்கின்றதோ, அதுபோல் மகா பாபகர்மங்கள் அணுகாது. அது எப்படியென்றால், பகவத்கீதை புத்தகம் இருக்கும் இடத்திலும், கீதாபாராயணம் செய்யுமிடத்திலும், சமஸ்தமான புண்ணியதீர்த்தத்தில் ஸ்நானம்செய்த புண்ணியமே நிற்கும். ஈதல்லாமல் கீதாபாராயணம் செய்பவருக்குச் சகல தேவரும் ரிஷிகளும் யோக புருஷரும் கோபால கோபிகளும் நாரதரும் ஆகிய இப்படிப்பட்டவர்கள் எக்காலத்திலும் எங்கு கீதம் படிக்கப்படுகின்றதோ அல்லது உபதேசிக்கப்படுகின்றதோ, அல்லது கேட்கப்படுகின்றதோ, அல்லது விசாரணை செய்யப்படுகின்றதோ, அந்தவிடத்தில் பகவான் ஸ்திரமாக வசித்துக்கொண்டிருப்பார். அதுவுமல்லாமல் பகவான் பகவத்கீதையை ஆஸ்ரயித்திருக்கின்றார். அதுவே அவருக்கு உத்தம வீடென்றுசொல்வார்கள். ஆகையால் அதை ஆஸ்ரயித்து, சமஸ்த லோகத்தையும் பாலித்துக்கொண்டிருக்கின்றேன் என்று பகவான் அநுக்கிரகித்தது போல் வராகபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. பகவத்கீதையினும்,

சுலோகம்.

அத்யெஷ்யதேயச இமப்தர்ம்யம்சம்வாதமாபயோः ஞானயஞேனதேநாஹ மிஷ்உஸ்யாமிதிமேமதிः

இது எப்படியென்றால், ஒ சஞ்சயா! நாம் சம்மதரூபமாய் மஹத்தான இந்தக்கீதையை அனுதினமும் பாராயணம் செய்பவனாய் ஞானஞ்ஞானத்தால் என்னை ஆதரிக்கப்பட்டவன் என்று என் அபிப்பிராயமாய் இருக்கின்றதென்று, கிருஷ்ணன்தான் சொன்னார். ஆகையால் சோகாபரமானந்தர் இந்தஞானத்தை அனுசரித்து தினந்தோறும் பக்தியோடு பகவத்கீதா பாராயணஞ் செய்துகொண்டு வந்தார். இப்படி பாராயணம் செய்யும்போது ஒவ்வொரு சுலோகத்திற்கும் ஒவ்வொரு வந்தனமாக எழுநூறு வந்தனங்கள் செய்துக்கொண்டிருந்தார். இப்படி தன் நியமங்களை நிறைவேற்றிய பிற்பாடு குட்சிபாதைக்கு ஜீவிப்புதேடுவார். இவர் (விசித்ராதேஹசம்பர்த்தி ரீஸ்வராயநிவேதிதம்) இவ்வாக்கியம்போல் விசித்திரமான இத்தேகத்தை பகவத்திருஸ்யத்திற்கு விநியோகித்து இது இப்படி நமக்கு தந்திருக்கின்றது. ஆகையால் அப்படிப்பட்ட சரீரத்தை எக்காலமும் பகவத்திருஸ்யத்தில் விநியோகிக்கவேண்டும் என்று அபிப்பிராயத்தோடு இருந்து நடந்தார்.

இப்படியிருக்கையில் ஒருநாள் ஒரு வர்த்தகன் சோகாபரமானந்தன் அனுஷ்டானம் செய்யும் இடத்திற்குவந்தான். அச்சமயத்தில் நிரந்தரமாய் மழைபெய்து பூமியெங்கும் சேருயிருந்தது. அதைப்பார்த்து நமஸ்காரஞ் செய்துக்கொண்டு நடந்தார். அந்தச்சமயத்தில் வர்த்தகன் பார்த்து இவர் சுத்தாந்தகன் என்று அறிந்துக்கொண்டு தன்னுடைய கடைக்குள்சென்று ஒருபட்டுவஸ்திரம் எடுத்துக்கொண்டு வந்து நமஸ்கரித்து அவருக்குப் பிரார்த்த பூர்வீகமாய்க் கொடுத்தார். நிராபேக்ஷயடைந்த சோகாபரமானந்தன் பிக்ஷான்னத்தையும் ஜீர்ணவஸ்திரத்தையும் தவிர இதரமானது எனக்குத் தியாஜ்ஜியம் என்று சொல்லி ஐயா! அந்தப் பட்டுவஸ்திரத்தை ஸ்ரீருக்மணிகாந்தனுக்குச் சமர்ப்பித்தால் எனக்குச் சந்தோஷமுண்டாகும். ஈதல்லாமல் பகவானுக்கு உன்மீது கிருபை உண்டாகும் என்று சொல்லுகையில் இம்மொழி கேட்காமல் அந்த வர்த்தகன் அதிகப் பிரியத்துடன் அந்த வஸ்திரத்தை அவர் இடுப்பில் சுற்றிவிட்டுத் தன் இச்சையாய்ப் போய்விட்டான்.

இப்படியிருக்க சோகாபரமானந்தன் தான் யாசிக்காமல் லபித்த அந்த வஸ்திரத்தை செவ்வையாய் இடுப்பில் சுற்றிக்கொண்டு அந்த வஸ்திரத்துக்குச் சேறு ஒட்டாமல் பயபக்தியுடன் சாஷ்டாங்கமாய் வந்தனம்செய்யாமல் கையால்மாத்திரம் பூமியைஸ்பரிசித்து வந்தனம்செய்துக்கொண்டுவந்தார். அன்யவிமுக்தனாய் கேவலமான பகவத்பலம் உண்டான இவர் பட்டுவஸ்திரத்தால் வியாகூலமடைந்து மனது சஞ்சலத்தில் அகப்பட்டு இருந்தார். இப்படியிருக்கையில் உடனே பசி அதிகரித்து தேகத்தைப் பாதித்தது. ஈதில்லாமல் தன் தேகத்தில் ஆயாச

முண்டாயிற்று. அப்பொழுது சோகாபரமானந்தன் இன்று ஏன் இப்படிப்பட்ட விபரீதமுண்டாச்சுது? நிராபேக்ஷனை யான் என் விரதத்தைவிட்டு இந்த வஸ்திரத்தை வாங்கியதுபற்றியல்லவா? இந்த அநர்த்தம் உண்டாச்சுது.

ஆகையால் பரிசுத்த அன்னமானது சுவாசபரிசத்தால் பரிசுத்தமானதுபோல் பகவத்கீதாபடணமனனம் செய்தால் அதிக பரிசுத்தமாகும். அதுபோல் என்மனது இந்தவஸ்திரம் கைக்கொண்டது பற்றி என்மனம் சஞ்சலமடைந்தது. இவ்வளவு ஸ்வல்ப பரிக்கிரகத்தால் இத்தனை அனர்த்தமுண்டாச்சுது. இதில்லாமல் சதா சர்வபரிகாரம் செய்யும்பேர்களுக்கு எப்படிப்பட்ட அனர்த்தம் சம்பவிக்குமோ தெரியாது? இந்த தோஷம் பரிக்கிராதிப்பதற்கு என்ன பிராப்தம் செய்யலாமென்று சிந்தித்துக்கொண்டிருக்கையில், ஒருவன் கலப்பையை எடுத்து புஜத்தின்மேல் மாட்டிக்கொண்டு மாடுகளை ஓட்டிக்கொண்டு போய்க்கொண்டிருந்தான். இப்படியிருக்கையில் சோகாபரமானந்தன் அந்த மனிதனையழைத்து, ஐயா! உனக்கு இந்தப் பட்டுவஸ்திரத்தைத் தருகின்றேன். உமது மாடுகளை கொஞ்சநேரம் எனதுசுவாதீனம்செய்வாயா? என்றுகேட்க, அதற்கு அவன் சம்மதமடைய அந்தப் பட்டுவஸ்திரத்தை அவன் கையில்கொடுத்து அந்த மாட்டின் கழுத்தின்மீது இருந்த நுகத்தடிக்குத் தன் காலைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு, அந்த மாடுகளை அதட்டி ஓட்டுமென்று அந்தக் குடியானவனுக்குச் சொல்லிப் பிரார்த்தித்தார். அந்த அவிவேகியாகிய மனிதன் சம்மதித்து அதுபோலவே செய்தான். இப்படி ஓட்டும் சமயத்தில் அம்மாடுகள் அதிவேகமாய் காட்டின் மார்க்கமாய் ஓட ஆரம்பித்தன. இப்படி ஓடுகையில் சோகாபரமானந்தனுடைய தேகம் கற்களிலும் முட்களிலும் புரண்டு சரீரமாதியந்தம் இரத்தப்பிரவாகமாச்சுது. இப்படியாக ஓடும் சமயத்தில் அந்தமாடுகள் இவர் தேகத்தைப்பார்த்து பயமடைந்து அதிக கோபமாய் ஓடத்தலைப்பட்டன. அச்சமயத்தில் சோகாபரமானந்தன் தன் தேகஸ்திதியை யோசிக்காமல் ஆ! ஆ!! யான்செய்த தப்பிதத்திற்கு இது நல்ல சாந்தியாச்சுது. என்று சந்தோஷித்து பகவன் நாமத்தை ஸ்மரித்துக் கொண்டிருந்தார். தேகத்தில் அதிகமாய் காயங்கள் பட்டு இரத்தமாமிசம் சிதறிவிழுந்தும், இப்படி ஈனதிசையிலும் இதரமான சிந்தையில்லாமல் பகவன் நாமத்தை ஸ்மரித்துக்கொண்டு ஆனந்தபரவசம் அடைந்திருந்தார். அப்படிப்பட்ட சமயத்தில் பண்டரிநாதன் இவருடைய சித்தசுத்திக்குச் சந்தோஷமடைந்து, கரியைக்காக்க ஓடிவந்ததுபோல் ஓடிவந்து நுகத்தடியில் கட்டியிருந்த அவர் கால்களை அவிழ்த்து தனது கையால் ஆசீர்வதித்துவிற்க, அவருடைய தேகம் முன்னுக்காகிலும் அதிக ஆரோக்கியத்தோடு இருந்தன. அப்பொழுது பகவான் சோகாபரமானந்தருடைய சிரசின்மீது தன்கையை வைத்து ஓ பக்தபிரியா! ஏன் இப்படி சாகம்சம் செய்தாய்? அதுவல்லாமல் இப்படிப்பட்ட பிராயச்சித்தத்திற்கு நீ என்ன தப்பிதம் செய்தாய்? (ஜம் சம ஸ்ரீவிமானி ஹ௱ருதயானிமரிஷிபிஃ) என்னும் மொழிப்பிரகாரம் உனது மனதானது என்மீதிலிருக்க என் சுகத்தை நினைக்காமல் ஏன் இந்தத் தேகத்தை இப்படிகஷ்டப்படுத்தினை? நீர் பூஜிப்பதெல்லாம் எனக்கு ஆகாரமாகின்றது. ஆகையால் உனது மொழியானது எனக்கு ஸ்தோத்திரமாகின்றது. உனதுகவனம் எனக்கு பிரதக்ஷமாகின்றது. உனது நித்திரை அஷ்டாங்கயோகமாகின்றது. இப்படியிருக்க சர்வ கர்மங்களையும் என்னுடன் சேரும்படி நீ இப்படிச் செய்வது அழகல்லவென்று சொல்ல சோகாபரமானந்தன் ஓ சுவாமி! சஞ்சலமான என் மனதை உன்னைத்திடமாக ஸ்தோத்திரிக்கும்படி அநுக்கிரகம் செய்ய வேண்டுமென்று சொல்லிப் பிரார்த்திக்கவே பகவான் அதுபோலவே அநுக்கிரகித்தார். ஸ்ரீபக்தவத்ஸலன் தன்னுடன் அழைத்துக்கொண்டுவந்து பண்டரிபுரத்திலிருக்கும் பக்தருக்கு இவருடைய விருத்தாந்தங்களைச் செவ்வையாய்ச் சொல்ல, எல்லோரும் ஆச்சரியமடைந்து, ஞானதேவா! ரிஷிகேசா! ஐயா! தேவரீருடைய லீலாவிநோதங்களைஎவரால்சொல்லமுடியும்? ஆனல் ஒருவரைப்பார்க்கிலும் மற்றொருவரை சிரேஷ்டமாக நிர்மிக்கின்றாய். பக்திமான்களுடைய கௌரவத்தை நீ யறிகுவீரென்றுசொல்லி அனேகவிதமாக ஸ்தோத்திரம் செய்தார்கள்.

சோகாபரமானந்தர் சரித்திரம் முற்றிற்று.

---

எட்டாவது

# நரஹரிபக்தர் சரித்திரம்.

சுலோகம்.

க்ஷீராம்பொரிதிஸேஷஸாயி நமஜம்விஷ்ணும்ரமாநாயகம்
காருண்யாத்மகபுண்டரீகநிலரம் பீதாம்பரம்நீரஜம்
பிப்பிராணம்சகதாம்சதக்ஷின புஜாக்மௌனம்யம்முதகம்
தத்வத்ஸவ்யபுஜாயுகேள விமலம்ஸமசுசக்கிரம்பஜே.

விஷ்ணு ஸ்தோத்திரம்.

தாயேதந்தையென்றும் தாரமேகிளைமக்களென்றும்
நோயேபட்டொழிந்தே னுன்னைக்காண்பதோராசையினல்
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார்திருவேங்கடவா
நாயேன்வந்தடைந்தேன் நல்கியாளென்னைக்கொண்டருளே.

முதலாவது அத்தியாயம்.

இவ்விதமாக மகா மகிமைபொருந்திய நாபாஜி சித்தர் சொன்ன சரித்திரத்தைக்கேட்ட சித்தரெல்லாம் சந்தோஷமென்னுங் கடலில் ஸ்நானம் செய்ததுபோல் குளிர்ந்து நாபாஜிசித்தரைப் பார்த்து, ஓ சுவாமி! தேவரீர் சொன்ன சரித்திரம் மகா சந்தோஷத்தையும் ஞானத்தையும் உண்டாக்கித் தாமரையிலைக்கும் ஜலத்துக்கும் எப்படி சந்தர்ப்பமில்லாமல் இருக்கின்றதோ, அதுபோல் யாங்கள் செய்த பாவங்களுக்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லாமல் செய்தீர். ஆகையால் தாங்கள் இன்னும் இருக்கின்ற பாவங்களையும் நீக்கிக்கொள்ள விரும்புகின்ற அடியார்களிடத்தில் கிருபைகூர்ந்து முன்னே திருவாய்மலர்ந்த வைராக்கிய சரித்திரங்களைப்போல் இன்னும் ஒரு சரித்திரம் சொன்னல் மகா உசிதமென்று சொன்னர்கள். இதையெல்லாம் கேட்ட நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து, ஆனல் உங்கள் இஷ்டப்படிசொல்லுகிறேன் கேட்பீர்களென்று, பகவானை உள்ளபடிஸ்மரித்துச்சொல்லத்தொடங்கினர்

எப்படியென்றல் பால்சமுத்திரத்தில் ஆதிசேஷன்மீது இலட்சுமியோடு சயனித்துக்கொண்டு சதுர்ப்புஜங்களினும் பத்மத்தையும் கதையையும், சங்கையும் சக்கரத்தையும், தரித்துக்கொண்டிருக்கும் விஷ்ணுதேவனை சந்தோஷத்தோடு சேவிக்காநின்ற நரஹரிபக்தன் என்னும் பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன். அதாவது இவ்வுலகத்தில் ஸ்ரீமந்நாராயணருடைய பகவத்விலாசம் நிறைந்திருக்கின்ற பண்டரிபுரத்தில் நரஹரியென்று பெயருடைய ஒரு தட்டான் இருந்தான். அவன் தினந்தோறும் பிராதக்காலத்தில் எழுந்து பீமாநதியென்னும் புண்ணியதீர்த்தத்தில் மூழ்கி நித்திய கடன்களை முடித்துக்கொண்டு அதிக பயபக்தியுடனே அங்கெழுந்தருளியுள்ள மல்லிகேஸ்வரரைப் பூசை செய்துக் கொண்டிருந்தான். இந்த பக்தரோ பரமசிவனைத்தவிர இதரதேவர்களை கனவிலும் தியானித்து அறியமாட்டான். தான் பிறந்ததுமுதல் பண்டரிநாதரைச் சேவித்து அறியான். விட்டலநாதர் எத்திக்கிலிருக்கின்றரென்று திரும்பிக்கூடப் பார்க்கமாட்டான். இப்படியிருக்க இவன் வீட்டிற்குச் சமீபத்திலிருந்த ஒரு வர்த்தகனுக்குப் புத்திரபாக்கிய மில்லாதபடியால் ஸ்ரீமத் பாண்டுரங்கருடைய திருக்கோவிலுக்கு வந்து ஓ ஜெகதீசா! எனக்கு ஒரு புத்திரனை அனுக்கிரகித்தால், உனக்கு நவரத்தின கசிதமான தங்கத்தால் அரைஞாண்செய்து தரிக்கின்றேன் என்று பிரார்த்தனை செய்துக்கொண்டான். இப்படி பிரார்த்தித்துக் கொண்டபிறகு பகவான் கடாக்ஷத்தால் அந்த வர்த்தகனுக்குத் திவ்விய ரூபத்துடன் ஒரு ஆண்குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்த பிறகு வர்த்தகன் சாதகங்கள் நிறைவேற்றிப் பின்னர் பகவான் சந்நிதிக்கு வந்து புண்டரீகவரதனைச் சேவித்துப் பிரார்த்தனையைச் செலுத்த வேண்டுமென்று மனதிலெண்ணிக்கொண்டு, அரைஞாண் செய்வதற்கு மேன்மை பொருந்திய வேலைக்காரன் எவனென்று அங்கிருந்தவர்களை விசாரிக்கையில் அவர்கள் ஓ ஐயா! நரஹரியென்பவர் வேலையில் மகா சமர்த்தரென்று சொல்லினர். அம்மொழியை வர்த்தகன் கேட்டுச் சந்தோஷமடைந்து தங்கத்தையும் இரத்தினங்களையும் எடுத்துக்கொண்டு நரஹரி என்னும் தட்டான் வீட்டிற்கு வந்து விசாரிக்கையில் இந்த வர்த்தகரைக் கண்டவுடனே நரஹரியென்னும் தட்டான் எழுந்து அநேகவந்தனம் செய்து ஐயா! தாங்கள் இவ்வளவு தூரம் அடியேனைத்தேடி வந்தகாரியம் என்னவோ என்று கேட்க, அதுகேட்ட வர்த்தகன் ஐயா! உன்னுடைய வேலையின் பிரதாபத்தைக்கண்டு சந்தோஷமடைந்து உன்னிடத்தில் பண்டரிநாதருக்கு

அரைஞாண் செய்து சமர்ப்பிக்க வேண்டும் என்று எண்ணங்கொண்டு இங்குவந்தேன் என்று சொல்ல, அந்த கம்மாளன் இம்மொழியைக்கேட்டு ஒ வர்த்தகரே! உனது இஷ்டப்படி செய்து கொடுக்கின்றேன். ஆனல் யான் பண்டரிநாதரைக் கண்ணால் பார்த்து மறியேன். ஆகையால் நீர்சென்று அளவு பிடித்துக்கொண்டு வந்தால் யான் செய்து தருகின்றேனென்று சொன்னுன். அம்மொழியைக்கேட்ட வர்த்தகன் கலீலெனச் சிரித்து ஐயோ பகவானே! தாமரைக்குச் சமீபத்திலிருக்கும் தவளையானது அந்தக் கமலத்திலிருக்கும் மதுவென்னும் தேனை அறியாவண்ணம் நீ இந்தவூரில் பிறந்து வளர்ந்து பண்டரிநாதரைச் சேவிக்க பாக்கியமில்லாதவனுனாய் என்று தன் மனதில் தானே யெண்ணிக்கொண்டு அந்த வர்த்தகன் அதிவேகமாய் நடந்து சுவாமி சந்நிதிக்குச்சென்று பகவான் இடுப்புக்குத்தகுந்த அளவு எடுத்துக்கொண்டு வந்து தட்டான் கையில் கொடுத்தான். வர்த்தகன் அளவு கொடுத்தவுடனே அதிசீக்கிரமாய் வேலைசெய்து வர்த்தகன் கையில் கொடுக்க, அந்தவர்த்தகன் அந்த அரைஞாணை எடுத்துக்கொண்டு சுவாமி சந்நிதிக்குச்சென்று பகவானுக்கு இடுப்பில் கட்டும் சமயத்தில் நான்கு விரல் அளவு குறைந்தது. வர்த்தகன் இதைப்பார்த்து மனம்பதறி ஐயோ! நாம் அதிக பிரியத்துடன் கொண்டுவந்து சமர்ப்பிக்க, குறைந்ததேயென சிந்தித்துக்கொண்டு அதிசீக்கிரமாய் தட்டான் வீட்டிற்குச்சென்று ஐயா! நீர் செய்து கொடுத்த அரைஞாண் நான்குவிரல் அளவு குறைந்தது என்று சொல்ல, இம்மொழியைத் தட்டான்கேட்டு அதை மறுபடியும் அழித்து செய்துக்கொடுத்தான். அதை வர்த்தகன் எடுத்துக்கொண்டுபோய் பகவானுக்குச் சமர்ப்பிக்கும் சமயத்தில் இரண்டுவிரல் அதிகமாயிருந்தது. இப்படியாக அந்த அரைஞாணை ஐந்தாறுவிசை கெடுத்து சுத்தமாய்ச்செய்ய அளவு மாத்திரம் சரிப்படவில்லை. இதைப்பற்றி வர்த்தகன் அதிக மனந்தளர்ந்து, நரஹரி வீட்டிற்குவந்து ஐயா! நீர் எத்தனைவிசை அதைக்கெடுத்து செய்த போதிலும், அந்த அரைஞாண் பகவானுக்குச் சரிப்படவில்லையே. ஆகையால் நீரே சந்நிதிக்கு வந்து உனதுகையால் அளவு எடுத்து அரைஞாண் செய்து கொடுமையா என்று பிரார்த்தித்தான். இம்மொழி கேட்ட நரஹரி வர்த்தகரைப் பார்த்து, ஐயா! யான் சிவபெருமானைவிட இதர தெய்வங்களைக் கண்ணால் பார்க்கக்கூடாது என்ற வைராக்கியம் என்னுள்ளத்தி லிருக்கின்றதே. இதற்கு என்ன செய்வேன்? ஆனல் உனதுமொழிக்கிணங்கி வந்தால் பாபத்துக்கு இடமாகுமேயென்று சொல்லினன். இதைக் கேட்டவர்கள் இதென்ன ஆச்சரியம்! கரும்பு தின்பதற்குக் கூலி கேட்பதுபோல் இருக்கின்றது. இவன் சொல்லுவது மகா உசிதமாயிருக்கின்றது. ஆனாலும் பெரிதல்ல, ஐயா! நீர் இதோ இருக்கும் கைக்குட்டையால் உமது இரண்டு கண்களை இறுக்கிக் கட்டிக்கொண்டு என் பின் பற்றி வருவீரென்று சொல்ல, அம்மொழிக்குச் சம்மதமடைந்து, வர்த்தகன் சொன்னதுபோல் கண்களுக்கு வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு ஸ்ரீபண்டரிநாதருடைய சந்நிதிச்சென்றூர். அக்காலத்தில், அங்கிருந்தவர்களெல்லோரும் இவனைப்பார்த்து ஆ! ஆ!! ரோகியாயிருப்பவனுக்கு அன்னம் எப்படி ருசிக்காதோ அதுபோல், இந்த ஈனனுக்குப் பண்டரிநாதருடைய சேவை ருசிக்கவில்லையே என்று எல்லோரும் பரிகாசம் செய்தார்கள். இது இப்படியிருக்க, நரஹரி சந்நிதிக்குள் பிரவேசித்து பண்டரிநாதருக்கருகில் சென்று பகவானைத் தனது கைகளால் தடவிப் பார்க்கையில் பஞ்சமுகங்களும் ஜடாபாரமும் சந்திரனும் நாகபூஷணங்களும் புலித்தோலும் சூலம் டமரகம் கபாலம் மான் மழு இவைகளெல்லாம் குறிகளாக அகப்பட்டன. அச்சமயத்தில் நரஹரியென்னும் தட்டான் ஆச்சரியமடைந்து இந்தப் பண்டரிநாதனை விஷ்ணுவென்று எண்ணியிருந்தோம். இச்சமயத்தில் என் கையில் சிவரூபம் அகப்படுகின்றன என்று சொல்லி தனது கண்ணைக் கட்டியிருந்த குட்டையை யவிழ்த்து சுவாமியைப் பார்க்கையில் பூர்வீகத்தில் தான் கேட்டிருந்த வண்ணம்போல் சிரசில் கிரீடமும் மகர குண்டலமும் ஸ்ரீவத்ஸகௌத்துவங்களும் வைஜயந்தியும் வனமாலிகையும் பீதாம்பரமும் ஆகியவைகளெல்லாம் பிரகாசத்தோடு செங்கல்மீது சங்கஹஸ்தனய் நின்றுகொண்டிருந்த விட்டலநாதனைப் பார்த்து எனக்கு ஏன் இப்படிப்பட்ட பிரம்மையுண்டாயிற்று? என்று தன்னுடைய விரதத்திற்கு மாறுபாடுண்டானதைக்கிரகித்து மறுபடியும் கண்களுக்குக் குட்டையைக் கட்டிக்கொண்டு பகவானைத் தடவிப்பார்க்க முந்தியகப்பட்டதுபோல் சிவரூபம் அகப்பட்டது. அப்பொழுது நரஹரியென்னும் தட்டானுக்கு ஞானேதயமாகி சர்வேஸ்வரனுக்கு நாமரூபங்கள் அனேகமாயிருக்கின்றதல்லால் என்புத்தியீனத்தால் இதுவரைக்கும் விஷ்ணுநாமங்களைத் தூஷித்துக் கொண்டு பண்டரிநாதரைச் சேவிக்காமல் இருந்தேனே யென்று நிந்தித்துப் பகவானுக்கு சாஷ்டாங்கமாக வந்தனங்கள் செய்து, அநேகவிதமாய் விஷ்ணுவை சிவநாமங்களால் தியானிக்கலானர். எப்படியென்றால்,

## அபராத மன்னிப்பு மாலை.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

செய்வகையும்நானறியேன் திருநாமம்தெரியேன்
சீர்பாதம்யானறியேன் சின்னம்சிறியேன்
பொய்வகையாய்ச்சொன்னபிழைபொறுத்தருளவே
புண்ணியனே உலகுபுகழ்பன்னகசயனு [ண்டும்
மெய்வகையையொன்றறிந்து விரும்பியெனையின்று
வித்தகனேகாத்தளிப்பாய் வேதச்சுடர்ப்பொருளே
செய்தகுற்றந்தனைப்பொறுத்து சங்குசக்கரதரனுய்
சித்தமதில்நின்ருடும் ஸ்ரீலட்சுமிநாதா. (க)

நிலைநாடியுன்புகழை நித்தமுநான்தேடி
நிற்காதபேயானேன் நித்தமெனையாளாய் [ம்
புலையன்செய்த குற்றமதைப்பொறுத்தருளவேண்டு
பூமியெங்குங்காத்தளிக்கும் புண்ணியண்ணதேவா
கலைஞானம்யானறியேனையா கசடனிர்மூடன்
கருணைவைத்தெனையாளாய் கண்ணுமணிவண்ணு
மலையெடுத்துக்காத்தளித்த மாதவனேதேவா
மாதுலட்சுமிமகிழ்நாதா மர்மமேனுபாதா. (உ)

உன்புகழைத்தெரியாமல் உள்ளமதைச்சோதித்தே
ஓடிவந்தேனெனைக்காவாய் உம்பர்கள்தேவா [ன்
நான்பெற்றஅகங்காரம் நாடிநின்றபாவி
நாதாந்தவேதச்சுடர் நானறியேன்மேவி
தென்புடனேநாகமதில் தேடிநித்திரைசெய்த
தேவாதிதேவகுண திவ்யபரஞ்சோதியே
பண்புடனேஉன்மீது பாடிநின்றேன்பாதம்
பக்ஷமுடனுண்டருள்வாய் லட்சுமிநாதா. (ங)

இப்படியாக அபராத மன்னிப்புமாலை பாடி ஒ சுவாமி! இருளாயிருந்த உள்ளத்தைப் பிரகாசம் போல் செய்தீர். ஐயனே! மெய்யனே! அன்பரைக் காக்கும் துய்யனே! எனது ஈனதிசையால் இது வரையில் உன்னைத் தூஷித்துக்கொண் டிருந்தேன். இனிமேல் உனது அந்தரங்க பக்தர்களில் என்னை ஒருவனுய் அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான். இதைக்கேட்ட ருக்மணிகாந்தன் சந்தோஷமடைந்து ஒ நரஹரி! நீஎனது சிவரூபத்தை ஸ்ரத்தையோடு ஆராதித்துக் கொண்டிருந்தாய். திரிகரணத்தால் இதரமானதை அறியாமல் பகவத்பரனுன உனக்கு அகண்ட ஞானத்தை உண்டாக்கும் பொருட்டு இப்படிச் செய்தேன். அது எப்படியென்ருல் அத்திரிமகாமுனி புத்திரபாக்கியம் வேண்டி ஜெகத்காரணவஸ்துவாகிய சர்வேஸ்வரனை தனக்குப் பிரத்தியக்ஷமாக வேண்டுமென்று தபம் செய்யுங்காலத்தில் யான் அரி அர ஹிரண்ய கர்ப்ப ரூபத்தோடு அவருக்குச் சேவைதரும் சமயத்தில் யான் ஒரே தேவனைப் பிரார்த்திக்க மூவருமாய் பிரத்யக்ஷமாகும் காரணமேதென்று கேட்க, அதற்கு ஐயா முனிநாதரே! எங்கள் மூவருக்கும் பேதமொன்றும் கிடையாது. எங்களுக்குத் திவ்யாத்மஸ்வரூபங்கள் அபின்னமாகி ரூபங்கள் பின்னமாயிருக்கும். ஆகையால் மூவருமே உன்னல் கோரும்படியான ஒரு தேவதையன்றி நாங்கள் மூவரும் வேறல்லவென்றனர். இப்படியாக அவருக்குச் சமாதானம் சொல்லி அவருடைய மனோரதத்தை அறிந்துக்கொண்டு எங்கள் மூவரின் அமிசத்தால் உனக்கு மூன்று புதல்வர்கள் ஜனிப்பார்களென்று அநுக்கிரகித்தார். அதுபோலவே அத்திரிமகாமுனிக்கு திரிமூர்த்தியுடைய அம்சத்தால் தத்தாத்திரேயன், தூர்வாசர், சந்திரன் இவர்கள் புத்திரரானர்கள். ஒ நரஹரி! இந்த அதிசயங்களை நீ கேட்டும் அறியமாட்டாயோவென்று சொல்ல இந்த வாக்கியத்தைக்கேட்ட நரஹரிதாசன் ஐயா! யான் இன்று தன்யனுனேன் என்று சொல்லி தான் கொண்டுவந்த அரைஞாணைப் பகவானுக்கு இடுப்பில் கட்டும் சமயத்தில் அதின் அளவு சரியாயிருந்துவிட்டது. அதைக்கண்ட வர்த்தகன் சந்தோஷமடைந்து பகவானையும் நரஹரியையும் கொண்டாடிவிட்டுத் தன் பிரார்த்தனை தீர்ந்துவிட்டதென்று சந்தோஷத்தோடு தன் வீட்டிற்குச் சென்ருன். இப்படியிருக்க பகவான் நிஜபக்திமான்களுடைய குணங்களை அறிந்து நடக்கின்றவராகையால் அந்த நாள்முதலாக நரஹரி பக்தனின்பொருட்டே தன்சிரசில் இலிங்கம்போல் கிரீடத்தைத் தரித்துக் கொண் டிருந்தார். ஆகையால் நரஹரியும் அதுமுதற்கொண்டு அரிஹரரூபத்தில் பேதமொன்றுமில்லையென்று நிஷ்காமியாய்ப் பகவானுக்கு ஆராதித்துக்கொண்டு ஸ்ரீபண்டரிநாதருக்கு அந்தரங்க பக்தனுயிருந்தான். ஒ சித்தர்களே! இப்படியல்லவோ வைராக்கிய மடையவேண்டும். நிஷ்காமியென்று உலகத்தாருக்குக்காட்டி அந்தரங்கத்தில் காமியாயிருப்பவர்களுக்கு எப்படி பகவான் சேவை தருவான். இதுபோல வைராக்கிய முடையவர்க்கு அதிக சீக்கிரத்தில் சேவைதருவார் என்று சொல்லினர். இதைக்கேட்ட சித்தர் மனமகிழ்ந்து, குருநாதா! இதுவரைக்கும் தாம் சொல்லிய கதைகள் கேட்டு இருள்சூழ்ந்த மனமானது சூரியனைக்கண்ட பனி எப்படி விலகிப்போகுமோ அதுபோலவே யாங்கள்செய்த பாபங்களெல்லாம் கொஞ்சம் கொஞ்சம் தீருகின்றன. ஆகையால் இந்தச் சிறுவர்மீது கிருபைசெய்து இன்னும் ஒருகதை சொல்லுவீரென்று கேட்க, நாபாஜி சித்தர் சந்தோஷமடைந்து, ஒ சீடர்களே! உங்கள் இஷ்டப்படி சொல்லுகிறேன், கேளுங்கள் என்று சொல்லத்தொடங்கினர்.

நரஹரிபக்தர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநம:

ஒன்பதாவது

# ஜனாபாயி சரித்திரம்.

சுலோகம்.

ஸந்த்யாவந்தனபத்ரமஸ்துபவதே போஸ்னானதுப்யம்நம:
போதேவா: பிதரஸ்சதர்பணவிதௌ நாஹம்க்ஷம: க்ஷம்யதாம்
யத்ரக்வாபிநிஷத்யயாதவகுலோத்தம சாப்யகமசத்விஷ:
ஸ்மாரம்ஸ்மாரமகம்ஹராமித்தமலம் மந்யேகிமன்யேநம:

ஸ்ரீகண்ணன் ஸ்தோத்திரம்.

மன்னுபெரும்புகழ் மாதவன்மாமணி வண்ணன் மணிமுடிமைந்தன்
தன்னைஉகந்தது காரணமாகஎன் சங்கிழக்கும் வழக்குண்டே
புன்னைகுருக்கத்தி நாழல்செருந்திப் பொதும்பினில் வாழும்குயிலே
பன்னியெப்போது மிருந்துவிரைந்தென் பவளவாயன் வரக்கூவாய்.

சுலோகம்.

யாபோஹம்பாபகர்மாஹம்
பாபாத்மாபாபசம்பவ:
த்ராஹிமாகிருபாயாகிருஷ்ண
சரணாகதவஸ்ஸல:

கேட்டீர்களா சித்தர்களே! நீங்கள் பக்தர்கள் கதைகளையே கேட்க விரும்பினீர்களாகையால் அப்படிப்பட்ட உங்களுக்கு அந்தக் கதைகளைச் சொல்லிச்சொல்லி, நானும் புனிதார்த்தனானேன். ஆனால் பக்தியாவது எப்படி யிருக்கவேண்டும் என்றால்; காமக் குரோத லோப மோக மத மாச்சரிய மென்னும் இக்குணங்களை ஞானமென்ற கோடாலியால் வெட்டி அக்காட்டை நிர்த்தூளிசெய்து அக்காட்டில்வசிக்கும் மிருகங்களையெல்லாம் ஓட்டி ஏகாந்த ஸ்தலமாக்கி நிர்மலயிடத்தில் பளிங்கின மென்ற மேடைகட்டி அம்மேட்டின்மீது பரஞ்சோதியாய் நிற்கும் ஞானதிபத்தை சஞ்சலமனத்தை ஒன்றாய் நிறுத்தி வாசியென்ற குதிரையேறி நாசிமுனைதனில் பார்க்கப் பக்தியின் மகிமையாகப்பட்டது அவ்வழியைக்காட்டி அச்சோதி கண்ணுக்குத்தோன்றும். அதைப் பக்திஞானமென்றுசொல்லுவார்கள். இப்பக்தியைப்போலவே ஜனாபாயி என்னும் கன்னிகைசெய்த பக்தியின் சரித்திரம் சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார்.

அம்மொழியைக்கேட்ட சித்தர்கள் சந்தோஷமடைந்து சுவாமி! தாம் சொன்ன சரித்திரம் தெரியச்சொல்லுமென்று சொல்ல, நாபாஜிசித்தர் மனமகிழ்ந்து சொல்லத்தொடங்கினார். கேளுங்கள் முன்னர் ஒருவருஷத்தில் கார்த்திகோற்சவத்தைச் சேவிப்பதற்கு அநேகஜனங்கள் பண்டரிபுரத்திற்கு வந்து பண்டரிநாதரைச் சேவித்துப் பாகவதர்கள் கோலாகலமாய் கண்ணாரப்பார்த்து ஆனந்தித்து, அவரவர் தேசத்திற்குப் போகும் சமயத்தில் அங்கொரு பெண்குழந்தை பகவான் சந்நிதியில் நின்று பாகவதருடைய பக்திபராபரத்தைக் கண்டு அந்த ஆனந்தத்தில் மனது லயித்து ஸ்தம்பனமாயிருந்தது. இப்படியிருக்கையில் அக்குழந்தையினுடைய தாய் தந்தை முதலான பந்துஜனங்கள் அக்குழந்தையைத் தங்களோடு ஊருக்குவரச்சொல்லி எவ்வளவும் நயப்புடன் அழைக்க, அம்மொழிக்கு அக்குழந்தை சம்மதிக்காமல், நான் இந்தப் பண்டரி க்ஷேத்திரத்தில் வசித்துக்கொண்டு இந்தப்புண்டரீகவரதனையும் அவர் பக்தர்களையும் சேவைசெய்துகொண்டிருப்பேன். நீங்களென்மீதிலிருக்கும் அபேக்ஷையைவிட்டு ஊருக்குப் போங்கள் என்று சொ

ன்னவுடனே அவர்கள் அந்தப் பெண்குழந்தையை அங்கு விட்டுவிட்டு அவர்கள் ஊருக்குப் போய்விட்டார்கள். இப்படி யிருக்கும்சமயத்தில் இவர்களுடைய சம்வாதத்தைக் கேட்டுக்கொண்டிருந்த பாகவதர்கள் அதிக ஆச்சரியமடைந்து இந்தக் குழந்தைக்கு இத்தனை சீக்கிரத்தில் ஞானபக்தி வைராக்கியம் பக்குவமாவதற்குக் காரணம் தெரியவில்லை. இதல்லாமல் ஸ்ரீமத் பண்டரிநாதர் அபிமானித்தாரோ தெரியோம்.

சுலோகம்.

அன்யஜன்மநிஸர்வாத்மா
விஷ்ணுரப்யர்சிதோயயா:—என்னும்

மொழிக்கிணங்க இக்குழந்தை சர்வப்பிரதாபியான ஸ்ரீபாண்டுரங்கனை பூர்வஜன்மத்தில் செவ்வையாய் ஆராதித்துக்கொண்டு ஆனந்தமாய் இருந்தாளோ என்று பலவாறு எண்ணிக் கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையில், பிறகு அந்தக்குழந்தை பகவான் சந்நிதியில் இருப்பிடமமைத்து பகவானைத் தியானித்துக்கொண்டிருக்கையில், இவ்விந்தையை நாமதேவர் கண்டு கருணித்து, ஓஅம்மணி! நீ ஏன் தாய்தந்தையைவிட்டு தனியாயிருக்கின்றாய்? ஆனால் உன்பெயர் என்ன? என்று கேட்கையில், அம்மொழியைக்கேட்ட அம்மாது ஐயா! எனது பெயர் ஜனபாயி என்பார். என் தந்தைபெயர் பண்டரிநாதரென்பார். என்தாயின்பெயர் ருக்மணி தேவியென்பார். இங்கிருக்கும் பகவத்பக்தர்கள் எனது பந்துஜனங்கள் என்று சொல்லுவாரென்று, சொல்லிவிட்டு மௌனமாய் இருந்துவிட்டாள். இம்மொழியைக்கேட்ட நாமதேவர் அதிக சந்தோஷமடைந்து ஓ ஜனபாயி! நீஎனது வீட்டிற்கு வந்து பகவத்பக்தி செய்துக் கொண்டிருவென்று சொல்லி அம்மாதைக் கைப்பிடித்து அழைத்துக்கொண்டு போய் தன் தாயாராகிய குணபாயியைப் பார்த்து ஓ அம்மணி! இப்பெண்குழந்தை பண்டரிநாதர் மீது பக்தி வைராக்கியம் கொண்டு தாய் தந்தை முதலாகிய பந்து ஜனங்களை வெறுத்துத் தனியே நின்றுவிட்டாள். ஆகையால் நம்மோடு வசித்து பகவன்நாமஸ்மரணை செய்துக் கொண்டிருக்கும். இதல்லாமல் பூர்விகம் ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் கம்சனால் ஏவப்பட்ட பரமபாகவதனான அக்ரூரன் தனுயாகத்திற்காக பகவானை பலபத்திரனோடு மதுரைக்கு அழைத்துக்கொண்டு வருகையில் இராஜவீதியில் கம்சனுக்காக சந்தனம் வாங்கிக்கொண்டு போயிருந்த ஏகவக்ரனென்ற குப்பனைக்கண்டு பகவான்,

சுலோகம்.

சுகந்தமேதத்ராஜான்ஹம் ருசிரம்ருசிரானனே
ஆவயோர்சாத்ரஸத்ருவாதம்தியதாமனேலேபனம்.

என்று கேட்டு அம்மாதரால் நங்கராசமடைந்து அம்மாது குஜத்வத்தை விட்டு அந்த மாது கோரியபிரகாரம் அம்மாதுக்கு தன் அங்க சம்ஸ்லேயத்தை உண்டாக்கி அந்த மாது கர்ப்பத்தில் நுபஸ்லோகுமென்றும் பரமபாகவதனை ஆதரித்து அவர் நாரதருடைய சிஷ்யராய் லோகோஜீவனத்துக்காய் சாத்வததந்த்ரமென்ற கிரந்தத்தை எழுதினார். அந்த ஏகவக்கிரன் இப்பொழுது பாண்டுரங்கனுடைய கிருபையால் ஜனபாயியாக அவதரித்து அநவரதமும் நிராமயமாகி ஸ்ரீகிருஷ்ணரசாயனம் பானம் செய்துக் கொண்டிருக்கின்றார். இப்பொழுது என்பாக்கிய விசேஷத்தால் இந்தச் சுசீலியோடு சகவாசம் எனக்கு லபிக்கலாச்சுது, என்று பூர்வீக விருத்தாந்தத்தைச் சொல்லி ஆனந்தமடைந்திருந்தார். ஆகையால் அதுமுதற்கொண்டு ஜனபாயி நாமதேவருடைய வீட்டில் தினந்தோறும் உதயத்தில் எழுந்து வீட்டின் வேலையெல்லாம் செய்து சதாபகவத்தியான பாராயணமாயிருந்தாள். இப்படியிருக்க இதரமானவர் யாராகிலும் நீ யாரென்று கேட்டால், யான் நாமதேவருடைய வீட்டின் வேலைக்காரி. இந்த மகானுபாவரைவிட தந்தை எனக்கு இதரமானவர் இல்லையென்று சொல்லிக்கொண்டிருந்தாள். இப்படி யிருக்கையில் ஒரு நாள்தினம் நாமதேவர் தன்வீட்டில் சயனித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் நடுஜாமமானவுடனே, காற்றுமழை யடித்துக்கொண்டிருக்கும் சமயத்தில், அக்காற்றால் அந்தவீட்டின் மேற்கூரை எல்லாம் ஆகாயத்தில் பறந்துவிட்டன. அச்சமயத்தில் ருக்மணிகாந்தனான ஸ்ரீகிருஷ்ணன் சுதரிசனமென்ற தன் சக்கரத்தைப் பார்த்து இச்சமயம் நீசென்று நாமதேவருடைய வீட்டின்மேல் கூரை எப்பொழுதும்போலவே மூடிவிட்டு அவ்வீட்டில் ஒரு துளியாகிலும் மழை விழாதபடிச் செய்வாய். இதோ யானும் உன்பின்பற்றி வருகிறேன் என்றுசொல்லி அனுப்பிவிட்டார். அம்மொழியைக்கேட்ட சுதரிசனம் பகவான் நியமித்த ஆக்கினைப்பிரகாரம் நாமதேவர் வீட்டை சுத்தப்படுத்தினார். இப்படிச் செய்துக்கொண்டிருக்கும் சமயத்தில் அந்தக்ஷணமே பாண்டுரங்கன் ஒட்டமும் நடையுமாக வந்து அங்கு மழைக்குக் கரைந்து விழுந்துபோன சுவர்களைப் பார்த்து ஆ! ஆ!! இப்படியும் மழையடித்ததாவென்று தன்கையால் மண்ணைப்பிசைந்து எப்போ

தும்போல சுவர்களை உண்டாக்கினர். இம்மொழியைக்கேட்ட உத்தவசித்தர்கள், சுவாமி! கேவலமாகிய மானிட ஜன்மியாயிருக்கும் நாமதேவருக்கு இப்படி உபகாரம் செய்யவேண்டிய காரணம் ஏது? என்றுகேட்க, அதற்கு நாபாஜிசித்தர் புன்சிரிப்படைந்து, ஓ சித்தர்களே! பகவான் சர்வ சக்தியுடையவனும், சத்திய சங்கற்பனுமாயிருந்தபோதிலும் பக்தர்களுக்கு மோக்ஷவிரோதியாய் ஐஸ்வரிய சுகங்களை மட்டடக்குவார். எப்படியென்றால்,.

சுலோகம்.

யாசிதோபிசதாபக்தைதர்ணுயிதம்காரயேத்தரிஃ
பாலமெளனபதம்தம்துமாதாகிம்நனிவாரயேது.

என்பதுபோல நெருப்பில் விழுவதற்கு அபேக்ஷிக்கும் சிசுவைத் தாய் காப்பாற்றுவதுபோல் தன்னுடைய பக்தர்களுக்கு இகசுகத்தை அபேக்ஷித்தபோதிலும், இதகாமியான பகவான் இவன் அபேக்ஷையைத் தலைகாட்டிடமாட்டான். நிரபேக்ஷியான நாமதேவருக்கு கிருஹ க்ஷேத்திராதி ஹைகசுகம் தன்னைக் கொடுக்கவில்லை யென்பது விசித்திரமல்ல. இன்னும்,

சுலோகம்.

ஹரிந்துஃ காளிபக்தேப்யோ
ஹிதபுத்தயாக்ரோதிவை
சஸ்ரக்ஷாராக்னிகர்மானி
ஸ்வபுத்ராயதாபிதா.

என்பதுபோல, ஹிதகாமியான தந்தை புத்திரனை ஆரோக்கியத்திற்காக இரணத்தை யறுத்து காரம்வைப்பதுபோல பகவான் நிஜபக்திவான்களுக்கு வைராக்கியம் அதிகமாவதற்குத் துக்கத்தை அதிகமாயுண்டாகச்செய்வார். இதல்லாமல் பக்திமான்களுக்கு இன்பசுகம் அநேக ஆபத்தையுண்டாக்குமென்று சொன்னர். இப்படிக்குப் பகவான் இதுபோலவே சுவர்வைத்துக்கொண்டு கீழ்விழுந்து கிடக்கும் செத்தைதனை எடுத்துக்கொண்டு தூரமாய்ச்சென்று போடும்சமயத்தில் இதற்குள்ளாக பிராதகாலமாயினது. அச்சமயத்தில் நாமதேவர் விழித்துக்கொண்டு வெளியில்வந்து பகவானைப்பார்த்து அநேக நமஸ்காரம்செய்து ஓ சுவாமி! இது என்ன வேஷம்? இங்கு என்னவேலை செய்துக் கொண்டிருக்கின்றீர்? என்றுகேட்கையில் பகவான் அம்மொழியை அங்கீகரித்து ஓநாமதேவா! காறறு மழையால் உனது வீட்டிற்கு அபாயமுண்டாச்சுது. நீ சம்சார காரியத்தைப் பத்தியாய்ப் பிடிக்காமல் சதா என்னை தியானித்துக்கொண் டிருக்கின்றாய். இதையறிந்த உனது தாயாகிய குணபாயி, நிஷ்டூர மொழியாடுவாளே? ஆகையால் நான் நடுஜாமத்தில் வந்து உனது வீட்டை எப்போதும்போல சுத்தப் படுத்துகிறேன் என்று சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில் பகவான் குறலைக்கேட்டு குணபாயி ஓடிவந்து பகவானுக்கு வந்தனம் செய்தாள். இதையறிந்தபிறகு பகவான் நாமதேவரோடு சல்லாப மொழிகளாடிக்கொண்டு வீட்டிற்குள் பிரவேசித்துச் சந்தோஷமாய் அமர்ந்திருந்தார்.

இப்படி அமர்ந்திருக்கும் சமயத்தில் ஜனபாயி வேகமாய் வந்து அநேகவிதமாய் நமஸ்காரஞ்செய்து பகவானுக்கு ஆயாசம் அதிகரித்ததென்று அவருடைய சரீரத்தை மெதுவாய்ப் பிடித்துக்கொண்டு ஓ கிருபாநிதியே! எம்மைக் காப்பதற்காக நீர் தேககஷ்டம் எடுத்துக்கொண்டீரே? என்று சொல்லிக்கொண்டிருக்கும்சமயத்தில் நாமதேவர் இதைப் பார்த்து சுவாமி! உனது தேகத்திற்கு அதிக ஆயாசமாயிருப்பதால் தாங்கள் எழுந்து உஷ்ண தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து புசிப்பதற்குவருவீரென்று பிரார்த்திக்க, இம்மொழி கேட்ட குணபாயி பகவான் ஜலகமாடுவதற்குத் தீர்த்தம்கொடுத்து அனுஷ்டானுந்தரம் தீர்த்துக்கொண்டு நிற்கையில், இதற்குள்ளாக குணபாயி போஜனத்திற்காக ஸ்தலத்தைச் சுத்திசெய்து இலையைப்போட்டு சகலவித பதார்த்தத்தோடு அன்னம் வட்டித்து பகவானை அமரும்படி செய்ய, அச்சமயத்தில் கோவிந்தன், விடலன், நாராயணன், மாதவன் இப்படி பெயருடைய நாமதேவர் புத்திரரை நாலுபேரோடு பகவான் ஒருபத்தியாய் உட்கார்ந்தார். குணபாயி நாமதேவர் இவர்கள் இருபுறம் அமர்ந்தார். பகவான் நேமித்தவண்ணம் அதிக சிரமிக்கலாகாதென தன் கணவன்சொற்படி ராதாபாயி தான் ஒருமூலையில் அமர்ந்தாள். இப்படி எல்லோரும் அமர்ந்திருக்கையில் ஜனபாயி வட்டித்துக்கொண்டு தன் மனதில் தன்னைமாத்திரம் விட்டு எல்லோரும் அமர்ந்து புசிப்பது ரசாபங்கமென்றுநினைத்துக்கொண்டாள். பகவான் கொஞ்சம் புசித்து, ஓ நாமதேவா! எனக்கு அன்னம் இன்பப்படவில்லை யென்று சொல்ல, நாமதேவர் இம்மொழியை அறிந்து ஓ பக்தவத்ஸலா! தாம் சொல்வது உண்மை. அது ஏதெனில், ஜனபாயியை இந்தப் பத்தியில் இல்லாதபடியால் உனக்கு ஆகாரம் உருசிக்கவில்லை யென்று சொல்ல, இம்மொழியைக் கேட்ட ருக்மணிகாந்தன் புசிக்காமல் அன்னத்தைக் கையில் வைத்துக்கொண்டு கொஞ்சநேரம் உட்கார்ந்து தன்னுடன்கூட உட்கார்ந்தவர் புசித்தானபிறகு எல்லோரும் எழுந்து

கை கால் சுத்திசெய்துக்கொண்டு சந்தோஷமடைந்திருந்தார்கள். இப்படியிருக்கையில் பகவானுக்கு மாத்திரம் ஜனபாயின்மீது உண்டான பிரியத்தைக் கண்டு ராதாபாயும் குணபாயும் ஆச்சரியமடைந்தார்கள். பிறகு குணபாயி எழுந்து பகவான் புசித்த மிகுதி சாதம் ஜனபாயி கையில்கொடுத்து இந்தச்சாதம் பிரமாதியர்க்கும் கிட்டாது. நாமதேவருடைய சாதகத்தால் உனக்கு லபிக்கலாச்சுது என்றுசொல்ல, அதற்குச் சம்மதமடைந்து அந்தச் சாதம் எடுத்துக்கொண்டுபோய் இது உசிதமான பிரசாதம். இதைப் பிறகுபுசிப்போமென பத்திரப்படுத்தினள். இப்படியிருக்க, அந்த இராத்திரி நாமதேவரும் பகவானும் ஒருபடுக்கைமீது சயனித்துக் கொண்டிருந்தார்கள். நாமதேவர் நித்திரையடைந்த பிறகு பகவான் சந்தடிசெய்யாமல் எழுந்து ஜனபாயினிடத்திற்குவந்து ஒ பெண்பாவாய்! எனக்கு பசி அதிகமாகின்றது. நாமதேவரோடு புசிக்கும் சமயத்தில் ரசபங்கமென்று எண்ணியதால் எனக்கு அந்த அன்னம் உருசிக்காமல் போச்சுது. இச்சமயத்தில் நீ என் பசியைத் தீர்க்கவேண்டுமென்று சொல்ல இம்மொழி கேட்ட ஜனபாயி ஒ லட்சுமி காந்தா! உனது கிருபைக்கு இச்சையாக யான் கொடுப்பதற்குப் பதார்த்தம் ஒன்றுமில்லையே? ஆனல் எனது ஆத்மாவைக் கொடுக்கின்றேன். அதை யங்கீகரிக்கவேண்டுமென்றுசொல்ல, மேலும் இது காலமல்ல. ஆகையால் புசிக்கத்தகுந்த வஸ்து கிடைப்பது அரிது. ஆனல் நீர் விட்ட மிகுதிசாதம் குணபாயி என் கையில் கொடுத்தாள். அதை உனக்குக் கொடுப்பதற்கு நாணமுறுகிறேன் என்று சொல்ல, ஜனபாயினுடைய பிரிய வசனங்களைக் கண்டு சந்தோஷமடைந்து, நீ இப்போது சங்கோசப்படவேண்டாம். எனது மிகுதி அன்னத்தை இப்படி கொண்டுவா? என்று சொல்ல, ஜனபாயி மகா பிரசாதமென்று அதைக் கொண்டுவந்து பகவானுக்கு எதிரில்வைத்தாள். இப்படி வைத்தபிறகு பகவான் ஜனபாயியை எடுத்து தன் தொடைமீது உட்காரவைத்துக்கொண்டு இருவருமாய் புசித்துக் கொண்டிருந்தார்கள். இதைக்கண்ட ருக்மணிதேவி வேத புருஷ கல்விச்சேத்புண்டான பகவான் இந்த ஜனபாயியோடு ஒரேபாத்திரத்தில் புசித்துக்கொண்டிருக்கின்றுரென்று ஆச்சரியமடைந்தாள். இப்படி இருவரும் புசித்து கைகளைச் சுத்தி செய்துக் கொண்டு சயனித்தார்கள். இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த குணபாயி எழுந்து கால் நடை தெரியாதபடிக்கு நாமதேவரிடத்திற்குவந்து நடந்த சங்கதிகளெல்லாம் சவிஸ்தாரமாய்ச் சொல்லியபிறகு அவர் இம்மொழிகேட்டு ஒ அம்மணி! இது ஒரு வேடிக்கையல்ல. பகவான் பக்திகிரீடன் அல்லவா? பூர்வத்தில் ராமாவதாரத்தில் சபரி எச்சலைத் தின்னவில்லையா? என்றுசொல்ல, அதுகேட்டு குணபாயி தன்னிருப்பிடம் சேர்ந்தாள். பகவான் ஜனபாயி நித்திரை யடைந்தபிறகு தானெழுந்து எப்போதும்போல நாமதேவருடைய பக்கம் சேர்ந்துசயனித்திருந்தார். இப்படியிருக்கையில் நாலாம் ஜாமத்தில் எழுந்து ஜனபாயி இடத்திற்குவந்து கை தட்டி எழுப்பும்சமயத்தில் அந்தம்மாள் நித்திரை சோகத்தால் மௌனமாய் இருந்துவிட்டாள். இதையறிந்து பகவான் தன் கரத்தால் அப்பெண் பாவையை எழுப்பி அமரச்செய்து தனது திவ்விய பீதாம்பரத்தால் முகம் துடைத்து ஒ ஜனபாயி! நீ மாவரைக்கும்சமயத்தில் யானும் உன்னுடன் அரைப்பதற்கு விருப்பமடைந்தேன். ஆகையால் இதோ வந்தேனென்று சொல்ல, இம்மொழியைக்கேட்ட ஜனபாயி எழுந்து ஏந்திரத்தைப்பூட்டி தானியத்தைக்கொண்டுவந்து எதிரில்வைக்க இதை பகவான் பார்த்து ஒ பாலிகாவணி! நீ இந்த ஏந்திரத்தின் கொம்பை கையில் பிடித்துக்கொண்டு திவ்விய பாடல்களைப் பாடுவாய். யான் அதைக் கேட்டுக் கொண்டிருந்து மாவை அரைக்கலாம். என்று சொல்ல, இம்மொழிகேட்ட ஜனபாயி சந்தோஷமடைந்து பாட ஆரம்பித்தாள். பகவான் அப்பொழுது மாவு அரைத்துக்கொண்டிருந்தார். அக்காலத்தில் ஜனபாயி பகவானைக்கோரி பாடிய பாட்டின் தாத்பரியமாவது என்னவென்றுல்; ஒ நிவர்த்தி தேவா! ஞானதேவா! சோபனதேவா! இவர்கள் எனக்குச் சொந்த பந்துக்கள். நாமதேவர் என்னுடைய பிரியமான தந்தை. குணபாயி என்னை அன்புடன் பெற்ற தாயார். கபீர் சாமந்தர் முதலானவர்கள் என் சகோதரர்கள். அவர்செய்த அதிசயத்தை நான் என்னவென்று சொல்லுவேன். அவர்கள் பக்திசெய்து சக்கரபாணியைச் சுவாதீனம் செய்துக்கொண்டு அனேகவிதமான அற்புதங்களை உண்டாக்கி சுகானந்தமடைந்து பரிபூரணமாய் இருந்தார்கள். பைட்ணி கிராமத்தில் பிராமணர் ஞானேஸ்வரரை அவமானமாக மொழியாடினதற்கு மகிஷத்தின் வாயில் நாலு வேதங்களை சொல்லச்செய்தார். கோராகும்பர் பாண்டுரங்கனை தியானித்துக்கொண்டு தன் குழந்தையை மண்ணேடு எரித்துப் பகவானை யான் அதிக்கிரமித்ததாக தான் எண்ணி தனது கரங்களை புடைத்துக்கொண்

டார். அதின்பிறகு நாமதேவருடைய கீர்த்தனை களைக் கேட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் அக்க ரங்கள் எப்போதும்போல்வளர்ந்துவிட்டது. மரண மடைந்த குழந்தையை பாண்டுரங்கன் கொண்டு வந்துகொடுத்தார். இதென்ன ஆச்சரியம்! தோட் டக்காரனுகிய சாமந்தனுடைய வனத்தைப் பார்க் கப்போன இடத்தில் அவன் தன்னுடைய மார் பைப்பிளந்து பகவானை அந்த மார்புக்குள் வைத் துக்கொண்டார். அனந்தகோடி பிர்மாண்டத்தை யும் தன்னுடைய கர்ப்பத்தில் வைத்துக்கொண்டிரு ந்த பகவான் சந்தோஷத்தோடு சாமந்தனுடைய மார்பில் ஐக்கியமாய் இருந்தார். இப்படியாக ஒளித் துக்கொண்டிருந்தவரை உடனே நாமதேவர் வந்து வெளிப்படுத்தினர். இதுவல்லாமல் எனது இஷ்ட பந்துவான கபீர் காசியில் துணி நிசவுசெய்யுங்கால த்தில், பகவானுடைய ஞாபகத்தால் நிசவுசெய்யா மல் மெய்மறந்திருக்கும் சமயத்தில் கோதண்ட பாணிவந்து அவ்விடத்தில் அமர்ந்து அத்துணிகளை நிசவுசெய்தார். இதல்லாமல் சிவராத்திரியன்று கிழ க்குமுகமா யிருந்த நாகநாதசுவாமி நாமதேவரு டைய கீர்த்தனைகளைக் கேட்பதற்கு ஆவலடைந்து, தன்னுடைய ஆலயத்தோடு வடக்குமுகமானுர். இப்படியாக நாமதேவர் கீர்த்தனைகள் செய்துக் கொண்டிருக்கும் சமயத்தில் ஒன்பதுலக்ஷம் பதக ஸ்தர் ஆகாசத்திலிருந்து பூமியில் இறங்கினர்கள். ஆகையால் இந்த அற்புதங்களுக்குக் காரணம் யா ரென்றால், இச்சமயத்தில் என்னோடு குந்தி மாவு அரைத்துக்கொண் டிருப்பாரே இவர் மகிமையை வர்ணிப்பதற்கு வேதசாஸ்திரங்களாலேயே சாத்தி யப்படாது. இப்படியாக இந்த தாத்பரியத்தோடு பாடல்களை நியமித்து ஜனபாயி பாடிக்கொண்டிருந் தாள். இதைப் பகவான் ஆநந்தகரமாக கேட்டுக் கொண்டு மாவை யரைத்துக்கொண்டிருந்தார்.

இப்படி யிருக்கும்சமயத்தில் குணபாயி இந்த சப்தத்தைக் கேட்டு படுக்கையில் இருந்தபடியே ஓ ஜனபாயி! உன்னுடன் மாவு அரைத்துக்கொண் டிருப்பவர் ஆரென்று கேட்டாள். அம்மொழியைக் கேட்ட ஜனபாயி மௌனமாயிருந்துவிட்டாள். அச் சமயத்தில் குணபாயி பெருந்தொனியெடுத்து ஆ! ஆ!! மாவு அரைப்பதற்கு ஒரு கூலிப்பெண்ணை வைத்துக் கொண்டாயோ? அடி! இந்த வீட்டுவேலை யில் கூலிக்குவந்த பெண் யாரென்று கோபத்தோடு கேட்டாள். அம்மொழியைக்கேட்டு பகவான்சொல் லத்தொடங்கினர். கேட்பாய் அம்மா! இந்த மாவு அரைத்துக்கொண்டிருப்பவள் கிருஷ்ணபாயி கூலி க்கு வரவில்லை. இம்மாது பாடும்பாட்டைக் கேட்ப தற்கு வந்து மாவு அரைத்துக்கொண்டிருக்கிறேன் என்று சொல்ல, அப்பொழுது நாமதேவர் தன் தாயிடத்திற்கு ஓடிவந்து ஓ அம்மணி! இவர் திரி லோக ரக்ஷகராகிய கோபால சூடாமணியல்லவா? உனக்குத் தெரியாதா? அந்த மகானுபாவரை கடின மான வார்த்தை சொல்லத்தகுமா? என்று கேட் டார். அம்மொழியைக்கேட்டு குணபாயி வெட்க மடைந்து தான் அந்தப்புரத்தில் சென்று ஆ! ஆ!! ஜனபாயி அதிக பாக்கியசாலி. இந்த அற்புதத்தை என்னவென்று சொல்லுவேன். இதுவல்லாமல் ஸ்ரீ ருக்மணிதேவியாருக்கு அந்த தலபூஷணமானவரை இந்த ஜனபாயி இவ்வளவு சுவாதீனம் செய்துக் கொண் டிருக்கின்றனல்லவா ? இதையறியாமல் எனது அற்பபுத்தியால் விபரீதம் செய்துக்கொண் டேன். பிரமாதிகள் தியானித்தபோதிலும் கிட் டாத பொருளை யான் கடினமாய் மொழியாடி னேன். ஆ! ஆ!! இப்படி பகவானுக்கு அந்தரங்க பக்தியுடைய ஜனபாயிக்கு அபராதம் செய்தேனே. ஆகையால் இப்பொழுது எனக்கென்ன ஆஞ்ஞை விதித்தாலும் தகும் என்று விசனமடைந்திருந் தாள். இப்படியிருக்க பகவான் மாவெல்லாவற்றை யும் அரைத்துக் கொஞ்சநேரம் நித்திரை விழித்த தால் ஜனபாயியோடுபேசிக்கொண்டே சற்றுநேரத் தில் நித்திரை செய்துவிட்டார். இதன்பிறகு சூரி யன் உதயமானதை ஜனயிகண்டு (உத்திஷ்டநரசால் தூல கர்தவ்யம் தைவமஹனசம்) என்பதுபோல் கைதட்டி ஓ சுவாமி! சந்நிதியில் உன்னை அர்ச்சிப்ப தற்கும் சேவிப்பதற்கு அநேகமாகிய பக்த ஜனங் கள் வந்து காத்துக்கொண்டிருப்பார்கள். என்று சொல்லுகையில் பகவான் எழுந்து ஜனபாயின்மீது தனக்குண்டாகிய பிரியங்களை எல்லாருக்கும் தெரி விக்கும்பொருட்டு மனதில் எண்ணி பீதாம்பரத் தோடு திவ்விய ஆபரணங்களையெல்லாம் கழற்றி அங்கு ஒரு மூலையில் எறிந்துவிட்டு ஜனபாயி தரிக் கப்பட்ட பழையகந்தையைப் போர்த்துக்கொண்டு சன்னிதிக்கு வந்துசேர்ந்தார். அச்சமயத்தில் அர்ச் சகர் கதவைத்திறந்து உட்பிரவேசித்துப் பார்க்கை யில் பக்தவத்ஸலன் பழைய கந்தையை போற்றிக் கொண்டிருந்தார். அதைப்பார்த்து சிலர் தேவாதி தேவனுக்கு இந்தப் பழையகந்தை தகுமா? என்று சொன்னர்கள். சிலர் ஞானமறிந்தவர் ஸ்ரீராமாவ தாரத்தில் சபரியும் கிருஷ்ணுவதாரத்தில் குப்ஜையும் போல் இப்பொழுது எவளோ ஒரு ஸ்திரீ பகவானு க்கு அத்தியந்த முடையவளாய் இருக்கவேண்டும்.

அவள்மீதிருக்கும் தன் பிரியங்களை வெளிக்குகாட்ட வேண்டுமென்று அந்தப்பெண்பாவை தரித்திருந்த பழைய கந்தையை நமது பிராணநாதர் போர்த்திக் கொண்டு வந்தாரென்று அந்த அர்ச்சகர் அந்தவஸ் திரத்தை எடுத்துப் பார்க்கையில் ஆபரணமில்லாமல் இருந்தது.

அதைப்பார்த்து அர்ச்சகர் முதலானவர்கள் நமது பகவான் பிரியத்தோடும் பிடியவலைக் கொடுப் பவராச்சுதே, இப்பொழுது பக்தியோக யுக்தமான ஒருபாக்கியசாலியுடைய பக்தியென்னும் வலையில் அகப்பட்டு இந்த பக்திப்பிரியன் தன்னுடைய பீதா ம்பர ஆபரணங்களை அந்த உத்தம பெண்ணுக்குக் கொடுத்துவிட்டு, அம்மாதினுடைய பழைய கந்தை யை அதிக பிரியத்தோடு போர்த்துக்கொண்டு வந் தாரோ! அந்த லோகபிராட்டியான புண்ணியவதி எங்கு இருக்கின்ருளோ! அது நமக்குத் தெரியவில் லையே! ஆனல் நாம் சந்நிதி கதவை மூடியிருந்த காலத்தில் பகவான் இப்படிச் செய்தாரோ! நாம் என்னசெய்யலாம், என்று சொல்லி கொஞ்சநேரம் விசாரமடைந்திருந்தார்கள். இப்படியிருக்க சில நாள் சென்றபிறகு முன் சந்நிதிக்கு வந்த ஜனுபாயி தரித்திருந்த வஸ்திரம் இதுதானென்று யோசித்து எல்லோரும் அந்த உத்தமியாரிடம் சென்று ஓ ஜனுபாயி! உனது அந்தரங்க பக்தியால் தெய்வ சிகாமணியை வசிகரப்படுத்திக் கொண்டாய். இது வல்லாமல் நாங்கள் செய்யும் உபசாரங்கள் பகவா னுக்கு ரமிக்காமலிருந்தது. ஆகையால் இன்று இரா த்திரி அவர் உன்னிடத்திற்கு வந்து தன்னுடைய பீதாம்பர ஆபரணங்களை உனக்குக் கொடுத்து விட்டு உன்னுடைய பழைய கந்தையை தரித்துக் கொண்டு வந்தாரே? இப்போது அந்த பீதாம்பர ஆபரணம் கொடுத்துப் பகவானைச் சமர்ப்பித்தால் நல்ல அழகாயிருக்குமே என்ருர். இப்படி சொன்ன வுடனே, ஜனுபாயி அவரைப்பார்த்து ஐயா! நீங் கள் சொல்லும்படியான வஸ்துக்களை யான் அறிய மாட்டேனே என்ருள். அவர் இதைக்கேட்டு ஓ பெண்பாவாய்! அந்த பதார்த்தங்கள் உன்னிடத் தில் இருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகை யால் அதைக் கொடுப்பாயாக அப்படிக் கொடா விட்டால் உன்னை தண்டிக்கப்படுமென்று சொல்லி ஞர். ஜனுபாயி இவைகளையெல்லாம் கேட்டு, இது வென்ன விபரிதம்? என்னை ஏன் நிந்தைக்குட்படச் செய்கிறீர்? அந்தப் பதார்த்தத்தை யான் அறிய மாட்டேன். அது என்னிடமிருந்தால் என் கண் கள் கெட்டுப்போகுமென்று பிரதிக்கினை செய்தாள் அப்பொழுது அவர்கள் உட்பிரவேசித்து அந்தப் பெண்பாவை சயனித்துக் கொண்டிருக்கும் இடத் தில் சோதிக்கையில் அந்த ஆபரணங்களெல்லாம் பீதாம்பரத்தில் கட்டி ஒரு மூலையில் போட்டிருந் தது. அதைப்பார்த்த எல்லோரும் இந்தப் பெண் பாவை பகவான் திரவியங்களை அபகரித்துத் தான றியமாட்டேனென்று பிரதிக்கினைசெய்தாள். இப்ப டிப்பட்ட துஷ்டாத்மாவை கிராமத்திற்கு வெளி யில் இராஜமார்க்கத்தின் சமீபத்திலிருக்கும் சூலத் திஞல் குத்தவேண்டுமென்று கிராமாதிகாரிக்கு அறி க்கைசெய்து, பிறகு எல்லோரும் ஒரே மனதாய் ஜனுபாயியை இழுத்துக்கொண்டுபோய் செந்திவாக தீரத்தில் நாட்டியிருக்கும் சூலத்தினருகில் நிற்க வைத்தார்கள். அந்தச்சமயத்தில் “ஸத்ருச்சேதைக மந்த்ரம், சகல முபநிஷத்வாக்ய ஸம்பூஜ்யமந்த்ரம், ஷம்ஸாரோத்தாரமந்த்ரம் ஸமுபசித தமஸ்ஸங்கநிர் யாணமந்த்ரம் ஸர்வவைஸ்வர்கைமந்த்ரம் வ்யஸந புஜகஸம்தஷ்ட ஸத்ராணமந்த்ரம், ஜிஹ்வே ஸ்ரீ க்ருஷ்ணமந்த்ரம் ஜபஜபஸததம் ஜன்மஸாபல்ய மந்த்ரம்.”

ஓ நாக்கே! சத்துருநாசத்திற்கு முக்கியமானது மந்திரம் உபநிஷத் வாக்கியத்திற்கு பூஜமந்திரம். சம்சாரத்தை வெறுப்பதற்கு மந்திரம், அதிகமான அஞ்ஞானத்தை நாசம்செய்யும் மந்திரம், சகல ஐஸ்வரியமும் கொடுக்கப்பட்ட மந்திரம், விசன மென்ற சர்ப்பத்தால் கடிக்கப்பட்டவரைக் காப் பாற்றும் மந்திரம், ஜன்ம சாபல்யமந்திரமான ஸ்ரீ கிருஷ்ண மந்திரத்தை இடைவிடாமல் ஜபித்துக் கொண்டிரு (யஞ்ஞாநாயஜபயஞ்ஞாமி) என்பது போல் யஞ்ஞயம் செய்வதில் ஜெபயஞ்ஞம் நானெ ன்று பகவத்கிதையில் பகவான் சொல்லியிருக்கின் ருர். அதுபோல் ஜனுபாயி ஜபத்தில் ஸ்திரமாய் நின் ருள். இப்படி யிருக்கையில் பக்தவத்ஸலன் கோப லோசனனை கோபாலகிருஷ்ணன் அந்த இரும்பு சூலத்தை பஸ்பமாகும்படி சங்கற்பித்தார். இந்த அற்புதத்தை அறிந்த எல்லோரும் ஆச்சரியமடை ந்து, இந்த நாரிசிகாமணியுடைய பக்தி நிச்சயமாய் இருக்கின்றது, என்று அந்த உத்தமியைக் கொண் டாடி அதிக வினயத்துடன் அம்மாதுக்கு அநேக வந்தனம் செய்து ஓ தாயே! உனது பக்தியானது திரிலோகத்திலும் மேன்மை பொருந்தி யிருக்கின் றது. அதுவிஷயம் நாங்களறியாமையால் தங்களு க்கு தீங்கு இழைத்தோம். ஆகையால் எங்களுடைய வந்தனங்களை க்ஷேமிக்கவேண்டுமென்று பிரார்த்தி த்து, பண்டரிநாதருடைய லீலாவிசேஷங்களை

அநேகவிதமாய் ஸ்மரித்து அவரவர் ஸ்தானங்களுக்குச் சென்றார்கள். இப்படியிருக்கையில் ஒருநாள் தினம் ஜனபாயி நாமதேவருடைய வீட்டின் வாயிலில் உட்கார்ந்து பாண்டுரங்கனுடைய விஷயமாய் கவனம் செய்துக்கொண்டிருந்தாள். பகவான் சந்நிதி கர்ப்பத்தில் ஏகாந்தமாயிருந்து அந்த மதுரவாணி கீர்த்தனங்களை ஒரு ஓலையில் எழுதிக்கொண்டிருந்தார். அந்தச்சமயத்தில் ஞானதேவர் பகவானிடத்திற்கு வரும் சமயத்தில் பகவான் அந்த ஓலையை ஒளிக்க ஆரம்பித்தார். இதைக்கண்டு ஞானதேவர் பகவானுடைய திருவடிகளில் வந்தனம் செய்து, சுவாமி! நீர் ஏகாந்தமாய் எழுதிக்கொண்டிருந்தவர், என்னைப் பார்த்தமாத்திரத்தில் ஒளித்திரே, அதற்குக் காரணமென்ன? என்று கேட்க, பகவான் மறைத்து ஓ ஞானேஸ்வரா! ஜனபாயி நாமதேவருடைய வீட்டின் வாயிலில் உட்கார்ந்து பரம பக்தியோடு என்மீது கவனம் செய்துக்கொண்டிருக்கின்றாள். அது சனகாதருடைய தியானத்திற்காயினும் அதிசயித்திருப்பதால் பிரம்மையோடு அந்த கீர்த்தனைகளை எழுதிக்கொண் டிருக்கின்றேனென்றார். இதைக்கேட்ட ஞானதேவர் ஆச்சரியமடைந்து ஓ தேவா! ருக்மணிகாந்தா! உனது பிரபாவத்தை யார் வர்ணித்துக் கொண்டிருக்கின்றார்கள். உனது அநந்த கலியாண குணங்களையெல்லாம் உணர்ந்த ஜலாக்கினி, வால்மீகி, பராசர், வியாசர், சுகாதி முதலானோர்கள் மேகம் ஜலத்தை ஜீவராசிகளுக்குத்தாரகமாகவருஷிப்பதுபோல் வர்ணித்திருக்கிறார்கள். அநந்தாதி நித்தியசூரிகளும் பிரமாதி தேவர்களும் சனகாதியோர்களும் நாரதாதி தேவரிஷிகளும் பிரஹலாதாதி பக்தர்களும் அனவரதம் பக்தி வைராக்கியமடைந்து உன்னைத் தியானிக்கின்றார்கள். இத்தனைபேர்களையும் வெறுத்து ஜனபாயி கவனத்திற்குச் சொக்கி எழுதிக்கொண்டிருக்கின்றீர். இது தேனுவும் சத்யோசாதமான வத்சத்தில் பிரிய ஆனந்தத்தால் தன் பூர்வ வர்சங்களை போஷகர்களைக் கொம்பினால் குத்தித்தள்ளுவதைப்போன்றிருக்கின்றது. (த்வயிகிம்சித்ஸமாபன்னே கிம்கார்யம்சீதயாமயா) எப்படியென்றால் உனக்கு ஒரு விதத்தில் ஆபத்துண்டாகும் காலத்தில் சீதாபிராட்டியோடு எனக்கு என்ன காரியமென்று சுக்கிரீவ மகாராஜரோடு நீ சொல்லவில்லையா? இது உனக்கு சுபாவகுணமா யிருக்கின்றதல்லவா? பர்த்தா தன்னுடைய அந்தரங்கத்தைப் பதிவிரதையான பெண் ஜாதிக்கு ஒளித்ததுபோல், தேவரீர், அந்தரங்கத்தைப் பக்தப் பிரியருக்கு ஒளிப்பதற்குக் காரணமென்ன? நீர் பக்த பரதந்திரனென்று திரிலோகங்களும் அறிவார்கள். இதற்கு வெட்கமேன்? உனக்கு இத்தனை அபிப்பிராய விஷயமாய் இருக்கப்பட்ட ஜனபாயியை உன்னோடு வந்து சேவிக்கவேண்டுமென்று அபேக்ஷிக்கின்றேனென்று சொல்ல அதைக் கேட்ட கோபாலகிருஷ்ணன் சந்தோஷமடைந்து குப்ஜா கிருகத்திற்கு அன்போடு வந்ததுபோல், ஜனபாயி இடத்திற்கு ஞானதேவரோடு வந்து நின்றார். இந்த ஆச்சரியத்தைக்கண்டு பகவானை ஆஸ்ரிதபரதந்திரனை வர்ணித்துக்கொண்டு அநேக பாகவதர்கள் அவருடன் தொடர்ந்தார்கள். இப்படியாக பகவான் ஞானதேவருடைய அந்தரங்கபக்தருடன் வருவதைக்கண்டு நாமதேவர் எதிர்கொண்டு வந்து சாஷ்டாங்க வந்தனம்செய்து அழைத்துக் கொண்டு வந்து தன் வீட்டில் அமரச்செய்து பகவன்நாமசங்கீர்த்தனை செய்து அங்கிருந்த எல்லோரையும் ஆனந்தப் பரவசமடையச் செய்தார். நாமதேவர் பகவானைப்பார்த்து இந்தச் சாதுக்களெல்லோரும் ஜனபாயியைக் காணவேண்டி அபேக்ஷித்து வந்தார்களென்று சொல்ல, பகவான் அந்த ஸ்திரீரத்தினத்தை அழையுமென்று சொல்கையில் இம்மொழிகேட்ட நாமதேவர் மகாவாக்கியமென்று சொல்லி அந்தப்புரம் சென்று சாணி மிதித்துக்கொண்டிருந்த ஜனபாயியை அழைத்துக்கொண்டுவந்தார். அம்மாதுசிரோமணி வந்தவுடனே பாண்டுரங்கன் ஞானதேவன் முதலான சாதுஜனங்களுக்கு வந்தனம் செய்துவிட்டு ஒரு பக்கமாய் நின்றுகொண்டிருக்க ஞானதேவர் நாமதேவரைப் பார்த்து இன்றைக்கு ஒரு அதிசயத்தைக் கண்டேன். அதாவது என்னவென்றால், இந்த புண்ய சுலோகன் ஜனபாயின் விஷயமாய் செய்த கவனத்தைத்தானே ஏகாந்தமாய் எழுதிக்கொண்டிருந்தார் என்னைக் கண்டமாத்திரத்தில் அந்த ஓலையை ஒளித்து வைத்துக் கொண்டாரென்று சொல்ல, இம்மொழியை பக்தபிரியன் கேட்டு ஒபக்திவான்களே! யான் ஜனபாயினுடைய பக்திரசத்தை யெழுதியது தப்பிதமொன்றுமில்லை, இந்த சுத்தியுடைய கிளி சொற்கள் எனக்கு ஆனந்தத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றன அமிர்தமான வசனத்தையும் வேதகர்ப்பமான பரம தத்துவமாகியிருக்கின்றது. ஆகையால் அந்த கீர்த்தனைகளை என்னுடைய மன பத்திரத்தில் எழுதிக்கொண்டேன். இந்த ஜனபாயி என்னை ஸ்மரித்த கீர்த்தனைகளைப் பாடுபவருக்கு கிருஹதுவாரத்தில் நான் சானித்யம்செய்து அவர்களை ஏமாறாமல் காப்பாற்றிக்கொண்டிருப்பேன்,

என்று பகவான்சொன்ன மொழிகளைக்கேட்டுஞான தேவர் எல்லோரும் கைகள் கட்டி ஜெய! ஜெய!! கோஷ்டம்செய்தார்கள். அச்சமயத்தில் அங்கு கபீர், சோகாமேளர், ரோஹிதாசர், சாமந்தர் முதலான பரமபக்தி ஜனங்கள் சூழ்ந்திருந்தார். ஞானதேவர் நாமதேவர் கிருஹத்தின் மத்தியில் பிரகாசிக்கும் சூரிய சந்திராதியரைப்போல பிரகாசித்துக் கொண்டிருந்தார். ஞானதேவர் ஜனபாயியைப் பார்த்து ஒ ஸ்திரீரத்தினம் ஸ்ரீகிருஷ்ணனுக்கு அத்தியந்த பக்தரங்கனன பக்தனுடைய திருவடித் தாமரைகளை நாமதேவராகி புண்டரீகநாதனை ஆராதித்துக்கொண்டு சுவாதீனம் செய்துகொண்டார். நீ பூர்வ ஜன்மத்தில் பகவானை எந்த ரூபத்தால் பஜித்தாய்? என்று கேட்க, அம்மொழி கேட்டு ஜனபாயி சந்தோஷமடைந்து சொல்லத் தொடங்கினள். கேளும் சுவாமி! யான் கிருஷ்ணவதாரத்தில் குப்ஜனுய் அங்கராகத்தைக் கொடுத்து பகவானை ஆராதித்துக்கொண்டிருந்தேன். வாசுதேவன் கம்சவதனந்தரத்தில் தன் பிராணபிரியனன உத்தவனுடன் என் வீட்டிற்கு வந்து என்னை அநுக்கிரகித்திருந்தார். அப்பொழுது அந்தப்பகவான் புண்டரீகவரதனுய் யுக்தவாச்சனன நாமதேவரை அபிமானித்து அதன்மூலமாய் இந்தப்பசவானுடைய கடாக்ஷபாத்திரத்திற்கு லக்ஷியமானேன் என்று சொன்னள். இதைக்கேட்ட ஞானதேவர், ஆச்சரியமடைந்து இப்படியானல் உன் பூர்வபுண்ணிய ருசிதான். இதுவல்லாமல் பிரமாதியர்க்கும் துல்லபமான ஹிருஷிகேசன் உன்னைப்போலவே இருக்கின்றார் என்று சொல்ல பிற்பாடு பகவான் அங்கு இருந்த பக்திவான்களைப் பார்த்து ஒசாதுக்களே! இது முதலாக என்னை கீர்த்திக்குமவர்களில் அவரவர் கீர்த்தனைகள் அவரவர் எழுதவேண்டும் என்று ஒரு நிர்ணயம் செய்தார். எப்படியென்றால், ஞானேஸ்வரருடைய குருகீர்த்தனங்களை சச்சிதானந்த பிராமணனும்; நிவர்த்திதேவர் சுருதியை சோபானதேவனும், முக்தாபாயி கீர்த்தனையை ஞானேஸ்வரனும்சோகாபரமானந்தருடையகீர்த்தனையைவிசோபாகேசனும்,சாமந்தன் கீர்த்தனையை சிவோபாஅர்ச்சகனும் கூர்மதாசன் கீர்த்தனையை சயதேவனும் அனந்தபட்டர் கீர்த்தனையை சோகாமேளனுமாக எழுதவேண்டுமென்று நியமித்துப் பிறகு நாமதேவருடையதும் ஜனபாயினுடைய சுதாரச கீர்த்தனைகளையும் நானே எழுதுகின்றேன் என்று சொல்லிவிட்டார்.

அதன்பிறகு ஞானதேவரைப் பார்த்து இனி ஜனபாயி கீர்த்தனைகளை உங்களுக்குக் காட்டுவதற்கு ஏதும் சந்தேகமில்லையென்று சொன்னர். இதைக்கேட்டு சாதுஜனங்கள் பகவானைப் பார்த்து அபர்யாத்த மிருதுவான ஒ தேவா! விஸ்வனியந்தமானஉன்னை இப்படி வசியம்செய்துக் கொண்டிருக்கும்ஜனபாயியுடையபாக்கியவிசேஷத்தைச்சொல்ல சொல்ல கோசரமாகின்றது. உனது பாக்கியவசத்தால் ஜனபாயி ஜகத்விந்தமாச்சுது. இந்த பாக்கிய சாலியை வேலைக்காரி என்று இனி எவரும் ஏளனஞ்செய்யலாகாதென்று கொண்டாடினர். அச்சமயத்தில் நாமதேவர் சுகந்த பரிமளமுடைய ஜலத்தைக் கொண்டுவந்து,

சுலோகம்.

அஸ்மத்குருஸமாரம்யாம்மத்ஸ்யாதீஸ்வரமத்யமாம்
லக்ஷ்மிநாயகபர்யம்தாம் வந்தேகுருபரம்பராம்.

என்று குருபரம்பரமாய் சந்தியாவந்தனம் செய்து பகவானுக்கும் பாகவதருக்கும் ஸ்ரீபாத தீர்த்தம்செய்து,

விஷ்ணுபாதோதகம் பீத்வாகோடிஜன்மாகனசனம்
யேசத்ஸமஸ்தபாபானும் பிராயச்சித்தம்மனிஷிபிஃ
நிர்னீதம்பகவத்பக்த பாதோதகநிஷேவனம்.

இப்படியாக ஸ்ரீவிஷ்ணுபாதோதகத்தை பானம் செய்துக்கொண்டால் கோடிஜன்மத்திலும் சாபம் நசிந்துபோகும். அபாதமான சமஸ்த பாபங்களை பகவத் பக்திவான்கள் பாதோதகம் பிராயச்சித்தமாகுமென்று ஞானபுருஷனல் நிர்ணயமாகும் என்னும் பிரபாவத்தைக் கொண்டாடினர். (பிபன் விரசி தாரயேத்) என்னும் மொழிபோல் அந்தத் தீர்த்தத்தை ஸ்வீகரித்து சிரசில் தரித்துக்கொண்டார். பிறகு பக்திவான் பக்திவான்களோடு சந்நிதிக்குச் சென்று நடந்த சவிஸ்தாரத்தை ஸ்ரீருக்மணிதேவிக்கு விசிதமாய்ச் சொன்னர்.

ஜனபாயி சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணபரப்ரம்மணேநமஃ

பத்தாவது

# மச்சேந்திரநாதர் சரித்திரம்.

ஸ்ரீகண்ணன் ஸ்தோத்திரம்.

சுலோகம்.

ஜலௌகமக்னசராசராதரா விஷாணசோட்யாகிலவிஸ்வமூர்திவா
சமுத்தரதாயேனவராஹரூபீண சமேஸ்வயம்பூர்பகவான்ப்ரஸ்த்து..

கிடேஷுபக்ஷிஷும்ருகேஷுசரிஸ்ருபேஷு
ரக்ஷிஃபிசாசமனுஜேஷ்வபியத்ரகுத்ர
ஜாதஸ்யமேபவதுகேசவதேப்ரசாதத்தவ
ய்யேவபக்திரசலாவ்யபிசாரிணிவ.

முதலாவது அத்தியாயம்.

இப்படியாக பக்தர்கள் சூரியன் உதித்தவுடனே நியம நிஷ்டை முதலாகிய ஷட்கிரியைகளை முடித்துக்கொண்டு குருபீடமாகிய நாபாஜிசித்தர் சமுகம் சென்று அனேக வந்தனம் புரிந்து சுவாமி! நேற்றையதினம் தாம் சொன்ன சரித்திரம் கேட்டதனல் சந்தோஷமடைந்து, நாங்கள் எடுத்த ஜன்மமானது பரிசுத்தத்தையடைந்தது. ஆகையால், யாதொரு பாசமும் அணுகாமல் தொலைந்து எமபாசமென்பது எம்மைக் கண்டமாத்திரத்தில் கல்லைக்கண்டகாகம் ஒடுவதுபோல் ஒடிவிடும். இந்த சூட்சுமமெல்லாம் தம்மால் அறிந்துக்கொண்டோம் அதுபோல் இன்றைக்கும் காலம் போக்காமல் ஓர் சரித்திரத்தை யாங்கள் புனிதார்த்தராகத்திருவருள் செய்வீரானல் அதைக்கேட்டு ஆனந்தமடையலாமென்று மனமுவந்தோமென்று மிகவும் வணக்கமாகச் சொன்னர்கள். அதுகேட்ட நாபாஜிசித்தர் இவைகளையெல்லாம் மனங்கொண்டு சந்தோஷமடைந்து அந்தச்சிடர் கூட்டத்தைக்கண்டு ஒ அன்பரே! உங்கள் இஷ்டப்படி சொல்லுகிறேன். கேளுங்கள். ஆனல் இன்று சொல்லும்படியான மச்சேந்திரநாதர் சரித்திரம் அதிக பக்திரசமானது. மாயைகளை யெல்லாம் அறுத்து எறிவதுமாகும். ஆகையால் இதைச் செவ்வையாய்க் கேட்பீர்களாக என்று சொல்லத் தொடங்கினர். அது எப்படியென்றால் பூர்வம் ஒருநாள் க்ஷீரசமுத்திரத்தில் கைலாசபதியாகிய சாக்ஷாத் பரமசிவன் தம்தேவியாகிய பார்வதியோடு சஞ்சரித்துக்கொண்டு ஸ்ரீதாரக நாமபஜனை செய்துக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் ஸ்ரீபார்வதிதேவி பரமசிவனுக்கு வந்தனம் செய்து ஒ பிராணவல்லபா! நீர் இப்போது பஜித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீதாரகநாமத்தின் மகத்துவத்தை எனக்கு விகசிதமாகச் சொல்லவேண்டும். சுவாமி என்று பிரார்த்தித்துக் கேட்கும் சமயத்தில் கைலாசபதியாகிய பரமசிவன் அதிக சந்தோஷமடைந்து பார்வதிதேவியைப்பார்த்து ஒ பர்வத ராஜபுத்திரி! இப்பொழுது நீ கேட்டதொரு ஸ்ரீ தாரகநாமபிரபாவத்தை கணக்கிட்டு சொல்லுவதற்கு தேவர்க்கும் மஹாரிஷிகளுக்கும் அசாத்தியமாகும். ஆகையால் ஸ்ரீதாரக பிரம்மமான இராமாவதாரம் சாதுபரித்திரான துஸ்க்ருதவிநாச தர்ம சம்ஸ்தாபத்துக்காக செய்யப்பட்டிருக்கின்றது. இதுவல்லாமல் இந்த அவதாரத்தில் சமஸ்த கலியாண குணங்கள் மிகவும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. இந்தப் பகவான் கடாக்ஷத்தால் கோசல தேசத்தில் வசிக்கும் ஜனங்களெல்லாம் முக்தியடைந்தார்கள். இந்த மஹாத்மாவைப்பற்றி வர்ணச்சிரம தர்மங்கள் இரக்ஷிக்கப்பட்டன. இந்தப் புருஷோத்தமருடைய நாமங்களை ஜெபித்தவர்க்கு புத்தியும் முக்தியும் சாஸ்வதமாயிருக்கும். இதுவல்லாமல் நாரத வால்மீகநாதர் இந்த நாம பிரபாவத்தை அறிகுவார். நித்திய விபூதியாயிருக்கும்

அயோத்தியாவென்ற திவ்விய நகரத்தில் பகவான் ஸ்ரீ இராமரூபமாய் சாரித்தியம்செய்து ஸ்ரீ தாரக மந்திரத்தை ஜபித்தவர்க்கு புத்தி முத்தியும் அருள் செய்துக்கொண்டிருக்கின்றார். இந்த இராம பிரபாவத்தையும்அவருடையநாமத்தின் வைபவங்களையும் (இராமதாபன்யமான உபநிஷத்தில்) சொல்லியிருக்கின்றது. இதுவல்லாமல் பகவான் இன்பரூபத்தை பரிக்கிரசத்து கிம்புருஷ வர்ஷாதிபதியாகியந்த வர்ஷஜனங்கள் உபாசித்துக்கொண் டிருக்கின்றார்கள். பிரமாதி தேவராலும் பிரார்த்திக்கப்பட்டு இந்தவைவஸ்வத மநுவந்திரத்தில் தசரதபுத்திரனாகி அவதாரமடைந்து சரணாகதிவைபவமாக பிரகாசித்தார். இந்த பக்தவத்சலனுக்கு வாசமான ஸ்ரீதாரக நாமத்தை தியானிப்பதால் சஹஸ்ரநாமங்கள் தியானித்தபலன் சித்திக்கும். இந்த இராமபுத்திரனுடைய சரித்திரத்தை சர்வலோகத்திலும் சர்வஜனங்களும் ஸ்ரத்தாபக்தியோடு பாராயணம் செய்துக்கொண்டிருக்கின்றார்கள். இதுவல்லாமல் விஷ்ணுலோகத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு விஸ்வசேனன் சத்திய லோகத்தில் ஹிரண்யகசிபன் மார்க்கண்டேயமகாரிஷி கைலாசத்தில் சங்கரன் நந்திகேஸ்வரன் ஆதிசதகோடி இவர்கள் மிகவிஸ்தாரமான ஸ்ரீ ராமாயணத்தை சொல்லிக்கொண்டிருக்கின்றாரென்றும், இந்திராதிலோகத்தில் பத்துகோடி ஒருகோடி கணக்காக நிர்மித்திருக்கும் ஸ்ரீராமாயணத்தைப் பாராயணம் செய்துக்கொண் டிருக்கின்றாரென்று பிரமாண்ட புராணத்திலும் சொல்லியிருக்கின்றது. நாரதோபதேசத்தால் பிர்ம்மா அநுக்கிரகமடைந்த வால்மீகமகாரிஷி இந்த மானிடலோகத்திற்கு ஸ்ரீ ராமாயணம் இருபத்து நாலாயிரம் கணக்கோடு எழுதிவிட்டார். இதுவல்லாமல் ஸ்ரீராமச்சந்திரனுடைய தாரகமந்திரத்தை உபாசித்த சமஸ்த தேவர்களும் அவரவர்கள் பதங்களை அடைந்தார்கள். இப்படிப்பட்ட தாரக மஹாமந்திரத்தை சமஸ்த கல்யாண குணத்மரான லட்சுமிகாந்தன் பூர்வீகத்தில் எனக்கு உபதேசித்தார். ஐயோ! சொந்த பரமமந்திரத்தை சிரத்தாபக்தியுடன் சுபமாக உனக்கு உபதேசிக்கின்றேன் என்று சொல்லி, சுநீதியான பார்வதிதேவியர்க்கு ஸ்ரீ தாரகமந்திரோபதேசம் உபதேசித்தார். அது எப்படியென்றால், ஓ பெண்ணே! நான் சொல்வதைக்கேள்.

சுலோகம்.

ஜனானந்தரஸஹஸ்ரேஷ்தே போத்யானசமாதிபி
நராணாமக்ஷீணபாபானாம் இராமபக்திః பிரஜாயதே.

இது எப்படியென்றால் பூமிதனில் அநேகமாகிய ஜன்மமெடுத்து அதில் தபசுபகவத்தியானம் சமாதி இவைகளில்லாமல் எதுவாகிலும் ஷட்கர்மங்கள் செய்திருந்தவர்களுக்கே இராமன்மீது பக்தி உதித்திருக்கும். அப்படி பக்தி உண்டான புருஷனே நிர்மல ஞானசொரூபனென்று சொல்லப்படும். என்று உமாதேவிக்கு சங்கரப்பெருமான் உபதேசித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் அந்த சமுத்திரத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்த கர்ப்பிணியான ஒரு மீனானது அந்த பார்வதி பரமேஸ்வரனை அதிக பிரியத்துடன்பார்த்துக்கொண்டிருந்து, நித்திரைசெய்தது. அது எப்படியென்றால் பூர்வீகத்தில் பரமபாகவதனை பிரகலாதனன் தாயின் கர்ப்பத்திலிருந்து நாரதருடைய உபதேசத்தை கிரஹித்ததுபோல் மீனுடைய் கர்ப்பத்திலிருந்து சிவாம்சமான ஜீவன் பரமசிவன் உபதேசத்தை அடைந்து, நித்தியமும் ஸ்ரீ தாரகநாமத்தைத் தியானித்துக்கொண்டு சில காலம் மீன்கர்ப்பத்தில் வசித்து நிர்மலஞானத்துடன் மானிடரூபமாய்ஜனித்தார். பகவானுடைய சங்கல்பத்தாலல்லவோ கோஜீவனர்த்தத்தை பரத கண்டத்தில் சேர்க்கப்பட்டது. இப்படியிருக்க அந்தப் புருஷன் மீன் கர்ப்பத்தில் பிறந்தபடியால் மச்சேந்திரனென்று அழைக்கப்பட்டது. அவர் தன் தேகம் மீன்வாசனையோடுசேர்ந்திருப்பதால் மானிடருடையஅருகில் சேர்வதற்கு யான்அருகனல்லன் என்று சொல்லிக்கொண்டிருந்தார். அந்த மகானுபாவனோ சாக்ஷாத் சிவாம்சத்தில் பிறந்தபடியால் ஞானவைராக்கியம் பூரணமாயிருந்தது.

இப்படியிருக்கையில் இவர் சகலமான ஜெகஜீவனே, அல்லது கல்யாணகுணாகரனே, மூர்த்தியாய்ப் பிறந்த ஸ்ரீதாரகபிரம்மமோ, அல்லது குணாதீத சுத்த சொரூபமோ, ஏதும் தெரியோமென்று சாதுக்கள் தன்னைக் கொண்டாடிக்கொண்டிருக்கும் சமயத்தில் ஜகைமாதிக நவித்தியாஸ்வர்பமில்லாமல் பிரகாசித்துக்கொண்டிருந்தார். இப்படி யிருக்கும் சமயத்தில் அந்த மகாத்மா தீர்த்தயாத்திரை செய்வதற்கு அநேகமான தீர்த்தங்களில் திரிந்து மூழ்கி திவ்விய க்ஷேத்திரங்களில் சந்நிதிகளில் எழுந்தருளியிருக்கும் ரூபத்தைச்சேவித்து பிக்ஷான்னம்செய்து ஜீவித்துக்கொண்டு நிர்மலசொரூபனாய் காலங்கழித்துக்கொண்டிருந்தார்.

இப்படி யிருக்குஞ்சமயத்தில் ஒருநாள் ஒரு கிராமத்தையடைந்து அங்குவசிக்கும் ஒருவர்த்தகனுடைய வீட்டைக்கண்டு அவ்விடத்திற்குச்சென்று ஈனதிசை உடையவனுக்குப் பிச்சை கொடுமென்று

கேட்கும் சமயத்தில், அந்த வர்த்தகனுடைய பத்தினி தன் இரண்டு கைகளாலும் அன்னத்தை எடுத்துக்கொண்டு வந்து அவருக்களித்து ஆ! ஆ!! இவர் மகா ரூபமுடையவராயும் காஷாயம்தரித்தவராயும் தூளிதம் பூசியவராயும் இருக்கின்றாரே என்று மச்சேந்திரநாதனுடைய ரூபத்தைப்பார்த்து இவர் யாரோ? மகா புண்ணியபுருஷரோ! என்று தன்மனதில் எண்ணி, ஓ உத்தமசீலா! நீர் எங்கிருந்து எங்கு போகின்றீர்? இங்கு ஏன் வந்தீர்? என்று வினயத்துடன் கேட்டாள். அதுகேட்ட மச்சேந்திரநாதன் ஓ அம்மணி! யான் திக்கில்லாதவன்; தீர்த்த யாத்திராபரன்; ஈனதிசையுடையவன். என்றுசொல்ல அம்மொழியைக்கேட்டு அந்த வர்த்தகனுடைய தர்ம பத்தினி சந்தோஷமடைந்து ஓ மஹாத்மா! எங்களுக்கு அதிக தனமிருந்தும் புத்திரபாக்கியமில்லாதபடியால் எங்கள் வீடு இருள்சூழ்ந்த கானகம்போல் இருக்கின்றது. மேலும் ஐயா!

சுலோகம்.

ஏகோபிகுணவான்புத்துரோ நிர்குணைநசதைரபி
யேகசந்திரபிரகாசேனநக்ஷத்திரம்கிம்பிரயோசனம்.

என்பதுபோல் அனேககோடி நட்சத்திரங்கள் ககனத்தில் பிரகாசித்தபோதிலும் என்ன பலன்? ஒருசந்திரன் பிரகாசித்தால் எப்படி உலகமெங்கும் பிரகாசிக்குமோ அதுபோல் எங்களுக்கு அநேக கோடி தனங்களிருந்தும் ஏது பலன்? ஒரு புத்திரனிருந்தால் மகா பாக்கியமல்லவா? ஆகையால் எமக்குச் சந்தானம் உண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டும் சுவாமி என்று பிரார்த்திக்க, மச்சேந்திரநாதன் அம்மொழியைக்கேட்டு ஆனந்தமடைந்து அநுக்கிரகித்து, ஒருசிட்டிகை விபூதியை அந்த உத்தமிகையில் கொடுத்து, அம்மா! நீ ஸ்நானம்செய்து கர்ப்பூரதூபமிட்டு, இந்த விபூதியைப் புசிப்பாயாகில் உனக்கு விஷ்ணுரூபமாய் புத்திரன் உண்டாகுமென்று சொல்லி, அவ்விடம்விட்டு அப்புறம் நடந்துவிட்டார். இப்படியாகக் கொடுத்த விபூதியை உடனே புசிக்காமல் அந்த வர்த்தகனுடைய பத்தினி தன்தோழிகளோடு தனக்கு லபித்தவிதத்தை சவிஸ்தாரமாய்ச் சொல்லிக்கொண்டு வருகையில், அதைக்கேட்ட நாரிகள் அவருடைய ஸ்திரீசுபாவத்தால்கௌரவபுத்தியைவிட்டு, அம்மா!சந்நியாசிகளை ஒருக்காலும் நம்பலாகாது. ஒருக்கால் சொக்கு பொடி தூவி மனிதரை வசீகரித்துக்கொள்வார்கள் என்று சொல்ல, அம்மொழியைக்கேட்ட அம்மாது அது உண்மையென்று அங்கீகரித்து, அந்த விபூதியை அடுப்பில் எறிந்துவிட்டாள். இப்படி எறிந்து சிலகாலம் கழிந்துவிட்டது. இப்படியிருக்க, பன்னிரண்டு வருஷம் சென்றபிறகு மச்சேந்திரநாதன் அந்த ஊருக்குவந்து அந்தவர்த்தகனுடைய வீட்டிற்கருகில்சென்று தரித்திரவானுக்குப் பிச்சை கொடுமென்றுகேட்க, அந்தச் சப்தத்தைக் கேட்டு வர்த்தகனுடைய பத்தினி அன்னத்தை எடுத்துக்கொண்டு அதிக வேகமாய் ஓடிவந்து பிச்சையிடுங்காலத்தில், அந்தப் புண்ணியபுருஷன் அந்தப்பெண்பாவையைப் பார்த்து, ஓ அம்மணி! நான்கொடுத்த விபூதியால் உண்டான புத்திரனை யான் காண அபேக்ஷையடைந்தேனென்று சொல்ல, அம்மொழியைக் கேட்ட வர்த்தகன் பத்தினி நாம் நிஜத்தைச்சொன்னால் இவர் சாபம்தருவார். என்று பயமடைந்து ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்துவிட்டாள். இதையறிந்த மச்சேந்திரநாதன் அம்மாதைப்பார்த்து ஓ அம்மணி! நீ யாதிற்கும் பயப்படாதே. யான் கொடுத்த விபூதியை என்னசெய்தாய்? நிஜத்தை என்னுடன்சொல்லுமென்றுகேட்க, அதற்கு அம்மாது பயந்து வாய்பொத்தி கைகட்டி ஐயனே! மெய்யனே! அன்பரைக் கார்க்கும் செய்யனே! எனது ஈனபுத்தியால் அதைக் கொண்டுபோய் வெறுப்போடு என் வீட்டின் அடுப்பில் எறிந்துவிட்டேன் என்றுசொல்ல, அம்மொழியைக்கேட்ட மச்சேந்திரநாதன் சந்தோஷமடைந்து அம்மணி! நீ பயப்படவேண்டாம். அந்த அடுப்பில் இருக்கும் சாம்பலை எவ்விடத்தில் கொட்டியிருக்கின்றாய்? என்றுகேட்க, ஐயனே! யான் நித்தியம் இந்தப் பள்ளத்தாக்கில்தான் கொட்டிக்கொண்டு வருகின்றேன் என்று காட்டினாள். அப்போது அந்த உத்தமசீலன் அக்குப்பைமேட்டின்மீதுநின்றுகொண்டு ஓ அஸ்ப்ருஸ்யா! வாவென்று அழைத்தார். அம்மொழியைக் கேட்டு குப்பைக்குளிருந்ததுபோல் குருநாதா! இதோ வந்தேன் வந்தேன் என்று வாக்களித்தார். இதையறிந்து மச்சேந்திரநாதன் அந்த ஊரிலிருக்கும் ஜனங்களை வரவழைத்து குப்பையைக் கிளரச்சொல்லும்சமயத்தில் ஜனங்கள் ஆச்சரியமடைந்து அக்குப்பையைக் கிளறினார்கள். அப்பொழுது அக்குப்பையிலிருந்து பன்னிரண்டு பிராயத்துடன் திவ்விய தேஜோரூபமாய் சர்வலக்ஷணத்தோடு சுந்திரமுகமலர்ந்து, அழகுபொருந்திய நேத்திரங்கள் உண்டாகி, பகவன்நாம ஸ்மரணை செய்துக்கொண்டு, குப்பையில் உட்கார்ந்து ஒரு பாலன் இருப்பதை எல்லோரும்பார்த்து, ஆச்சரியமடைந்தார்கள். இப்படி இருக்கும்சமயத்தில் மச்சேந்திரநாதன் அந்தப் புருஷன் அருகில்சென்று

தனது அஸ்தத்தை அவனுடைய மஸ்தகத்தின்மீது வைத்து ஆசீர்வதிக்க, அவர் எழுந்து மச்சேந்திரருடைய பாதாரவிந்தங்களுக்கு மல்லிகை முல்லை இருவாக்ஷி முதலான புஷ்பங்களால் பூசித்து சாஷ்டாங்க வந்தனம்செய்து நின்றார். இதையறிந்த மச்சேந்திரநாதன் அந்தப் பாலகன் தன்னை கிருபாலோசனமாய் அனுக்கிரகித்து, (த்வாதச வர்ஷமா) பூதேவி கர்ப்பத்தில் சுரக்ஷனாய் இருந்தபடியால் இவருக்கு கோரக்ஷிதனென்று நாமகரணம்செய்து அவரை தன் கையில் பிடித்துக்கொண்டு தன்னோடு அழைத்துக்கொண்டு நடந்தார். இப்படி இருக்கும் சமயத்தில், அந்தவர்த்தகன் இந்த விந்தையையெல்லாம் பார்த்துச் சந்தோஷமடைந்து ஐயோ! நமது கையில் கிட்டியும் அந்தப் பலனை அனுபவிக்காமல் கைசோரவிட்டோமே? என்று மனவெறுப்புடன் சோகமடைந்து, தன் பத்தினியோடு மச்சேந்திரநாதருக்கு அனேககோடி வந்தனங்கள் செய்து, ஓ சுவாமி! தேவரீருடைய பிரசாதத்தை விரும்பாமல் விலையில்லாத மாணிக்கத்தைப் போக்கடித்துக்கொண்டு, மந்த பாக்கியமாய் நின்றோமே யென்று சொல்ல, இம்மொழியைக் கேட்டமாத்திரத்தில் மச்சேந்திரநாதர் இவர்களை ஆதரிக்கவேண்டுமென்று கருணைசெய்து ஓ வர்த்தகரே! நீங்கள் பயப்படாதீர்கள். பகவான் கடாக்ஷத்தால் உங்களுக்குப் புத்திரபாக்கியம் லபிக்கும் என்று அனுக்கிரகித்து, கோரக்ஷிதனை அழைத்துக்கொண்டு நெடுந்தூரம் நடக்கலுற்றார்.

இப்படியாக நடந்துகொண்டிருக்கும் சமயத்தில், கோரக்ஷிதன் மச்சேந்திரநாதரைப் பார்த்து சுவாமி! இந்த மாயாரகிதமென்னும் வலையிலகப்படாமல் ஸ்ரீ தாரகமந்திரத்தை உபதேசம் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, அம்மொழியைக் கேட்ட மச்சேந்திரநாதர் இவரைப்பார்த்து ஓ பாலகா! அதற்கு இது காலமல்ல. இன்னும் சிலகாலம் போகட்டும். அப்பொழுது உனக்குப் பக்குவகாலம் லபிக்கும். அச்சமயத்தில் நீ ஸ்ரீதாரகமந்திரத்திற்கு அதிகாரனுவாய். என்று சொல்ல, அம்மொழியைக்கேட்டு கோரக்ஷிதன் குருவாக்கினைப்படி செய்வீரென்றுசொல்லி குருவின்பிறகே நடக்கலானார். இப்படி நடக்குஞ்சமயத்தில் ஒரு கிராமத்தின் அருகில்சென்று ஐயா கோரக்ஷிதா! நீ இந்த வூரில் பிரவேசித்து பிச்சை எடுத்துக்கொண்டு அதிசீக்கிரமாய் வரவேண்டும். எனக்கோ அதிக பசியாயிருப்பதால் நடக்க சக்தியற்று இருக்கின்றேன். என்றுசொல்ல, அம்மொழியைக்கேட்ட சீடன் சந்தோஷமடைந்து. ஒகுருநாதா! இதோ அரைவினாடியில் ஐயமெடுத்துக்கொண்டு வருவேன் என்று சொல்லி, அந்நாட்டிற்குள் பிரவேசித்து வீட்டிற்கு வீட்டிற்கு ஐயமெடுத்துக்கொண்டு வருஞ்சமயத்தில் ஒரு பிராமணன் வீட்டில் சமாராதனை நடப்பது அறிந்து அங்குசென்று பிக்ஷாந்தேஹி என்று பிச்சைகேட்க, அம்மொழியை அவ்வீட்டுப் பிராமணன் பத்தினி கேட்டு பக்ஷணங்களோடு அன்னமெடுத்துக்கொண்டு வந்து பிச்சையிட்டாள். அதை அதிக பிரியத்துடன் பெற்றுக்கொண்டுவந்து மச்சேந்திரநாதர் எதிரில்வைத்துவிட்டு சுவாமி! இதோ தமது உத்திரவின்படி ஐயமெடுத்துக்கொண்டு வந்தேன் என்று சொல்ல, அம்மொழியைக்கேட்டு மச்சேந்திரநாதர் மனம்பூரித்து அந்த அன்னத்தைப் பகவானுக்கு நைவேத்தியம்செய்து இருவரும் சந்தோஷமாய் புசித்திருக்கும் சமயத்தில், மச்சேந்திரநாதர் கோரக்ஷிதரைப்பார்த்து ஐயா சீடா! நீயே உத்தமன். நீ இன்று கொண்டுவந்த ஐயமானது அதிக சந்தோஷமாயிருக்கின்றது. ஆகையால் நாளைக்கும் இதுபோலவே கொண்டுவர வேண்டுமென்று சொல்ல, கோரக்ஷிதனும் அப்படியே தமதிஷ்டப்படி கொண்டுவருகின்றேன் என்று பதில் சொல்லி, குருவாக்கினை மனதில் வைத்துக்கொண்டு அன்று இராத்திரி நித்திரைசெய்துவிட்டான். மறுநாள் உதயமானவுடனே எழுந்து ஸ்நானனுஷ்டானங்களைத் தீர்த்துக்கொண்டு, குரு ஆக்கினைப்படி அந்தக் கிராமத்திற்கு நடக்கலானார். தனக்கு முந்தி பக்ஷணத்தோடு அன்னமிட்ட பிராமணன் வீட்டிற்குச் சென்று அம்மாதைக்கண்டு ஓ அம்மணி! நேற்றையதினம் தாங்கள் கொடுத்த ஐயத்தை என்னுடைய குருவுக்கு நிவேதிக்கும் சமயத்தில் அவர் அதைப் புசித்து சந்தோஷமடைந்து அதிக பாக்கியமடைந்தேனென்று கொண்டாடிக்கொண்டு நாளைக்கும் இதுபோலவே கொண்டுவரவேண்டுமென்று திட்டம்செய்தார். அதற்கு யான் சம்மதமடைந்து கொண்டுவருகின்றேன் என்றுசொல்லி, இங்கு வந்தேன். ஆகையால் இன்றைக்கும் நேற்றையதினம் தந்த பக்ஷணத்தோடு ஐயமிடவேண்டும் என்று கேட்க, அதைக்கேட்ட அந்த உத்தமி, ஐயா! பயித்தியனே! நேற்றையதினம் எமது வீட்டில் பிராமண சமாராதனைநடந்தபடியால் பலகாரங்கள் இருந்தன. இன்றைக்குப் பலகாரங்களில்லையே? நான் என்ன செய்வது? ஆனாலும் கொஞ்சம் தருகின்றேன் என்று சொல்ல, இம்மொழியைக்கேட்ட கோரக்ஷிதன், ஓ அம்மணி! நானிரபேக்ஷன், லோஷ்டகாஞ்

சனத்தை சமமாகப் பார்க்கப்பட்டவன். அப்படி இருந்தும் என் குருவுக்காக உன்னை அதிக வினயத்துடன் கேட்டுக்கொண்டேன் என்று சொல்ல, அம்மொழியைக்கேட்ட அந்த நாரிமணி கோரக்ஷிதனைப்பார்த்து, ஓ பாலகா! உலகத்தில் இல்லாத பதார்த்தத்தை எங்கிருந்துகொண்டுவரலாகும். பிச்சைக்கு வந்தவர்கள் கிருஹஸ்தர்களை நிர்ப்பந்தம் செய்யலாகுமா? கொடுக்கப்பட்டதைத்தானேவாங்கிக்கொண்டு போகவேண்டும்? உனக்கு இஷ்டமானது கிடையாது; யான் கொடுப்பதை வாங்கிக்கொண்டுபோ? என்று சொல்ல, அதைக்கேட்ட கோரக்ஷிதன் அம்மா! எனது ஆசாரியருக்கு அபேக்ஷையைப் பூர்த்தி செய்வதற்கல்லவா? அவர் ஆக்கினை சிரசாகவகித்து உனது இடத்திற்கு வரலானேன். இந்த ஏழைமீது கருணைகூர்ந்து நேற்று கொடுத்த பக்ஷணங்கள் கொடுக்காவிட்டால் யான் இவ்விடம்விட்டு போகமாட்டேன் என்றுசொல்லி, அங்குதானே உட்கார்ந்துக்கொண்டிருந்தான். இப்படியிருக்க, அந்தச்சமயத்தில் அப்பிராமணஸ்திரீ கோரக்ஷிதனைப் பார்த்து, ஓ பாலகா! முஷ்கரம் செய்யவேண்டாம். யான் தர்மம் செய்யவந்தயிடத்தில் எனக்கு அதர்மமாய்விட்டதே. நீ நிச்சயமாய் பிச்சைக்கு வந்தவனுனல் ருசியாகிய வஸ்துவுடனேகேட்கமாட்டாய்; நாய்போல அன்னத்துக்காக போர்செய்கின்றாய் என்று சொல்ல, இம்மொழியைக்கேட்டு கோரக்ஷிதன் ஓ அம்மணி! யான் நாய்க்காகிலும் கேடுகெட்ட நாய்தான், ஆனலும் எனது ஆசாரியருக்காக உன்கையால் பதார்த்தங்கள் பெற்றுக்கொள்ளாமல் இந்த விடம்விட்டுப் போகேனென்று சொல்ல, அம்மொழியை அந்தப் பிராமணஸ்திரீ கேட்டு அடா பயித்தியனே! நீ இப்போது உனது கண்ணைப் பிடுங்கித்தந்தாலும் பக்ஷணங்கள் கிடைக்கமாட்டாதென்று சொல்ல, இம்மொழியைக் கேட்டிருந்த கோரக்ஷிதன் அம்மா! இதோ நீ கோரியபடி என் கண்ணைப்பிடுங்கித் தருகின்றேன். பக்ஷணங்கள் தாருமம்மா என்றுசொல்ல, அந்த உத்தமி இவர் மனேபீஷ்டத்தை அறியவேண்டுமென்று உன்னுடைய கண்ணைக்கொடுத்த பிறகு பக்ஷணங்கள் கொடுப்பேனென்று சொல்ல அம்மொழியைக் கேட்டவுடனே கோரக்ஷிதன் தன் கண்ணைப்பிடுங்கி அந்த உத்தமி எதிரில் வைத்து, அம்மா! இனி கொடுக்கத் தாமதமேனென்று கேட்டார். அச்சமயத்தில் அந்தப் பதிவிரதாசிகாமணி அப்பொழுது இதென்ன விபரீதம்! இந்நாட்டின் சக்கரவர்த்தி அறிந்தால் நமக்குப் பொல்லாத தண்டனை விதிப்பாரே? என்று தெருக்கதவை மூடிக்கொண்டு கோரக்ஷிதனுடைய கண்ணிலிருந்துவரும்படியான ரத்தத்தை தன்னுடைய மேல்முந்தாணையால் துடைத்துக்கொண்டு, ஐயோ! இந்தப் பிரமாதத்துக்கு இனி என்ன செய்யலாம்? என்று கண்ணீர் தாரை தாரையாய்விட்டுச் சோகித்துக்கொண்டிருப்பதை கோரக்ஷிதன் அறிந்து, ஓபாக்கியசாலி! நீ ஏதுக்கும் பயப்படவேண்டாம். எனது குருவுக்கு பக்ஷணம் கொடும் என்று கேட்க, அதைக்கேட்டு அந்த அம்மாள் வீட்டிற்குள் பிரவேசித்து அதிசீக்கிரத்தில் பக்ஷணங்கள்செய்து எதேஷ்டமாகக் கொண்டுவந்து கொடுத்தாள். அதைச் சந்தோஷமாய் கோரக்ஷிதன் பெற்றுக்கொண்டு ஓ அம்மணி! நீயாதுக்கும் பயப்படவேண்டாமென்று சொல்லி அதிவேகமாய் அந்தப் பலகாரம் எடுத்துக்கொண்டு மச்சேந்திரநாதரிடம் வந்து, அவருக்குத் தெரியாமல் தனது கண்ணை மூடிக்கொண்டு சுவாமி! தேவரீர்சித்தப்படி இதோ ஐயம் எடுத்துக்கொண்டு வந்தேனென்று அவர் எதிரில் கொண்டுவந்த பலகாரங்களை வைத்தார். அதற்கு மச்சேந்திரநாதர் சந்தோஷமடைந்து ஐயா! உனது கண்ணுக்கு ஏது பாதை யுண்டாச்சுது? என்று கேட்க, அம்மொழியைக் கேட்டவுடனே பயமடைந்து கால்கள்நடுங்க, அங்குநடந்த விருத்தாந்தங்களெல்லாம் சவிஸ்தாரமாய்த் தெரியச்சொன்னபிறகு இதையெல்லாம் மச்சேந்திரநாதன்கேட்டு, என்ன உபகாரஞ்செய்தாய்? பலகாரத்துக்காக ஒருகண்ணைக்கொடுத்தாயல்லவா? ஆனல் எனக்கு ஒருகண்ணைகொடுக்கிறாயா? என்று கேட்டமாத்திரத்தில் கோரக்ஷிதன் மனம் பூரித்து, குருநாதா! இதோ உமது பாக்கியமே பாக்கியம் என்று சொல்லி, அதிசீக்கிரமாக இரண்டாவது கண்ணைப் பிடுங்கி குருநாதர்கையில் சமர்ப்பித்தார். இதை மச்சேந்திரநாதர் பார்த்து சந்தோஷமடைந்து, இருதோளும்பூரித்து, இவனே குருபக்தியுடையவன் என்று மனதில் எண்ணமிட்டுக்கொண்டு அவருடைய இரண்டு கண்களையும் தமது கையால் தடவியமாத்திரத்தில் நேத்திரமானது முன்னரைப்பார்க்கிலும் அதிக பிரகாசத்தோடு உண்டாயின. பிறகு கோரக்ஷிதனைப்பார்த்து, நீயே சத்புருஷன். உன்னைப்போல் சீடன் இந்த மூன்றுலோகத்தில் தேடிய போதிலும் கிடைப்பது அரிது என்று சொல்லி அவருக்கு ஸ்ரீதாரகமந்திரத்தை உபதேசித்தார். அது எப்படியென்றால்; அடா பாலகா! (அகர உகர மகரம்) என்றமூன்றையும் ஏகமாய்ச்சேர்த்து ஒரேசப்தமாக உச்சரித்து மௌனஞானியாயிருக்க

மேலான பதவியைக்காணலாம். அதாவது ஸ்ரீ தாரக பிரமம் இன்னதென்று அறிந்துக் கொள்ளலாம். இதுதான் சகலத்துக்கும் மூலமந்திரம். இதுவே ஞானுபதேசம். இதைவிட ஜன்ம சாபல்யமாவதற்கு வேறே வழி கிடையாதென்றுசொல்ல, ஐயா! பூர்வத்தில் இம்மந்திரம் பகவான்சிவபெருமானுக்கு உபதேசித்ததாம்.மச்சயகர்ப்பத்திலிருந்து மச்சேந்திரன் சிவபெருமானல் உபதேசிக்கப்பட்டார். மச்சேந்திரன் கோரக்ஷிதனுக்கு உபதேசித்தார். அந்த கோரக்ஷிதனல் சாம்பவன் உபதேசிக்கப்பெற்றுன். சாம்பவனல் நத்வைதநாதர் உபதேசமடைந்தார். நத்வைதநாதரால் பிரபாவாசன் உபதேசமடைந்தார். பிரபாவாசனல் கைநாதன் உபதேசமடைந்தார். கைநாதரால் நிவிர்த்திதேவர் உபதேசமடைந்தார். இவரால் ஞானதேவர், சோபானதேவர், முக்தாபாயி, இவர்கள் உபதேசிக்கப்பட்டார்கள். ஞானதேவர் விசோபாகேசருக்கும் சாரங்கதேவருக்கும் உபதேசித்துப் பிறகு பண்டரிநாதருடைய நியமத்தால் பண்டரி க்ஷேத்திரவாசிகளாகிய பிராமணுளுக்கும் மற்றுமுள்ள அநேக பக்தர்களுக்கும் உபதேசித்தார். புண்டரீகவரதனுடைய நியமத்தால் நாமதேவர் விசோபாகேசரை ஆஸ்ரயித்து, உபதேசமடைந்து தன்னை அடைந்த ஜனுபாயிக்கும் அநேக பாகவதர்களுக்கும் உபதேசித்து அவரை ஆஸ்ரயித்து அனேகரும் உபதேசமடைந்தார்கள். இந்த குருபராக்கிரமம் ஸ்ரீ பாண்டுரங்கனுடைய கடாக்ஷத்தால் இதுவரைக்கும் உற்பத்தியாகிக் கொண்டிருக்கின்றது. இந்த குரு பரம்பரையை மேகசமூஹமாய் பண்டரிநாதனென்னும் சமுத்திரத்தை ஆஸ்ரயித்து கல்யாணகுணங்களென்ற ஜலத்தை உண்டாக்கி பிராணுதாரமாய் வருஷித்துக் கொண்டிருக்கின்றது. சங்கபாணியானவிடலநாதன் கர்ஷனுகி, ஆஸ்யங்களைக்காப்பாற்றி பக்தியென்ற தியானத்தைப் பலிக்கச்செய்யும்படி செய்கின்றுர். (ஆசார்யஸ்யஹரிஸ்ஸாக்ஷாத் குருதேவபரப்பிரமம்) இப்படி வாக்கியம் ஆசாரியனை சாக்ஷாத் நாராயணனையென்று சொல்லுகின்றது. ஒவ்வொரு ஆசாரியர்களும் தன் சிடனுக்கு ஆசாரியனுகி தன் ஆசாரியருக்கு தான் சிடராய் இருக்கின்றுர்கள். இப்படி அநேக ஆசாரியர் இருக்கிறுர்கள். இவர்களை சாக்ஷாத் விஷ்ணுசொரூபரென்று எப்படி சொல்லலாம்? அப்படி சொன்னல் பின் ஆத்மாவான அநேக குருக்களை அநேக ஆத்மாவென்று சொல்லலாகும். விஷ்ணுசொரூபமில்லையென்று சொன்னல் கேவலமாகிய மனிதனென்று சொல்லவரும். அப்படி ஆசாரியரை மனிதனென்று பாவித்தால்,

சுலோகம்.

விஷ்ணேர்சாவதாரேஷுலோஹபாவம்கதிரோதிய
போகுரௌமாநுஷம்பாவம்உபௌநரகபாதிநௌ.

என்றுல் பகவான் அர்ச்சாவதாரத்தில் லோஹபாவம் செய்யப்பட்டவனும் ஆசாரியனிடத்தில் மானிடபாவம் செய்யப்பட்டவனும் நரகமடைவானென்று பிரமாண்டபுராணம் சொல்லுகின்றது. ஆகையால் நாசம் உண்டாகும். ஆகையால் ஆசாரியருடைய நிஜசொரூபம் எப்படிப்பட்டதென்றுல் கேவலமாகிய பகவத்சொரூபமும் அல்ல. கேவலமாகிய ஆத்மாவும் அல்ல. நரத்வசிம்மத்வத்தோடு சேர்ந்து நரசிங்க அவதாரம்போல் இந்த ஆசாரியரூபம் விளங்குகின்றது. கேவலம் பகவத் சொரூபமென்று சொன்னல் குருபரம்பரைக்கு ஸ்வரூப ஐக்கிய தோஷமுண்டாகும். கேவலமாகிய ஆத்மாவென்றுலும் அநேக பிரமாண விரோதமாகும். ஆதிசேஷாவதாரமான பரபத்திரனிடத்தில் பகவத்தாவேசம் சேர்ந்திருப்பதால் இந்த அவதாரம் பகவானுடைய தசாவதாரத்தில் ஒன்றுகச் சேர்க்கப்பட்டு இருக்கின்றது. அப்படி அக்கினியோடு சேர்ந்த விலக்ஷணுத்மாவென்று ஆசாரியஸ்வரூபத்தை கௌரவிக்கவேண்டும். அநேகமாகிய இரும்புகளை நெருப்பில்வைத்து வேகவைக்க, அவற்றுள் வியாபித்திருக்கும் நெருப்பு ஒன்றுகி இரும்பைப் பின்னஞ்செய்வதுபோல், அநேகர் ஆசாரியர்களிடத்தில் ஆவேசித்திருக்கும் ஈஸ்வரன் ஒருவனே ஆத்மா வேறுகியிருக்கும். இதல்லாமல் நெருப்போடு சேர்ந்த இரும்பு அக்கினிசொரூபமாகி தோன்றுவது போல பகவத்தாவேசத்தோடு சேர்ந்த விலக்ஷணுத்மாவான் ஆசாரியரே பகவத்சொரூபமென்று கிரந்தத்தில் எண்ணுவது உசிதம்.

கேட்டீர்களோ சித்தர்களே! இதுபோலல்லவோ பக்தி வைராக்கியங்களை உள்ளபடி செய்து மோக்ஷமடையவேண்டும். மேலே சொல்லப்பட்ட தாரக நாமமந்திரத்தை ஜெபித்துக்கொண்டு வருபவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுக்கு எப்படிப்பட்ட துன்பமும் அணுகாது என்று சொல்ல, இம்மொழிகளையெல்லாம் கேட்டு, அச்சபையிலிருந்த சித்தர்கள்மனமகிழ்ந்து குருநாதனுகிய நாபாஜிசித்தரைப் பார்த்து ஓ சுவாமி! தாங்கள் இதுவரைக்கும் சொல்லிவந்த ஒவ்வொரு ஞானத்தையும் கேட்க மனம் பூரித்து பேரின்ப சமுத்திரத்தில் மூழ்குவதுபோல் காட்டுகின்றது. ஆகையால் தாங்கள் தயைபுரிந்து இந்தச் சிறுவருக்கு இன்னும் எந்த பக்தருடைய சரித்திரத்தையாவது சொல்லுமையா வென்று கேட்க, அதற்கு நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து, ஓ சித்தர்களே! உங்கள் இஷ்டப்படியே சொல்லுகிறேன் கேளுமென்று சொல்லத்தொடங்கினர்.

மச்சேந்திரநாதர் சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநம:

பதினொருவது

# சாரங்கதேவர் சரித்திரம்.

பகவான் ஸ்தோத்திரம்.

விருத்தம்.

அச்சுதமுகுந்ததேவா அநாதரக்ஷகனேயுந்தன்
மெய்ச்சுடர்ஞானந்தந்து முன்கர்மந்தன்னைக்கொய்து
கச்சுடர்மோக்ஷவீட்டை காகுத்தாவுவந்தளிக்க
நிச்சயம்நீயேயென்று நின்பாதம்தஞ்சமென்றேன்.

சுலோகம்.

வாத்ஸல்யாதபயப்ரதான ஸ்மயாதார்தார்திநிர்வாபணு
தௌதார்யாதககோஷணுதகணிதஸ்ரேய:பதப்ராபணுத்
ஸேஸ்யஸ்ரீபதிரேகயேவஜகதாமேதேகஷட்ஸக்ஷிண
ப்ரஹலாசதஸ்சவிபீஷணச்சகரிராட்சம் சால்யஹல்யாத்ருவ:

முதலாவது அத்தியாயம்.

கேட்டீர்களோ சித்தர்களே! தாரக மந்திரத்தின் மகிமை எப்படிப்பட்டதென்று கேட்டால், ஞாபகமுண்டாவதற்கும் அபயம் கொடுப்பதற்கும் கஷ்டப்படுபவரின் கஷ்டம் தீர்ப்பதற்கும் தானத்திற்கும் பாபத்தை வேரோடறுப்பதற்கும் மேலானபதவிகளைத் தருவதற்கும், இதற்கெல்லாம் காரணப்பொருளாகும் ஸ்ரீஹரிபெருமானை தியானித்துக்கொண்டிருக்கவேண்டும். இதற்கு திருஷ்டாந்தம் எப்படியென்றால் முன்னர் பிரகலாதனன் விபீஷணன், கெஜபதி, துரௌபதி, அகலிகை, துருவன் இவர்கள் தியானத்திலேதான் மோக்ஷமடைந்தார்கள். ஆகையால் இந்த மானிட ஜன்மமெடுத்து ஸ்ரீராமநாமத்தை நாவினல் ஸ்மரிக்காவிட்டால் நரகமன்றி வேறொன்றும் கிடைக்கமாட்டாது. ஆகையால் யான் இப்போது சொல்லப்போகிற சாரங்கதேவருடைய சரித்திரத்தை அதிக விநயத்துடன் உள்ளன்போடு கேட்பீராக என்று சொல்லினர். அதுகேட்ட உத்தவசித்தர் இனியில்லாச் சந்தோஷமடைந்து சுவாமி! அடியேங்களுக்கு எச்சமயத்தில் ஞானத்தைச்சொல்லி எந்தவழியாக சுஞ்ஞானத்தை அருளிச் செய்வீரென்று குழந்தையானது தாய் எந்தச்சமயத்தில் தன்னுடைய ஸ்தனபாரங்களிலிருந்து பாலமுதைத் தருவாளோ, என்று எதிர்பார்த்திருப்பதுபோல காத்துக்கொண்டிருக்கின்றோம் என்று சொன்னார்கள்.

இவைகளை எல்லாம் செவிகொடுத்துக் கேட்ட நாபாஜி சித்தர் திருவருள்கொண்டு மனம்பூரித்து சித்தர்களைப் பார்த்து சித்தர்களே! உங்களுக்கு அந்த மகானுடைய சரித்திரத்தைக்கேட்க இஷ்டமுண்டானபடியினல் உமதிஷ்டப்படி சொல்லுகின்றேன், கேளுங்களென்று சொல்லத்தொடங்கினர்.

அதிக கியாதியடைந்த பீமாநதிக்கரையோரத்தில் கண்டோர் மனதைப் பிரமிக்கச்செய்யும் ஒரு கிராமமிருந்தது. அதில் அநேக நாட்களாக விட்டோபா என்னும் ஒருபிராமணர் வாழ்ந்துக்கொண்டிருந்தார். அவருக்கு உருக்மணிதேவி என்றுபெயருடைய பத்தினியும் இருந்தார். இப்படி யிருக்கும் சமயத்தில் இவர்களுக்கு புத்திரபாக்கிய மில்லாமலிருந்தது. அதுபற்றி அவர்கள் சோகமடைந்து பகவானைக் குறித்து சுவாமி! எங்களுக்கு புத்திரபாக்கியமில்லாமையால் நாங்கள் பாவியானோம் என்று சொல்லிக் கொண்டிருக்கும் சமயத்தில் பகவான் கிருபாகடாக்ஷத்தால் யாதொரு அங்கபங்கமுமில்லாமல் அதிசாந்தம் பொருந்திய ஒரு ஆண்குழந்தை உண்டாயிற்று. இந்தக் குழந்தையுடைய சவுந்

தரியத்தைக் கண்டு தாய்தந்தை இருவரும் பரமானந்தமடைந்து தனது பந்துவர்க்கங்களை அழைப்பித்து செய்யவேண்டிய சடங்குகளை எல்லாம் செய்து திவ்யலக்கினமறிந்து சாரங்கதேவனென்று நாமதேயமிட்டு நாளொரு வண்ணமும் பொழுதொருமேனியுமாக வளர்த்துவருஞ்சமயத்தில் அக்குழந்தைக்கு ஐந்துவயதானவுடனே உபநயனம் செய்தார்கள். இப்படியிருக்கும்சமயத்தில் அந்தச் சாரங்கதேவன் தனது வாயால் எதைச்சொன்னாலும்அது தெய்வச்செயலால் பலித்துக்கொண்டு வந்தது. ஆனால் இவர்வீட்டில் இலட்சுமிதேவி குடியாயிருந்துக்கொண்டு இருந்தாள். மேலும் இவருக்கு சமஸ்த வித்தைகளும் அஷ்டாங்க யோகங்களும் அணிமாதி சித்திகளும் உணர்த்தாமலே கைகூடின. ஆகிலும் இவர் ஆயிரத்து நானூறுவருடம் ஜீவித்துத் தானிருந்த பீமாநதியின் ஓரத்தில் ஒரு மடம் கட்டிக்கொண்டு அதில் வசித்துக்கொண்டு தினந்தோறும் பண்டரிபுரத்திற்குவந்து, பகவான் எதிரில் நாட்டியமாடிக் கீர்த்தனைகள் பாடிக்கொண்டிருந்தார். ஆகையால் இவருக்கு ஆயிரத்து நானூறு சீடர்கள் இருந்தார்கள். இப்படி இருக்கும்சமயத்தில் அந்தச் சீடரோடு இவர் ககனமார்க்கத்தில் சஞ்சரித்துக்கொண்டிருப்பார். இவ்வளவு சாமர்த்தியம் உண்டாயிருந்த அந்தச் சாரங்கதேவருக்குத் தனக்கு ஒருநிஜகுருவை உண்டாக்கிக்கொள்ளாமல் தன் சீடருக்குத் தனது புத்தி சூக்ஷமத்தால் ஞானோபதேசம் செய்துகொண்டு வந்தார்.

இப்படியிருக்கும் சமயத்தில் சாரங்கதேவர் ஒருநாள் ஏகாந்தமாக உட்கார்ந்துக்கொண்டு விசனமடைந்தார். அது என்னவென்றால், அப்போது எனக்கு ஒரு நிஜகுருவும் லபிக்கவில்லையே? எனது சாமர்த்தியத்திற்குத் தகுந்தவர் எங்கும் அகப்படவில்லையே? அக்கினியானது தங்கத்தைத்தன்சொரூபம் செய்தபோதிலும் வெங்காரமில்லாமல் தங்கம் எப்படி உருகும். இதுபோல் சற்குரு சம்பந்தமில்லாமல் எவ்வளவு சாமர்த்தியம் இருந்தபோதிலும் பலன் உண்டாகுமா? (பாபிஷ்டஃ க்ஷத்ரபந்துஸ்ச புண்டரீகஸ்ச புண்யகிருத் ஆச்சார்யவத்தயா முக்தௌ தஸ்மதாசார்ய வாண்பவேத்) எப்படியென்றால், மகா பாபியான க்ஷத்ரபந்தவன் புண்யசாலியான புண்டரீகன் இவர்கள் குருசம்பந்தத்தால் மோக்ஷமடைந்தார்கள்.' ஆகையால் குருசம்பந்தமாகி இருக்கவேண்டுமென்று ஸ்ரீமஹா பாரதத்தில் சொல்லி இருக்கின்றது. சற்குருவை ஆஸ்ரயித்து இருந்த அப்புருஷனே தத்துவம் அறிந்திடுவானென்று உபநிஷத்தில் சொல்லியிருக்கின்றது. யான் இத்தனைகாலம் ஜீவித்தும் அனேகமான சாமர்த்தியம் இருந்தும் சற்குரு சம்பந்தமில்லாமல் என் ஜென்மம் வியர்த்தமாகின்றது. இதல்லாமல் பகவான் தன் இராமகிருஷ்ணஅவதாரத்தில் வசிஷ்ட சாந்தீப பிரபுக்கள் தன்னை ஆஸ்ரயித்தாரல்லவா? என்று அவைகளை எல்லாம்சொல்லி மனவருத்தமடைந்து பகவத்பக்தி சம்பூதனன் ஞானதேவருக்கு இவ்விஷயமாய் ஒரு பத்திரிகை எழுதலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தார்.

இப்படியிருக்கும்சமயத்தில் ஞானதேவர் பண்டரிநாதருடைய சன்னதிக்குவந்து சாஷ்டாங்க வந்தனங்கள் செய்து ஓ சுவாமி! யான் இப்பொழுது அளகாபுரிக்குச் சென்று வருகின்றேன் என்று சொல்லி, பகவானுடைய ஆசீர்வசனங்களைப் பெற்றுக்கொண்டு அவ்விடம்விட்டுப் புறப்பட்டு அளகாபுரிக்குவந்து சித்தேசருக்கு வந்தனம்செய்து அவ்விடத்தில்வசித்துக்கொண்டிருந்தார். இவர் இப்படியிருக்கையில் சாரங்கதேவர் ஞானதேவருக்குப் பத்திரிகை எழுதுவதற்கு ஓலையும் எழுத்தாணியும் கையில் பிடித்துக்கொண்டு சிரஞ்சீவி என்று எழுதலாமா? அல்லது வேறு எப்படி எழுதலாம்? என்று ஒருவேளை இவரை குருவாகப்பாவித்து மனம்வைத்து எழுதினால் பிரமாதமாகும். தீர்த்தஸ்வரூபியென்று எழுதலாமா? அல்லது இவரெனக்காகிலும் சின்னவரென்று எழுதுவது தர்மமல்லவே? என்று பலவாறாக சிந்தித்துக்கொண்டு ஒன்றுந்தோன்றாமல் வெறும் ஓலையைச்சுருட்டி ஞானதேவர்கையில் கொடுக்கும்படி தன்னுடைய சீடர்கையில் கொடுத்தனுப்பினார். அவ்வோலையை அதிக பிரியத்துடன் பெற்றுக்கொண்டு சீடர்கள் அதிவேகமாய் நடந்து அளகாபுரியென்ற பட்டணம்வந்து ஞானதேவர் எதிரில் நின்றுக்கொண்டு இருந்தார். இப்படி நின்றவரை ஞானதேவர்கண்டு ஐயா! உங்களைச் சாரங்கதேவர் அனுப்பினாரா? என்றுகேட்டார். அதற்குச் சீடர்வந்தனம்புரிந்து, சுவாமி!எங்கள்குருநாதராகிய சாரங்கதேவர் இதோ ஓலையைக்கொடுத்தனுப்பினார் என்று சொல்ல அந்த ஓலையை அவருக்கெதிரில் வைத்தார்கள். அதை ஞானதேவர் எடுத்து அவிழ்த்துப்பார்க்கையில் ஒன்றுமில்லாமலிருப்பதைக்கண்டு ஓஹோ! இத்தனைநாள் பொறுத்து சாரங்கதேவருடைய பிழைப்பு வெறும் ஓலையாகவிருக்கின்றதா? கணவனையிழந்த பெண்பாவை செய்துகொள்ளும் சிங்காரம்போலவும், பக்குவம்செய்யும் ஞானோபதேசம்போலவும், சாரங்கதேவன் வெகுகாலம் ஜீவி

த்து அநேகவித்தைகள் அப்பியசித்தும் உசிதமாகிய சாமர்த்தியம் கூடியிருந்து சற்குருவை அனுசரித்து தன்யனுகாமல் வருத்தமானுன் என்று சொல்லி, சாரங்கதேவருக்குத் தான் ஒருகடிதம் எழுத ஆரம் பித்தார். அது எப்படியென்றுல்; சர்வ பிராணி களுக்கும் சைதன்யம் சமமாயிருக்கின்றது. அது பெரிதல்ல. சிறிதுமல்ல. ஸ்திரீ புருஷ நபுஞ்சகரு மல்ல.

சுலோகம்.

ஆஸ்சர்யவத்பஸ்சதிசைதேநமஃ
ஆச்சரியவத்வதரித்தைவசன்யஃ
ஆச்சர்யவச்சைனமன்யசுருணேதி
சுருத்வாவ்யேனகிவெதனச்சைவகஸ்சிதஃ

எப்படியென்றுல் இந்த ஆத்மாவானது யோக சத்தியால் ஒரே ஒரு அற்புதவஸ்துவென்று பார்த் துக்கொண்டிருக்கின்றுன். ஒரே ஒரு அற்புதவஸ்து வென்று சொல்லுகிறுர். ஒரே ஒரு அற்புதவஸ்து வென்று கேட்டுக்கொண்டிருக்கின்றுர். இப்படியா கப் பார்த்தும் சொல்லியும் கேட்டும் அதன் நிஜ சொரூபத்தை ஒருவனுகிலும் அறிந்தவ னன்று. என்று பகவத்கீதையில் பகவான் சொல்லியிருக்கின் றுர். ஆனதுபற்றி. ஓ சாரங்கதேவா! நீ இதை அறி ந்துகொள்ளென்று எழுதி அந்தச் சிடன்கையில் கொடுத்தனுப்பினர். அதை அந்தச்சிடர்அதிக துரி தமாய் எடுத்துக்கொண்டு ஒட்டமும் நடையுமாய் வந்து சாரங்கதேவரிடம் தந்தார். அந்த ஒலையை அவிழ்த்துப்பார்த்து விஞ்ஞானநிதியாகிய ஞானே ஸ்வருடைய சன்னதிக்கு சீக்கிரமாகப் போக வேண்டுமென்று புறப்பட்டு, தனது யோகபலத் தால் ஒரு பெரிய வியாக்கிரத்தை யழைத்து அதன் மேல் ஏறிக்கொண்டு ஒரு கிருஷ்ண சர்பத்தைத் ஸ்தோத்திரமாய்ப் பிடித்துக்கொண்டு, ஆயிரத்து நானூறு சிடர்கள் சுற்றிலும் வந்துக்கொண்டிருந் தார். இப்படிப்பட்டசமயத்தில் ஞானதேவராலோ சித்து இப்படிவரப்பட்டவன் சாரங்கதேவனென்று அறிந்துக்கொண்டு தான் அப்பொழுது உட்கார்ந்து கொண்டிருந்த மண்சுவரைப்பார்த்து ஒமண்சுவரே! என்னைப் பார்ப்பதற்கு சாரங்கதேவன் வியாக்கிரத் தின்மீது ஏறிக்கொண்டு வருகின்றுன். ஆகையால் யான் அவரை எதிர்கொண்டு போகவேண்டும். ஆகையால் நீ என்னை எடுத்துக்கொண்டு போக வேண்டும் என்று சொன்னுர்.

உடனே அந்தக் குட்டிச்சுவர் இம்மொழிக்குச் சம்மதமடைந்து அவரை எடுத்துக்கொண்டு நடக்க லுற்றது. இப்படி ஞானதேவர் பிராணமில்லா சுவ ரை வாகனமாய்ச் செய்துக்கொண்டு அதை நடப் பித்துக்கொண்டு வருவதைக்கேட்டு சாரங்கதேவர் ஆச்சரியமடைந்து யான் ஜீவனிருக்கும் வஸ்துவின் மீது ஏறிவருவது ஆச்சரியமல்ல; பிராணனில்லா வஸ்துவின்மீது ஏறிவருவதுதான் மகா ஆச்சரியம். இப்படிப்பட்ட சற்குருவை ஆஸ்ரயித்து தன்யனுக வேண்டுமென்று மனம்பூரித்து, தான் ஏறிவந்த வியாக்கிரத்தை காட்டிற்குத் துரத்திவிடும்படிக்கு ஒர் நமஸ்காரம் செய்துக்கொண்டு ஞானதேவரைக் கண்டமாத்திரத்தில் பயபக்தி விஸ்வாசம்கொண்டு சாஷ்டாங்க வந்தனம்செய்து இந்த மகானுபாவன் சாக்ஷாத் பாண்டுரங்கன் அவதாரமென்று சந்தோ ஷம் அடைந்தார். இதைக்கண்ட ஞானதேவர் புன் சிரிப்படைந்து சாரங்கதேவனை ஆசீர்வதித்து தன் கையால் எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டு அருகிலிருந்த ஆலமரத்தின் கீழ் இரண்டுபேரும் அமர்ந்து, சாரங்கதேவருக்குத் தன் மனதிலிருக்கப் பட்ட ஞானுபதேசமென்ற ஸ்ரீ தாரகமந்திரத்தை உபதேசித்தார். இப்படி உபதேசித்தபிறகு அந்த விருக்ஷம் ஞானதேவர் சாரங்கதேவருக்கு உபதே சித்த இடமென்று இன்றையதினம்வரைக்கும் சீட ரால் சேவிக்கப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தை பரதாபரிவாசரமென்று சாதுஜனங்கள் கீர்த்தி யோடு சொல்லுகிறுர்கள். இதுவுமல்லாமல் அங்கு க்ஷணமாத்திரம் வசிப்பவர்க்கு பிரமஞானம் உண் டாகின்றது. அதன்பிறகு ஞானதேவர் சாரங்க தேவருடைய அஸ்தத்தைப் பிடித்துக்கொண்டு தனது ஆசிர்மத்துக்குப் பிரவேசிக்கும்சமயத்தில், அங்கு வஸ்திரவீனமாயிருந்த முக்தாபாயியைக் கண்டு சாரங்கதேவர் பின்னுக்குச்சென்றுர். இவ ரைப்பார்த்த முக்தாபாயி, ஓ ஞானவீன! என் சங் கோச மடைந்து பின்னுக்குச் செல்லுகின்றுய்? ஞானபுருஷருக்கு எங்குமே பிரம்மம் பிரகாசித்துக் கொண்டிருக்குமேயன்றி வேறென்றும்தோன்றுது. எப்படியென்றுல் ஓர் தடாகத்தில் தெய்வப்பெண் கள் ஜலகமாடும் சமயத்தில் அங்கு நிரந்தரமாய் வியாசர்பிரவேசிக்க, அச்சமயத்தில் இவரைக்கண்ட அப்பெண்கள் வெட்கமடைந்து தாங்கள் அவிழ்ந்த சேலைகளைத்தரிக்க ஆரம்பித்தார்கள். அதைக்கண்டு வியாசர் ஒபெண்காள்! நான் பிரமஞானியல்லவோ? நீர் ஜலகமாடாமல் சேலைகட்டுவதேன்? என்று கேட்க, அதற்கு அப்பெண்கள் புன்சிரிப்படைந்து ஓ வியாசரே! உமது புத்திரனை சுகமுனி ஒருவரு க்குமாத்திரம் ஸ்திரீபுருஷரிடம் பேதம்கிடையாது. உமக்கு மஹாதந்திரம் உண்டு என்று பதில் சொல்லி

விட்டார். நீ இதைக்கேட்டும் தெரிந்திடாய். நீ அனேகவருடம் ஜீவித்தும் சகலவித்தைகளும் சகல சித்திகளும் சாதித்தும் உனது சித்தம் வஜீகரிக்கும் சாமார்த்தியம் கிடைக்கவில்லையே? இப்போது ஞானதேவரை ஆஸ்ரயித்து உன்மனம் நிர்மலமாகாமல் போச்சுது. இவர் செய்த அநுக்கிரகமும் தீயிலிட்ட நெய்க்கு சமமாகிவிட்டதென்பதற்கு ஏதும் தடையில்லை.

சுலோகம்.

யதாதிதேமோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி
ததாகம்தாஸிநிர்வேதம் ஸ்ரௌத்தவ்யஸ்யஸ்ருதஸ்ய
ஸ்ருதிவிப்ரதிபன்னுதே யதாஸ்தாஸ்யதிநிஸ்சலா
ஸமாதாவசலாபுத்தி ஸ்ததாயோகமவாப்ஸ்யஸி.

எப்படியென்றல் எப்பொழுது மோகத்தால் உண்டாகிய கல்மிஷங்களை எக்காலத்தில் உனதுமதியானதுவிட்டு நிற்குமோ அப்பொழுது நீர்கேட்டதும் கேட்கத்தகுந்த வேதாந்தங்களும் சமமாகும். இதுவுமல்லாமல் முன்னேசஞ்சலமாகிய உன்மனது எக்காலத்தில் சஞ்சலமில்லாமல் நிர்மலமாயிருக்குமோ அக்காலத்தில் நீயோகத்தையடைந்து சுகம் பெறுவாய். இப்படியாக பகவத்கீதையில் பகவான் சொல்லியிருக்கின்றூல்லவா? உனது மனதிடத்தை பரிக்ஷிப்பதற்கல்லவா யான் உன் கண்ணுக்கு வஸ்திர ஈனமாய்த் தோன்றினேன். இதுவுமல்லாமல் ஞானதேவருடைய உபதேசத்தின் மகிமையால் நீர் ஞானமுக்தியடைவீர் என்று சொன்னவுடனே இம்மொழியைக்கேட்டு அந்தச் சாரங்கதேவர் இருகரமும் கூப்பித் தியானிக்கும்விதம் எப்படியென்றல்.

எண்சீரடி ஆசிரியவிருத்தம்.

ஐந்துவகை பூதந்தம்மைப் பம்பரம்போலாட்டி
யாகாத மூவரையும் விட்டைவிட்டோட்டி
விந்தையாய் காட்டைதனை நிர்த்தூளிசெய்து
விவேகமென்ற கலப்பையினு ழுழுதுபயிரிட்டு
சொந்தமாய்மெய்ஞ்ஞானமென்ற வித்தைகொய்து
சூக்ஷமமென்ற அகமதனில் ஐக்கியஞ்செய்ய
அந்தமா யெனக்குவழி காட்டியருள்தந்த
அன்னைகுரு தந்தைநீயே அபயமென்றேனே.

இப்படியாக அதிக பிரியத்துடன் வந்தனம் செய்து எனக்கு இருளென்ற கல்மிஷத்தைக்கொய்து ஒளியென்ற ஞானம் காட்டிய ஓ அம்மணி! நீர் தெரிவித்த ஞானசம்பத்தால் முக்தியடைந்தேன். என் ஜன்மம் சாபல்யமாச்சுது என்று சொல்லுங் காலத்தில், அப்பொழுது ஞானதேவர் தனது அஸ்தத்தை சாரங்கதேவருடைய சிரசின்மீதுவைத்து நீ எக்காலமும் ஞானமுக்தியடைந்து பிரமானந்தமடைந்து சுகம்பெறுவாயென்று ஆசீர்வதித்துநின்றூர். இதுவுமல்லாமல் இந்த ஞானதேவர் வசிக்கும் படியான அளகாபுரியென்ற பட்டணம் பூலோக வைகுண்டமோ அல்லது பாண்டுரங்கக்ஷேத்திரமோ வென்று ஞானஸ்தர் கொண்டாடிக்கொண்டிருந்தார். சாக்ஷாத்பண்டரிநாதரே லோகோபகாரத்துக்காக ஞானதேவராய் அவதாரமடைந்தாரோ என்று சாரங்கநாதர் எங்கும் விளங்கச்செய்தார். (குருப்பிரகாச யேத்திமான்) என்னும் மொழியைப்போல் தனது குருவாகிய ஞானதேவருடைய வைபவத்தைப் பிரசித்தி செய்துக்கொண்டிருந்தார். கேட்டீரோ சித்தர்களே! இவரைப்போல் ஞானமடைவது மகா துல்லபம். இப்படியெல்லாம் வைராக்கியமடைந்து ஞானமடையவேண்டும் என்று நாபாஜி சித்தர்சொல்ல, இம்மொழியைக்கேட்ட சித்தர் சந்தோஷமடைந்து எல்லோரும் சபைகலைந்து எழுந்து அவரவர் இருப்பிடம் சென்றூர்கள்.

சாரங்கதேவர் சரித்திரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணயநம:

பன்னிரண்டாவது

# பீபாஜிராஜன் சரித்திரம்.

ஸ்ரீகண்ணன் ஸ்தோத்திரம்.

வெண்பா.

சங்குசக்கர கோதண்டம் சாரங்கம் கைபிடித்து
மங்கைதனை மார்பில்வைத்த மாதவனே—பொங்கமுடன்
கரியைக் காத்தளித்த கண்ணு மணிவண்ணு
அரிய ஞானம்தந்து ஆள்.

சுலோகம்.

விஷ்ணும்சாரதசந்திர கோடிஸத்ருசம்சங்கம்ரதம்கங்கதா
மம்போஜம்தததம்விதாப்ஜநிலயம்காந்த்யாஜகன்மோஹனம்
அபத்தாம்குளிஹாரகுண்டல மஹரமௌளிம்ஸ்புரத்கம்கணம்
ஸ்ரீவஸ்தாம்கமுதாரகௌஸ்துபதராம்வந்தேமுநீந்திரஸ்துதம்.

இப்படியாக நாபாஜிசித்தர் உதயமானவுடனே எழுந்து ஷட்கர்மங்களை முடித்துக்கொண்டு நெற்றியில் திருநாமம் அலங்காரம் செய்துக்கொண்டு பீதாம்பரத்தை இடையில் தரித்து பகவானைப்பார்த்து பூர்ணசந்திரர் அநேகர் உதித்தால் எவ்வளவு பிரகாச மிருக்குமோ அதுபோல வெள்ளைத்தாமரைப் புஷ்பத்தின்மீது அமர்ந்து ஆரகுண்டலாதி பூஷணம் தரித்து சக்கராயுதத்தைக் கைப்பிடித்து திரிலோகங்களும் மோகிக்கும்படி விக்கிரகமாயமர்ந்தது. சகல முனிசிரேஷ்டரும் சேவிக்கும்படி அமர்ந்திருக்கும் இந்தமகாவிஷ்ணுவைச் சேவிக்கின்றேன் என்று சொன்னவுடனே, மற்ற சித்தர்களெல்லாரும் கும்பலாகவந்து நாபாஜிசித்தர் செய்யும்படியான பக்தி விஷயங்களைக்கண்டு சந்தோஷமடைந்து, சுவாமி! தாங்கள் இதுவரைக்கும்சொல்லி வந்த பக்தருடைய சரித்திரங்களைக் கேட்டு, வெயிலுக்கு காய்ந்த நிலவுபோல் ஆய்விட்டது. தவிர ஏதும் பலன் கிடைக்காது. ஆகையால் தாங்கள் இந்த சிறுவர்மீது கிருபைகூர்ந்து இன்றைக்குக் காலம்போக்காமல் திவ்வியமாகிய ஓர் சரித்திரத்தைச் சொன்னால் அதைக்கேட்டு மனக்கவலையென்னும் குரோதங்களைக் களைந்து முக்தியடையலாமென்று சொன்னவுடனே நாபாஜிசித்தர் மனம் பூரித்து ஓ சித்தர்களே! நீங்கள் சொல்லும்படியாகிய சொற்களைக் கேட்டால் மகா சந்தோஷமுண்டாகின்றது. ஆனால் இன்று உமக்கு உயர்கதி அடைவதற்குரிய ஓர்சரித்திரம் சொல்லுகின்றேன். அது யாருடைய சரித்திரமென்றால் பீபாஜிராஜன் என்ற ஓர் பக்தருடைய சரித்திரமாகும். அதை உள்ளன்போடு சொல்லுகிறேன் கேட்பீர்களாக; என்று சொல்லத்தொடங்கினர். அது எப்படியென்றால்,

பூர்வத்தில் இவ்வுலகத்தில் கண்டோர் யாவரும் வெகுவாகக் கொண்டாடிவந்து புகழ்பெற்று ஓங்கிய நீர்வளம் நிலவளம் முதலாகிய குணங்கள் அடங்கிய மங்களகடமென்று ஒரு பட்டணம் இருந்தது. அப்பட்டணத்தைப் பீபாஜியென்னும் பெயருடைய ஒரு அரசன் அரசாண்டுக்கொண்டிருந்தான். அவரோ,

சுலோகம்.

சௌர்யம் தேஜோத் ருத்திராக்ஷ்யம்
யுத்தே சாப்ய பலாயானம்
தான மீஸ்வர பாவக்ஸ:
க்ஷாத்ரம் கர்மஸ்வ பாவஜம்.

என்னும் பகவத்கீதாவசனப்பிரகாரம் சௌரியம் அழகு தைரியம் சாமார்த்தியம் யுத்தகளங்களில் முன்னர் வைத்தகாலை பின்னர் வையாமல் பகைவரை வெல்லத்தக்க பலமும், தானம் செய்வதற்குத் தர்மகுணமும், பிரபுத்துவமும், ஆகிய இப்படிப்பட்ட க்ஷத்திரிய சுபாவ குணங்களோடு கூடியிருந்தும் அந்நாட்டை நீதிதவருமல் ஆறிலொரு பங்கு குடிகளிடத்தில் வாங்கி இராஜ்ஜியபரிபாலனத்தில் ஏதும் அபகிர்த்தியில்லாமல் செங்கோலைச் செலுத்திக்கொண்டிருந்தான். இப்படியிருக்கும்சமயத்தில் இவ்வேந்தன்பிரதிதினமும் பிராதக்காலத்திலெழுந்து ஸ்நானமுதலாகிய ஷட்கர்மங்களைமுடித்துக்கொண்டு அந்நாட்டிலிராநின்ற காளிகாதேவி சந்நிதிக்குச்சென்று அதிக பக்தியோடு தூபதீபநைவேத்தியங்கள் செய்து வந்துகொண்டிருந்தார். அவ்வம்மையாருடைய கடாட்சத்தால், அதிக சுகமடைந்து வாழ்ந்துக்கொண்டிருந்தார். இதுவல்லாமல் இந்த அரசன் ஸ்நானமுதலிய ஜெப தபங்களை முடித்துக்கொண்டு சர்வோபசாரத்துடன் காளிகாதேவியை பூஜித்து மகாநைவேத்தியம் செய்து பிறகு அந்த மகாதேவி பிரத்தியட்சமாகி தரிசனங்கொடுத்தபின் அன்னத்தைப் புசிப்பித்துப் பிறகு அத்தேவிக்குத் தாம்பூலம் கொடுத்து பிரதக்ஷணம்செய்து வந்தனமளித்துப் பிறகு அவ்வேந்தன் எழுந்து அந்தப்புரமடைந்து தான் புசிப்பான். இப்படியிருக்கும் சமயத்தில் ஒருதினத்தில்.

சுலோகம்.

மஹாமத்ஸ தேசமய்த்தாஃ ப்ரகாம்தாஃ
விமஸ்யவஸ்ஸ-ஹெரு தஸ்ஸாதவோயே.

என்னும் மொழிபோல் ஈஸ்வரனுடைய விபூதியானசேதனுசேதனங்கள் தம்மிடம் சமசித்தமுடையவராயும் அதிக சாந்தி யுக்தி யுடையவராயும் கோபத்தை வெறுத்தவராயும் சர்வபூதமனமும் தன் மனம்போலவும் எண்ணியிராநின்ற சாது ஜனங்கள் என்போர் சிலர். மகாத்மாக்கள் தீர்த்தயாத்திரை செய்துக்கொண்டு இந்த அரசன் செய்யும் ஸ்ஹெருதம் கேள்வியடைந்து அந்நாட்டிற்கு விஜயம் செய்தார். இப்படியிருக்கும் வேளையில் அந்த வேந்தன் தன் நாட்டிற்குத் தன்னைக் காணவேண்டி வந்த சாதுக்களுக்கு வேண்டிய சர்வோபசாரங்கள் செய்தும் ஆகாரத்துக்கு தக்க சாமக்கிரியைகள் கொடுத்துவிட்டுத் தினந்தோறும் நடக்கும் நீதியாய் காளிகாதேவியைப் பூசிக்க ஆரம்பித்தார். இப்படி பூசித்து நைவேத்தியம் செய்யும் சமயத்தில் இத்தனைநாள்போல காளிகாதேவி பிரத்தியட்சமாகாத காரணத்தைப்பற்றி அரசன் வருந்தினவனுகி முகம்வாடி சோகத்துடன் பிரார்த்திக்க ஆரம்பித்தார்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

நிகரானபேரின்பம் இதுவேயென்றென்
நெஞ்சத்தில் நாட்டாதவம்பன்
நீயென்றுநானென்று நீணிலத்தில்நின்றுயான்
நிஷ்டூரமாடு வம்பன்
சுகமென்றஞானத்தை அகமதில்வையாமல்
சுற்றித்திரிந்து கெட்டவம்பன்
சற்குணநிரஞ்சன நிராமயநிஷ்கபட
சோதியைக்காணுத வம்பன்
அகமென்றமதயானையோடுவதைக்கண்டியான்
அடக்கவகை யறியாதவம்பன்
ஆனுலுமெனைப்போல ஆகாதபாவிகள்
ஆருமில்லை யென்றவம்பன்
இகபரசவுக்கியத்தை என்மனதிலெண்ணிநான்
இன்பத்தைக்கொண்ட வம்பன்
இதுவேளையெனையாள வரவேண்டும்ஸ்ரீகௌரி
ஈஸ்வரியானந்த வல்லியே.

ஓ! பரதேவியான அநேக பாபகிருத்தியங்கள் செய்தும் இப்பூவுலகில் உனது பிரதாபகுணத்தை இன்னதென்று அறியாத வம்பனுவேன். ஆகையால் இந்தப் பேயேன் செய்த குற்றங்களையெல்லாம் மனதில் வையாமல் இதுகால பரியந்தம் எப்படி சேவை தந்து அருள்செய்துக் கொண்டிருந்தீர். அதுபோல் இன்று என்முன் பிரத்தியக்ஷமாக வராதகாரணம் என்ன? அதை அடியேனுக்குத் தெரியச்சொல்லும். இல்லாவிட்டால் இவ்வாவியைப் போக்குவது நிச்சயமென்று தனது சந்திராயுதம் கைப்பிடித்து அத்தேவி எதிரில் நின்று ஹே! லோகரக்ஷகி! இந்தச்சமயம் நீ என்முன் வராமல் போனல் இதோ எனது சிரம்கொய்வது நிச்சயமென்று சொல்லினர். அம்மொழியைக்கேட்டு அக்காளிதேவி சந்தோஷமடைந்து இதுதான் சமயம். இவனுக்கு ஞானம் போதிக்கவேண்டுமென்று மனதிலெண்ணி பிரசன்னமாகி ஓ பக்தனே! நீ எதற்காக இப்படி வைராக்யங்கொண்டாய்? அதின் கருத்தைத் தெரியச் சொல்லுமென்று கேட்டாள். அம்மொழிகேட்ட இராஜபூபன் ஓ லோகரக்ஷகி! நீ இதுகாலபரியந்தம் யான் பிரியத்துடன் அன்னம் பரிமாறில் அதை அதிக விசுவத்துடன் புசித்து சந்

தோஷமடைவாய். அப்படி நிர்மலமாகிய உன் மனம் இன்றைக்குக் கபடமாவதற்குக் காரணம் ஏது? அதை விசிதமாய் தெரியச் சொல்லுமென்று கேட்டார். அதற்கு அக்காளிகாதேவி அந்த இராசனைப்பார்த்து ஓ இராஜனே! உனது புகழ் பெற்ற பட்டணத்திற்குச் சிலர் பரமசாதுக்கள் வந்திருக்கின்றார்கள். அவர்கள் புசிக்காத முன்னர் யான் புசிப்பது நீதியல்ல. ஆகையால் அவர்கள் பகவானுக்கு அதிக பிரியமுடையவர்கள். அப்படிப்பட்ட பரமபக்தருடைய சேவை லபிப்பதற்கு துர்லபம். உனது சுகிர்த விசேஷத்தால் அந்த மஹாத்துமாக்கள் உன் பட்டணத்திற்கு வந்தார்கள். அவர்கள் அப்படி வந்தபோதிலும் நீ அபேக்ஷியாமலிருக்கின்றாய். அவர்கள் அநாதைகளாய் வந்தவர்களல்ல. ஆகையால் அவர்கள் பூர்வஜன்ம சுகிர்தத்தால் வந்தார்கள். பூசையால் அவர்களுடைய சேவை காண்பவனானன். இதுவல்லாமல்,

சுலோகம்.

ஸம்ஸாரவிஷவிருக்ஷஸ்யத்யே
பலேஹ்யமிருதோபமே
கதாசித்கேஸவேபக்திஃ
தத்பக்தைர்வாசமாகமம்.

என்பதுபோல் ஓ இராஜா! இந்த அகங்கார பாசமான சமுசாரத்தை எட்டிச் செடிக்குச் சமமென் றறிந்துகொள்வாயோ? அப்படிப்பட்ட எட்டிச்செடியானதை அமிர்தம்போல் செய்வதற்கு இரண்டு பலங்கள் இருக்கின்றன. அது எப்படியென்றால் ஆஸ்ரிதவிரோதியாகிய கேசவன்மீது எக்காலமும் பக்தி செய்துகொண்டிருப்பது ஒரு பலிதம். அந்த பரமதயாநிதியாகிய பன்னகசயனனுடைய பக்தர்களை தன் மனம்போலெண்ணி யோகியாவது ஒருபலிதம். ஆகிய இவையிரண்டும் மேன்மைபொருந்திய பக்தி வைராக்கிய பலிதமென்று சொல்லுவார்கள். உனது பூர்வபலத்தாலும் முன்னர் பெரியோர்செய்த பூஜாபலத்தாலும் இன்று உனக்கு இப்படிப்பட்ட பலிதம் லபித்தது. இப்படி பலிதம் லபித்தபோது இதரமான பலிதமெல்லாம் அசேதனமென்று சொல்லுவதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் குளவியானது புழுவை எடுத்துத் தன் கூட்டில் வைத்து தன் ரூபம் செய்வதுபோல பரமகாந்தியான பாகவதரை அநுசரித்த மனுஷன் தன்னை அவர்கள் போலவே அவருக்கும் இதோபதேசம் போதித்து ஸ்படிகம்போல் செய்வார் என்பதற்கு ஏதும் தடையிராது. ஆகையால் பக்தனுக்குப் பகவான் வசமாகியிருப்பார். எப்பொழுது பகவான் சுவாதீனமாயிருக்கின்றாரோ அன்றே மோக்ஷமென்பது இவனுக்குச் சொந்தவீடு. அன்றி இதரமானவைகளைச் சொல்லத் தரமில்லை. நீ இதுவரைக்கும் பிரியத்துடனே ஆராதித்துக்கொண்டு வந்தாய். அதை சந்தோஷமடைந்து ஐக்கிய சுகங்களை உனக்குப் பரிபூரணமாக அநுக்கிரகித்தேன். இனிமேல் இந்த ஐக்கியசுகத்தை வெறுத்து மோக்ஷப் பிரதாபத்தை அநுசரிக்க பிரயத்தினப்படுவாய். ஏனென்றால் இந்தச் சரீரமானது நீர்க்குமிழிக்குச் சமமானது. ஆகையால் (ஜாதஸ்யஹித்ருவோம்ருத்யுஃ) என்பதுபோல எக்காலத்தில் நாம் பூமியில் ஜனித்தோமோ அன்றே நமக்குக் கூடவே மரணமென்னும் பெரிய மலையொன்று காத்துக்கொண்டிருக்கின்றது.

சுலோகம்.

வாசாம்சிஜீர்ணநியதாவிஹாய
நவானிச்ருஹ்ணாதிநரோபராணி
ததாசரீரராணிவிஹாயஜீர்ணாந்
யந்யாணீஸம்யாதிநவானிதேஹி.

எப்படியென்றால் மனிதன் அழுக்கு வஸ்திரத்தை வெளுத்து புதியவஸ்திரம் தரித்துக்கொண்டால் எப்படி சுத்தமாயிருக்கின்றதோ அதுபோல் இந்தத் தேகம்விட்டு மறுதேகம் எடுப்பதால் ஸ்திரமாகும். ஆனாலும் இப்படிப்பட்ட சரீரத்தில் (துர்லபோமானுஷோதேஹ) என்னும் மொழியைப்போல இந்த மானிடஜன்மம் கிடைப்பது மகா அரிது. இப்படிகிடைத்தும் ஞானவானாயிருப்பது இதைவிட அரிது. அந்த ஞானமானது விஷயாந்தரத்தில் சிதறாமல் பக்திவிஷயத்தில்நிறுத்துவது அதனினும் அரிது. இதுபோல்சுகம் ஏதும் கிடையாது விஷயங்கள் விஷயத்துக்காகினும் கெட்டது.

சுலோகம்.

விஷஸ்யவிஷயாணாம்ச தூரமப்யந்தராம்தரம்
உப்புஜ்யவிஷம் ஹம்திவிஷயாஸ்மரணாதபிஃ

என்பதுபோல் ஓ இராஜனே! விஷத்துக்கும் விஷயங்களுக்கும் தாரதன்மயம் அதிகமாயிருக்கின்றது. விஷமானது தன்னைப் புசிப்பவனைக் கொல்லும். விஷயங்களானவை தன்னை ஸ்மரிக்கப்பட்டவனைக்கொல்லும். ஆகையால் புத்திவானாயிருக்கப்பட்டவன் விஷயாசக்தியுடையவனாய் இருக்கலாகாது. எப்படியென்றால்,

சுலோகம்.

யதாஹிக்ரஸ்த மம்டுகோ
தம்சான் பக்ஷிதுமிச்சதி
ததாம்ருத்யு வசோலோகோ
போகான் போத்துமிஹெச்சதிঃ

என்பதுபோல் பாம்பின்வாயில் அகப்பட்ட தவளையானது கொசுவைப் பக்ஷிக்க நிச்சயித்தது போல் எமன் கையில் அகப்பட்ட மானிடர் லோக போகத்தை அபேக்ஷித்துக்கொண் டிருக்கின்றார். ஆகையால் நீ புத்திவானு யிருப்பதால் எனது இதோபதேசத்தைக் கேட்டு மோக்ஷ விரோதியான நைஹிகபோகத்தை வெறுத்து பரமபுருஷோத்தம மான மோக்ஷப்பிரதாபத்தைக் கைக்கொண்டால் பகவான் கருணைசெய்வார். ஜீவகோடி யற்புதராகி அற்பசக்தி விசிட்டமான எம்மைப்போல் தேவதை கள் இலௌகிக சுகத்தைக்கொடுக்க சமர்த்தமுள்ள வர். அல்லது மோக்ஷப் பிரதாபமான பலாபலத் தைக் கொடுக்க சமர்த்தர் நாங்கள் அல்ல.

சுலோகம்.

ஆப்ரஹமபவனுல்லோகாঃ
புனராவர் தினோர்ஜுனை
மாமுபெத்தியது கௌம்தேய
புனர்ஜென்ம நவித்யதே.

எப்படியென்றால் பரமாண்டத்திற்கும் உட் பட்ட சமஸ்தலோகங்களும் புனர்ஜன்மம் உண்டா கும். என்னை யனுசரித்தவருக்கு புனர்ஜன்மம் கிடையாது என்று பகவான் பகவத்கீதையில் சொல்லி யிருக்கின்றார். ஆகையால் நீ புனர்ஜன்மம் எடுக்காவண்ணம் மோக்ஷபலத்தை அனுபவிக்கும் பொருட்டு அந்த தேவாதிதேவனை அனுசரிப்பாய். ஆனதற்காக அதற்குச் சதுருபாயம் சொல்லுகின் றேன். எப்படியென்றால், ஞானவைராக்கியருக்குப் பாகவதரை ஆஸ்ரயிப்பாயாகில் அவர்கள் உனக்குத் தகுந்த ஹிதோபதேசங்கள்போதித்து, உனதுஅஞ் ஞானத்தை ஓட்டி, உன்னைச் சதாசார்ய சம்பத்தால் உண்டாக்குவார். இதுவல்லாமல் ஞானனுஷ்டான சம்பன்னரான ஆசாரியரை ஆஸ்ரயித்தவர்களுக்கு பகவான் தானே மோக்ஷத்தைக் கொடுப்பார். உனது ஞானத்தைக்கண்டு உனக்கு நிஜத்தைச் சொன்னேன். எப்படி யென்றால், வைராக்கியம் முதலாகிய நாமதாவேசங்களோடு சேர்ந்திருக்கும் பாகவதருடைய சேவை அகப்படுவது மகா துர் லபமல்லவா? (ஸூதுார மபிகம் தவ்யம்யத்ர பாக வதாஸ்திதா) என்னும் மொழிபோல் அப்பேர்ப் பட்ட பாகவதர்கள் எத்தனை தூரத்திலிருந்தாலும் அவர்களைத் தேடிக்கொண்டு போய் அனுசரிக்க வேண்டும். இப்படியிருக்க, உனது அதிர்ஷ்ட விசே ஷத்தால் அப்படிப்பட்ட பரமபாகவதர்கள் அவர் களே உனது பட்டணத்திற்கு வந்தார்கள். அப்படி வந்தும் நீ தாமதிப்பது தர்மமல்ல. (ஸுபஸ்ய சீக் கிரம்) என்னும் மொழிபோல் நீ அதிவேகமாய் அவர்களுடைய சன்னிதிக்கு செல்லுவாய் என்று காளிகாதேவி சொன்ன மொழிகளை அரசன்கேட்டு சந்தோஷசித்தனுய் அந்த மகாதேவிக்கு அனேக வந்தனம்செய்து ஒ அம்மணி! இப்படிப்பட்ட உப தேசத்தை எனக்குத் தெரியப்படசொன்னுய். நீ சொன்னமொழியெல்லாம் கேட்க இருளாயிருந்த கானகத்தில் ஓர் மாணிக்கத்தைவைத்தால் எப்படி பிரகாசம் தருமோ அதுபோல் இன்று என்மனது பளிங்கையொத்தது. ஆகையால் இதுமுதலாக என க்கு நீர் முதல்குருவாயிருக்கின்றீர். எப்படியென் றால் இதுகாலபரியந்தமும் உன்னை ஆராதித்ததற்கு எனக்கு நற்பதவி லபித்தது. இப்போது யான் தன் யனுனேன். இதுவல்லாமல் நீ தெரிவித்தவண்ணம் போய் செய்வதற்கு ஊழியனுய்க் காத்துக்கொண் டிருக்கின்றேன். ஆனல் உனதிஷ்டப்படி போய் வரட்டுமா? அம்மணி யென்றுசொல்ல, அதற்கு அக்காளிகாதேவிசந்தோஷமடைந்து ஒ இராஜனே! ஏதும் தடையில்லாமல் சென்று ஞானமுள்ளவனுய் வருவாயென்று சொல்ல, அதைக்கேட்டு சந்தோஷ மேலிட்டு காளிகாதேவியிடம் விடைபெற்றுக்கொ ண்டு அச்சமயமே புறப்பட்டு அந்தப் பாகவதர் இருக்கப்பட்ட சந்நிதிக்குவந்து அவர்களைக்கண்டு வந்தனப்பிரமாணம் செய்து கைகட்டி நவீனமாய் நின்றுக்கொண்டு ஒ தேவாதி தேவரே! பகவானுன ஸ்ரீராமபிரான் சிருங்கிபேரபுரத்துக்குச்சென்று குக னுக்குச் சேவை தந்ததுபோல் யான் கோராமலிரு க்க, என் பாக்கிய விசேஷத்தால் தேவரீர் இந்தப் பட்டணத்திற்கு வந்து எனக்குச் சேவைதந்தீர். ஆகையால் மகாத்மாக்களுடைய சேவை வியர்த்த மாய்ப்போகாது. யான் இதுகாலபரியந்தம் காளி காதேவியை ஆராதித்துக்கொண்டு நைஹிக சுகங் களை அனுசரித்திருந்தேன். இன்று அத்தேவி தன் னுடைய கிருபாசடாக்ஷத்தால் எனக்கு விரக்தி மார்க்கத்தை உபதேசித்து உங்களுடைய சந்நிதி க்குப் போவென்று சொல்ல, யான் வரலானேன். ஆகையால் எனக்கு பகவத் கடாக்ஷாகாரம் அடை யும்பொருட்டு அனுக்கிரகிக்க வேண்டு மென்று பிரார்த்திக்க, இம்மொழிகேட்டு அவர்கள் கருணை

யடைந்து ஓ இராஜா! நீ விநயாதி சற்குணராகியாகி சொல்லுகின்றாய். காளிகாதேவி உபதேசத்தால் இன்று உனக்கு ஈஸ்வரவிஷயத்தில் அபேக்ஷை அடைந்தது. ஆகையால் சர்வப் பிரகாசத்தால் சம்சாரபந்த விமோசனமடைந்த ஸ்ரீமந் நாராயணரை ஸ்மரித்தமாத்திரத்தில் சகலமாகிய பாபங்கள் தீர்ந்து மேலான சுபங்கள் உண்டாகும். இதுவல்லாமல் எக்காலமும் அந்தப்பகவானை ஸ்மரித்து மகாத்மாக்கள் உஜ்ஜீவித்திருப்பார்கள் சர்வ பூதாந்தர்யாமியாகிய நாராயணன்மீது மித்திரபாவமான புத்தி உனக்கு உண்டாகுமன்றி அந்த ஜெகதீசனுக்கு லீலாசாதனமான சேதனவர்க்கத்தில் நேசமாயிருப்பாய். அதனால் உனது மோஹாதி கிலேசங்கள் நசித்துப்போகும். இதுவல்லாமல் தாபத்திரயத்தால் ஜகமாதியந்தமும் துக்கப்பட்டுக்கொண்டிருக்க, அதிக கருணிக்கப்பட்ட பிராணிகள்மீது புத்திவான் த்வேஷத்தை வைக்கமாட்டான். த்வேஷித்தமாத்திரத்தில் கெடுதி சம்பவிக்கும். ஆகையால் பிராணிகள்விஷயத்தில் அதிக கர்வம்கூடாது. சிலர் வியர்த்தமான கர்வத்தால் தன்னை த்வேஷித்தபோதிலும் விவேகியானவர் ஐயோ! இவர்கள் அஞ்ஞானசாகரத்தில் மூழ்கியிருக்கின்றார். இவர்கள் என்றைக்குக் கரையேறுவார் என்று அவர் விஷயத்தில் மனஸ்தாபம் அடையவேண்டும். ஆகையால் ஓ இராஜா! இனியாகிலும் ஞானனுஷ்டான சம்பன்னரான சதாசாரியரை அனுசரித்தால் அவர் உனக்கு உத்தமாதிகாரியானலக்ஷணங்கள் உபதேசித்துத் தன்னுடைய இஷ்டனாய்ச் செய்வார்.

சுலோகம்.

உபாப்யாமே வபக்ஷாப்யா
மகாஸே பக்ஷிணம்கதிஃ
தத்தைவஞான கர்மப்யாம்
ப்ராமயதே பகவான்ஹரிஃ

இது எப்படியென்றால் ஆகாசமார்க்கத்தில் பக்ஷியானது இரண்டு பரட்டைகளால் பறந்து ஆகாச வீதியெல்லாம் சஞ்சரிக்கும். அதுபோல் ஆசாரியன் தன்னுடைய ஞானனுஷ்டானமென்ற இரண்டு பரட்டைகளால் பகவானை அடைவான். இப்படி சற்குணமுடைய ஆசாரியன் அகப்படுவது மகா துர்லபம். ஆகையால் இப்பொழுது காசிப் பட்டணத்தில் ஸ்ரீராமாநந்தச்சுவாமியென்று யதீஸ்வரன் ஆசாரிய லக்ஷண பூர்த்தியாகியிருக்கின்றார். இதுவல்லாமல் பாகவதா கிருத கண்யனை கபீர்தாஸ் முதலான சிடர் அந்த குருபுங்கவரைப் பாதசேவை செய்துக்கொண்டு இருக்கின்றார். ஆகையால் நீ அந்த உத்தமரை ஆஸ்ரயித்து உபதேசமடைந்து ஆசாரிபோல் அநிஷ்டமார்க்கத்தில் நடந்துகொண்டால் பகவான் உனக்கு சேவை அருள் செய்வார். இதுவல்லாமல் உனக்கு மேலும் உண்டாகுமென்று சொல்லி அவர் எல்லோரும் நடந்துவிட்டார். இம்மொழியெல்லாம் கேட்டு சந்தோஷமடைந்து அவரைக் காணவேணுமென்று அதிக ஆவலடைந்து தனது அந்தப்புரமடைந்து தன் நாயகியாகிய பதிவிரதையைக்கண்டு ஓ நாயகி! நாம் இதுகாலபரியந்தம் செய்த பாக்கியமெல்லாம் வியர்த்தமாய்விட்டது. இது எப்படியென்றால் வயலுக்குக் காய்ந்த நிலவுபோலவுமாச்சுது. நமது ஆத்மா நிஜாத்மாபோல்செய்துக்கொண்டு பகவானைக்கண்டு சேவை அடைந்து முக்திபெறுமல் இருப்பது நமக்கு நீதியல்ல. யான் தக்க ஆசானைத்தேடி ஞானம் பூர்த்திசெய்துக்கொண்டு அந்தப் பகவான் சேவை அடையவேண்டும். ஆகையால் இதோ யான் போகின்றேன். உன் கருத்தெது? என்று கேட்க, அம்மொழிகேட்ட மாது நாயகனைப்பார்த்து ஓநாயகா! நீர் சொல்வது உசிதமாய் இருக்கின்றது. சமுசாரமென்ற பாசத்தை வெறுத்துச்சென்றால் மோக்ஷம் லபிப்பது அரிது. ஆகையால் யானும் உம்முடன் வருகின்றேன். நீர் பெறும்படியான மோக்ஷம் யானும் அடைய அபேக்ஷை அடைந்திருக்கின்றேன். ஆகையால் இதோ யானும் கூட பிரயாணமாகிறேனென்று கணவனுக்கு முன்னரே தெருவாயிலுக்கு நடக்கலுற்றாள்.

## அரசனுக்கு ஸ்ரீராமானந்தசுவாமி ஸ்ரீதாரகமந்திரத்தை உபதேசஞ்செய்த அத்தியாயம்.

இதையறிந்த இராஜன் சந்தோஷமடைந்து ஓ நாயகி! உனது குணுதிசயத்தை அறியும்படி இப்படிச் சொன்னேன். ஆகையால் நீயும் புறப்பட்டு வருவாயென்று சொல்ல இருவரும் பிரயாணமடைந்து காசிபட்டணம்சேர்ந்து அந்நதியில் ஸ்நானம் சந்தியாவந்தன முதலாகிய ஷட்கர்மங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீ ராமானந்தசுவாமிகள் சன்னிதியைக்கண்டு அங்குசென்று அவர் இருப்பதைக்கண்டு அவருக்கு அநேகவந்தனம் புரிந்து ஓ குருபுங்கவா! எனக்கு ஞானோபதேசம் செய்ய வேண்டும் சுவாமி என்றுசொல்ல, இதையெல்லாம் அறிந்த குருபுங்கவர் சந்தோஷித்து இந்த வேந்தனுடைய வரலாற்றையெல்லாம் செவ்வையாய் விசா

ரித்து அவ்வேந்தருக்கு ஸ்ரீதாரகமந்திரத்தை உபதேசித்து அதின்பிறகு ஓ ராஜா! உனக்குக் காளிகாதேவி பிரதமகுருவாகி ஞானதீபம் அருள்செய்தாள். அதன்பிறகு பாகவதோபதேசம் மேலானபதவியை விளங்கச்செய்தது. தாரகநாமமென்ற பிரணவம் ராஜதிபத்தை தாயக்கினிசெய்து அநாதி காலாஜ்ஜிதமான பாபமெல்லாம் பஸ்மீகரமாயின. இது வல்லாமல் நீ இக்காலத்தில் அதிக பரிசுத்தனுகிவிட்டாய். விஷயாந்திரமென்ற சத்துருக்களுடைய கைகளுக்குத் தப்பித்துக்கொண்டு சர்வவித பந்துவான பகவானுடைய கடாக்ஷந்தன்னில் ஸ்திரமாய் நின்ருய். இதுபோல் சர்வதேச சர்வகால சர்வாவஸ்தைகளிலும் மனதை சிதறவிடாமல் பகவானைத் தியானித்துக்கொண்டு உனது வாக்கால் பகவன் நாமத்தை உச்சரித்துக்கொண்டு காயத்தால் பிரதக்ஷணம் வந்தனம்செய்து பகவான் கைங்கரியங்களைச் செய்துக்கொண்டு, வைராக்கியசீலனுய் பாகவதர்களுடன் சல்லாப சாவகாசம் செய்துக்கொண்டு, அகப்பிரகாசமடைந்த பகவானை உன் மனேவீதியில் சஞ்சரிக்கச் செய்துக்கொண்டிருந்தால் உன்னை இடைவிடாமலிருப்பர். ஞானவான்கள் (ஆத்மவத்ஸர்வபூதானி) என்னும் மொழிபோல சகல பூதங்களும் தன்னைப்போல் நபேதமில்லாமல் பாவிக்கவேண்டும். நிபேதபாவத்தைவிட்டு பரமானந்த ஸ்திதிக்குட்பட்டு பகவானைவிட இதர தேவதைகளை உபாசித்தால் நீபரமசித்தி அடையமாட்டாய். தேவாசுரயக்ஷராக்ஷசகின்னரசர்ப்பங்களாலும்,மனிதர்-பசு-பக்ஷி-மிருகங்களாலும், அதிசார-ஜ்வர-குன்மம் ஆகிய இப்படிப்பட்ட ரோகங்களாலும், இராகத்வேஷ-லோப மோஹ மத மாச்சாரியங்களாலும், நாசமடையாத பரமானந்த சித்திக்காக ஸ்ரீகேசவன் பாதபங்கபத்தில் உன்மனதை நிறுத்துவாய். அதனுல் சுகம் உண்டாகும். ஆகையால் நசாரமான சம்சாரமார்க்கத்தால் உண்டாகும் தேவ மனுஷ்யாதி சரீரங்களுக்கு போக்கியமான ஸ்வர்க்காதிபோகங்களுக்கு ஆசைப்படவேண்டாம். உனக்கு சர்வோத்கிருஷ்டமான பரமார்க்கத்தை உபதேசிக்கின்றேன். கேளும் இராஜனே! சர்வபூதத்திலும் சம்மதியாயிருக்கும் சர்வபூத சமத்துவமே அச்சுதருக்கு முக்கியாராதமாயிருக்கும். இப்படி சமத்உபாவம் இல்லாமல் செய்யும் நாதனைக் குப்பையில் ஓமம் செய்து நெய் விட்டமாதிரி ஆகும். இப்படிப்பட்ட ஆராதனத்தால் சர்வேஸ்வரன் பிரசன்னமாவான். பகவான் பிரசன்ன மான பிறகு துர்ல்பம் ஏதுமில்லை. தர்மார்த்த காமங்களைக் கோருவது மேலல்ல. அது அற்பப்பிரதமம் அதினுலேதும் பலிதமில்லை. மோக்ஷம் தவிர நீ அபேக்ஷிக்கவேண்டியதில்லை. செவ்வையாய் பழுத்தமரம் செடிக்கீழ் சேர்ந்தவர்க்கு எக்காலத்திலும் பலிதம் சித்திக்கும். பரப்பிரம்மமான மகா கற்பக விருக்ஷத்தை ஆஸ்ரயித்தவனுக்கு மோக்ஷாநந்த பலன் உடனே சித்திக்கும் என்பதற்கு ஏதும் சந்தேகமில்லை. இம்மொழிகளெல்லாம் நம்புமென்று உபதேசஞ் செய்தார். அப்பொழுது அந்த வேந்தன் ஸ்ரீ இராமானந்தசுவாமிகளுடைய ஞானேபதேசத்தைத் தன்மனதினிடத்தில் ஐக்கியஞ் செய்துக்கொண்டு சகலமான பதார்த்தங்களெல்லாம் அந்தப் பகவான் ரூபமென்று பாவித்து நடந்துகொண்டிருக்கும் சமயத்தில், ஓர்நாள் தனது குருவைப்பார்த்து, ஓ ஐயனே! மெய்யனே! அடியேனுடைய கவலைதனைத் தீர்த்த செய்யனே! யான் துவாரகைக்குப்போக ஆவலடைந்தேன். தாங்கள் என்மீது கருணைகூர்ந்து விடைதரவேண்டும். சுவாமி! என்றுகேட்க, ஸ்ரீராமாநந்த சுவாமி மனமுவந்து அப்படியே போய் வருவாயென்று விடையளிக்க, அவ்விடைபெற்றுச் சந்தோஷமாய் நடந்து காடு மலை வனம் முதலாகிய கோரமான இடமெல்லாம் தாண்டி துவாரகையென்னும் பட்டணம்சேர்ந்து, ஸ்ரீ வாசுதேவப் பரப்பிரமத்தைக்கண்டு சேவையடைந்து, நன்ருய் வந்தனம் செய்து ஓ புருஷோத்தமா! அநேகமாகிய ஜன்மங்களிலும் உன்னையறியாத விஷயாந்தரத்தில் யான் அகப்பட்டு தேனில் விழுந்த ஈயாகி நின்றேன். ஆனுல் துர்லபமாகிய மானிடதேகத்தை அடைந்து உன்னை அடைக்கலமடையாமல் இகபோகங்களை யடைந்து, பராசக்தியாகிய காளிகாதேவியை உபாசித்துக் கொண்டிருந்தேன். இப்படியிருக்கும் சமயத்தில் அந்த மகாதேவி எனக்குக் குருவாகி ஞானவைராக்கியத்தை உபதேசித்துப் பாகவதருடைய சன்னதிக்கு அனுப்பினுள். அத்தேவி வாக்குபோல் அவரையடைந்து நிற்கும் சமயத்தில், அவர்கள் மனமகிழ்ந்து அத்துவேஷங்கள் உண்டாக்கி (ஆசார்யஸ்சரிஸ்ஸாக்ஷாச் சரூபிநசஸம்ய꞉) என்னும் வாக்கியம்போல் சாக்ஷாத் பகவான் சொரூபமான ஞானுஷ்டானசம்பன்னருமான ஸ்ரீ'இராமானந்தசுவாமி பாதங்களை அடையும்படி மார்க்கத்தைக் காட்டினுர். அதுபோல் மனமகிழ்ந்து அந்த தேகி சொந்த மனையடையும் காலத்தில் அவர் என்மீது கருணை கூர்ந்து ஸ்ரீதாரகமந்திரத்தை உபதேசித்து சகலமான பூதங்கள் சமபாகமாய் இருக்கும்படிச்செய்து, என்

ளையும் உனது பக்தனுய்ச்செய்தார். இதுகால பரி யந்தம் யான் காமக் குரோத மதமாச்சரிய லோபம் என்னும் கர்மக்கிரியைதனில் விழுந்து ஆடியதெல் லாம் மன்னித்து இனி நிமிஷமாகினும் உன்னை மற வாதிருக்கும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று அபிமானித்துச் சொல்ல, அம்மொழியைக்கேட்டு பகவான் சந்தோஷமடைந்து, அவனுடைய பக்தி வைராக்கியத்துக்கு மனமுவந்து, ஸ்ரீவாசுதேவன்.

சுலோகம்.

தாசாமாவிரபூச்சௌரீ
ஸ்மயமானமுகாம்புஜஃ
பீதாம்பரதாஸ்ரக்வீ
சாக்ஷான்மன்மதமன்மதஃ

என்னும் மொழிபோல் கோபிகளுக்கு யமுனு தீரத்தில் சேவை தந்ததுபோல் பீபாஜி வேந்த ருக்கு சேவை தந்து நீ நாமதேவர்கள்போல் எனது அந்தரங்க பக்தனுய் இருக்கக்கடவாயென்று ஆசிர்வதித்து அடாபக்தனே! இனிமேல் ஸ்ரீராமா னந்தகுரு உபதேசித்தவண்ணம்போல் உனது மன தை ஸ்திரமாக நிறுத்துவாய். யான் உன்னை இடை விடாமல் எக்காலமும் உனதுமனதில் ஸ்தாபிதமாகி இருக்கின்றேனென்று திருவருள் தந்து அந்தர்த் தானமடைந்தார்.

இப்படியாக பீபாஜிவேந்தன் பகவானுடைய மொழியெல்லாம்கேட்டு சந்தோஷமடைந்து, நானு மாதகாலம் அந்தத் துவாரகையில் வசித்து, அதின் பிறகு பகவானுடைய அருள்படி காசிக்கு வந்துக் கொண்டிருக்கும் மார்க்கத்தில் அகோரமாகிய கான கமத்தியில் ஒரு வியாக்கிரமானது கர்ஜ்ஜித்துக்கொ ண்டு வருகையில் அந்த வியாக்கிரத்தை வேந்தனு டைய பத்தினியாள் கண்டு பயமடைந்து ஓ பிராண வல்லபா! இது என்ன விந்தை! இந்தக் கோரமான கானகத்தில் ஒரு மதம்பிடித்த புலியானது நம்மைக் கண்டு கர்ஜ்ஜித்துக்கொண்டு வருகின்றது. இதற்கு நாமென்ன செய்யலாம்? என் மனம் அதிக பய மடைந்திருக்கின்றது என்று சொன்னமாத்திரத் தில் இம்மொழி வேந்தன்கேட்டு ஓ நாயகி! ஏன் பய மடைகின்றுய்? அதோ வருகின்றவர் சாக்ஷாத் பகவான் அதை வேங்கை என்று சொல்லுவது நீதி யாகுமா? பகவான் சகலமான சேதனு சேதனங் களைத் தனக்குச் சரீரமாகச் செய்துகொண்டு இந் தக் கானகத்தில் திரிகின்றுர். ஆகையால் சர்வமும் அவருடைய ரூபமாயிருக்க நீ அன்யதாபாவம் செ ய்துகொண்டாய். இதைப்பற்றி யான் யோசிக்கின் றேன். உன்னுடைய மனம் இன்னும் பக்குவமாக வில்லையென்று தோன்றுகின்றது. கவசதாரியான புருஷனை புருஷபாவமாய்ப் பாவிப்பது ஞானமே தவிர கவசமென்றெண்ணுவது அஞ்ஞானமல்லவா? இப்படி சகலத்திலும் பிரவேசித்திருக்கும் சேதனு சேதன ரூபத்தைக் கவசமென்று அங்கிகரித்திருக் கும் பகவான் அந்த ஈஸ்வரபாவம் செய்யாமல் புத்திமந்தத்தால் வியாக்கிரமாகப் பாவித்தாய். இது வல்லாமல் ஸ்ரீஇராமானந்தசுவாமி கொடுத்த ஞான ப்ரதீபத்தைக் கண்டிருந்தால் அஞ்ஞானமென்னப் பட்ட இருள் உன்னைவிட்டு ஓடிப்போய்விடும். இப் படியிருந்தால் இக்காலத்தில் வியாக்கிரமென்ற பய த்தையொழித்து பகவானென்று நமஸ்கரிப்பாய் என்று தனது பத்தினிக்கு உபதேசித்துக் கொண் டிருக்குஞ் சமயத்தில் அந்த வியாக்கிரம் அதிவேக மாய் நடந்து இவர்களிருவரைக்கண்டு ஒருமையாய் நின்றது.

அச்சமயத்தில் வேந்தன் வியாக்ரத்தைக்கண்டு ஓ வேங்கையே! பகவானுக்குச் சரீரமான உனது மனதில் வசிக்கும் பகவானை உபாசிக்காமல் இந்திரி யங்களுக்கு உட்பட்டு ஏன் இப்படி வீண்காலம் கழி த்துக்கொண்டு திரிகின்றுய்? இனி நீ எடுத்த இந்த மிருகஜன்மத்தைப் போக்கி ஏகாந்தஸ்தலத்தில் வா சம் செய்துக்கொண்டு ஈஸ்வர சிருஷ்டியால் நியமிக் கப்பட்ட பதார்த்தங்களை இம்சிக்காமல் மரத்திலிரு ந்து பழுத்து உதிரும் இலையை ஆகாரமாய்த் தின்று எக்காலமும் பகவானைத் தியானம்செய்துக் கொண் டிருப்பாயென்று சொன்னவுடனே, அந்த வேங்கை க்கு ஞானமுண்டாகி ஆ! ஆ!! நாம் இப்படி ஞான வீனமாகிய பஞ்ச அறிவில்லாமல் அநேகமாகிய பிற வதைகள் செய்துக்கொண்டு காடெல்லாம் திரிந்து கடைசியில் இவர்களையும் கொல்வதற்கல்லவா வந் தோம். இந்தப்பாவம் நம்மை எப்படி விட்டக லும்? என்று கண்ணீர் தாரை தாரையாய் விட்டு அழுதுகொண்டு அந்த வேந்தனுடைய பாதத்தின் மீது விழுந்து எழுந்திருக்காமல் இருந்தது. அச்சம யத்தில் வேந்தனுனவர் பரமகிருபையால் தன்பாத த்தில் விழுந்த புலியை இரண்டு கையாலெடுத்து தனது கண்டத்திலிருந்த துளசியாரத்தை அதின் கழுத்தில் போட்டு, தனது அஸ்தத்தை அதின் சிர மேல் வைத்து அதின் காதிடம்சென்று பகவன்னும த்தை உபதேசித்து,

சுலோகம்.

ஸ்ரீமன்னுரோச்ய நாராயணுக்யம்
சேனுப்ராபுர்வாம் சிதம்பாபிநோபி
ஹாநஃபூர்வம் வாக்ப்ரவ்ருத்தானதஸ்மின்
தேனப்ராப்த மகர்பவாசாதிதுக்கம்.

என்பதுபோல் ஒ வியாக்கிரமே! ஸ்ரீமன் நாராயண நாமத்தை உச்சரிப்பாயாகில் எப்படிப்பட்ட பாபியானுலும் தன் கோரிக்கை அடையாமல் போவது உண்டா? ஐயோ! இதுகாலபரியந்தம் நாமோச்சாரணம் நமது வாக்கால் வராததுபற்றி நமக்குக் கர்ப்பவாசாதி துக்கங்கள் குடியிருக்கின்றன.

சுலோகம்.

மாபீர்மம்தமனேவிசும்த்ய
பஹாதாயாமீஸ்சிரம்யாத
நாநாமீன ப்ரபவந்திபா
பரிப்வஸ்வாமீநனுஸ்ரீதராஆல
ஸ்யம்வ்யபனீயபக்தஸுலபம்
த்யாயமஸ்வநாராயணம்
லோகஸ்ய்வ்யஸநாபநோ
தனகரோதாஸஸ்யசிம்நக்ஷமஃ

ஓ அற்பமனதே! எமன் என்னும் பாசபந்தத்திற்கு அஞ்சவேண்டாம். அந்தப் பகைவரை வெல்வதற்கு அதிக சுலபம். அந்தப்பகைவர் நம்மை ஏதும் செய்யமாட்டார். ஸ்ரீதரனல்லவா நமக்குப் பகவான். பக்திசொரூபனுன ஸ்ரீமன் நாராயணனே அலக்ஷியம் செய்யாமல் தியானித்துக்கொண்டிரு. இதுவல்லாமல் சகல லோகத்திலும் விசனத்தை சமூலமாய்ப் போக்கடிக்கப்பட்டவன் ஒருதாசனுடைய விசனத்தைப் போக்கடிக்கவில்லையா? என்று இப்படி அநேகவிதமான ஹிதோபதேசம் உபதேசித்து பீபாஜிவேந்தன் காசிக்குச்சென்று ஸ்ரீராமானந்த சுவாமி பாதகிருஷத்தில் வசித்து, பரமயோகிபோல் அனவரதமும் இடைவிடாமல் பகவத்தியானபரனுய் இருந்தார். இம்மொழிகளையெல்லாம் கேட்டிருந்த சித்தர்கள் நாபாஜிசித்தரைப் பார்த்து, சுவாமி! அந்தப் பீபாஜிராஜன் அப்புலிக்கு உபதேசமடையச்செய்து தான் சென்றபிறகு அவ்வேங்கை எந்த ஜென்மமெடுத்தது. அதின் விபரம் அடியேன்களுக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்று கேட்ட மாத்திரத்தில் நாபாஜிசித்தர் மனமகிழ்ந்து ஒ சித்தர்களே! அதுமுதற்கொண்டு அந்த வேங்கையானது தனக்கு இராஜன் உபதேசித்ததுபோல் தனது குலஸ்வபாவத்தை ஸ்வஜாதி மிருகங்கள் சகாயத்தையும் இந்திரிய சந்தோஷத்தையும் ஜீவஹிம்சைகளையும் இப்படிப்பட்ட துஷ்ட கிரியைகளைத் தொலைத்து ஏகாந்த ஸ்தலமறிந்து அங்குவசித்து அனவரதமும் இடைவிடாமல் பகவத்தியானத்தை செய்துக்கொண்டிருக்க அன்று எட்டாவது தினத்தில் சரீரத்தை ஒழித்துப் புராதனகடமென்ற கிராமத்தில் நரசிம்மமேதாவென்ற பெயருடனே பாகவதோத்தமனுய் பிராமணகுலத்தில் அவதரித்து ஸ்ரீ பண்டரிநாதருடைய அந்தரங்கபக்தனுய் இருந்தார்

இது எப்படி மிருகஜாதிக்கு மானிடஜன்மம் லபிக்குமென்று கேட்டால் (பசுர்மனுஷ்யஃ பக்ஷிவாயேசவைஷ்ணவ சம்ஸ்ரயஃ தேனவதேப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணே பரமம்பதம்) இதுபோல் சதா ஈஸ்வர வியாப்தி யனுசரிப்பதால் வைஷ்ணவனுகி பரமபாகவதோத்தரனுடைய கிருபையால் பசுவானுலும் பக்ஷியானுலும் மனிதனுகிலும் சிறந்த பக்தரை ஆஸ்ரயித்தால் அவருடைய கடாக்ஷத்தால் பரமபதமடைவார். என்று விசேஷார்த்தமாய் பீபாஜிவேந்திரிடத்தில் பிரத்தியக்ஷ சித்தமானுர். இப்படி சொன்னவுடனே சபைகலைந்து எல்லோரும் சந்தோஷமடைந்து அவரவர் இருப்பிடம் சென்றுர்கள்.

பீபாஜிராஜன் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணபரப்ரம்மணேநம:

பதின்மூன்ருவது

# டாகூர் இராமதாசர் சரித்திரம்.

ஸ்ரீகண்ணன் ஸ்தோத்திரம்.

விருத்தம்.

ஆதியந்தமில்லாத வானந்தக்கடலே யருள்தந்த மெய்ப்பொருளே
சோதியாயன்பர்க ளிருதயத்தில்துலங்கும் ஜொலிப்பானவொளியே
வீதியென்ற வகமதனில்விளையாடும் வேதாந்தமெய்ஞ்ஞானமே
நீதியுடனுன்பாதம் நிதந்தேடியானுமே நேமமுடன் துதித்தேனீசா.

சுலோகம்.

நித்யோத்ஸவோபவேத்தேஷாம்நித்ய ஸ்ரீர்நித்யமங்களம்
யெஷாம்ஹ்ருதிஸ்தோபகவான் மங்களாயதனம்ஹறுய:

எப்படியென்ருல் எந்த மனிதன் மனதினிடத்தில் விஷ்ணுவென்னும் பரம்பொருளைத் தியானம் செய்துக்கொண் டிருக்கின்ருனே அப்படிப்பட்ட நற்புருஷன் எக்காலமும் சந்தோஷ மென்னும் ஞானவீட்டைக் கண்டு அவ்வீட்டில் குடியிருந்து முத்தியென்னும் மோக்ஷமார்க்கத்தைக்கண்டு அவ்வழியாய்ச்சென்று அங்கிருக்கும் பேரின்பத்தைக் கண்டு சாஸ்வதமென்ற ஐஸ்வரியத்தை அடைந்து சுகமாயிருப்பதுபோல் இந்த நாபாஜிசித்தர் இரவும் பகலும் இடைவிடாமல் இராமநாமத்தைத் தியானம் செய்துக்கொண்டிருக்கும் சமயத்தில் அன்றையதினம் உதயமானவுடனே அச்சபைக்கு தினந்தோறும் வருஞ் சித்தரெல்லாம் ஒன்ருய்ச்சேர்ந்து நாபாஜிசித்தரைப் பார்த்து, ஓ குருநாதா! இது காலபரியந்தமும் தாம் சொல்லிக்கொண்டு வந்த சரித்திரமெல்லாம் கேட்டு குருடனுக்குக் கோல் கொடுத்த கதைபோல் ஆச்சுது. அது எப்படியென்ருல் அஞ்ஞானிகளாகிய எங்களுக்கு ஞானமென்னும் தீபத்தை ஏற்றி அவ்வெளிச்சத்தின் பிரகாசத்தைக்கண்டு இதுதான் தீபமென்று அறிந்தோம். தவிர அத்தீபத்தின் மகிமை இன்னதென்று அறியாத மூடனுயிருக்கின்ருேம். ஆகையால் அதனுடைய மகிமை அறியும்படி ஓர் சரித்திரம் சொல்லுவீரென்று கேட்க, அதற்கு நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து ஓ எனது அன்பரே! ஆனுல் உங்கள் இஷ்டப்படி இதுவரைக்கும் கேட்டிராத இராமதாசர் சரித்திரமென்னும் ஓர் சரித்திரத்தைச் சொல்லுகிறேன். அதை அதிக பக்திவினயத்துடன் கேட்பவருக்கு ஸ்ரீ நாராயணமூர்த்தியாகிய பரம்பொருள் மேலான வீட்டைக்காட்டி முத்தி மார்க்கத்தைத்தந்து தனக்கு தாசராக செய்துக்கொள்ளுவாரென்று சொன்னமாத்திரத்தில் அச்சபையிலிருந்த சித்தர்களெல்லாம் சந்தோஷக்கடலில் குளித்து ஓ குருநாதா! தாங்கள் எப்படி கேட்கும்படிச் சொல்லுகின்றீரோ அப்படிகேட்கின்ருேம் என்று சொன்னமாத்திரத்தில், நாபாஜிசித்தர் மனமகிழ்ந்து ஆனுல் உங்கள் இஷ்டப்படிச் சொல்லுகிறேன். எப்படியென்ருல்,

நாலடி ஆசிரிய விருத்தம்.

நேமமுடன் ஐவரையும் ஒன்ருய்க்கட்டி
நிலைநிற்கா மதயானை தனைநிறுத்தி
காமென்ற பேயாண்டி தன்னையோட்டி
கங்கைதனில் ஸ்நானம்செய்து ஜபமதிற்கு
தாமதங்கள் செய்திடாமல் ஞானவீட்டில்
ஸ்தம்பனமாய் மனம்நிறுத்தி சரித்திரத்தை
சோமமுடன் கேட்பவர்க்கு பரமானந்தம்
சொந்தமுடன் புண்டரீகன் தந்துகாப்பார்.

இந்தச் சரித்திரங்களை எல்லாம் மேற்சொல்லியவண்ணமாய்க் கேட்பவர்களுக்குப் பரமபதம் கிட்டும் என்பதற்குச் சந்தேகமேயில்லை. ஆனால் கேளுமென்று நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினார். அது எப்படியென்றால்,

முன்னொருகாலத்தில் ஸ்ரீ துவாரகைக்கு முந்நூறு யோசனை தூரத்தில் இருக்காநின்ற டாக்ரா வென்னும் கிராமத்தில் இராமதாசனென்னும் ஒரு பிராமணன் ஊஞ்சுவிர்த்தியால் ஜீவித்துக்கொண்டு பகவத்பக்திநிஷ்டனும் அனவரதமும் பகவத்தியானஞ் செய்துக்கொண்டு சம்மாதி சற்குணதீரனும் பரம வைராக்கியசீலனும் அந்நாட்டில் வாசஞ்செய்துக்கொண்டிருந்தார். இப்படியிருக்குஞ் சமயத்தில் அந்தப் பிராமணோத்தமன் வருஷந்தோறும் ஆஷாடசுத்த ஏகாதசிக்கு ஸ்ரீமத்துவாரகைக்குச் சென்று பகவத்தரிசனஞ் செய்துக்கொண்டு வருவார். இதுவுமல்லாமல் இவர் ஒரு மரத்தால் சிறிய துளசி மேடைசெய்து "துளசீஹரிவல்லபா" என்னும் மொழிபோல், பகவானுக்கு அத்தியந்த பிரிய விஷயமான துளசிச்செடியை அம்மரமேடையில் அமைத்து, அதை அநவரதமும் தன்கையில் வைத்துக்கொண் டிருப்பார். இப்படிப்பட்ட நிஷ்டையுடன் இருபத்தைந்து வருடம் கழித்து துஸ்ஸஹமான வார்த்தீகமடைந்தார். அப்பொழுது தனது சரீரமும் இந்திரியங்களும் அதிக பலஹீனமாகியும் தன்னுடைய நியமங்களைத் தவறாமல் அந்த வருடம் ஆஷாடசுத்த ஏகாதசிக்கு ஸ்ரீ துவாரகைக்குச் சென்று, பகவானுடைய சேவையடைந்து, அந்தத் தேவதேவருடைய அக்கிரபாகத்தில் நின்றுக்கொண்டு அதிக போதமனதோடு பரமபக்தி தன் தலைக்கேறித் தியானிக்க ஆரம்பித்தார். அது எப்படி என்றால், ஸ்ரீபுண்டரிகாக்ஷா! உனக்கு வந்தனம் ஓ புருஷோத்தமா! உனக்கு வந்தனம். சர்வலோகஸ்வரூபா! உனக்கு வந்தனம். உக்கிரமான சக்கரத்தைத் தரித்துக்கொண்டதேவா! உனக்கு வந்தனம். தவம் வேதம் முதலானதற்குத் தேவனும் பசுக்களுக்கும் பிரமநிஷ்டருக்கும் ஹிதனும், கர்ம பிரபஞ்சத்திற்கும் ரக்ஷகனும், ஸ்ரீ கிருஷ்ணனும், கோவிந்தனும், திவ்யநாமங்களோடு கூடியிருக்கும் தேவா! உனக்கு அநேகவந்தனம். பிரம ரூபமாய் ஜகத்தைச் சிருஷ்டித்து ஸ்வரூபத்தால் இரக்ஷித்துக்கொண்டும், கலியந்தரத்தில் உருத்திரரூபனும் சம்மரித்துக்கொண்டு திரிமூர்த்தி ஸ்வரூபியாய்ப் பிரகாசித்துக்கொண்டு மிருக்கும் தேவா! உனக்கு வந்தனம். ஓ அச்சுததேவா! சுர கந்தர்வ கின்னர சித்த சாத்திய பன்னக யக்ஷ இராக்ஷசபிசாச மனுஷ்ய பசுபக்ஷி ஸ்தாவர பிபீலிகாதிகள் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் சப்தஸ்பரிசரூப ரசகந்தம் மனோபுத்தி சித்த அகங்காரம், காலம் தத்துவங்கள் இதின் பரமார்த்தமான ஆத்மா இவைகளெல்லாம் நீயேயன்றி வேறுண்டா? வித்யா வித்தைகள் சத்தியா சத்தியங்கள் பிராக்தி நிவர்த்திகள் வேறுதார்த்த சர்வகர்மங்கள் இவைகளெல்லாம் நீயல்லவோ? ஓ பகவானே! சமஸ்த கர்மபோகங்கள் அனுபவிப்பவனும் கர்மசாதனமான திரவியங்களும் சர்வகர்ம பலங்களும் நீயே. ஓ மகாப்பிரபூ! என்மீதும் இதரார்மீதும் சேஷபூதமான சகலலோகங்களிலும் நீர் வியாபித்திருப்பதால் உபாதான நிமித்த காரணமான ஐஸ்வரியங்களை அனந்த கியான சக்த்யாதி கல்யாண குணங்களை செவ்வையாய் காட்டிக்கொடுக்கின்றது. இதுவல்லாமல் பரமயோகிகள் உன்னைத் தியானிக்கிறார்கள். யாகம்செய்வார் உன்னையே உத்தேசிக்கிறார்கள். இதிலும் உம்மையே கோரி யாகம் செய்கிறார்கள். நீர் வேறே பித்ருரூபம் தேவரூபம் தரித்து ஹவ்யகவ்யங்களைப் பக்ஷிக்கின்றாய். ஓ அச்சுதா! மஹததகங்காதியான சூட்சுமங்களைப் பிருதிவியாதி பூதங்களை அவற்றுளிருக்கும் சூக்ஷ்மமாகிய ஆத்மதத்வமாகிய இந்த சூட்சுமப் பிரபஞ்சத்திலும், எங்கிருந்து உண்டாகின்றதோ? அது ஸ்வரூபகுணங்களால் அதிகமாகிய நிமகாரூபமாகி இருக்கின்றது. சூட்சமாதி விசேஷங்கள் சூன்யமாகி விசனமில்லாததாயிருக்கும் ரூபமானது உனது பரமாத்மா சொரூபமாகி இருக்கின்றது. இப்படிப்பட்ட புருஷோத்தமா! உனக்கு இதோ வந்தனம். சர்வாத்மகா! சகலபூதங்களிலும் சத்வாதி குணங்களோடு கூடியிருக்கும் உனது ப்ரா்கிருத சக்தியாகிய ஜீவஸ்வரூபத்திற்கு நமஸ்கரிக்கின்றேன். எந்தவாக்குக்கும் எட்டாமலிருக்கின்றதோ? எந்த விசேஷத்தால் விசேஷிக்காம லிருக்கின்றதோ? அதுவும் இதுவல்லாமல் ஞானிகளுடைய ஞானத்திற்கும் நிரூபிக்காமலிருக்கின்றதோ, அப்படிப்பட்ட சிலாக்கியத்திற்கும், உனது முக்தாத்ம ஸ்வரூபத்திற்கும் இதோ வந்தனம். இதிலும் எவனுக்குத் தன்னுடைய ஒளியைக்காட்டாமலிருக்கின்றதோ, எவன் எல்லாவற்றிற்கும் வேறாயிருக்கின்றானோ, அப்படிப்பட்ட வாசுதேவனுக்கு நமஸ்காரம் செய்கின்றேன். கர்மாதியான நாமரூபங்களில்லாமல் கேவல விலக்ஷணஸ்வரூபியான மகாத்மனுக்கு நமஸ்கரிக்கின்றேன். இதுவல்லாமல் அநேக வந்தனம் செய்கின்றேன். மேலும் அப்படிப்பட்ட

உத்தமசீலருக்கு அநேககோடி வந்தனம்செய்கின்றேன். தேவாதிகள் பராத்பரரூபத்தைச் சேவிக்காமல் மச்சகூர்மாவதாரங்களை அர்ச்சிக்கின்றரே. அப்படிப்பட்ட பரமாத்மாவுக்கு வந்தனம் செய்கின்றேன். எவன் ருத்ராதி சகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாகி சுபாசுபங்களைப் பார்த்துக்கொண்டிருக்கின்ருனே அப்படிப்பட்ட சர்வசாக்ஷியும் பரமேஸ்வரனுகியும் இருக்கும் ஸ்ரீவிஷ்ணுதேவனுக்கு நமஸ்கரிக்கின்றேன். வியசத்தமாகிய இந்த ஜகமெல்லாம் எவருடன் பேதமில்லாமல் இருக்கின்றனவோ, அப்படிப்பட்ட விஷ்ணு பரத்துக்கு வந்தனம் செய்கின்றேன். சகலத்திற்கும் ஆதியான அந்த ஸ்ரீஹரி எனக்குப் பிரசன்னமாகவேண்டும். அக்ஷரத்தால் நாமம் உண்டாயிருக்கின்றதோ, அல்லாமல் பிரபஞ்சத்தில் நூலானது வஸ்திரத்தில் கலந்திருப்பது போலும் நூலில் மணிகள் கோர்ப்பதுபோலும் அந்தப் பரமதயாநிதி நாமரூபங்கள் கோத்திருக்கின்றனர். அச்சுதன் என்மீது பிரமையடைந்து பிரசன்னமாகவேண்டும் சர்வசுவாமியாகிய சர்வசேஷியாயிருக்கும் அந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு இதோ வந்தனம் செய்கின்றேன். எவன் மிகு சர்வம் லகிக்குமோ எவனிடத்திலிருந்து சர்வம் சிருஷ்டிகாலத்தில் சேவைதருவானே எவன் சகல சரீரக்தனுய் சகல ஆதாரமாயிருக்கின்ருனே அப்படிப்பட்ட பகவானுக்கு இதோ வந்தனம் செய்கின்றேன். அந்தப் பரமதயாளன் எங்குமே ஆத்மாவாகி உட்புறத்திலும் வெளியிலும்வியாபித்து ஞானனந்தமயமாகி இருப்பதால் யானும் அவனே ஆகின்றேன். ஆகையால் சமஸ்தமும் என்னல் உண்டாகின்றன. நானும் சர்வமாயிருக்கின்றேன். நித்தியமான என்னிடத்தில் ஆதாரமில்லாமல் தன்னுள்ளே தானே இருந்து பரமாத்மாவாகின்றேன். யான் சிருஷ்டிக்குப் பூர்வத்தில் பிரமத்தை ரூபத்தால் சேர்ந்திருந்தேன். பிரளயகாலத்தில் சர்வமும் என்னல் உண்டாகாமல் பரமபுருஷனுகி இருப்பேனென்று தன்னைமறந்து நிர்மலனுகி தியானித்துக் கொண் டிருந்தேன்.

இப்படியாக ஆனந்தபரவசமடைந்து, பிரபஞ்சத்தை மறந்து பிரகலாதனைப்போல் பகவத்தியானம் செய்துக்கொண்டிருந்த இராமதாசன் செய்யப்பட்ட பக்திவைராக்கியத்திற்குப் பகவான் எவ்வளவோ சந்தோஷமடைந்து ஓ பக்தபிரியா! நான் இப்போது உன்னுடைய பக்தி என்னும் வலையிலகப்பட்டு உனக்குப் பரதந்திரனுகி இருக்கின்றேன். உன்னைப்போலொத்த திடசித்தமுடையவர் இந்த மூன்றுலோகத்திலும் கிடையார். நீ எப்படி என்னுடைய சேவைக்கு ஆசித்து சேர்ந்திருக்கின்ருயோ அதுபோல் யானுமே உனது பிரியத்தைக்கோரி சோதித்துக் கொண்டிருக்கின்றேன். உனக்கு வயது தளர்ந்தபடியால் இனி துவாரகைக்கு நடந்து வரமாட்டாய். மனதானது சம்மதமடைந்து சரீரத்தை சுவஸ்த்தமாகி தாதுக்கள் சமமாய் இருக்கும்பொழுதே மனிதன் என் விஸ்வரூபத்தை ஸ்மரிப்பானே அப்படிப்பட்டவன் மரணகாலம் சமீபித்து காஷ்டபாஷாண சன்னிபுனுயிருந்தபோதிலும் அப்படிப்பட்ட என்பக்தனை யான் ஸ்மரித்து அவனுக்குப் பரமகதி கொடுக்கின்றேன் என்று ஸ்ரீவராஹபுராணத்தில் பூதேவி உபதேசிக்கும் வியாசத்தால் மதிபுலகெல்லாம் பிரசித்தியடையச் செய்திருக்கின்றேன் அல்லவா? அந்த மேலான அர்த்தத்தை உன் விஷயத்தில் அனுஷ்டித்துக் காட்டுகின்றேன். நீ சோகத்தை விடுவாய்.

சுலோகம்.

வ்யஸநேசுமனுஷ்யாணும்
ப்ருஸம்பவத்திஃதுர்கிதஃ

என்னும் மொழிபோல் உன்விஷயத்தில் உனது துக்கத்துக்கானல் என்துக்கம் அதிகரித்திருக்க நீ ஏன் சோகிக்கின்ருய்? இதுவல்லாமல் நீ எனக்குச் சரீரமாயிருப்பதால் என்சரீரத்திற்கு வேண்டிய இதங்களையான் செய்துக்கொள்ளுகிறேன். உனக்கு சிந்தைவேண்டாம். 'ஜங்கம ஸ்ரீவிமானுநி ஹ்ருதயாநி மநீஷிபிஃ' என்பதுபோல் என் மனது எனக்கு ஜங்கம ஸ்ரீவிமானமாயிருக்க நான் உன்னை எப்படி விஸ்வசிப்பேன்? அநேக ஜன்மத்தில் இந்திரியசிங்கரனுய் மத்விஷயமுன விமுகனுய் என்வலையில் அகப்படாமலிருந்த நீ இந்த ஜன்மத்தில் அத்வேஷாதிசுகங்களோடு சேர்ந்து என் விஸ்வரூப தியானமென்னும் சித்தௌஷத சேவையால் பரசித்தனுய் என்னை உனது பக்தியென்னும் வலையில் அகப்படச் செய்துகொண்டாய். இனி ஆயிரம்மொழிகள் ஏன்? இதுவல்லாமல் யான் உன் மனிதனுய் உன் தனமாய் உனக்குப் பொக்கிஷமாய் உனக்குத் தாரகமாய் உன்மனேபீஷ்டத்தை யறிந்து உன்னையும் புகழப்பட்டவனு யிருக்கின்றேன் என்றுசொல்லி, இராமதாசனை எடுத்து மார்போடு ஆலிங்கனம் செய்துக்கொண்டு கண்ணீர் துடைத்து ஓ குழந்தாய்! இருபத்தைந்து வருடமாக நீ என் சேவையைக்கோரி ஸ்ரீமத்துவாரகை யாத்திரை செய்தாய். இப்பொழுது யான் உன்தயாளகுணத்தைச் சேவை

யாகக்கோரி உன் பின்பற்றி உனது நாட்டிற்கு வர வேண்டுமென்று அபேக்ஷ யுடையவனாயிருப்ப தால் உன்னுடைய அனுமதிபிரதாபத்தைக் கோரு கின்றேனென்று பகவான் பிரியத்துடன்சொல்ல, இம்மொழிகேட்ட இராமதாசன் ஆனந்தக்கடலில் மூழ்கி அநேகமாகிய அந்தரங்க வந்தனங்கள் செய்து, ஆனந்தநடனம் செய்துக்கொண்டு ஒ சுவாமி! அர்ச்சாவதாரா! சாந்தனாயிருப்பவன் நீ என்னுடன் எப்படிவரத் துணிவாய், என்றுகேட்க அம்மொழி கேட்ட பகவான் சந்தோஷமடைந்து ஆனால் இன்றையதினம் இராத்திரிக்கு இருண்டசமயத்தில் எல்லோரும் நித்திரை அடைந்தபிறகு நீ தனியாய்வந் தால் எனது சங்கல்பத்தால் ஆலயக்கதவு திறக்கப் படும். அச்சமயத்தில் நீ என்னை எடுத்து இரதத் தின்மீது வைத்துக்கொண்டு என்னுடன் உட்காரும். அந்த ரதத்தில் கட்டப்பட்ட மரக்குதிரைகள் கருடாவேசமடைந்து இரதத்தை இழுத்துக் கொண்டு உனது ஊருக்குச் செல்லுமென்று, சொல்லிவிட்டு மௌனமாயிருந்துவிட்டார். இம்மொழி கேட்ட இராமதாசன் சந்தோஷமடைந்து பக வான்சொன்ன மொழிபோலவே இராத்திரியான பிறகு பகவானை யெடுத்து இரதத்தின்மீது வைத் துக்கொண்டு தானும் ஏறி அமர்ந்தபிறகு அந்த ரத மானது அதிவேகமாய் டாக்கிருவென்னும் நாட் டிற்குச் சென்றது. இப்படி யிருக்கும் சமயத்தில் மறுநாள் உதயத்தில் அர்ச்சகர் பூஜார்த்தமாய் வர அந்தக்கோவில் கபாடந் திறந்திருப்பதைக்கண்டு ஆச்சரியமடைந்து, உட்பிரவேசித்துப் பார்க்கை யில் பகவான் இல்லாமலிருப்பதைக்கண்டு சோகா சாந்தனாய் விசனமடைந்து இதுவென்ன விந்தை! இந்த சோரத்துவம் செய்தவர் யாவராயிருப்பாரென்று தன்மனதில்தானே யோசித்துக்கொண்டு இந்தக்காரியம் இனி எவரும் செய்திரார்? இங்கு இராம தாசன் என்னும் பிராமணன் பகவானுக்கு அதிக அந்தரங்க பக்தனாயிருப்பதால் அவர் நேற்றைய தினம் சுவாமியினுடைய அக்கிரபாகத்தில் நின்று கண்ணீர் தாரைதாரையாய்விட்டு அழுதுக்கொண்டு ஸ்தோத்திரம் செய்து நடனமாடி தன்னைத்தான் மறந்து தியான சக்தியடைந்திருந்தான். ஆனால் நமது வாசுதேவன் பக்தியை யடைந்தவன் அல்லவா. ஆகையால் அவனுடைய பக்தியென்னும் வலையில் அகப்பட்டு என்னமானனே தெரியவில்லை யென்று துக்கித்துக்கொண்டு இரத மிருப்பிடம் வந்து பார்க்க அது இருக்கவேண்டிய ஸ்தானத்தில் இல்லாமையால் ஒ! ஒ! இந்த இரதத்தை ஆவாகனம் செய்து நடத்திவிட்டாரென்று மனதி லெண்ணிக் கொண்டு அந்த இரதத்தின் சக்கரத்தின் ஜாடையும் குதிரைகளுடைய கால் நடைகளும் குறிப்பறிந்து அதேமார்க்கமாய் பகவான்மீது ஏக்கமடைந்து நடக்கும் சமயத்தில், அந்தப் பாட்டையானது டாக்கிருவென்னும் கிராமத்திற்குக் கொண்டுபோய்விட்டது. இது இப்படியிருக்குஞ் சமயத்தில் இராம தாசன் இவர்கள் வரும் சங்கதி கேள்விப்பட்டு அதிக பயமடைந்து அச்சொரூபியான ஸ்ரீவாசுதேவனைத் தனது வீட்டிற்குச் சமீபத்திலிருந்த ஓர் திவ்யமாகிய தாமரை தடாகத்தில் ஒளித்து வைத்து விட்டான். அதின்பிறகு இந்த இராமதாசன் ஏதும் தெரியாதவன்போல் இருந்துவிட்டான். துவாரகா புரியிலிருந்து வந்த அர்ச்சகர் முதலானவர்கள் ரத சக்கரத்தின் குறியும் குதிரைகள் பாதக்குறிகளையும் கண்டு இராமதாசன் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். அந்தக்குறிகள் அதுவரைக்கும் அகப்பட்டு அதின் பிறகு தென்படாமல் இருந்துவிட்டது. அச்சமயத் தில் அந்தத் துவாரகைவாசிகள் அச்சமயத்தில் இருப்பவரை ஐயா! இந்த வீடு எவருடையது? இந்த வீட்டின் எஜமானுடைய நடக்கை எப்படிப்பட்டது? என்று அதிக விநயத்துடன் கேட்க, அந்த ஊரிலிருப்பவர் இவர் கேட்கும் உன்னத மொழி களைக்கண்டு சந்தோஷமடைந்து அந்த இராமதாசருடைய குணாதிசயத்தையும் நடக்கையையும் சவிஸ்தாரமாய்த் தெரியச்சொன்ன பிறகு, அந்த அர்ச்சகர் அந்தவீட்டிற்குள் பிரவேசித்து இராமதாசரைக் கண்டு ஒ பிராமணோத்தமரே! உலகத்தில் பொன் பொருள் முதலானதைத் திருடுவார்கள். நீர் பகவானை அபகரித்துக்கொண்டு வந்தீரே. இப்படிப் பட்ட அக்கிரமம் செய்யத்தகுமா? ஆனாலும் உம் முடன் நிஷ்டூரமாவது நீதியல்ல. ஆனல் பகவானை எங்களுக்குக் காட்டுமென்று சொன்னார்கள்.

இம்மொழிகேட்ட இராமதாஸ் ஒன்றுந்தோன்றாமல் மெய்மறந்து ஐயா! யான் ஏதுமறியேன். என் மீது இப்படிக்குக் கூறுவது நீதியன்று, என்றுசொன்ன மொழிகளை அவர்கள்கேட்டு கோபமுண்டாகி அந்தக்ஷணமே இராமதாசரைப் பிடித்து கைதி செய்து அவர் வாசம் செய்துக்கொண்டிருந்த வீட்டை எல்லாம் சோதனை போட்டும் பகவான் எங்கும் காணாதபடியால் அதிக கோபமுண்டாகி அந்தக் கிராமத்திலிருக்கும் வீட்டையெல்லாம் இடித்து சோதித்துப் பார்த்து சர்வேஸ்வரன் எங்கும் அகப்படாமையால் சிந்தை அதிக வியாகூலமடைந்து

நின்றூர். இப்படியிருக்க, அதிலொருவர் ஐயா! நாம் இப்படி பரதவிப்பது நீதியல்ல. இதோ இவர் வீட்டிற்கு எதிரிலிருக்கும் தடாகத்தைச் சோதிப் போமென்று சொன்னவுடனே, இம்மொழிகேட்டு சந்தோஷமடைந்து இதுவுமொருஆலோசனை தான். ஓர் சமயம் இவன் நமக்குப் பயந்து பகவானை எடுத்து ஜலத்தில் போட்டிருந்தால் போட்டிருப்பானென்று யோசித்து ஒருமூங்கில் கட்டைக்கு ஏழு கால் செய்த ஈட்டியைக் கட்டிக்கொண்டு அந்த தடாகத்தைச் சுற்றிலும் குத்திக்கொண்டு வந்தார்கள். இப்படி குத்திக்கொண்டு வரும் சமயத்தில் அந்த ஈட்டியானது பகவானுடைய தேகத்தில் பட்டு இரத்தம் பிரவாகமாயிற்று. அந்த உதிரமானது அந்தக் குளத்திலிருக்கும் நீரெல்லாம் உதிர ரூபமாய்விட்டது. இதைப்பார்த்து மெய்ம்மறந்து பயமடைந்து சிலர் அந்தஜலத்திலிறங்கி பகவானை சிலையை வெளியில் கொண்டு வந்தார்கள். இவர்கள் ஈட்டியால் குத்தின காயமானது பகவானுடைய தேகத்தில் தைத்திருந்தது. இதைப்பார்த்த துவாரகவாசிகள் பகவானைப் பார்த்தமாத்திரத்தில் ஆனந்தப் பரவசமடைந்தார். இப்படியிருக்க இராமதாசர் மாத்திரம் ஐயோ! என்னைப்பற்றியல்லவோ பகவானுகிய திவ்யமங்கள விக்கிரஹத்துக்கு காயமுண்டாச்சுது? என்று பெருந்துயரமடைந்து சோகமாய் நின்றூர். அப்படிப்பட்ட சமயத்தில் பகவான் இராமதாசரைப் பார்த்து, ஆ! ஆ!! எனக்கு உன்னையொத்த அந்தரங்க பக்தன் இந்த மூன்று லோகங்களிலும் திரிகாலங்களிலும் கிடையார் ஆனல் நீ எனது விஸ்வரூபத்தின் மகிமையைச் செவ்வையாய் அறிந்தவன். என்னை நீ சர்வகதனென்று பாவித்துக்கொண்டிருந்தாய். என் திவ்யமங்கள விக்கிரஹத்தில் காயம்பட்டதென்று அதைக் கண்டு சோகமடைந்தாய். உன்மீது எனக்கிருக்கும் பிரமாதிசயங்களை வெளிப்படுத்துவதற் கல்லவா நான் உன்னுடன்கூட புறப்பட்டு வந்தேன். இனி உனதிஷ்டப்படியே யான் இவ்விடத்தில் வசிப்பதற்குக் கோருகின்றேன். ஆகையால் நீ இந்த அர்ச்சகருக்கு எனது திவ்யமங்கள விக்கிரஹத்துக்குத் தகுதியான சமபாகமாக தங்கத்தைக் கொடுப்பாயாகில் அந்த அர்ச்சகர் அந்த தங்கம் பெற்றுக்கொண்டு உன்னையும் என்னையும் பாதிக்காமல் அவர்கள் வந்தது போதுமென்று மனத்தி லெண்ணிக்கொண்டு வந்தவழியே சென்று துவாரகை சேரவேண்டுமென்று நியமிப்பார்கள் என்றூர். இப்படிச்சொன்ன வசனங்களை எல்லாம் அந்த அர்ச்சகர் கேட்டமாத்திரத்தில் ஆனந்தக்கடலில் குளித்தவராய் மனது நீராய்க்கரைந்து இந்த இராமதாசருக்கு இத்தனை தங்கமேது? ஆனல் பகவான் மறுபடியும் நம்முடன் எப்போதும்போல துவாரகைக்கு வருவதற்கு ஏதும் தடையிராது. பரமபக்தனுகிய இராமதாசனுடைய மனதைத் தைரியப்படுத்துவதற்கல்லவா நமது பகவான் இப்படி லீலாவினேதனுய் கொண்டாடினூர்? என்று வந்தவர்கள் மனதில் நிச்சயித்துக் கொண்டாடியிருந்தார்கள்.

இப்படியாக எண்ணிக்கொண்டிருக்கும் சமயத்தில் பகவான் சங்கற்பத்தால் அங்கு நிர்ணயமாக ஓர் தராசு உண்டாயிற்று. அச்சமயத்தில் ஸ்ரீபக்தவத்ஸலனை இராமதாசர் கண்டு சுவாமி! இந்த தரித்திரவானுக்கு எப்படித் தங்கம் அகப்படும்? அதை எப்படிச் சேகரித்துக்கொண்டு வருவேனென்று சொல்ல, இம்மொழிகேட்டு பகவான் கலகலவென்று சிரித்து, ஏன் விசனமடைகின்றுய், கற்பகவிருக்ஷத்தை அனுசரித்தவர்க்கு க்ஷாமகால முண்டாகுமா? ஆக்கிருதகல்பதரமாகிய யான் உன்வசமிருக்க உனக்கென்ன குறை? யான் சகல பிரபஞ்சம் சிருஷ்டிக்கெல்லாம் ஏகாந்தனுயிருக்க உனக்கு எப்படி தாரித்திரம் உண்டாகும்? இச்சமயத்தில்உனது பத்தினி யணிந்திருக்கும் மூக்குத்தியைக் கொண்டு வந்து எதிர்தட்டில் வைப்பாயென்று சொன்னூர். இம்மொழிகேட்ட இராமதாசர் சர்வசக்தியடைந்த பகவானுடைய கல்யாணகுணத்தைக் கொண்டாடிக்கொண்டு பகவான் நியமித்த பிரகாரம் அந்த மூக்குத்தியைக் கொண்டுவந்து இன்னெரு தட்டில் வைத்தார். இப்படி வைத்தவுடனே பகவான் சங்கல்பத்தால் அந்த மூக்குத்தியிருக்கும் தட்டானது கீழுக்கிறங்கியது. பகவானிருந்த தட்டு மேலுக்கு ஏறியது. இது ஏனென்றுல் பக்தவச்சலன் பக்திவான்களுடைய கீர்த்தியை வெளிக்குக் காட்டும் பொருட்டு இப்படிப்பட்ட விசித்திரங்களை எல்லாம் அற்புதமாய்க்காட்டி சனகாதி பரமயோகிகளுக்கு வெளிக்காட்டினூர். அதின்பிறகு துவாரகாவாசிகளாகிய அந்த விப்பிரவர் ராமதாசருடைய பக்தியையும், பக்தவத்ஸலனுக்கு அவர்மீதிருக்கும் வாற்சல்யத்தையும், அநேகவிதமாய்க் கொண்டாடி, இதுவோ மகா பிரசாதமென்று அந்த மூக்குத்தியைப் பெற்றுக்கொண்டு வாசுதேவருக்கும் வந்தனங்கள் செய்து ஒ மகானுபாவா! பகவான்மீது எனது பக்தியை நிறுத்தியதற்கும், பகவான் உன்மீது வைத்த வாற்சல்யத்திற்கும், நாங்கள் கொண்டாடிக்கொண்

டோம். ஆனாலும் சதுர்முகம் பஞ்சமுகம் ஷண்முகம் சாதரசமும் இவையெல்லாம்பெரிதல்ல. அற்பமதியுடையவராகிய எங்களுக்கு எப்படி சாத்தியமாகும்? நாங்கள் தினந்தோறும் இந்தப் பகவானுடைய திவ்யமங்கள விக்கிரஹத்தை சேவித்துக்கொண்டும் ஆராதித்துக்கொண்டு வந்தும் ஏதுபலன்! இது எப்படியென்றால் மகிழ்ச்சியடைந்த சபைதனில் ஓர் ஓலை தந்து அதைவாங்கிக் கையில் வைத்துக்கொண்டு அழுத கழுதைபோல் அருகிலிருந்து நெய்க்கழுகலானோம். ஆனால் இதோ உமக்கு வந்தனம் செய்கின்றோம். எங்களை உன்னிலொருவனாய் அபிமானித்து நாங்களும் உன்னுடன் இந்த பகவானால் சாயுஜ்யமடையும்படிச் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து, இராமதாசரை ஆசாரியராகப் பாவித்து உபதேசமடைந்து, பகவான் மாயையால் துவாரகையடைந்து அங்கு பூர்வீகம்போல் விக்கிரஹத்தைச்செய்து ஆராதித்துக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீ துவாரகாபதி இராமதாசர்மீது வைத்திருந்த அத்தியந்த பட்சத்தை அனுஷ்டித்துக்கொண்டிருந்த திவ்ய லீலாவிநோதத்தை ஆகாயமார்க்கத்தில் பார்த்துக்கொண்டிருந்த தேவாதிதேவர் ஆ! ஆ!! நாம் மானிடராயிருந்தால் இந்த மகானுபாவரை யடைந்து உயர்கதியை அடையலாமே! இப்போது தேவராய் இருந்தபடியால கிட்டவில்லையென்று சொல்லிக்கொண்டு அவரிருப்பிடம் சென்றார்கள். இந்த விந்தையைக் கண்டு எல்லோரும் இராமதாசரை யடைந்து, உபதேசம்பெற்று உஜ்ஜீவித்தார்கள். துவாரகாபதியான பகவான் இராமதாசருடைய பக்தி வைபவத்தைக் கொண்டாடிக் கொண்டிருந்தார். அந்தகிராமத்தில் பகவான் ஸ்திரமானார். இப்படியிருக்க துவாரகை யாத்திரைசெய்யும் சாதுக்கள் அந்தக் கிராமத்திற்குச்சென்று பகவானைச் சேவித்துக் கொண்டாடினார்கள்.

கேட்டீரோ சித்தர்களே! இப்படி அல்லவோ பக்தி வைராக்கியஞ் செய்யவேண்டியது. நாமெல்லாம் செய்வது பக்தியோ என்று சொன்னவுடனே சூரியன் மேற்குத்திசை யடைந்தார்.

அப்போது அச்சபையில் நிறைந்திருந்த சித்தர்களும், மற்றவர்களும், நாபாஜிசித்தரைப் பார்த்து ஒஉத்தமசீலராய் நான்கு வேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும், அறுபத்துநான்கு கலைக்கியானங்களையும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயந்திரிபற உணர்ந்த உண்மைச்சீலரே! தாங்கள் எவ்வண்ணம் சாஸ்திரங்களில் கற்றுணர்ந்தீரோ அவ்வண்ணமே அநுபவத்திலும் ஆராய்ந்து,

"கற்கக் சடறக் கற்றவை கற்றபின்
நிற்க வதற்குத் தக"

என்று முன்னோர்கள் திருவாய் மலர்ந்திருக்கிற வண்ணமாயுள்ள பெரியோர்களாகையால் தங்களுடைய அருளுக்கு யாதொரு இடையூறு வாராமலிருக்க அடியோங்கள் பிரார்த்திக்கின்றோம். எங்களுக்கு இவ்வளவு அன்பர்களுடைய சரித்திரங்களைக் கேட்டிருக்கும் உள்ளமானது எந்த விஷயத்திலும் செல்லாமல் ஒடுங்கவில்லை. ஆகையால் அங்ஙனம் ஒடுங்காமைக்குக் காரணம் எங்களுடைய பூர்வகர்ம வாசனையென்றே அறிகிறோம். ஆயினும் தேவரீருடைய கருணைகடாட்சம் இருந்தால் அடியேங்களுக்கு அக்கர்ம வாசனைகள் வருத்தத்தை உண்டாக்க மாட்டாதென்று பிரார்த்தித்து, அச்சபையிலிருந்த கூட்டமெல்லாம் கலைந்துவிட்டன.

டாகூர் இராமதாசர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநம:

பதினைன்காவது

# கல்யாணதாசர் சரித்திரம்.

ஸ்ரீ கண்ணன் ஸ்தோத்திரம்.

ஆசிரிய விருத்தம்.

ஆதியே ஹரியே ஞான அச்சுத முகுந்த தேவா
சோதியே சுடரே திவ்ய சுடரொளி விளக்கே மோன
நாதனே லக்ஷ்மி லோல நாரணா சதுர்வே தங்கள்
நீதியாய்ப் புகழ்ந்து பாடும் நீலமேகக் கண்ணனே போற்றி.

சுலோகம்.

நமோநம: காரணகாரணாய நிஷ்காரணா யாமிதவிக்ரமாய
ஸ்ரீசாக்ரசக்ராபித தர்தராய நமோஸ்துதஸ்மை புருஷோத்தமாயா:

என்பதை அநுசரித்து நாபாஜிசித்தர் உதயமான பிறகு ஸ்நானம் செய்து நெற்றியில் திருச்சூரணதாரணம் செய்துக்கொண்டு திவ்விய பீதாம்பரம் தரித்து, ஸ்ரீமந் நாராயணன் எதிரில்வந்து நமோ நாராயணா! யான் இதுகாலபரியந்தமும்செய்யும்படியான பாபகிருத்தியங்களை எல்லாம் தீர்த்து, உமது திவ்விய பொற்பாதகமலங்களைத்தந்து, ஆண்டருள்வீர். இதுவல்லாமல் யான் எக்காலத்திலும் உம்மைத் தியானிக்காமல் மௌடிக மதிகொண்டு திரியாதபடிக்கு ஞானமுண்டாகச்செய்து என்னை கடைத்தேற்ற வேண்டுமென்று அநேகவிதமாகத் தியானம் செய்துக்கொண்டிருக்கும்சமயத்தில், அச்சபைக்கு வரும்படியான சித்தரெல்லாம் நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு நாபாஜிசித்தரெதிரில் வந்து அனேக வந்தனம் புரிந்து ஓ குருநாதா! நாங்கள்செய்த பூஜாபலத்தால் நீர் எங்களுக்கு அகப்பட்டீர். வெண்ணெய் அகப்பட்டும் நெய்க்கு அழுத கதைபோல் ஆச்சுது. நீங்கள் எங்களுக்கு அகப்பட்டும் ஞானமென்னும் பெருமையைத் தேடாமல், அஞ்ஞானத்தில் அழுந்தினேம். ஆகையால் தாங்கள் எங்கள்மீது தயைபுரிந்து ஞானமென்னும் பெருமார்க்கத்தைக் காட்டி அப்பாட்டை ஏறும்படியான சூக்ஷமத்தையுங் காட்டித்தரவேண்டுமென்று கோரியவுடனே நாபாஜிசித்தர் கலீலென் றுசிரித்து, ஓ சித்தர்களே! கோடானுகோடிகாலம் தவம் செய்தபோதிலும், தன் சர்மத்தைப் பகவானுக்கு அர்ச்சித்தபோதிலும், ஞானமென்னும் பெருவீடு அதிக சீக்கிரத்தில் லபிப்பது அதிக கஷ்டம். ஒவ்வொரு பக்தரும் பட்ட கஷ்டமெல்லாம் இதுவரைக்கும் சொல்லியும் தெரியவில்லையா? ஆனல் இன்னம் ஒரு சிறிய சரித்திரம் சொல்லுகிறேன் அதையும் கேட்பீர்களாக.

முன் ஒருகாலத்தில் ஸ்ரீ கோபால கிருஷ்ணன் வசிக்கப்பட்ட துவாரகாபுரி என்ற பட்டணத்தில் கலியாணதாசன் என்ற ஒரு விப்பிரவன் நிரந்தர தாரித்திரமடைந்தும் எக்காலமும் பகவத்தியான பரனாய் சம்சாரமென்ற சாகரத்தில் மூழ்கியும், பகவத்பக்தி செய்துக்கொண்டிருந்தான். இப்படியிருக்க இவன் க்ஷேத்திர யாத்திரை செய்வதற்கு அபேக்ஷையடைந்து தன் வீட்டைவிட்டுப் புறப்பட்டு வெளிதாண்டிவரும்சமயத்தில் அம்மார்க்கத்திலிருக்கும் அநேகமாகிய புண்ணிய தீர்த்தங்கள்தோறும் ஸ்நானம்செய்து திவ்விய க்ஷேத்திரங்கள்தோறும் இராநின்ற பரத்ரூபத்தைச் சேவித்துக்கொண்டு சேதுவுக்கு வந்துசேர்ந்தான். இதுநிற்க அங்கு ஒரு கௌடபிராமணர் பிரமசாரியாய் வைராக்கியசீலனாய் பகவானுக்கு அதிக அந்தரங்கபத்தனாய் அநேக

மாகிய புண்ணிய க்ஷேத்திர தீர்த்தயாத்திரைகள் செய்து சேதுஸ்நானத்திற்கு வந்திருந்தார். இவர் இப்படிக்கு வந்திருக்க, கல்யாணதாசன் இந்தப் பிரமசாரிக்கு உண்டான ஞானபக்தி வைராக்கியத்தைப் பார்த்து லீலாவிபூதியில் இவ்வளவு அதிகாரமுண்டாயிருப்பது அதிக துர்லபமென்று மெய்ம் மறந்து அவரோடு சேர்ந்து சேதுஸ்நானம்செய்து அவரோடு சிநேகிதமுண்டாகி இருவருங்கூடி பகவந்நாமசங்கீர்த்தனம் செய்துக்கொண்டு இன்னம் அநேக தீர்த்தயாத்திரைகள் செய்துக்கொண்டு பூர்விக வாமநாஸ்வமாய் பிறகு ஸ்ரீசத்துருஞ்யருடைய இராஜதானியாகி பிறகு ஸ்ரீகிருஷ்ண ஜன்மஸ்தலமாய் பரம பாவன க்ஷேத்திரமாயிரானின்ற ஸ்ரீமதுரைக்குச்சென்று அந்த புண்ணியஸ்தலத்தில் சிலகாலம் வாசம் செய்துக்கொண் டிருந்தார்கள். இப்படி யிருக்குஞ்சமயத்தில் அப்பொழுது அந்த கல்யாணதாசருக்குச் சரீரமானது பீடிக்கப்பட்டு ஆறுமாதம் அதிகபாதை யடைந்திருந்தார். அப்படிப்பட்ட சமயத்தில் அந்த பிரமசாரி அதிக பிரியத்துடன் கல்யாணதாசருக்கு உசிதமாகிய உபசாரங்கள் செய்துக்கொண்டிருந்தார். இப்படி உபசாரந்தி செய்துக்கொண்டிருக்கும் சமயத்தில் பகவானுடைய கிருபாகடாக்ஷத்தால் கல்யாணதாசருடைய வியாதியானது சூரியனைக்கண்ட பனி எப்படி ஓடி மறைந்துவிடுமோ அதுபோல் தேகம் ஆரோக்கியமுண்டாயிற்று. அச்சமயத்தில் கல்யாணதாசர் அந்தப் பிரமசாரியைப்பார்த்து, ஐயா! நீர் மகா பரம புருஷன். பூததயையுடையவன். இப்படிப்பட்ட ஆபத்துகாலத்தில் எனக்கு அதிக உபசாரம் செய்தீரே. இதற்குச் சமமாக உனக்கு யான் என்ன பிரதி உபகாரம் செய்யப்போகின்றேன்? யான் எத்தனை ஜன்மம் எடுத்தபோதிலும் இந்த ருணத்தைத் தீர்க்கமாட்டேன். சாக்ஷாத் பகவான் இந்த ரூபமாய்வந்து என்னை ஆதரித்தாரென்று யான் நிச்சயிக்கின்றேன். இதற்குச் சந்தேகமென்ன? சர்வபூத இருதயம புனர்வர்ததராய் சர்வசாக்ஷியாய் எல்லோருக்கும் கர்மபலன் பிரதானங்கள் செய்பவன் அவனே யல்லவா? அது எப்படியென்றால்,

சுலோகம்.

பித்ருமாத்ருசுதப்ராத்ரு தாரமித்ருதயோபிவா
யேகைகபலலாபாய சர்வலாபாயகேசவஃ

என்னும் மொழிபோல் நிஜமாகவே யான் தனியாகவே தீர்த்தயாத்திரை செய்யவந்த இடத்தில் எனக்கு இப்படிப்பட்ட அவஸ்தையுண்டாகிய இம்சைபடும்காலத்தில் சர்வஞ்ஞனை சர்வ ஆத்ம ஈஸ்வரனை என் ஜீவிதேவஸ்ரனாகிய இலக்குமிநாதன் உனது ரூபமாய்வந்து எனக்குச் சகாயம்செய்தார். சாக்ஷாத் பகவான் சொரூபமான உனக்கு என் புதல்வியைக் கொடுத்து விவாகஞ்செய்யவேண்டும் என்று என் மனோ இச்சையிருப்பதால் இதற்கு நீ சம்மதமடையவேண்டும். இதுவுமல்லாமல் எனது புதல்விக்கு நீயே புருடனாக நிற்கவேண்டுமென்று என் இச்சையிருப்பதை கெடுக்கலாகாது. என்று சொன்னவுடனே அம்மொழியைக் கேட்டு பிரமசாரி ஓ மகாநுபாவா! யான் பிரமசரியம் அநுஷ்டித்து உத்தமகதியை அடையவேண்டுமென்று என் மனதில் எண்ணியிருக்கும் காலத்தில் ஏன் என்னைப் பாதைசெய்து சமுசார சாகரத்தில் தள்ளுவதற்கு எண்ணமிடுகின்றீர். இந்தச் சமுசாரம் அநேகமாகிய கஷ்டானுசாரங்களை அடைவிக்கும். இந்தச் சித்தத்தைப் பகவான்மீது சேரவொட்டாதபடி செய்யும். இதுவுமல்லாமல் சமுசாரமென்னும் மோகக்கடல் பெண் என்னும் அலைகளோடும், புத்திரரென்னும் சுழிகளோடும், சோதரமென்னும் முதலைகளோடும் சேர்ந்து நீந்துவதற்குக் கூடாத அதிக கஷ்டத்தைத்தரும். இப்படிப்பட்ட கோரமாகியசம்சாரசாகரத்தில் வீழாதபடிக்குத் தப்பித்துக்கொண்டு இராநின்ற என்னை நீர் ஏன் அபிமானித்து அந்தச் சமுத்திரத்தில் தள்ளப் பார்க்கின்றீர். யான் உனக்கு என்ன அபகாரம் செய்தேன்? என்று அதிக பயமடைந்து இம்மொழிகளைச்சொல்ல, அதைக் கல்யாணதாசர் கேட்டு சொல்லத்தொடங்கினர். ஐயா பாலகா! நீ ஏன் சோகமடைகின்றாய்? ஒருவன் பெண்டாட்டி பிள்ளைகளோடுசேர்ந்து வீட்டில் வாசம்செய்துக்கொண் டிருந்தால் அவன் சமுசாரியாகுவான். அப்படியில்லாமற்போனால் அவன் விரக்தி அடைந்தவனென்று ஒருகாலமும் எண்ணத்தகாது. வெறுத்தவர் சமுசாரத்தை வெறுத்து பழுத்த இலையையும் பனிநீரையும் புசித்துக் காலம்கழிப்பர். சௌபரிகண்டு பரதாதிகள் இவர்கள்பட்டபாட்டை நீயறியாயோ? சமுசாரத்தி லிருந்து சாதித்து வைராக்கியம் கொண்டு சற்குண சம்பத்தையடைந்தவர் ஸ்ரீஜனக விதுராதிகளுடைய சரித்திரங்களைப் புராணங்களில் பிரகிருதியாய் நீ கேட்டதில்லையா? ஆனால் எனக்குத் தெரிந்தமாத்திரம் இதோபதேசம் செய்கின்றேன். அதைக் கேட்டீரா? என்று சொல்லத் தொடங்கினர்.

இந்த ஜகமானது தத்வத்திரயாத்மகமாயிருக்கும். இதில் சிதசித்து ஈஸ்வரனுக்குச் சேஷமாய் பரமேந்திரமாய் அதிஷ்ட விநோகார்யமாய் இருக்கும். இதில் சித்து என்பது ஆத்மபரமசித்தான பரமாத்மாவுக்கு ஸ்ரீ கௌஸ்துப ஸ்தானமாயிருக்கும். பரமசண்டாளருமான பிராமணருக்குப் பிரவேசயோகம் ஆகாதபடியால், அகங்காரம் மமகாரம் என்னும் சண்டாளர் வசிப்பதால் மனிதருடைய இருதயம் பகவானுக்கு வாசயோக்யம் ஆகாதிருக்கின்றது. ஆகையால் புத்திவான் இந்தச் சண்டாளர் இருவரைத் தூரமாகவோட்டி மனதை பகவானுக்கு ஆலயமாய்ச்செய்து சமதமமென்னும் ஜலத்தால் ஸ்தலத்தைச் சுத்திசெய்து அதில் பகவானைநிறுத்தி

சுலோகம்.

அஹிம்சா பிரதமம் புஷ்பம்
புஷ்பமிந்திய நிக்கிரஹ ஸர்வபூததயா
புஷ்பம் க்ஷமாபுஷ்பம் விசேஷதஃ
சாந்தி புஷ்பம்தபஃ புஷ்பமத்யான
புஷ்பம் தத்தைவச சத்தியமஷ்டவிதம்
புஷ்பம்விஷ்ணோஃ பிரிதிகரம்பவேத்.

என்னும் வாக்கியம்போல் பகவானுக்கு அதிக பிரீதியாயிருக்கும் நஹிம்காச முதலான புஷ்பத்தால் அனவரதம் பகவானை அர்ச்சித்துக்கொண்டு இருக்கவேண்டும். ஆகையால் இப்படி செய்துக்கொண்டுவந்தால் நமக்கு பகவான் அமூல்யமான இந்த மானிடஜன்மம் கொடுத்ததில் பிரயோஜனமிது. இதற்குத் திருஷ்டாந்தரம்: இந்திரிய நிக்ரஸ்ப விர்த்தமாக காலத்தைக் கழிப்பவர்மீது எமபாசம் ஒருக்காலும் நில்லாது. இந்தநிஷ்டை இருப்பவன் எப்படி விரக்திகரமாவானென்றுல் பரிசுத்தனுய் இருப்பான். புத்திரதாரகிரஹ க்ஷேத்திராதிகள் மமகார விர்த்தமென்று யெண்ணுதே. ஆனல் இந்த மமகாரமென்னும் குணநிசயத்தை நிவர்த்திப்பவர்க்கு எப்படி காஷாயவஸ்திர கமண்டலம் ஆசனுதிகள் மமகார யோக்கிய நிவர்த்தியை உண்டாக்கும். இதையநுசரித்தவருக்குச் சரீரப் மமகார ஹேதுவல்லவா? விஷயாதிகள் கொஞ்சமானுலும் அதிகமானுலும் பிராணத்தை போக்கடிக்க சமர்த்தமாகும். அப்படி மமகாரயோக்கியமான பதார்த்தங்கள் ஒன்றுகிலும் அனேகமாகிலும் மனிதனுக்கு பரதிவ்யத்யம் கொடுத்துப் பகவானை நிக்கிரகிக்கும் பவரோகவர்த்தமாயிருக்கும். ஆசையால் காட்டில் வசித்து மனோனிக்கிரகிக்கும். சாமர்த்தியமில்லாமல் சரீரத்திலும் இதரமான பதார்த்த மமகாரம்செய்வதில் கிரஹத்தில் வசித்துக்கொண்டு புத்திரதாரகிரஹக்ஷேத்திராதி ஸர்வம் ஈஸ்வரவிபூதியென்றும் தனக்கு எதன்பேரிலும் சம்பந்தமில்லை யென்றும் இப்படி வசித்து மமகாரவஜிதனுய் இருப்பவருக்கு நேததேஹாவஸ்தான புனராவர்த்திரஹிதமோக்ஷம் சித்திக்கும் என்பதற்குச் சந்தேகமில்லை. எப்படியென்றுல்,

சுலோகம்.

பிரஹமண்யா தாயகர்மாணி
சங்கத்தியக் த்வாகரோதிய
லிப்யதே நசபாபேன
பத்தமபத்திர மிவாம்பசா.

எப்படியென்றுல், புருஷன் தான் செய்யும் கர்மத்தைப் பிராமணர்ப்பணம் செய்து சங்கவர்ஜிதனுய் அனுஷ்டித்துக் கொண்டிருக்கின்றுனே அந்தப்புருஷன் தாமரையிலையில் நீர் எப்படி திண்டாடியிருக்கின்றதோ அதுபோல் பாவங்கள் அனுசரிக்காதென்று பகவத்கீதைதனில் பகவான் சொல்லியிருக்கின்றுர். ஆகையால் நீர் எனது இதோபதேசத்தை அங்கீகரித்து எனது குமரியை விவாகஞ்செய்துக்கொண்டு பகவன் யஸ்யபரனுய் அகங்கார மமகாரங்களுக்கு உட்படாமல் (நிவ்ருத்தராகஸ்ய கிருஹம்தபோவனம்) என்னும் மொழிபோல் கிரஹமென்னும் தபோவனத்தில் வைராக்கியசாலியாய் எக்காலமும் பகவத்தியாபரனுய் இருந்துக்கொண்டிருப்பாய். உனது ஆத்மபாரத்தைப்பகவான்வஹித்து உனது யோகக்ஷேமங்களுக்குத் தானே கர்த்தாவாகியிருப்பார். உனக்கு அந்தர்யாமியாகியும் உனது ரூபத்தால் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீமந்நாராயணருக்கு எனதுகுமாரத்தியை வருணியாய் வகித்தேன். ஆகையால் ஸ்ரீவாசுதேவன்சாக்ஷியாக எனது குமாரத்தி உனக்கே நாயகியாகி இருப்பாள். இது இப்படியிருக்க கிருஹஸ்தார்த்தங்கள் எமனென்று சொன்னுய். கிருஹஸ்த தர்மத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

அது எப்படியென்றுல் புத்திவான் பிரமசர்யத்தை அனுசரித்தபிறகு விதிப்பிரகாரம் ஒரு பெண்பாவையை விவாகம் செய்துக்கொண்டு தனக்குத் தகுந்தகாரியத்தில் திரவியத்தைச் சம்பாதித்து கிரஹஸ்த தர்மத்தை யதாப்பிரகாரம் நட

த்தவேண்டும் எவ்வனகாலத்தில் பிண்டப்பிரசாதத்தாலும் திலசகிதமான ஜலத்தாலும் பித்தலென்னும் பாசத்தாலும், பிதுர்க்களையும் அன்னத்தால் அதிதிகளையும், வேதத்தியானத்தால் ரிஷிகளையும், சந்தத்தால் பிரமத்தையும், பூதிபலிகர்மத்தால் சகல பூதத்தையும், வாத்ஸல்யத்தால் சகல லோகத்தையும், திருப்திகர்மடைவிக்கவேண்டும். இப்படிச் செய்யும் கிருஹஸ்தன் தனக்குச் சுகர்மத்தால் சம்மதிக்கப்பட்ட அனேக புண்ணிய லோகங்களை அடைவான். சன்யாசிகளும் பிரமசாரிகளும் கிருஹஸ்தரை அனுசரித்து ஜீவிக்கின்றார்கள். ஆகையால் கிருஹஸ்ததர்மம் அதிக பெரிதாயிருக்கின்றது. இதுவுமல்லாமல் வேதங்களை அனுசரிப்பதற்கும் தீர்த்தயாத்திரை செய்வதற்கும் புண்யபூமியைச் சேவிப்பத்ற்கும் பிராமணர் தனது சொந்த தேசத்தைவிட்டு திரிந்து வருகிறார்கள். மேலும் சிலர் ஒரிடத்தில் வசிக்காமல் சூரியன் அஸ்தமிக்குமிடத்தையே இடமாய் நினைத்து வசிப்பார்கள். இப்படிப்பட்டவருக்கெல்லாம் கிருஹஸ்தன் போஷகனுயிருப்பான்.

அப்படிப்பட்ட தேசாந்தரவாசிகள் வரும் சமயத்தில் சந்தோஷப்படுத்தி மெதுவான மொழிகளாடி ஆசன போஜன சயனங்கள் கொடுத்து சந்தோஷிக்கச் செய்யவேண்டும். அதிதியென்பவனே கிருஹஸ்தன். இடர்தீர்த்து வந்து தன் மனோரதத்தை வஹித்து திரும்பிப்போகின்றான். அந்த அதிதி அந்த கிருஹஸ்தனுக்குத் தன் பாவத்தைக்கொடுத்து அவன் புண்யத்தைக் கொண்டு போகின்றான். கிருஹஸ்த தர்மத்தில் இருப்பவனுக்கு பிறர் மானம் அகங்காரம், டம்பம் ஒருவனுக்கு ஒரு வஸ்துகொடுத்து பிறகு துக்கித்து அடித்துத் திட்டுகிறது, இவையெல்லாம் சுகமல்ல. இப்படிப்பட்ட துர்க்குணங்களில்லாமல் சற்குணனாய் எந்த கிருஹஸ்தன் சகல தர்மத்தைச்செவ்வையாய் அனுஷ்டிக்கின்றானோ, அவன் சாவநார்த்தங்களுக்குத் தப்பித்துக்கொண்டு உத்தமலோகமடைவான். இப்படி கிருஹஸ்தாஸ்ரமத்திலிருந்து கிருத்தியங்களை அனுஷ்டித்து வார்த்திகத்தில் மனைவியைக் குமாரர்களுக்கு ஒப்புவித்தாகிலும், அல்லது மனைவியோடாகிலும் சேர்ந்து வனத்திற்குச் செல்லலாம். ஒ பிரமசாரி! என் குமரியை மாலையிட்டுச் சுகமடைவாய். கிருஹஸ்தாச்சிரமத்திலிருந்து அகங்காரம் மமகாரவர்ஜிதனய் சர்வ பதார்த்தங்களை பகவான் ஒருவனே செய்பவன். ஜெயிக்கத்தக்கவன் அந்த ஜெகதீசனே என்றும், விபர்த்தமான சர்வபதார்த்தம் அவர் ரூபமென்று இதர மனிதருக்கு நாம் செய்யும்படியான உபகார அபகாரங்கள் சரீரியான பகவானையே அடையுமென்று திடமாய் அறிவாய். மூந்தி என்றல் சொல்லப்பட்ட நீதியாய் அனவரதமான சிரபக வத்தாராதிகசீலனய் வாசம்செய்வாய். பகவான் எக்காலமும் உன்னைப் பிரியாமல் உன்னருகில் வசிப்பான். என்று இப்படியெல்லாம் சொல்லியபிறகு, இம்மொழிகளைக்கேட்ட அந்த பிரமசாரி கல்யாணதாசரைப் பார்த்து ஒ மகானுபாவா! சாக்ஷாத் பகவான் உனது ரூபத்தைப் பரிக்கிரஹித்து எனக்கு ஞானதீபம் உண்டாக்கினர். (அத்ய மேசபலம் ஜன்ம சுப்ரபாதாசமேநிச) என்பது போல் என் ஜன்மமானது இன்றையதினம் சாபல்யமாச்சுது. உனது உபதேசமானது சூரியோதயம்போல் என்னுடைய அஞ்ஞானமான கொடிய யிருட்டை நீக்கியது.

சுலோகம்.

நஷ்டோமோஹ ஸ்ம்ருதிர்வத்தா
த்வத்ப்ரசாதான் மயாச்யுத
ஸ்திதோஸ்மி கதஸம்தேஹ
கரிஷ்யேவச னம்மதவ.

என்பதுபோல் என்னைத் தாங்கள் அஞ்ஞான கூபத்தில் விழாதபடிக்கு ஆதரித்த மகானுபாவா! உனது அனுக்கிரஹத்தால் என் அவிவேகம் ஒழிந்தது. ஞானம் சம்பூர்த்தியாகிவிட்டது. இதுவல்லாமல் சந்தேகங்கள் நிக்கிரகித்து ஸ்திரீபுருடனானேன். இனி உனது அபிப்பிராயம்போல் நடக்கக் காத்துக்கொண்டிருக்கின்றேன், என்று சொல்ல இம்மொழியைக்கேட்டு சந்தோஷமடைந்து கல்யாணதாசர் அந்த பிரமசாரியைக் கையில் பிடித்துக்கொண்டு, அந்த மதுரைநகரத்திலிருக்கும் பகவான் சன்னதிக்கு அழைத்துக்கொண்டு போய் ஸ்ரீமாதவனுடைய அக்கிரபாகத்தில் நின்று சாக்ஷாத் பகவான் சொரூபமான உன்னை மருகனகப் பாவித்து என் குமரியை உனக்கே தருகின்றேன் என்று ஜலத்தை அள்ளி பிரமசாரி கையில்விட்டு தத்தம்செய்தார்.

இப்படியிருக்க அதன்பிறகு கல்யாணதாசர் அந்த பிரமசாரியை அழைத்துக்கொண்டு ஹரித்வா

ரம் சேர்ந்து, அன்று இராக்காலம் கழித்து மறு நாள் உதயமானவுடன் தன்னுடைய பந்துஜனங்களை அழைத்து பெருத்த கூட்டமாய்க்கூட்டி இந்தப் பிரமசாரிக்குத் தான் செய்த வாக்குத்தத்தத்தை எல்லாருக்கும் விசிதமாகத் தெரியச் சொன்னார். இம்மொழிகேட்ட எல்லோரும் கும்பலாய்க் கூடி ஒரே தொனியாக கல்யாணதாசரைப் பார்த்து ஐயோ! உனக்கு ஏன் இப்படிப்பட்ட புத்தி உண்டாச்சுது? பஞ்சதிராவிடருக்கும் பஞ்சகௌடருக்கும் இதுவரைக்கும் எங்கேயாகிலும் பரஸ்பர சம்பந்தம் உண்டானதுண்டா? இப்படி யிருக்க நமது குமரியை இந்தக் கௌடபிராமண பிரமசாரிக்குக் கொடுப்பது நியாயமல்ல. என எல்லோரும் ஆக்ஷேபித்தார்கள். இம்மொழியெல்லாம் கேட்ட கல்யாணதாசர் யோசித்து ஒ! எனது நியாயகுலாந்த கருணையுடைய பந்துஜனங்களே? இந்தப் பிரமசாரி சுகுண சம்பத்தியைக்கண்டு என்மதுராபதியான ஸ்ரீமாதவனுடைய சன்னதியில் இவருக்குப் புத்திரியைக் கொடுக்கின்றேன் என்று வாக்குத்தத்தம் செய்துக்கொடுத்தேன். தன்னுடைய குமரியை ஒருவருக்குக் கொடுக்கின்றேன் என வாக்குத்தத்தம் செய்து அதுபோல் முடிக்காத ஒருவன் பரமசண்டாளனாகி நரகமடைவான் என்று ஸ்ருதிகள் தூஷித்துக் கொண்டிருக்கின்றனவல்லவா? இவர் பிராமணனே யல்லாமல், இதரஜாதியரல்லவே. கௌடனானபடியால் இவருக்கு பிராமணத்துவம் இல்லாமல் போச்சுதா? இதுவல்லாமல் குணவானே உத்தமன். அதுபோல் சிஷ்டையடைந்திருந்தால் நாம் என்னசெய்யலாம்? ஆகையால் பந்துக்கள் நீங்கள் எல்லோரும் என்மீது கருணைகூர்ந்து என் வாக்குத்தத்தத்தைப் பூர்த்தி செய்து எனக்கு நரகம் சம்பவிக்காதபடிக்கு இரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். இப்படியாக இந்தக் கல்யாணதாசர் எவ்வளவோ வருந்திக் கேட்டும் பந்துஜனங்கள் இது நூதனசம்பந்தமென்று சம்மதமடையவில்லை. அப்பொழுது கல்யாணதாசன் அதிவேகமாய் அந்தத் தேசாதிபதி இடத்திற்குச்சென்று நடந்த சங்கதி யாவற்றையும் அந்த அரசனுக்குத் தெரியச்சொல்லி ஐயா! எனக்கு நியாயம் உண்டாகும்படி அபிமானிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்பொழுது அம்மொழியைக்கேட்ட அரசன் இந்த இருவருடைய அபிப்பிராயத்தை அறிந்துக்கொண்டு கல்யாணதாசரைப் பார்த்து உன்னுடைய பந்துஜனங்கள் சொல்லப்பட்டது நியாயமாயிருக்கின்றது. இதுவுமல்லாமல் இந்தத்தேசத்தில் அனேகர் உனக்கு பந்து ஜனங்களா யிருக்கின்றார்கள். இப்படியிருக்க இவர்கள் எல்லோரையும் விரோதித்துக்கொண்டு நீ ஒருவன் மாத்திரம் பிரத்யேகமாயிருக்க எண்ணுவது நியாயமல்ல. இனி உன்பக்ஷத்தில் யோசிப்பதால் குமரியல்லவோ கொடுமையை யடைவான். வாக்குத்தத்தம் பிசகி நடந்தால் நரகம் லபிப்பது சந்தேகமில்லை. ஆனால் நீ இந்த பிரமசாரிக்கு வாக்குத்தத்தம் செய்தது நிச்சயமென்று சொல்லுவதற்கு யாராகிலும் சாக்ஷிகள் இருக்கின்றார்களா? ஸ்ரீமாதவருடைய சன்னதியில் வாக்குத்தத்தம் செய்தேனென்று சொல்லுகின்றாய். ஆகையால் நீ வைராக்கிய சற்குணன். நீ ஒருக்காலும் பொய்ப்பேசாயென்று எனக்குச் செவ்வையாய்த் தெரிகின்றது. ஆனால் உலகத்தார் சம்மதமடையார். நீ அந்த மதுரைவாசியான ஸ்ரீமாதவரை இங்கு அழைத்துக் கொண்டுவந்து சாக்ஷி சொல்லிவைத்தால் இவர்கள் எல்லோரும் உனது இஷ்டப்படி வருவார். அப்படிச் செய்யாவிட்டால் இந்தக் காரியத்தை நடத்துவது அதிக கஷ்டமாகும் என்று சொல்ல, இம்மொழிகளைக்கேட்ட கல்யாணதாசர் அவர்களைப் பார்த்து யான் தர்ம பாசபந்தமானவர் (தர்மஸ்ய ப்ரபுரஸ்யதஃ) என்னும் மொழிபோல் தர்மத்திற்குப் பிரபுவானவர் பகவானல்லவா? யான் பகவான் விஷயத்தில் பாத்திரவானாய் இருப்பதால், அந்த ஜெகந்நாதன் என்னுடைய யோகக்ஷேமத்தைத் தானேவகித்து இருப்பது நிஜமானால் எனது பிரார்த்தனையைக் கேட்டமாத்திரத்தில் அந்தப் பக்தவச்சலன் இவ்விடத்திற்கு வந்து சாக்ஷிசொல்லுவார். என்பதற்கு ஏதும் சந்தேகமில்லை. துருவன் பக்திக்கு மெச்சியல்லவா அவருக்குச் சர்வோத்தம பதவி யனுக்கிரகித்தார். இதுவல்லாமல் ஜகத்தையும் ரக்ஷித்தார். பிரகலாதருக்காக சபை ஸ்தம்பத்தில் அவதரித்தார். சரணாகதியடைந்த திரௌபதிக்கு ஆபத்துக்காலத்தில் வஸ்திரபிரதாயம் அடையச்செய்தார். இதுவுமல்லாமல் அநேக பாகவதருடைய ஆபத்துகளைத்தீர்த்து சொந்த காரியமாக அவர்களை இரக்ஷித்தார். இவைகளெல்லாம் நிஜமானால் இப்படிப்பட்ட ஆபத்துக்காலத்தில் அந்த ஆபத்பாந்தவன் எனக்காக இங்குவந்து சாக்ஷிசொல்லாமல் போவாரா? ஒ இராஜேந்திரா! ஒ பந்துஜனங்களா! கொஞ்சநேரம் பொறுத்துக் சொண்டிருங்கள். யான் இப்போதே சென்று அந்தத் தீனபந்துவை இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டு வருகின்

றேன் என்று சொல்லி அக்கணமே புறப்பட்டு ஸ்ரீ மதுராபுரியடைந்து தேவாலயத்தில் பிரவேசித்து பகவானைக்கோரி அனேக வந்தனம்புரிந்து மஸ்தக யஸ்தாஞ்ஜலியாய் ஒ தேவாதிதேவா! யான் உன் சன்னதியில் கௌடபிராமண பிரமசாரிக்குச்செய்த கன்னிவிஷயத்தில் வாக்குத்தத்தம் செய்தேனே? அதை எனது பந்துஜனங்களும் தேசாதிபதியும் நம்பாமல் உன்னுடைய சாக்ஷியைக் கோரிக் கொண்டிருக்கின்றார்கள். உன்னுடைய ஆஸ்ர தவாத்சல்யத்தையும் ஜகத்விந்தையும் செய்வதற்கு நல்லசமயம் அகப்பட்டது. துருவ கஜேந்திர பிரகலாதர் இருந்த இடத்திற்குச்சென்று இரக்ஷித்ததுபோல் நீ தர்ம மனம்வகித்து என் பின்பற்றி அரிதுவாரத்திற்கு வந்து சாக்ஷிசொல்லுவீர்.

சுலோகம்.

யதாயதா ஹிதர்மஸ்ய
கிலாநிர்பவதி பாரத
அப்யுத்தான மதர்மஸ்ய
ததாம்மாநமஸ்ருஜாம் யாயஹம்.

அதுபோல் எப்போதப்போது தர்மத்திற்கு ஹானிசம்பவிக்குமோ அந்தத் தர்மத்திற்கு அபிவிர்த்தி உண்டாக்க அப்போதப்போது யான் அவதரிக்கின்றேன் என்று பகவத்கீதையில் சொல்லி யிருக்கின்றாயல்லவா? கீதையில் சொன்னது நிச்சயமானால் நீ என் பின்பற்றி வந்து தர்மரக்ஷணை செய்வீரென வந்தனம்செய்தார். இம்மொழிகேட்ட பகவான் கல்யாணதாசரைப் பார்த்து ஒ வத்ஸா! உன்மொழியானது உசிதமாயிருக்கின்றது. யான் சிலாரூபமாய் பரிக்கிரகித்து இருக்க, யான் கடந்து வருவதற்கு சாத்தியப்படமாட்டாது. ஆனாலும் நீ வரும்படி ஆஸ்ரயிப்பதாலும் நீயோ அந்தரங்கபக்தனாயிருப்பதாலும் உனக்காக நான் நடந்துவந்து எனது ஆச்சிரதாஸல்யத்தை எல்லோருக்கும் வெளிப்படுத்துகிறேன். ஆனால் நீதிரும்பிப்பார்க்காமல் முன்னதாய் நடந்து போவாய். யான் உன்னைப் பின்பற்றி வருகிறேன் என்று சொல்லிய மொழியைக் கல்யாணதாசர் கேட்டு, ஆனந்தமடைந்து முன்னதாய் நடந்து போய்க்கொண்டிருக்க, பகவான் சர்வாபரணபூஷிதராய் வாயுரசமடைந்து தன்னுடைய திவ்விய மங்கள விக்கிரகமாகிய சம்பந்தத்தை திவ்விய சந்தனதியால் பூசியிருக்க, காலில் கெஜ்ஜைகள் சப்திக்க கல்யாணதாசரைப் பின்பற்றி நடந்துக்கொண்டிருந்தார். இப்படியாக இவரிருவரும் இரண்டு இராத்திரி நித்திரை யில்லாமல் நடந்து அரிதுவாரத்திற்கு அரைவினாடி தூரத்தில் வரும்சமயத்தில், வீரச்சதங்கைகளுடைய சப்தம் கேட்காதபடியால் கல்யாணதாசர் திரும்பிப் பார்த்தார். இப்படித் திரும்பிப் பார்க்கையில் பகவான் அங்குதானே நின்று கல்யாணதாசரைப் பார்த்து ஒ அன்பனே! நீர் என்னைத் திரும்பிப்பார்க்கலாகாதென்று சொல்லியிருந்தேனல்லவா? நீர் இப்போது என்னுக்ளைக்கு உடன்பட்டவரைக்கும் யான் வந்தேன். இனிமேல் இந்த விடம்விட்டு அப்புறம் நடக்கமாட்டேன். ஆகையால், யான் இங்குதானே யிருக்கின்றேன். நீ ஓடி அந்த அரசனையும் உன் பந்துக்களுக்கும் அறிவித்து எல்லோரையும் இங்கு அழைத்துவருவாயென்று திட்டம்செய்ய, இம்மொழிகேட்ட கல்யாணதாசன் அதிவேகமாய் அரிதுவாரத்துக்கு சென்று அரசனுக்கும் பந்து ஜனங்களுக்கும் மற்றுமுள்ள எல்லோருக்கும் பகவான் வந்திருப்பதைச் சொல்லவே எல்லோரும் ஆச்சரியமடைந்து, கல்யாணதாசன் பின்பற்றி வந்தார்கள். இவர்கள் எல்லோரும் ஸ்ரீருக்குமணிகாந்தனுடைய சேவையடைந்து பிரதக்ஷணநமஸ்காரம்செய்து அவ்வேந்தன் தியானிக்கத் தொடங்கினர்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

எத்தனை விதங்கள்தோறும் கற்கினுங் கேட்கினும்
எனதுமனங் கரையவில்லையே
ஏதென்று சொல்லுவேன் வேதனைகள் படுவதும்
இயல்புடனே வந்துதீராய்
சித்தமதில் உன்பாதம் நித்தமும் வைத்துயான்
சேவையது செய்துமறியேன்
சீலமொடு உன்கருணை கனவிலும் யானுமே
தரிசனங் கண்டுமறியேன்
பெற்றதாய் தந்தைநீ யெத்தனை குற்றங்கள்
புவிதனில் செய்தபோதும்
பூரண நிரானந்த நிரஞ்சன நிர்மையா
பொறுத்தாள வேண்டுமையா
உத்தம குணத்தனே பரிசுத்த பத்தனே
ஒங்குபீதாம் பரநேசனே
ஒளியான ருக்குமணி அருள்பாசம் கொண்டிட்ட
ஒங்கார ஸ்ரீகண்ணனே.

இப்படியாகத் தியானித்து அவ்வேந்தன் நிற்கையில் இதற்குள்ளாகப் பகவான் அவ்வேந்தனைப் பார்த்து ஓ இராஜோத்தமா! இந்தக் கல்யாணதாசன் எனக்கு மிகுந்த அந்தரங்கபக்தன். வைராக்கிய முதலான ஆனந்தார்யவேஷத்தால் பரிபூரணமானவர்க்கு யான் அதிக பிரியமாயிருப்பேன். அன்றியும் அவர்கட்கு ஆதீனமாயிருப்பேன். அவருடைய சித்தவிர்த்தியறிந்து நடப்பேன். அப்படிப்பட்டவர்க்கு யான் அநேகவிசை ஜென்மம் எடுப்பேன். எனது அந்தரங்க பக்திவான்களுக்காக அனேக அவதாரமெடுத்தும் இருக்கின்றேன். என் மனதிடம் சாதுக்களறிந்திடுவார். அவர் மனதிடம் யானறிந்திருக்கின்றேன். எங்களுடைய இருவர் மனக்கவலை இந்த வுலகத்தில் யாரும் அறிந்திடார். ஆகையால் இந்த கல்யாணதாசன் எனது ஆலயத்திற்கு வந்து தன் குமரியை இந்தப் பிரமசாரிக்குக் கொடுப்பதாய் வாக்குத்தத்தம்செய்திருக்கின்றார். ஆகையால் அப்படிச் செய்வதற்கு எனக்கு அதிக சந்தோஷம். இவர் கௌடவ பிராமணனென்று யோசிக்காமல் இவர் புதல்வியை அந்த பிரமசாரிக்கு அதிகதுரிதமாய்த்தந்து விவாக முடிக்கவேண்டுமென்று சொன்ன மொழியை எல்லோரும்கேட்டு சந்தோஷசமுத்திரத்தில் மூழ்கி, மகா பாக்கியமென்று பகவானுடைய ஆக்கினையைச் சிரசாகவகித்து ஓ பகவானே! அந்தப் பக்தனுடைய காரியத்தைக் கைக்கூட்டி வைக்கவேண்டுமென வணங்கி மொழிகள் கூறினார்கள்.

இப்படியிருக்க பகவானுடைய எண்ணமறிந்து அதிசீக்கிரமாய் விஸ்வகர்மாவை அழைத்து விவாகமண்டபம் அலங்காரம் செய்யும்படி திட்டம் செய்தார்கள். காமதேனு கல்பதரு சானித்யமாய் சமஸ்த பதார்த்தங்கள் அதிகமாய்க் கொடுத்துக்கொண்டிருந்தன. அதன்பிறகு சகல தேவதைகள் வந்து விவாககாரியத்தைப் பூர்த்திசெய்தார்கள். அந்தச்சமயத்தில் ஆகாசமார்க்கத்தில் தேவதுந்துபிகள் சங்கம் தொனித்தார்கள். கேசவன் புஷ்பவருஷம் பொழிந்தார். அதன்பிறகு எல்லோரும் கும்பலாய்க்கூடி இருவரையும் அலங்கரித்து, சாதுவாதத்தோடு விவாகமஹோத்ஸவத்தைப் பூர்த்தி செய்தார்கள். பந்து ஜனங்களும் இதர ஜனங்களும் பூரணமாய் வஸ்திராபரணங்களைப் பெற்றுக்கொண்டு அவரவர் மனைசேர்ந்தார்கள். ஸ்ரீருக்குமணிகாந்தன் தன் ஆஸ்ரிதவாத்ஸல்யத்தைப் பிரகாசித்துக்கொண்டு இப்பொழுதும் அங்குமே சானித்தியம் செய்துகொண்டிருக்கிறார்.

ஆகையால், கேட்டீர்களோ சித்தர்களே! ஸ்ரீமந்நாராயணனுடைய மகிமைப் பிரபாவத்தை நன்றாய்க் கவனித்து அவருடைய உபயபாதங்களையும் நமஸ்கரித்து இனியும் சொல்லப்படும் மகான்களுடைய சரித்திரங்களைக் கேளுங்களென்று சொல்லி நாபாஜிசித்தர் தம் இருப்பிடம் சென்றார்.

கல்யாணதாசர் சரித்திரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணயநம:

பதினைந்தாவது

# சூர்தாசர் சரித்திரம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

திருமாலேயென்றிந்நாமம் சேவித்தேனேநாளும்
கருமமதைப்போக்கி யென்னைக்காத்தருளாய்
உருவாகிஉள்ளமதில் வெளியாகிநின்றதேவா
உயிராகிநிலையாகி உத்தமனுமாகி
பெருவெளியாய்த்தத்வமாகி பேசும்பொருளாகி
பேருமில்லாஉருவமாகி பிரணவஜோதியாகி
பருவமுள்ளஜானகியின் வைபோகம்கொண்ட
பன்னகசயனுவுன்னைப் பணிந்தேனையா.

சுலோகம்.

நாமுர்ஷ்டம்நவநீதமந்திகமணிஸ்தம்பேர்வபிம்போத்பதம்
த்ருஷ்ட்வாமுக்ததயாகுமாரமபரம்ஸம்கிம்த்யதம்கம்கயா
மம்மித்ரம்ஹிபவான்மயாஹிபவதோ பாகஸ்ஸமாகல்ப்யதே
மாமாசோயபெத்யனுவதன் பாலோஹ்ரி:பாதுः

இப்படியாக நாபாஜிசித்தர் பிராதக்காலத்தி லெழுந்து, ஸ்நானம் முதலாகிய ஷட்கர்மங்களை முடித்துக்கொண்டு, ஸ்ரீமந்நாராயணர் எதிரில் நின்று, திவ்ய மங்களாராத்திசெய்யும் சமயத்தில் சிடர்கள் எல்லோரும் கும்பலாய்க்கூடி குருநாதரிடம் சென்று உற்சாகமாகி பக்தருடைய சரித்திரம் கேட்டு நமது ஜென்மத்தைச் சாபல்யம் செய்துக்கொள்ளுவோமென்று எல்லோரும் ஒரேமனதாய் பேசிக்கொண்டு, குருநாதரிடம் வந்து, சாஷ்டாங்கவந்தனம் சமர்ப்பித்து ஒ குருநாதா! தாங்கள் நேற்றையதினம் சொன்ன கதையைக்கேட்க ஆனந்தமடைந்தோம். ஆகையால் தாங்கள் இந்த எளியவர்மீது கிருபைகூர்ந்து நாங்கள் முக்தியடையும்படியான ஞானமூட்டும் திவ்ய சரித்திரங்களைச் சொல்லும் சுவாமியென்று கேட்க இம்மொழிகேட்ட நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து சொல்லத் தொடங்கினர்:

கேட்டீரோ சிடரே! எண்பத்துநான்கு லக்ஷ ஜீவராசிகளில் மேன்மைபொருந்திய இந்த மானிட ஜன்மத்தை நாமடைந்தும், இதில் கூன் குருடு செவிடு குஷ்டமென்னும் இப்படிப்பட்ட துஷ்ட நோய்க்குள் அகப்பட்டு அங்கபங்கமடையாமல் சுகமாய் ஜனித்தும் நாம் காமக்ரோதலோபமதமாச்சரியமென்னும் அஞ்சு பூதத்திலகப்பட்டு அலைந்திருப்பது நலமல்ல. இந்த ஜென்மத்தில் ஸ்ரீமாதவனைக் கோரி ஸ்மரிக்காத ஜன்மம் ஒர் ஜன்மமா? இந்த ஜன்மம் எமனுக்கு விருந்தூட்டாதபடி காப்பாற்றி முக்தியடைவிக்கவேண்டுமென்று சொன்னமாத்திரத்தில் அங்கிருந்த சிடரெல்லாம் ஒரேமனதாய்ச் சுவாமி! தாம் சொன்னதெல்லாம் நிச்சயமே. ஆனல் இந்த ஜன்மம் சாபல்யமாவதற்கு இதுவரைக்கும் சொன்ன கதைகளெல்லாம்நலமே. இனியேதாகிலும் பக்தருடைய கதைசொன்னல் நாங்கள் கேட்டு ஆனந்தக்கடலில் மூழ்கி முக்தியடைவோமென்று சொன்னவுடனே, நாபாஜிசித்தர் இம்மொழிகேட்டு சந்தோஷமடைந்து ஒ அன்பர்களே! உமது சித்தத்தின்படி இதோ கதைசொல்லுகிறேன். அதாவது யாதெனில் இவ்வுலகத்தில் சூர்தாஸனென்னும் பக்தருடைய சரித்திரம் சொல்லுகிறேன். அதை ஆவலுடன் கேட்பீரென்று சொன்ன மாத்திரத்தில் அச்சபையிலிருந்த பக்தர்கள் சந்தோஷமடைந்து கேட்க ஆவலாயிருந்தார். அச்சமயத்தில் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர். அது எப்படியென்றால் ஸ்ரீமதுராபுரி யென்றொரு பட்டண

மூண்டு. அப்பட்டணத்தில் அக்ரூராம்சத்தில் சூர் தாஸ் என்றொரு பாகவதசிகாமணி அவதரித்தார். இப்படி பிறந்தமுதல் சாதன ஞானவைராக்கியத் தால் எக்காலமும் பகவானைச் சேவித்துக்கொண் டும், ஸ்ரீபகவான் நாமசங்கீர்த்தனபரனாய் ஸ்ரீகிரு ஷ்ணபரமாத்மா விஷயத்தில் அநேகவிதமான சாஹி த்தியங்கள் செய்துக்கொண்டு ஞான பக்திவைராக் கிய சம்பன்னராய் புருஷோத்தமா என்னப்பட்ட மொழியே சந்தியாகிஷ்டனாய் தான் செய்யப்பட்ட கீர்த்தனங்களைக் கேட்பவரின் மனதை ஆனந்தக் கடலில் ஆழ்ந்தச்செய்து பக்தியென்னும் வீட்டை ஒளிபோல்தோற்றுவிக்கும். இதுவல்லாமல்இவர் எக் காலமும் காலக்ஷேபம் செய்துக்கொண்டிருப்பார். இப்படியிருக்கும் சமயத்தில் இவர் ஒருநாள் தன்னு டன் ஒருவரை சகாயமாய்ச்செய்துக்கொண்டுஅவரு டன் சேர்ந்து அந்தகிராமத்திலிருந்து பகவத் சன் னதியில் பிரவேசித்து சாஷ்டாங்க வந்தனம் சமர்ப் பித்து அந்தப் பகவானுடைய அக்கிரபாகத்தில் நின்று அந்தப் பகவானைப்பார்த்துத் தியானிக்கத் தொடங்கினர்.

விருத்தம்.

ஆதியேமெய்ஞ்ஞான ஆனந்தமெய்ச்சுடரே
அருமறைப் பொருளுநீயே
நீதியேநிஷ்களமே நிருபமேநிரஞ்சன
நிர்விஷய காருண்யமே
சோதியேயொளியான ஞானமேயெங்குங்கிட்ட
சுயம்பிரகாச நற்சுடரே
ஓதினேன்உன்னமம் உள்ளத்திலெந்நாளும்
ஓடிவந்தெனையாளும் இராமையனே.

எப்படியென்றால், சன்மாத்மரூபமாய் அசிந் திய மஹிமாயுக்தனாய் சர்வவியாபியாய் அனேக ரூபமாய் இருக்கப்பட்ட அந்தப் பரமாத்மாவுக்கு அநேகவிதமாய் வந்தனம் செய்கின்றேன். ஓ அப் பிரமேயா! சகல சொரூபியாய் தேவதாஞ்ஞயத்தில் நிரஞ்சனனாய் நிற்கும் ஓ தேவா! உனக்குவந்தனம் ஓ தீனபந்து! விஞ்ஞானத்திற்கு மெய்ஞ்ஞான பூமி யாயிருக்கும் ஓ மாதவா! உனக்கு வந்தனம் செய் கின்றேன். ஐந்து பூதாத்மராய் ஏகாதசேந்திரிய ஆத்மனாய் பரமாத்மாவாகி இருப்பதால் நீ ஒரு வனே ஐந்துவிதமா யிருக்கின்றாய். சகலமும் சகலத்திற்கும் ஆத்மாவாகி சரத்திற்கும் சர்வ பூதத்திற்கும் அக்ஷரமான ஆத்மாவுக்கும் ரக்ஷகனா ய்ப் பிரம்மா, விஷ்ணு, சிவநாமங்கள் கலந்து சொல் லப்பட்டவனுயிராநின்ற ஓ பகவானே! நீ எனக்கு பிரசன்ன மாகவேண்டும்? அநேக குணங்களால் சேர்ந்த ஆத்மாவாகி ஆனந்தயுக்தமடைந்த பரமே ஸ்வரா! அனந்த நாமங்களால் சேர்ந்திராநின்ற ஓ தேவா! உனக்கு வந்தனம் செய்கின்றேன். ஜீவாத் மாக்கள்போல் கர்மாதிகமான தேவமானுஷ்யாதி நாமரூப கல்பனாதிகளில்லாமல் நித்தியமாய் யுக்த மாய் விகாரஹீதமான பரப்பிரமம் நீயே. நாமரூப கல்பனைகளில்லாமல் ஒருபதார்த்தம் அறிவதற்கு அசாத்தியமானவன் நீயே! கிருஷ்ணாச்சுதானந்த விஷ்ணுவாதி நாமத்தால் ஸ்தோத்திர கரணதானனா யிருக்கின்றாய். அஜனாய் அனந்தனாய் ஓ தேவா! இந்த தேவாதி கல்பனாதிகளால் சேர்ந்த சமஸ்த பிரபஞ்சம் நீயே. விகாரரஹிதமான ஆத்மா நீயே. இப்படிச் சர்வம் உனது விபூதியாயிருப்பதால் உன க்காகிலும் ஏதும் கிடையாது. இதில்லாமல் நீயே பிரம்மனாய் சிவமாய் சூர்யனாய் விதானனாய் தாத னாய் இந்திரனாய் வாயுவாய் அக்கினியாய் வருண னாய் குபேரனாய் இயமனாய் அநேகவிதமான காரிய த்தால் சேர்ந்த சொரூபத்தால் இந்த லோகத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கின்றாய். இதுவல்லாமல் சூர்யகிரணரூபியாய் பிரபஞ்சத்தை சிருஷ்டித்துக் கொண்டிருக்கின்றாய். இதன்றி இந்த உலகமெல் லாம் உனக்கு சேஷபூதமா யிருக்கின்றன. (சத்) என்னும் பதத்தால் சொல்லப்பட்ட விகாரசூன்ய மான பரஸ்வரூபமாய் சுத்தகியான சுயரூபமாய் சராசரத்துக்கு ஆதாரமாயிருக்கின்றஉனக்குஅநேக வந்தனம். பிரணவப் பிரதிப்பியாதியான ஸ்ரீவாசு தேவனுக்கு நமஸ்கரிக்கின்றேன் ஷம்கர்னனுக்கு வந்தனம். ப்ரத்யுமுருக்கு பிரணம்யசரிக்கின்றேன். அனிருத்திரனை சரிவரதம் செய்கின்றேன்.

இப்படிப்பட்ட சதுர்வேதரூபியான உனக்கு நமஸ்கரிக்கின்றேன். அதுபோல் அக்குரூரவனை ஸ்தோத்திரம் செய்து மறுபடியும் மாதவனுக்கு சொன்னதாவது ஓ கேசவா! யான் இந்த ஜன்மத் தில் உன்விஷயத்தில் ஏதும் அபராதம் செய்ததில் லையே. அப்படியிருக்கும் சமயத்தில் யான் பிறந் தது முதல் உனது திவ்யமங்கள விக்கிரஹத்தை தெரிசிப்பதற்கு யோக்கியனாகாமல் இருக்கின்றேன். ஓ ஜெகதீசா! உனது அனுக்கிரஹத்தால் என்சம் ரக்ஷணைக்கு வருகின்றது அது எப்படியென்றால் யான் கம்சனுடைய ஆக்கினையால் கோகுலத்திற்கு வந்து இராமசஹிதனான உன்னை ரதத்தில் எடுத் துக்கொண்டு மதுராநகரத்திற்கு அழைத்துக்கொ ண்டுபோகும் சமயத்தில் கோபிகள் எல்லோரும் கும்பலாகக்கூடி ஒருவர்க்கொருவர் எப்படி சொல் லத்தொடங்கினர். எப்படியென்றால் ஓ சகிமாரே!

இந்தகோவிந்தன் மதுரைக்குச் சென்றபிறகு மறுபடியும் இங்கு எப்படிவருவார்? நகர ஸ்திரீகள் மதுராலயமென்கிற அமுர்தத்தைப் பானம் செய்வார். அல்லது அப்படி நகரஸ்திரீகள் விலாசவாக்கியத்தைக்கேட்டு வஹித்தபிறகு அவர் மனது கோபிகள்மீது லஹிக்காது. இந்த கோகுலத்திற்கு ஓர் சாரவஸ்துவாயிருந்த இந்த கிருஷ்ணனை இங்கிருந்து அழைத்துக்கொண்டுபோகும் குரூரதெய்வம் இந்த கோபிகள் எல்லாம் ஏககாலத்தில் மரணமாகவேண்டுமென்று எண்ணமிடுகின்றோம். அதுபோல் நகரஸ்திரீகள் வாக்கியத்தை பாவகற்பிதமாய் பத்தமாய் இருக்கும் இவர்களுடைய நடவிலாசம் அதிக சுந்தரமாயிருக்கும். அவர்களுடைய வீக்ஷண்யம் அக்கினிஜ்வாலையாயிருக்கும். ஆகையால் இதுவரைக்கும் அப்படிப்பட்டவனை அறியாமல் கோகுலத்தில் வசித்துக்கொண்டிருந்த கிருஷ்ணன் மதுரைக்குப் போனபிறகு அந்த ஸ்திரீகள் விலாசமென்ற பாசத்தால் கட்டுப்படுவாரே, இப்படியிருக்க எப்படிமறுபடியும்கோகுலத்திற்கு வருவானென்று சொல்லலாகும்.இதோபாருங்கள். அக்குரூரநாமமுடையகுரூரனால் என்னமோ வஞ்சனைசெய்து கிருஷ்ணன் ரதமேறி மதுரைக்குப் போகின்றார். தயாசூன்யனுகை இந்த சண்டாளன் நாம் எல்லோரும் கிருஷ்ணமோகத்தால் வருகிறோமென்று அறியமாட்டான். நமதிஷ்டத்தை அவன் அறிந்திருந்தால் நமக்கு நேத்திரானந்த விஷயமான கிருஷ்ணனை இன்னமோரிடத்திற்கேன் எடுத்துக்கொண்டுபோவான்? ஓ சகிகளா! இந்த கிருஷ்ணன் நமது குணுதிசயத்தை அறியாமல் பலராமரோடு ரதமேறிப் போய்க்கொண்டிருக்கின்றார். இவன் அதிக தயாபரசூன்யமாயிருக்கின்றான். இவனைப் போகவொட்டாமல் மடக்குவதற்கு அதிசீக்கிரத்தில் யோசியுங்கள் ஓ சகிகாள்! மாமன் முதலானவர்க்கெதிரில் இந்த விஷயமாய் மொழிகளாடலாகாதென்று சொல்வாராகில் விரஹாக்கினியால் நாம்தடுத்தால் இந்தப் பெரியோர்கள் என்ன செய்யக்கூடும்? நந்தகோபாலன் முதலானவர் தாங்களும் போவதற்கு எத்தனிப்பாரேயல்லாமல் அந்த கோவிந்தனைப் போகவொட்டாமல் மடக்குவதற்கு ஏதும் செய்யமாட்டார்.

ஓ சகிமாரே! மதுரையில் இருக்கப்பட்ட ஸ்திரீகளுக்கு இன்றைபதினம் சந்தோஷகரமாச்சுது. எப்படியென்றால் அவர்களுடைய நேத்திரமானது விழிகள் இன்று நமது கிருஷ்ணன் முகாரவிந்த மகரந்தத்தைப் பானம்செய்யுமல்லவா! இங்கு மடக்காமல் கிருஷ்ணனைப் பின்பற்றிப் போவாருக்கு மகா புண்ணியமல்லவா என்றாள். அப்படி பின்பற்றும் பாக்கியவான்களுக்கு அவருடைய சுந்தர அங்கத்தைச் சேவித்தால் நமதுதேகம் பூரித்து சந்தோஷிப்போமல்லவா? இதுவல்லாமல் இன்று மதுராநகரத்தில் அவர்களுடைய நேத்திரங்கள் இந்த கோபாலசூடாமணியுடைய அவயவ சௌந்திரியத்தைக் கண்டு மஹா சந்தோஷத்தை அநுபவிப்பாரல்லவா? ஆஹா! அவர் மகா பாக்கியசாலிகள். அந்த நகரஸ்திரீகள் எப்படிப்பட்ட நோன்பு நோற்றாரோ, அறியோம். இப்படிச்செய்த நோன்பின் பலத்தால் நமது கிருஷ்ணனைக்கண்டு காந்தியுக்தனுய் ஆனந்தமடைவார். ஆ! ஹா!! தயையில்லாத தெய்வம்! இந்த கோபிகாஜனங்களுக்கு ஒரு மகாநிதியைக்காட்டி உடனே நேத்திரானந்த மடைகின்றது. ஓ மாதர்களே! நீங்களெல்லோரும் பாருங்கள். நம்மீது கிருஷ்ணனுக்கு பிரியம் குறைந்தபடியால் நமது கங்கணம் நழுவுகின்றது. இதுவல்லாமல் இந்த அக்ரூரன் கடினமனமுடையவன். ஆகையால் ரதத்தை அதிவேகமாய் நடத்திக்கொண்டு போகின்றான். ஓ ஹரிநேசரே! இப்படி விசனமடைய நம்மீது யாருக்கும் தயை இல்லாமல் இருக்கின்றது. இதற்கென்ன செய்குவோம். ஓ மாதர்களே! சிலநேரம் நமக்கு கிருஷ்ணன் அகப்பட்டுக்கொண்டிருந்தான். பிறகு அவனுடைய ரதம்மாத்திரம் தோற்றுகின்றது. இப்பொழுதும் அந்த ரதத்தின் சக்கரம் ஓடும் வேகத்தால் உண்டாகும் மண்தூசி மாத்திரம் அகப்படுகின்றது. இன்னும் பார்க்க யாவும் அகப்படாமல் போய்விட்டது. இப்பொழுதோ கிருஷ்ணன் அதிக தூரம் சென்றுவிட்டார். இப்படியாக கோபிகலோபிகள் துக்கித்துக்கொண்டிருக்க யான் மனம் தளராமல் கனிகரமில்லாமல் உன்னை அந்த கோகுல எல்லையைத்தாண்டி எடுத்துக்கொண்டு வந்துவிட்டேன். அன்று செய்த பலிதம் இன்று அநுபவித்துக் கொண்டிருக்கின்றேன். கோபிகா மனோஹரனை உம்மை அந்த கோபிகள் நேத்திரங்களுக்கு அகப்படாமல் செய்தேன். ஆகையால் யான் இந்த ஜன்மத்தில் உமது திவ்வியமங்கள விக்கிரஹத்தைச் சேவிப்பதற்கு சாதனமான நேத்திரமில்லாமல் அந்தகனுய் இருக்கின்றேன், என்று சொல்லி கண்ணீர் தாரை தாரையாய் விட்டு அழுதுக்கொண்டு இருக்கும் சமயத்தில் சூர்தாசன்மீது அதிக பிரியமுடையவனுகிய ஸ்ரீவாசுதேவன் நிஜபக்தியுடைய சூர்தாசனுக்கு நேத்திரமளித்து சதுர்புஜனுகிய நவரத்தின கிரீடமின்ன ரத்தினம்சித சூடாவதம்ச மகரகுண்டல ஆரகேயூர

கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்து பதாபந்தன பீதாம்பர காஞ்சிசுகுண இப்படிக்கொத்த திவ்யபூஷணுதிக ளணிந்து, சங்குசக்கரகதை சார்த்திவ்ய ஆயுதம் தரித்து வைஜயிந்திஎன்னும் வனமாலியைத் தரித்த வராய் ஸ்வயமான முகமுடையவராய் சாக்ஷாத் மன்மத மன்மதனுய் இருக்கப்பட்டவருடைய சே வையறிந்த சூர்தாசன் அனேக தானம் அகப்ப டாத அதிக தரித்திரவான்போல நேத்திரோத்ஸவ மாய் சேவையடைந்து,

சுலோகம்.

த்வமாதிதேவஃ புருஷ புராணணஸ்த்வ
மஸ்யவிஸ்வஸ்ய பரம்நிதானம்.
வேத்தாஸிமேத்யம் சபரம்சதாபத்வ
யாதம்விஸ்வ மனம்தரூப!!
வாயுர்யமோக்கினிர்வ ருணஸ்ஸசாம்தஃ
பிரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹஸ்ச
நமோநமஸ்தே ஸ்துசஹஸ்நக்ருத்வஃ
புனர்ச்சபூயோ பினமோநமஸ்தே!! நமஃ
புரசாஸத்தாத்த ப்ரஷ்டதஸ்தே
நமோஸ்துதே சாவதயேவஸர்வ
அனந்தவீரியா மிதவிக்ரமஸ்த்வம்
சர்வம்சமாப்னோ ஷித்தோஸிஸர்வஃ

ஓ பகவானே! நீயே அதிதேவன். புராண புரு ஷன். சமஸ்த ஜெகத்திற்கும் பரமாதார பூததயை யுடையவன். விஸ்வரூபமுடையவன். நீயே முக்தாத் மாக்கள் அடையும் மோக்ஷவீடுநீயே. சகல புவ னங்களும் உன்னுல் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. வாயு எமன் அக்கினி வருணன் சந்திரன் பிரம்மா அந்த பிரம்மாவுக்கு தகப்பனுகிய விஷ்ணுவும் நீ யல்லவா? உமக்கு அனேகவிதமாய் நமஸ்கரிக்கின் றேன். இன்னம் அனேகவிதமாய் நமஸ்காரம் செய் கின்றேன். உமக்கு முந்தி பிந்தியும் சமஸ்த திக்கு களிலும் நமஸ்கரிக்கின்றேன். அமிதமான சாமர்த் திய பராக்கிரமத்தோடு சேர்ந்து நீ சகல ஜெகத்தி லும் நிறைந்து வியாபித்திருப்பதால் நீரே சர்வ சொரூபன். இப்படியாக அனேகவிதமாக தோத்தி ரம்செய்து ஓ தேவா! எனக்கு நேத்திரமளித்து திவ் விய மங்கள விக்கிரஹத்தை சேவை செய்யும்படி செய்த உன் பிரதாபத்தை யான் எப்படி கொண் டாடுவேன்? உம்மைப்பார்த்த கண்ணுல் மற்றென் றைப் பார்த்தால் வெறுப்புண்டாகும். ஆகையால் ஓ பகவானே! உன்னைத் தவிர மற்றவிஷயங்களைப் பார்க்காமலிருக்கும்படி எனதுகண்களை அதமாக்கி உனது விஸ்வரூபத்தை மாத்திரம் எக்காலமும் சேவிக்கும்பொருட்டு ஞானநேத்திரம் தரவேண் டும். சுவாமி! இந்த வரம் தவிர யான் இதரமான தைக் கேட்கமாட்டேன். என்று பலவாருக தோத் திரம் செய்யும் பக்தனை சூர்தாசனுடைய நிஜபக்தி யாகிய அந்தரங்க சக்தியை யறிந்து பகவான் ஆன ந்தமடைந்து, இந்த பக்தன் கோரியபடி செய்தார். இப்படியாகவே சூர்தாசனை இடைவிடாமல் ஹரி சங்கீர்த்தனம் செய்துக்கொண்டு எக்காலமும் பக வத்தியானபரனுய் வசித்துக்கொண்டிருந்தார்.

இது இப்படியிருக்க அவந்திகாபுரம் என்றுஒரு பட்டணமுண்டு. அதை நீதிதவறிடாமல் குடிவளம் நீர்வளம் நிலவளம் இவையெல்லாம் ஏதும் பேத மில்லாமல் மந்திரி பிரதானிகளோடுகூடி சந்தோஷ மாய் இராஜ்யபாரம் செய்யும்சமயத்தில் அநேக கோடி பாடகரைத் தனது அருகில் சேர்த்துக் கொண்டு அவர்களையும் சந்தோஷமாய்ப் போஷித் துக்கொண்டிருந்தார். இப்படியிருக்க தன்னிடத்தி லிருந்த வித்வாம்சர்களில் அதிக தேர்ச்சியடைந்து ஒருவித்துவான் மகாவிநோதமாகப்பாடி நிராகாதர் களை நீருக்கிவிடும்படி பாடிக்கொண் டிருப்பார். அவர்மீது அரசனுக்கு அதிக பிரியமுண்டாகி, சந் தோஷமடைந்து, ஓ பாடகரே! உம்மைப்போல் மனோஹரமாக பாடுபவரை யான் இதுவரைக்கும் எங்கும் பார்த்ததுகிடையாது. அதுவுமல்லாமல் இப்பூவுலகில் இப்படிப்பட்டவர் இருக்கின்ருர் என் றும் கேட்டதும் கிடையாதென்று சொல்ல, இம் மொழிகேட்ட பாடகர் மனேவியாகூலமடைந்து, ஓ இராஜனே! நானே மேலென்று சொல்லத்தகாது. அது எப்படியென்ருல் மதுராபுரத்தில் சூர்தாசன் என்றெருவு அந்தகர் இருக்கின்ருர். அவரோ பரம பாகவதோத்தமராய் சாக்ஷாத் நாராயணனை இர வும் பகலும் அந்தப்பகவானைத் தியானம் செய்துக் கொண்டிருக்கின்ருர். அவர் பாடும் ஞானரசத்தை யான் என்னவென்று கொண்டாடுவேன். இந்த உத் தமசீலன் கானம்செய்ய ஆரம்பித்தால் நாரதர் தும் புருவர் கந்தருவர் கிம்புருடர் வெட்கமடைந்திருப் பார். இந்தக் கானகத்தை சாக்ஷாத் பகவான் ஆன ந்தமடைவாரென்று சொன்னமாத்திரத்தில் அந்த அரசன் ஆச்சரியமடைந்து தன்னுடைய அந்தரங்க சேவகரை அனுப்பி அழைத்துவரும்படி ஆக்கினை செய்தார். அதுபோலவே சேவகர் அதிவேகமாய் மதுராபுரிக்கு வந்து சூர்தாசரைக்கண்டு அனேக வந்தனம்செய்து ஓ சுவாமி! உம்மை அவந்திகாபுரி பட்டணத்தைப் பரிபாலனம் செய்யும் அவந்திகா புரிவேந்தன் அனேக வந்தனம்சொல்லி அழைத்து வரும்படி திட்டம்செய்தார் என்றுசொல்ல, இம் மொழிகேட்ட சூர்தாசன் சந்தோஷமடைந்து ஆக்

கினைப்பிரகாரம் அவந்திகாபுரி நகரத்துக்கு நடக்கலானார். இப்பரமபாகவதன் வருவதை அரசன் கேள்வியடைந்து தண்டுதளத்துடன் எதிர்சென்று, அழைத்துவந்து தன்னுடைய கொலுச்சாவடியில் தகுந்த சிம்மாதனமளித்து அமரும்படிச்செய்து ஒ சுவாமி! தங்களை இத்தனை தூரம் வரவழைத்தேன் என்று மனவருத்தம் அடையாதீர். அழைத்த காரியமேதென்றால் நீங்கள் செய்யும்படியான பகவத்கீர்த்தனைகள் கேட்கவேண்டுமென்று யானும் எனது சபையிலிருப்பவர்களும் அபேக்ஷயடைந்தோமென்றுசொன்னமாத்திரத்தில் சூர்தாஸ் இதை அங்கீகரித்து இவர் அடைந்த அபேக்ஷையைக் கெடுக்கலாகாதென்று சந்தோஷமடைந்து அரிகீர்த்தனம் செய்ய ஆரம்பித்தார். அப்படிப்பட்ட சமயத்தில் விக்நேஸ்வரனும் சரஸ்வதியும் பிரத்தியக்ஷமாகவந்து தாளமும் வீணையும் கைக்கொண்டு சூர்தாசருடைய கீர்த்தனைகளைத் தக்கபடி வாசித்துக்கொண்டிருந்தார். இந்த சூர்தாசருக்கு இருபுறத்திலும் இவர் இருவரும் நின்றுவிட்டார். ரம்பாதிதேவர்களும் இவருடைய அக்கிரபாகத்தில் நின்று அந்த கீர்த்தனைதனிலிருக்கும் பாவாபாவங்களையறிந்து அபிநயங்கள் செய்ய ஆரம்பித்தார். இதுவல்லாமல் கந்தர்வ கிம்புருஷர்வந்து மயங்கினவராகி கீர்த்தனைகளைச் சிரவணானந்தம் செய்துக்கொண்டிருந்தார். பரம யோகபுருஷர் இந்த கீர்த்தனைகளைக் கேட்டமாத்திரத்தில் ஆனந்தமடைந்து பகவானை மனதில் நினைந்து துருத்தியம் செய்துக்கொண்டிருந்தார். அரசன் முதலான சபையோர் எல்லோரும் மெய்மறந்து நிர்ப்பாக்கியராய் ஸ்தம்பம்போல் நின்றுவிட்டார். இப்படி ஒரு ஜாமம் வரைக்கும் சூர்தாசன் ஸ்ரீகிருஷ்ணன் லீலைகளை வர்ணித்துக்கொண்டு காவனம் செய்துக்கொண்டிருக்க எல்லோரும் பரம பக்தியுக்தனாய் பகவான் சரணாரவிந்தத்தில் லயித்து மனதை ஏகமாய்நிறுத்தி ஆனந்தப்பரவசனாய் மௌனமுத்திரைலகித்து யோகபுருஷனாய் இருந்தார். இப்படியிருக்கும் சிலநேரத்துக்கெல்லாம் பகவானும் இதர தேவர்களும் அதிருஸ்யமானார். இப்படிப்பட்ட சமயத்தில் அரசன் சூர்தாசனைச் சரணமடைந்து ஒ மகாத்துமா! நீர் இங்குதானே வசித்துக்கொண்டு எனக்கு பகவானுடைய அநுக்கிரஹம் உண்டாகும்படிபக்திவிரக்தியை உபதேசித்து, உனது கீர்த்தனைகளால் இந்த தேசத்தாரும் பகவர்க்கு பக்திவான்களாக இருக்கும்பொருட்டு கடாக்ஷிக்கவேண்டும் சுவாமி என்று பிரார்த்திக்க இம்மொழிகேட்ட சூர்தாசன் ஆனந்தமடைந்து அரசனுடைய மொழிக்கு சம்மதமடைந்து, அங்குமேதானே வாசஸ்தானமாக செய்துக்கொண்டு காலங்கழித்துக்கொண்டிருந்தார்.

இப்படியிருக்கும் சமயத்தில் அந்தப்புரஸ்திரீகள் அரசனைப்பார்த்து ஒ பிராணநாயகா! உமது ஆசாரியரான சூர்தாசரை ஒருதினம் எங்களுடைய அந்தப்புறத்திற்குவந்து சிலநேரம் பகவானைக் கீர்த்திக்கு எங்களை கடைத்தேறும்படிச் செய்யவேண்டுமென்று எங்கள் இச்சை இப்படியாக இருக்கின்றதென்று சொன்னமாத்திரத்தில், வேந்தன் தன்னுடைய பத்தினிமார்களுடைய பிரார்த்தனைகளைச் சூர்தாசருக்கு அறிக்கையிட, அதற்கு சம்மதமடைந்து அந்த வேந்தரோடு அந்தப்புறத்திற்குவந்து ஒரு பூஜாசனம்போட்டு அதில் அமரும்படிதிட்டம் செய்து இந்த சூர்தாசர் அந்த ஆசனத்தில் அமர்ந்து அதிமனோஹரமாக பகவானை அதிக பக்தி விநயத்துடன் அனேகவிதமாகக் கீர்த்தனைகள்செய்ய ஆரம்பித்தார். இவர் அந்தகரானபடியால் அரசனுடைய பத்தினிமார்கள் வெட்கமில்லாமல் அவருக்கெதிரில் நின்றுகொண்டு அக்கானத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார். இப்படியாகப் பகவத்கீர்த்தனைகள் செய்துக்கொண்டிருக்குங்காலத்தில் ஸ்ரீ சத்தியபாமா அவருடைய அக்கிரபாகத்தில் சானித்தியமாய் நின்றுகொண்டிருந்தாள். அப்பொழுது பகவத்கடாக்ஷத்தால் சூர்தாசருக்கு நேத்திரதிருஷ்டியுண்டாயிற்று. அச்சமயத்தில் அந்த தேவியைத் தரிசித்து ஒ லோகமாதா! நீ ஏன் இங்குவந்து நின்றுக்கொண்டிருக்கின்றாய்? என்று கேட்கலுற்றார். இந்த ஆச்சரியத்தைக் கண்டிருந்த இராஜஸ்திரீகள் இந்த மகானுபாவர் அந்தகரென்று நாம் எண்ணமிட்டு நமது மனதில் சங்கமில்லாமல் இவருக்கெதிரில் நின்றோம். இவர் நிரந்தரமாய்ச் சாக்ஷாத் கரியமால் மொழியாடிக் கொண்டிருக்கின்றார் என்று சொல்லி வெட்கமடைந்து திரைமறப்பில் நின்றுக்கொண்டிருந்தார். அக்காலத்தில் தேவாதிதேவனான ஸ்ரீகிருஷ்ணபரமாத்துமா பிரத்தியக்ஷமாகி சூர்தாசருக்கும் சத்தியபாமைக்கும் சேவைதந்து அவரிருவரையும் தன்னுடைய திவ்விய மங்கள விக்கிரஹத்தில் ஐக்கியம் செய்துக்கொண்டு மறைந்துவிட்டார். இதுதான் ஞான பக்தி வைராக்கிய சம்பன்னரான தன்னை அனுசரித்த அவரைப் பகவான் ஸ்ரீமகாலட்சுமிக்குச் சமமாக அங்கீகரிப்பார். பகவானுடைய விஷயத்தில் எவன் பக்தியுடன் ஞானம் பூர்த்தியாக நிறுத்தி வைராக்கியம் செய்கின்றானோ அவனைப் பகவான் அங்கீகரித்து ஆதரிப்பாரென்று பாவனை. இந்த சூர்தாசருடைய கீர்த்தனைகளை எப்புருடன் பக்தியோடு பாடுகின்றானோ அப்புருடனுக்குப் பகவான்மோக்ஷமென்னும் பெரும்வீட்டைக் காட்டி இரக்ஷிப்பா ரென்று சொன்னவுடனே நாபாஜிசித்தர் சபையிலிருந்த சீடரெல்லாம் ஆனந்தமடைந்து சந்தோஷசமுத்திரத்தில் மூழ்கித் தன்யரானார். சூரியன் அஸ்தமயமானவுடனே எல்லோரும் அவருடைய ஸ்தானத்திற்குசென்றார். நாபாஜிசித்தர் இச்சரித்திரம் சொல்லிவிட்டு ஸ்தானத்திற்கு எழுந்தார்.

சூர்தாசர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணபரப்ரம்மணேநம:

பதினாறுவது

# ஸேனநாவிதன் சரித்திரம்.

வெண்பா.

அச்சுதமுகுந்தமாதவ ஆனந்ததாமோதரஹரிகேசவா
மெய்ச்சுடன்மாதைக்காத்த மேகவண்ணகண்ணவுந்தன்
நிர்ச்சுடர்கானவேண்டி நீணிலந்தனில்தேடியான்
கச்சுடரலைந்துநின்றேன் காத்தருள் அண்ணபோற்றி.

சுலோகம்.

ஜிஹ்வெகிர்தயகேசவம் முராரிபும்சேதோபஜஸ்ரீதரம்
பாணீத்வம்தசமர்சயாச்யுதகதான்ஸ் ரத்ரத்வயத்வம்ஸ்ருணு
க்ருஷ்ணம்லோகயலோசன்த்வய ஹரேர்கச்சாம்க்ரியுச்மாலயம்
ஜீக்ரக்ரானமுகுந்தபாததுளசிம் மூர்தன்னமாதோக்ஷஜம்.

எப்படியென்றால் தன்னுடைய அவயவங்கள் இதர வியாபாரத்தில் புகுந்தபோதிலும் எந்தவிஷயத்தில் அநுசரித்தாலும் இந்த நாவானது பகவன் நாம கீர்த்தனைகளையே பாடிக்கொண்டிருக்க வேண்டும். மனதை ஹரிசேவை செய்யும்பொருட்டு அநுசரிக்கவேண்டும். இந்த கைகளை அரிபூஜை செய்யும்படி செய்யவேண்டும். இந்த காதுகளை அரிகதைகளைக்கேட்கும்படிச் செய்யவேண்டும். இந்த கண்களை அரிசேவை செய்யும்படி செய்யவேண்டும். இந்த மூக்கை அறியாத துளசியை ஸ்மரிக்கும்படி செய்யவேண்டும். இந்த பாதங்களை விஷ்ணுகோவில்களைத் திரியும்படி செய்யவேண்டும். இந்த சிரசை விஷ்ணுபாதங்களை நமஸ்கரிக்கும்படிச் செய்யவேண்டும். இப்படியாக எந்தமனிதன் செய்கின்றானோ அவனுக்குப் பகவான் அநுக்கிரகஞ் செய்வார். இதுபோலாகவே நாபாஜிசித்தர் அன்று இராத்திரிகாலம் கழித்து உதயமானவுடனே கங்கைக்கரையடைந்து, ஸ்நானம் முதலாகிய ஷட்கிரியைகளை முடித்துக்கொண்டு நெற்றியில் திருநாமம்தரித்து பீதாம்பரமணிந்து பகவான் எதிரில் சென்று ஓ தேவா! எக்காலத்தில் இந்த மானிட ஜன்மத்தைத் தீர்த்து முக்தியடையும்படியான மார்க்கத்தைத்தந்து ஆட்கொள்வீரென்று பலவாறாகத் தியானம் செய்யும் சமயத்தில் சீடரெல்லோரும் ஏகமாய்ச்சேர்ந்து குருபீடமாகிய நாபாஜிசித்தரிடத்திற்கு வந்து, அனேக வந்தனம்புரிந்து ஓ சுவாமி! நேற்றையதினம் சொன்ன சரித்திரம் கேட்டமாத்திரத்தில் எங்களுடைய ஜன்மம் சாபல்லியமாயிற்று. இன்றைக்கு அதுபோல் ஏதாகிலும் சரித்திரம் சொல்லுவீரென்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசித்தர் மனம் சந்தோஷமடைந்து அப்பா சீடர்களே! எந்தஜாதியானாலும்சரி. அவனுக்குப் பூர்வீக சம்பந்தமிருந்தாலேதான் இந்தப் பரமதயாநிதியைத் தியானஞ் செய்துக்கொண்டு வருவார். அக்குறி இல்லாவிட்டால் அவன் எப்படிப்பட்டதான தருமம் செய்தபோதிலும் பகவான் சேவை அகப்படுவது துர்லபம். அதுபோல் நீங்கள்செய்த பாக்கியமே பாக்கியம். ஆனால் இப்பூவுலகத்தில் சேனநாவிததாசருடைய சரித்திரம்ஒன்றிருக்கிறது. அதையான் சொல்லுகிறேன். நீங்களெல்லோரும் பக்திவிநயத்துடன் கேட்டு மோக்ஷமடைவீரென்று சொன்னவுடனே, சீடர்கள் அதிக சந்தோஷமடைந்து, ஐயா! தமது இஷ்டப்படியே சொல்வதைக் கேட்டு ஆனந்த மடைகிறோமென்று சொன்னதைக் கேட்ட நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து அடியில்வரும் சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினர்.

ஓ சீடர்களே! அவந்திபுர மென்றொரு பட்டணமுண்டு. அப்பட்டணத்தில் சேனநாவிதனென்ற பெயருடைய ஒரு நாவிதன் குடியிருந்தான். இவன் பகவான் கடாக்ஷத்தால் ஞானபக்தி வைராக்கிய சம்பன்னராகி ஸ்ரீபரதயோகியைப்போல் எக்காலமும் பகவானைத் தியானஞ் செய்துக்கொண்டு ஸ்வர்ணுசித விர்த்தியால் தன்னுடைய குக்ஷியைக் கழித்துக்கொண்டிருந்தான்.

சுலோகம்.

வரம்ஹுதவஹஜவாலா
பஞ்சருந்தரவ்யவஸ்திதிஃ
நசௌரிசிமதாவிமுகஜந
ஸம்வாசவைசஸம்.

என்பதுபோல் சௌரிந்தா விமுக்தியாகிய ஜனங்கள் சாவகாசத்திற்காகினும் அக்கினிஜ்வாலை பஞ்சரத்தில் வசிப்பதாய் பிரியமென்று சம்சாரிகள் சாங்கத்தியம் சல்லாபத்தை வெறுத்து மிதராஹாரமாய் இருப்பவன்போல், காலத்தை கழித்துக்கொண்டிருந்தான். (ஸ்வேயான்ஸ்வதர்மோவிகுணஃ பரதர்மாத்ஸ்வ னுஷ்டிதாத் ஸ்வதர்மேநிதனம்ஸ்ரேயஃ பரதர்மோபபாவஹ) எப்படியென்றால், ஏதுவில்லாமல் செய்யத்தொடரும் பரதர்மத்திற்காகினும் குணஹீனமான ஸ்வதர்மம் அதிகமேலென்பார். அப்படி இல்லாமல் ஸ்வதர்மத்திலிருந்து மரணமடைந்தால் ஸ்ரேயம். பரதர்மம் நரகத்திற்கிடமாகும் என்று, இப்படியாக பகவத்கீதைதனில் பகவான் சொல்லி இருப்பதால், அதுபோலவே புத்தியுடைய சேனநாவிதன் ஸ்வதர்மநிஷ்டனாய் யதாலாப சந்துஷ்டி யடைந்து, காலக்ஷேபம் செய்துக்கொண்டிருந்தான். (கிமப்யத்ராபிஜாயம்தே யோகிநஸ்ஸர்வயோநிஷு) யென்னும் மொழிபோல் இந்த மகானுபாவன் ஹீனகுலத்தில் பிறந்திருந்தும், (சமோமதபஸ்சௌஸம் க்ஷாம்கியார்ஜவவிரத்ததா ஞானவிஞானசந்தோஷஃ சத்யாஸ் திக்யேத்விஷட்குணஃ) இப்படியாக சொல்லப்பட்ட பன்னிரண்டு குணங்களோடு சேர்ந்தவனாய்ப் பகவானுக்குப் பிரியமடைந்தவனாய் இருந்தான். ஆனால் இவர் காமக்குரோத லோபமோஹ மதமாச்சரியமென்னும் ஷட்கிரியைகளை வெறுத்து அனாதிகாலமாய் தன்னுடைய பிரதேசத்தில் வசித்துக்கொண்டிருந்த அஹங்கார மமகாரமென்னும் சண்டாளரிருவரையும் தூரமாய் துரத்திவிட்டு லட்சுமிகாந்தனைத் தன்னுடைய மனதில் ஸ்திரமாய் ஸ்தாபித்து இந்த பூலோகத்தை வெறுத்து எக்காலமும் மானசபூஜை செய்துக்கொண்டு பகவான் சந்தோஷிக்கும் பொருட்டு தான் ஆனந்தமடைந்து கொண்டிருந்தான்.

இவர் இப்படியிருக்கும் சமயத்தில் ஒருநாள் அந்த தேசாதிபனை துலுக்கப்பிரபு க்ஷௌரம் செய்துக் கொள்ளவேண்டுமென்று சேனநாவிதரை அழைப்பித்தார். அப்படிப்பட்ட சமயத்தில் அந்த பாகவதோத்தமன் சுத்த ஜலத்தில் ஸ்நானஞ்செய்து காஷாய வஸ்திரந்தரித்து பரமவைராக்கியமென்னும் வைஷ்ணவாலங்காரம் செய்துக்கொண்டு நவத்வாரத்தோடு சேர்ந்த சரீர நகரத்தில் ஹிருதய ஆலயத்தில் ஞானமென்னும் கோமயத்தால் ஸ்தலசுத்தி செய்து விஞ்ஞானமென்னும் தங்கவல்லியால் அலங்கரித்து வாசியென்ற ஸ்தம்பத்தைநாட்டி சாந்தியென்றவிதானத்தைக்கட்டிசத்தியபீடத்தில் லட்சுமிகாந்தனை ஸ்தாபித்து பூததயையென்ற தூபத்தை தீனஜனபோஷனமென்னும் தீபம் சர்வபூத சம்மாரமென்னும் தாளம் போட்டுக்கொண்டு அத்வேதமென்னும் சாமரம்வீச ஸ்ரவணமனன நிதித்யாசங்களைச் செய்ய ஞானநந்தமாய் பரமாத்துமா ஸேஷமாயிருக்கும் பரிசுத்த ஆத்மாவென்னும் மகாநைவேத்தியத்தை அகிஞ்சின்யமென்னும் தாம்பூலத்தை அன்யகதி என்று சொல்லப்பட்ட நிராஜனத்தைச் சமர்ப்பித்து, தன்னைமறந்து தன்யனாய் பகவத்தியான பரனா யிருந்தான்.

இப்படியிருந்த இவனோ இந்த உலகமாய்கையை மறந்து பகவத்தியானத்தில் லயித்திருப்பதால் அந்த வேந்தனுடைய சேவகர் தன்னை அழைப்பது தனக்குத் தெரியாமலிருந்துவிட்டார். இவருடைய பாவமறிந்து தன் வீட்டிலிருந்தவர் சேனநாவிதர் வீட்டிலில்லையென்று அந்த சேவகருக்குத் தெரிவித்தார். இதுபோலவே அநேக தூதர்கள் வந்து அழைத்தும் வீட்டிலில்லையென்று சொல்லிக்கொண்டிருந்தார். இப்படியிருக்க (ஞானதிஸ்சேதனலேகிநம்) எப்படியென்றால் பலவந்தனாக இருந்தபோதிலும் நெருப்பால் பிரயோசனமென்ன வென்னும் வாக்கியம்போல் அந்த சேவகர் வேந்தனுடைய வீட்டிற்குச்சென்று ஓ இராஜோத்தமா! சேனநாவிதன் வீட்டில்தானே இருக்கின்றான். தங்களுடைய ஆக்கினைக்குப் பயப்படாமல் வீட்டிலேயே யிருந்துகொண்டு இல்லையென்று சொல்லுகின்றானென்று சொன்னதைக்கேட்ட அந்த வேந்தன் கண்கள் சிவ

க்க மீசை துடிக்க சினங்கொண்டு பற்களை நரநர வென்று கடித்து தன்னுடைய சில காவலரை அழைத்து, அடா காவலர்களே? நீங்கள் சென்று சேனுநாவிதனைப் பிடித்து இருகரத்தைக் கட்டி சமுத்திரத்தில் எறிந்துவிடுங்களென்று ஆக்கினையிட்டான், இப்படிப்பட்ட கோர ஆக்கினையை இட்டவுடனே அச்சமயத்தில் பக்தவச்சலனுய் தீனதயாளனுய் ஆபத்பாந்தவனுய் ஸ்ரீமத் பண்டரிநாதன் அதிக துரிதமாக சேனுநாவிதனைப்போல் வேஷம் தரித்துக்கொண்டு அந்த நாவிதனுடைய அடைப்பத்தை எடுத்துக்கொண்டு அதிகவேகமாய் அரசனுடைய சன்னதிக்கு வந்து, மண்டியிட்டு வந்தனம் செய்வதுபோல் சலாம்செய்து நின்றுர். இப்படிச் செய்ய காரணமென்னவென்றுல் இந்த அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகன் பரமயோகிதயாபரன், தேவாதிதேவன், சர்வலோக சரண்யன், சர்வபூத ஹிருதயாம்புஜன், கர்ம சாக்ஷிகர்ரன், கர்ம பலபத்திரன், முக்திநாதன், லட்சுமிநாயகன், ஸ்ரீபுண்டரீக வரதன் தன்னுடைய கபடநாடக சூத்திரபிரதாபத்தை வெளிக்குக்காட்டும்பொருட்டு சேனுநாவிதன் வேஷம்தரித்து அடைப்பத்தை எடுத்துக்கொண்டு நிற்க பிரபுவுக்கு க்ஷவரம் செய்ய உத்தேச மடைந்தார். மனிதன் உச்சிஷ்டத்தை அபேக்ஷிக்கும் காமிபோல் சாஸ்ரிதவிதேயனுன பக்தவச்சலன் சேனுநாவிதனுடைய குலதர்மமான தொழிலைத் தான் செய்யவேண்டுமென்று அபேக்ஷித்தவராகையால் இந்த விட்டலனுக்கு எல்லாவேஷமும் தக்க படியிருந்தது.

இப்படி வேஷதாரியான பக்தவச்சலனைக் கண்டமாத்திரத்தில் வேந்தனுக்குக் கோபமானது பனிபோல் குளிர்ந்து இருந்தது. எப்படியென்றுல் சூரியோதயத்தில் இருளானது தலைகாட்டுமா? இதுவல்லாமல் சந்திரோதயத்தில் சந்தோஷம் உண்டாவதுபோல் இந்த மகாபுருஷனைக் கண்டமாத்திரத்தில் வேந்தனுக்கும் அங்கிருந்தவர்களுக்கும் திடீலென ஆனந்தரசம் அதிகமாச்சுது. அல்லாமலும் அந்த க்ஷவரவேஷதாரி அந்தவேந்தனருகில் சென்று க்ஷவரம்செய்ய ஆரம்பித்தார். இந்த வேஷதாரி க்ஷவரம் செய்யும் உன்னதங்கண்டு, அரசன் ஆனந்தமயமடைந்தார். இப்படி க்ஷவரம்செய்து முடிந்த பிறகு வழக்கப்பிரகாரம் வேலைக்காரன் சுகந்ததைலத்தை ஒரு சுவர்ணபாத்திரத்தில் கொண்டுவந்து கொடுத்தான். இதைக் கொண்டுவந்தபிறகு க்ஷவர வேஷதாரி அந்தத்தைலத்தை அரசன் தலையில் தேய்த்துக்கொண்டிருந்தார். அக்காலத்தில் அந்த க்ஷவரகன் தலைதேய்க்கும் உன்னதத்தைக்கண்டு கோபக்குறிகளை மாற்றி சமதமாத்திம குணங்கள் வகித்தது. அந்தச்சமயத்தில் அந்த சுகந்த தைலத்தில் அந்தக்கபடவேஷ க்ஷவரகன் பிரதிபிம்பமும் சதுர்புஜங்களோடும் கிரீட மகரகுண்டல கேயூராதியும் திவ்யபூஷணுதிகளோடும் ஸ்ரீவத்ஸ கௌஸ்துபங்களோடும் வைஜயந்தி மணமாலிகைகளோடும் அதிகப் பிரகாசமாகிய ஸ்ரீலட்சுமிக்காலயமான விசால வக்ஷஸ்தலத்தோடும் சங்குசக்கராதி திவ்யாயுதத்தோடும் தயாபூரிதமாய் அந்த சரணுந்தங்களோடும் நேத்திரமடைந்த நிர்வாஜ்மந்தஸ்மிதத்தோடும் கூடிய முகமும் வாதாமயாபஸ்த்தோடும் அந்த வேந்தனுடைய கண்ணுக்குத் தோன்றியது. அப்பொழுது அந்த வேந்தன் அந்த முகாரவிந்தத்தைத் தரிசனம்செய்து பிரமானந்தமடைந்து, திடுக்கிட்டு மனது ஏகமாய் இருந்தான். இதற்குள்ளாக பொழுது ஏறினபடியால் அந்தரங்க பரிவாரம் ஸ்நானம் செய்யவேண்டுமென்று அரசனை யழைத்தார். இம்மொழி கேட்டவுடனே அரசனெழுந்து சேனுநாவிதனைப் பார்த்து உம்மைப்போல் சதுரன் இந்தலோகத்திலும் கிடையாது. உனது விஸ்வேஸம் எனக்குச் சந்தோஷமாயிருக்கின்றது. ஆனல் யான் ஸ்நானம்செய்து புசித்து வருகின்றேன், நீ இதற்குள்ளாக உனது வீட்டிற்குச்சென்று போஜனமருந்தி வருவாயென்று சொல்லி, இரண்டு கைகள் கொள்ளும்படியான வராகனை எடுத்து அவர் முந்தாணியில் போட்டனுப்பினுர். இதைப்பெற்றுக்கொண்டு பகவான் சேனுநாவிதன் வீட்டிற்குவந்து அரசன்கொடுத்த பூவராகனை அவனுடைய உட்பத்தில் பத்திரஞ்செய்து மறைந்துவிட்டார். இப்படியிருக்கும் சமயத்தில் அரசன் தைலபாத்திரத்தில் தனக்கு அகப்பட்ட பகவத்பிம்பத்தை பக்தியோடு நிஷ்டனைப்போல் நிரந்தரம் தியானம் செய்துகொண்டு ஸ்நானபோஜன காரியத்தை அதிக சீக்கிரத்தில் தீர்த்துக்கொண்டு கொலுச்சாவடிக்கு வந்து அந்தரங்க பரிஜனங்களைப் பார்த்து சேனுநாவிதன் எங்கிருக்கின்றுன்? இப்படிப்பட்ட சத்புருஷன் எங்குதேடினுலும் அகப்படுவானு? அந்த மகானுபாவனுடைய சச்சரிதமத்யற்புதமாய் முக்திமார்க்கமாயிருக்கின்றது. அவனுடைய சாகசம் எனக்கு அதிக சந்தோஷமாயிருக்கின்றது. ஆகையால் அந்த பரமசாதுவை அதிசீக்கிரமாய்த் தேடி அழைத்து வருவீரென்று ஆக்கினையிட்டார்.

அந்த அரசன் வேலைக்காரர்கள் அதிசீக்கிரமாய் ஓடிவந்து சேனநாவிதனைக் கண்டு அரசன் தெரிவித்ததெல்லாம் நன்றாய்த் தெரியச்சொன்னார்கள். இப்படி யிருக்குஞ் சமயத்தில் இதற்குள்ளாக சேனநாவிதன் பகவானுக்கு செய்யும்படியான மானசபூஜைகளை முடித்துக்கொண்டு இந்த பிரபஞ்ச ஞானத்தை தன்மனதிற்கு நிலைநிறுத்திக்கொண்டு அந்த அரசனுடைய சேவகர்கள் அநேகவிசை தன்னை அழைத்துச் சென்றாரென்று கேள்விப்பட்டு தன்மனதில் பலவாறாக துக்கித்தார். அது எப்படியென்றால் யான் இந்நேரம் வரைக்கும் மானச பூஜை நிஷ்டானுசாரனாய். பிரபஞ்ச வாழ்க்கையை மறந்திருந்தேன். ஆகையால் அவர்கள் அநேகவிசை யழைத்தும் போகாதபடியால் அரசனுக்கு என்மீது கோபமதிகமாயிருக்கும். ஆனாலுமென்னசெய்யலாம்? (அம்போஜிநீவனவிஹாரவிலாசமேவ ஹம்ஸஸ்யஹம்திநிதராம்குபிதோவிதாதா சத்வஸ்யதுக்தஜல பேதவிதௌப்ரசித்தாம் வைதக்த்யகீர்த்திமபஹர் துமசௌஸமர்த:) இதின்பயன் என்னவென்றால் பிரமாவுக்கு சொந்தவாகனமான அன்னத்தின் மீது கோபமுண்டானால் பத்மவன விஹாரத்தை ஆற்றலாமே யல்லது பாலையும் நீரையும் வேறுக்கும் குணமானது அந்த அன்னத்துக்கு சுபாவமானது அந்தகுணாதிசயத்தைப்போக்கடிப்பதற்கு சமர்த்தனவானா? ஒருக்காலும் ஆகான். அதுபோல் இந்த வேந்தனுக்கு என்மீது கோபமுண்டானால் எனது ஜீவனத்திற்கு ஆனிசெய்யலாமே தவிர சுவதந்திரமாய் இருதயத்தில் ஸ்தாபித்திருக்கும்படியான நஷ்டமில்லாமல் நிஸ்ஸப்திகமாய் சகலலோக சஞ்சீவியாய் அகில ஜெகத்திற்கு மொளியாய்ப் பிரகாசமடைந்த காரணபூதமாயும் இருக்காநின்ற பரமாத்துமாவினுடைய க்ஷேமத்தை அபகரிப்பதற்கு இவன் எப்படி சமர்த்தனவான். ஆனால் என்னிடத்திலும் அந்த இராஜனிடத்திலும் சர்வத்திலும் பிரவேசித்திருக்கும் பரமாத்துமா வொருவனேயன்றி இரண்டு பேருண்டா? இல்லை. அப்படியிருக்க அரசன் என் மீது கோபமடைந்தபோது நான் ஏன் லஜ்ஜையை யடையவேண்டும்? இதுவெல்லாம் அந்த சூத்திரதாரனுக்குத் தெரியாமல்போனால் இந்த மானிடப் பொம்மைகளை ஆட்டுவானா? ஆகையால் ஓ பகவானே! என்னையும் உம்மில் ஒருவனாய் செய்துகொண்டு எனது பூஜையை அங்கிகாரஞ்செய்த ஓ பாண்டுரங்கா! உனது சூத்திரதாரிலீலையை பிரம்மாதி பிபீலிகாதிகள் சமஸ்தபிராணிகளும் பொம்மைகளாயிருக்க இந்தஅரசன் மாத்திரம் அதற்ககப்படாமல் வேறாகி நின்றானோ இதுவுமன்னியில் கவசதாரியான புருஷன்போல் ஸ்ரீமத் பாண்டுரங்கன் ஸமஸ்த சேதன சேதனங்களைக் கவசமாகத் தரித்திருப்பதால், நானும் இந்த இராஜனும் அந்தப் பாண்டுரங்கன் சுவரூபராயிருக்கின்றோம். ஆகையால் நான் ஏன் எனது ஜீவாத்துமாவாகிய ஸ்ரீமத் பாண்டுரங்கன் சன்னிதானத்தை இராஜன் சபையென்று பிரமித்தேன்? இது எப்படியென்றால் விக்கிரமார்க்கனுடைய சிம்மாசனத்தின்மீது அமரப்பட்டவன் பரமனுப்தனாயிருந்தாலும் அவன் பரமபுருஷன். ஆனபடியால் இந்தக் கர்மபூமியில் ஜனித்திருந்தும் எனக்கு இப்படிப்பட்ட சித்தகாலுஷ்யம் உண்டாச்சுதென்று கொஞ்சம் துக்கித்து பகவத் கடாக்ஷலப்தமான ஞானதீபத்தால் பேதஞானத்தையென்னும் கொடிய துஷ்டர்களைத்துரத்தி தன்னுடைய அடைப்பத்தை யெடுத்துக்கொண்டு தனது வீட்டைவிட்டு வெளியே புறப்பட்டு (அனந்தவைகுண்ட முகுந்தகிருஷ்ண கோவிந்ததாமோதர மாதவேதி, வக்தும்சமர்தோபினவக்திகஸ்சித்து அஹோ ஜனாநாம்வ்யசாபி முக்கியம்) இது எப்படியென்றால் ஓ அனந்தா! வைகுண்டா! முகுந்தா! கிருஷ்ணா! கோவிந்தா! தாமோதரா! மாதவா! என்று பேசுவதற்கு சமர்த்தனாயிருந்தும் ஒருவனாகிலும் பகவான் நாமத்தை ஸ்மரிக்கிறதேயில்லை. அப்படிப்பட்ட ஜனங்களுக்குச் சமுசாரமென்னும் விசனமே முக்கியமா யிருக்கின்றதென்று பரோபதேச ரூபமாய் பகவன்நாமசங்கீர்த்தனம் செய்துகொண்டு சென்றார். இப்படியாகவே இராஜதுவாரத்தைக் கடந்து அரசனுக்கெதிரில் நிற்கையில் அந்த அரசன் இவரைப் பார்த்தமாத்திரத்தில் சூரியனைக்கண்ட கமலம்போலவும், சந்திரனைக்கண்ட குமுதம்போலவும், மேகத்தைகண்ட சாதகம்போலவும், இப்படியாக அபிமானித்து அந்தவேந்தன் அப்பியங்கஸ்னானம் செய்து தன்னெதிரில் வருந்திக்கும் அன்பனுடைய பாதாரவிந்தத்தில் தன் சிரசை நிறுத்தி அநேகவந்தனம் செய்து எழுந்து நின்றுகொண்டு ஓ மகாத்துமா! இன்று எனக்கு சுப்பிரபாதமாச்சுது. யான் உன்னை இதுவரைக்கும் சாமான்ய மனிதனென்று எண்ணியிருந்தேன். ஆனாலும் பெரிதல்ல. நீ எனக்கு க்ஷவரம் செய்யும்போது தைலத்தில் காட்டிய உனது ரூபத்தை யான் பார்க்க ஆவலடைந்தேன். ஆகையால் எனக்கு இன்னுமோர்விசை அப்படிப்பட்ட சேவையைத் தரவேண்டி கோருகின்றேன் என்று சொல்லி, தன்னுடைய சேவகரையழைத்து அதிசீக்கிரத்தில்ஸ்வர்ண

பாத்திரத்தில் சுகந்த தைலத்தை யெடுத்துக்கொண்டு வருவீரென்று திட்டம்செய்தவுடனே, சேவகர்கள் அதிவேகமாய்ச் சென்று அந்த தைலத்தை யெடுத்துக் கொண்டு வந்து இராஜன் முன்னில் வைத்தார்.

அந்தச்சமயத்தில் அவ்வேந்தன் அந்த தைலத்தில் பார்க்கவே முந்திபோல் ரூபம் திவ்யமாயகப் பட்டது. சேனநாவிதன் இந்த அற்புதமெல்லாங் கேட்டு ஆச்சரியமடைந்து பகவானுடைய திவ்ய லீலைகளை ஸ்மரித்துக்கொண்டு மனது கரையும்படி ஓ தயாசிந்து! தீனபந்து! நிரவதிகவாஸ்சல்ய ஜலதேயபார! கருணாநிதே புண்டரீகவரதா! லக்ஷ்மிகாந்தா யான் மகாசித்தனைபடியினல் எனது நிமித்தியமாய் இப்படிப்பட்ட நீச்சகாரியம் செய்தாயல்லவா? ஆகையால், சங்கற்பமாத்திரத்தில் ஸ்ருஷ்டி ஸ்திதி சம்மாரம் செய்யப்பட்ட நீ உனது யாஸ்ருத வாஸ்ஸல்யத்தை வெளிப்படுத்த அபேக்ஷையடைந்து அடைப்பத்தை கைக்கொண்டு க்ஷௌரம் செய்ய ஆசைப்பட்டது விந்தையா யிருக்கின்றது. யான் அதிகபாவிகளில் அதிகமானவனல்லவா? எனக்காக நீயிந்த நீச்சவேஷம் தரித்து நீச்சத்தொழில் செய்யவேண்டிய காலம் வந்தது என்று சொல்லிக் கொண்டு கண்ணீர்விட்டு பூமிமீது விழுந்து அழுது கொண்டிருந்தார். இதைக்கண்ட வேந்தன் ஆனந்தச்சித்தமடைந்து, தன்னுடைய கண்களில் முத்துப்போல் பாஷ்பத்தைச்சொரிந்து, ஓ புண்யாத்துமாவே! உனது நிமித்தியமாய் எனக்கு பிரம்மருத்திரர் சனகாதி தேவர்களும் தியானித்தபோதிலும் கிட்டுதற்கு மகாதூரமாயிருக்கும் பகவானுடைய சேவை அதிக சுலபத்தில் அகப்பட்டதே யென்று சொல்லிஅவருக்கு உபசாரம் செய்துக்கொண்டிருந்தார். இப்படிக்கு உபசாரம் செய்யும் சமயத்தில் சேனநாவிதன் கொஞ்சநேரம் பொறுத்து தனது ஞானம் தனக்கு வந்தபிறகு எழுந்து ஓ இராஜேந்திரா! உனது பாக்கியமே பாக்கியம். நீர் வசித்திருந்த கர்ப்பத்தினுடைய யோகமேயோகம். உனது மாதாபிதாக்கள் செய்த புண்யமே புண்யம். ஸ்ரீகிருஷ்ண பரமாத்துமாவுக்கு சமமாக சாக்ஷாத்கரித்து உம்மை தரிசிக்கின்றேனென்று சொல்லி தன் கையிலிருந்த அடைப்பத்தில் பாரமாயிருக்கும் காரணம் தெரியாமல் சோதித்துப் பார்க்கையில்அதில் பூவராகன் நிறைந்து இருந்தது. அதைப்பார்த்து சேனநாவிதன் ஆனந்தமடைந்து ஓ லக்ஷ்மிநாதா! அனுதநாயகா! பண்டரிநாதா! ஓ ஜெகன்நாதா! அனந்தகோடி ஸ்ருஷ்டியும் உம்மாலே இருக்க நீர் க்ஷௌரம் செய்து சம்பாதித்த ரொக்கம் இதுதானே? என்று சொல்லி அந்தத் திரவியத்தை எடுத்து பகவானுக்கு பக்தனயிருக்கும் பக்திமான்களுக்கும் பேதைத்தன்மை யுடையவர்களுக்கும் கொடுத்து சந்தோஷமடைந்தார். அதின்பிறகு அந்த அரசன் அது முதற்கொண்டு பரமவிரக்தனய்ப் பரமபாகவதனய் சேனநாவிதனுக்கு உகந்த சீடனய் இருந்தார். சேனநாவிதனும் வேந்தனும் பாலும் நீர்போல் கலந்து சுகஜீவியாய் பகவத்தியானஞ் செய்துகொண்டிருந்தார். [கேட்டீர்களோ சபையோர்களே! இப்படிக்கல்லவோ ஞானமுண்டாகவேண்டும். என்னதான் சொன்னபோதிலும் அதைக் கேட்காத மூடருக்கு எப்படி ஞானம் லபிக்கும்? இந்த வேந்தன் தான் செய்யும்படியான குரூரசெய்கைகளை யொழித்து எப்படி ஞானவானனன்? இதை எல்லோரும் யோசிக்கும்படி தெரியச் சொன்னேனென்று சொன்னவுடனே சூரியபகவான் மேற்கு திசையில் அடங்கியபிறகு இதையறிந்து எல்லோரும் அவரவர் இருப்பிடம் சென்றார்கள்.

சேனநாவிதன் சரித்திரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநம:

பதினேழாவது

# ஸாத்வீகராஜன் சரித்திரம்.

ஸ்ரீ கண்ணன் ஸ்தோத்திரம்.

தஞ்சமென்றேன்ரகுராமா வென்னைக்காவாய்
தருணமிதுவுனைப்போலே தெய்வங்காணேன்
அஞ்சலிசெய்வோரைக்காக்கும் தெய்வம்நீயே
அரிநமோநாராயணாவென் றுனைத்துதித்தேன்
வஞ்சமென்றமாயவினைக் கொய்துஞானம்
வாழ்கின்றவிடந்தன்னை காட்டியாளாய்
பஞ்சரத்தினஜானகியும் மகிழ்ந்தநாதா
பரமகுருவெனைக்காவாய் இராமச்சந்திரா.

சுலோகம்.

ஸந்த்யாவந்தனபத்ரமஸ்துபவதே போஸ்நானதுப்யம்நம:
போதேவ:பிதரஸ்சதர்பனவிதௌநாஹம்க்ஷயதாம்
யத்ரக்வாபிநிமத்யபாதவகுலோத்தம் ஸஸ்யசம்ஸத்விஷ
ஸ்மாரம்ஸ்மாரம்கமஹராமித தலம்மன்யேகிமன்யேநம.

இப்படியிருக்குஞ் சமயத்தில் நாபாஜிசித்தர் அன்று இராத்திரிகாலம் கழித்து உதயமானவுடனே எழுந்து ஸ்நான ஜெபதப முடித்துக்கொண்டு பகவான் சந்நிதானத்துக்கு எதிரில் வந்து யான் ஸ்நானம் செய்யும் காலத்திலும் சந்தியாவந்தனம் செய்யுங் காலத்திலும் தேவபித்ரு தர்ப்பணம் செய்யுங்காலத்திலும் எதுகுலபூஷணனைய் அவதரித்துத் தனஞ்சயனுடைய கர்வமடக்கி மகிழ்ச்சியடைந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தைத் தியானிக்காமல் இருப்பேனாகில் எனக்கு நரகமென்னும் பெருவீட்டை யடைவேனென்று சொல்லிக் கொண்டிருக்கும் சமயத்தில், நேற்றையதினம் கேட்டுக் கொண்டிருந்த சிடரெல்லாம் ஏகோபித்து ஒ நேசரே! நாமெல்லோரும் நேற்று கேட்டுவந்த ஞானத்தின் மகிமை சொல்ல நம்மால் தரமல்ல. ஆகையால் அதுபோல் இன்றைக்கும் நாமெல்லோரும் சென்று நமது குருநாதரை ஞானநாட்டும் கதையைச் சொல்லும்படிகேட்டால் இன்னம் அநேக பக்தருடைய சரித்திரமெல்லாம் நன்றாய்த் தெளிவுறும்படிச்சொல்லி ஞானமுக்தியடையும் மார்க்கத்தைக் காட்டுவாரென்று எல்லோரும் கும்பலாகப் பேசிக்கொண்டு நாபாஜிசித்தர் சன்னதிக்கு வந்து பகவான் பாதாரவிந்தத்தைக்கழுவித் திலதமிட்டு மல்லிகை முல்லை இருவாக்ஷி முதலான புஷ்பத்தால் அர்ச்சனைசெய்து வலப்பிரதக்ஷணமாய் சுற்றிவந்து எல்லோரும் கும்பலாக அவர்பாதத்தில் வீழ்ந்து ஒ பகவானே! உம்மை ஊமையாயிருந்த நாங்கள் எல்லோரும் பேசும்படியான மார்க்கம் வகித்தது. ஆகையால் தாங்கள் தாயைப்போல் ஞானப்பாலை ஊட்டி எங்களைக் காப்பாற்றவேண்டும் சுவாமி என்று சொன்னவுடனே நாபாஜிசித்தர் ஆனந்தமடைந்து ஒ அன்பர்களே! நீங்கள் சொல்லும்படி கேட்ட ஞானமார்க்கம் சொல்வதற்குக் காலமல்ல. ஞானமார்க்கமடைந்த பக்தருடைய சரித்திரம் சொல்லுகிறேன். அதைக் கேட்டாகிலும் ஞானம் இப்படிப்பட்டதென்று அறிந்துக்கொண்டு, பிறகு

என்னைக்கேட்டால் அதின் பயனை தெரியச் சொல்லுவேனென்று சொல்ல இம்மொழிகேட்ட சீடரெல்லோரும் சந்தோஷமடைந்து சுவாமி! தாங்கள் இந்த ஏழைகள்மீது தயைபுரிந்து ஏதாகிலும் ஞான சரித்திரம் சொன்னால் போதுமென்று சொன்னவுடனே நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர். அப்பா சீடரே! இன்று உமக்கு சாத்வீக வேந்தனுடைய சரித்திரம் சொல்லுகிறேன். இதை அதிக ஞானமாய்க் கேட்கவேண்டும், என்று சொன்னவுடனே சீடரெல்லோரும் அஸ்தபந்தமடைந்து வாய்மூடி மவுனம் சாதிப்பதுபோல் இருக்கும் சமயத்தில் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

அந்த சரித்திரம் எப்படியென்றால் பரபாவன க்ஷேத்திரமாகிய ஸ்ரீஜெகந்நாதத்தில் ஸாத்வீகவேந்தனென்றொரு வேந்தனிருந்தான். அவனோ மகா பாகவதோத்தமன்; ஸ்ரீஜெகந்நாதனுடைய பாதாரவிந்தத்தில் மனதை நிறுத்தி பக்தியோடு நிறைந்தவனும், ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவை சர்வோபசாரத்தோடு ஆராதித்துக்கொண்டு அதிதிகளையும் தீனர்களையும் அங்கபங்க மடைந்தவர்களையும் அதிக பிரியத்தோடு ஆதரித்துக்கொண்டு சர்வ பிரபஞ்சத்தையும் பகவத்ஸ்வரூபமாய்ப் பாவித்துக்கொண்டு, ஞானபக்தி வைராக்கிய சம்பந்தனும் தன்னுடைய ராஜ்யத்திலிராநின்ற பிரஜைகளெல்லோரையும் குழந்தைகள்போல் இரக்ஷித்துக்கொண்டு தினம் கழித்துக்கொண்டிருந்தார். இப்படி இருக்கும் சமயத்தில் இவர் இராஜரென்றும் தன்னுடைய இராஜ்யத்திலிருக்கும் பிரஜைகள் தனக்கு ஊழியக்காரரென்றும் பாவிக்காமல், ஸமஸ்த வஸ்துக்களும் ஈஸ்வர சந்தானமென்னும் சேதனத்திற்கு அயிஸ்வர்ய தரித்திரங்கள் பூர்வ கர்மாநுகுணமாக பகவத் பிரசாதமென்று எண்ணி, வித்யாதனுபிஜனத்தைச் சேர்ந்து சுசிரியனு யிருந்தான்.

இப்படியிருக்க இவ்வேந்தன் ஒருதினம் பகவத் சேவைசெய்ய எண்ணமிட்டு ஸ்ரீபுருஷோத்தமனுடைய சன்னதிக்கு வந்து ஆராதிக்கும் சமயமாகையால் அந்த ஆலயத்தில் பிரவேசிக்காமல் கோபுரத்துவாரத்தில் அமர்ந்து பிரதானிமுதலான அந்தரங்க சேனைகளோடு சேர்ந்து வினோதமாக சொக்கட்டானை வரவழைத்து சூதமாடிக்கொண்டிருந்தான்.

இந்த சமயத்தில் ஸ்ரீபுருஷோத்தமனுக்கு மகா நைவேத்தியமான பிறகு பகவத்சேவைக்கு இது சமயமென்று அந்தரங்கமாயிருந்த தூதர் அரசனுக்குத் தெரிவித்தார். இந்தவேந்தன் சூதத்தில் அதிக மோகமடைந்திருப்பதால் அந்தமொழியை அவர்காதில் விழாதபடி இருந்துவிட்டார். அதன் பிறகு அர்ச்சகர் பகவத் பிரசாதமான நைவேத்தியத்தை எடுத்துக்கொண்டுவந்து இராஜனுக்குக் கொடுத்தார். அந்தவேந்தன் சூதத்தில் லகித்திருப்பதால் அவர் எடுத்துக்கொண்டுவந்தது மகா பிரசாதமென்று கௌரவித்து எழுந்து வாங்கிக் கொள்ளாமல் வலதுகையால் பாச்சிகையை உருட்டிக்கொண்டு இடதுகையை நீட்டினர். இதைக் கண்ட அர்ச்சகர் இந்த பகவத்பிரசாதத்தை இடதுகையில் கொடுக்கலாகாதென்று சொல்லி அந்த வேந்தனுக்குக் கொடுக்காமல் போய்விட்டார். அரசன் சூதாடிய பிறகு அந்தரங்க சேவகரைப் பார்த்து அதிக பொழுதாச்சுதே. ஸ்ரீ புருஷோத்தமருக்கு இதுவரைக்கும் அந்த மகா நைவேத்தியம் தீராதிருக்கும் காரணமேது? என்று கேட்டார். அப்பொழுது அரசன் சேவகர்கள் மகாப் பிரபூ! இந்த நைவேத்தியமாகி அதிக காலமாச்சுது. அச்சமயத்தில் நாங்கள் உம்மை ஓ மகாப் பிரபூ சேவை செய்வதற்கு இது சமயமென்று தெரிவித்தோம். எமது மொழிகளை உம்முடைய காதில் விழாதபடி யிருந்துவிட்டீர். இதுநிற்க அர்ச்சகர் நைவேத்தியம் கொண்டுவந்து எமக்குக் கொடுக்கும் சமயத்தில் நீர் அதை வலதுகையால் வாங்காமல் இடதுகையை நீட்டினீர். அதைப் பார்த்து பகவத் பிரசாதத்தை வலதுகையில் கொடுக்கலாகாதென்று கொண்டுபோய் விட்டார். தாங்கள் ஆட்டத்தின்மீது மோகமாயிருந்தபடியால் இந்த சவிஸ்தாரமெல்லாம் தெரியாமலிருந்தீர். இம்மொழியெல்லாம் வேந்தன்கேட்டு துக்காக்கிராந்தமடைந்து இது என்னபாபம். என்தாரித்திர விஷயத்தைப்பற்றி எனக்கு இப்படிப்பட்ட புத்தி உண்டாயிற்று. யஞ்யவாசத்திற்குச்சென்று சோமயனத்தை அபேக்ஷிக்காமல் சுருபானத்தை அபேக்ஷித்த கொடிய மூடனைப்போல் யான் ஸ்ரீபுருஷோத்தமன் சன்னதிக்கு வந்து பரமபாவனமடைந்த பகவத்பிரசாதத்தை அபேக்ஷிக்காமல் நரகவேதுவான சூதத்தை அபேக்ஷ யடைந்தேன். ஐயோ! என்பாவத்தை யான் எப்படி தீர்த்துக்கொள்ளுவேன். ஆ! ஆ!! விஷத்தை அமைந்திருக்கும் சர்ப்பத்தை நேசித்தவனைப்போல பாப

மான வீட்டிற்கு சொந்தக்காரனுவேன். மகாத்துமாக்கள் இந்த சூதத்தினல் கெட்டபேர் லபிக்குமென்று இதின் இடத்திற்குப் போகமாட்டார் அல்லவா? இதுவல்லாமல் நான் இன்னம் அநேக வேந்தர்கள் சூதாடியல்லவா படாதபாடெல்லாம் பட்டு துன்பத்தை அடைந்தார்கள். அய்யோ யான் பகவத் சன்னதியில் இப்படிப்பட்ட மகாபாபத்தைச் செய்தேனே! எனக்கு ஸ்ம்ருதிகளும் பிரயாசித்து விதிப்பாயென்று எண்ணமிடுகின்றேன். இப்படியாக எண்ணமிட்டுக்கொண்டு அந்த ஆலயத்தில் பிரவேசித்துப் பகவத்தரிசனம் செய்து தனது வீட்டையடைந்து தன்னுடைய துக்கத்தை எவர்களு மறியாதபடி அந்தரங்க ஸ்தானத்திலமர்ந்து இதையெல்லாம் நினைந்து துக்கித்தார். ஐயோ! பூர்வீகம் தபோதனர் யாஜோபாஜுகளில் இராராஜன் தன்னுடைய சகோதரனுை நபயாஜனை வனத்தில் பலத்தை தன் உத்திரவில்லாமல் அநுசரித்தபடியால் அதற்கு ஆக்கினை எப்படியென்றுல் அரசன் சன்னதிக்குச்சென்று தன்னுடைய அஸ்தத்தைக் கண்டித்துக்கொண்டார். ஆகையால் யான் அதுபோலவே பகவத்பிரசாதத்தை வெறுத்தபடியால் யானும் அதுபோலவே எனது கரத்தை வாட்டிக்கொண்டால் நலமென்று நிச்சயித்துக்கொண்டு தன்னுடைய மந்திரியை அழைத்து ஓ மந்திரியே! இதுவென்ன ஆச்சரியமாயிருக்கின்றது? அது ஏதெனில் சிலநாளாக இராக்காலத்தில் எங்கேயோவிருந்து ஒரு பூதம் வந்து இந்தக் கதவு இரந்திரமாய் தனது கையை சோரவிட்டு என்னை பாதிக்கின்றது. இதனல் எனக்கு இரவெல்லாம் நித்திரையில்லாமல் குரூரமடைந்தேன். இன்று இராத்திரி யான் எனது சய்யாகிரஹத்தில் சயனிக்காமல் வேறொரு இடத்தில் சயனித்துக்கொள்ளுகிறேன். அது சமயத்தில் நீ எனது சய்யாகிரஹத்தில் மஞ்சத்திற்குச்சமீபமாகநித்திரையில்லாமல் ஒளித்துக்கொண்டு இரு. அப்பொழுது அந்த பூதத்தின் அஸ்தம் கவாடந்திரமார்க்கமாய் அகப்படும் சமயத்தில் நீ ஏதுக்கும் அஞ்சிடாமல் உனது கட்கத்தினல் அந்த அஸ்தத்தைக் கண்டித்திடுவாயென்று சொல்லி அந்த மந்திரிக்குத் திட்டம் செய்து அனுப்பினர். இதை எல்லாம் கேட்டிருந்த மந்திரி மனதில் மனவியாகூலமடைந்து இப்படி எப்படிப்பட்ட துஷ்ட இராக்ஷதனைக் கொல்லாமல் விடப்படாது, என்று எண்ணமிட்டுக்கொண்டு அன்று இராப்பொழுது எப்போது வருமென்று எண்ணியிருக்கும் சமயத்தில் சூரியன் மேற்குத்திசையில் அடைந்தார். அந்தச்சமயம் பார்த்துக்கொண்டிருந்த மந்திரி அதிக ஜாக்கிரதையாய் புசிப்பறிந்து அரசனுடைய சய்யாக்கிரஹத்திற்குச்சென்று அந்தக் கதவின் பக்கமாக நித்திரையில்லாமல் உருவின கத்தியை உறையில்போடாமல் வெகு ஜாக்கிரதையாய் அந்தக்கதவு யந்திரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். இப்படியிருக்கும் சமயத்தில் இருண்ட பிறகு இது நல்ல சமயமென்று அரசன்யோசித்துத் தன்னுடைய சய்யாக்கிரஹத்திற்கு வெளியில் நின்றுகொண்டு தன்னுடைய வலது கையை அந்தக்கதவு இரந்திர மார்க்கமாய்விட்டார்.

அப்பொழுது மந்திரி அந்த அஸ்தம் தன் கண்ணுக்குத் தோற்றியபிறகு ஏதும் சங்கையடையாமல் நமது வேந்தனைப் பாதிக்கும் இராக்ஷதன்கை இதுதான் என்று இந்த பொல்லா மிருகத்தை வதைசெய்தேன் என்று சந்தோஷத்துடன் தன்னுடைய கத்தியால் அந்தக் கையை இரண்டு துண்டாய் நறுக்கித் தள்ளினன். அந்தச்சமயத்தில் வேந்தன் தான்செய்த மகா அபராதத்திற்கு நல்ல பிராயச்சித்த முண்டாச்சுது என்று பரமானந்த மடைந்திருந்தார். இதுவல்லாமல் கண்டித்த அஸ்தம் கீழே விழுந்த பிறகு தனக்கு ஏதும் பாதையில்லாமல் இருந்தார். இதுவல்லாமல் சந்தோஷத்தோடு கூத்தாடிக்கொண்டு மந்திரியிடத்திற்கு வந்து தனது இடது கையால் அந்த மந்திரியை ஆலிங்கனம் செய்துக்கொண்டு ஓ மகானுபாவா! நீர் எனக்கு மகா உபகாரி. என்னை நகரத்தில் விழாதபடி இரக்ஷித்தவர் அல்லவோ. ஸ்ரீஜெகன்னுதன் உனது ரூபமாய் வந்து எனக்கு இப்படிப்பட்ட பிராயத்தம் உண்டாக்கி என்னைப் பரிசுத்தனுகச் செய்தார். ஆனல் நீயே எனக்குப் பரமகுருவென்று சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில் அரசனுக்கு ஏக அஸ்தனயிருப்பதும் அவருடைய வலதுகை அப்படிப்பட்ட் விடத்தில் ரத்தம் கொப்பளித்து வருவதை மந்திரி பார்த்து துக்காக்கிரந்தனுய் யான் இப்படிப்பட்ட பாவியாகினேன். எனக்கு அநேகவிதங்களாலும் ரக்ஷகனுயும் விஷ்ணு சொரூபியாகியும் பிருதுவீபதியை இன்று இம்சித்தேன். இந்த பொல்லாப் பாவசமுத்திரத்துக்கு யான் எந்த ஜென்மத்தில் விழுவேனென்று சொல்ல, பரவசமடைந்து பூமிமீது விழுந்து அழுதுகொண்டிருக்கும் சமயத்தில் அரசன் அந்த உத்தம மந்திரியினுடைய துக்கத்

தையாற்றி தன்னுடைய மனதின் கல்மிஷமெல்லாம் அவருக்குச் சவிஸ்தாரமாக தெரியச்சொல்லி இதற்குள்ளாக சூரியோதயமானவுடனே இருவரும் ஸ்நானம்செய்து அறுந்துவிழுந்த அஸ்தத்தை ஒரு பல்லக்கில் வைத்துக்கொண்டு அதை புஷ்கரித்துக் கொண்டு பரிவாரசமேதனய் ஸ்ரீஜெகந்நாதருடைய மந்திரதுவாரத்திற்கு அங்கு கும்புகூடியிருந்த மகா சங்கத்தைப் பார்த்து ஐயா! நான் மகாபாதகினி, திரிலோகத்திலும் கிடையாத மகா கர்மசண்டாளன். அல்லாமல் பகவத்சன்னிதியில் பிரவேசிப்பதற்கு அயோக்கியனு யிருக்கின்றேன். மகா பாபம்செய்த இந்த அஸ்தத்தை ஸ்ரீபுருஷோத்மனுடைய அக்கிரபாகத்திலமைக்க உங்கள் சித்தம் பெரிது செய்து என்னை இரக்ஷிப்பீரென்று கேட்டுக்கொண்டு, அந்த அஸ்தத்தை ஸ்ரீஜெகந்நாதன் சன்னதிக்கு அனுப்பினர். அக்காலத்தில் அங்கிருந்த சாதுஜனங்கள் அரசனுடைய பிரார்த்தனைப்பிரகாரம் செய்தார். அப்பொழுது அங்கிருந்த யாசகரும் அந்த க்ஷேத்திரத்தில் வசித்துக்கொண்டிருந்த சாதுஜனங்களும் இன்னம் அநேகசாதுக்களும் இந்த அற்புதத்தைக்கண்டு அரசனுடைய குணதிசயத்தைக் கொண்டாடி, இப்படிப்பட்ட தேஹாபிமான வர்ஜிதனை வைராக்கிய நிதியை இதுவரைக்கும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை, நாமும் பார்த்தது மில்லையென்று சொன்னர். அப்பொழுது அர்ச்சகர் பகவத் பிரசாதத்தைக் கொண்டுவந்து அரசனுக்குக் கொடுத்தார். அப்பொழுது அந்த பாலகிருதத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் சமயத்தில் அகஸ்மாத்தாக எப்பொழுதும்போலவே கைமுளைத்து அந்த அரசன் நீதியுண்டாகி இது மகாபிரசாதமென்று இரண்டு கைகளை நீட்டி அந்த பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டார். இது இப்படியிருக்க பகவத் சன்னிதியில் அழைக்கப்பட்ட அஸ்தமானது தானமாய்விட்டது. இந்த ஆச்சரியத்தைச்கண்டு அற்புத சித்தமடைந்து அர்ச்சகர் யந்தபுவனமெடுத்து கொஞ்சம் ஸ்ரீகிருஷ்ண பலராமா சுபத்திர இவர்கள் பாதத்தில் சமர்ப்பித்து இன்னம் கொஞ்சமெடுத்து நந்தவனத்தில் நிக்ஷேபித்தார்.

இப்படியிருக்கும் சமயத்தில், வேந்தன் முன்னுக்காகிலுமதிக சுகுணம் அதிகரித்து பரமவிரக்தனய் சமுசாரத்தை நிச்சாரமென்னு மனம் வெறுத்து சமுசாரியை அனவரதமும் பஜித்து.

சுலோகம்.

த்யாயந்தியே விஷ்ணுமனம் தமவ்யயம்
ஹ்ருத்பத்மமத்வேசததம் வ்யவஸ்திதம்
சமாஹிதானம் சததாபயப்ரதம்
தேயாம்திஸித்திம் பரமாஞ்சவைஷ்ணவீம்.

என்னும் மொழிபோல் அனவரதமும் பக்தி கூட்டத்தில் வசித்து எல்லோருக்கும் அபயமே கொடுக்கும் ஸ்ரீ மாதவனைத் தியானம் செய்துக் கொண்டு பரமவைஷ்ணவசித்தி யடைந்திருந்தாரென்று நாபாஜிசித்தர் சொன்னவுடனே சூரியன் மேற்குத்திசையில் மறைந்தார். பொழுதுபோய் விட்டதென்று எல்லோரும் எழுந்து அவரவர் விடுதியடைந்தனர்.

சாத்வீகராஜன் சரித்திரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநமஃ

பதினெட்டாவது

# கர்மாபாயி சரித்திரம்.

வெண்பா.

சீர்பெருகும் கர்மாபாயின் சரித்திரத்தை யின்றுயான்
பேர்பெருக வசனரூபமாய் பேசிட்டேன்—பாரளந்த
கண்ணன் திருப்பாத கமலத்தை யெந்நாளும்
உண்ணமர நீகோருகந்து.

சுலோகம்.

விஷ்ணும்சாரதசெந்திரகோடி சத்ருசம்சம்கம்ரதாம்கம்கதா
மம்போஜம்ததம்கிதாப்ஜநிலயம் காந்த்யாஜசனமோஹனம்
ஆபத்தாம்குனிஹாரகுண்டலமஹா மௌனிம்ஸ்புரத்கம்கனம்
ஸ்ரீவத்ஸாமசமுசாரகௌஸ்துதிபதாம் வந்தேமுநீம்த்ரஸ்துதம்.

இப்படியிருக்கும் சமயத்தில் நாபாஜிசித்தர் உதயமானவுடனே, தாளெழுந்து காலேக்கடனே முடித்துக்கொண்டு ஸ்நானம்செய்து பட்டுபீதாம் பரம் தரித்து திருமணி திருச்சூரணம் அணிந்து துளசிமாலே கண்டத்தில் தரித்து மானசபூஜை செய்துக்கொண்டு பகவான் சன்னதிக்கு எதிரில்சென்று ஆ! ஆ!! அநேககோடி சந்திரர் உதித்தால் எவ்வளவு பிரகாசமுண்டோ அதுபோல் வெள்ளைத்தாமரையி லமர்ந்துகொண்டு ஆரகுண்டலாதி பூஷணங்களைத்தரித்து சங்குசக்கரமணிந்து, லோகத்தை எல்லாம் போஷிக்கும்பொருட்டு விக்கிரகமாக வமர்ந்திருக்கும் ஸ்ரீமகாவிஷ்ணுவை அநேக முனிபுங்கவரும் தபஸ்ரேஷ்டிகளும் பூஜிக்கும்படியான தேவனை யானும் பூஜித்துக்கொண்டு வருகின்றேன். ஓ பகவானே! ஆபத்பாந்தவா! அனாதரக்ஷகா! கோகுலதிலகா! கோவிந்தா! மாதவா! கேசவா! தாமோதரா! அரி! அரி! நாராயணா! என்ன் ஜன்மத்தைச் சாபல்யம்செய்து மோக்ஷமார்க்கம் காட்டி என்னை ரக்ஷிக்கவேண்டும் சுவாமி என்று தியானம் செய்துக்கொண்டிருக்கும்சமயத்தில், இந்த நாபாஜிசித்தருடைய சீடரெல்லோரும் கும்பலாகக்கூடி ஓ நேசரே! இதுவரைக்கும் நாம் மானிட ஜன்மமெடுத்து ஏது பலனறிந்தோம்? நேற்றையதினம் நமது குருநாதர் சொன்ன கதையின் கருத்துபோல் நடப்பதற்கு நமக்கு வல்லமையுண்டா? ஒருக்காலும் கிடையாது. ஆகையால் இந்த ஜன்மமெடுப்பதால் ஏதும் பலன் கிடையாது. இதைவிட இனி வேறு ஜன்மமெடுத்தால்நலமாகும். ஆகையால் நாம் எல்லோரும் ஏகமாய்சென்று குருநாதரைக்கண்டு நமது ஜென்மத்தைச் சாபல்யம் செய்வதற்கு ஏதுவை கேட்பது போல் நடப்போமாகில் நமக்கு முக்திமார்க்கம் கிடைக்கும் என்று சொல்லி, எல்லோரும் அது போல் சம்மதமடைந்து கங்கைக்கரையடைந்து ஸ்நானம்செய்து நெற்றிக்குத் திருமணிகாப்பணிந்து பட்டு பீதாம்பரம் தரித்து துளசிஆரம் கண்டத்தில் பூட்டிக்கொண்டு கோஷ்டிகளாக கோவிந்தா வென்று வரம் உச்சரித்துக்கொண்டு, குருநாதர் எதிரில்சென்று எல்லோரும் ஒரேமுகூர்த்தந்தன்னில் நமோ நாராயணாவென்று பூமியில் விழுந்து குருநாதருக்கு வந்தனம்செய்து நிற்கும் சமயத்தில் நாபாஜிசித்தர் ஆனந்தமயமாகி இவர்களைக் கண்டவுடனே தேகம்பூரித்து, ஆ! ஆ!! இவர்களுக்கு நமெப்படி ஞானம் ஓதலாகுமென்று பெருந்துயரடைந்து அப்பா சீடர்களே! நீங்கள் ஏனிப்படி துயரமடைந்திருக்கின்றீர்? என்று கேட்டமாத்திரத்தில் சீடரெல்லோரும் ஒரேமுகூர்த்தத்தில்சுவாமி! நாங்கள் என்னபாபம்செய்து இந்த மானிடஜன்மம் எடுக்கலாச்சுது. அதின் கருத்தை அடியாருக்கு தெரியச்சொல்லும் சுவாமியென்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசிந்தர் சந்தோஷித்து புன்சிரிப்படைந்து ஓ சீடரே! நீங்கள் சொல்லுவதைக்கேட்டால் மகா ஆனந்தமடைகின்றது. இது எப்படியென்றால் எண்பத்துநான்குலக்ஷ சீவராசிகளில் மேன்மைபொருந்திய இந்த மானிடஜென்மம் எடுத்தோம். இந்த ஜென்மத்தில் கூன் குருடு செவிடு முதலாகிய கர்மக்கிரியைகள் யடையாமல் இதுதான் கடைசிஜென்மம். இந்த ஜன்மத்தில் எவனொருவன் பக்திவைராக்கியத்தோடு பகவானைத் தியானம் செய்கின்றானே அவ

னுக்குப் பகவான் மோக்ஷமென்னும் பெருவீட்டைக்காட்டி அருள்செய்வார். ஆனல் நீங்கள் கேட்ட சங்கதியைப்பற்றி இன்னும் ஒரு சிறிய கதையாகிய கர்மாபாயி என்னும் பெண்பாவையினுடைய சரித்திரம் சொல்லுகிறேன். அதை கவனமாகக்கேட்டு அதுபோல நடந்தால் உத்தமமென்று சொன்னவுடனே சீடர்கள் சுவாமி! தாங்கள் அதுபோலவே சொல்லுவீரென்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

கேட்டீர்களோ சீடர்களே! ஸ்ரீ ஜெகந்நாத க்ஷேத்திரத்தில் கர்மாபாயி என்றொரு பெண்பாவையிருந்தாள். இப்படியிருக்கும் சமயத்தில் பகவான் கடாக்ஷத்தினல் அந்தப்பெண்பாவை கர்ப்பமடைந்து இருக்கும் சமயத்தில் அம்மாது சிரோன்மணியின் பர்த்தாவானவர் பரலோக மடைந்தார். இந்த துக்கத்தை அனுசரித்து ஓ தெய்வமே! நான் எப்படி தனியாக இந்தக் கர்ப்பத்தைத் தீர்த்துக்கொள்ளுவேனென்று பெருந்துயரமடைந்திருக்கும் சமயத்தில் இம்மாதுக்கு தசமாதம் பூர்த்திபாகிவிட்டது. அதுசமயத்தில் ஸ்ரீ ஜெகன்னுதனுடைய கடாக்ஷத்தினல் அந்தப் பெண்பாவை கர்ப்பத்திலிருந்து அநேககோடி சந்திரர் உதயமானதுபோலும் மாறனைத் தோற்றச்செய்யும் அழகுடன் ஒரு ஆண்குழந்தை பிறந்தது. அப்பொழுது அப்புத்திரனுக்கு ஜலசம்வார்த்துநெற்றியில்திலதமிட்டு தொட்டிலில்போட்டு தாலாட்டி தினமொருமேனியும் பொழுதொரு வண்ணமாய் வளர்த்துக்கொண்டு வந்து அந்த புதல்வனுக்கு ஐந்து வயதானவுடனே ஒருவாத்தியைக் கண்டு, அவரிடம்விட்டு சகல கலைஞானங்களைப் புகட்டும்படி திட்டம்செய்ய, அதுபோலவே அப்பாலகன் சகல வித்தைகளைக் கற்றுக்கொண்டான். இப்படியிருக்கும் சமயத்தில் அப்பாலகனுக்கு பதினறுவது வயதில் ஒரு திவ்யரூபமுடைய பெண்பாவையைத்தேடி விவாகம் செய்துவைத்தாள். இந்த சந்தோஷத்தில் மூழ்கியிருக்கும் சமயத்தில் சிலகாலம் பொறுத்தபிறகுஅந்தகர்மாபாயின் மருமகள் கர்ப்பமடைந்து ஒரு ஆண்குழந்தையை ஜெனித்தாள். இந்தக்குழந்தை பிறந்த சிலநாளில் கர்மாபாயினுடைய புத்திரன் ஆத்மவியோகமானர். கர்மாபாயி துஸ்ஸஹமான புத்திரன் மரணமடைந்து துக்கமென்னும் பெருங்கடலை அந்தப் பேரனல் சோகத்தை அருகில் வரவொட்டாமலிருந்தாள். இப்படியிருக்கும் சமயத்தில் இருந்ததுபோலிருந்து அந்த குழந்தையும் மரணமடைந்தது. அப்பொழுது கர்மாபாயி ஐயோ! என்னுடைய பிராப்தம்இப்படிப்பட்டதோ! யான் ஒன்றுமறியேன்! முதலில் புருடன் மரணமடைந்தார். பிறகு புத்திரன் மரணமடைந்தான். மூன்றுவது இருந்ததுபோல் பேரனும் மரணமடைந்தான். ஐயோ! நான் ஏகாங்கியாகின்றேன்! இந்த துக்கசமுத்திரத்தை நான் எப்படி ஈகுவேன்? என்று பெருந்துயரடைந்து காலம் போக்கிக்கொண்டிருக்கும் சமயத்தில் இம்மாதுசெய்த பாக்கிய வசத்தால் ஸ்ரீஜெகந்நாத யாத்திரைசெய்வதற்கு வந்துகொண்டிருந்த ஒரு பாகவதர் அம்மாது வீட்டில் விடுதிசெய்தார்.

இப்படியிருக்கும் சமயத்தில் கர்மாபாயி என்னேரம் பார்த்தாலும் துக்கசாகரத்தில் மூழ்கியிருப்பதை அந்தப் பாகவதர் கண்டு அம்மணி! நீ இப்படிக்கு துக்கிப்பதற்குக் காரணமேது? என்றுகேட்க, அதற்குக்கர்மாபாயினுடைய கஷ்டதிசைகளையெல்லாம் சவிஸ்தாரமாகத் தெரியச்சொன்னுள். இவைகளையெல்லாம் கேட்டு அந்தப்பாகவதர் ஓஅம்மணி! இந்த சமுசாரத்தி லிருப்பதற்கு சுகமுண்டா? இந்த துக்கத்தை விடுவாய். உனக்கு பரமார்க்கத்தை உபதேசிக்கின்றேன். அதை கவனமாய்க் கேட்பாய். ஆனல் இந்த ஏழைமொழியெல்லாம் வியர்த்தமென்று எண்ணுதே? யான் திரவ்ய அபேக்ஷையாலும் பிரமையாலும் உபதேசிக்க வந்தவனல்ல. ஆகையால்எனதுமொழிகளை நம்புவாய். எப்படியென்றல் புருடன் ஜனித்தவுடனே பால்யம் பிறகு யவ்வனம் அதற்குமேல் ஈளிவார்யமான வார்த்தீகமடைந்து பிறகு மிருத்தியுவசமாவான். பிராணிகளும் உண்டானது உனக்கும் எனக்கும் பிரத்தியக்ஷமா யிருக்கின்றதல்லவா? இவ்வளவே யல்லவா? மரணமடைந்தவனுக்கு மறுபடியும் ஜன்மம் உண்டாவது நிச்சயம். இந்த அற்பத்திற்கு சுருதி ஸ்ம்ருத்யாதி சாஸ்திரங்கள் பிரமாணமாகின்றன. இந்த தேகமுண்டாவதற்கு பூர்வஜன்மத்தில் செய்யப்பட்ட பரம புண்யத்தோடு சேர்ந்து ஸ்திரமான ஆத்மாதவிர வேறுகாரணம் அகப்படாததால் சுக்கில சுரோணிதங்களுக்கு நதிஷ்டாத்மா ஆத்மாவே முக்கிய காரணமாகின்றது. ஆகையால் புருஷனுக்கு கர்ப்பவாச முதல்கொண்டு சரீரவஸ்தான பரியந்தம் சர்வ அவஸ்தைகளும் துக்கமே உண்டாகின்றதென்று எண்ணுவாய். இதுவல்லாமல் அன்னபானத்தால் பசியென்பது தீருவதும் அந்தந்த உபாயத்தால் சீதோஷ்டாத்யுபத்ரவம் தீருவதும் சுகமென்று எண்ணுவதற்கு அவிவேகம்எப்படியென்றல் அன்னபானதிகள் சம்பாதிப்பதற்குச் செய்யும் பிரயத்தனத்தால் உண்டாகும் துக்கத்தை சொல்லத்தரமா? இந்த அன்

னமே அஜீரணமாகும்பொழுது எவ்வளவு துக்க வேதுவாயிருக்கின்றது? இதற்கு திருஷ்டாந்திரம், பாரும். அது எப்படியென்றால் வாததோஷத்தால் ஸ்தம்பித்திருக்கும். அக்கரையுடையவர் கஷ்டப் படும் அந்ததேகம் சவுக்கிய மடையும்பொருட்டு இந்த சரீரத்தைக் குத்திக்கொண்டும் பிசைந்துகொண்டும் இருந்தால் சுகமாயிருக்கும்: காமமோகாந்திகளாகிய ஜனங்கள் பிரளயகாலத்தில் கோபித்த காமியினுடைய சரணநாடகத்தைச் சுகமாய்த்தோன்றும். இப்படி துக்கவேதுவாகும். இதுவன்றி சுகபிராந்தி யடைந்திருப்பதைக் கண்டாயே. இதுபோல் மாமிச ஸ்லேஷ்ம மலம்மூத்திராதி மயமான தேகத்தினுடைய சௌந்தரிய சௌகுமார சௌரம்ய சாந்தியான குணங்கள் உண்டென்று எண்ணுவதற்குப் பிராந்தியல்லது வேறல்ல. இது ரத்த மாமிச ஸ்லேஷ்ம மலம் மூத்திர மஜ்ஜாஸ்தி ஸ்நாயு சமுதாயமான தேகத்தைப் பிரிதிசெய்யப்பட்டவன் நரகத்தில் பிரதி யடையவேண்டும். குளிரால் அக்கினியுஷ்ணத்தால் ஜலமும் பசியால் அன்னமும் இவையெல்லாம் சுகமென்று தோன்றுகின்றது சயித்தியதாஹக்ஷுத்துக்கள் இல்லாத வேளையில் அக்கினி ஜலம் அன்னம் துக்கவேதுவாயிருக்கும். இதுவல்லாமல் புருஷன் எவ்வளவு தனதான்ய ரத்தினுகள் சம்பாதிக்கின்றானே, அவ்வளவும் துக்கமென்று எண்ணுவாய். மனிதன் மனப்பிரீதியாய் புத்திரமித்திர களத்திராதி சம்பந்தத்தால் எவ்வளவு சம்பாதிப்பானோ அவ்வளவும் அவன் மனதிற்கு விலங்குபோலிருக்கும். புருஷன் எவ்வளவு தூரத்திலிருந்தபோதினும் அவன் மனதிலிருக்கும் தனதான்ய ரத்தினுதிகள் நாசரிதை சௌணுக்கினி பயமில்லாமல் ஸ்திரமாய்ப் பாதித்துக் கொண்டிருக்கும். தன்னுடைய வீட்டில் சோரபயமில்லாமல்போனாலும் மனதில் திரவ்யம்தன்னில் பிரியம் அதிகரித்துக்கொண்டிருக்கும். இதில்லாமல் ஜன்மிக்கும்பொழுது அனுபவிக்க எவ்வளவோ துக்கம். அதை மரணகாலத்திலும் அனுபவிக்கவேண்டும். பிறகு எமகிங்கிரர்களாலும் மறுபடியும் சரப்பிரவேசத்தாலும் மகாதுக்கமே அதிகரிக்கும். ஆகையால் எதிலும் சுகம்கிடையாது. இப்படியிருப்பதால் ஜெகமெல்லாம் துக்கமயமாயிருக்கின்றது. இதுபோல் சகல துக்கத்திற்கும் வாசஸ்தானமான சமுசாரசாகரத்தை ஸ்ரீமன்நாராயணன் ஒருவரே அதை வெல்லத் தக்கவர். இதுவெல்லாம் உனக்கு உண்மையாய்ச் சொன்னேன். ஆனல் நான் விதவையானதால்அந்த ஜெகதீசனை ஆராதிக்கும் சாமர்த்தியம் எனக்கில்லை யென்று சொல்வாயாகில் பால்ய, யவ்வனம், ஜரா, மரணுத்தியவஸ்தை இதுவெல்லாம் தேகத்திற்கே யல்லது ஆத்மாவுக்கொன்றுமில்லை. இந்த சரீரத்தில் ஆத்துமா ஜனனமரணுதி ரஹிதமாய் சாஸ்வதமாயிருக்கின்றது. லோகத்தில் புருஷன் பாவம் கதித்த பிறகு யவ்வனத்தில் ஹிதம்செய்துகொள்ளுகிறேன் என்றும் யவ்வனத்தை யடைந்திருக்கும்பொழுது வார்த்திகத்தில் ஸ்வேயமான ஞானத்தை சம்பாதிக்கின்றேன்என்றும் எண்ணுவார். பிறகு வார்த்திபம் சம்பவித்து இந்திரியங்கள் பலஹீனமான பிறகு இனி நான் என்னசெய்வேன் என்பார். திடமாயிருக்கும்போதே ஆத்மாவுக்கு ஹிதம்செய்யாமல் மூடனை பிறகு துக்கித்தால்வருமா? இதற்குத் திருஷ்டாந்தம்எப்படியென்றால் கங்காபிரவாகத்திலிருந்தாலும் வண்ணானுக்குத் தாகமெடுத்தால் அங்கிருக்கும் நீரை உண்ணுதப்படிக்கு இந்த வஸ்திரங்களையெல்லாம் தோய்த்தபிறகு ஆகட்டும், இந்த வஸ்திரமெல்லாம் தோய்த்தபிறகு ஆகட்டுமென்று,இப்படி சொல்லி காலத்தைப் போக்குவான். மீன் பிடிப்பவன் இந்த மீன்பிடித்து ஆகட்டுமென்று காலம் கழிப்பதுபோல் பின்காலத்தை யோசித்து முந்திகாலத்தை போக்கக்கூடாது. பால்யம் யவ்வனம், ஜரா,மரணுவஸ்தை இவையெல்லாம் சரீரத்துக்கேயல்லது ஆத்மாவுக்குக்கிடையாது. விவேகமாகிய உனதுஆத்துமா உஜ்ஜீவிக்கும் மார்க்கத்தை அனுசரிப்பாய். ஆனல் உனக்கு இப்படிப்பட்டதோர் விரக்திமார்க்கத்தை உபதேசித்தேன். இவையெல்லாம் அசத்தியமென்று நினைக்காதே. சர்வபிரகாரத்தால் சம்சார பந்தமோசனனை ஸ்ரீமன்நாராயணனைஸ்மரிப்பாய். அந்த ஜெகதீசனை ஸ்மரிப்பதற்கு ஆலோசனை ஏது? ஸ்மரித்த மாத்திரத்தில் சகலவித பாபத்தை நாசமாக்கி சகல சுபங்கள் உண்டாக்குவார். ஆகையால் எக்காலமும் அரியை ஸ்மரித்து மகாத்துமாக்கள் உஜ்ஜீவித்திருக்கின்றார். அவருக்கு லீலாசாதனமாகிய சேதனுதன்னில் சிநேகிதம் செய்குவாய். அதனால் மோகாதி சகலவித கிலேசங்கள் சித்திக்கும். அத்யாத்மிகாதி தாபந்திரியத்தால் ஜெகமெல்லாம் துக்கமடைந்திருப்பதால் அதிக கருணிக்கவேண்டி பிராணிகளில் விவேகியான யௌவனத்வேஷ மடைவான். ஒருவேளை சகல பிராணிகளையும் ஐஸ்வர்ய வித்யா, பலா, இவைகளால் தனக்காகிலும் அதிகமாயிருக்கின்றார். தான் ஒருவனே அப்படியில்லாமல் சத்தியீனமடைந்து, இருக்கின்றானென்றுஎண்ணினபோதினும்அப்போதும்த்வேஷத்தால்சந்தோஷத்தை அடையவேண்டும். த்வேஷம் செய்வதால்

ஹானிசம்பவிக்கும். ஆகையால் பிராணிகள் மீது மமதைகூடாது. இப்பொழுது என்னுடைய இதோ பதேசத்தை அவலம்பித்து சமஸ்த சேதனுசேதனங்களை ஸ்ரீவிஷ்ணுஸ்வரூபமாய்ப் பாவிக்கவேண்டுமென்று இப்படியெல்லாம் சொல்லி அம்மாதுக்கு ஸ்ரீ தாரகமந்திரத்தை உபதேசித்து அம்மாது சிரோன்மணி கையில் ஒரு கிருஷ்ண விக்கிரஹத்தை கொடுத்து ஓ அம்மணி! நீ உனது புத்திரமித்திராதிகள் எப்படி கண்காக்ஷியடைந்தாயோ, அதுபோல் இதையும் பூஜை செய்துகொண்டிருந்தால் இந்த கோபாலமூர்த்தி பலாபலத்தைச் செய்வார். உனக்கு பகவத் கடாக்ஷத்தால் புனர்ஜன்மமில்லாமல் ரஹிதமோக்ஷம் கொடுப்பாரென்று அனுசரித்து அந்தப்பாகவதன் தன்வாக்குபோல் பிரயாணமடைந்துபோய்விட்டார். அதின்பிறகு கர்மாபாயி பிராதகாலத்திலெழுந்து தந்தசுத்திசெய்து குழந்தை பசி சகிக்கமுடியாது என்னும் மொழிபோல் அதிசீக்கிரமாய் பாகம்செய்து அந்தப்பிரசாதத்தைக் கோபாலனுக்கு நைவேதித்து அவரை ஊஞ்சலிலிட்டு லாலிபாடி நித்திரைசெய்யவைத்து பிறகுதான் ஸ்நானத்திற்குச் சென்றுஅதேபிரகாரம் தனதுகாரியத்தைச் செய்துகொள்ளுவார்.

இப்படி யிருக்கும் சமயத்தில் ஒருநாள் கர்மாபாயி வீட்டிற்கு சில பிராமணர் வந்து அம்மாதைக் கண்டு ஓ அம்மணி! நீ பிராதக்காலத்தில் பாகம் செய்ததுபோல் தோன்றுகின்றது. இப்பொழுது ஸ்நானத்திற்கும் போகின்றாய். இதற்குக் காரணம் ஏதென்று அம்மாதைக்கேட்க, அதற்கு அந்த சிரோன்மணி ஓ பிராமணோத்தமா! யான் அதிகாலையில் பாகம்செய்து குழந்தைக்கு அன்னத்தைவூட்டி அந்த குழந்தையை ஊஞ்சலிலிட்டுத் தாலாட்டி நித்திரையடைந்தபிறகு யான் ஸ்நானத்திற்குப்போய்க் கொண்டிருக்கின்றேன். இதுவல்லாமல் யான் நித்திரைவிட்டெழுந்தவுடனே முந்தி குழந்தை காரியத்தைப் பார்ப்பதே முக்கியகாரணமென்றுசொன்னாள். இதையெல்லாம் அந்த வேதியர்கள் கேட்டு ஓ அம்மணி! உனது வீட்டில் குழந்தையிருப்பதாகத் தோன்றவில்லை. ஆகையால் நிஜத்தை சொல்லென்று கேட்க, இம்மொழி கேட்டமாத்திரத்தில் கர்மாபாயி திடுக்கிட்டு மனதில் ஆயாசமடைந்து ஸ்ரீ வேணுகோபாலமூர்த்தியைக் கொண்டுவந்து அவருக்குக்காட்டி, தன்னுடைய சவிஸ்தாரத்தை சகலமும் அவருக்குத் தெரிவித்தாள். அப்பொழுது அந்த வேதியர் சந்தோஷமடைந்து கர்மாபாயி ஸ்ரீவேணுகோபாலனுக்குச் செய்யும்படியான உபசாரத்தை அங்கிருந்தபடி கவனித்துப் பார்க்கும் சமயத்தில் அம்மாது இடும்படியான அன்னத்தைப் பகவான் பிரத்தியக்ஷமாய்ப் புசித்துக்கொண்டிருந்தார். அதைப்பார்த்து இவர்கள் ஆச்சரியமடைந்து கொண்டிருக்கும்சமயத்தில், கர்மாபாயி இவர்களைப் பார்த்து ஓ பிராமணோத்தமரே! இந்த குழந்தை பசியால் சகிக்கமாட்டான். ஆகையால் தினந்தோறும் இவருக்கு அன்னம் வட்டித்தபிறகு யானும் ஸ்நானத்திற்குப்போவது வழக்கமென்று சொன்னவுடனே அந்தப் பிராமணர் இம்மாதினுடைய பக்தியையும் இம்மாதுமீது பகவானுக்கிருக்கும் வாச்சல்யத்தையும்கண்டு சந்தோஷமடைந்து ஆனல் உனது பாக்கியமே பாக்கியமாய் இருக்கின்றது. ஆனபோதிலும் ஸ்நானம்செய்து பரிசுத்தியடைந்து பகவானுக்குப் பாகம்செய்தால் நல்லதென்று சொல்லி இருந்துவிட்டான். இப்படியிருக்கும்சமயத்தில் கர்மாபாயி மறுநாள் எழுந்து ஸ்நானம்செய்துவந்து ஸ்ரீ கோபால கிருஷ்ணனுக்கு ஆராதித்தார். இப்படிச் செய்வதால் அந்த இராத்திரி கோபாலகிருஷ்ணன் ஒரு அர்ச்சகனுடைய ஸ்வப்பனத்தில் சாக்ஷாத்கரித்து கர்மாபாயி எனது சௌகுமார்யமறியாத சிலர் உபதேசத்தால் நித்தியம் செய்வதுபோல் என்னை ஆதரிக்காமல் இன்றையதினம் ஸ்நானம்செய்து வந்து ஆலஸ்யமாக பாகம்செய்து அன்னத்தை வட்டித்தாள். ஆகையால் எனக்கு பசி அதிகரித்து பாதைப்படுகின்றேன். (அத்யம்பக்தியுக்தாநாம் நசாஸ்திரம் நைவசக்கிரமः) என்னும் மொழிபோல் பரமபக்தி யுத்தியான கர்மாபாயிக்கு இந்த நிர்ப்பந்தமேன்? ஸ்நானதிகள் செய்யாமல் எப்பொழுதும்போல் எனக்கு உபகாரம் செய்யவேண்டும் என்றுநியமித்தார். அந்த அர்ச்சகர் திடுக்கிட்டு ஆச்சரியமடைந்து கர்மாபாயி வீட்டிற்குவந்து பகவானுடைய மனக்கிலேசத்தை அம்மாதுக்கு அறிக்கைசெய்தார். அதைக்கேட்டமாத்திரத்தில் கர்மாபாயி என்னுடைய மந்தபுத்தியால் இந்தக்குழந்தை பசியால் அதிக துயரமடைந்திருக்குமென்று துக்கமடைந்து எப்போதும்போல் ஸ்நானம்செய்யாமல் பகவானுக்கு உபசரித்தாள். இந்தஅதிசயத்தையெல்லாம் அம்மாது வீட்டிற்கு வந்திருந்த அர்ச்சகர் கண்டு அநேகவிதமாகப் பகவானை ஸ்தோத்திரம் செய்து ஆனந்தமடைந்தார். கர்மாபாயி இதுவே பிரகாரம் தன்னுடைய பக்திவைராக்கியத்தை அனுசரித்து தக்க கடாக்ஷத்தால் புனருவர்த்தியடையாமல் விஷ்ணுலோகமடைந்தாள். கேட்டீரோ சீடர்களே! இப்படியல்லவோ பக்திசெய்யவேண்டும். இப்படி பக்தியடைந்தவர்க்கு எக்காலமும் மோக்ஷமடையலாமென்று சொன்னவுடனே சூரியன் மேற்குத்திசையில் மறைந்தான், இதைக்கண்டு எல்லோரும் சந்தோஷமாய் அவரவர் விடுதியடைந்தார்கள்.

கர்மாபாயி சரித்திரம் மூற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீபுண்டரீக பரப்பிரம்மணே நமः

பத்தொன்பதாவது

# தசாவந்தர் சரித்திரம்.

கட்டளைக்கலித்துறை.

கண்ணாவுன் திருப்பாத சேவைகாண்க மனம்சாயு தேயென்ன செய்வேன்
அண்ணாவுன் மனமிரக்க மில்லையோ இந்தவடி யேன்படுந் துயரந்தீர்க்க
பண்ணாத பாவமேது செய்தேன் படுபாவி யாகிநின்றேன் பார்தனிலே
மன்னாதிமன்னர் போற்றிசெய்யும் மாதவனே மனமிரங்கி வரவேண்டு மென்னெதிரே.

சுலோகம்.

ஸத்யம்ப்ரவீமிமனுஜா: ஸ்வயமூர்த்வயாஹு-ர்யோமாம்
முகுந்தாரகிம்ஹஜனார்த்தநேதி ஜீவன்ஜபத்யனுதினம்
மாணேனுணீவபாஷாணகாஷ்ட ஸத்ருசாயத்தாம்யபீஷ்டம்

இது எப்படியென்றால் இந்த நாபாஜிசித்தர் அதிக பிராதகாலத்தில் எழுந்து நித்தியகடனை முடித்துக்கொண்டு ஸ்நானம்செய்து நெற்றியில் திருமண்காப்புச்சாத்தி பட்டுபீதாம்பரந்தரித்து பகவானெதிரில்சென்று ஓ மாதவனே! யான் எத்தனை நாளைக்கு இந்தமானிடஜன்மமடைந்து இப்பூமியின்கண் வசிப்பது? உமது சேவை காணாத பாவியாய் நின்றுவிட்டேன். இந்தப்பாதகனை காக்கலாகாதோவென்று பலவாறாக தியானம்செய்து நிற்கும்சமயத்தில் இந்த நாபாஜிசித்தருடைய சீடரெல்லோரும் கும்பலாகச்சேர்ந்து இருக்கும்சமயத்தில் அதில் ஒருவர் ஐயா நேசரே! நாம் இப்படி வீண்காலம் போக்குவது நலமல்ல. நாமெல்லோரும் சேர்ந்து நமது குருபீடமாகிய நாபாஜிசித்தரிடம் சென்று திவ்வியமாகிய சரித்திரங்கள் கேட்டுக்கொண்டிருந்தால் நாம்செய்த பாபமெல்லாம் தீர்ந்து மோக்ஷமடையலாமென்று சொன்னவுடனே, இம்மொழிக்கு எல்லோரும் சம்மதமடைந்து கும்பலாகச்சேர்ந்து நாபாஜிசித்தரிடம்சென்று அனேகவந்தனம் புரிந்து ஓ சுவாமி! நேற்றையதினம் தாம் சொன்ன சரித்திரம் கேட்ட மாத்திரத்தில் அதிக சந்தோஷமடைந்தோம். ஆகையால் இன்றைக்கும் தாம்தயை புரிந்து ஏதாகினும் ஓர் சரித்திரம் சொல்லுவீர் சுவாமி! என்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசித்தர் சந்தோஷ மடைந்து இதுதான் ஞானத்திற்குத் தகுதியான புத்தியென்றும் நமது குணத்திற்குத் தகுந்த சீடரென்றும் சம்மதமடைந்து, ஓ சீடர்களே! நான் ஏது சரித்திரம் சொல்லப்போகிறேன். ஆனாலும் பெரிதல்ல. இன்று ஓர் சிறிய சரித்திரமாகிய தசாவந்தருடைய சரித்திரம் சொல்லுகிறேன். அதைக் கேட்பீரென்று சொன்னவுடனே சீடரெல்லாரும் சந்தோஷமடைந்து ஆவலாய் கேட்டுக்கொண்டிருந்தார்.

அப்போது நாபாஜிசித்தர் இவர்கள் பக்திக்கு உவந்து சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால் கேட்டீரோ சீடர்களே! வாரணாசிதனில் பூர்வீகத்தில் ஜாஜிலியென்று பரம தபோநிஷ்டருக்கு பரம தர்மம் உபதேசித்துக்கொண் டிருக்கும்சமயத்தில் அதைக் கேட்டுக்கொண்டிருந்த இவருக்கு துலாதார்போல தசாவந்தனென்று ஒருவன் பிறந்தான். இப்பாலகனுக்கு நல்ல வயதில் ஒரு பெண்பாவையையறிந்து கலியாணம்செய்தார். இப்படி யிருக்கும் சமயத்தில் இந்த தசாவந்தன் பரமஞானசம்பன்னனாயும் பரம வைராக்கியசீலனாயும், எக்காலமும் பிரமானுபவநிஷ்டராயும் தர்மசீலனாயும் அதிதிகளையும் தீனரையும் பக்தியோடு ஆராதித்துக்கொண்டும் இவர்கள் ஈஸ்வரகுடும்பமென்று சகலசேதனங்கள் சமபாகமாய் இடைவிடாமல் அன்னதானம் செய்துக்கொண்டும் சர்வம் பிரமாத்தமகமென்று ஸ்மரித்துக்கொண்டு சம்சாரம் நிச்சாரமென்று புவியில் வசித்துக்கொண்டு சாதுஜனங்களுடைய சகவாசமாயிருந்தார். இப்படி யிருக்கும்சமயத்தில் இந்த உத்தமருக்கு ஏழு குமாரர்கள் சனித்தார்கள். இவர்கள் ஜனித்து யவ்வனமடைந்து நல்லதிசையில் தன்னுடைய தகப்பனுக்கு உண்டான சற்குணசம்பத்தி இவர்களுக்கில்லாமல் துஸ்ஸஹவாசம் அதிகமாகயிருந்தது (ஸம்ஸர்கஜாதோஷகுணாபவந்தி சம்சர்கஜாபுண்யகுணாபவந்தி) இது எப்படியென்றால் சம்சர்கத்தால் குணதோஷ முண்டாகின்றது என்னும் வாக்கியம் சத்தியமாக துஷ்ட இருதயமாய் தன்னு

டைய தகப்பன் குடும்ப சவரக்ஷண சிந்தையில்லாமல் தன்னுடைய பெரியோர் சம்பாதித்த ஆஸ்தியெல்லாம் வியர்த்தமாகச் செலவு செய்துகொண்டிருக்கின்றாரென்றும், இவர் இப்படி செலவுசெய்வதால் நாம் தரித்திரத்தால் நோகவேண்டுமென்று எண்ணமிட்டு இவைகளை எல்லாம் அந்நாட்டை பரிபாலனம் செய்யும் வேந்தனுக்கு அறிக்கைசெய்து தன்னுடைய தனத்தை விரையம் செய்யாதபடி இவருக்கு நிர்ப்பந்தமுண்டாகும்படிச் செய்யவேண்டுமென்று தன்மனதில் நிச்சயித்து அவ்வேந்தனிடம் சென்று இவைகளையெல்லாம் தெரியும்படி ஓ இராஜோத்தமா! எமது குடும்பத்தில் சம்பந்தமான திரவியமெல்லாம் எமக்கு சுவாதீனம்செய்து எமது தகப்பனுக்கு நாங்கள் அன்னவஸ்திரம் கொடுக்கும்படி திட்டம்செய்யவேண்டுவதும்தவிர, ஓ இராஜா! எமதுவீட்டில் அபரிமிதமாக தனமிருந்தும் எங்கள் தகப்பன் உன்மத்தனாய் சமுசாரம் நிச்சாரமென்றும் சுற்றத்தார் திருடரென்றும் புத்திராதிகள் குணஸ்தரென்றும் மாதர்கள் சமுசார சரணமென்றும் இப்படி எல்லாம் சொல்லிக்கொண்டிருக்கின்றார். நாங்கள் இஷ்டபோகத்தை அனுபவிக்கும்படி எமதுகையில் திரவியம் ஒட்டாதபடி பரதேசிகளுக்கும் ஏழைகளுக்கும் இடைவிடாமல் அன்னமிட்டுக்கொண்டும் வஸ்திரஹீனருக்கு வஸ்திரங்கள்கொடுத்துக்கொண்டும் இப்படிக்கு திரவியமெல்லாம் வியர்த்தமாய்ச்செய்கின்றார். அந்தத்திரவியம் எமது சுவாதீனமாய் எங்கள் குடும்பம் க்ஷேமப்படும்படி தேவரீர் சமயோசிதமாய் உமக்கு ஏதாகிலும் காரியத்திற்கு கிட்டுமென்று சொன்னவுடனே இம்மொழி கேட்ட மூடமதிதரித்த வேந்தன் அந்தக்ஷணமே தசாவந்தனை வரவழைத்து நீ ஏன் குடும்ப சிந்தையில்லாமல் உனது திரவியத்தை எல்லாம் உன்னுடைய புத்திராதிகள் சுவாதீனமாய்க் கொடுத்துவிட்டு அவர்கள் இடும்படியான அன்னவஸ்திரமடைந்து சுகமாயிருப்பாயென்று சொன்னவுடனே இந்த மொழியெல்லாம் கேட்டமாத்திரத்தில் அந்த வேந்தனைப்பார்த்து தசாவந்தர்சொல்லத்தொடங்கினார்.

ஓ பயித்தியம் பிடித்தவனே! உனக்கேன் இப்படிப்பட்ட துர்புத்தி உண்டாச்சுது? (மூடஜஹீஹித நாகமதருஷ்ணும் குருசத்புத்திம் மனசிவித்ருஷ்ணும்) எப்படியென்றால், திரவியஜ்ஜனத்தில் தாகத்தை வெறுத்து மனதில் சற்புத்தியை அடைந்துகொள்ளுவாய். இதுவல்லாமல் (அர்த்தமனர்தம் பாவயக்த்யம் நாஸ்தித தாஸ்ஸுகலேசஸ்ஸத்யம்) இதுபோல் அர்த்தத்தால் அனர்த்தமென்று இடைவிடாமல் யோசித்துக்கொள்ளுவாய். அதனால் கொஞ்சமாகிலும் சுகம்கிடையாது என்று (காதே காந்தாதனகதசிந்தாவா துலகிந்தவநாஸ்திரியம் தாரி ஜகதிசஜ்ஜன சங்கதிரேகாபவாதி பவர்ணவதரணே கௌகா) என்பதுபோல் ஓபயித்தியம்பிடித்தவனே! திரவியம் அபேக்ஷை உனக்கு எப்படி பிரியமாச்சுது? உன்னைக் கேட்பவரில்லையா? இது என்ன திருஜெகத்திலும் சற்ஜனசவகாசம் ஒன்றல்லவா சமுசாரத்திற்கு பறவுபோலிருக்கின்றது. இதில்லாமல் (கேயம்கீதா நாமஸஹஸ்ரம் த்யேயம் ஸ்ரீபதிரூபம் ஜஸ்ரம்நேயம் சஜ்ஜன சங்கதிமனிசம் தேயம் தீனஜாநாயசாவித்தம்) எப்படியென்றால் பிரமவித்தையாகிய ஸ்ரீ கீதோபநிஷத்தையும் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமத்தையும் நித்தியம் பாராயணம் செய்துக்கொண்டுஇருக்கவேண்டுமென்றும், இதில்லாமல் சகல சேதநாசேதனங்கள் சரீரமாக லரிகிரஹயித்து எதிலும் நிறைந்து எல்லாம் தானாயிருக்கும் ஸ்ரீயப்பதி திவ்யரூபத்தை அனவரதம் தியானிக்கவேண்டும். பகுஜன்மசாத்யமான ஞானமடைந்து சர்வம் வாசுதேவனென்று பாவமாய்க் கூடியிருந்து பூர்வ கர்மானுகுணமாய் பகவத் கடாக்ஷவப்தமான தனத்தை ஈஸ்வரசந்தானமான சேதனத்தில் தீனருக்குக் கொடுக்கவேண்டுமென்றும், லோகோ ஜீவன காலமாகிய நபியுத்தர் சொல்லியிருப்பதைக் கேட்டும் உனக்குத்தெரியாமல்போச்சுதா? இவர்கள் எனக்கு எங்கிருந்த பந்துக்கள்? இதுவரைக்கும் கர்மப்பரவசனாய் நான் எடுத்த ஜென்மங்களை கணக்கிட சஹாபதனனுக்கும் கணக்கிடுவதற்குசாத்தியமில்லை. அந்தந்த ஜென்மங்கள் தன்னில் எனக்கு எத்தனையோ தாய்தந்தைகளும் புத்திராதிகளும் மனைவிகளும் பந்துக்களும் உண்டாகியிருக்கின்றார். ஆகையால் இப்பொழுது அவர்கள் எங்கே யிருக்கின்றார். அதுபோலவே இப்பவும் மனைவி குழந்தைகளும் சிலநாளிருந்து கர்மபந்தம் பிரிந்தபிறகு அவர்வழி அவர் போவாரல்லவா? ஆகையால் குறைபந்தமான இவர்கள்மீது யான் அதிக பிரியமடைய காரணம் ஏது? இதுவல்லாமல் யான்திரவியத்தை வியர்த்தம் செய்வதால் எனது குழந்தைகளும் மனைவியும் தரித்திரமடைவாரென்று சொல்லவந்தாயே? அவரவர் கர்மானுகுணமாக அவரவர்க்கு ஜீவனம் உண்டாக்குவதற்கு ஜகந்நாதன் இருக்கின்றான். ஆனால் அவன் அசக்தனென்றும் அஞ்ஞானியென்றும் தரித்திரவானென்றும் உன்மனதில் எண்ணிக்கொண்டாயல்லவா? (பஹூநிமேவ்யதானி ஜன்மானிதவ சர்ஜுன தான்ர ஹம்வேதசர்வாணி நத்வம்வேத்த

பராம்தப) இதின் பாவம் எப்படியென்றால் ஓ! அர்சுனு! எனக்கும் உனக்கும், இதுவரைக்கும் அநேக ஜென்மங்கள் உண்டாயின. ஆனால் யான் அவைகளையெல்லாம் அறிந்திடுவேன். நீ ஏதும் அறிந்திடமாட்டாயென்று ஸ்ரீபகவத்கீதைதனில் பகவான் சொல்லியிருக்கின்றாரல்லவா? ஜன்மரஹிதமடைந்த ஜகதீசன் காமரஹிதமாகியும், சேதன சம்ரக்ஷணார்த்தமாய் அனேக அவதாரமெல்லாம் எடுக்கின்றார். நமது பூர்வஜன்மக்கர்மங்கள் அறிந்துகர்மபலத்தைக் கொடுக்கின்றார். இப்படியிருக்க யான்திரவியத்தைச் செலவழிப்பதால் இவர்களுக்குத் தரித்திரம் உண்டாகுமென்று எப்படி சொல்லுகின்றாய்? (தனமு விதிபடினதைவவசம்புன னுண்டுபோவுமூலனுன்ன ஊங்நடவிரக்ஷலேனி யபனும்டுவர்தில்லுரக்ஷி துண்டு மந்திரமுனஜச்சு) என்னும் நீதிவாக்கியம்போல உனது காதில் கேட்டதில்லையா? ஓ இராஜா! இந்த இராஜ்யபாரம் செய்கின்றாயே. உனக்கு இத்தனை விவேகமில்லாமல்போன காரணமேது? நீயெப்படி பிரஜைகளை அனுசரித்து ஆதரிக்கவல்லவன்? உனது ஆத்மரக்ஷத்திற்கு சதுருபாயமறியாமல் நீபஹுஜனங்களை எப்படி ரக்ஷிக்கவல்லவன்? இதுவல்லாமல் நீ சிம்மாசனுதிபதியாய் பரிபாலனம் செய்கிறேன் என்று பேர்வகித்திருப்பதைப் பார்த்தால் அந்தகன் தான் ஞானதிருஷ்டியால் யுக்தமடைந்தவனென்று பேராசை யடைந்து வழிகாட்டுவேனென்று அனேகபேரை அழைத்துக்கொண்டு சமுத்திரத்திற்குப்போக எத்தனிப்பதுபோல், உனதுகதையிருக்கின்றது. ஆனால் உனக்கு ஹிதம் சொல்லுகிறேன். இனியாகிலும் இந்த அஞ்ஞானத்தை ஒழித்து இந்த தேகம் ஜலத்தில் குமிழிபோலுள்ளதென்றும் காலம் அதிக ஜலமென்றும் தென்திசையான் அதிக நேசனென்றும் தேஹானுசாதனத்தில் பாபமாகி குணம் நரகத்திற்கு தப்பாதென்றும்எண்ணிக் கொண்டுஇனி ஜென்மமில்லாமல் நித்திய பதவிசேர்வதற்குசதுருபாயம்உபதேசிக்கும் சாதுக்களை நேசமடைவாய். அப்படிசெய்வாயாகில் (ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம் நிஸ்ஸங்கத்வே நிர்மோஹதிவம் நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம் நிஸ்சலதத்வேஜீவன் முக்திః) என்னும் மொழிபோல் சாதுசங்கத்தால் புத்திரதார குரஹக்ஷேத்திராதி சங்கவர்சிதம்அடைவாய். அப்படி ஆவதால்தான் எனது என்னும் மோகம் விட்டுப்பிரியும். அந்தமோகம் பிரிந்தமாத்திரத்தில் தத்வத்ரய ஞானமாகும். அதினால் ஜீவத்திற்கு மோக்ஷம் சித்திக்கும். இப்படி எல்லாம் தசாவந்தன் தான் அநேகவிதமாக ஹிதோபதேசமெல்லாம் போதிக்கும் சமயத்தில் நெய்தனை வடிகட்டுவதற்குச் சாதனமான வஸ்திரம் பூஜயமான நஜ்யத்தைவிட்டு அசாரமான செத்தைகளை கிரஹிப்பதுபோல் அரசன் மோக்ஷசாதனமான தசாவந்தனுடைய இதோவசனங்கள் அபேக்ஷிக்காமல் இவன் இராஜசாதனத்தை கௌரவிக்காமல் தன்னையெதிர்த்துப்பேசிய தப்பிதத்திற்காக அதிக கோபமுண்டாகி கிங்கரரை அழைத்து அடாகாவலரே! இவன் ஏதும் எண்ணிடாமல், என் எதிரில் நின்று என்னை அவமானிக்கும்பொருட்டு பேசியதால் இந்த துஷ்டனைக் கொண்டுபோய் ஒரு பெரிய பாராங்கல்லுடன் சேர்த்துக்கட்டி சமுத்திரத்தில் கொண்டுபோய்ப் போட்டுவிடுவீரென்று ஆஞ்ஞாபித்தார். இம்மொழிகேட்ட அரசன் காவலர் அரசனுடைய முத்திரை பெற்றுக்கொண்டு அரசன் சொன்னதுபோலவே நடத்தினர். அக்காலத்தில் வியாஜபந்துவாயும் தீனபந்துவாயும் ஆபத்பாந்தவனும் சரணாகதிபந்துவாயும் பீமநதிதீரத்தில் சன்னதியாயிருக்கும் ஸ்ரீ புண்டரீகவரதன் அதிவேகமாய் வந்து தேவதருடைய வேண்டுகோள்படி சமமாய்ச்செய்து கூர்மரூபம் எடுத்ததுபோல் இச்சமயம் கூர்மரூபம் எடுத்து தசாவந்தனை சமுத்திரத்தில் முழுகாதபடி தன்னுடைய முதுகின்மீது தாங்கிக்கொண்டு சமுத்திரத்தில் அதேயமாய் திரிந்துக்கொண்டிருந்தார். இந்த அற்புதத்தைக்கண்டு அரசன் சேவகர் அதிவேகமாய் ஓடிவந்து அரசனுக்கு இந்த சவிஸ்தாரமெல்லாம் தெரிவித்தார். இப்படி தெரிவித்தபடியால் அரசன் ஆச்சரியமடைந்து அப்போதே சமுத்திரதீரத்திற்கு வந்து தசாவந்தருடைய உன்னதத்தைப் பார்த்து ஓ! தசாவந்தா! நீ எப்படி சமுத்திரத்தில் முழுகாமல் தெப்பை ஆடிக்கொண்டிருக்கின்றாய்? என்று கேட்டார். இம்மொழிகேட்ட மாத்திரத்தில் தசாவந்தன் அந்த வேந்தனைப்பார்த்து ஓ இராஜோத்தமா! அந்த பிரமாண்டம் எவனுடைய சங்கல்பத்தால் சிருஷ்டிக்கப்பட்டு எவனுடைய திவ்ய சக்தியால் தரிக்கப்பட்டிருக்கின்றதோ அதுவுமில்லாமல் இந்த மகாசமுத்திரம் எவருடைய ஆஞ்ஞைக்குப் பயமடைந்து இந்த பூமியை அக்கிரமிக்காமல் தன்னிலையில் நின்றிருக்கின்றதோ அதுவுமல்லாமல் சூரிய சந்திராதிகளும் எவருடைய ஆஞ்ஞையால் அனவரதமும் காலசக்கரத்திற்குட்பட்டு சஞ்சரித்திருக்கின்றார்கள். இதுநிற்க, எவருடைய அனுபிரவேசத்தால் பிரமாதிகள் தங்களுடைய காரியத்தை நிர்வகிக்கும் சக்தியோடு கூடியிருக்கின்றா. இதுவுமன்றி சமஸ்த ஜீவராசிகளும் பொம்மைபோல் சூத்

திரதாரி சூத்திரத்திற்கு உட்பட்டு கர்மானுகுணத்தோடு ஆடிக்கொண்டிருக்கிறதோ, எவனுடைய அனுப்பிரவேச மில்லாதகாலத்தில் ஒன்றுஞ்செய்ய நேராதபடி நிர்மலமாயிருப்பானோ? இதுவல்லாமல் எவன் அன்னரூபமாய் பிரமாவுக்கு வேதமென்ற பரமாக்ஷூவைக் கொடுத்தார்? சிருஷ்டி திதி சம்மாரம் எவனுக்குக் கிட்டவாயிருக்குமோ? இதுவுமல்லாமல் அனந்தகோடிபிரமாண்டம் என்னுடைய நிலையில் கிராடாகர்ந்தகமாயிருக்கும்? இதுவுமல்லாமல் பிரமாதிகள் எவனுக்கு விஸ்வரூபத்திற்கு சீடகமாயிருப்பாரோ? எவன் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் தனக்கு வேறொரு ஆதாரமில்லாமலிருக்கின்றானோ? நீயும் நானும் சமஸ்த பூதஜாலங்களும் எவனுடைய ஸ்வரூபமாய் இருக்கின்றதோ? ஆஸ்ரித ரக்ஷாதிக்ஷிதராய் சகல மனுஜயன விஷயபூதமாய் இந்த பீமாநதிதீரத்தில் புண்டரீகர் அனுக்கிரஹ வியாஜ்யத்தால் செங்கல்மீது நின்றுகொண்டு கடிக அஸ்தனுய் சேதனங்களையாபி முக்கியத்தை நிரீக்ஷித்துக்கொண்டும், நவகர பிரதீகனுய் இருக்கப்பட்ட ஸ்ரீமத் பண்டரிநாதன் என்னை இந்த ஜலத்தில் முழுகாதபடி கூர்மரூபம் தரித்து தன்னுடைய முதுகின்மீது தாங்கிக்கொண்டிருக்கின்றார். இது என்ன விந்தை என்றால் சமுசாரத்தில் மூழ்கி இருப்பவர்கள் எல்லோரையும் ஆதரிப்பதற்கும் தீக்ஷிதராயிருப்பவர்க்கும் இதுவல்லாமல் ஒருதாசனை ரக்ஷிப்பது அதிசயமல்ல. தன்மீது அபிமானித்தவர்க்கு ஆத்மபாரத்தைத் தானே வஹிப்பான் என்பதற்கு திருஷ்டாந்தமாய் என்னை தன்முதுகின்மீது வஹித்து, உங்களுக்கு எல்லோருக்கும் காட்டுகின்றார். ஓ நேசரே! இனியாகிலும் விவேகத்தை அறிந்துகொண்டு இந்தசரீரம் நிச்சயமில்லையென்று சரீரானுபந்துகளை மமகார யோக்கியமான பதார்த்தங்கள் மோக்ஷ விரோதிகளென்றும் நிச்சயித்து வைராக்கிய யுக்தராய் இந்த நாதனுகிய ஸ்ரீ பண்டரிநாதனுடைய சரணாரவிந்தங்களை உங்கள் ஆத்மபாரத்தில் நிறுத்தி நிர்ப்பயனுய் மிக்க களேபாரத்தை பகவத்விஷயத்தில் வினியோகித்துக்கொண்டு இடைவிடாமல் அவருடைய நாமோச்சாரணத்தை செய்தும், இரவும்பகலும் தியானித்துக்கொண்டும் இந்தமாயாரஹிதமான கர்மத்தை மறந்து நல்ல மனதுடனே தியானிப்பீராகில், அந்த பக்தவச்சலன் உங்கள் யோகக்ஷேமத்தைத் தானே வஹித்து, உங்களுக்கு தன்னுடைய சாயுஜ்யத்தைக் கொடுப்பாரென்று சொன்ன தசாவந்தனுடைய ஞானபோதங்களை எல்லாம் ஞானமென்று அங்கிருந்துகேட்டுக்கொண்டிருந்தவரெல்லாம் இரும்பு தங்கமானதுபோல அத்தக்ஷணமே அவரெல்லோரும் ஞானபக்தி வைராக்கிய சம்பன்னராய் அந்த தசாவந்தனரை ஆசாரிய பாவனைபோல் நினைந்து அவருடைய புருஷகாரிய பூர்வீகம் ஸ்ரீ பண்டரிநாதருடைய பாதபத்மத்தில் நஸ்தபரிசமானர். திவிசரிகளும் புவிசரிகளும் தசாவந்தருடைய ஞானத்தை மகா பிரபாவமென்று தியானித்து நின்றார்கள். இப்படியிருக்க அவ்வேந்தன் தன்னுடைய காவலரை அனுப்பி தசாவந்தரைக் கரைக்கு வரும்படி அநேகவிதமாக வேண்டிக்கொண்டு அழைக்க, பகவான் சங்கற்பத்தால் பந்தங்களெல்லாம் அவிழ்த்துவிட்டு தசாவந்தன் வெளியில் வந்தவுடனே அநேக பிரதக்ஷண நமஸ்காரம் செய்து தன்னுடைய யுக்தமாங்கத்தால் அவருடைய பாதபத்மத்தில் அலங்கரித்துச் சொல்லத் தொடங்கினர்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

கைதனி லேவெண் ணெய்வைத்துக் கொண்டு
நெய்க்கு அழுத பாவி
கற்பக விருக்ஷத்தின் அடியில் நின்றுயான்
கெஞ்சாவை தேடிய பாவி
இதமுடனே பேரின்பம் இதுவென்று இதுவென்று
இன்பமா யிச்சித்த பாவி
இயல்புடனே குருடன் ஆனையைக் கண்டதுபோல்
மெய்க்குருவை காணுப் பாவி
வேதப் பொருளை சாதனை செய்யாமல்
வீணுய்த் திரிந்த பாவி
வீரிய சர்க்கரை கற்கண்டு அமுதிருக்க
வீண்சிவப்பு கோரிய பாவி
நித்திய நிராமய நிஷ்கமல நிரஞ்சன
நிராலம்ப மான
நிர்விஷய வைபோக நித்திய கல்யாண
இரகுராம ராமா காவாய்.

விருத்தம்.

படமாட்டேன் இனிகஷ்டத்தைப் படமாட்டே னையா
விடமாட்டே னுன்பதத்தை விட்டினி பிரியமாட்டேன்
கெடமாட்டேன் பிறர்சொல்லை கேட்டியான் புவிதனிலே
நடமாட்டே னென்மனதை நாட்டினேனுன்பதத்தில் நன்
[பாகாவாய்.

ஓ மெய்யனே! அய்யனே! அன்பரைக்காக்கும் கையனே! எனது மூடமதியால் இப்படியெல்லாம் செய்யலானேன். இப்பாவி செய்த குற்றத்தை க்ஷமித்து என்னைக் காக்கவேண்டும் சுவாமி! என வேண்டியபடி அப்படி கோரிநிற்கும் சமயத்தில் தசாவந்தர் மனமகிழ்ந்து ஞானேபதேசத்தை உபதேசம் செய்துநிற்கும் சமயத்தில் அந்த வேந்தன் ஆனந்தக்கடலில் மூழ்கி குருபீடமாய் வசித்து அவரிருவரும் பரம வைஷ்ணவ சாயுஜ்யத்தை யடைந்தார். இப்படியாக நாபாஜிசித்தர் தமது சீடரெல்லோருக்கும் சொன்னவுடனே சூரியன் மேற்கு திசையில் மறைந்தார். இதையறிந்த எல்லோரும் எழுந்து அவரவர் மனைக்குச் சென்றார்கள்.

தசாவந்தர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ண பரப்ரம்மணேநம:

இருபதாவது

# மனமோஹனசுரதாசன் சரித்திரம்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

ஆதியிலே கடல்தன்னில் பள்ளி கொண்ட
ஆண்டவனே சதுர் வேதம் பூண்டவனே
ஜோதியாக முனை தன்னில் நிற்கும் தேவா
சுயம்பிரகாச வொளியான சுந்த ராங்கா
நீதியுடன் மாதுதனை மார்பில் வைத்த
நிர்மலனே நிர்வேத ஞான சூத்திரா
ஓதிநின்றேன் உன்நாமம் பிரணவ மென்று
ஓடிவந் தெனைக்காவாய் இராமச் சந்திரா.

சுலோகம்.

யதிகமனமதஸ்தரத்சாலபாசானுபந்தா· த்யதிசகுலவிஹீநேஜாயதேபக்ஷிசீடே
க்ரிமிசதமபிசத்வாஜாயதேசாம்தராத்மா மமபவதுஸ்ருதிஸ்தேகேசவேபக்திவேசா.

எப்படியென்றால் நாபாஜிசித்தர் உதயமான வுடனே எழுந்து நித்தியகடனை முடித்துக்கொண்டு கங்கைக்கரையடைந்து ஸ்நானம்செய்து நெற்றியில் திருமண்காப்பணிந்து துளசிமாலையைக்கண்டத்தில் தரித்து பட்டுபீதாம்பரம் இடையில்கட்டிக்கொண்டு அதிக பக்திவிநயத்துடனே பகவானெதிரில் வந்து ஒ ஆபத்பாந்தவா! அனுதரக்ஷகா! மாதவா! கேசவா! தாமோதரா! கோவிந்தா! நாராயணா! இனி என் ஜீவமானது காலபாச பந்தத்திற்கு உட்பட்டு ஹீனகுலத்தில் ஜனித்தபோதிலும், அல்லாமல் நீதியென்னும் ஞானமில்லாமல் ஜீவிக்கும் பசு பக்ஷிகள் ஜன்மமாகிலும் அடைந்தபோதிலும், புழுரூபம் தரித்தபோதிலும் என்மனதிலிருக்கின்ற உனது பக்தியை மறக்காதிருக்கும்படி அருள்செய்யவேண்டும். சுவாமி! என்று வந்தனம்செய்து நிற்கும்சமயத்தில் இந்த நாபாஜிசித்தர் சிடரெல்லாம் அனுதினமும் கும்பலாகவந்து சுவாமி! இன்றைக்கும் ஏதாகிலும் ஓர் சரித்திரம் சொல்லுவீரென்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசித்தர் சித்தமகிழ்ந்து சொல்லத் தொடங்கினர். அப்பா சிடர்களே! எனக்கு தெரிந்தமட்டுக்கும் மனமோஹனசுரதாசர் சரித்திரம் சொல்லுகிறேன் அதைக் கேட்பீரென்று சொல்லத் தொடங்கினர்.

அது எப்படியென்றால்; ஒரு கிராமத்தில் மனமோகனசுரதாசன் என்றொரு பக்தன் இருந்தான். இவர் இப்படியாக யிருக்கும்சமயத்தில் இவருக்கு வேலைவேண்டும்படி அஸ்தினாபுரியைப் பரிபாலனம் செய்யும் அக்பர்பாக்ஷா என்னும் துலுக்கபிரபுவான வரிடத்தில் அர்ஜிமூலமாய் தனக்கு வேலைவேண்டும் படி கடிதம் எழுதிக்கேட்டு அந்தப்பாக்ஷாவிடத்தில் அதிகாரியா யிருந்துவிட்டார். இப்படிக்கு இவரோ சாந்தனாய் தாந்தனாய் பரம வைராக்கிய நிதியாய்

சுலோகம்.

ஆத்மவத்ஸர்வபூதானி பரத்ரவ்யாநிலோஷ்டலத்
மாத்ருவத்பரதாநான்சய: பஸ்யதிஸபஸ்யதி.

என்னும் வாக்கியம்போல் ஈஸ்வரவிபூதியான சமஸ்த பூதங்களும் தன்னைப்போலவும், இதர திரவியங்கள் மண்ணைப்போலவும் இதர மாதரைத் தனது தாயைப்போலவும் பார்த்துக்கொண்டிருந்தும் பரபிரமானுபவ நிஷ்டனாயிருந்தான். இப்படியிருக்கும் சமயத்தில் அக்பர்பாக்ஷா இந்தப் பாகவதனுடைய விஷயத்தில் அதிக பிரியமடைந்து இவரை மதுரை கோகுல பிருந்தாவனத்திற்கு அதிகாரியாய் நேமித்து தன்னுடைய முத்திரைதந்து அனுப்பினர். ஆனால் க்ஷேத்திரம்,

சுலோகம்.

மதுராநாம நகரீ புண்யபாப அரிசுபாயஸ்யாம்
ஜாதோ ஜகன்நாதா ஸ்ஸாக்ஷாத்விஷ்ணுஸ்ஸ்நாத்மஃ

என்னும் மொழிபோல் சனுதனராய் ஜகன்னுதன் சாக்ஷாத் விஷ்ணு அவதரித்தபடியால் பாபகரமாய் புண்ணியவர்த்தசமமாயிருக்கும் க்ஷேத்திரமாயிருந்தது. ஆகையால் சாதுக்கள் இடைவிடாமல் அந்த க்ஷேத்திரத்திற்கு வந்துகொண்டிருந்தார். இப்படியிருக்கும்சமயத்தில் அந்த க்ஷேத்திரத்திற்கு அதிகாரியாய் அமைந்த மனமோகனசுரதாசன் இடைவிடாமல் பகவத்பக்தி செய்துக்கொண்டும் அங்குவசிக்கும் சாதுக்களுக்கும்தீனருக்கும் அன்ன வஸ்திரம் கொடுத்துக்கொண்டு இருந்தார். இதுவல்லாமல் இந்த பக்தர் தன்னுடைய மனதில் இப்படியென்று எண்ணமிட்டார். இந்த நாடானது அதிக பாவமானது. இந்தத் திரிலோகாதிகளினும் பல சக்கரவர்த்தியால் தோல்வியடைந்த இந்திரனே ரக்ஷிக்கும்பொருட்டு பகவான் அதிதி கர்ப்பத்தில் அவதரித்து இங்கு அநேககாலம் தவம்செய்தபடியால் சிரதாஸ்ரமமென்று பிரசித்தியடைந்து அதன்பிறகு ஸ்ரீராமர் ஆஞ்ஞையால் ஸ்ரீ சத்துருக்கன் மதுபுத்திரனை லவனுசுரனே சம்மரித்து மதுவனமென்று பிரசித்தியடைந்திருந்து இவ்விடத்திலும் மதுராபுரமாக நிர்மித்தார். இப்படியாக அநேகவருடம் இராஜ்யபாரம் செய்துக்கொண்டிருந்தார். பிறகு,

சுலோகம்.

ஏஷநாராயண ஸ்ரீமான் வீராரர்ணவ னிகேதனஃ
நாகபரியம் சமுத்ஸ்ருஜ்ய ஹயநதோ மதுராம்புரிம்.

என்னும் மொழிபோல் சாதுபரித்ராநாமதுஷ்ருதவிஞசு, தர்மசந் ஸ்தாபனம் செய்வதற்காய் க்ஷீராணவனிகேதனை ஸ்ரீமந் நாராயணன் நாகசேஷத்தின்மீது சயனித்துக்கொண்டிருந்த யோக நித்திரையைவிட்டு ஆதிசேஷனுடைய பலபத்திர நாமங்களோடு தனக்கு சர்ஜினியாய் முன்னிட்டுக்கொண்டு இராமாநுஜனுய்,

சுலோகம்.

ததோகில ஜகத்பத்ம யொதயாச்சுத பானுநா
தேவரீர் பூர்வஸம்த்யாயா மாவிர்பூதம் மஹாத்மநா.

என்னும் மொழிபோல் அகிலலோகமென்னும் தாமரைக்கு விகாசமுண்டானதுபற்றி தேவகி என்னும் பூர்வசந்தியத்தில் அச்சுதபானுவாய் அவதரித்தார். அந்தத் தேவதேவன் கோபால வேஷதாரியாய் கோவஸ்தங்களை மேய்த்துக்கொண்டு தன்னேடொத்த கோபால பாலரோடு சிரித்துக்கொண்டு சாக்ஷாத் மன்மதனை தன்னைக் கோரிய கோபிகளுக்கு இராசதாதிகளால் ஆனந்தத்தை அதிகரித்துக்கொண்டு அவரைத் தன் சித்தத்திற்கு இடைவிடாமல் எள்ளுமெண்ணெய்போலவே தன்னையே தியானிக்கும்பொருட்டு அவருக்கு பக்தி யோகநிஷ்டையை யுண்டாக்கி, பூதனு - சகடியமளா - அர்ச்சுனு - தேனுகா-ரிஷ்டகாளியகேசி - குவலாயபீட-காஞரசம்காதி துஷ்டரை நிரசனம்செய்து, யக்ரூர மாலாகாரோ-தவ-குசேல-சுருததேவ பஹுளா சுவாதிகளுக்கு தன்னுடைய திவ்யகுண சேஷங்களைச் சேவைதந்து பரமபாகவதராய் செய்து அர்ச்சுனனுக்குச் சாரதியாய் அவருக்கு யுத்தப்ரோஸ்வாஹத்தைக் கல்விக்கும்பொருட்டு,

சுலோகம்.

சர்வோப நிஷதோகாவோ
தோக்தா கோபாலநம்தநஃ
பார்தோவத ஸஸ்ஸுதீர்
போத்ததாதுக்தம் சிதாம்ருதம்மஹத்.

என்னும் மொழிபோல் சர்வோபநிஷத்துகளை கோலாகவும் அர்ச்சுனனைக் கன்றுகவும் செய்து கோபாலன் தான் சிதாம்ருதமென்னும் பாலைக்கறந்துசாதுக்களென்னும் போக்தருக்குக்கொடுத்தார். அப்படியானகாலத்தில் கோகுலத்தில் ஒரு சோவஸ்தமாயிருந்தால் அந்த மகானுபாவனுடைய காஸ்பஸ்ரத்தையடைந்து முக்தியை திருடிக்கொண்டிருப்பேன். அந்தப் புருஷோத்தமனுடைய கையிலிருக்கும் வேணுவாயிருந்தபோதிலும் அவருடைய வாகமம்ருதத்தை குடித்திருப்பேன். பிருந்தாவனத்தில் புல்லாய் முளைந்தால் அந்த நாதனந்தருடைய பாதாரவிந்த ஸ்வஸ்ரவத்தை யடைந்து முத்தியடைந்திருப்பேன். இதுவல்லாமல் கம்சனுடைய அந்தரங்க இராக்ஷதரில் ஒருவனுயிருந்தால் சேவகனைச்சேர்ந்து அட்டகாசம்செய்வதுபோல் பிரணவ ஜபபலத்தை ஸ்ரீதரனுடைய அஸ்ராலி முழுவதால் அசிரதிஸ்தானபலத்தையும் நாராயணன் நலுகமாய் விக்ஷிப்பதால் வெகுகாலமாய் சிந்தனுபலத்தை நந்தகபாணி நந்தலித்துத் தீட்டுவதால் அந்தமொழி கேட்ட பலிதம்போலவும் அதிகமச்சரித்தால் பத்மநாபசிமர் கொடுப்பதுபோல் தான் சந்தோஷித்து சாந்தியோடு தபம்செய்யும்பலத்தையடைந்து சபலமில்லாமல் பார்வையோடு எக்காலமும் சௌரிமுகத்தையே பார்த்துக்கொண்டு அதிசீக்கிரத்தில் தபோமசக்ரிடைசெய்து தன்யருக்காகிலும் முன்னதாக முத்தியடைந்திருப்பேன். ஆனல் யான் மந்த பாக்கியவானுகையால் நான் அப்படிப்பட்ட நோன்பை நோவாதவனுனேன். பாக்கியவசத்தால் இப்போ

தாகிலும் இங்கிருந்தபடி சாதுக்களைச் சேவையடையக்கண்டேன். எனக்கு இப்படிப்பட்ட பாக்கியம் அக்பர்பாக்ஷா அனுக்கிரஹித்து சித்திபடையச் செய்தார். ஆகையால் இந்தப்பிரபுவை எனது குரு பீடமாயெண்ணி பக்திசெய்கிறேனென்று தன் மனதில் சிந்தித்து அங்குவரும் சாதுக்கள் தீனரையும் சாக்ஷாத் பகவத்ஸ்வரூபமாய்ப் பாவித்துப் பய பக்தி விஸ்வாஸத்தோடு ஆராதித்துக் கொண்டு அன்னவஸ்திராதிகள் கொடுத்து அவரைத் திருப்தி காரம் செய்துக்கொண்டு தன்னுடைய ஆஸ்தியெல்லாம் வியர்த்தம் செய்துக்கொண்டு அதிகமான சோகமடையாமல் தன் ஸ்வாதீனத்திலிருந்த அரசனுடைய திரவியமானது எண்பதுலக்ஷம் வராகனை ததியாராதனைக்கு வினியோகித்தார். இதுபோல் வேந்தனுடைய திரவியமெல்லாம இப்படி செலவழிந்தபிறகு ஹானியுண்டாகுமென்று தனக்கு நேசனுவைர் தன்னோடு எவ்வளவு இதம்சொன்னபோதிலும் அந்த மொழிகளை அங்கீகரிக்காமல் அவரைப் பார்த்து, ஒ அன்பரே! இந்த வேந்தனுக்குத் திரவியமேது? ஆத்மித்மியங்கள் பகவானுடையதாயிருக்க நமக்கென்று ஒரு பதார்த்தம் இருக்கின்றதா? பகவானுக்கு சேஷமாகிய ஆத்மாதன்னில் ஸ்வதந்திரபுத்தியும் ததியமான பதார்த்தங்கள் தன்னில் மமதாபுத்தியும் பாபத்தில் அதிக பாபரென்னும் இதுவல்லாமல் சேதனசேதனரூபம் சர்வப் பிரபஞ்சம் பகவானுடைய சொத்தாயிருக்க, யான் செலவழித்த சொத்து பாக்ஷாவுக்குச் சொந்தமென்று யோசிக்காமல் சொல்லுகின்றீர். இராஜனுடைய திரவியம் அரசன் குமாரனுக்கு அனுபவ யோக்கியமாயிருப்பதுபோல் பகவத்திரவியம் பாகவதருக்கு அனுபவயோக்கியமா யிருக்கின்றது. இதுவல்லாமல் அரசனுடைய வீட்டில் ஒரு புத்திரன்பிறந்தால் எவ்வளவு சம்மதமோ அதுபோல் யான் செய்யும்படியான பாகவதாராதனம் பகவானுக்கு அதிக சந்தோஷமாயிருக்கும். என்று பயமில்லாமல் அந்த அரசன் திரவியமெல்லாம் சாது தீனஜன சத்காரர்களுக்கு வினியோகித்தார்.

இப்படியிருக்கும்சமயத்தில் அப்பொழுது பகவத் பாகவத விஷயத்தில் நிர்நிபந்தத்தில் சமானமான துஷ்ட மனதுடைய ஒருவன் அஸ்தினபுரத்திற்குச்சென்று இந்த சவிஸ்தாரமெல்லாம் அரசனுக்கு அறிக்கைசெய்தான். இவைகளையெல்லாம் அக்பர்பாக்ஷா கேட்டமாத்திரத்தில் அதிககோபமடைந்து, மனமோகனசுரதாசனைப்பிடித்து இருகரத்தை கட்டி என்முன் கொண்டுவருவீர்? என்று திட்டஞ் செய்து அரக்கரை அனுப்பினன். இம்மொழியைக் கேட்ட அரக்கர் மதுரைக்குவந்து மனமோகனசுரதாசரைப்பார்த்து, நீ எமது எஜமானனுக்கு எழுபதுலக்ஷம்வராகன் கொடுக்கவேண்டுமாம். அந்தப் பணம் கொடுக்காவிட்டால் உம்மைக் கைதிசெய்து அழைத்துவரும்படி எமது ராஜர் திட்டம்செய்து இருக்கின்றார். என்று சொன்னவுடனே இப்பக்தன் ஐயோ! இதற்கு யான் என்னசெய்குவேன்? என்று சற்று துக்கமடைந்தபிறகு பயமில்லாமல் ஓதூதரே! யான் அரசனுடைய திரவியம் அபகரிக்கவில்லை. அந்தத் திரவியத்திற்கு அமூல்யமாக இரத்தினங்கள் வாங்கி பத்திரப்படுத்தி யிருக்கின்றேன் என்று சொல்லித் தனது வீட்டிற்குள்சென்று இரண்டு பெட்டிதனிலும் செங்கல்லை நிறைய நிரப்பிவிட்டு அதன்பிறகு ஒரு கடிதம் எடுத்து யான் அரசன்திரவியத்தைச் சாதுக்களுக்கு வினியோகித்தேன். இதனால் பகவான் சந்தோஷமடைவார். இதுவல்லாமல் இந்தத் திரவியத்தில் மமத புத்தியடைந்திருக்கும் நீயும், இந்தத் திரவியத்தைச் செலவுசெய்வாயாகில் நான் தன்யனுவேன். ஒ இராஜேந்திரா! இதுபற்றி கோபிக்காமல் சந்தோஷமடைவாய். இப்படி செய்வாயாகில் பரமபதமடைந்து அங்கு உனது திரவியம் வட்டிக்குவட்டியடைந்து சந்தோஷமடையலாமென்று அந்தக் கடிதத்தில் எழுதி அந்தக் கல்லுடன் அந்தப் பெட்டியில்வைத்து, சேவகரை வீட்டிற்குள் அழைத்துக்கொண்டுபோய் இதோ பார்த்தீரா? இரத்தினத்தால் நிரப்பியிருக்கும்பெட்டியைப் பார்த்தீரா? என்றுகாட்டினர். அவர்கள் சந்தோஷமடைந்து அந்தப் பரமசாதுவைப்பார்த்து, ஆ! ஆ!! நீ மகா புத்திசாலி. ஆகையால் நமது பாக்ஷாவுக்கு பாபகரமாய் திவ்வியமாகிய இரத்தினங்கள் சேகரித்தீர். இதைப் பார்த்தமாத்திரத்தில் வேந்தன் சந்தோஷமடைந்து உனக்கு அதிக வெகுமானம்செய்வாரென்று சொல்லிவிட்டு எல்லோரும் அங்குமே சயனித்துக்கொண்டார்கள். இப்படியிருக்கும் சமயத்தில்நடுஜாமத்தில் மனமோகனசுரதாசர் எழுந்து எல்லோரும் நித்திரை செய்வதுபார்த்து சந்தோஷமடைந்து இதுதான் நல்ல சமயமென்று சொல்லி எவர் கண்களுக்கும் தோன்றாதபடி தன்னுடைய வீட்டைவிட்டு தூரகமாரண்யத்திற்குச்சென்று பகவானைக் கீர்த்தியோடு தியான நிஷ்டையடைந்து இருந்துவிட்டார்.

இப்படியிருக்க, சூரியன் கிழக்குதிசையில் உதித்தபிறகு காவலர் எழுந்து அந்தப் பாகவதனை எங்குத்தேடியும் காணாதபடியால் பயமடைந்து அவர்

காட்டிய பெட்டியை எடுத்துக்கொண்டுபோய் இராஜன் சன்னதியில் வைத்தார். அதன்பிறகு அவருடைய சவிஸ்தாரமெல்லாம் தெரியச்சொன்னர். இதையெல்லாம் கேட்ட பாஷா அந்தரங்க வேலைக்காரராயும் இரத்தினப்பரீக்ஷை செய்பவராயும் தன்னுடன் அழைத்துக்கொண்டுவந்து பெட்டியைத் திறந்துபார்க்கும்சமயத்தில் அந்தப் பெட்டியில் நிரப்பியிருந்த கற்களெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா கிருபாகடாக்ஷத்தால் அமூல்யரத்தினமாய் நக்ஷத்திரங்கள்போல் பிரகாசித்துக்கொண்டிருந்தன. இது இப்படியிருக்க, அரசன் அந்தப் பெட்டியிலிருக்கப்பட்ட ரசீதை எடுத்து படித்துப்பார்க்கும் சமயத்தில் ஆச்சரியமடைந்து ஆ! ஆ!! மனமோகனசுரதாசன் நமக்குக் கட்டவேண்டிய எழுபதுலக்ஷம் வராகனுகிய திரவியமெல்லாம் இந்தப்பெட்டியில் நிரப்பியிருக்கும் ஓர் இரத்தினத்திற்குச் சமமாகாது. இப்படியிருக்க அந்த மகாத்துமா எழுதியனுப்பிய கடிதத்தில் தாத்பரியம் வேறுவிதமா யிருக்கின்றது என்று தன்னுள் சிந்தித்துத் தனது மந்திரிகளைப் பார்த்து, ஒ மந்திரிமாரே! இந்த ஆச்சரியத்தைப் பார்த்திரா? பாகவதோத்தமரான மனமோகனசுரதாசன் நமக்குக் கட்டவேண்டிய திரவியமெல்லாம் ததியாராதனைக்குச் செலவழித்தது நிச்சயமே. அரசனுடைய கோபத்திற்குப் பயமடைந்து இந்தப் பெட்டியில் செங்கற்களை நிரப்பி இந்த சீட்டை எழுதி இதில்வைத்து நமக்கு அனுப்பி சேவகருக்கு இந்தப் பெட்டியைக்காட்டி அவர்களுக்குச் சமாதானம் சொல்லிவிட்டு தான் காட்டிற்குச் சென்றுவிட்டார். ஆகையால் பகவானுடைய கடாக்ஷத்தால் இந்தகற்களெல்லாம் இரத்தினமாய்விட்டன. ஆகையால் இப்பொழுது அந்த மகாத்துமா எங்கிருந்தபோதிலும் தேடி கண்டுபிடித்து இப்பொழுதே யழைத்து வருவீரென்று சதுரங்க சைனியத்தை அனுப்பினர். இந்த சைனியம் ஆரண்யம் அடைந்து தேடிப்பிடித்து மனமோகனசுரதாசரைப் பார்த்து அஸ்தினபுரியில் நடந்த சவிஸ்தாரமெல்லாம் அவருக்குத் தெரியச்சொல்லி அவரையும் அழைத்துக் கொண்டுவந்து அரசன்முன்விட்டார் அந்த வேந்தன் இந்தப் பக்தனைக் கண்டமாத்திரத்தில் தன்னுடைய சிம்மாசனத்தைவிட்டு எழுந்துவந்து எதிர்கொண்டு இருகைகளால் ஆலிங்கனம் செய்துக் கொண்டு, ஐயனே! மெய்யனே! நீயோ பரமபாகவதன். உன்னைப்போன்ற சற்குணமுடையவர் இந்தப் புவனத்தில் கிடையாது. ஆகையால் நீ முன்போலவே தேசாதிபத்தியத்தை நிர்வகித்துக்கொண்டு இருப்பாயென்று சொன்னமாத்திரத்தில் அந்தப் பக்தசிரோமணி இதைக்கேட்டு ஐயா! இந்த இராஜ்யம் எனக்கேன்? சுலோகம்.

நாதநே: புருஷோத்தமே த்ரிஜகதா மேகாதி
பேசேதசா செவ்யேஸ் வஸ்ய பதஸ்யதா
தரிஸு॥ நாராயணே திஷ்டதி யம்கம
சித்புருஷ தமம் கதிபய க்ராமேசமல்
பார்த்ததம் சேவாயை ம்ருக யாமஹே
நரமஹு॥ மூகாவ ராகா வயம்.

நாதன் புருஷோத்தமன் இந்த மூன்றுலோகத்திற்கும் ஒரே நாயகன். மனதுடன் சேவிக்கத் தகுந்தவன். ஸ்வாஸ்ருகளுக்கும் பதவி தரப்பட்டவன். தேவனுயும் இராநின்ற ஸ்ரீமந் நாராயணனுனவன் இவரைவிட்டு கேவலமாகிய அஞ்ஞானத்தில் மூழ்கியிருக்கும் புருஷன் சில தேசங்களை ஆண்டு அற்பபலத்தைக் கொடுக்கப்படும் ஒரு மனிதனிடம் கொலுவமர்ந்து யான் மூர்க்கனுய் நீசனுயுமிருந்தேன். இதுவரைக்கும் யான் ஆண்டது போதும்! போதும்!! இனி புருஷோத்தமனுடைய சேவை செய்கின்றேன். இப்படியாகச் சொல்லப்பட்ட சாதுவினுடைய மொழியைக்கேட்டு, ஒ மகாத்மா! உனது கோரிக்கைபோல் நீ புருஷோத்தமனைச் சேவை செய்வாய். இதுவல்லாமல் என்னையும் உன்னைப்போல் செய்ய அபிமானிப்பாய். இதனுல்யான் தன்யனுவேன். முன் உனது அதிகாரத்திலிருந்த மதுரை கோகுல பிருந்தாவனத்திற்கு நீயே அரசனுய் அந்த தேசத்தில் வரும்படியான பணததையெல்லாம் உனது இஷ்டமானபடி சாதுஜனபோசனத்திற்கு விநியோகப்படுத்திக்கொள்வாய். இதுவல்லாமல் நீ அனுப்பின இரத்தினங்களை நீயே எடுத்துக்கொண்டு போவாயென்று பிரார்த்திக்க, இவையெல்லாம் கேட்ட மனமோகனசுரதாசன் அரசன் வேண்டுகோளின்படி இரத்தினங்களோடு இராஜ்யத்தை அங்கீகரித்து அந்த அரசனையும் இன்னும் இருக்கப்பட்டவரையும் பார்த்து சொல்லத் தொடங்கினர்.

சுலோகம்.

ஹேலோகா ஸ்ருணுதபரசூதி
மரணவ்யா தேக்சிகித்ஸாமிமாம்
யோகஞ்ஞாஸ ஸமுதாஹரம்தி
முனயோயாம யாஞ்ஞவல்க்யாதய:
அம்தர்ஜ்ஜோதி ரமேயமேகமூர்தம்
கிருஷ்ணக்ய மாபியதாம்
தத்பீதம் பரமௌஷதம்
மிதனுதேநிர்வாண மாத்யம்திகம்.

ஓ அன்பரே! ஜனன மரண வியாதிக்கு ஒரு சிகித்ஸை சொல்லுகிறேன் கேளுங்கள். அது எப்படியென்றால், ஞானம் செய்தவனுக்கு மோக்ஷம் லபிக்கும். இந்தமாயையாகிய காமக் குரோத லோப மத மாச்சரியம் என்னும் மாய்கைகளைக் கொய்தவனுக்குத்தான் ஞானம் அதிகரிக்கும். மோகபாசத்தில் அகப்பட்டவனுக்கு ஒருக்காலும் லபிக்காது என்று அநேக பெரியோர்களும் சொல்லியிருக்கின்றார். இதுவல்லாமல்,

கட்டளைக்கலித்துறை.

ஓடியலைந்துமிவ் வையகமுற்று முழன்றுழன்றுந்
தேடியெடுத்த திரவியம்யாவையுஞ் செத்தபின்பு
நாடியெடுப்பது முண்டோமறந்துநடக்கும்நெஞ்சே
வாடியிரந்துமறம்செய்வாய்குணம்குடிவாய்த்திடுமே

இதுபோல் நாம் எவ்வளவு சம்பாதித்தபோதிலும் அது நமதிடமிருப்பது நிச்சயமல்லவே. நாம் காலதூதரிடம் அகப்பட்டபின்பு அந்தச்சமயம் நமக்கு சொந்தமாகுமா? ஆகையால் அவைகளையெல்லாம் நாம் நல்ல சாதுஜன போஷிப்பிற்கு விநியோகித்தால் நமக்கு நல்ல மோக்ஷங்கிடைத்து சுகமடையலாம். இதுபோலவும் முன் செப்பிய அந்தச்சோதி ஸ்வரூபத்தையும் அப்பிரமேயமென்னும் முக்கியமான ஸ்ரீகிருஷ்ணனென்னும் பெயரடைந்த அமிர்தத்தை உங்கள் சுவாதீனப்படுத்துவீர். அந்தப்பரம ரகசியமாகிய ஔஷதந்தான் அதிக சௌக்கியத்தை உண்டாக்குவதற்குத் தகுந்த மருந்து. ஏன் இப்படியெல்லாம்அனேகவிதமாகஉபதேசித்துப் பகவானை ஸ்துதித்துக்கொண்டு ஸ்ரீமதுராபுரியடைந்து பூஜ்ஜியமான இராஜ்யத்தை நிர்வஹித்துக்கொண்டு முன்போலவே பாகவதரையும் தீனரையும் ஆராதித்துக் கொண்டிருந்தார். இதுவல்லாமல் எக்காலமும் பகவத்விஷயத்தில் சாஹித்யங்கள் செய்துக்கொண்டும் சாதுக்களுடைய பாதரக்ஷங்களை வகித்து மனமோகனசுரதாசன்னும் சாஹித்யாந்தத்தில் தன்னுடைய நாமத்தைச் செலுத்திவந்தார். இதுபோலிருக்கும் சமயத்தில் சில சூயாகிரஸ்திகள் இதைச் சகிக்காமல் இவர் ஆத்மாஸ்துதி செய்துக்கொண்டிருக்கின்றாரென்று தூஷித்துக்கொண்டிருந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் ஒருநாள் மனமோகனசுரதாசன் தேவாலயத்திற்குப் போய்க்கொண்டிருக்கும் சமயத்தில் ஒருசாதுவந்து இவரைக்கண்டு ஓ பக்தனே! யான் ஆலயம்சென்று பகவானைச்சேவித்துவருகின்றேன். அதுவரைக்கும் இந்தப் பாதரக்ஷையைப் பாதுகாத்துத் தரவேண்டுமென்றுசொல்ல, அதற்கு மனமோகனசுரதாசன் சம்மதமடைந்தார். இவர் சாதுக்களுடையபாதரக்ஷை ஆதரிப்பவரென்று தான் வகித்த பிருதுக்கு அன்வருத்தமாய் தன்னுடைய பல்லக்கை சேவகரிடத்தில் தனது வீட்டிற்கு அனுப்பிவிட்டு, அந்தப்பாதரக்ஷையை அதிக ஆனந்தத்தோடு மார்பிலணைத்துக்கொண்டு கோபுர துவாரத்தில்நின்றுகொண்டு ஆலயத்துக்குள்சென்ற சாதுவின் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். இப்படி நிற்கும்சமயத்தில் அந்தச் சாது ஆலயத்திற்குச் சென்று பகவானைச் சேவையடைந்து அதிக நாழிகைச்சென்று வெளியில்வந்தார். அந்தச்சமயத்தில் மனமோகனசுரதாசன் பாதரக்ஷையை எடுத்துக் கொண்டுபோய் அந்த சாதுவின் எதிரில் வைத்தார். அப்போது அந்தச்சாது இந்த குணநிதியை ஆலிங்கனம் செய்துக்கொண்டு ஓ மகாத்துமா! நீ வகித்த பிருது உனக்கேதகும். உனக்குச் சமானமானவர் எவரும் கிடையாது. பகவத் பாகவதபக்தி உன் மூர்த்தியாயிருக்கின்றது. ஆனால் நீயே பகவானுக்கு அந்தரங்க பக்தனாயிருக்கின்றாயென்றும் இப்படியாக அனேகவிதமாய் ஸ்தோத்திரம் செய்துவிட்டு தன்னுடைய இருப்பிடம் சென்றார். அதின்பிறகு மனமோகனசுரதாசன் யாவதாயுஷ்யம் ததியாராதனபரனாயிருந்து ஸ்ரீமத் பாண்டுரங்கன் சாயுஜ்யமடைந்தாரென்று நாபாஜிசித்தர்சொல்ல இவைகளையெல்லாம் கேட்டிருந்த சீடர்கள் மகா வைபோகத்துடன் கேட்டு ஆனந்தக்கடலில் மூழ்கிநிற்கும் சமயத்தில் சூரியனும் மேற்குத்திசையை அடைந்தான். இதையறிந்து எல்லோரும் சபைவிட்டு அன்று அவரவர் இருப்பிடம் சென்றார்கள்.

மனமோஹனசுரதாசன் சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநம:

இருபத்தோருவது

# ரஸிகமுராரி சரித்திரம்.

விருத்தம்.

அலைகடல்மேல்பள்ளிகொண்ட பாண்டுரங்கதேவா
கலைஞானதத்துவத்திற்குப் பொருளாய்நிற்கும்மகானுபாவா
மலைதனையேசுமந்தன்று கோபிகளைக்காக்கமனம்வைத்தீரே
நிலையுடனேஉன்பாதம்துதித்துநின்றேன் நீலமேகாவெனைக்காக்கவாருமையா.

சுலோகம்.

மஜ்ஜன்மந: பலமிதம்மதுகைடபாரே
மத்ப்ரார்தநீயபதனுக்ரஹயேஷயேவ
த்வத்ப்ருத்யப்ருத்யபரிசாரகப்ருத்யப்ருத்ய
ப்ருத்யஸ்யப்ருத்யஇதிமாம்ஸ்மரலோகநாத.

இப்படியிருக்கும் சமயத்தில் சூரியபகவான் கிழக்குத்திசையில் உதித்தபிறகு நாபாஜிசித்தர் எழுந்து நித்தியகடனை முடித்துக்கொண்டு கங்கைக் கரைசேர்ந்து ஸ்நானம் செய்து நெற்றியில் திருமண்காப்பணிந்து துளசிமாலை கண்டத்தில் தரித்து பட்டு பீதாம்பரம் அரையில் கட்டிக்கொண்டு திவ்ய தாம்பாளத்தில் மல்லிகை முல்லை இருவாக்ஷி சண்பகம் மருவு மருக்கொழுந்து துளசி முதலாகிய திவ்ய புஷ்பங்கள் எடுத்துக்கொண்டு பகவான் எதிரில் சென்று, அவர் பாதாரவிந்தத்திற்கு அர்ச்சனை செய்து ஒ தேவாதிதேவா! சதுர்வேதப்பொருளே! சாயுஜ்யமளிக்கும் திவ்யப் பிரதாபமே! இனி எத்தனை ஜென்மங்கள் நான் எடுப்பேனோ? உன் சேவையை மறப்பேனோ? இந்த மாயாரஹிதத்தில் என்னை அகப்படாமல் எமன் என்னும் பெரும் பாசக்கயிறு என்னை அணுகாதபடிக்கும், உன்சேவைசெய்ய மறக்காதபடிக்கும் உனது ஞானத்தைத் தந்து பரிபூரண கடாக்ஷம் வைத்து என்னை ஆதரிக்கவேண்டும். இனி இப்பூவுலகில் வேறு எவரையும் நம்பி நிற்கவில்லையே! ஒ பரம்பொருளே! பாண்டுரங்கா! ஆபத்பாந்தவா! அனாதரக்ஷகா! கோபால கிருஷ்ணா! கோவிந்தா! தாமோதரா! நந்தகோபாலா! நவனீதசோரா! என அனேகவிதமாகத் தியானம்செய்து நிற்கும் சமயத்தில் நேற்றைய தினம் சரித்திரம் கேட்டுக்கொண்டிருந்த சீடர்கள் எல்லோரும் ஏகோபித்து வந்து அவர்களில் ஒருவர் இவர்களைப்பார்த்து ஒ நேசரே! நாம் இதுவரைக்கும் கேட்ட சரித்திரம்போல் நடப்பதற்கு நம்மால் ஏதுவும் கிடையாது. நாம் எத்தனை கேட்டபோதிலும் அதில் ஏதும் பயனில்லை. ஆகையால் நாம் காலமெல்லாம் நாம் எல்லோரும் அவரிடம்சென்று இன்னும் ஏதாகிலும் சரித்திரம் கேட்டு அதைப்பற்றியாகிலும் நாம் கடைத்தேறலாமென்று சொன்ன மாத்திரத்தில், இவர்கள் எல்லோரும் சம்மதமடைந்து நாபாஜிசித்தரிடம் செல்வதற்கு எழுந்து நடந்தார்கள்.

இப்படியாக இவர்கள் எல்லோரும் குரு பீடமாகிய நாபாஜிசித்தரிடம் வந்து, அநேகவந்தனம் செய்து சுவாமி! நாங்கள் கடைத்தேறும்படியான மார்க்கம் ஏதாகிலும் காட்டி ஆண்டருள்வீர் என்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசித்தர் இவர்களைப் பார்த்து ஒ சீடரே! நம்மால் ஆவது ஏதுமில்லை. நம்மைப் பிறப்பித்த பகவான் அருளிருந்தால் போதுமானது. ஆனாலும் யான் இன்னமொரு சின்ன சரித்திரமாகிய ரசிகமுராரி சரித்திரம் சொல்லுகிறேன். அதை உன்னதமாய்க்கேட்டு அதைப் போலாகிலும் நடந்தால் குணமென்று சொன்ன மாத்திரத்தில் சீடரெல்லாம் அதைக் கேட்கும்பொ

ருட்டு சம்மதமடைந்திருந்தார்கள். இதைக்கண்ட நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

அது எப்படியென்றால், ரசிகமுராரி யென்னும் மகாபுண்யவான் எக்காலமும் பகவத்பக்த ஆராதனைசெய்தும்,

சுலோகம்.

ஏதத்ஸ்மஸ்தபாபாநாம்
ப்ராயஸ்சித்தம் மனிஷிபிஃ
நிர்ணிதம் பகவத்பக்த
பாதோதகநிஷேவனம்.

எப்படியென்றால், பகவத் பக்திவான்கள் ஸ்ரீபாததீர்த்த ஸ்வீகாரம் செய்துக்கொண்டு வந்தால் சகல பாவத்திற்கும் பிராயச்சித்தமென்று புத்திமான்களால் சொல்லப்பட்டு இருக்கின்றதென்று இந்த வாக்கியத்தில் மகா விஸ்வாசம் உண்டானவனாய் தினந்தோறும் பாகவதருடைய ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகரித்துக்கொண்டு இடைவிடாமல் பகவன்நும சங்கீர்த்தனம் செய்துக்கொண்டும் லோகத்தாருக்கு இதோபதேசம் செய்துக்கொண்டும், காலம் கழித்துக்கொண்டிருந்தார். ஆனால் இவருக்கு இந்த நிஷ்டை பரமானந்தமாயிருந்தது. இப்படியிருக்குஞ்சமயத்தில் ஒருநாள் பாகவதருடைய சன்னிதிக்குச்செல்வதற்குச்சரியான தினமில்லாமல் அசந்தர்ப்பம் சித்தித்தபடியால் தனக்கு அத்தியந்த அந்தரங்கமான ஒருசீடன் இருக்க அவனைப்பார்த்து, அப்பா! நீசென்று பாகவத ஸ்ரீபாததீர்த்தம் கொண்டு வருவாயென்று நியமிக்க, அதுபோல் சீடன்சென்று தீர்த்தம் கொண்டுவந்தான். அதை ஸ்வீகரித்து ஓ பாலகா! இன்றையதினம் நீ கொண்டுவந்த தீர்த்தத்தில் இத்தனை தினம்போல மாதுர்யமில்லாமல் இருக்கின்றது. இதற்குக் காரணமென்ன? என்று கேட்டமாத்திரத்தில் மறுபடியும் யோசித்து ஓ சிடனே! நீ பிரதிதினம் யான் ஸ்ரீபாததீர்த்தத்துக்காக பாகவதருடைய சன்னதிக்குப் போகும்சமயத்தில் என்னைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்தாயல்லவா? ஆகையால் நீ அதிக புத்திவானென்று எண்ணி சந்தர்ப்பகாலத்தில் ஸ்ரீபாததீர்த்தம் சேர்ப்பதற்கு உன்னை அனுப்பினேன். தவிர யான் இதுவரைக்கும் தீர்த்தம் அங்கிகரிக்கப்பட்ட கிரமத்தை உனக்கு உபதேசம் செய்தவனுமல்ல. இதுவல்லாமல் நீயும் என்னைக்கேட்டு தெரிந்துக்கொள்ளாமல் போய்விட்டாய். இப்படிப்பட்ட மந்தமதியென்று தெரிந்துக்கொள்ளாமல் இந்தக் காரியத்திற்கு அனுப்பியதால் ஏதோ பிரமாதம் சம்பவிக்கும். அந்தத் தீர்த்த அங்கிகாரக்கிரமம். இப்பொழுது உனக்கு உபதேசிக்கின்றேன். நீ அதைக் கவனமாய்க் கேட்டுக்கொள்ளுவாய். அது எப்படியென்றால், (மத்பக்தஜன வாத்ஸல்யம் பூஜாயாம் சானுமோதநம்ஸ்வ யமப்யர்சநம்தைவமதர்தேதம் பவர்ஜனம்மத்கதா ஸ்ரவனே பக்தி ஸ்வரநேத்ராங்கவிக்கிரியாமமானுஸ் மரணம் நித்யம் யச்சமாம்நோபஜிவதி பக்திரஷ்டவிதாஹயேஷாய ஸ்டின்ம்லேச்சேபிவர்த்ததேச விப்ரேம்த்ரோமுனி ஸ்ரீமான்சயதிஸ்ஷசபம்டிதஃ தஸம்தை தேயம்தகோக்ராஹ்யம் ஸசபூஸ்யோயதாஹ்யஹம்) எப்படியென்றால் பகவத் பக்திமான்கள்மீது வாஸ்சஸ்யத்தோடு சேர்ந்திருக்கவேண்டும். ஆனால் பகவத் பக்திமான்கள் (யஸ்ஸாத்திரவிதிமுத்ஸ்ருஜ்யவர்தேகாமகாரதஃ நச்சித்திமவாப்நோதிநசுகம்நபராம்கதிம் தஸ்மாச்சாஸ்திரம் பிரமாணம்தேகார்யாகார்யவ்ய வஸ்திதௌ ஞாத்வாசாஸ்திரவிதாநோக்தம் கர்மகர்துமிஹார்ஹஸி) எப்படியென்றால் எவன் ஒருவன் சாஸ்திரவிதிஅநுசரிக்காமல் தனதுஇச்சையாய்ப் பிரசித்தி அடைகின்றனே அப்படிப்பட்டவனுக்கு சித்தியும் சுகமும் பரலோகப்பிராப்தியும் கிடையாது. ஆகையால் சாஸ்திரத்தைப் பிரமாணமென்று நம்பி சாஸ்திரவிஹிதங்களை சாஸ்திர சத்திகளையும்அறிந்துக்கொண்டு சாஸ்திரோக்தவிதிப்படி செய்துக்கொண்டிருப்பவனும், பகவத் ஆஞ்ஞைக்குக் கட்டுப்பட்டு அதிக சாக்கிரதையாய்த் திரிந்துகொண்டிருப்பவர். அப்படிப்பட்ட பாகவதரிடத்தில் தோஷம் உண்டாயிருந்தபோதிலும் சாவகாசமில்லை. ஆகையால் பாஞ்சபவுத்திக சரீரசம்பந்தத்தால் பிரமானிசமாய் கொஞ்சம் தோஷம் சம்பவித்தபோதிலும், புத்திவான் அதைப் பாராட்டாமல் பசுவானது தன்னுடைய கன்று சரீரத்தில் கல்மிஷத்தைப் போக்கியதென்று அங்கீகரிப்பதுபோல் பாகவதர் தன்னில் பிரகிருதி வஸ்யத்தால் உண்டாகும் பிரமாதிகதோஷங்களைப் போக்கியமாக செய்துக்கொள்ளவேண்டும். அப்படி செய்துக்கொள்வதுதான் முதற்பக்தி என்று சொல்லுவார்.

இதுவல்லாமல் இதர மனிதர் பகவத்பாகவத விஷயத்தில் செய்யும்படியான பூஜைகளைக்கண்டு அசூயையடையாமல் சந்தோஷிப்பதுதான் இரண்டாவது பக்தியென்று சொல்லுவார். (விசித்ராய தேஹசம்பத்தி ரீஸ்வராயநிவேதிதம்) என்பதுபோல் பகவத்விஷயத்தில் விநியோகிப்பதற்காக நமக்குப் பகவான் அனுக்கிரஹித்திருக்கும் கரணகளேபரங்களை இந்திரிய கைங்கரியத்திற்கு வினியோகிக்காமல்இரவும் பகலும் கரணகளேபரங்களிப்

பகவானுக்கு ஆராதித்துக்கொண்டிருக்கவேண்டும். இதுபோல் ஆராதித்துக் கொண்டிருப்பதே மூன்று வதுபக்தி என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இதுவல்லாமல் இன்னம் கேட்பாய். பகவத் கைங்கிரியம் செய்யப்பட்டவன் பகவத் ஸ்முகோ ஸாலமே பிரயோஜனமென்றும, தனக்கு ஸ்வரு போசிதமென்றும் பகவத்கைங்கிரியம் செய்யவே ண்டுமேயல்லது டம்பமாய் செய்யக்கூடாது. (தர்ம க்ஷபதி கீர்தநாத்) எப்படியென்றுல் தான் தர்மகாரி யத்தைச்செய்து தானே சொல்லிக்கொண்டால் தன் ஞல் செய்யும்படியானசத்காரியங்கள் பஸ்மாஹுதி போல் வியர்த்தமாகும். ஆகையால் புத்திவான் டம்பவர்ஜ்ஜிதனுய் இருக்கவேண்டும். (ஆத்மப்ரசம் சாடரணம்) இதுபோல் தன்னைத்தானே போக்கடித் துக்கொண்டால் ஆத்மஹிர்தயத்திற்குச் சத்ருசமா கும். இங்கு யயாதி விர்த்தாந்தங்களை கர்னனுடைய காண்டீபத்தைத் தூஷித்த தர்மபுத்திரனை நிந்தித்து அதற்குப் பிராயச்சித்தமாக ஆத்மஹஸ்யம் செய் துக்கொள்வதிற் சிறந்த அதற்கு மாறுபாடாய் ஸ்ரீகிருஷ்ணனுமதிபோல் ஆத்ம பிரபஞ்சம் செய் துக்கொண்ட அர்ச்சுனனுடைய சவிஸ்தாரத்தை ஸ்மரிக்கவேண்டும். அப்படி தன்னையே புகழ்ந்துக் கொள்வது நான்காவது பக்தியென்று சொல்லியிரு க்கின்றது.

இதுவல்லாமல் எக்காலமும் பகவத் கதாஸ்ரவ ணத்தில் பக்தியோடு சேர்ந்திருக்கவேண்டும். இந்தி ரியங்கள் எவ்வளவு விஷயானுபவம் செய்தபோதி லும் பிராப்தியில்லாமல் அப்போதப்போது அந்த அனுபவம் அவனுக்கு நவீனமாய்த்தோற்றும். பக வத்சிந்தனுக்கு பகவத்கதைகள் அப்போதப்போது நவீனமாய் இருக்கவேண்டும. அப்படி கேட்கக் கேட்க விஷ்ணுகதைகள் புதிதாயிருக்கும். அந்த ரங்கபக்தி பகவானுடைய திவ்யசரித்திரங்கள் கே ட்டும் தத்கல்யாணகுணங்கள் அந்தவகாஹித்தவனு க்கு சத்ரதகண்டமும் ஆனந்தபாஷ்பங்களுடன் சந் தோஷகரமும் உண்டாகியிருக்கவேண்டும். அது எப்படியென்றுல், நெல்லைக் குற்றுபவனுக்குத் தான் கோராதபடி தன்னுடைய தேகத்தில் வேர்வை உண்டாவதுபோல் பகவத் குணனுபவ நிஷ்டனு க்கு மேற்சொல்லிய விகாரங்கள் உண்டாயிருக்கும் அப்படி சரீரம் ஆனந்தமடைந்திருப்பது தேகபக்தி யென்று சொல்லுவார்.

இதுவல்லாமல் எப்பொழுதும் பகவானை ஸ்ம ரித்துக் கொண்டிருக்கவேண்டும். இந்த ஸ்மரணை தைலதாரணையைப்போல்நவச்சின்னமாய்போக்கிய மாய் இருக்கவேண்டும். மனது நிமிஷமாகினும் சும் மாவிருக்காது. அப்படிப்பட்ட மனதால் பகவானை ஸ்மரிக்காமலிருந்தால் அப்படிப்பட்ட காலத்தில் அந்த மனமானது பகவானைவிட இதரவிஷயங்களை ஸ்மரிக்கும் (சஞ்சலம்ஹிமஃ கிருஷ்டணுப்ரமாதி பலவத்த்ருடம தஸ்யஹாம நிச்சஹம்மன் யேவா யோகிவசுதுஷ்கரம்) ஓ கிருஷ்ணு! மனம் சஞ்சல மாய் க்ஷோடவைப்பதாய் நிர்விக்கும்படியாய் துரு டமாயிருக்கின்றது. இப்படிப்பட்ட மனதை ஐக்கி யம் செய்வதற்கு வாயுவை ஸ்தம்பனம் செய்வது போல் துஷ்கரமென்று எண்ணுகின்றேன். என்று சொல்ல, அர்ச்சுனன் சோகமடைந்தார். ஆகையால் அதிசஞ்சலமான மனதை துர்விஷயத்தில் செலுத் தாமல் புத்திவான் இடைவிடாமல் மனதால் பக வானை ஸ்மரித்துக்கொண்டிருக்க வேண்டியது. இப் படி சலிக்காத மனதால் எக்காலமும் ஸ்மரிப்ப தால் இதை ஏழாவதுபக்தி என்று சொல்லப்படும்.

பகவானை நசஞ்சலபக்தியோடு நிராதிப்பவன் நிஷ்காமியாய் பகவத்தாராதனை செய்யவேண்டியது. அப்படிச்செய்யாமல் தன்னுடைய பக்திக்குப் பல மாக ஒரு பதார்த்தத்தைக் கோரமுடியாது. பதிவிர தையான ஒரு ஸ்திரீ தனக்கு பரமபிராப்யமென்று பர்த்ருசுத்ருஷஞ் செய்யவேண்டியது. புருடன் தன்னுடைய பத்தினியை ரக்ஷிப்பது தனக்குத் தர் மமென்று எண்ணவேண்டும். அப்படிச் செய்யாமல் ஸ்வதேஹரக்ஷணத்திற்குப் பர்த்தாவுக்கு நிஜசரீரத் தை விநியோகிக்கிறேனென்று எண்ணமிடுவது பத் தினிக்கு ஸ்வரூபஆனிகரம். இப்படி யெண்ணமிடும் ஸ்திரீ தன் புருஷன் தன்னுடைய ரக்ஷணத்திற்குச் சக்தியில்லாத காலத்தில் அவனைவிட்டு தன்னை ரக்ஷி க்கும்பொருட்டு மற்றொரு புருடனைச் சேரவேண் டிய காரணம் வரும். புருடனுனவன் தன்னுடைய பத்தினியை நிஜசரீரம் தனக்கு இஷ்டவினிகார்ஹம் செய்திருப்பதால் அந்த ஸ்திரீயை ரக்ஷிக்க வேண்டு மென்று எண்ணமிடுவது புருடனுக்கு ஸ்வரூபஆனி கரம். அந்த ஸ்திரீ ரோகார்த்தமாய் தன்னுடைய காமபோக இச்சைக்கு வினியோகப்படாத காலத் தில் அக்கினி சாக்ஷியாய் தன்னல் அங்கீகரிக்கப் பட்ட அந்த ஸ்திரீயை ரக்ஷிக்காமல் உபேக்ஷிக்கா மல் செய்யவரும். இந்தவிதமாய் அன்யபிரஜனனுய் பகவானை அர்ச்சிப்பது சேஷபூதனுக்குத் தாசவர்க் கத்தால் ஒரு கிஞ்சித்துகாரம் சேராமல் அவரை ரக்ஷிப்பதற்கு சேஷனுக்கு பிரமதர்மமாய் இருக் கும். இதனல் பகவத்சேதபூதனுக்கு பிரயோசன மாம். தாராபேக்ஷ மிகுதி தியாஜ்யமென்று சொல்

லப்பட்டிருக்கின்றது. அப்படித் தான் செய்யும் கைங்கரியத்திற்கு பல அபேக்ஷை தனக்கு யுக்தியாய் இல்லாமலிருப்பது எட்டாவதுபக்தி என்று சொல்லப்படும்.

இந்த அஷ்டவிதபக்திகள் நிறைந்திருப்பவன் தான் விப்ரனுவான். வேதபாடத்தால் விப்ரனுவது மரியாதையாய் இருந்தாலும், சகல வேதசாரமான அஷ்டவிதபக்திகள் இவன் ஆதீனமாய் இருப்பதால் இவன் விப்ரனுயிருக்கின்றான். இவனேமுனி இந்திரியங்களை ஜெயித்து தன்னுடைய மனதை பகவானுக்கு ஜங்கம ஸ்ரீவிமானமாகச்செய்து, அதில் பகவானை சுப்ரஷ்டனுகச்செய்து, இடைவிடாமல் தியானித்துக்கொண்டிருப்பவன்தான் முனியாயிருக்கின்றான். இவனே ஸ்ரீமந்தன். ஒரு புருஷனுல் நிர்மிக்கப்பட்ட கிருஹத்தில் எலிகள் துவாரங்கள் செய்துக்கொண்டு தான் சமுசாரம் செய்வதுபோல் அநேக பதார்த்தங்கள் தத்வாதீனம் செய்துக்கொண்டு, அது தன்னுடையதென்று எண்ணியிருப்பது போல் குருபியான கிரகஸ்தர்போல் (மாதாச்சகமலாதேவி பிதாதேவோஜநார்த்தனு: பந்துவே விஷ்ணுபகத்தாச்சஸ்வதேசம்புவனத்திரயம்) என்பது போல் அகில ஜகன்னுதமாகிய ஸ்ரீமகாலட்சுமி தனக்குத் தாயென்றும், அகிலபுவன ஸ்ருஷ்டி திதி சம்மார கர்த்தாவாகிய ஜனர்த்தனன் தனக்குத் தகப்பனென்றும், இடைவிடாமல் ஈஸ்வரவியாப்தி அனுசரித்துக்கொண்டு நத்வேஷயுக்தியாய் இருக்கும் ஸ்ரீவிஷ்ணுபக்தர்கள் தனக்கு பந்துக்களாகவும் அந்தப் பகவானுடைய ஐஸ்வரியமான ஜகத்திரயம் தனதென்றும் அதில் வசிப்பதால் ஸ்ரீமந்தனுகின்றான். இவனேபதி. பகவத்சிங்காரனை தனக்கு இந்திரிய கைங்கிரியம் ஸ்வரூப ஆனியென்றும், நரகவேதுவென்றும், பகவத்தனுபவ விரோதியென்றும், அரன்யபோக்யத்வ ஸ்வரூபத்திற்கு விடிஸ்பர்சம்போல் ஒத்தது என்றும் அதை அர்ச்சிப்பதால் அனவரத பகவத்நிஷ்டனுய் இருப்பதால் யதியாகின்றான். இவனே பண்டிதன். சகலசாஸ்திர சாரமான மந்திரார்த்த தேவதைகளும் தத்தத்ரயயாதார்ஜ ஞானத்தையும் இவனுக்கு கரஸ்தலமாய் இருப்பதால் பண்டிதனுகின்றான். இப்படிப்பட்டவன் தனக்குத்தெரியாத அர்த்தங்கள் எத்தனையானாலும் அபேக்ஷித்தபோதினும் அவன் குலகோத்திரங்கள் நிரூபிக்காமல் உபதேசிக்கவேண்டும். அவனிடத்தில் விசேஷார்த்தங்கள் அனுவாதித்துக் கிரஹிக்கவேண்டும். அவனை பகவத்விசிரமென்று பூஜிக்கவேண்டும். இந்த அஷ்டவிதபக்தி எவனிடத்தில் இருக்கின்றதோ அப்படிப்பட்ட மகாத்துமாவுடைய ஸ்ரீபாதபத்மங்கள் கழுவி அந்தத் தீர்த்தத்தை ஸ்வீகரிக்கவேண்டும். இப்படிப்பட்ட யோக்கியதையில்லாதவனுடைய யதோதகத்தை ஸ்வீகரிப்பதால் ஞானமாந்திரியமென்று சொல்லத்தகும். அந்த மகாத்துமா தன்னை நீசனென்று எண்ணியிருப்பான். அல்லது தன்னுடைய யதோதகத்தைக் கொடுப்பதற்குச் சம்மத மடையமாட்டான். அனேகவிதமாகப் பிரார்த்தித்து பிரசன்னராய்ச்செய்து குருபீடம்போல் அவனுடைய பாதங்களைக்கழுவி அந்தத்தீர்த்தத்தை ஸ்வீகரிக்கவேண்டும். அப்படிப்பட்ட அதிகாரியினுடைய குலகோத்திரங்களும் சூரஸ்ர பாண்டித்யங்கள் சரீராரோக்கியங்களும் நிரூபிக்காமல் அவன் எப்படிப்பட்டவனுய் இருந்தபோதிலும் அவனிடத்தில் அஷ்டவித பக்திசம்பத்தியை கௌரவித்து அவன் பாதோதகத்தை ஸ்வீகரிக்கவேண்டும். யான் இந்தக் கிரமமெல்லாம் உனக்கு உபதேசம் செய்யாமல் அந்தக்காரியத்திற்கு உன்னை அனுப்பியதால் நீ எப்படி பிரமாதம் செய்துவிட்டாயோ அது எனக்குத்தெரியவில்லை. இத்தனை தினம் போலவேயல்லாமல் தீர்த்தத்தில் மாதுர்யம் தப்பி இருப்பதால் ஏதோ பிரமாதம் சம்பவித்திருக்கின்றதென்று நிச்சயிக்கின்றேன் என்று சொன்ன ரசிகமுராரி வாக்கியத்தைக்கேட்டு அவன்சீடன் ஓ குருநாதா! உனக்குக் கௌரவமான பாகவதருடைய ஸ்ரீபாததீர்த்தங்கள் சேகரிக்கும் பொழுது ஒரு குஷ்டவியாதி அனுசரித்து இருக்க அவருடைய சரீரம் அதிக ஹேமமாய் துர்க்கந்த யுக்தமாயிருப்பதால் அவருடைய பாதங்கள் அபரிசிக்க அபேக்ஷிக்காமல் மிகுதியானவருடைய பாததீர்த்தங்களைச் சேர்த்துக்கொண்டு வந்தேன் என்று சொன்னமாத்திரத்தில் அதைக்கேட்டு ரசிகமுராரி அதிக கோபமடைந்து பாகவதரை பகவத்விசிரமென்று கௌரவித்து அவர்பாதங்களைக் கழுவி மூந்தி தீர்த்தத்தோடு சேர்த்து ஸ்வீகரிப்பதால் அது மாதுர்யம் அடைந்திருந்தது. ரசிகமுராரி அதிக ஆனந்தப் பரவசமடைந்து இருந்தார். இந்த ஆச்சரியத்தைப் பார்த்தவர்கள் இவருடைய பாவசுத்தியைக் குறித்து ஆச்சரியமடைந்து, இவருக்கு ரசிகமுராரி என்னும் பெயர் தகுந்ததாயிருக்கின்றதென்று சந்தோஷமடைந்தார்.

இப்படியிருக்கும் சமயத்தில் இந்த ரசிகமுராரி தன்னுடைய ஆசாரியரான தவாவர்ணசுவாமி என்னும் மகானுபாவன் ஞானவைராக்கிய சம்பன்னராய் சுசிலராய் இடைவிடாமல் பகவத்ஆராதனராய்

இருந்தார். ஆகையால் அவருக்கு அந்ததேசாதிபதி பகவத்தாராதனையை அபிமானித்து மான்ய பூமியைக்கொடுத்தார். இப்படி இருக்குங்காலத்தில் அந்நாட்டிற்கு நூதனமாய் வந்த தேசாதிபதி இதை பகவத் விஷயமென்று அறியாமல் சமஸ்தானத்து பூமிகளோடும் அதையும் சேர்த்துக்கொண்டார். இப்படி இருக்க அக்காலத்தில் தயாவர்ணசுவாமி தன்னுடைய சீடனுகிய ரசிகமுராரியை வரவழைத்து ஐயா! நீ அந்த அதிகாரியிடம் சென்று எப்போதும்போல அந்தப்பூமியை என் சுவாதீனம் செய்யவேண்டுமென்று சொல்லி செய்துகொண்டு வருவாய் எனதிட்டம்செய்து அனுப்பினர். இதைக் கேட்ட ரசிகமுராரி தன்னுடைய ஆசிரியராக்கினைக்கு சிரசாகவகித்து அந்த அரசன் வசிக்கும் நகருக்குச்சென்று அருகில் இருந்தபடி ஒரு சீடன் மூலமாய்த் தன் வரவைஅரசனுக்கு அறிக்கை செய்தார். அச்சமயத்தில் அங்கிருந்தவர்களெல்லோரும் ரசிகமுராரியினுடைய வைராக்கிய குணங்களை அனேகவிதமாய் ஸ்தோத்திரம்செய்து அவரைச் சேவை செய்த மாத்திரத்தில் பசுபக்ஷாதிகளுக்கும் ஞானேதயமாகின்றதென்று சொன்னர். அதைக்கேட்ட பரமநாஸ்திகனை சாதுஜனத்வேஷியான அந்தப் பூபாலன் ரசிகமுராரியை மறுதினத்திற்கு வரும்படி சொல்லி அனுப்பிவிட்டு, மாவெட்டியானை வரவழைத்து நீ ஒரு யானைக்கு மதமுண்டாக்கி ரசிகமுராரி வரும் சமயம் பார்த்துக்கொண்டிருந்து அவன்மீது அந்த யானையை நடத்துவாயென்று ஆக்கினைசெய்தார். இப்படி யிருக்கும் சமயத்தில் இதை அறியாதபடிக்கு ரசிகமுராரி மறுநாள் உதயமானவுடனே நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு திருமண்தாரணம்செய்து, அனேக சிஷ்யவர்க்கத்துடனே பகவன்நாம சங்கீர்த்தனை செய்துக் கொண்டு அந்தக்கோட்டையில் பிரவேசித்து வந்துகொண்டிருந்தார். அப்பொழுது மாவெட்டிக்காரனல் தயார் செய்யப்பட்ட மதம்பிடித்த யானையானது ரசிகமுராரி முகமாய்வந்தது. இப்படி வரும் சமயத்தில் அந்த நாட்டிலிருக்கும் ஜனங்களெல்லோரும் பயமடைந்து ஒடிவந்து பிரகாரத்தின்மீது ஏறிக்கொண்டு இந்த விந்தையைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள், இதுவுமல்லாமல் ரசிகமுராரி சீடர்கள் அந்தப் பக்தனை ஒண்டியாக விட்டுவிட்டு அந்த நாட்டின் ஜனத்துடன் சேர்ந்து பிரகாரமேறி பார்த்துக்கொண்டிருந்தார். அப்பொழுது ரசிகமுராரி அந்த ஜனங்களைப் பார்த்து ஒ ஜனங்களே! ஸ்ரீகிருஷ்ணபரமாத்துமாவைப் பார்த்து சந்தோஷமடையாமல் நீங்கள் ஏன் பயமடைந்தீர்? ஒரு புருடன் கவசம் தரித்த மாத்திரத்தில் அவனுக்கு புருஷத்துவம்விட்டு கவசத்துவம் சித்திக்குமா? சர்வசரீரமுடைய பகவான் இந்த யானையை ஸம்மரிக்காதவராக அவன் சரீரமான யானையைப்பார்த்து பயமடைகிறீர்! சரீரத்தைவிட்டு சரீரம் சொந்தமானல் ஒன்றும் செய்யமாட்டாது. உங்களை அறியாமல் உங்கள் சரீரத்தை எந்தக்காரியத்திலாகிலும் உபயோகப்படுமா? உங்களுக்கு ஏன் இவ்வளவு விவேகமில்லாமல் போச்சுது என்றுசொல்லி அந்த யானையைப்பார்த்து மஸ்தகன் அஸ்தாஞ்ஜலியாய் (ஏஹ்யேஹிபுல்லாம்புஜ பத்திரநேத்தின) தாமரையென்ற சத்ருஸமான நேத்திரமடைந்த ஒ பகவானே! வருவாய். வருவாய். என்று சொன்னர். அப்பொழுது அந்த யானைக்குப் பகவானுடைய கடாக்ஷத்தால் மதமென்னும் கர்வமடங்கி சாந்தமென்னும் குணம் உதித்து ரசிகமுராரி பாதங்களுக்கு நமஸ்காரம் செய்தது. அப்பொழுது அந்த மகானுபாவன் தன்னுடைய அஸ்தத்தால் அதனுடைய மஸ்தகத்தைத்தொட்டு தன்னுடைய கண்டத்திலிருந்த துளசி ஆரத்தை அதின் கழுத்தில்போட்டு அதின் காதில் ஸ்ரீதாரகமந்திரமாகிய ஓம் ஹ்ரீம் க்லீம் ஸ்ரீமந்நாராயணு! என்று மூன்றுவிசை உபதேசம் செய்துவிட்டார். அந்த யானையானது ஆனந்தக் கடலில் மூழ்கி சந்தோஷமடைந்து பகவானை ஸ்மரித்துக்கொண்டு ரசிகமுராரியின் பின்பற்றி நடக்கலுற்றது. அந்த ஞானமில்லா வேந்தன் இந்த அற்புதத்தைக்கேட்டு ரசிகமுராரி சன்னதிக்கு வந்து தன்னுடைய யுத்தமாங்கத்தால் அவருடைய பாதத்தை அலங்கரித்து அபராதக்ஷாபணம் செய்துக் கொண்டு அவருடைய எண்ணத்தை அறிந்து தான் பூர்வீகத்தில் தபாரஹிதமாய் அபகரித்த மான்ய பூமிகளை மறுபடியும் தயார்ணவசுவாமிக்குச் சுவாதீனம் செய்துவிட்டு ரசிகமுராரியுடைய உபதேசம் பெற்று, அந்த யானையை அவருக்குக் காணிக்கையாகக்கொடுத்துவிட்டு அதிகமாய் பூஜிக்கப்பட்டார்.

அது முதலாக அந்த யானையானது ரசிகமுராரி காலடிபோல் நடந்து அவர்பின்னல் திரிந்துகொண்டு இடைவிடாமல் பகவத்தியானம்செய்துக் கொண்டும், பகவன்னமஸ்மரணை செய்தும், சாதுக்கள்மீது பிரீதியுண்டாகி ரசிகமுராரி யாத்திரைசெய்யும் காலத்தில் அவருடையதும் இன்னுமிருக்கப்பட்ட பாகவதருடைய பதார்த்தங்களைத் தன் முதுகில் எடுத்துக்கொண்டு பாகவதகோஷ்டத்தை ஸ்வீகரித்துக்கொண்டு ஆனந்த மடைந்திருந்தது.

இப்படி இருக்கும் சமயத்தில் ஒருநாள் ரசிகமுராரி தீர்த்தயாத்திரை செய்வதற்கு உத்தேசமடைந்து, அனேக சிஷ்யவர்க்கத்துடனே புறப்பட்டு தங்களுக்கு வழியில் வேண்டுமான பதார்த்தங்களை அந்த யானையின்மீது போட்டுக்கொண்டு ஆரண்யமார்க்கமாய்ப் போய்க்கொண்டிருந்தார். அப்பொழுது சில திருடர்கள் வந்து இவர்களை மடக்கிக்கொண்டார். இப்படி மடக்கிக் கொண்டவுடனே இந்த யானையானது கர்ஜ்ஜித்து கோவிந்தாவென்று கூச்சலிட்டு தன்னுடைய தண்டத்தால் மோதியடித்து தனது பாதத்தால் மிதித்து அவர்கள் எல்லோரையும் அதாகதம்செய்தது. அதன்பிறகு இவர்கள் அனேகதேசங்களில் சஞ்சரித்துக்கொண்டு குருக்ஷேத்திரத்திற்குச்சென்று, அங்கு இராகின்ற புண்யதீர்த்தத்தில் ஸ்நானம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் அந்நாட்டிலிருக்கும் அரசன் இந்த யானையின் லக்ஷணங்களைக் கேள்வியடைந்து, அது எனக்கு வேண்டுமென்று ரசிகமுராரிக்குச் சொல்லியனுப்பினர். அம்மொழிகேட்டு ரசிகமுராரி இந்த யானையானது என்னையும் இந்தப் பாகவதரையும் விட்டு இன்னம் வேறிடத்திற்குச்செல்லாது என்று மறுமொழிகூறி அனுப்பினர். அதைக்கேட்டு அரசன் தன்னுடைய சேவகரை அழைத்து, நீங்கள் சாதுவேஷத்தோடு கூடி பகவான் நாமத்தை உச்சரித்துக்கொண்டு சென்று அந்தயானையைப் பிடித்துக்கொண்டு வருவீரென்று ஆஞ்ஞையிட்டார். அந்தச் சேவகர் அதுபோலவே செய்யும் காலத்தில் அந்த யானையானது பகவன் நாமோச்சாரணை செய்யும் சாது வேஷதாரிகளை ஏதும் செய்யாமல் சும்மாவிருந்தது. அந்தக்காவலர்கள் அந்த யானையைக் கொண்டுபோய் யானைக்கூட்டத்தில் சேர்த்துவிட்டு அரசனுக்கு அறிக்கைசெய்தார். இம்மொழிகேட்ட அந்தப்பிரபு அதிக சந்தோஷமடைந்து இருந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் அதுமுதற்கொண்டு அந்த யானையானது ஆகாரம் நித்திரையில்லாமல் (குருபாதாம்புஜம்த்யாயேத்) என்னும் வாக்கியம் போல் தன்னுடைய ஆசார்ய பாதபத்ம ஸ்மரணையோடு நிறைந்திருந்தது. இப்படியிருக்க அந்த அரசனுக்கு சகிக்கமுடியாத ரத்தபாதையுண்டாகி எத்தனை சிகிச்சை செய்தபோதிலும் நிவர்த்தியாகாமல் பாதை அதிகமாயிருந்தது. அப்பொழுது அவ்வேந்தன் அதிக பீதியடைந்து பாகவதாபகரணம் செய்தபடியால் இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்ததென்று நிச்சயித்துக்கொண்டு ரசிகமுராரி சன்னிதிக்கு வந்து அதிக பயபக்தியாய் பிரதக்ஷண நமஸ்காரம் செய்து அபராதக்ஷாபணம் செய்துக்கொண்டு நிற்கும்சமயத்தில், அந்த மகானுபாவன் சந்தோஷமடைந்து அவரைச் சிஷ்யராய் நேமித்து உபதேசம்செய்து அனேகவிதமாய் பூஜ்யராய் செய்வித்துத் தனது இல்லம் அடைந்தார். அதின்பிறகு இந்த யானையானது தன்னுடைய ஆசாரி நியமத்தையடைந்து பாகீரதிக்குச்சென்று (சங்கா யாம்பத நான்முத்திஃ) என்னும்மொழிபோல் முக்தி பதவியான விஷ்ணுபதவி நிஜசரீரத்தைவிட்டு ஸ்ரீ வைகுண்ட திவ்யலோகத்தை அடைந்தது. எப்படியென்றால், மனுஷ்ய, பசு, பக்ஷி வைஷ்ணவ ஸ்ரமாணத்தார் பரமபதத்தை அடைவாரென்று பிரமாண வாக்கியம். இந்தப் பரமபாகவதன்மீது பிரத்யக்ஷ சித்தமாக்கியது. ரசிகமுராரி தன்னுடைய உபதேசத்தால் அனேக ஜனங்கள் பரமவைராக்கிய சம்பன்னராய் முக்திசாந்தியால் பிரசித்திபடைந்தார். கேட்டீரோ சிடரே! இப்படியல்லவா முக்தியடைய் வேண்டும். என்று சொன்ன மாத்திரத்தில் சூரியன் மேற்குத்திசையில் மறைந்து விட்டான். இதைப் பார்த்து எல்லோரும் எழுந்து அவரவர் இருப்பிடம் சென்றார்கள்.

ரஸிகமுராரி சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநம:

இருபத்திரண்டாவது

# காஞேபாத்ரி சரித்திரம்.

காப்பு வெண்பா.

சீர்பெருகு காஞேபாத்ரி சரித மின்றுயான்
பேர்பெருக வசனமாய்ப் பேசிவிட்டேன்—பார்தனிலே
கரியைக் காத்தளித்த கரிவரதப் பெருமானை
ஹரியோம் என்றுமனதில் ஆசிப்பாய்.

சுலோகம்.

வத்ஸர்பாதபயப்ரதான சமயாதர்தார்திர்வாபனு
தௌதார்யாடகசோஷணுதகணி தஸ்ரேயபதபராபணுத்
சேவ்யன்ரிபதிரேகஏக ஜகதாமேதேவஷட்ஸஹீண:
ப்ரஹ்ளாதஸ்சவிபீஷணச்சகரிராட்சம்சால்யஹல்யா துருவ:

இப்படியாக நாபாஜிசித்தர் உதயமானவுடனே எழுந்து நித்தியகடனை முடித்துக்கொண்டு கங்கைக் கரையடைந்து ஸ்நானம்செய்து ஜபதபம் முடித்துக்கொண்டு பகவான் எதிரில்சென்று ஒ தேவாதி தேவா! ஆபத்பாந்தவா! அனுதரக்ஷகா! கோபிகா கிருஷ்ண! கோகுலதிலகா! கோவிந்தா!தாமோதரா! கேசவா! அச்சுதா! முகுந்தா! அரிஹரி! நீயோ எக்காலத்திலும் நன்மை ஆவதற்கும் அபயம் கொடுப்பதற்கும் கஷ்டப்படுபவருடைய கஷ்டம் தீர்ப்பதற்கும் உரியவராய் தானம் வழங்கவும், பாபங்கள் தொலைக்கவும், மேலான பதவியடையவும், ஸ்ரீ அரியைச் சேவிக்கவேண்டும் என்பதற்கு பிரகலாதனன் விபீஷணன் கஜபதி திரௌபதை அஹல்ய துருவன் இப்படிப்பட்ட புண்ணியமடைந்த பக்தர்கள்சாக்ஷியாய் இருக்கின்றுரென்று என்மனதில் எண்ணமிட்டு உம்மைத் தியானம்செய்யத் துணிந்தேன். ஆகையால் எம்மைக்காப்பது உமதுகருணேயென்று தியானம்செய்து கிற்கும்சமயத்தில், நேற்றையதினம் கேட்டுச்சென்ற பக்தர்கள் எல்லோரும் கும்பலாகக் கூடி, நாம் இப்படி துயரப்படுவது நீதியல்ல. நாம் எத்தனை கேட்டபோதிலும் ஏதும் பலனடையும் மார்க்கம் கிடைக்கவில்லை. ஆகையால் நாமெல்லோரும் இன்றையதினம்சென்று நமதுமனக்குறையைத் தெரிவித்து ஞானேபதேசம் அடையவேண்டும் என்று பெருமனமடைந்து எல்லோரும் ஏகமாயடைந்து குருபீடமாகிய நாபாஜிசித்தரிடம் வந்து அவருடைய மனேபீஷ்டத்தைத் தெரியச்சொல்லி நிற்கும்சமயத்தில், நாபாஜிசித்தர் இவைகளையெல்லாம்கேட்டு சந்தோஷமடைந்து சொல்லத்தொடங்கினர்.

கேட்டீர்களோ சீடர்களே! நாம் ஜென்மமெடுத்து ஏதும்பலனடையவில்லை. மோகாந்தமென்னும் பாசபந்தத்தில் அகப்பட்டு தேனில் விழுந்த ஈயைப்போல தத்தளித்துக் கொண்டிருப்பது நலமல்ல. நாம் செய்த பாபமெல்லாம் தீரும்பொருட்டு பக்தியாகிய சரித்திரம் கேட்டு முக்தி அடையவேண்டும். ஆகையால் நான் உயர்ந்த சரித்திரமொன்று சொல்லுகிறேன். அதைக்கேட்டபிறகு நீங்கள் கோரிவந்த எண்ணம் பூர்த்திசெய்ய சித்தமாய்க் காத்துக் கொண்டிருக்கிறேனென்று சொன்னவுடனே சீடரெல்லாம் இதைக்கேட்டு சந்தோஷமடைந்து குருவைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினர். ஒ சுவாமி! நீர் சொல்லும்படியான சரித்திரத்தைச் சொல்லுங்கள். நாங்கள் அதைக்கேட்க மனம் சந்தோஷம

டைகிறேமென்று சொன்னவுடனே, நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து அப்பா சீடரே! நான் இன்றைக்கு உங்களுக்கு காஞேபாத்ரி சரித்திரமென்னும் ஒரு பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன்; அதைக் கவனமாயும் பக்தியாயும் கேட்டால் முக்தி அடையலாமென்று சொல்லி அச்சரித்திரத்தைச்சொல்ல ஆரம்பித்தார். எப்படியென்றுல்,

ஸ்ரீமகா பண்டரிபுரத்திற்குத் தென்திசையில் மங்களபடமென்று ஒரு கிராமம் இருந்தது. அந்தக்கிராமத்தில் சியாமா என்று ஒரு தாசியிருந்தாள். இம்மாதுக்கு அனேகதினமாகப் புத்திர பாக்கியம் இல்லாமலிருந்தது. அதனுல் அவள் மனேவியாகூலமடைந்து, எம்பிரானைத் தியானம் செய்து, அநேக நோன்புகள் நோற்றுள். கடைசியில் பகவான் கிருபாகடாக்ஷத்தால் ஒர் பெண் பாவை ஜனித்தாள். அப்பெண்குழந்தைக்கு நல்ல சுபலக்கினமறிந்து, காஞேபாத்ரியென்று நாமதேயமிட்டு நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்துக்கொண்டு வந்தாள். இப்படி வளர்த்துவரும் நாளில் அந்த காஞேபாத்ரி சௌந்தரியத்தை வர்ணித்துச் சொல்ல நமக்குத் தரமல்ல. இந்த ரூபத்தைக்கண்ட ஊர்வசி ரம்பை திலோத்தமை மேனகை என்னும் தேவஸ்திரீகள் அதிக வெட்கம் அடைந்திருப்பார்கள். ஆனுல் இம்மாதின் பக்தியோ சொல்லத்தரமல்ல. பிரஹலாதன் வீணுகானம் செய்யும் நாரதர் ஆகிய இவர்கள் இவளுடைய பக்திக்குத் தகுந்தவரல்லர். நாட்டியமாடுவதில் சித்திரசேனனென்னும் கந்தருவன் சமானமானவனென்று சொல்லமுடியாது. சுகுணசம்பத்தில் சாவித்திரியும் சமமல்ல. இத்தனை லக்ஷணத்துடன் அமைந்த தன் புதல்வியை அரசனுக்குக் கொடுத்து, அவருடைய அபிமானத்தை அடையவேண்டுமென்று, எண்ணமிட்டிருந்தாள். இந்தத் துஷ்ட எண்ணத்தை யறிந்து காஞேபாத்ரி தன்னுடைய தாயாரைப்பார்த்து ஒ அம்மணி! இந்த லோகத்தில் சுகம் உண்டாயிருக்கின்றதா? ஒவ்வொரு பதார்த்தங்களும் துக்கத்தையே உண்டாகச் செய்கின்றது. அந்தந்த பதார்த்தங்கள் யுக்தமாய்ச் சேதனங்கள் கர்மானுகுணமாக யோக்கியமாய் யோக்கியதை தோன்றுவதே அல்லது தத்துவத்தை விசாரிக்கும் யோக்கியதை அயோக்கியதையும் அந்த வஸ்துவன்றி இல்லை. அது எப்படியென்றுல் ஒருவனுக்கு போக்கியமாயிருக்கும் பதார்த்தம் அதேகாலத்தில் மற்றொருவனுக்கு அயோக்கியமாயிருக்கின்றது. இதுவல்லாமல் ஒருவனுக்கே ஏககாலத்தில் யோக்கியமாயிருக்கும் வஸ்துவானது மற்றொருகாலத்தில் அயோக்கியமாயிருக்கின்றது. அதிக பலமுடையவனுக்கு யோக்கியமாயிருக்கும் சாதமானது அஜீரணத்துடன் சேர்ந்திருப்பவனுக்கு அயோக்கியமாய் இருக்கின்றது. ஒருவனுக்கு சீதளகாலத்தில் யோக்கியமாயிருக்கும் சுகமானது அவனுக்கே உஷ்ணகாலத்தில் அயோக்கியமாயிருக்கும். இது இப்படியிருக்க இன்னும் கேட்பாய். அம்மணி! ஸ்திரீபுருஷர்களுக்கு பரஸ்பரம் அங்க பரிஸ்வங்கம் யோக்கியமாய்த்தோற்றும். ஸ்திரீயானவள் புருஷனுல் மோகிக்கப்பட்ட அழகுடைய புருஷர்களும் ஸ்ரீகளும் வியாதி விதியடைந்து தன்னுடைய சரீரம் துர்க்கந்த நாற்றத்தோடு கூடியகாலத்தில் அவர்களைப் பார்க்க மனம் கூசுதலுடன் தோற்றும். இந்த மானிடசரீரமானது மாதுரு கர்ப்பத்தில் உண்டாகின்றது. ஜனித்தல், வளருதல், ஸ்தூலித்தல், சிறுத்தல், தகித்தல், என்று சொல்லப்பட்ட ஷட்பால விகாரத்தோடு சேர்ந்தது. இதுவல்லாமல் எப்பொழுதும் ஏகரீதியாய் இராது. இப்போது யான் சுந்தரவதியென்று என்னை அரசனுக்குக் கொடுப்பதால் உனக்கு இராஜசன்மானம் உண்டாகுமென்ற எண்ணம் பிறந்தது. ஆனுல் என் சவுந்தரியம் எத்தனை நாள்வரைக்கும் ஸ்திரமாயிருக்கும்? லோகத்தில் காமிகளால் பரிக்கிரகிக்கப்பட்ட சுந்தரவதிகளாகிய ஸ்திரீகள் வியாதியாலும் கெடுமதியாலும் தங்களுடைய சவுந்தரியமும் அழகும் போனபிறகு அந்தக் காமிகளால் கொடுக்கப்பட்ட அன்னவஸ்திரத்திற்கு அதிக கஷ்டமடைந்து, படாதபாடு படுவதும் நீ பார்த்தும் கேட்டும் அறியாதவள்போல் பேசுகிறுய். ஒ அம்மணி! யான் சிறுபெண்ணுனபோதிலும் என் மனதில் ஸ்தாபித்திருக்கும் பகவானுடைய கடாக்ஷத்தால் எனக்குத் தெரிந்தமாத்திரம் உனக்கு அர்த்தபாவத்தைத் தெரியச் சொல்லுகிறேன் கேளும்.

சுலோகம்.

அமேத்யபூர்ணம்க்ரிமிஜாவசம்.
ஸ்வாபதுர்கந்தமசௌசமத்ருபம்
களேபரம்மூத்திரபுரிஷமாஜனம்
ரமந்திமூடாநரமந்திபம்டிதா.

இதற்குப்பயன் எப்படியென்றுல் இந்தச் சரீரமானது மலத்தால் நிறைந்திருக்கின்றது. புழுக்க

ளைச் சேர்ந்ததாயும் துர்க்கந்தவாசனை சுபாவமாய் உண்டானதாய், சிசுயில்லாததுமாய் அஸ்திரமாய் இருக்கும். மலமூத்திர வாசலான இந்தச்சரீரத்தை மௌடீக மனிதர் பிரமிப்பார். தெளிவடைந்த பண்டிதர் இதை ரமிக்கமாட்டார். அதிக போக்கிய மாய் வாயு, ஸத்வ, பலாரோக்யத்தையும் உண்டாக் கியதாயும் சுகபிரியம் வியர்த்தசமாய் ரசயுக்தமாயும் நோய்ல் சேர்ந்ததாயும் சிலகால ஸ்தாயுலாயும் அனேக பதார்த்தங்கள் மனிதரே சாப்பிடப்பட்டு இவர்களுடைய சரீரசம்பந்தத்தால் ஒரு நிமிஷத்தில் ஜீரணமடைந்து, தற்சனஸ்பரிச நோச்சாரன்னத் தைச் செக்கால் ஆட்டப்பட்டு மலமாகின்றது. மனிதர் தங்களுடைய சரீரத்திலிருக்கும் துர்நாற் றத்தை மாறுபாடு செய்வதற்காக மிருதியான சிலா க்கியமடைந்த சந்தன குசும தாம்பூலங்கள் ஸ்வீகரி த்தும் அந்தப் பதார்த்தங்கள் சில நேரத்திற்கெல் லாம் இவர்களுடைய உத்சிஷ்ட ஸ்வேத கவசத் தால் இதர மனிதருக்கு சஸ்ப்ருஸ்யமாய் ஹேய மாகின்றது. ஆகையால் புத்திவான்.

சுலோகம்.

நாரிஸ்தனபராநாபிதேசம்
த்ருஷ்டுவாமாகாமோஹாவேசம்
ஏதனமாம்ஸவஸாதிவிகாரம்
மனகிவிசிம்தயவாரம்வாரம்.

இது எப்படியென்ருல் பார்த்தமாத்திரத்தில் புருஷருக்கு மோகாவேசத்தை உண்டாகச் செய் யும் ஸ்திரீகளுடைய ஸ்தனபாரமானது நாபிபிரதே சத்திலிருக்கும் மாமிசம் கொழுப்பு முதலானஹேய பதார்த்தத்தால் சமூதாயமாய் அதிக விசாரமடைந் ததென்று அநேகவிசை துக்கமடைய வேண்டியது. ஒருவனுக்கு இப்படிப்பட்ட பாவம் நிஜமாய் உண் டாயிருந்தால் இந்த ஹேயபதார்த்தங்கள் போக்கிய மென்று தோற்றுவனவாம்.

சுலோகம்.

சரீரம்வ்ரணவத்பஸ்யே தன்னம்துவ்ரணலேபனம்
வ்ரணசேசனதத்தஹம்வஸ்திரம்துவ்வரணபட்டவத்

இதுவல்லாமல் ஓ அம்மணி! இந்தச் சரீரமா னது ரணமென்று தன்மனதில் எண்ணவேண்டும். எப்படியென்ருல் புருடருடைய சரீரத்தில் ஒரு ரண மிருந்தால் அது அதிக சங்கடமென்றும் மனக் கிலேசமென்றும் அதை அதிக சிக்கிரத்தில் சது ருபாயம் செய்து தொலைக்கவேண்டுமென்றும் தோ ற்றுவதுபோல் இந்த ஆத்மாவுக்கு உண்டான ரண ரூபமான சரீரத்தில் புத்திவான் வெறுப்படைந்து இதை விநாசகாலத்தை எதிர்பார்த்துக் கொண்டிரு க்கவேண்டும். இப்படிப்பட்ட சரீரத்தை நமூல்ய மான ஆபரணத்தாலும் அதிக மேன்மைபொருந் திய குசும சந்தனதிகளாலும் அலங்காரம்செய்து தன்மனதிற்கு ஆனந்தமடையும் மனிதர் எப்படி யென்ருல்? அதிக கோரமடைந்த ரணத்தை அலங் காரம்செய்து ஆனந்தமடையும் மனிதரென்று எண் ணமிடலாம். இதற்குப்பயன் எப்படியென்ருல், அதிக பசியை தீர்த்துக்கொள்ளுவதற்கு இச்சிக்கும் பொருட்டு அன்னத்தை ரணத்திற்கு அரைத்து கட்டும்படியான சாதத்திற்குச் சமமென்று பாவிக்க வேண்டும்.

இப்படிப்பட்ட சாதகம் போக்கியமாயிருக்க வேண்டுமென்று கோரப்பட்டவர் ரணத்தின்மீது கட்டும்படியான சாதம் இஷ்டமடைந்து ரசயுக்த மாய் இருக்கவேண்டுமென்று கோரப்பட்டவர் மூட ராவார். தாபமெடுக்கும் சமயத்தில் அதைத் தீர்க்க வேண்டுமென்ற அபிப்பிராயத்தோடு கோரப்பட்ட வர் ரணத்தைக் கழுவின ஜலமென்று பாவிக்கவே ண்டும். ஆனல் இந்த ஜலம் பரிமளமுள்ளதாயிருக் கவேண்டுமென்று கோரப்பட்டவர் ரணத்தைக் கழுவுதற்கு சுகந்த யுக்தமடைந்த தீர்த்தம் அபே க்ஷிப்பவரென்றறியவும். இதுவல்லாமல் மானத்திற் காக இந்தச் சரீரத்தின்மீது கட்டும்படியான வஸ் திரமானது ரணத்தின்மீது கட்டும்படியான வஸ்திர மென்று பாவிக்கவேண்டும். ஆனல் மனிதர் வஸ் திரஹீனராய் தம்முடைய பிரதிபிம்பத்தைக் கண் ணடி முன்பாகப் பார்த்தமாத்திரத்தில் அது தம க்கே கோரமாயிருக்கும். இது எப்படியென்ருல் விகாரமான ரணத்தை இதரமானவர் கண்ணுக்குத் தோன்ருதபடிக்குத் துணியால் கட்டி மறைப்பது போல் இந்த மனித சரீரத்திலிருக்கும் விகாரத்தை இதரமானவர் கண்ணுக்கு அகப்படாதபடி வஸ்திர த்தால் மூடப்பட்டிருக்கின்றது. இப்படிப்பட்ட வஸ்திரம் மனேஹரமாய் அமூல்யமாயிருக்க வேண் டுமென்று எண்ணப்பட்டவர் எப்படிப்பட்டதென் ருல் ரணத்திற்குக் கட்டப்பட்ட திவ்ய வஸ்திர மேன்மையாய் இருக்கவேண்டுமென்று கோரப்பட் டவர்க்கு இது உதாரணமாகும். ஓ அம்மணி! செவ்வையாய் கவனமாய்க் கேட்பாய். ஸ்வஸ்வ ரூபத்தைச் செவ்வையாய் அறியாதவர்களும் அறிந்

தால் பகவத்விஷயத்தில் சரணாகதியடைந்து தச் சரணாரவிந்தத்தில் வின்யஸதாத்மராய் நிரப்பயனாய்.

சுலோகம்.

க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷம்தேம்
ருத்யும்பிரயமிவாதிதிம்.

இதுபோலாகவே மரணத்தைப் பிரியமாய் அதிதிபோல் நிரீக்ஷித்திருப்பதால் இந்த ஆத்மாவுக்குப் பிராப்தமாயிருக்க, அப்படிசெய்தால்,

சுலோகம்.

நலிநீதளகதஜலமதிதாளம்
தத்வஜஜீவிதமதிசயசபவம்
வித்திவ்யாத்யபிமானகிரஸ்தம்
லோகம்சோஹதம்சஸமஸ்தம்.

என்பதுகிபோல் தாமரையிலையானது அடைந்த ஜலத்தைப்போல் ஜீவிதம் அதிக சஞ்சலமென்று லோகத்தில் சமஸ்த பதார்த்தங்கள் சோகஹதமாய் இருக்கிறதென்று கொஞ்சமாகிலும் சிந்திக்காமல் நீரின் குமிழியைப்போல் சரீரத்தை ஸ்திரமென நம்பி,

சுலோகம்.

ஈஸ்வர மோஹமஹம்போகி
கோன் யோஸ்திசத்ருசோமபா.

என்னும் மொழிபோல் அநேகர் பிறவென்றும், போகியென்றும், எனக்குச் சமானமானவர் இல்லையென்றும், எண்ணமிட்டுக்கொண்டு தூரபிமான கிரகஸ்தராய் சாஸ்திரத்தைத் தூஷித்துக்கொண்டு நாஸ்திகராய் அமூல்யமான காலத்தில் ஆத்மஸ்துதி பரநிந்தை பரமானம் பரபீடை இந்த விஷயங்களால் காலம் கழித்துக்கொண்டு ஜனநீ ஜனகா திதி குரு இவைகள் ஈஸ்வரமூர்த்திகளென்று பாவிக்காமல் அவர்களை அகௌரவப்படுத்திக் கொண்டு நாஸ்திகராய் யமமஹிஷ கண்டநாதப்ரவன குதூஹலமா யிருக்கும் மனிதரருகில் சென்று இருப்பதற்கு எனக்கு இஷ்டமில்லை. ஆனபோதிலும் ஓ அம்மணி! இன்னம் சிலகாலம் பொறுத்துக் கொண்டிருப்பாய். எனக்குத் தகுந்த புருடன் யானே தேடி இச்சிக்கின்றேனென்று சொல்ல, சற்குணகணநிதியாகிய தன்னுடைய குமரியின் மொழி கேட்டு அந்தச்சாமா ஒன்றும் சொல்லாமல் வாயமைத்து மௌனமுத்திரை யடைந்து சும்மாவிருந்தாள்.

இப்படி யிருக்கும்சமயத்தில் ஸ்ரீபண்டரிபுரத்தில் ஆஷாடசுத்த ஏகாதசி மகோத்ஸவத்திற்காக அனேக சாதுஜனங்கள் கும்பலாகக்கூடி யதாசஅஸ்தராய் கைதனில் தாளங்கள் போட்டுக்கொண்டு ஸ்ரீபாண்டுரங்கனுடைய கலியாணகுணங்களைப் பாடிக்கொண்டு ஆனந்தசமுத்திரத்தில் மூழ்கி மெய்மறந்து நாட்டியம் செய்துக்கொண்டு இந்தக்காஞேபாத்திரி வசிக்கும் வீதிமார்க்கமாய்ப் போய்க்கொண்டிருக்கும் சமயத்தில் இந்தச் சாதுஜனங்களை காஞேபாத்திரி தரிசனஞ்செய்து அந்த மகாத்துமாக்களுக்கு எதிராக வந்து அனேகவிதமாய் வந்தனம்புரிந்து அதிவிநீதியாய் நின்று ஆனந்தபாஷ்பம் சொரிய மெய்ம்மறந்து பகவானைத் தியானமடைந்து சொல்லத்தொடங்கினள். ஓ மகாத்துமாக்களே! நீங்கள் எங்கிருந்து ஏதுகாரணமாய் எங்குபோகின்றீர்?

சுலோகம்.

வகதிஹ்ருதிங்நாதநேசவிஷ்ணா
யவதிபுமான்ஜகதோஸ்யசௌம்யரூப
க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோம்
கதயதிசாருதயைவ சாலபோததஃ

ஓ சாதுக்களே! எவன் ஒருவனுடைய மனதில் சனாதனன மகாவிஷ்ணு வசித்துக்கொண்டிருக்கின்றானே அந்தப்புருஷன் ஜெகத்திற்கு சௌம்யரூபனாய் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றான். இதற்கு திருஷ்டாந்தம் எப்படியென்றால், சாலவிருக்ஷமானது தான்வசிக்கும் பூமியின் சாரத்தைத் தன்னுடைய தலையிடம் காட்டுவதுபோல் சத்ருசமாயிருக்குமென்று எமதர்மராஜன் தன்னுடைய சேவகருக்குச் சொல்லிய வைஷ்ணவலக்ஷணம் உங்களிடம் பூரணமாக மூர்த்திகரித்திருக்கிறதென்று சொன்னவுடனே அந்த உத்தமியினுடைய மிருதுவும் ரசவந்தங்களும் கம்பிரார்த்த கற்பிதமாய் சிலாக்கிய நியமாய் மதுரா லாபமென்னும் அமுர்த பிரவாகம் பண்டரி யாத்திரைக்கு சாதுஜனங்களுடைய செவி துவாரத்தில் விழுந்த மாத்திரத்தில் எங்குமில்லாத ஆனந்தத்தை உண்டாக்கியது.

இப்படியிருக்கும் சமயத்தில் அந்தச் சாதுக்கள் கானோபாத்திரியைக் கண்டு ஓ அம்மணி! ஆஷாட சுத்த ஏகாதசி மகோத்ஸவத்திற்காக ஸ்ரீபண்டரிபுரத்திற்கு நாங்களெல்லோரும் போகின்றோம் ஆனால் பூலோக வைகுண்டமான அந்த க்ஷேத்திரமான ஸ்தலத்தில் அந்த மகோத்ஸவகாலத்தில் அனேக தேசத்திலிருந்து அனேக சாதுஜனங்கள் வந்திருப்பார்கள். அப்படிப்பட்ட சாதுஜனத்தோடு பக்தவரதனான ஸ்ரீமத் பண்டரிநாதனை சேவையடைவதற்கு அதிக பிரயோஜனமென்று போய்க்கொண்டிருக்கின்றோம். ஆனால் உன்னுடைய குணங்களைப் பார்க்கும் சமயத்தில் அந்தப் புண்டரீகவரதன் முக்தி ஜனபாயியை அதிகபத விஷயமாக அங்கிகரித்ததுபோல் அப்படிப்பட்ட பக்தியுடையமாதென்று உம்மை அங்கிகரிக்கலாமென்று தோற்றுகின்றதென்று சாதுக்கள் சொல்ல, இம்மொழிகேட்ட கானோபாத்திரி ஆனந்தக்கடலில் மூழ்கி அந்த கோஷ்டிகளுக்கு பிரதக்ஷண நமஸ்காரம்செய்து ஓ சாதுக்களே! உங்களால் ஸ்துதிக்கப்பட்டு உங்களுக்கு வந்தனியராயிருக்கும் ஸ்ரீபண்டரிநாதருடைய ஸ்வரூபம் ஸ்வாபாவங்களை உங்களால் கேட்கக்கோருகிறேன். ஆகையால் என்மீது தயைபுரிந்து தெரிவிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கையில், இம்மொழியைக்கேட்ட சாதுக்கள் சம்மதமடைந்து கானோபாத்ரியைப்பார்த்து, ஓ அம்மணி! உனதுஇஷ்டப்படி சொல்லுகின்றோம். கேட்பாய்என்று சொல்லத் தொடங்கினர்.

ஓ புண்யவதனி! அந்தப் புருஷோத்தமனுடையஸ்வரூப குணவிபவங்களைவர்னித்துச்சொல்லுவதற்கு ஆயிரம் நாவுபடைத்த அந்த ஆதிசேஷனும் முடியாதென்றால் நம்மால் எப்படி சாத்தியமாகும்? அல்லாமல் சவசனகாதிகள் தியானத்திற்கு அகோசரனாயிருப்பார். அந்த வேதபுருஷன் மகாத்துமாவினுடைய ஆனந்தத்தையுடைய பாரத்தைக் கண்டுபிடிக்க அசக்தனாய் முதலில் மனுஷ்யானந்தத்தை நிச்சயிக்கிறாய்; சதுர்முகாந்தபரியந்தரம் சொல்லிக்கொண்டுபோய் பரப்பிரம்மானந்தம் மனதில் அகப்படாதபடியால் பிரார்த்தவமில்லை யென்றுதிரும்பிவிட்டார். ஆனால் அந்த ஜகதீசன் தன்னுடைய கலியாணகுணங்களைத்தானேசிந்தித்துக்கொண்டுஅதின் பாரத்தைக்கண்டு பிடிக்காமலிருக்கின்றான். ஆகையால் அப்படிப்பட்ட பகவானுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களை நாங்கள் எப்படி வர்னித்துச் சொல்லத்தரமாகும். ஆனபோதிலும் அவ்வவருடைய புத்திக்குள் அகப்பட்டது எவ்வளவோ அவ்வளவுதான் ஸ்தோத்திரம் செய்வதற்குத் தப்பிதமில்லை. இது எப்படியென்றால் மேருபருவதத்தில் ஒருபிடி தங்கம் இருக்கின்றதென்றும், மகா சமுத்திரத்தில் சிரங்கை ஜலமிருக்கின்றதென்றும் பெரியோர் சொல்லிய மொழியானது ஒருக்காலும் பிழையாது. ஆனால் அந்த மேருபர்வதத்தில் தங்கமானது அதிகமாய் இருந்தபோதிலும் அதில் ஒருபிடி தங்கம் அகப்படாமல் போகுமா? இதுவல்லாமல் மகா சமுத்திரத்தில் அபாரமாய் ஜலமிருப்பது நிச்சயம். அதில் சிரங்கை ஜலம் அகப்படாமல் போகுமா? ஆகையால் பகவானுடைய ஸ்வரூப ரூபகுண விபவங்களை சர்வஞ்ஞனை பகவானுக்கோ கணக்கிட சாத்தியமில்லாமல் இருந்தபோதிலும் அவருடைய புத்தி கோசரித்தபடி ஸ்தோத்திரஞ்செய்து உசிதமாயிருக்கின்றது. ஆனால் பகவான் தன்னுடைய கலியாணகுணங்களைத் தானே பாரமாய் காணமாட்டானென்று சொல்ல, அவனுடைய ஸர்வஞ்ஞத்துவத்துக்கு ஆனியுண்டாகாதா? இது எப்படியென்றால், லோகத்தில் மகா ஞானியான ஒருபுருடன் முயற்கொம்பைப் பார்த்திருப்பேனென்றால் அவனுடைய ஞானம் பொய்யாகாது. ஆனால் முயற்கொம்பு லோகத்தில் கிடையாத பதார்த்தம். ஆகையால் அப்படிப்பட்டதை அறிவேனென்றால் அது ஞானமேயாகும். அப்படி அனந்த கலியாணகுணங்களை அனந்தமென்று அறிந்திருந்தால் ஸர்வேஸ்வரனுடைய சர்வஞ்ஞத்துவத்துக்கு ஹானியாகாது. இனிமேல் உன்னுடைய மனோபூர்த்தியாய் அந்த ஜகதீசனுடைய வைபவத்தை எங்களுக்குத்தெரிந்த மாத்திரம் வர்ணித்துச்சொல்லுகிறோம். அதைக் கேட்பாயென்று சொல்லத்தொடங்கினர். ஆனால் சாதுக்களை இரக்ஷித்தவன் துஸ்க்ருதவினாசம் செய்தவன் தர்ம்ம ஸமஸ்தாபனத்துக்காய் தேவதர்களால் பிரார்த்தனைக்கு உடையவனாய் யதுவம்சபயஃபாராவாரஸ் சாசுதாகாரனாய் வசுதேவானந்தவர்த்தகனாய் தேவகீகர்ப்பத்தில் அவதரித்துவந்த நந்தனென்றும் யசோதபத்திய மென்றும் பிரசித்தியடைந்து பிருந்தாரணியத்தில் பிரகாசித்துக்கொண்டு தனக்கு ஈடடைந்த பால்யரோடுசேர்ந்து, கோகோவஸ்ஸலத்தைக் காத்துக்கொண்டு கம்சாதி துஷ்டரை வதைத்து, பாண்டவாதி இஷ்டர்களை இரக்ஷித்து, பூபாரத்தைத் தீர்த்து, ஆதரித்த பரமயோகி ஜனசேவையடைந்த ஸ்ரீ கிருஷ்ணபரமாத்துமா தாய் தந்தைகள் போஷணையால் ஸ்வரூபயோக்கிதமான பகவத்கைங்கரியமென்று தன்னிஷ்

டனுய் தகன்யம் அறியாமலிருந்த பரமபாகவதனுன ஸ்ரீபுண்டரீகன் அநுக்கிரகிப்பதற்கு ஸ்ரீ பண்டரி புரத்தில் சாநித்யமாகி கடிகஹஸ்தனுய் பீமாநதி தீரத்தில் செங்கல்மீது நின்றுகொண்டு சாதுஜனங் களை அநுக்கிரகித்துக்கொண்டிருக்கின்ருர். அந்த மகாத்துமா விகாரரஹிதனுய் எப்போதும் ஒரே விதமாக இருக்கப்பட்டவர். சர்வம் சா திக்க ச மர் த் த ன். தன்னுடைய பிரகாசத்தால் சகலமும் பிரகாசிக்க செய்யத்தகுந்தவர். ஸ்திர மான ஆனந்தத்தோடு கூடி யிருக்கப்பட்டவர். சகலமும் தனக்கு வாக்கியமாக்கிக்கொண்டு இருக் கப்பட்டவர். இதுவல்லாமல் மகா புத்தியோடு சேர்ந்திருக்கப்பட்டவர். அகம்சலன் சிலாக்கிய மான வாக்குடையவன். அதிக ஆச்சரியத்தோடு சேர்ந்து இருக்கப்பட்டவன். தன்னுடைய விரோதி களை நாசப்படுத்துவான். விந்தையான புஜங்களோ டும், சுவர்த்தமான கரங்களோடும், சங்கம்போன்ற கண்டத்தோடும், கொஞ்சும்போது உப்பியிருப்பது போலிருக்கும் தாடைகளோடும், விசாலமாய் அழ காய் கடினமாயுள்ள மார்போடும், மாமிசத்தால் மூடப்பட்ட அவியத்தமாய் கண்டசல்யங்களோடும் பகையாதிகள் கன்டால் பயமடையும்படியான தேஹகாந்தி யுடையவராயும், ஆஜாநுபாவரைப் போலவும் செண்டுபோலிருக்கும் சிரமடைந்தவர். விசாலமான நெற்றியுடையவர். யானையைப்போ ன்ற கம்பீரமாகிய நடையுடையவர். அதிக உன்ன னதமாயும் அதிக மட்டமாயுமில்லாமல் தொண் ணூற்றுறு அங்குலம் பிரமாணத்தோடுசேர்ந்த சரீர முடையவர். வ்யத்யஸ்தமில்லாமல் சமமாக பாகிக் கப்பட்ட அவயவங்களோடு தன்னைப் பார்க்கப்பட் டவர்களுக்கு திருஷ்டிசித்தத்தில் பிரமித்து சுந்தர விக்கிரஹத்தில் மகா சவுந்தரியத்தோடும் தாமரை யிதழைப்போன்றவிசாலமாய்நிறைந்ததுபோல் சிவ ந்த சிகப்பு யிதழைப்போன்ற நேத்திரங்களோடும் சாமுத்ரிகாசாஸ்திராக்தசர்வசுபலக்ஷணங்களோடும் சேர்ந்திருக்கப்பட்டவன். இதுவல்லாமல் சகல தர் மங்கள் தெரிந்த புண்யாத்மா பிரஞ்ஞை இவைகள் தவறிடாதவன். சகலவித பிராணிகளுக்கும் உபகா ரம் செய்யப்பட்டவன். சகலமும் அறிந்திருக்கப் பட்டவன். மகா பரிசுத்தமுடையவன். தன்னைச் சேவிக்கப்பட்டவருக்குச் சுவாதீனமாயிருக்கப்பட் டவன். இதுவுமன்றி தன்னைச் சேரப்பட்டவர்க்கு சம்ரக்ஷணைமுதலான நல்ல காரியங்களையே யோசிக் கப்பட்டவன். பிபிலிகாதிகளுக்கு முதலாய்கிற்ப வன். லட்சுமியை வாமபாகந்தன்னில் குடியிருந்த உல்லாசமடைந்தவன். எல்லோரையும் இரக்ஷிக்கச் சமர்த்தன். தன்னைச்சேராத துஷ்டருக்கு விரோதி. அவரை நாசமடையச்செய்வார். அவரவர் குணங் களை யோசிக்காமல் தன்னுடைய காரியமென்று இரக்ஷிக்கப்பட்டவன். கர்ம சண்டாளரைத் தண்டி த்து தர்மத்தைஸ்தாபிக்கப்பட்டவன். இதுவுமன்றி லோக திருஷ்டாந்தத்தால் அவருடைய குணாதி சயங்களைச் சொல்லுகிறோம். அதையும் சற்று கவ னித்து கேட்பாய். சம்பிரமென்பது சமுத்திரத்திற் கும் பெரிது. தைரியமாவது இமபர்வதத்துக்கும் பெரிது. சகலவற்றையும் சாதிக்கும் சக்தி தன்னில் சலசலரூபமாய் ஸ்திதிகர்த்தாவாய் இருக்கும் விஷ் ணுவுக்கு பார்க்கப் பார்க்க அபிநயமான ஆனந் தத்தைஉண்டாக்கும்பொருட்டுசெய்வது சந்திரனுக் கும் பெரிது. ஆக்கிருத சம்ரக்ஷணையாய் ஆஸ்ரய பிரகிருதிதன்னில் உண்டாகும் கோபமானது பிர ளயாக்கினிக்கும்பெரிது. சாந்தம் பூமிக்கும்பெரிது. ஔதாரியம் குபேரனுக்கும்பெரிது. சத்தியம் தர்ம தேவதைக்கும் பெரிது. இப்படிப்பட்ட குணத் தோடு சேர்ந்திருப்பாரென்று இப்படியெல்லாம் சவிஸ்தாரமாய்ச் சொல்லியபிறகு இவையெல்லாம் கேட்ட காஞேபாத்ரி அந்தப் பகவானுடைய கலி யாணகுணங்கள் தன்னில் தன் மனதை லயித்து மௌன நித்திரையடைந்து மெய்ம்மறந்து திடுக் கிட்டுத் தன்னுடைய வீட்டிற்குள்பிரவேசித்து தன் னுடைய தாயாரைப் பார்த்து, ஓ அம்மணி! இனி இந்த உடலைவைத்து இருப்பது நலமல்ல. இந்த வுடலிருக்கும்போதே ஸ்ரீமத் புண்டரீக வரதனை யடைந்து அவர் சேவைகண்டு மகிழ்ச்சி யடைய வேண்டும். இப்படி சேவையடையாத உடல் நாயி னும் கேடுகெட்ட நாயாகும். ஆகையால் யான் இந் தச் சாதுஜனத்தோடுசேர்ந்து பண்டரிபுரமடைந்து பண்டரிநாதனைச் சேவையடைந்து வருகிறேனெ ன்று சொன்னமாத்திரத்தில், இம்மொழியைக் கேட்ட தாயார் அம்மணி! நீ சொல்லும் மொழி யெல்லாம் நன்றுயிருக்கின்றது. இவையெல்லாம் ஞானமறிந்தவர்செய்யத்தக்கது. நம்முடையஜாதித் தொழிலைத்தவிர நாம் செய்தால் நமக்குப் பதவி கிட்டாதென்று சொன்னமாத்திரத்தில் தன் தாயா ரைப்பார்த்து அம்மணி! நீ சொல்லுவது சரியல்ல. மாயாரகிதமாகிய இந்தச் சமுசாரத்தில் மூழ்கிய பிறகு மனம் கொள்ளுமா? ஆகையால் நான் முன் னேசென்று சேவையடைந்து வருகிறேனென்று சொல்லி அந்தச் சாதுஜனங்களைத்தொடர்ந்து பண் டரிபுரமடைந்து புண்டரீகவரதனைக்கண்டு அனேக

வந்தனம்செய்து, ஓ அப்பிரமேயா! உன்னுடைய கீர்த்தியை ~னது சாதுஜனங்களால் கேள்வியடைந்து உனதுசேவை காணவேண்டி இப்படிக்கு வந்தேன். யான் கேட்டிருந்த சர்வ லக்ஷணங்களை மூர்த்திகரித்திருக்கும் உன்னுடைய திவ்விய மங்கள விக்கிரஹத்தைச் சேவித்த மாத்திரத்தில் என்னுடைய இருதயமென்னப்பட்ட சாதகத்தை மேக சாமமான உன்னுடைய திவ்விய மங்கள விக்கிரஹ சேவைதன்னில் வசித்துத் ததன்யத்தை துணிவித்திருக்கின்றது. அகிம்சகராகி நிஷ்டாநுசாரத்தை அநுசரித்தவர்க்கு நிர்கல்பவருஷமாய் இருக்கின்ரும். ஆகையால் என்னுடைய தோஷங்களை உன் மனதில் படிக்காமல் என்னை அங்கிகரிக்கவேண்டும். இதுவல்லாமல் சமுத்திரத்தில் விபீஷணனுக்கும் உபயசைன்யமத்தியில் அர்ச்சுனனுக்குமாய் அநுக்கிரகித்ததுபோல் அபயப்பிரதானத்தை ஸ்மரித்து சரணகத மடைந்த என்னைக் கைசோரவிடாது ஐயா! நீர் என்னை அங்கிகரித்தால் இந்த மாயாசமுசாரமென்னும் சிந்தையமர்ந்து உன்னுடைய பாத பங்கயங்களையே தியானம்செய்து இதரரைச் சேர மாட்டேன். என்மீது அபராத சமூஹங்களை கணக்கிடாமல் ரக்ஷித்து கீர்த்தியடைந்த நீர் என்னை அபேக்ஷித்து அபகீர்த்தியடையாதீர். நிர்வ்யாஜ பந்துவான உன்னை என் ரக்ஷணைக்குவேண்டிய யான் பிரார்த்திக்கின்றேன். இதுவல்லாமல் குழந்தையானது தன்னுடைய ரக்ஷணைக்கு வேண்டியல்லவா தன்னுடைய தாயாரை பிரார்த்திக்கிறது. இது திருஷ்டாந்தமாயிருக்கின்றது. இதுபோல் இந்த அகிலாண்டமெல்லாம் நிர்விஷயமாய் ரக்ஷிக்கப்பட்டவன். உனக்கு இந்த ஒரு ஆத்துமாவை ரக்ஷிப்பது பெரிய பாரமல்லவென்று இப்படியாகப் பிரார்த்தித்து தன்னுடைய ஆத்மபாரத்தை அந்தப் புண்டரீகவரதனுடைய பாதபங்கயங்களில் சமர்ப்பித்து ஸ்ரீமத் பாண்டுரங்கனுடைய பாதங்களை இடைவிடாமல் சேவித்துக்கொண்டு அவருடைய நாமங்களை தியானித்துக்கொண்டு பாகவதரோடு சேர்ந்து பகவன்நாமசங்கீர்த்தனம் செய்துக்கொண்டு கோலாகலத்தோடு ஆனந்தமடைந்து அந்தக் கோபுரதுவாரத்தில் வாசம் செய்துக்கொண்டு பகவத்தியானம் செய்துக்கொண்டு காலம் கழித்திருக்கும் சமயத்தில்.

அந்நாட்டைப் பரிபாலனம்செய்யும் வேந்தன் ஓர்நாள் தான் தனியாக அந்தப் பண்டரிபுரத்துக்கு வந்து ஸ்ரீ விட்டலநாதனை தரிசனமடைந்து போகலாமென்று பெருமனம்கொண்டு வரும்சமயத்தில் துவார வாயினுழையும் காலத்தில் கானுேபாத்ரி என்ற பக்திசிகாமணி துவாரவாயிலில் நின்றுகொண்டு பகவானைத் தோத்திரம் செய்யும் சமயத்தில் அவ்வேந்தன் இம்மாதைக்கண்டு மெய்ம்மறந்து ஆ! ஆ!! இதுவென்ன ஆச்சரியம் நமது எதிரில் நிற்கும் ரூபமானது மாதோ! அல்லது எந்த மன்னருடைய தேவியோ! மகாலட்சுமியோ! அந்தமாவென்ற சரஸ்வதியோ! இத்தனையழகுடைய பெண்ணை நாம் இதுவரைக்கும் கண்டதில்லை.. அந்த இந்திரனுடைய தேவியோ! அல்லது அவன் நாட்டில் வசிக்கும் ரம்பை ஊர்வசி மேனகை திலோர்த்தமை யென்று சொல்லப்பட்ட இந்த நாலுமாதரும் ஓர் வடிவாய் ரூபமெடுத்து இங்குவந்தளரோ? அல்லது எவர்கள் பிரார்த்தனைக்காக தங்கத்தையுருக்கி பெண் ரூபமாய் செய்து இங்கு அமைத்துவிட்டுச் சென்றனரோவென்று மனவியாகூலமடைந்து அப்பெண்ணின் சவுந்தரிய ரூபத்தைக்கண்டு மனதை பலவாருகச்சிதறச்செய்து தன்னுடையநாட்டிற்குச் சென்று தனது அந்தரங்க பரிஜனங்களை யழைத்து அப்பா நேசரே! யான் என்னவென்று சொல்லுவேன். இதுகால பரியந்தமும் நான் இப்படிப்பட்ட ரூபமுடைய பெண்பாவையைக்கண்டதில்லை. அந்தப் பெண்பாவை என் அருகில்வந்தால் என்பிராணன் நிற்கும். இல்லாவிடில் இதுசமயம் என் உயிர்நிற்பது நிச்சயமல்லவென்று சொல்ல இம்மொழியைக்கேட்டகாவலர் வேந்தனைப்பார்த்து ஓ இராஜோத்தமா! நீர் ஏன் விசனமடைகின்றீர்? அந்தப்பெண் எந்த நாட்டில் இருந்தபோதிலும் அப்பெண்ணை யெடுத்து வந்து உமக்குக் கொடுக்கின்றோமென்று சொன்னமாத்திரத்தில் வேந்தன் பித்தம் தெளிந்தவன் போல் பிரமித்து காவலரைப்பார்த்து சொல்லத் தொடங்கினன்.

ஓ காவலரே! நேற்றைய தினம் யான் வேட்டை மார்க்கமாய் போகும்காலத்தில் இந்த நாட்டிற்கு வடமூலையில் இருக்கின்ற புண்டரீக வரதனுடைய கோபுரதுவாரத்தில் அதிக சுந்தரமுடைய ஓர்பெண் பாவை வாசம் செய்துக்கொண்டிருந்தாள். அம்மாதின் நாமதேயம் கானுேபாத்ரியென்று சொல்லுவார். ஆகையால் அம்மாதிடம்சென்று யான் அவள் மீது அதிக மனம் கொண்டதுபோல் சொல்லி அதிசீக்கிரத்தில் என்னிடமழைத்து வருவீரென்று சொன்னவுடனே இம்மொழிகேட்டு காவலர் அதிக

சந்தோஷமடைந்து ஐயனே! எங்களை ஆண்டு ரக்ஷிக்கும் தீனதயாளா! இதோ உமது இஷ்டப்படி அதிசீக்கிரத்தி லழைத்து வருகின்றேமென்று சொல்லிவிட்டு அதிவேகமாய் நடந்து அந்தக் கோபுர துவாரமடைந்து அம்மாதைக்கண்டு அநேக வந்தனம் புரிந்து நிற்கையில் காஞேபாத்ரி இவர்களைக் கண்டு அப்பா! நீங்கள் ஆர்? எந்நாட்டிலிருப்பது? உமது பெயரென்ன? இங்குவந்து என்னைச்சேவித்த காரியமேது? அதையடியாளுக்கு தெரியச் சொல்லுமையா? என்று கேட்டமாத்திரத்தில் காவலர் சந்தோஷமடைந்து இருதோள்களும் பூரித்து ஆனந்தக்கடலில்மூழ்கிச் சொல்லத்தொடங்கினர். கேட்டீரோ அம்மா! நாங்கள் ஏதென்று சொல்லுவோம் உம்மைப்பார்த்தால் எமதுதாயார்போல்காட்டுகின்றது. ஆகையால் நாங்கள் உம்மை அநேக தினமாக இந்த ஆலயத்தில் பார்த்துக்கொண்டிருக்கின்றேம். இப்படி தனித்திருப்பது நீதியா? இந்தவயதில் நீர் காமவிகாரத்தைவெறுப்பது உலகவிரோதமல்லவா? ஆகையால் நாங்கள் சொல்லும்படியான மொழியை அங்கீகரிப்பீரோ? அல்லது கோபமடைவீரோ? என்று பயமடைகிறேமென்று சொன்னமாத்திரத்தில் காஞேபாத்ரி இம்மொழியைக்கேட்டு அப்பா! நீங்கள் சொல்லுவது நீதிதான். ஆனபோதிலும் எக்காலத்திலும் காமமாயையென்னும் விகாரத்திலகப்பட்டுத் திருவது தர்மமல்ல. பகவானுடைய பாதங்களை தியானம்செய்து மோக்ஷமென்னும் வீட்டையடைவது உத்தமகாலம். ஆகையால் உமக்கு தெரிந்தமாத்திரம் நியாயம் சொல்லுமையா? என்று சொன்னமாத்திரத்தில் காவலர் சொல்லத்தொடங்கினர்.

கேட்டீரோ அம்மா! உமது காலம் வீணுய்ப் போக்குவது நியாயமல்ல. எப்படியென்றுல்; இந்நாட்டை பரிபாலனம்செய்யும் உத்தமர் உமதுமீது அதிக ஞாபகமடைந்திருக்கின்ருர். ஆகையால் அந்த மகானுபாவரிடம் தம்மைப்போன்ற உத்தமி வாழ்ந்தால் நல்ல கீர்த்தியடையலாம். இதுவல்லாமல் அவர் உம்மைக்கண்டு அதிகநாளாக மோகம் அடைந்து அன்ன ஆகாரமில்லாமல் உமது ஞாபகமே அதிகமாய்க் கொண்டிருக்கின்ருர். இச்சமயத்தில் நீர்வந்தால் பிழைப்பார். இல்லாவிடில் பிழைப்பது அரிது. ஆகையால் உம்மை அழைத்துக் கொண்டு வரும்படி எம்மைத் தூதனுப்பினரென்று சொன்னமாத்திரத்தில், இந்த உத்தமிக்குத் தேகம் எரிச்சலுண்டாகி கண்கள் சிவந்து தன் கோபத்தைத் தானே ஆற்றிக்கொண்டு அப்பா காவலரே! நீங்கள் சொல்லியமொழிக்கு அதிக சந்தோஷமடைந்தேன். ஆனுல் சற்றுநேரம் இங்கு நிற்பீர். இதோ யான் ஆலயத்திற்குள் சென்று பகவானைச் சேவைசெய்து அதிவேகமாய் உமது பின்பற்றி வருகின்றேன் நீங்கள் ஏதுக்கும் துயரப்படவேண்டாம் என்றுசொல்லி அதிதுரிதமாய் ஆலயத்துக்குள்சென்று பகவானுடைய அக்ரபாகத்தில்நின்று ஒ ஆபத்பாந்தவா! அந்தரங்கமறிந்த பிராணநாதா! யான் இதுவரைக்கும் உனக்கு தாசியாயிருக்க இக்காலத்தில் என்னை ஒருவேந்தன் அபேக்ஷிக்கரியயமாகுமா? இது எப்படியென்றுல்; இரும்படிக்கு மிடத்தில் நாய்க்கு என்னதொழில்? என்பதுபோல் இப்படிப்பட்டசமயத்தில் நீர் என்னை அபேக்ஷிக்காமல் வெறுக்கலாமா? இந்தச் சமயம் எப்படியாகிலும் இரக்ஷிக்கவேண்டுமென்று இரண்டு கைகள் சேர்த்து நமஸ்காரம்செய்து நிற்கும் சமயத்தில் அந்த ஆலயத்தில் இருந்த ஒரு அர்ச்சகரும் சாது ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும் சமயத்தில் இந்த உத்தமியாகிய காஞேபாத்ரியுடைய சரீரத்திலிருந்து ஓர் திவ்வியமாகிய ஜோதியானது வெளியில்வந்து ஸ்ரீ பண்டரிநாதருடைய திவ்விய மங்கள விக்கிரஹத்தில் பிரவேசித்தது. அதன்பிறகு பகவானுடைய நியமத்தால் அந்தப் புண்ணியவதியுடைய சரீரமானதுவிழுந்தது. பிறகு அந்த ஆலயத்திலிருந்தவர்கள் அந்த ஆச்சரியத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்சமயம் அந்த திவ்விய சரீரமானது பகவானுடைய சங்கற்பத்தால் ஓர் விருக்ஷமாய் விட்டது. அந்த விருக்ஷமானது இதுவரைக்கும் பிரகாசித்துக்கொண்டுவருகின்றது. இப்படியாகவே அந்தக்ஷேத்திரத்துக்குப் போகும்படியான சாதுக்களெல்லோரும் அந்த விருக்ஷத்தை அதிககௌரவித்து காஞேபாத்ரியை ஸ்மரித்துக்கொண்டு அந்தப்பத்திரத்தை சிரசில் தரித்துக்கொண்டு வருகின்றுர்.

இப்படியிருக்கும்சமயத்தில் அந்த வேந்தனுடைய காவலர் சிலநேரம் காஞேபாத்ரி வரவைப் பார்த்துக்கொண்டிருந்து வராதபடியால் அந்த ஆலயத்துக்குள் பிரவேசித்து அங்கிருந்தவர்களிடத்தில் நடந்த சவிஸ்தாரமெல்லாம் செவ்வையாய் விசாரித்துமெய்மறந்து ஆ! ஆ!! இதென்ன ஆச்சரியம்? நீங்கள் சொல்லுவது மகா உசிதமாயிருக்கின்றதென்று நீங்கள் எங்கேயோ ஒளித்துவைத்திருக்கின்றீரென்று அங்கிருந்த அர்ச்சகரெல்லோரையும் அதட்டிக் கேட்க, அவர்கள் ஐயா! நாங்கள் ஏது

பாபம் அறியோமென்று நிஜம்சொல்லியும் அவர்களைக் கைதிசெய்து அரசன்சமுகம் கொண்டுபோய் சேர்த்தார்கள். அதன்பிறகு அரசனுக்கு இந்த சவிஸ்தாரமெல்லாம் விசிதமாகத் தெரியச்சொன்னர். அக்காலத்தில் அரசன் அந்த அர்ச்சகர் மொழியை நம்பி திகைத்துப்பார்த்து அவர் தன் கையில்கொடுத்த பகவத் பிரசாதத்தை தனது கண்ணால் பார்க்கும்சமயத்தில் அதில் ஓர் ரோமம் இருந்தது. அப்போது அவ்வேந்தன் அந்த அர்ச்சகரைப் பார்த்து ஓ விப்பிரமரே! நமது பண்டரிநாதனுக்குத் தலையில் சிகையிருக்கின்றதா? என்று கேட்க, அர்ச்சகர் பயமடைந்து முன்பின் யோசிக்காமல் உண்டென்று சொல்லிவிட்டார். அப்பொழுது அரசன் ஆச்சரியமடைந்து, ஆனல் யான் பண்டரிபுரத்திற்குவந்து அந்த திவ்விய விக்கிரஹத்தைத்தரிசித்து பரிக்ஷிக்க வேண்டும். அப்படி நீங்கள்சொன்னதுபோல் சிகையிருக்குமாகில் உம்மை யேதும் செய்வதுமில்லை. இல்லாவிடில் உங்களை வாளுக்கு இரைசெய்விப்பேனென்றுசொல்லி அவருடன்சேர்ந்து பண்டரிபுரத்திற்குவந்து பண்டரிநாதனைப்பரிசோதிக்கும்காலத்தில் அந்த சரணுகதவத்ஸலனுகிய ஜகன்னுதன் தன்னைத் தினந்தோறும் பயபக்தியோடு பூசிக்கும் அர்ச்சகர்கள் மொழியை நிஜமாக்கும்பொருட்டு அதிக பெரிய குடுமியோடு இருப்பதுபோல் சேவை தந்துவிட்டார். அப்போது அவ்வேந்தன் பயமடைந்து அந்தப்பாண்டுரங்கனுக்கும் அர்ச்சகருக்கும்அனேக வந்தனம் செய்து தியானிக்கத்தொடங்கினர்.

## தோத்திரமாலை.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

நிர்மலனே நிஷ்களனே நிர்விஷய காருண்யனே
நித்தியமாய் முத்திதரும் நீலமேக சியமா
மர்மமொன்றும் யானறியேன் மாதவ கோகுலனே
மஹாதேவா மாரூபா மங்கள விரதாபா
கர்மமென்னும் மாயைகொய்து காக்ஷிதாரும்தேவா
கசடன்செய்த பலபாவம் கண்டுதீரு மையா
தீர்த்தருள வாருமையா தேவர்போற்றும் தேவா
திவ்யகுண மாதுய்யா தீனுபி தானு.

இப்படியாக பலவாறு தியானம்செய்து கானோபாத்ரி சரீர பரிணுமரூபமான விருக்ஷத்தை பிரதக்ஷண நமஸ்காரம்செய்து அந்தப்பத்திரத்தை சிரசில்வகித்து அங்கிருந்த சாதுக்கள்சேவையடைந்து தன்னிருப்பிடம் சேர்ந்தான்.

கேட்டீரோ பக்தர்களே! இப்படியல்லவோ பக்திவிஷய மிருக்கவேண்டும். இப்படி பக்திசெய்யாத ஜன்மம் ஏதுக்கும் பலிதமில்லையென்று தெரிந்துக் கொள்ளலாமென்று சொன்னமாத்திரத்தில் சூரியன் மேற்குத்திசை யடைந்துவிட்டான். இதை யறிந்து எல்லோரும் எழுந்து அவரவர் இருப்பிடம் சென்றூர்கள்.

:கானோபாத்ரி சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீமகா பக்தவிஜயம் மூன்றும்பாகம்

ஸம்பூர்ணம்.

ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநமஃ

# ஸ்ரீமகா பக்தவிஜயம் நான்காம்பாகம்.

இருபத்துமூன்ருவது

## சாந்தபமணிராஜன் சரித்திரம்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

வரதனே உன்பதத்தை வந்தித்தேன் மனதில்
வாருமையா துயரதனைத் தீரு மையனே
கருமமென்னும் பாசபந்தம் கண்டுகொய்து தீருமென்னை
காக்ஷிதர வேணுமையா கண்ண பிரானே
பருவகாலம் தன்னிலுன்னை பக்ஷமுடன் துதித்தேன்
பரமதயா குணநிதியே பாண்டுரங்கா தேவா
அருமையுடன் கோகுலத்தி லவதரித்த மெய்யா
அபயமென்றே னுன்பதத்தை ஆளுமெனைத் துய்யா.

சுலோகம்.

வாத்ஸல்யாதபயப்பாதான சமயாதார்தார்திநிர்வாபண
தௌதார்யாதகசோஷண தகணிதாஸ்ரெயஃ பதப்ராபணத்
ஸேவ்யஸ்ரீபதிரேகயேவராக தாமேதேவஷட்ஸாக்ஷிண
ப்ரஹ்ளாதஸ்தகவிபீஷணஸ்சகரி ராட்சாம்சால்யஹல்பாத்துருவஃ

இப்படி யிருக்கும்சமயத்தில் நாபாஜிசித்தர் அந்தச்சமயத்தில் சூரியதரிசனம் அகப்படுமென்று தியானித்துக்கொண்டிருக்கும் காலத்தில் சூரியபகவான் கிழக்குத்திசையில் தாயின் கர்ப்பத்திலிருந்து பாலகன் வருவதுபோல் தன்னுடைய இரதமேறி உலகப்பார்வை செய்யும்பொருட்டு வெளிப்புறப்பட்டார். இதைப் பார்த்தவுடனே நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து அதிக துரிதமாக எழுந்து நித்தியக்கடனை முடித்துக்கொண்டு கங்கைக்கரையடைந்து ஸ்நானம்செய்து நெற்றியில்திருமண்காப்பிட்டு பட்டுபீதாம்பரம் தரித்து துளசிமாலை அணிந்து பகவான் எதிரில்சென்று, ஓதீனபந்து! ஜனார்த்தனு! ஆபத்பாந்தவா! எனக்கு இன்னம் ஜென்மமில்லாமல் காக்கவேண்டும் சுவாமி! என்று தோத்திரம் செய்துகிற்கும் சமயத்தில் சிடரெல்லோரும் கும்பலாகக்கூடி நித்தியகடனை முடித்துக்கொண்டு நிற்கும்சமயத்தில் இந்தக் கூட்டத்தில் பெருந்தலையாக நிற்பவர் இவர்களைக்கண்டு, ஓ நேசரே! நாம் எல்லோரும் இப்படி காலம் கழித்துக்கொண்டு நமது குருநாதர் சொல்லும்படியான சரித்திரத்தைக்கேட்டுக்கொண்டிருப்பது நலமா? நாம் ஞானமடையும் மார்க்கம் ஏதும் தெரியாமல் அலைவது நீதியா? ஆகையால் நாம் எல்லோரும் இன்றையத்தினம் கும்பலாகக்கூடி குருநாதரிடம் சென்று ஞானமார்க்கம் தெரிவிக்கும்படி கேட்டு, ஞானசூக்குமத்தை அறிந்து, ஞான வைராக்கியராய் உலகத்தில் வாசம் செய்யலாம் என்று சொன்னவுடனே இம்மொழியைக்கேட்ட மற்றவர் இதற்குச் சம்மதமடைந்து சந்தோஷகரமாய் நாபாஜிசித்தரிடம் சென்று அனேக வந்தனம்புரிந்து சொல்லத்தொடங்கினர்.

கேட்டீரோ சுவாமி! இந்த உலகமாய்கையால் நாங்கள் எத்தனைகாலம் ஊர்ந்துகொண்டிருப்பது? இவைகளை வெறுத்து முக்தியைச்சேர்வது என்று? இதை அறியும்படியான மார்க்கத்தை எங்களுக்குத் தெரிவிக்காமல் சரித்திரங்கள்சொல்லி காலம்கழிப்பது உமக்குத் தர்மமா? அடுத்த சீடருக்கு உபதேசம் செய்யாமலிருப்பது நீதியா? என்று கேட்ட மாத்திரத்தில் நபாஜிசித்தர் சந்தோஷமடைந்து புன்சிரிப்புகொண்டு சீடரைப்பார்த்துச் சொல்லத் தொடங்கினர்.

கேட்டீரோ சீடரே! உலகமாய்கையில் அகப்படாமல் மோக்ஷமானது அதிசீக்கிரத்தில் அகப்படுவது துர்லபம். அது எப்படியென்றால், அதற்குத் திருஷ்டாந்தமாய் ஓர் சிறிய சரித்திரம் சொல்லுகிறேன். அதைக் கேட்டபிறகு உங்களுக்கு ஞானோபதேசம் செய்கின்றேன் என்று சொன்னவுடனே சீடர் இதைக்கேட்டு சந்தோஷமடைந்து அது எப்படிப்பட்டது? யாருடைய சரித்திரம்? அதை விசிதமாகத் தெரியச்சொல்லும்; சுவாமி! என்று நமஸ்காரம்செய்து கேட்டபிறகு நபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர். ஐயா சீடரே! இதைப்போல பக்திரசமாகிய சரித்திரம் கிடையாது. இந்த சாந்தபமணி வேந்தனைப்போல் பக்திவானானவன் தேடி அகப்படுவது அதிக துர்லபம். ஆகையால் இவருடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேளுமென சொல்லத்தொடங்கினர்.

இது எப்படியென்றால், நீர்வளம் நிலவளம் இவைகளில் அதிக உன்னதமடைந்தும் கூடகோபுரம் அடங்கியிராநின்ற பெதரியென்னும் பட்டணத்தைப் பரிபாலனம்செய்யும் சாந்தபமணி வேந்தன் தன்னுடைய மந்திரி பிரதானிகள் புடைசூழக் கட்டியங்கூறிநிற்க, வேதகோஷ்டம் பாட, நாட்டியப் பெண்கள் ஆட, கொலுவமர்ந்து குடிகளிடத்தில் ஆறிலொருபங்கு பகுதிபெற்று சந்தோஷமாயிருக்குங்காலத்தில் இந்த உன்னதமறிந்து அந்நாட்டில் மாதமும்மாரிபெய்து குடிகளுக்கு ஏதுங் குறைவின்றி வளப்பம்தந்து சுகமாய் மாதரோடுகூடி சந்தோஷமாய் இருந்தார்கள்.

இப்படி யிருக்கும்சமயத்தில் ஓர்நாள் இந்த வேந்தன் திவ்வியமாகிய வஸ்திராபரணாலங்காரம் செய்துகொண்டு தன்னுடைய பத்தினிமாருடன் கூடி அந்தப்புரத்தில் சந்தோஷமடைந்து உப்பரீகைமேல் நின்று ஜன்னல் கதவுகளைத்திறந்து மதுரமாகிய பழங்களைப் புசித்துக்கொண்டு அந்தப்பழத்தினுடைய மேல்தோல்களை அந்த ஜன்னல் துவாரமாக வெளியில் எறிந்துவிட்டார். இப்படி போட்ட சமயத்தில் உன்மத்தப்ராயனான பனுகு வென்னும் ஞானபுருடன் அங்கிருந்த இராஜகாவலர்க்குத்தெரியாதபடிக்கு மெதுவாக அங்குவந்து அந்தவேந்தன் எறியும்படியான பழத்தோல்களை பொறுக்கித் தின்றுகொண்டிருந்தார். இந்த ஆச்சரியத்தை அரசனுடைய பத்தினிமார்கள் கண்டு, ஓ இராஜேந்திரா! எவனோ பரமபுருஷன் இந்த அந்தப்புரம்வந்து நாம் இருக்கும் உல்லாசத்தைக்கண்டு நாம் எறியும்படியான பழத்தோல்களைப் பொறுக்கித் தின்றுக்கொண்டிருக்கின்றான் என்று சொல்லிக் காட்டினர். இம்மொழியைக் கேட்டமாத்திரத்தில் வேந்தனுக்கு அதிக கோபம்பிறந்து கண்கள்சிவந்து பற்களை நறநறவென்று கடித்து காவலரை அழைத்து அடா காவலரே! நீங்கள் ஏன் இப்படி காவல்செய்வது நீதியா? உங்களுக்கு மாதம் சம்பளம்கொடுத்தும் இது தர்மமா? எனக் கோபித்து அடா காவலனே! அந்தப்புரத்தில் வந்த சோரனை அடித்துத் துரத்துமென்று ஆக்கினையிட்டார். இதைக்கேட்ட காவலர் அரசனுடைய ஆக்கினைபோல் அந்தப் பனுகு என்பவரை அடித்துத் துரத்தும்சமயத்தில் உன்மத்தப் பிரியனான பனுகு வேந்தன் காவலர் தன்னைக் கடினமாய் அடித்துக்கொண்டிருக்கும் அடிகளைப் பொறுத்துக்கொண்டு கலகலவென்று சிரித்துக் கொண்டிருந்தார்.

இந்த ஆச்சரியத்தை அந்த வேந்தன் பார்த்து அந்தக் காவலரை யழைத்து அடிக்கவேண்டாமென்று ஆஞ்ஞாபித்து, அந்தப் பனுகுவைத் தன்னிடத்திற்கு அழைத்துவரும்படி திட்டஞ் செய்ய அதுபோலவே அந்தப் பனுகுவை அரசனிடம் அழைத்துவந்தார்கள். இவரைக் கண்டவுடனே வேந்தன் அவரைப்பார்த்து, ஓ உன்மத்தா! உன்னை இப்படியாகக் கடினமாக அடித்ததால் அழாமல் சிரித்துக்கொண்டிருக்கும் காரணமேது? என்று கேட்டமாத்திரத்தில் இம்மொழியைக் கேட்ட அந்தப்பனுகு மறுபடியும்சிரித்து ஓ வேந்தனே! நீ எறிந்துவிட்ட பழத்தோல்களை தின்றதைப்பற்றி எனக்கு இப்படியாகத் தண்டனைவிதித்தாய். ஆனபோதிலும் பெரிதல்ல. அந்தப் பழத்தை நீ தின்றதைப் பற்றி உனக்குப் பகவான் எப்படி தண்டனை விதிப்பாரோ தெரியாது. இதுவல்லாமல் இராஜகிரஹத்திற்கு வெளியிலிருந்த என்னை இப்படி தண்டனை விதித்தாய். நீர் அந்தப்புரத்தில் சந்தோஷமடைந்து சுகலீலைகள் அனுபவித்திருந்தாயே உனக்குப் பகவான் எப்படிப்பட்ட தண்டனை விதிப்பாரோ அறி

யேன். இதுவல்லாமல் யானே ஏகாங்கியா யிருக்கப் பட்டவன்; என்னை இப்படியாகத் தண்டனைவிதித் தாய். நீர் அனேக ஸ்திரீகளுடன் கிரீடாவிலாசமா யிருக்க, உன்னை எப்படி பகவான் தண்டிப்பானோ தெரியோம். பிறருக்கு ஓர் கேடுஞ்செய்யாத உத்த மனை இப்படி தண்டனைசெய்தாய். பிறருக்கு அப கீர்த்தி செய்யும்படி இராஜ்ஜியபாரம் செய்துவரும் உனக்குப் பகவான் எப்படிதண்டனைவிதிப்பாரோ? இந்திரியங்களைக் கிரகித்துப் பகவத்பரனை என்னை இப்படி தண்டனைவிதித்தாய். இந்திரிய கிங்கரனை பகவத்விஷயம் வெறுத்தவனை உம்மை எப்படிப் பட்ட தண்டனை விதிப்பானோ? என்று மனதில் எண்ணமிட்டு யான் சிரித்தேன். இன்னம் கேட பாயாக:

சுலோகம்.

த்வயிமயிஸர்வத்ரைகோவிஷ்ணுஃ
வ்யர்தம்குப்யசிமய்யாஹிஷ்ணுஃ
பவசமசித்தஸ்ஸர்வத்ரத்வம்
வாம்சஸ்யசிராத்யதிவிஷ்ணுத்வம்.

ஓ வேந்தனே! உன் உள்ளத்திலும் என் உள் ளத்திலும் சர்வத்திலும் ஒரேவிஷ்ணுவாய் வியாபித் திருக்கின்றாரல்லவா. அப்படியிருக்க வியர்த்தமாக நசஹமானமாய் என்மீது கோபமடைந்தாய். நீ துரி தமாய் விஷ்ணுசாயுஜ்யத்தைக்கோருவையாகில் ஈஸ் வர விபூதியாகிற சமஸ்த சேதனசேதனங்கள் சம பாகமாய்ச்சேர்ந்திருப்பாயென்று சொன்ன மொழி யைக் கேட்டமாத்திரத்தில் வேந்தனுக்கு ஞானோ தயமாய் வைராக்கியபரனைப் பிள்ளைகளையும் மக்க ளையும் பந்து ஜனங்களையும் பெண்டாட்டிகளையும் விட்டு அனேக சைனியங்களையும்விட்டு தனம் முத லாகிய தன்னைச் சேரும்படியான சம்பந்தங்களைவெ றுத்து அந்த அரசன் தன்னுடைய மனதை வெறு த்து பனுகுசொன்னமொழிகளைக் கேட்டமாத்திரத் தில் பகவத்கடாக்ஷத்தால் அந்த அரசனுக்கு பக்தி அதிகரித்து நிர்ஜனவனத்தில் பிரவேசித்து ஓர் விசா லஸ்தலத்தி லமர்ந்து அங்கு மேலாகிய மானவசரீரத் தை யடைந்து விஷயானுபவத்தை இக்காலத்தில டைந்தேன். ஆனல்பகவான் ஜடப்பிரியமானபனுகு ரூபமாய் வந்து என்னை அனுக்கிரஹித்து காத்தீர். யான் எவ்விதமாய்ப் பகவானை ஆராதித்துத் தன் னியனுவேனென்று ஆலோசித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் பண்டரியாத்திரை செய்யும்படியான சாதுஜனங்கள் கும்பலாகக்கூடி சகல சராசரம் உற் பத்திக்கிடமான நாபியிடமான பகவானைத் தியா னித்துக்கொண்டு ஆனந்தமடைந்தே நடனம் செய் துக்கொண்டு அவ்வேந்தன் இருக்கும் மார்க்கம் பிடித்து போய்க்கொண் டிருந்தார்கள். இப்படிப் போகும்படியான ஜனங்களை வேந்தன் கண்டு பரமா னந்தபரிதனய் எழுந்துவந்து அவருக்கு வலப்பிர தக்ஷணமாய் வந்து அனேககோடி நமஸ்காரம் செய்து, ஓ சாதுக்களே! இன்றையத்தினம் எனக்கு நல்லதினமாயிருக்கின்றது. ஆனல் யாமும் உம்மைப் பின்பற்றி வருகின்றோம் என்று சொல்லி, அவரு டன் பண்டரிபுரமடைந்து சந்திரபாகாநதியில் ஸ்நா னம் செய்து இந்திரேசனுடைய மந்திரத்திற்குள் பிரவேசித்து அங்கிருக்கும் சாதுஜனங்களுக்கு வந் தனம்செய்து, கடிக அஸ்தனைய் செங்கல்மீது நின்று கொண்டிருக்கும் புண்டரீகவரதனைச் சேவையடை ந்து காடாலிங்கம்செய்து அந்தப் புருஷோத்தம னுடைய பாதபங்கயங்களைத் தன் சிரசின்மீது அமர்த்திக்கொண்டு,

சுலோகம்.

நமோஸ்த்வநந்தாயஸஹஸ்ரமூர்தயே
சஹஸ்த்ரபாதாக்ஷிசிரோருபாஹவே
ஸஹஸ்ரநாம்நேபுருஷாயசாஸ்வதே
ஸஹஸ்ரகோடியுகதாரிணேநமஃ

இப்படியாக ஸ்தோத்திரம் செய்து, ஓ பண்டரி நாதா! அஞ்ஞானகூபத்தில் மூழ்கியிருந்த எனக்கு பனுகுரூபமாய் வந்து ஞானோபதேசம் செய்தாய். யான் இதுவரைக்கும் சாதுசாவகாசம் செய்தறி யேன். உன்னுடைய பொருளாகிய இந்த ஆத் மாவை உனது இஷ்டம்போல் பரிகரிக்கவேண்டும். இது முதற்கொண்டு என் ரக்ஷணத்துக்கு எனக்கு யாருங்கிடையாது. நீர் எனக்கு ஆத்மாவாகி யான் உனக்கு சரீரமாயிருப்பதால் இந்தச் சரீரத்தில் இருக்கும்படியான அழுக்கை நீரே போக்கடிப்பீ ரென்றுசொல்லி கோபுரத்வாரத்திற்குவந்து அன்ன ஆகாரமில்லாமல் விரதமடைந்து மூன்றுநாள் இராத் திரியும் பகலும் உபவாசத்துடனே நிஷ்டானுபரரா யிருந்தார். இப்படியிருக்கும் காலத்தில் ஸ்ரீருக்கு மணி காந்தன் மூன்றுநாள் இராத்திரிகாலத்தில் அந் தப் பக்தனுடைய சொப்பனத்தில் வந்து சாக்ஷாத் கரித்து விவேகசிந்தென்னும் கிரந்தத்தை அவர் கையில் கொடுத்து ஓ வச்சா! நீ ஏதுக்கும் துயரப் படவேண்டாம். உன்னுடைய பிரார்த்தனையை அங்கீகரித்து உன்னுடையரக்ஷணபாரத்தை யானே வகித்திருக்கின்றேன்.

ஆனல் இப்பொழுது நீர் கல்யாணபுரத்தில் சஹகானந்தசுவாமி என்னும் ஓர் மகாத்துமா இருக்கின்ருர். நீர் அவருக்குச்சீடராய் அவரால் உபதேசமடைந்து சுகமடைவீர் என்று அனுக்கிரஹித்து மறைந்தார். இப்படி யிருக்கும்சமயத்தில் அவ்வேந்தன் நித்திரை செய்துக்கொண்டிருப்பது நிச்சயசமயத்தில் இந்தக்கனவை கண்டவுடனே நித்திரை தெளிவுவந்து திரஸ்கரித்துப் பார்க்கையில் பகவான் அவர் சொப்பனத்தில் தனக்குக் கொடுத்த புஸ்தகமானது நிச்சயமாய்த் தன்கையில் இருப்பதை யறிந்து ஆச்சரியமடைந்து சொல்லத் தொடங்கினர். எப்படியென்ருல்,

சுலோகம்.

"அத்யமேசபலம்ஜன்ம சுப்ரபாதாசமேனிச"

இதுபோல் என்ஜன்மமானது இன்றையதினம் சாபல்யமடைந்து இன்று இராத்திரி நல்ல ப்ரபாவமுண்டாயிற்று. என்றுசொல்லி தனக்குப் பகவான் அனுக்கிரகித்தபடி விவேகசிந்து என்னும் கிரந்தத்தை நன்ருய்ப்படித்து மனதிற்குத் திடம்செய்துக் கொண்டிருக்கும் சமயத்தில் இவருடைய பாக்கிய விசேஷத்தால் சஹகானந்தசுவாமி புண்டரீக வரதனைச் சேவைசெய்யும்பொருட்டு மனமெண்ணி பண்டரிபுரத்துக்கு வந்துசேர்ந்தார். இவர் வந்தபிறகு வேந்தன் அனேக தானம்செய்து கிட்டாத பேதைபோல் மனம்வாடி சஹகானந்தசுவாமி எதிரில்வந்து பிரதக்ஷணம் செய்து அனேககோடி வந்தனங்கள் சமர்ப்பித்துத் தன்னுடைய கனவின் சவிஸ்தாரங்களையெல்லாம் விசிதமாய்ச் சொன்னர். அந்த பரமாத்துமா சந்தோஷமடைந்து பரமகிருபையோடு அந்த அரசனுக்கு ஸ்ரீதாரகமந்திரத்தை உபதேசம் செய்து மிருத்தியஞ்சனென்றுநாமதேயம்கொடுத்து ஸ்ரீபாண்டுரங்கனைச்சேவையடைந்து கலியாணபுரத்திற்குச் சென்ருர். அதன்பிறகு மிருத்துஞ்சயன் குருவதிஷ்ட மார்க்கமாய்நின்று அனவரதமும் மனதில் தியானசீலனய் பரமானந்தமடைந்து சாயுஜ்ஜிய சுகத்தை அனுபவித்துக்கொண்டு நாராயணபுரத்தில் வாசம் செய்துக்கொண்டிருந்தார்.

இப்படி யிருக்கும்சமயத்தில் அந்நாட்டிலிருந்த ஓர் பவராயஜங்கமனென்பவன் மிருத்துஞ்சயரை அனுசரித்து அவருடைய அனுக்கிரகமடைந்து எக்காலமும் பகவத்குணனுபவத்தைச்செய்துக்கொண்டிருந்தார். இப்படியிருக்க அங்கிருந்த ஜங்கமர்களில் பெரியவனுகிய ஹம்சன் என்னும் பேருடையவன் அந்த ஜங்கமர்களுடைய சவிஸ்தாரங்களையெல்லாம் விசிதமாய்க் கேட்டு பவராயஜங்கமரை அழைத்து ஞானவானுயிருந்தபோதிலும் அன்யஜாதியா யிருப்பவனுகிய மிருத்துஞ்சயனை நீ எப்படி ஆசாரியனுய்ப் பரிக்கிரஹிக்கின்ருய்? எங்களுடைய அநுமதியில்லாமல் நீ கொடிய தப்பிதம் செய்தாய்? ஆகையால் இதற்காக நீபிரஷ்டனுய் நின்றுவிட்டாய். இதற்குத் திருஷ்டாந்தம் எப்படியென்ருல் பித்தளைக்குத் தங்கமுலாம்கொடுத்தபோதிலும்அதுதங்கமாகுமா? அதுபோல் மிருத்துஞ்சயன் எவ்வளவு ஞானமுடையவனுயிருந்தபோதிலும் அவர்நம்மைப்போலொத்த ஜங்கமராவாரா? என்று சொல்லி அந்நாட்டிலிருந்த ஜங்கமரையெல்லாம் அழைத்து ஒரேகட்டாகமொழியாடி பவராயஜங்கமரைத்தம்முடையஜாதியிலிருந்து வெளியாக்கினர். இப்படி தன்னுடைய இனத்தார் செய்த கோலாகலத்தை பவராயஜங்கமர் மனதிலெண்ணமிட்டுச் சோகமடைந்து தனக்குக் குருவாயிருக்கும் மிருத்துஞ்சயரிடத்திற்கு வந்து அனேக நமஸ்காரம்செய்து அங்கு நடந்த சவிஸ்தாரங்களையெல்லாம் நன்ருய்த் தெரியச்சொன்னர். இதைக் கேட்டுச் சந்தோஷமடைந்து புன்சிரிப்புடன் பவராயஜங்கமரைப்பார்த்து, ஓ பக்தனே! நீ ஏன் விசனமடைகிருய்? யார் தூஷித்தபோதிலும் யார்பூஷித்தபோதிலும் உனக்கு ஏது கோபம்? தூஷண பூஷணங்கள் சரீரத்துக்கேயல்லது ஆத்துமாவுக்கு ஏதும் கிட்டாது. ஆத்துமா ஞானனந்த சொரூபமாய் ஞானபூரணமாய் நித்தியமாய் அவிகாரியாய்ப் பகவானுக்கு சேஷபூதனுயிருக்கும். அம்சன் முதலானவர்கள் உனக்கு அவமானம் செய்யவேண்டுமென்று மனதிலெண்ணி உனது சரீரத்துக்கு அவமானம் செய்தார். இது எப்படியென்ருல், ஒருபுருடன் ஜனசூன்யமான ஆரண்யத்தில் போய்க்கொண்டிருக்கும் சமயத்தில் தன்னைக் கொல்லும்படி வந்த ஜந்துவை இன்னெருவன்வந்து சம்மாரம்செய்தால் தான் சந்தோஷமடைவான். அந்தகுரூரஜந்துவைக் கொன்றவர்க்கு வெகுமானம் செய்யவேண்டுமல்லவா? அதுபோல சம்சாராந்தகாரத்தில் பிரமத்துக்கும் சேதனத்துக்கும் இந்தச் சரீரமானது விரோதியாயிருக்கும். எப்படியென்ருல் ஓர்பாண்டத்தில் வைக்கப்பட்ட தீபத்தின்காந்தி அந்தப்பானையில் அமைந்திருக்குமல்லாமல்வெளிகாட்டுமா? ஆகையால் அந்தத் தீபம் நிறைந்திருப்பதுபோல் ஆத்மாவில் ஞானவியாப்தி உன்னுடைய சரீரமத்தியில் நிறைந்திருக்கும். ஞானசங்கோசத்தால் ஆத்மா ஸ்வஸ்வரூபத்தையும் ஈஸ்வரஸ்வரூபத்தையும் மறந்து பாப காரியத்தில் உட்படுகின்றது.

இப்படிப்பட்ட விரோதியான சரீரத்துக்கு ஈடு செய்பவர்மீது புத்திசாலியா யிருப்பவர் உபகாரஸ்திதி செய்யவேண்டும். நமது விரோதிக்கு விரோதமாயிருப்பான் நமக்கு அனுகூலமானவனல்லவா? இது எப்படியென்றால்,

சுலோகம்.

ந்யாஸவித்யைகநிஸ்டானும்
வைஷ்ணவாநாமமஹாத்துமாநாம்
ப்ராக்ருதாபிஸ்துதிநிர்மாதா
நிமதாஸ்துதிரிதிஸ்ம்ருதா.

இதுபோல் சரணாகத நிஷ்டானுபரராய் ஈஸ்வரப்ராப்தி சந்தித்துக்கொண்டு சகலமாகிய சேதனு சேதனங்களைப் பகவத் ஸ்வரூபமாக எண்ணமிட்டுக் கொள்ளும் மகாத்துமாக்களுக்கு ப்ராக்ருதிகள் செய்யும் ஸ்துதி நிந்தையாகும். அவர் செய்யும் நிந்தை ஸ்துதியாகும். எப்படியென்றால் பகவத் புருடர் சரீரம் நசிக்குமென்றும் ஆத்மா நித்தியனென்றும் இந்த ஆத்மாவுக்கு விஷயானுபவங்கள் நரகஹேதுவென்றும் எண்ணமிட்டிருப்பார். ப்ராக்ருதிகள் தேகமே ஆத்மாவென்றும், விஷயசுகமே புருஷார்த்த மென்றும், எண்ணமிட்டிருப்பார். இப்படிப்பட்ட ப்ராக்ருதிகள் சாதுஜனங்களிடத்தில் குணங்களைத் தோஷமென்றும் தோஷங்களைக் குணங்களென்றும் சொல்லுவார்கள். அந்த விவேகமற்றவர் செய்யும்படியான பரிபாகத்திற்குச் சந்தோஷிக்க வேண்டாமென்று இதோபதேசம் செய்தார்.

இப்படியிருக்க அந்தத் தேசத்தைப் பரிபாலனம் செய்யும்படியான வேந்தன் காசிபதியென்னும் மகானுபாவன் விவேகசம்பன்னராய் பரமசிவத்தை அதிக மேன்மையாகப் பக்தி செய்துக்கொண்டிருந்தார். இதுபோலாக இருக்குங்காலத்தில் அவர் தினந்தோறும் பத்தாயிரம் ஜங்கமர்களுக்கு அன்னமிட்டுக்கொண்டிருந்தார். இதுபோலவே ஒருகாலத்தில் ஜங்கமர்களெல்லோரையும் வரவழைத்துச் சபையில் அமரும்படிசெய்து அந்த வேந்தன் அவர்கள் அருகில் நின்றுக்கொண்டு அவர்கட்கு எதிரில் சகலவித பதார்த்தத்தோடும் அன்னமிட்டுப் பிறகு மகாநைவேத்தியம் செய்யுங்களென வேந்தன் சொன்னமாத்திரத்தில் அச்சமயத்தில் அந்தப் பத்தாயிரம் ஜங்கமர்களும் அவர்கள் கையில் கட்டிக்கொண்டிருந்த பட்டுதுண்டுகளை அவிழ்த்துப் பார்க்கும்சமயத்தில் அதிலிருந்தலிங்கமானது லத்ருசமாய்விட்டது. இதை அறிந்தமாத்திரத்தில் அவர்கள் எல்லோரும் சோகத்தையடைந்து ஒன்றுந் தோன்றுமல் ஐயோ சிவமே! இதுவென்ன ஆச்சரியம்? நாங்கள் ஆராதிக்கும்படியான சிவலிங்கமானது லத்ருசமாய்விட்டதற்குக் காரணம் ஏதும் தெரியவில்லை. இதற்குப் பிராணுந்தக பிராயச்சித்தமேதவிர இதரமான பிராயச்சித்தம் ஒன்றும் கிடையாதென்று இந்தப் பத்தாயிரம் ஜங்கமர்களும் ஏககாலத்தில் இப்படிப்பட்ட ஆபத்து சம்பவித்ததே? இது மகா விந்தையாயிருக்கின்றது. இதுவல்லாமல் நாம் புத்திபூர்வீகமாக அம்பிகாபதியைத் தியானிக்காமல் ஏது அபசாரம் செய்யவில்லையே? அப்படியிருக்க அந்தப்பரமேஸ்வரன் பறந்துபோவதற்குக் காரணம் ஏதும் தெரியவில்லையே? என்று மகாகோபமடைந்திருக்க இப்படி யிருக்கும்சமயத்தில் விவேகமுடைய வேந்தன் சிலநேரம்யோசித்து, ஓ ஜங்கமர்களே! நீங்கள் சாதுஜனங்களை ஏதாகிலும் அவமானம்செய்திருக்க வேண்டும். அதனுல் பார்வதிபதி உங்கள்மீதுகோபமடைந்து இப்படிசெய்தார். என்று சொன்னமாத்திரத்தில் இம்மொழியைக்கேட்ட ஹம்சன் முதலானவர்களும் பவராயஜங்கமர்களும் இந்தவிஷயத்தில் தங்களிடத்தில் நடந்த காரியங்களையெல்லாம் சவிஸ்தாரமாக அந்த அரசனுக்குத் தெரியச்சொன்னுர். இதுவெல்லாம் கேட்டமாத்திரத்தில் வேந்தன் அதிக பயமடைந்து ஆ! ஆ!! நீங்கள் அதிக அனர்த்தம்செய்துவிட்டீர். எப்படியென்றால் மிருத்யுஞ்சய பரமயோகி அந்த மகாத்துமாவினுடைய பிரபாவத்தை அறியாதபடி அதிக கோபமுண்டாகும்படி அபசாரம்செய்துவிட்டீர். ஆனுல் யான் ஒரு உபாயம் சொல்லுகிறேன். அதைப்போல் நடந்தால் நல்லகாரியம். அது எப்படியென்றால் அந்த மகாத்துமாவின்பாதங்களில் சரணுகதியடைந்தால் நமது பாவமெல்லாம் தீர்ந்து நமக்குப் பரமேஸ்வரர் அனுக்கிரகம் உண்டாகுமென்றுசொல்லி, அந்தப் பதினுயிரம் ஜங்கமர்களையும் அழைத்துக்கொண்டு மிருத்யுஞ்சயரிடம் சென்று அந்த வேந்தன் சரணுகதமடைந்து, ஓ தீனதயாளா! ஆபத்பாந்தவா! அனுதரக்ஷகா! இதுசமயம் காத்து அபயம் தாருமென நடந்த சங்கதிகளையெல்லாம் சவிஸ்தாரமாய்த்தெரிவித்தார். அதன்பிறகு ஓதயாளா! எமது முகம்பார்த்து நாங்கள் பரமேஸ்வரானுக்கிரஹம் லக்ஷயமாகும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று அநேகவிதமாக தோத்திரஞ் செய்தார். இதைக் கேட்டமாத்திரத்தில் மிருத்யுஞ்சயர்கருணித்து வந்தவர்கள் எல்லோரையும் அமரும்படி நியமித்து ஒ

பாக்கியவான்களே! கேட்பீர்கள். எப்படியென்றால் என்னுடைய மடத்தில் வேதாந்தமென்னும் சித்தாந்தமென்னும் நாமங்களோடும் இரண்டு சாதனங்கள் உண்டாகும். அந்த சாதனங்கள் நீங்கள் ஆராதிக்கும் சிவலிங்கத்தை கவளீகரித்திருக்குமென்று தோற்றுகின்றது என்று சொல்லி யாகவனங்களை பேர்வைத்தழைத்து அவற்றைப்பார்த்து இந்த ஜங்கமர்களுடைய சிவலிங்கங்களை நீங்களேன் கவளீகரித்தீர்? அவ்வரத்தை அவருக்குக்கொடுத்து விடுவீரென்று நியமித்தார். இப்படி சொன்னவுடனே மிருத்யுஞ்சயருடைய மொழியைக்கேட்ட சுவானரூபமான வேதாந்த சித்தாந்தங்கள் யதுகபளிகரித்து சிவலிங்கங்கள் எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும்சமயத்தில் கக்கிவெளியாகிவிட்டது. இந்த அதிசயத்தைப்பார்த்து எல்லோரும் ஆச்சரியமடைந்து ஜங்கமர்கள் எல்லோரும் மிருத்தியுஞ்சயரைப் பார்த்து ஒ மகாத்துமா! இந்தப்பதினாயிரம் சிவலிங்கத்தில் எது ஆராருடையதோ அதை எவரெவருக்கு ஆராதிக்கவேண்டுமோ அது எமக்குத் தெரியவில்லை. ஆகையால் நீங்கள் எங்கள்மீது கருணித்து அவரவருடைய சிவலிங்கத்தை அவரவருக்குக் கொடுக்க வேண்டுமென்று கோரினர். இப்படிச் சொன்னமாத்திரத்தில் மிருத்யுஞ்சயர் அந்தப் பரமேஸ்வரனைத் தியானித்தார். இதை யறிந்தவுடனே அவரவர் தியானிக்கும் சிவலிங்கமெல்லாம் அவரவருடைய அஸ்தத்தில்போய்ச் சேர்ந்துவிட்டது. இப்படி சேர்ந்தபிறகு எல்லோரும் சந்தோஷமடைந்து பூர்வீகம்போல் அந்த சிவலிங்கத்தை அவரவர் அஸ்தத்தில் தரித்துக்கொண்டார்கள். அதன்பிறகு மேகர்ஜனைபோல் பகவானைத்தியானித்து பிறகு மிருத்யுஞ்சயரைத் தியானித்து பிரதக்ஷண நமஸ்காரம் செய்தார். அப்போது அம்சன் முதலான ஜங்கமர்கள் எல்லோரும் சாக்ஷாத் கைலாசபதி இந்தமிருத்யுஞ்சயரூபத்தை பரிக்கிரமித்து நம்மை நரகத்தில் வீழாதபடிக்கு இரக்ஷித்தார். ஆகையால் இவருக்கு சஹஜானந்தசாமி மிருத்யுஞ்சயரென்று நாமகரணம் செய்தார். இதுவே இவருக்குத்தகும். இந்த மகாத்துமாவின் மடத்தில் வேதாந்தசித்தாந்தங்கள் சுவானரூபமாய் இவருக்கு சுவாதீனமா யிருப்பதால் இவரே வேதாந்தவேதியனென்று சொல்லி இந்தப் பரமயோகியென்ற கியாதியடைந்திருப்பதால் அவ்வேந்தன் இவரைத் தனது வீட்டிற்கு அழைத்துக் கொண்டுபோய் பரமேஸ்வரனுக்குச் செய்யும்படியான நைவேத்தியங்கள் செய்து சந்தோஷமடைந்தார். இந்த ஜங்கமத்தார் எல்லோரும் பவராய ஜங்கத்துக்கு நமஸ்கரித்து அபராதக்ஷணம் செய்து அவரைத் தமது குலதெய்வமாகப் பாவித்து ஆராதித்துக் கொண்டுவந்தார். இப்படியிருக்க ஸ்ரீபண்டரிநாதன் தன்னுடைய பக்திவான்களைத் தூஷித்தவர்களை தண்டித்து அவரை யநுதாப பக்தராய் செய்து இரக்ஷிப்பார். மிருத்யுஞ்சயர் தன்னுடைய உபதேசானுஷ்டானங்களை அநேக ஆத்மாவுக்கு பக்திவிரக்திகளை உண்டாகச்செய்து பகவத் சாயுஜ்ஜியமடைந்தார். கேட்டீரோ சீடரே! இப்படியல்லவோ பக்தி செய்யவேண்டும். என்று சொன்னவுடனே சூரியன் கிழக்குத்திசையி லடைந்தார். இதையறிந்து எல்லோரும் எழுந்து அவரவர் இருப்பிடஞ் சென்றார்கள்.

சாந்தபமணிராஜன் சரித்திரம் மூற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணுயநமஃ

இருபத்துநான்காவது

# பானுதாசன் சரித்திரம்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

எத்தனையோவிதமாக நித்தம்நித்தமுனைத்துதித்தும்
சித்தமதுகரையாத உத்தமகுலோத்தமனே
பக்தியொன்றும்செய்தறியேன் பன்னகசயனு
பாதசேவைதந்துகாரும் பாண்டவர்சகாயா
கத்திகத்தியென்மனதுபதருதேகதருதே கதருதுன்மேல்
கருணையில்லாக்காரணமேன் கர்த்தனே
அத்திதனைக்காத்தளித்த ஆனந்தகோவிந்தனே
ஆதிலக்ஷுமிநேயனே அன்பர்சகாயனே.

சுலோகம்.

ஜலேவிஷ்ணுஸ்தலேவிஷ்ணு விஷ்ணுஸ்தேஜோநயேபிலஃ
சராசரஸ்திதோவிஷ்ணுஸ்ஸர்வம் விஷ்ணுமயம்ஜெகத்.

இப்படியாகச் சென்றவர் மறுநாள் சூரியபகவான் கிழக்குத்திசையில் உதயமானவுடனே சங்கதி யறிந்த நாபாஜிசித்தர் எழுந்து நித்தியகடனை முடித்துக்கொண்டு கையில் செம்பேந்திக்கொண்டு கங்கைக்கரையை அடைந்து ஸ்நானம்செய்து அதின்பிறகு திருமண்காப்பணிந்து நந்தவனம் புகுந்து திவ்ய மலர்களைக் கொய்துக்கொண்டு பாண்டுரங்கன் சந்நிதிசென்று பகவானுக்கு ஜலம்கொட்டி ஆடையால் துவட்டித் திருமண்காப்பு நெற்றிக்குத் தரித்து தான் கொண்டுவந்த புஷ்பம்சூட்டி வலப்பிரதக்ஷணம் செய்து பகவானுக்கு எதிரில்வந்து தோத்திரம்செய்ய ஆரம்பித்தார்.

## தோத்திரமாலை பதிகம்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

அய்யனேசெய்யனே அன்பரைக்காக்குங்கையனே
அருளெனும்பேரொளியைக் காணுவம்பன்
தையலுடையமோகத்தால் மெய்யென்றஞானத்தை
தானறியாமல் திரிந்தவம்பன் [த்
வையகத்துஆசையால் வைகுந்தநாதனென்று
வாயால்சொல்லிடாத வம்பன்
பையமுடனென்குற்றம் பாராட்டிடாமலே
பாதுகாத்திடும் லக்ஷ்மிநேயனே.
கல்லானமனம்கொண்டு சொல்லிடும்வேதத்தைக்
கண்டறியாமல் திரிந்தவம்பன்
பொல்லாதநேசரொடு சல்லாபமாகவே
போகத்தைக் கைக்கொண்டவம்பன்
வல்லாண்மைகொண்டுயான் பெரியோர்தமைமதியா
வையகத்தில் திரிந்தவம்பன் [மல்
வலம்புரிசெய்துயான் உன்நாமத்தைத்தியானித்தே
வந்துகாத்திடும் லக்ஷ்மிநேயனே. [ன்
இலைசருகுகாற்றையா னின்பமாய்த்தின்றுதான்
என்கும்பியெரிவ தெக்காலமோ
உலையிட்டபாழான என்னெஞ்சமுருகித்தான்
உன்பாதம்காண்ப தெக்காலமோ
பலசிந்தைகொள்ளாமல்உன் னேக்கமேபெரிதென்
பார்த்துசந்தோஷிப்ப தெக்காலமோ [று
நிலமையுடன்உன்சேவை தந்துதான்காத்திடும்
நீலமேகசியாம லக்ஷ்மிநேயனே.

ஓபகவானே! நான் எடுத்தஜென்மம் எத்தனையோ அதில் இந்த மானிடஜென்மமெடுத்து ஏதும் பலனறியாமல் இருக்கின்றேன். இந்தப்பாதகனை தாம் ஆதரிக்காமல் இனி ஆதரிப்பார் எவர் உண்டு? ஐயோ! யான் இலை சருகு காற்றையும் தின்று கும்பியெரிகிறதேயென்று மௌனம் சாதிப்பது எக்காலமென்று மனம்கோருகின்றது. இதுசமயம் காப்பாற்றுமையா என்று தோத்திரஞ்செய்து கொண்டிருக்குங்காலத்தில் இவருடைய சீடரெல்லோரும் கும்பலாய்க்கூடி நாபாஜிசித்தரிடம் வந்து ஓ குருநாதா! இன்று காலம்போக்குவதற்கு ஏதாகிலும் ஓர் திவ்ய சரித்திரம் சொல்லுமையாவென்று கேட்கும் சமயத்தில், நாபாஜிசித்தர் இம்மொழியைக்கேட்டு சந்தோஷமடைந்து சொல்லத்தொடங்கினர். கேட்டீரோ சீடர்களே! முன்னொரு காலத்தில் பானுதாசனென்று பெயருடைய பக்தனுடைய சரித்திரத்தை இப்பொழுது உங்களுக்குச் சொல்லுகிறேன் அதைக் கவனமாய்க்கேட்டு அதுபோல் நடந்தால் நமக்கும் கியாதி யடையுமென்று சொன்னவுடனே, அந்தச் சரித்திரம் கேட்க ஆவலடைந்தார். அப்போது நாபாஜிசித்தர் அந்தச் சரித்திரம் சொல்லத்தொடங்கினர்.

கேட்டீரோ சீடர்களே! பைட்னிபுரம் என்று ஒரு பட்டணம் உண்டு. அப்பட்டணமோ சத்தியமென்னும் செங்கோல்பிடித்து அரசாக்ஷி செய்து கொண்டும் அந்நாட்டில் மாதமும்மாரி பெய்து ஏதும் கஷ்டமில்லாமல் குடிகள் சுகஜீவனமாய் வாழ்ந்துகொண்டு மிருந்தார்கள். இப்படியிருக்கும் சமயத்தில் அந்நாட்டில் சூரியோபாசகன் என்று ஒரு பிராமணன் இருந்தான். அந்தப் பிராமணன் அதிக நாளாகியும் புத்திரபாக்கியமில்லாமல் அதிக வருத்தமடைந்து பகவானைத் தோத்திரம்செய்து அனேக கூடகோபுரம் மாடமேடைகள் தடாகங்கள் வெட்டியும், அனேக தானதர்மங்கள் செய்தும் அடிக்கு ஆயிரம் சத்திரம்கட்டி இப்படிப்பட்ட அநேக தர்மங்கள் செய்து அந்தப் பகவான் கிருபையால் அப்பிராமணனுக்கு மன்மதனைத் தோல்வி அடையச் செய்யும்படியான அழகுடைய ஓர் திவ்ய ரூபமுடைய புத்திரசிகாமணி ஜனித்தான். இந்தப் புத்திரன் ஜனித்தவுடனே தாய் தந்தை இருவரும் நாமகரணம் முதலிய சடங்குகளை முடித்துவிட்டு தினமொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்துக்கொண்டு வந்தும் இப்பாலகனுக்கு ஐந்து வயதான பிறகு சுபநாளறிந்து திவ்ய அலங்கிருதம் செய்து அந்தப்பாலகனை அந்நாட்டிலிருக்கும் உபாத்தியாயரை அழைத்து அப்பாலகனை அவரிடம் ஒப்புவித்து சகல கலைகளையும் ஓதுவிக்கும்படி திட்டம்செய்து அனுப்பினர். அப்பாலகனை உபாத்தியாயர் அழைத்துக்கொண்டு சென்று பள்ளியில் அழைத்து பாலகரோடு சகல வேதங்களை உபதேசிக்க, அதைச் செவியிடம் வையாமலும், பள்ளியில் அரைநிமிஷமும் தங்காமலும் ஓடிக்கொண்டிருந்தான். இப்படி யிருக்குங்காலையில் இதை அறிந்த உபாத்தியாயர் அநேக தண்டனைகள் தண்டித்தார். அதற்கும் பயமடையாமல் திரிவதைத் தந்தையார் கண்டு கண்கள் சிவந்து பற்களை நறநறவென்று கடித்து அதிக கோபம்கொண்டு இரண்டு கால்களையும் பிடித்து பெருத்த பாராங்கல்லின்மீது எரியுங்காலத்தில் பத்துமாதஞ் சுமந்துபெற்ற தாயானவள் ஓடிவந்து ஐயோ! குமாரனேயென்று அலறி எடுத்துக்கொண்டு ஓ நாயகா! இப்படியும் கொடுமை செய்வாருண்டா? நமக்குப் புத்திரபாக்கியம் இல்லாமல் அநேககோடி தவம்செய்து இப்பாலகன் நமக்கு அமைக்க, நீ இதைக்கோராமை செய்வதற்குத் துணிவது நீதியல்ல. அப்பாலகனுக்குத் தகுந்த நீதிகள் ஓதி வாசிப்பு திட்டம் செய்கிறேனென்று சொல்லி அப்பாலகனை அந்தப்புரம் அழைத்துச்சென்று ஜலகமாட்டி திவ்விய ஆடை அலங்கரித்து திவ்விய பட்சணம் கையில்கொடுத்து அடா! நான்பெற்ற தவச்செல்வமே? கற்காமல் பூமியில் இருப்பது நீதி அன்று. நமது வேதியர்குலத்திற்கு அழகல்ல. நம்மைப்போன்ற வேதியர் கண்டால் எளனமல்லவா? சகல வேதங்களையும் பாராட்டாத ஜென்மம் ஓர் ஜென்மமா? இவ்வளவு உபதேசம் சொல்லியும் இதைக் கேளாமலிருப்பது நீதியல்ல. என்றுசொல்லி அப்பாலகனைப் பாடசாலைக்கு அழைத்துச்சென்று வேதியரிடம் ஒப்புவித்து வந்தான்.

இப்படியாக விட்டபிறகு பாலகன் உபாத்தியாயர் நித்திரைசெய்யும் சமயம்பார்த்து ஆ! ஆ! இதுதான் சமயம்; எக்காலமும் நம்மை ஈன்றெடுத்ததாயும் தந்தையும் பள்ளிக்குப் போகும்படி அதிக கஷ்டப்படுத்துகின்றார். இவைகளையெல்லாம் வெறுத்து நாம் காட்டிற்குச்சென்றால் சுகமாய் வாழலாமென்று மனமிட்டுக்கொண்டு எவருடனுஞ் சொல்லாமல் காட்டிற்கு ஓடிப்போய்விட்டான்.

இதுபோலாகவே அப்பாலகன் அநேக வனம், வனாந்திரம், மலைகள், ஆறுகள், நதிகள், முதலாகிய

இடமெல்லாம் தாண்டி இருள்சூழ்ந்த காட்டிற்குள் சென்று அக்காட்டில் ஓர் மலையைக்கண்டு ஆ! ஆ! இது என்னமோ ஓர் சுனைபோகின்றது. இதில் பிரவேசித்துப் பார்ப்போமென்று அந்தச் சுனை மார்க்கமாய்ச்சென்று பார்க்கும் சமயத்தில் அங்கு அர்ச்சரூபமாய் பரிக்கிரகித்திருக்கும் சூரியநாராயண மூர்த்தியைக்கண்டு சாஷ்டாங்க வந்தனம் செய்து நிற்கும் சமயத்தில், இதையறிந்த சூரிய நாராயணன் இந்தப் பாலகன்மீது கிருபைகூர்ந்து மானிடரூபமாய் ஓர் கிண்ணத்தைக் கையில் ஏந்திக் கொண்டு இப்பாலகன் எதிராக வந்து, ஓ பாலகா! நீ ஏதுக்கும் பயப்படாதே? இதோ இந்தக் கிண்ணத்திலிருக்கும் கோக்ஷீரத்தை உன்னுடைய வயிறு நிறையச் சாப்பிட்டு அதின்பிறகு நீ இந்த ஸ்ரீ பாண்டுரங்கனைத் தியானம்செய்வாய். எக்காலமும் அந்தப்பகவானைத் தியானம் செய்வாயாகில் நீ எல்லோருக்கும் கௌரவமடைந்து சுகஜீவியாய் வாழ்வாயென்று சொல்லியும், இன்னம் கேட்பாய். அந்த தேவசிகாமணியை உபாசித்துவந்த துருவன் சர்வோத்கிருஷ்ட பதவிபடைந்தான் அந்த ஜகதீசன் தன்னுடைய பக்தனுன பிரகலாதனனுக்காக சாயஸ்தம்பத்தில் அவதரித்து அந்தப் பாகவதோத்தமனுடைய மொழியை நிச்சயமாகச் செய்தார். இதுவல்லாமல் பல சக்கரவர்த்திக்கு பாஹதேஹோர்திராதி பதவிதந்து இப்போதும் அவனுடைய கிரஹஙிவாரத்தில் வசித்து அந்தச் சுசீலனை இதுவரைக்கும் ஆதரித்துக்கொண்டு வருகின்ருர். இன்னமும் அந்த சர்வாத்துமா நிஜபக்தனுக்காகச் செய்த அற்புதகாரியங்களை கணக்கிடுவது சங்கியமல்ல. நீ அந்த விடலநாதனை பக்தியுக்தனுய் பஜிப்பாய். அந்த லட்சுமிகாந்தனை ஆராதிக்கும் கிரமத்தை சொல்லுகிறேன் கேட்பாயாக.

சுலோகம்.

ஜிஹ்வேகீர்தயகேஸவம்
முராரிபும்சேதோபஜஸ்ஸ்ரீதரம்
பாணித்வந்த்வ ஸமர்ச்சயாச்யுகதாம்
ஸ்ரோத்ரத்வயத்வம்ஸ்ருணு
க்ருஷ்ணம்லோகயலோசன
த்வயஹரேர்ககச்சாங்கிரியுக்மாலயம்
ஜிக்ரக்ராணமுகுந்தபாததுலஸீம்
மூர்த்தந்நமாதோக்ஷஜகம்.

எப்படியென்ருல் சொல்லுகிறேன் கேளும். இந்த பஞ்சருசிகளை அறியப்பட்ட இந்த நாவால் கேசவனைக் கீர்த்திக்கவேண்டும். இப்படி கீர்த்திக்காத நாவானது மலை குகையில் இருக்கப்பட்ட தேரைக்குச் சமமாகும். அநேக கோஷ்டத்தைக் கேட்கப்பட்ட இந்தக் காதால் அச்சுதனுடைய திவ்ய சரித்திரங்களைக் கேட்கவேண்டும். அப்படி கேட்காதகாதோ ஏதுக்கும் பலனில்லாத பெரும்பாராங்கல்லில் துளைத்திருக்கப்பட்ட துளைக்குச் சமமாகும். அநேககோடி இச்சைகளைக் கோரும்படியான மனதால் முராரியை பஜிக்க வேண்டும். இதுவல்லாமல் அந்த மனவீட்டில் ஸ்தாபிதம் செய்யவேண்டும். அப்படி செய்யாத மனமோ இருள்சூழ்ந்த காட்டிற்கு சமமாகும். எல்லாப் பலத்தை எடுக்கப்பட்ட கைகளால் ஸ்ரீதரனை அர்ச்சிக்கவேண்டும். இப்படி அர்ச்சிக்காத கரமோ அமங்கிலியஸ்திரீகள் கையில் எடுக்கப்பட்ட உலக்கைக்கு சமமாகும். பாபபுண்ணியம் என்னப்பட்ட இரண்டையும் பார்க்கப்பட்ட இந்த நேத்திரத்தால் ஸ்ரீகிருஷ்ணனை தரிசிக்கவேண்டும். இப்படி சேவையடையாத கண்களே ஏதுக்கும் பயனில்லாத பாவிகள் வைக்கப்பட்ட மூட்டைக்குச் சமமாகும். எல்லாம் அசேதன வஸ்துக்களை மிதிக்கப்பட்ட இந்தப் பாதத்தால் ஸ்ரீஹரிசந்நிதியை நடந்துகொண்டிருக்க வேண்டும். அப்படி நடவாத இந்தப்பாதங்கள் இரண்டும் நட்ட கம்பத்துக்குச் சமமாகும். இந்த மூக்கால் முகுந்தனுடைய பாததுளசியை வாசனையறிய வேண்டும். அப்படி அறியாத நாசியோ ஏரிக்கு முன்னே இருக்கப்பட்ட துவாரமென்று அறியலாம் இந்தச்சிரசால் நந்தகோபனை வந்தனம் செய்ய வேண்டும். அப்படி வந்தனம் செய்யாத சிரமோ இரும்புக்குண்டுக்குச் சமமாகும். ஆகையால் இப்படிக்கு இந்த அனுதகாலத்தில் அநேக ஜென்மங்கள் எடுத்து இந்திரிய சிங்கரனுகி சம்சாரமென்னும் பேரிடியில் மார்க்கம் தெரியாமல் பிரமித்துக்கொண்டிருக்க, இதைப்பற்றிப்பகவான் உனக்குப்பரமகிருபையோடு உத்தமமான இந்த மானுஷ்யஜன்மம் கொடுத்தார். இந்த மனுஷ்யஜன்மத்தாலே எல்லாவற்றையும் சாதிக்கலாகும். ஆகையால் இந்தச் சரித்திரத்தால் முமுக்ஷுவாய்பகவத்பிராப்தியடைவாய். ஆனுலும் உனக்கு இப்படிப்பட்ட மனுஷ்ய ஜென்மம் நீ எடுப்பது மகாதுர்லபம். எப்படியென்ருல் (விசித்திராதேஹசம்பத்திர் ஸ்வாராயநிவேதிதம் பூர்வமேவ க்ருதாபிரம்ஹன் ஹஸ்தபாதாதிசம்யுதம்) இதுபோல் பகவத்விஷயத்தில் விநியோகித்து உஜ்ஜீவிப்பதற்குச் சாதனமாய் கரசரணுத் திவ்யத்தோடு சேர்ந்து விசித்திரமான தேஹசம்பத்தி உனக்குப்

பகவான் அனுக்கிரஹத்தால்சித்திக்கும் இந்தக்கரண களேபரத்தை அந்தஜெகன்னதனுடையவிஷயத்தை வினியோகித்துக்கொண்டு வருவாய். அப்படிச்செய் யாமல் துர்வினியோகம்செய்வாயாகில் அது அபசா ரமாகும். இதுவல்லாமல் எமனுக்கு விருந்தடைகு வாய். ஆகையால் ஜாகரூபனும் விஷயமென்ற ஒட்ட மிருகத்தைவென்று ஸ்ரீவாசுதேவரூபத்தை ஆசித்து உஜ்ஜீவித்திருப்பாய். ஆகையால் உனக்கு யான் கொடுத்த க்ஷீரத்தால் உனக்கு வித்தையதிகரித்து கெம்பீரபுருஷனவாய் என்று அனுக்கிரஹித்து அந் தச்சூரியநாராயணன் அதிர்ஸ்யமாகிவிட்டார். பாநு வின் அனுக்கிரகமடைந்தமையால் இவர் பானுதாச னென்று பிரசித்தியோடிருந்தார்.

இப்படி யிருக்கும்சமயத்தில் பைட்டினிபுரத் தில் இவனுடைய தாய்தந்தைகள் இருவரும் புத்திர சிகாமணி அகப்படாமல் ஏழுநாள் அனேக ஸ்தலங் கள்தோறும் தேடியும் தேடவிட்டும் எங்கும் அகப் படாமையால் மனம் அதிக சிந்தை யடைந்திருந் தார். அதின்பிறகு ஒரு பிராமணன் அந்த ஆரண்ய மத்தியிலிருக்கப்படாநின்ற பிரதேசம் சுற்றித் திரி ந்து பிறகு அந்த மலைச்சாரலுக்கு வரும்சமயத்தில் அந்தப்பாலகனைக்கண்டு அப்பா குழந்தாய்! உனது தாய் தந்தைமார் உன் ஏக்கத்தால் அதிக துயர மடைகின்றார். நீ ஏதும் சொல்லாமல் என்பின்பற்றி உனதுவீட்டிற்குவருவாய் என்று அழைத்த மொழி யைக் கேட்ட மாத்திரத்தில் அப்பாலகன் ஓ பிராம ணோத்தமா! யான் எக்காலமும் நாட்டிற்கு வரமாட் டேன். இந்தஆரண்ணியமேனக்குவீடுதவிரமற்றை ஏதும் கிடையாது என்று சொல்லிப்போய்விட்டார்.

அப்பாலகன் போனபின்பு அந்த வேதியன் தன்னூட்டிற்குச்சென்று அவனுடைய தாய் தந்தை யருக்கு இந்த விருத்தாந்தங்களெல்லாம் தெரியச் சொன்னர். இதைக்கேட்டமாத்திரத்தில் சந்தோஷ மடைந்து இருவரும் சென்று புத்திரசிகாமணியைத் தேடிப்பார்த்தும் எங்கும் அகப்படாததால் மனவ ருத்தமடைந்து, அதின்பிறகு அங்கிருக்கப்பட்ட பர்வதக்குகையில் சென்று பார்ப்போமென்று சங் கோசமடைந்து மனோதிடங்கொண்டுபிரவேசித்துப் பார்க்கையில் தன்னுடைய புத்திரசிகாமணி அங்கி ருக்கப்பட்ட அர்ச்சரூபியான சூரியநாராயணமூர்த் தியினுடையதிருப்பாதகமலத்தின்மீது தன்சிரத்தை வைத்துக்கொண்டு நிர்ப்பயனாய் நித்திரைசெய்து கொண்டிருந்தார். இப்பாலகனைப் பார்த்தவுடன் தாய் தந்தைகளுக்கு ஆனந்தகரமாகிய சந்தோஷ முண்டாகி தம்முடைய இருகரத்தால் அந்தக் குழந் தையை ஆவலுடன்எடுத்து மார்போடணைத்து உச் சியை மூகந்து திருஷ்டிகழித்து என் குழந்தாய்! நீ ஏன் சந்தடியில்லாத ஸ்தலத்தில் வாசஞ் செய்து கொண்டிருக்கின்றாய். இதுவல்லாமல் புத்தியறியாத தன்மையில் நீ எப்படி இந்தபர்வதக்குகையில் நிர் பயனாய் நின்றாய்? நீ நமது வீட்டைவிட்டு இன்றை க்கு ஏழுநாள் ஆச்சுதே. இந்த ஆரண்யத்தில் எந்த ஆகாரத்தை அருந்தி ஜீவித்திருக்கின்றாய்? என்று கேட்டமாத்திரத்தில் பானுதாசன் திடுக்கிட்டெழு ந்து ஜனனிஜனகருக்கு வந்தனம் செய்து, ஓ தாய் தந்தைகளே! யான் படிக்கவில்லையென்று நீங்கள் என்னைபயமுறுத்தினமையால் என் மனம்வெறுத்து காட்டிற்கு வந்துவிட்டேன். அதன்பிறகு இந்தக் குகையில் பிரவேசித்து இதோநிற்கின்ற சூரியநாரா யணமூர்த்தியை வந்தனம்செய்து நிற்கும் தருணத் தில் அதிக அழகுடைய ஓர் புருடன் பிரத்தியக்ஷ மாய் என்னெதிரில் வந்து ஓர்பாத்திரத்தில் கோக்ஷீ ரத்தைக் கொடுத்து எனக்கு இதோபதேசங்கள் செய்துவிட்டுமறைந்துவிட்டார். அதின்பிறகு அந்த கோக்ஷீரத்தை யான் குடித்தேன். அது முதலாகப் பகவானுடையஅநுக்கிரகத்தால் எனக்குப்பசியென் பது என்னைப் பாதிக்காமல் சகலமாகிய பிரபஞ்சங் கள் ஈஸ்வரரூபமாய் யானும் என்னை அன்புடன் தச மாதமடைந்து ஈன்றெடுத்த நீங்களும், எனக்குத்தத் துவோபதேசத்தை உபதேசித்து சூரியநாராயண னும் யான் வசித்துக்கொண்டிருக்கும் இந்த மலைக் குகையில் பகவத் சொரூபமாய் எனது கண்ணுக்கு தோன்றுகின்றது. ஓ ஜனனீ? யான் ஏதென்றுசொல் லுவேன்? அந்த லட்சுமிகாந்தன் தாரகமாய்ப் போ ஷகமாய்போக்கியமாய் இருக்கின்றான். நீங்கள் என் மீதிருக்கும் பிரியத்தைவிட்டு அந்தஜெகதீசனை பஜி த்துத் தன்யராவீர். இதுவல்லாமல் எனக்கு வித்தை கற்பித்துக்கொடுக்க வேண்டுமென்று நீங்கள் அதிக கஷ்டப்பட்டீர். உங்கள் எண்ணம் ஏதும் பலிதமாக வில்லை. இப்போது ஸ்ரீமன்நாராயணனுடைய அனுக் கிரஹத்தால் சகலமாகிய வித்தைகளும் எனக்கு சுவாதீனமா யிருக்கின்றது. இதுவல்லாமல் அவர் நினைத்த தீ அணுவுமேருவாகின்றது. பிபீலிகைபிரம மாகின்றது, சர்வம் உண்டாக்கி ரக்ஷிக்கப்பட்டபுரு ஷோத்தமன் எல்லாருக்கும் தந்தையாகின்றான். ஆகையால் நாம் எல்லோரும் அந்த ஜெகதீசனை பஜித்தால் நமதுபிரகிருதி நிர்மலமாகி முக்தியடைய லாம். இப்படிச்சொன்ன புத்திரசிகாமணியுடைய

வசனத்தைக் கேட்டமாத்திரத்தில் தாய் தந்தைகள் சூர்யோபசகுலராய் இதுவல்லாமல் அந்தச் சூரிய நாராயணன் பிரசன்னமடைந்து நமது புத்திரனை ரக்ஷித்தான். அவருடைய அனுக்கிரகத்தால் பிரகலாதனைப்போல் இவனுக்கும் பால்யத்தில் பகவத் பக்தி பக்குவமாயிருக்கின்றதென்று சொல்லி நமஸ்காரபிரியனுன சூரியநாராயணனுக்கு அனேக வந்தனம் செய்து பானுதாஸை தங்களோடு அழைத்துக் கொண்டுவீட்டிற்குவந்து அந்தப்பாலகனைத்தங்களுக்குக்குலதெய்வமாகப் பாவித்துக்கொண்டிருந்தார். இது இப்படியிருக்கப் பானுதாசனுக்கு வயதுவந்தவுடனே தாய்தந்தைகள், சுகுணமுடையவளாய் நற்செய்கை யுடையவளாய் நடைநொடி பாவனையில் மெதுவாய்நடக்கப்பட்டவளாயும் புருஷபணிவிடையில் ஒருக்காலும் ஏளனம் செய்யாதவளாயும் இராநின்ற ஓர்பெண்பாவையைத்தேடிவிவாகமுடித்தார். இப்படி யிருக்கும்சமயத்தில் அந்தத்தேவிக்குப் பகவானுடைய அனுக்கிரகத்தால் ஓர் புத்திரனுண்டாகி விருத்தியடைந்தது. இப்படி சந்தோஷமடையும் நாளில் பானுதாசனுடைய தாய் தந்தைகள் இருவரும் பரலோகபதவியடைந்தார். அதன்பிறகு பானுதாசன்சமுசாரசிந்தையில்லாமல்எக்காலமும்பாண்டுரங்கனுடைய தியானமே செய்துக்கொண்டிருந்தார். இவருடைய பாரியாள் புத்திராதிகள் அன்னவஸ்திரத்திற்குத் தாரித்திரஇம்சையைக் கஷ்டமடைந்துக் கொண்டிருந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் அந்தக் கிராமத்தில் வியாபாரம் செய்யும்படியான சிலவர்த்தகர் இந்தப்பானுதாசனைப்பார்த்து, ஓ பக்தனே! நீ எந்நேரமும் பாண்டுரங்கனுடைய ஸ்மரணையே செய்துக்கொண்டிருக்கின்றாய். உனது தாய் தந்தைகள் ஜீவித்திருந்த பரியந்தம் உனது குடும்பத்தை சம்ரக்ஷணை செய்துகொண்டிருந்தார். இப்போது நீ குடும்ப சம்ரக்ஷணை ஏந்திக்கொள்ளாதபடி முன்போலவே இருக்கத்தகுமா? உனது குடும்பத்தை வேறு யார் போஷிப்பார்? ஆகையால் நாங்கள் உனக்கு நானூறு வராகன் கொடுக்கின்றோம். அதற்குத் தக்கபடி துணிகளை வாங்கி வியாபாரம் செய்து அதனால்வரும்படியான லாபத்தைக் குடும்ப சம்ரக்ஷணை செய்துக்கொண்டு சிலகாலத்திற்குள்ளாக எங்கள் கடனைத் தீர்த்துவிடுமென்று சொல்ல, இம்மொழியைக்கேட்ட பானுதாசன் சம்மதிக்கும்படிசெய்து நானூறு வராகனுக்கு வஸ்திரங்கள்கொண்டுவந்து அவருக்குவர்த்தகசாலை ஏற்படுத்தி வியாபாரம் செய்யும்படியான விதத்தைக் கற்றுக்கொடுத்தார்கள். அதுமுதல் பானுதாசன் வர்த்தகம்செய்து கொண்டு குலாதாரனைப்போல் தன்மனது அதிக நிர்மலமாய் எதிலும் ஒட்டாதபடியிருந்தான். பிறகு பானுதாசன் சத்தியவிரதனாய் தான் விற்கும்படியான வஸ்திரத்துக்குக் கொஞ்சம் லாபம்வைத்து வியாபாரம் செய்தார். ஆகையால் எல்லோரும் இவருடைய வர்த்தகசாலைக்கே வந்து கொண்டிருந்தார். இப்படியிருக்க சிலநாள்களில் இவருக்கு அதிக லாபங்கிடைத்து கடன் கொடுத்தவருக்கு வட்டியோடு திரவியத்தைக் கொடுத்துவிட்டார். இதுவல்லாமல் வஸ்திரம் வாங்க வருபவருக்கு ஸ்வல்பமாகிய லாபத்துக்குக் கொடுத்துக்கொண்டு அவருக்கு இதோபதேசத்தைச் செய்துகொண்டு மிருந்தார். அது எப்படியென்றால், ஓ நேசரே! ரணத்தின்மீது சுற்றுவதற்கு கனகாம்பரத்தைத்தேடுவதைப்போல் ஹேயமான சரீரத்துக்கு நல்லவஸ்திரங்கள் ஏன்கொண்டுபோகின்றீர்? நீங்கள் எண்ணமிட்டவாறு வாங்கிக்கொண்டுபோங்கள். ஆனபோதிலும்தத்வத்தைக் கொஞ்சம் ஊஹித்துப்பார்ப்பீர். நீங்கள் எவ்வளவு நல்ல வஸ்திரத்தால் இந்தத்தேகத்தை அலங்கரித்த போதிலும் உட்புறத்திலிருக்கப்பட்ட மலமூத்திர ரக்தாதிகளுடைய சுபாவமானவை ஒருக்காலும் போகுமா? இதுவல்லாமல் பூமிக்குள் எலும்பு ரோமம் இவைகளெல்லாம் துர்பதார்த்தங்களிருக்க அதின்மீது மண்ணைப்பூசி அலங்கரிப்பதினால் உள்புறத்திலிருக்காநின்ற ஹேயங்கள் போகுமா? அதுபோலவே இந்தத் தேகதத்வத்தை அறியாமல் சாயவலங்காரம் செய்பவன்போல் இந்த ஹேயமாதேகத்தை அலங்கரித்து ஆனந்தமடைந்தீர். ஐயா இந்த வஸ்திரத்துக்குக் கொடுக்கும்படியான திரவியத்தை ஈஸ்வரகுடும்பமான தீனருக்குக் கொடுத்து ஆராதித்தால் அவர்கள் சந்தோஷிப்பார்கள்.

அது எப்படியென்றால் ஒருதந்தைக்கு நான்கு குழந்தைகள் பிறந்தால் அதில் இருவர் மாத்திரம் அன்னவஸ்திரத்துக்கு அதிக தாரித்திரியமடைந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். பிறகு இருவரும் திரவியத்தையடைந்திருந்தும், அந்த ஏழையாயிருக்கும் சகோதரர்களைப்போஷிக்காமல் தாங்கள் மாத்திரமே நல்லபோகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தால் தாய்தந்தைகளுக்கு இவர்கள்மீது அருசியை உண்டாகுமல்லவா? அதுபோல் லோகத்திலிருக்கும் சேதனர் எல்லோரும் அந்தஜெகதீசனுக்குப் புத்திரனாகி நமக்குச் சகோதரராயிருக்கின்றார். நமதுசோதரில் சிலபேர் அன்னவஸ்திரமில்லாமல் தரித்திரமடைந்திருக்கின்றார். அவர்கள் எல்லோரையும்

ரக்ஷிப்பதற்கு நாம் சக்தியுடையவரல்ல. ஆனபோதிலும் சாத்தியமானவரைக்கும் சிலபேரையாகிலும் ரக்ஷிப்பது அதிகமேன்மை. அப்படிப்பட்டவரின் தேககஷ்டத்திற்கு உபயோகிக்காமல் சிலாக்கியமான வஸ்திராபரணத்திற்குத் திரவியத்தைச் செலவிடுவது மேலல்ல. இனியாகிலும் உங்கள் அன்னவஸ்திரத்துக்குபோக மிகுதி திரவியத்தை தீனஜனங்களுக்கு உபயோகப்படுத்தும் இந்தத் தேகத்தை ரக்ஷிப்பது ஓர் உபகாரமல்ல. ஆத்மரக்ஷணையை சிந்திக்கவேண்டும். நாம் தீனருடைய தேகசம்ரக்ஷணை செய்தால் நமது ஆத்மரக்ஷணபாரத்தைப் பகவான் கைக்கொண்டு ரக்ஷிப்பான். ஆனபோதிலும் உங்களுக்கு திரவிய மதிகமாயிருந்தால் நல்லவஸ்திரத்தை வாங்கி பகவானுக்கு அலங்காரம் செய்து நேத்திரானந்தமாய்ச்சேவித்து சந்தோஷியுங்கள். புத்திராதிகள் கஷ்டமடைந்திருக்க தாய்தந்தைகள் அன்னபானத்திற்கு மனமிடாதபடி தீனஜனங்கள் அன்னவஸ்திரத்துக்கில்லாமல் தாரித்திரமடைந்திருக்கும் சமயத்தில் பகவானை அலங்கரிப்பது அந்த ஜகதீசனுக்கு அபிமதமாகாது. ஆகையால் சர்வகாலமும்சாத்தியமானவரைக்கும் தீனஜனங்களுடைய தரித்திரத்தைப் போக்குவீர். சர்வ பிரபஞ்சமும் பகவத் சொரூபமாய்ப் பாருங்கள். பரிணமபேசலமாய் அவஸ்யம் நசிக்கப்பட்ட இந்தச் சரீரத்தினுடைய அபிமானத்தைவிட்டு ஆத்மவிசாரணைசெய்து உங்கள் ரக்ஷணபாரத்தை பகவதாதீனம்செய்து கர்மானுகுணமாகத் தங்களுக்குச் சிந்திக்கப்பட்ட பதார்த்தத்தின்மீது கொஞ்சமாகிலும் புத்தி நாட்டவிடாமல் உங்கள் குடும்பபோஷணத்துக்கு வேண்டுமான பொருட்பாகத்தை மாத்திரம் பரிக்கிரகித்து மிச்சத்தைப் பகவத்குடும்பமான பிராணிகளுக்கு ரக்ஷணத்திற்கு உபயோகிக்கவேண்டும். எப்படியென்றால்,

### விருத்தம்.

ஓடியலைந்துமிவ்வையகமுற்று முழன்றுழன்று
தேடியெடுக்கிறதிரவியம்யாவும் நாளைசெத்தபின்பு
நாடியிருப்பதுமுண்டோ மறந்துநடக்குநெஞ்சே
வாடியிருந்துமறஞ்செய்வாய் பரமானந்தமே.

இதுபோலாக நாம் தாயின் கர்ப்பத்திலிருந்து வந்தபொழுது ஏதாகிலும் பொருளைக்கொண்டு வந்தோமா? ஒருபோதுமில்லை. இந்தத்தேகத்தை விட்டு ஆத்மாபோகும்போது ஏதாகிலும் கொண்டு போகின்றோமா? அதுவுங்கிடையாதஇந்தத்திரவியாபேக்ஷையால் நாம் செய்யவேண்டிய பாவபுண்ணியங்கள் மாத்திரம் பிரியாமல் நம்மோடு தொடர்ந்து வருகின்றது. இதுபோல் பானுதாசன் வஸ்திரம் வாங்குவதற்கு வரப்பட்டவருக்கெல்லாம் இதோபதேசங்களைச் செய்துக்கொண்டு எக்காலமும் பகவானைத் தியானித்துக்கொண்டு தீனபோஷணை செய்துகொண்டிருக்கின்றானென்று இவர்மீது அதிக பிரியமடைந்து இவருடையகடையையேதேடிக்கொண்டு எல்லோரும் வந்துகொண்டிருந்தார். இதரமான வர்த்தகசாலையில் ஒருவரும் போகாதிருப்பதால் அந்த வர்த்தகருக்கு வியாபாரம் நடக்காமல் போயிற்று. அந்த வர்த்தகரெல்லோரும் பானுதாசனைக் கண்டு அசூயைப்பட்டுக்கொண்டிருந்தார்.

இப்படியிருக்க ஒரேகாலத்தில் பானுதாசரும் இன்னும் சிலவர்த்தகரும் புறப்பட்டுச் சந்தைக்குச் சென்று சரக்குகளை வாங்கிக்கொண்டு வரும் மார்க்கத்தில் அங்கு ஒரு தேவாலயத்தைக் கண்டு எல்லோரும் விடுதிசெய்தார். அந்த இராத்திரி அக்கிராமத்தில் ஹரிதாஸனென்பவர் அரிகீர்த்தனம் செய்துக் கொண்டிருக்கிறாரென்று கேட்டமாத்திரத்தில் பானுதாசர் தன்னுடைய மூட்டைகளைப் பார்த்துக் கொண்டிருங்களென்று தன்னோடு வந்திருக்கும் வர்த்தகருக்குச் சொல்லிவிட்டுத் தான் அரிகீர்த்தனம் செய்யுமிடத்திற்குச் சென்று அரிதாசனோடு கலந்து கொண்டு பகவானைத் தியானித்துக்கொண்டு ஆனந்தக்கடலில் மூழ்கி அரிகீர்த்தனம் கேட்டுக்கொண்டிருந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் இவரோடு வந்திருந்த வர்த்தகர்களெல்லோரும் உபேக்ஷையுடையவர்களாய் இவருடைய குதிரையை அவிழ்த்துவிட்டு மூட்டைகளையெல்லாம் ஓர் பாழுங்கிணற்றில் போட்டுவிட்டு நித்திரை செய்துகொண் டிருந்தார். அப்படிப்பட்ட சமயத்தில் பக்தவத்சலனை பகவான் ஓர் பிராமணரூபமாய் அங்குவந்து பானுதாசனுடைய குதிரையைப்பிடித்துக்கொண்டு அந்த ஆலயத்துக்குக் கொஞ்சந்தூரத்தில் உட்கார்ந்துக் கொண்டிருந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் திருடர்வந்து அந்த வர்த்தகரை எல்லாரையும் செவ்வையாயடித்து அவர்களுடைய ஸர்வத்தையும் அதிகரித்துக்கொண்டு போய்விட்டார்கள். அதின்பிறகு அந்தவர்த்தகர் எல்லோரும் தன்னுள்ளே சிந்தையடைந்தார். நாம் பானுதாசனுடைய விஷயத்தில் துரோகம் நினைத்தோம். அவருக்கு ஆத்மபாரம் வகித்திருக்கும் ஸ்ரீபாண்டுரங்கன் நம்மீதுகோபித்து

அவருடைய வஸ்திரங்கள் மாத்திரம் பாழும்கிணற்றில் பத்திரப்படுத்திவிட்டு நமதுபாபமானது திருடரூபமாய் வந்து நமது சொத்துக்களை அபகரித்துக்கொண்டு போய்விட்டார்.

சுலோகம்.

அன்யதாசிம் திதம்சார்யம்
தைவமண்ய த்ர சிந்தயேத்.

என்னும் மொழிபோல் பிரத்தியக்ஷமாய் லபித்தது. இப்படியாகச் சிந்தித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் அரிகீர்த்தனம் ஆனவுடனே பானுதாசன் வந்தான். பிராமணரூபமாய் குதிரையைக் காப்பாற்றிக்கொண்டிருந்த பண்டரிநாதன் அதிர்ஸயமாகிவிட்டார். பானுதாசன் தன்னுடைய குதிரையை முன்போலவே கட்டிவிட்டு ஆலயத்திற்குள் பிரவேசித்து நடந்த சவிஸ்தாரங்களையெல்லாம் அவர்களால்கேட்டு அந்தவர்த்தகரைப்பார்த்துசொன்னர்.

சுலோகம்.

அவஸ்ய மனுபோக் தவ்யம்
குருதம் கார்ய சுபாசுபம்.

என்னும் மொழிபோல் எப்படிப்பட்டவர்க்காகிலும் பூர்வகர்மபலத்தை அனுபவிக்காமல் ஒருக்காலும் தீராது. என்மீதுபொருமைகொண்ட நீங்களே எனது மூட்டைகளைப் பாழுங்கிணற்றில் போட்டு அதைப்பத்திரமாய்க் காப்பாற்றினீர். உங்களுடைய சொத்துகள்மீது அதிக பத்திரமாயிருந்தபடியால் அதைத் திருடர் அபகரித்துக் கொண்டுபோய் விட்டார். ஆகையால் ! இனியாகிலும் கர்மத்துக்குடையவராகாமல் முக்திபதவி அடைவதற்குப் பிரயத்தனப்படுவீர். அதற்கு இவ்வளவு கஷ்டம்கிடையாது. தங்களுடையஆத்மபாரத்தைஸ்ரீ புண்டரிநாதன்மீது நிறுத்தி முக்தியென்னும் பெரும் வீட்டைக்கண்டு அந்ததேவனைத் தியானிப்பீர். இப்படியானித்தால் உங்களுக்கு முக்தியதிகமாகும். இப்படியாக அநேக நீதிகள் போதித்து பாழுங்கிணற்றிலிராநின்ற தன்னுடையமூட்டைகளைஎடுத்துஅவருக்குப்பாகித்துக் கொடுத்து அவரைச் சந்தோஷப்படுத்தி அவருடன் வெளியில்வந்து எனதுகுதிரையைக்காப்பாற்றினது ஸ்ரீபாண்டுரங்கனென்று நிச்சயித்து புண்டரீகவரதர் திருடர்பயமில்லாமல் குதிரையைக் காப்பாற்றினது போல் காமக்குரோத லோப மோஹ மத மாச்சரியமென்னப்பட்ட திருடர் கையில் சிக்காதபடிக்கு எனக்கு நீர்கொடுத்த ஞானரத்தினத்தை ஆதரித்து எனது ரக்ஷணை இடைவிடாமல் இருக்கவேண்டும் என்று அநேகவிதமாய் ஸ்தோத்திரம்செய்து பைட்டினிபுரத்திற்குவந்து வர்த்தகசாலையில் சிலதிரவியத்தோடு தன்னுடைய புத்திரஸ்வாதினம் செய்து சில திரவியத்தைத்தீனருக்கு உபயோகித்து பண்டரிபுரத்தில் வசித்துக்கொண்டு நிரந்தரம் பகவத்தியானபரனுய் காலத்தைக்கழித்துக்கொண்டு பிறகு வைஷ்ணவசாயுஜ்யத்தை யடைந்தார். கேட்டீரோ பக்தரே! இப்படியல்லவோ பக்தி அனுக்கிரகத்தால் அவருக்கு மோக்ஷம் லபிக்குமென்று சொன்னவுடனே சூரியபகவான் மேற்குதிசையில் அடைந்தான். இதைக்கண்ட உடனே எல்லோரும் எழுந்து அவரவரிருப்பிடம் சென்றார்.

பானுதாசன் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ண பரப்ரம்மணேநம:

இருபத்தைந்தாவது

# இராமராஜன் சரித்திரம்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

எண்ணுதவெண்ணமெல்லா மெண்ணியானும்நொந்தேன்
புண்ணுதேயெந்தன்மனம் போதும்இராமையா
பண்ணுதபாவமென்ன பாவியானும்செய்தேன்
பக்ஷம்வைத்துக்காக்கவாரும் பண்டரிநாதா
மண்ணுசைப்பொருளாசை மற்றதெல்லாம்துறந்து
உன்னுசையாலேயானும் உருகுலேந்தேன்மெய்யா
கண்ணுலேபார்த்துமென்னே காக்ஷிதரவாரும்
கருணுகராதீனபந்து கலிகாவதாரா.

சுலோகம்.

த்யேயஸ்ஸதாசவித்ருமண்டலமத்ய வதரிநாராயணுஸ்ஸரஹிஜாஸநஸன்னிவிஷ்ட:
சேயதுரவானமகரகுண்டலவான்சிரிகு ஹாரீஹிரண்மவபுத்ருசங்கம்சக்கிரஹ:

எப்படியென்ருல் நாபாஜிசித்தர் உதயமான வுடனே காலேக்கடனே முடித்துக்கொண்டு கங்கைக் கரை யடைந்து ஸ்நானம்செய்து திவ்விய மலர் கொய்துகொண்டு நெற்றிக்குத் திருமண்காப்பணிந்து ஸ்ரீமன்நாராயணன் எதிரில் சென்று திவ்யமலரால் பூஜைசெய்து எதிரில்நின்று, ஒ மாதவனே! கேசவனே! எனக்கு மறுஜென்மமில்லாமல் கடைத்தேற்றி உன்னுடைய திருப்பாதகமல சேவைதந்து காப்பாற்றுமையாவென்று அனேகவிதமாய் ஸ்தோத்திரம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் இந்த நாபாஜிசித்தருடைய சீடர்களெல்லோரும் கும்பலாகச்சேர்ந்து நாம் எல்லோரும் இதுவரைக்கும் குருசொன்ன மொழிபோல் நடக்க ஏதும் ரீதியில்லாமல் இருக்கின்ருேம். ஆகையால் இன்று நாம் சென்று நம்மு மனது கல்மிஷத்தைச்சொல்லி நிவர்த்திசெய்து கொள்ளுவோம் என்றுசொல்லி எல்லோரும் ஏகோபித்து குருவினிடம் வந்து அனேக வந்தனம்செய்து, ஒ பகவானே! நாங்கள் இதுவரைக்கும் பகவான் இன்னதென்று அறிந்திட சாத்தியமில்லாமலிருக்கின்ருேம். ஆகையால் நாங்கள் கடைத்தேறும்படியான மார்க்கம் காட்டுவீர், சுவாமி என்று கேட்டமாத்திரத்தில் நாபாஜிசித்தர் மனமிரங்கி, ஒ சீடரே! உங்களிஷ்டம்போல் தெரியப் படச் சொல்லுகிறேன். ஆனல் இப்பூமண்டலத்தில் இராஜராஜனென்று ஒரு பக்தன் இருக்கின்ருன். அவருடைய சரித்திரம் சொல்லுகிறேன். அதைக் கேட்டபிறகு முக்தி யடையும்படியான மார்க்கந் தெரிவிக்கிறேன் என்று சொன்னமாத்திரத்தில் சீடர்கள் எல்லோரும் அம்மொழிக்கு சம்மதமடைந்து, குருநாதா! உமது இஷ்டப்படி சொல்லுவீரென்று கேட்டார். அதற்குச் சம்மதமடைந்து குருநாதராகிய நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

கேட்டீரோ சீடர்களே! எப்படியென்ருல் வித்யாநகரம் என்று ஒரு பட்டணம் உண்டு. அப்பட்டணத்தை நீதிதவறிடாமலும் செங்கோல் பிடித்து ஆறிலொருபங்கு குடிகளிடம் வாங்கி தன்னுடைய சத்தியவேதமாய் ஆண்டுகொண்டு வந்தார். இந்த இராமராஜனென்பவர் துர்க்காதேவியைத் தன்னுடைய இஷ்டதெய்வமாக ஆராதித்துக்கொண்டு அந்தத்தேவிக்குத் திவ்வியமாக ஆலயம் நியமித்து ஸ்வர்னவிமான மண்டபமும் கட்டி நவரத்தின கசிதமாகிய சிம்மாசனமும் அநேககோடி ஆபரணங்

களும்செய்து சோடசோபசாரத்தோடு பூஜித்துக் கொண்டு வந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் பண்டரிக்ஷேத்திரத்தில் வசிக்கப்பட்ட விப்பிரவ னொருவனிருந்தான். தான் ஒரு யாகம்செய்ய உத் தேசமடைந்து திரவியம் சேகரிப்பதாக எண்ண மிட்டு இந்த வித்யாநகரத்தைப் பரிபாலிக்கப்பட்ட இராமராஜாவைக் காணும்படி அந்நாட்டிற்கு வந் தார். அவ்வேந்தன் பிராமணனுக்கு அநேக வந்த னம்செய்து கௌரவித்து பூஜ்ஜாசனம் கொடுத்து அப்பிராமணரை அமரும்படி சந்தோஷஞ்செய்து, ஒ விப்பிரோத்தமா! தாங்கள் என்னுடை இந்தப் பேதையைத் தேடிவந்த காரியம் எது? அதை விசிதமாகத் தெரியச் சொல்லுமையா என்று கேட் டவுடனே அந்த விப்பிரசிகாமணி இம்மொழியைக் கேட்டுச் சொல்லத்தொடங்கினர். கேட்டீரோ இராஜகுலோத்தமா! யான் வசிப்பது இந்நாட்டிற்கு வடக்கு; யான் ஓர் யாகம் செய்ய மனமிட்டிருப்ப தால் அதற்குக்கொஞ்சம் திரவியசகாயம் வேண்டி இத்தனைதூரம் தமது புகழைக்கேட்டு வரலானேன் என்று சொன்னவுடனே இம்மொழியெல்லாம் கேட்டு வேந்தன் சந்தோஷமடைந்து ஒ விப்பிர குலோத்தமா! நீ ஏதுக்கும் அஞ்சவேண்டாம். உன் மனேவிச்சைபோல் நிறைவேற்றுகிறேன். ஆனல் என்னுடைய குலதெய்வமான துர்க்காதேவிக்கு ஆராதனைசெய்யும் காலந்தன்னில் நீர் அந்தத்தேவி சன்னதிக்கு வந்து அத்தேவியைத் தரிசிக்கவேண்டு மென்று என்மனேவிச்சையா யிருக்கின்றது என்று சொல்லி அரசன் அந்தப்புரமடைந்து நெற்றிக்குத் திலகம் தரித்துக்கொண்டு ஜபமாலை கையிலணிந்து துர்க்காதேவி ஆலயத்திற்குப் பிரவேசித்து, பண் டரிக்ஷேத்திர நிவாசியான அப்பிராமணனை அங்கு வரும்படி செய்து சோடசோபசாரத்தோடு துர்க் காதேவிக்குப் பூஜையை முடித்து மகா நைவேத் தியமான பிறகு அவ்வேதியனைப் பார்த்து, ஒ பிரா மணா! இந்த உமாதேவிக்குச் சமமாகிய தெய்வம் இந்த மூன்று லோகத்திலும் கிடையாது. இத்தேவி க்கு உண்டான அபரிமித ஐஸ்வரிய அபூர்வமாயிரு க்கின்றது. இதுவல்லாமல் இந்தத்தேவியின் சௌந் தரியம் அற்புதமாயிருக்கின்றது. இதுபோல பண் டரிநாதனுக்கு இப்படிப்பட்ட பிரபாவம் ஒருபோ தும் கிடையாது. அங்கு இவ்வளவு சிரத்தையோடு யார்தான் ஆதரிப்பார்? யாரும் கிடையாது. நீங் கள் தாரித்திரமடைந்திருப்பதால் உங்கள் பண்டரி நாதனுக்கு வஸ்திராபரணுதிகள் கேவலத்திற்கு மிதமாயிருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது என்று சொன்னர். இம்மொழி கேட்டமாத்திரத் தில் பிராமணன் சகிக்காதவனய் ஏ ராஜேந்திரா! எக்காலமும் நீ அந்தப் பண்டரிபுரத்தை பார்க்காத தால் இப்படியெல்லாம் மனதிற்கு வந்தபடி மொழி யாடுகின்ருய் அவ்விடத்தின் பிரபாவத்தை கொஞ் சம்போது விவரித்துச் சொல்லுகிறேன். அதை சிரவணனந்தமாய்க் கேட்பாயென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்ருல் அந்தப் பண்டரி புரமானது விஸ்வகர்ம நிர்மிதமானது, அந்தத் தேவாலயத்துக்கு நாலுபக்கத்திலும் கற்பகவிரு க்ஷம் நிறைந்து காலமாயிருக்கின்றது. அங்கிருக் கப்பட்ட சர்சலோஸ்பரஸ்வேத்தைகளா யிருக்கின் றது. அந்தக்கோடி திவ்யபாதகங்கள் ஆகாசத்தி ற்கு அகப்படாமல் பிரகாசித்துக் கொண்டிருக்கின் றது. அந்த ஆலயத்தில் காமதேனு நித்தியமும் சானித்தியமாய் ஸ்ரீபண்டரிநாதருடைய பக்தஜன ங்களுக்கு வேண்டுமான வஸ்துக்களை அபரிமிதமாய்க் கொடுத்துக்கொண்டிருக்கும். நந்தவனங்கள்தோ றும் காவுவைகள் ரத்தின கசிதமாயிருக்கும். சாது ஜனங்கள் தேஹாபிமான வர்ஜ்ஜிதராய் எக்காலமும் பாண்டுரங்கனைத் தியானித்துக் கொண்டிருக்கும் கோஷ்டத்தைக்கேட்டு ஸ்வர்க்கலோகவாசிகள் ஆன ந்தித்துக் கொண்டிருப்பார். சந்திரபாகத்தில் அமு ர்தம் சதா பிரவாகித்துக் கொண்டிருக்கும் திரிலோ கத்திலும் உண்டானதீர்த்தம் இந்த சந்திரபாகத்தில் ஸ்நானம் செய்து பாகவஸ்பரீத்தால் தமது தோஷ ங்களைப் போக்கிக்கொண்டு பரிசுத்தமடைவார். தெய்வகன்னிகள் ஸ்ரீபாண்டுரங்கனுடைய சன்னதி யில் நாட்டியம் செய்து கொண்டிருப்பார், கந்திரு வர் பாடிக்கொண்டிருப்பார். தும்புருநாரதர் ஆன ந்தபரவசமடைந்து கலியாணகுணகுணங்களை வர் ணித்துக் கொண்டிருப்பார். ஸ்ரீ பண்டரிநாதனு டைய திவ்யமங்கள விக்கிரஹமானது கோடிசூரியப் பிரகாசமான கிரீடகாந்தியோடும் மகரகுண்டலத் தோடும் சேர்ந்தும் கர்ணங்கள் பரியந்தம் நிறைந்து பாகவதருடைய கிருபாதிருஷ்டியைப் போஷிக்கத் தக்க நேத்திரங்களோடும் திவ்ய பீதாம்பரத்தோ டும் கடின்யஸ்த யஸ்தத்தோடும் சமகரணத்தோடும் சந்திரப் பிரகாசத்தோடும் சேர்ந்த சூரியபிரகாசத் தோடும் பிரகாசித்துக்கொண்டிருக்கும். அந்தத் திவ்யமங்கள விக்கிரஹத்தைச் சேவையடைந்த மாத்திரத்தில் சம்சாரமென்னும் தாபமானது தன் னைவிட்டு அகலும். பிரமானந்த மூண்டாகும். இது வல்லாமல் அந்தத் திவ்யமூர்த்தியைச் சேவையடை ந்த வாஸ்ய விஸ்வாமித்திர சௌகில்ய சௌலப்ய

ஞான சத்துவு இவர்கள் மூர்த்திகரித்தது போலிருக்கும். துவாதசாதித்யாளும் ஏகாதச ருத்திராதிகளும் அஷ்டவசுக்களும் அஸ்வனிதேவர்களும் அந்தப் பகவானுடைய மந்திரத்தில் கிங்கரராய்க் காத்துக்கொண்டிருக்கின்றார். அனேக ரிஷிகளும் ஸ்ரீ பாண்டுரங்கனை எக்காலமும் உபநிஷத்தால் தியானித்துக் கொண்டிருப்பார். பிர்மாவும் சிவனும் திக்குப்பாலகரும்அங்கு சானித்தியம் செய்துக்கொண்டு பக்திவான்கள்செய்யும் பகவன் நாமசங்கீர்த்தனங்களைச் சிரவணானந்தம் செய்துக்கொண்டிருப்பார். ஸ்ரீ பாண்டுரங்கனைச் சேவித்துக்கொண்டு விஸ்வேஷ சஹிஷ்ணரா யிருப்பார்.

அய்யா! உன் குலதெய்வமான துர்க்கியை இப்படி சேவையடைவது பார்த்தீரா? இதுவல்லாமல் திவ்யநதிகளும் மகா பக்தர்களும் மூர்த்திகரித்து மாதவனைச் சேவித்துக் கொண்டிருக்கும். ஓ ராஜனே! யான் எவ்வளவு அவரை வர்ணித்துச்சொல்லுவேன். அந்தத் தேவதேவனை ஆயிரம்நாவுடைய ஆதிசேஷனும் வர்ணிக்க முடியாது. கேவலமாகிய என்னால் வர்ணிப்பதற்கு ஏது மனம்வரும்? இதுவல்லாமல் பகவத்கலியாண குணங்களை கந்தத்தையும் காணுதபடிக்கு வெட்கமடைந்து நிவாச சய்யாசன பாதுகாம்சோகோபதான வர்ஷாதபவனை இவர்கள் திடசரீர பேதமடைந்து பரிக்கிரகிக்காமல் அசேஷசேஷ விர்த்தியடையாமல் சேஷயஞ்சயத்தால் பிரக்யாதியா யிருக்கின்றார். நித்திய விபூதியாயிருப்பார். பகவானை பரமசாமான்ய மடைந்திருப்பவர். ஆகையால் அங்கு அந்த சர்வேசனுடைய வாத்சல்ய சௌசீல்ய குணங்கள் உதயாதிகாலத்தில் சந்திரனைப்போல் பிரகாசிக்காமலிருப்பதால் அனந்தகருட விஷ்வக்ஸேநாதி நித்தியசூரிகள் ஸ்ரீ பண்டரிபுரத்தில் ஆஸ்ரயித்து புண்டரீகவரதனுடைய கல்யாணகுணங்களை அனுபவித்துக்கொண்டிருக்கிறார். எப்படியென்றால் வெண்ணையை அறியாதவன் பூசனிப்பூவைத் தேனென்றும், அதை அறியாதவன் கூபமுடையவன். பூர்ணச்சந்திரபிம்பத்தை அறியாதவன் சந்திரசேகயை வர்ணித்தவன்போல் எக்காலமும் ஸ்ரீபாண்டுரங்கனுடைய சேவையறியாதவன் நீர் துர்க்காதேவியைத் தியானித்துக் கொண்டிருக்கின்றாய். இப்படிச் சொன்னவுடனே வேந்தனுக்குக் கோபம் உண்டாகி கண்கள்சிவந்து பற்களை நறநறவென்று கடித்து ஓ பிராமணோத்தமா! நீ பாண்டுரங்கனுடைய பூர்வலக்ஷணங்களை எடுத்துச் சொன்னீர். அதுவும் போக என் குலதெய்வத்தை அந்தப் பாண்டுரங்கனுடைய மகாகோபுர துவாரத்தில் பரிசாரகம் செய்வதாய்ச் சொல்லிவிட்டாய். ஆகையால் நீ சண்டாள பாபத்தில் மூழ்கியிருக்கின்றாய். ஆனபோதிலும் பெரிதல்ல. யான் உன்னோடு அந்தப் பண்டரிக்ஷேத்திரத்துக்கு வருகின்றேன். அங்கு நீ சொன்னமொழியை ரூபிக்கவேண்டும் என்றான். அதை வேதியன் கேட்டு சம்மதமடைந்து அந்த இராஜோத்தமனைத் தன் பின்பற்றி அழைத்துக்கொண்டு பண்டரிபுரத்துக்கு வந்துகொண்டிருந்தார். அக்காலத்தில் அப்பிராமணோத்தமன் பண்டரிநாதனை மனதில் தியானித்துக்கொண்டு ஓ ருக்மணிகாந்தா! இந்த வேந்தன் உன்னை அவமதித்துத் துர்க்காதேவியைத் தியானிப்பதைக்கேட்டு அது எனக்குச் சகிக்காமல் ஸ்ரீ பண்டரிபுரத்தினுடைய வைபவத்தையும் உன் கலியாணகுணத்தையும் என் மனம் போனதுபோல் இந்த வேந்தனுக்கு வர்ணித்துச் சொல்லிவிட்டேன். இக்காலத்தில் உன்னைப் பரீக்ஷிப்பதாய் இவர் என்னோடு வருகின்றார். எனதுமொழி நிஜமாகாவிட்டால் இவர் என்னைத் தண்டனைவிதிப்பார். ஆகையால் இதற்கு யான் பயப்படவில்லை. எத்தனைகாலம் பிழைத்தபோதிலும் இந்தத் தேகமானது ஒருநாளைக்காகிலும் அக்கினிக்கு ஆகாரமாகாமல் தப்பாது, உனது வைபவத்துக்கு ஆனி உண்டாகுமென்று என்மனம் சகிக்காமல் பயமடைகிறேன். எப்படியென்றால், பிரகலாதனனுடைய மொழியை ஸ்திரப்படுத்துவதற்காக நரஹரி ரூபத்தோடு சபாஸ்தம்பத்தில் அவதரித்ததுபோல் என்மொழி நிஜம் செய்யவேண்டியது. (மஹத்யாபதிசம்பிராப்தே ஸ்மர்தர்யோ பகவான்ஹரி:) என்னும் விசிஷ்டோபதேசத்தை விஸ்வசித்து ஆபத்காலத்தில் கோவிந்தாவென்று உம்மைக் கூப்பிட்டமாத்திரத்தில் துரோபதைக்கு அக்ஷயமென்று சேலைதந்து மானத்தைக் காப்பாற்றினது நிஜமானால் என்மொழியை நிஜமாக்கவேண்டும். பாலியத்தில் விரக்தி யடைந்து மஹரிஷி வாக்கியத்தால் தன் ஸ்வரூபத்தை யறிந்து உன்னை உபாசித்த துருவனுக்கு சர்வோத்கிருஷ்டபதவி கொடுத்தது நிஜமானால் என்மொழிக்கு ஏதும் அபலங்கியமில்லாமல் காக்கவேண்டும். ஓ பாஹிமான்! என்று முறையிடப்பட்ட கஜேந்திரனை அன்று இரக்ஷித்தது நிஜமானால் என்மொழியைக் காப்பாற்றவேண்டும். ஓ புருஷோத்தமா! இப்போது என்மொழி பொய்யானால் உனது சரித்திரமெல்லாம் பொய்யாகிவிடும். ஆகையால் என்மொழி நிஜமாக்கி உனது சத்சரித்திரத்தைக் காத்துக்கொள்ளும்.

இப்படியெல்லாம் தன்மனதில் தானே பிரார்த்தித்துக் கொண்டான்.

இப்படியிருக்க, சர்வசக்தி யுக்தமரான பக்த வத்ஸலன் தன்னுடைய திவ்யசங்கல்பத்தால் அந்தப்பிராமணன் சொன்னதுபோல் சகல சம்பிரமத்துடன் இருந்தது. அதின்பிறகு அந்தவேந்தன் பண்டரிபுரமடைந்து பார்க்கையில் இந்தப் பிராமணன் சொன்னதைவிட அதிக மேன்மையடைந்த ரங்கனுடைய வைபவத்தைப் பார்த்து ஆனந்தப் பரவசமடைந்து அங்குசானித்தியம் செய்துகொண்டிருந்த சூரர்களையும் தேவர்களையும் மகாரிஷிகளையும் இப்படி யிருக்கப்பட்ட கோஷ்டிகளுக்கு வந்தனம் செய்து சந்திரபாகாநதியில் ஸ்நானம்செய்து கோபுரதுவாரத்துக்கு வந்து அந்த மகாதுவாரத்தில் நுழையும் சமயத்தில் வந்தனம் செய்து அங்கு அனேககோடி தேவர்களோடு சேர்ந்து கைங்கரியத்தைச் செய்துகொண்டிருக்கும் தன்னுடைய குலதெய்வமான துர்க்காதேவியைப் பார்த்து, ஓ பரதேவி! எனறு வந்தனம்செய்ய, அந்தத் துர்க்கா தேவி பார்த்து ஓ இராஜோத்தமா! உன்னுடைய ஜனனமானது இன்று சாபல்யமாகிவிட்டது. இந்தப் பிராமணனுடைய வியாஜ்ஜியத்தால் ஸ்ரீ பாண்டுரங்கன் உன்மீது கருணைகூர்ந்தார். இந்தத் தேவதேவனுடைய மகிமைப்பிரபாவத்தை சில சனகாதிகளுக்கும் தேவபுருஷருக்கும் வாசாமகோசரமாயிருக்கும். ஆனல் நீ உட்பிரவேசித்துப் புண்டரீக வரதனைச் சேவையடையும். எப்படியென்றல் உள்ளங்கைக்குக் கண்ணுடி வேண்டுமா? அதுபோல் சமஸ்த கலியாணகுணகணங்களை மூர்த்திகரித்திருக்கும் ஸ்ரீருக்மணிகாந்தனைச் சேவை அடைந்தமாத்திரத்தில் அவருடைய க்லியாணகுணங்கள் பிரகாசிக்கும். உனக்கு மேலும் உண்டாகும் என்று அனுக்கிரகித்துத் துர்க்காதேவி தனது நியமித்துக்குடைந்தாள். அதன்பிறகு உட்பிரவேசித்த பிரம்மனல் தான் கேள்வியடைந்ததை மேன்மையாய் ஸ்ரீபுண்டரீகவரதனைச் சேவையடைந்து தியானிக்கும் சமயத்தில் ஏதுந்தோன்ருமல் நிர்மலமாய் நின்றுவிட்டான்.

சுலோகம்.

புருத்வேரேணுரணு: பியாம்சிகனிகா
பல்குஸ்புலிம்போலகு
ஸ்தேஜோநிர்வஸனம் மருத்தநுதரம்
ரம்தரம்ஸூக்ஷ்மம்நப:
க்ஷூத்ராருத்திரபிதா மஹாப்ரபுருதய:
கிடாஸ்ஸமஸ்தாஸ்ஸுரா
த்ருஷ்டேயத்ரஸதாவகே
ரவிஜபதேபூமாவதூதாவதி:

எந்த மஹிமை காணும்போது பூமியானது சின்ன அணுவாயும், ஜலமானது சின்ன கும்பரமாயும், தேஜம் சின்ன மினுவாயும், வாயுவானது மகா சன்னமாகியும், ஆகாசமானது சின்னரந்திரமாயும், பிரம்மருத்திராதி சமஸ்த தேவதைகள் சின்ன புழுக்களாயும் தோன்றுமோ, அதுபோல் உமது மகிமை கணக்கில்லாதபடி பிரகாசித்துக் கொண்டிருக்குமென்று சொல்லி ஓ தேவாதிதேவா! உமது மகிமை யான் அறியாதபடிக்கு எனது ஆயுளை வியர்த்தமாக்கிவிட்டேன். இச்சமயத்தில் இந்தப் பிராமணனுடைய வியாஜ்ஜியத்தால் என்மீது கிருபைகூர்ந்து தமது சேவைதந்தீர். ஆகையால் உம்மை எமது பட்டணத்திற்குக் கொண்டுபோய் ஆராதிக்க வேண்டுமென்று என்மனேயிச்சை கொள்ளுகிறது. பக்தரபீஷ்டபல பிரதாபகன் என்று பிறகு லயித்து இருக்கும். ஆனல் நீ என் மனேவிச்சையைப் பூர்த்தி செய்யாவிட்டால் உனது கல்யாணகுணங்கள் பஸ்மாஹூதியாகுமென்று சொன்னன். அவ்வாறு சொல்லிய வேந்தன் மொழியைக்கேட்டுக் கோபால கிருஷ்ணன் புன்சிரிப்படைந்து ஓ இராஜோத்தமா! ஆனல் உன்மனேவிச்சையை யான் பூர்த்திசெய்கின்றேன். ஆகையால் இன்று இராத்திரிக்கு என்னை நீ உனது நாட்டிற்குக் கொண்டுபோவாய். ஆனல் நீ ஏதாகிலும் அக்கிரமமாக நடந்தால் யான் மறுபடியும் பண்டரிபுரத்துக்கு வந்து சேர்ந்துவிடுவேனென்று சொன்னமாத்திரத்தில், அவ்வேந்தன் அம்மொழிக்குச் சம்மதமடைந்து பண்டரிநாதன் நியமித்ததுபோல் அன்று இராத்திரி அந்தத் தேவதேவனை பயபக்தியுடன் தன்னுடைய நாட்டிற்கு எடுத்துக்கொண்டு வந்துவிட்டான். இப்படி யிருக்கும் சமயத்தில் மறுநாள் உதயமானவுடனே அர்ச்சகரும் அனேககோடி பாகவத கோஷ்டிகளும் அந்த ஆலயத்தில் பிரவேசித்து பார்க்கையில் அங்கு பகவான் இல்லாதபடியால் எல்லோரும்சோகமடைந்து ஒன்றும் தோன்ருமல் பூமிமீது விழுந்து ஓவென்று கோஷ்டமிட்டு அழுதுக்கொண்டிருந்தார்.

அச்சமயத்தில் இருக்கப்பட்ட துராவஸ்தையானது பகைவருக்காகிலும்பார்க்க வியாகூலமடையும். அப்பொழுது பண்டரிபுரமானது சந்திரனில்லாத இரவுபோலவும், புருஷனில்லாத ஸ்திரீபோலவும், தீபமில்லாத வீட்டைப்போலவும், பால்யனில்

லாத சமுசாரிபோலவும், சூன்யமாயிருந்தது. அச்சமயத்தில் அங்கிருந்த சாதுஜனங்கள் தமக்குள் எண்ணிக்கொண்டு துக்கமடைந்தார். நமது விடல நாதன் யான் ஒருபோதும் இவ்விடம்விட்டுப் போக மாட்டேனென்று புண்டரீகனுக்காகச்செய்த பிரதிஞ்ஞையை மறந்து தாயில்லாத சேய்போல நம்மை வெறுத்து இராமராஜாவைச் சந்தோஷிக்கும் பொருட்டு வித்தியாநகரத்துக்குப் போய்விட்டாரென்று தோன்றுகிறது. இதுவல்லாமல் பூர்வீகம் கோகுலத்தில் கோபிகளை உபேக்ஷிக்கும் பொருட்டு மதுரைக்குச் சென்றதுபோல் ஜலத்தைவிட்ட மச்சத்தைப்போல் நம்மை மறந்து வித்யாநகரத்துக்குச் சென்றுவிட்டார். இராமராஜன் நாட்டில் அந்த வேந்தனல் ஆராதிக்கப்பட்ட ருக்மணிகாந்தனைப் பண்டரிபுரத்துக்கு மறுபடியும் கொண்டு வருவதற்கு எவர் சமர்த்தமுடையவர் என்று சோதித்துக் கொண்டிருக்கும் சமயத்தில பாகவதர்க்கிரகண்யனை பானுதாசன் அவர்களைப் பார்த்து, ஒ சாதுக்களே! யான் சென்று பண்டரிநாதனைக் கொண்டு வருகின்றேன். இல்லாவிட்டால் எனது பிராணனை அங்குத் தியாகம்செய்து விடுகின்றேன் என்று சொல்லி அப்பொழுதே பிரயாணமடைந்து வித்தியாநகரமடைந்து ஒருவைஷ்ணவன் வீட்டில் வசித்துக்கொண்டு இராஜன் கிருஹத்தில் பண்டரிநாதன் இருக்கப்பட்ட ஸ்தலத்தையும், அந்தவேந்தன் அப்புருஷோத்தமனை ஆராதிக்கும் கிரமத்தையும், செவ்வையாய்த் தெரிந்துகொண்டு தான் ஒரு அதிதிவேஷம் தரித்து மத்தியானகாலத்தில் இராஜன் கிருகத்தில் பிரவேசித்துத் தன்னையாரும் அறியாதபடிக்கு ஒருமூலையில் ஒளித்துக்கொண்டிருந்து நடுஜாமத்தில் பாண்டுரங்கன் சன்னதிக்குச் சென்றார். அப்பொழுது புண்டரீகவரதன் அமைந்திருக்கும் மந்திரகபாடங்கள் பகவத் சங்கற்பத்தால் திறந்துவிட்டது. அச்சமயத்தில் பானுதாசன உட்பிரவேசித்து கோபாலதேவனை ஆலிங்கனம்செய்து கொண்டு தன்னுடைய கண்ணீரால் பகவானுக்கு அபிஷேகித்து, ஒ ருக்மணிகாந்தா! எங்கள்மீது கருணையில்லாமல் எங்களைக் கைசோரவிட்டு வந்துவிட்டாய். நாங்கள் பிறகு திவஸ்யனுணப்யத்தால் புத்தி பூர்வீகமாயும் அபுத்தி பூர்வீகமாயும் உன்னுடைய விஷயத்தையும் உன்தாசர்கள் விஷயத்தையும் அபசாரமடைவதற்கு ஹேதுவாயிருக்கிறது. ருக்குமணி சத்தியபாமை உனக்கு என்ன அபசாரம் செய்தார்கள்? புண்டரீகவரதனென்று பேர்வகித்து அந்த மகாத்துமா நித்தியமாய் பண்டரிபுரத்தில் நின்றுவிட்டாய். உன்னுடைய விஷயத்தில் புண்டரீகன் என்ன அபசாரம்செய்தான்? எங்கள் தப்பிதத்துக்காக அவர்கள் எல்லோரையும் வெறுத்துவரலாமா? இப்பொழுது சாமந்தனிருந்தால் உன்னை தன்னுடைய இருதயத்தில் பத்திரம்செய்து இராம ராஜாவுக்குக் காட்டாமலிருப்பானே. இதுவல்லாமல் நாமதேவர் ஜனபாயி இப்போதிருந்தால் அவர்கள் சொல்லும்படியான கீர்த்தனைகள் கேட்பதுவிட்டு வித்யாநகரத்துக்கு வருவாயா? அப்படிப்பட்டவர் இப்போதில்லாதபடியால் எம்மை அனுதியாய்ச் செய்து மனம்கொண்டபடி வந்துவிட்டீர். இந்தப் பண்டரிபுரத்தில் அனேக சாதுஜனங்கள் உன்னுடைய திவ்யமங்கள விக்கிரஹ சௌந்தரியத்தைக் காணுவதற்கு அபேக்ஷையடைந்து தன்னையே தாரக, போஷக, யோக்கியமாக ஸ்வீகரித்து இருக்க அவர்களைவிட்டு வருவதற்கு உனக்குத்தர்மமா? சக்ருர்திபபக்திசெய்து யான் தங்களில் ஒருவனென்று நீர் செய்த அபயப்பிரதானத்துக்கு எங்களை மாத்திரம்வெளியாக்குவதற்கு உனக்கு என்ன நீதியாயிருக்கின்றது? (ராமோத்விராஞபிபாஷதே) என்னும் பிரமானந்தம் எங்கள் நிமித்தியத்தால் பொய்யாய் விட்டது. சேஷபூதன் தப்பிதம் செய்தால் பகவான் தண்டிப்பான். பகவான் தப்பிதம் செய்தால் தகாதென்றுசொல்பவர்யார்? இப்படியாகப்பானுதாசன் சொல்லக்கேட்டுப் பாண்டுரங்கநாதன் மந்தஸ்மிதமடைந்து தன்னுடைய பீதாம்பரத்தால் பானுதாசனுடைய கண்ணீரைத்துடைத்து, ஒ வத்ஸா! இப்பொழுது நீ சோகமடையவேண்டாம். யான் இந்த வேந்தனை திருப்திகரம் செய்வதற்காக இங்குவந்தேன். என்னுடைய தேகமானது இங்கிருந்தபோதிலும் என்மனமானது தங்கள்மீதே லயித்திருக்கும். யான் உங்கள் பத்தியென்ற வலைப்பாசத்தில் அகப்பட்டு இருக்கின்றேன். இப்படிப்பட்டவனை என்னை நீங்கள் கொண்டுபோக உபேக்ஷித்திருக்கின்றீரென்று கண்ணீர்விட்டுக்கொண்டு பானுதாசனை ஆலிங்கனம்செய்துக்கொண்டு இராமராஜன் தனக்குச் சமர்ப்பித்திருக்கும் அநந்தகோடி ஆபரணங்களில் ஒன்றாகிய ரத்தினஆரத்தை அவர் கழுத்தில்போட்டு, ஒ பானுதாசனே! பிராதகாலமாய்விட்டது. இனி அந்த வேந்தன் வருவான். நீ சதுருபாயஞ் செய்துக்கொண்டு அரசன்கிரஹத்திலிருந்து வெளியிற்போவாய். ஆனல் நாளையதினத்திற்கு உனக்குச் சேவைதருகின்றேனென்று சொல்லிவிட்டார். இம்மொழியைக் கேட்ட மாத்திரத்தில் பானுதாசன் இந்நகரத்து வேலைக்காரரோடுகலந்து சதுருபாயம்செய்துக்கொ

ண்டு இராஜ்கிரஹத்தைவிட்டு வெளியில்வந்து தன்னுடைய ஸ்தானமடைந்தான்.

இது இப்படியிருக்க இராமராஜன் பிராதக்காலமானவுடனே எழுந்து ஸ்நான சந்தியானுஷ்டானங்களைத் தீர்த்துக்கொண்டு பகவத்சன்னதிக்கு வந்துஉட்பிரவேசித்துஸ்ரீருக்மணிகாந்தனைச்சேவை செய்யுங்காலத்தில் அப்பகவான் கண்டத்தில் ரத்தினஆரம் இல்லாமலிருப்பதைக் கண்டு வேந்தன் கோபமடைந்து காவலரையழைத்து, அடாகாவலர்களே? சங்கையில்லாமல் வேந்தன் கிரகத்தில் பிரவேசித்து பகவானுடைய கழுத்திலிருந்த ரத்தின ஆரத்தைக்கொண்டுபோன சோரனை நீங்கள் கண்டு பிடித்துக்கொண்டு வராவிட்டால் உங்களுக்குக்கொடியதண்டனை விதிக்கப்படுமென்று தீர்மானித்தான். இம்மொழியைக் கேட்டவுடனே காவலாளிகள் பயமடைந்து ஐயோ! தெய்வமே! இந்த இர்ராஜசோரனை நாம் எங்கு கண்டுபிடிப்பது? அப்படிப் பிடியாவிட்டால் கொடிய தண்டனைவிதிக்கப்படுமென்று தீர்மானித்தாரே என்று பயமடைந்து அந்நாடெங்கும் திரிந்து கடைசியாக கங்காநதியோரத்தில் ஸ்நானம் செய்துக்கொண்டிருந்த பானுதாசனுடையகண்டத்திலிராநின்ற கண்டஆரத்தைக் கண்டு இவனேசோரனென்று இவரைப்பிடித்துஅடித்துக்கரங்களைப் பந்தித்துக்கோர இம்சைகளைச் செய்துக்கொண்டு இராஜன்கொலுச்சாவடிக்குஎதிரில் அழைத்துக்கொண்டு வந்து, ஒ இராஜோத்தமா! ஆரத்தைக் கொண்டு போனசோரனைக்கொண்டுவந்தோம் என்று சொன்னவுடனே, அவ்வேந்தன் ஏதும் யோசிக்காமல் அடா காவலாளிகளே! இராஜமார்க்கத்தில் நாட்டியிராநின்ற சூலத்தில் குத்துங்களென்று நியமித்தார். இம்மொழியைக் கேட்டவுடனே காவலாளிகள் சந்தோஷமடைந்து பானுதாசனையழைத்துக்கொண்டு போகும் சமயத்தில் அந்தமகாத்துமா அந்தக் காவலாளிகளைப் பார்த்து, ஒ பாக்கியவான்களே! யான் எனது பிராணன் போகுதென்று சோகமடையவில்லை. இந்தத்தேகத்தைவிடுவதற்குமுன்ஓர்தடவை ஸ்ரீபாண்டரங்கனைச் சேவையடையவேண்டும். அது தான் இச்சை யிருக்கின்றதென்று பிரார்த்திக்கும் சமயத்தில், அவர்களில் ஒருவன் அரசன் சன்னிதிக்குச்சென்று பானுதாசனுடைய இச்சையை அரசனுக்கு தெரிவித்தார். இம்மொழியைக்கேட்ட அரசனும் அதற்குச் சம்மதமடைந்து இருந்துவிட்டார். காவலர்கள் பானுதாசனைப் பாண்டரங்கனுடைய சன்னதிக்கு அழைத்துக்கொண்டு வந்தார். பானுதாசன் ஸ்ரீபண்டரிநாதனை சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து ஒஜெகதீசா! உன்னுடைய சன்னதிக்கு ஏகாந்தமாய் வந்ததைப்பற்றி என்கழுத்தில்ரத்தினஆரத்தைப்போட்டு என்னை வெளிப்படுத்தி வேந்தன் ஆக்கினைக்கு உட்படச்செய்தாயே? இதுவும் தர்மமா? தன்னைக்கொண்டுபோகவந்தபடியால்எனக்கு மரணதண்டனை விதித்து விட்டாய். உனக்கு இது வெல்லாம்இஷ்டமாய் இருக்கின்றது.இனி என்னைப் போல்வந்து தன்னைக் கொண்டுபோகவந்தால் அவர்களையும் இதுபோல் தண்டித்து இராஜபத்திரத்தில் சுகமாயிரும்.

இதுவல்லாமல் யான் எத்தனை ஜன்மம் எடுத்த போதிலும் உனதுசரணாரவிந்தங்களை விடமாட்டேனென்று சொல்லிக்கொண்டிருக்கும்சமயத்தில் காவலாளிகள் ஐயா! நீர் பகவானை இவ்வளவுநேரம் சேவித்தது போதும்போதும் என்றுசொல்லிப் பானுதாசனை இழுத்துக்கொண்டுபோய் சூலத்தினருகில் குத்தினர். அச்சமயத்தில் பானுதாசன் ஒ லக்ஷ்மிகாந்தா! ஆகாசம் கடிந்தபோதிலும், பூமிதலை கீழானபோதிலும், மகாபர்வதங்கள் கிடுகிடுவென்று அதிர்ந்தாலும், சமுத்திரஜலம் ஒற்றிவிட்டாலும், சூரியசந்திரர் கதிதப்பி காய்ந்தாலும், யானொரு பொழுதும் உனது பஜனை தவிரமாட்டேன். ஆனால் உனது திருப்பாதங்கள் தவிர இதர தெய்வத்தைக் கோரமாட்டேனென்று சொன்னமாத்திரத்தில் அப்பகவான் சம்மதத்தால் அந்தச்சூலமானது மகாவர்ணமாயும் புஷ்பபல சாகைகளோடும் சேர்ந்து கற்பகவிருக்ஷமாய்நின்றுவிட்டது. இந்தஅற்புதத்தைக் காவலாளிகள் கண்டு பயமடைந்து இம்மொழியை வேந்தனுக்குஅறிவித்தார். இதைக்கேட்டமாத்திரத்தில் வேந்தன் திகிலடைந்து ஆச்சரியகாந்தனுய் அவ்விடத்திற்கு வந்து அந்த அற்புதத்தைக் கண்டு அனுதாபயுக்தனுய் அந்தப்பானுதாசனுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து தன்னுடைய யுக்தமாங்கத்தால் அவருடைய திருப்பாதங்களை அலங்கரித்து, ஒ மகாத்துமா! யான் விவேகமில்லாதவன் தப்பிதம் செய்தேன். ஆனல் பகவானுக்கு நிக்கிரகானுக்கிரகங்கள் இரண்டு இருக்கின்றது. அதுபோல் தன்னுடைய பக்தியுடையவருக்கு அனுக்கிரகம் உண்டு. அப்படிப்பட்டபக்திவான்களில் நக்கிரகண்யனை உனக்கு என்மீது நிக்கிரகபுத்தி உண்டாவதற்குச்சாவகாசமில்லை. ஆனல் உன்னைப்போல் சற்குணராசியுடையவர் எனது தப்பிதத்தை மன்னிக்க வேண்டுமென்றுசொல்லப்பட்ட மொழி பரியாசமாயிருக்கிறது. சூரியனிடத்தில் சைத்தியமும், சந்திரனிடத்தில் ஔஷணியமும் நிறைந்திருப்பதுபோல்

பகவானிடத்தில் குரோதகுணங்கள் முக்கியமாயிருக்கும். ஆனபோதிலும் பாகவதாபசாராசஹிஷ்டமான பண்டரிநாதனுக்கு என்மீது கோபமுண்டாகுமென்றுபயமடைகின்றேன். ஆனுல் எனக்காக நீர் அந்தப்புருஷோத்தமனைப்பிரார்த்தித்து உனது புருஷகாரமாய் அவனைக் கோபத்தை அடக்கச் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கும் சமயத்தில் பானுதாசன் அவ்வேந்தனுடைய கரத்தை தன்னுடைய கையால் பிடித்துக்கொண்டு ஜெகதீசனுடைய சன்னதிக்குச் சென்றார். ருக்மணிபதி பானுதாசனை ஆலிங்கனம் செய்துக்கொண்டு, ஐயா! நீ எனக்கு அந்தரங்க பக்தனுயிருக்கின்றாய். எனது விஸ்வேசத்தைசகிக்காமல் அதிகபாதையடைந்தாய். ஆனுல் புண்டரீகனுக்கு யான்செய்த வாக்குத்தத்தத்தைத் தவறினதால்யான்பண்டரிபுரத்துக்குவருகின்றேன். என்னை ரதாரூடனுய் செய்துக்கொண்டு போவாயென்றுபகவான்சொன்னவுடனே, இம்மொழியைக் கேட்ட இராமராசன் ஓசுவாமி! என்னைவிட்டுப்போவதற்கு எப்படிமனம்வந்தது? என்றுபெருங்கோஷ்டமிட்டுஅழுதார். அந்தப்பகவான்அவரைப்பார்த்து ஓ இராஜோத்தமா! உனது பக்திக்கு சம்மதமடைந்து உன்னுடைய வீட்டில் சிலகாலம் வசித்திருந்தேன். நீ தகாதகாரியம்செய்தால் இவ்விடத்திலிருக்மாட்டேனென்று முன்னமே சொல்லவில்லையா? ஆகையால் இங்கிருக்க சம்மதமில்லை இதுவல்லாமல் எனது அந்தரங்க பக்தனை பானுதாசன் விஷயத்தில் அதிகமாய் தப்பிதஞ் செய்துவிட்டாய். இனி யான் இங்கிருக்கமாட்டேன். ஆகையால் நீஎக்காலமும் இரவும்பகலும் என்னை ஸ்மரித்துக்கொண்டு என்நாமத்தை தியானம் செய்துகொண்டிருப்பாய் உன்னை மறந்துவிடமாட்டேன் இதோயான் போய் வருகிறேனென்று சொல்லி பானுதாசருக்குச் சுலபமாய் சூக்ஷ்மரூபமாகி நின்றுவிட்டார். அச்சமயத்தில் பானுதாசன் பக்தவத்ஸலனை தன்னுடைய பூஜாபெட்டியில் வைத்துக்கொண்டு பண்டரிபுரத்துக்கு வந்துகொண்டிருந்தார்.

அப்பொழுது பகவான் பானுதாசனைப் பார்த்து ஓ பக்தனே! முன்னர் யசோதை கையால் உரலில் கட்டுப்பட்டு தாமோதரனென்று பெயர்வகித்தேன். இதுவல்லாமல் ததிபாண்டனுடைய பாண்டத்தில் ஒளித்திருந்தேன். சாமந்தனுடைய இருதயத்தில் வாசம் செய்துக்கொண்டிருந்தேன் இச்சமயத்தில் உனது பூஜாபெட்டியில் அடங்கி யிருக்கின்றேன். யான் எனது ஆத்மாத்மியங்களை பாகவதருக்கு நிஷ்டவினியோகம் செய்திருக்கின்றேன் என்று சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில் பத்மாலயமென்ற கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். அப்பொழுது பானுதாசன் நதிதீரத்தில் பரிசுத்த ஸ்தலத்தையறிந்து பூஜாபெட்டியை அங்குவைத்து நதியில் ஸ்நானம்செய்து நித்தியகடனை முடித்துக்கொண்டு வந்து பார்க்கையில் அதிலடங்கியிருந்த கோபாலகிருஷ்ணன் பூஜாபெட்டியின் மேல்பாகம் கிரீடமாகவும் கீழ்பாகம் யதாக்ஷணை செய்துகொண்டு ஸ்தூலரூபமாய் சேவைதந்தார். பானுதாசன் பகவானைக்கண்டு ஓ தேவாதிதேவா! ஸ்தூலரூபியான தம்மை யான் எப்படி பார்ப்பேனென்று சொன்னவுடனே பகவான் அவரைப்பார்த்து நீர் அதிசீக்கிரமாக பண்டரிபுரத்துக்குச் சென்று அங்கு இராநின்ற சாதுக்களை யெல்லாரையும் இங்கழைத்துக்கொண்டு வருவாயென்று சொன்னவுடனே பானுதாசன் அதிசீக்கிரத்தில் பண்டரிபுரத்துக்கு வந்து அர்ச்சகரையும் இன்னம் இருக்கப்பட்ட சாதுஜனங்களையும் பகவான் சொன்னதை தெரிவித்தும்படி மங்கள வாத்தியத்தோடு பத்மாலயத்துக்கு வந்து பகவானைச்சேவித்து மெய்மறந்து தியானிப்பவரும் நிர்த்தனம் செய்பவரும் பகவானை ஆலிங்கனம் செய்பவருமாயிருந்து ரதாரூடராய் செய்துகொண்டு பூர்வீகம்போல ஆலயத்தில் பிரதிஷ்டித்து (ஜயதுஜபதுதேவோ தேவகீநந்தனோயம், ஜயது ஜயது க்ருஷ்ணோ வ்ருஷ்ணிவம்ஸம்பிரதீப-ஜயது ஜயது மேவஸ்யாமலஃகோ மாலாங்கோ-ஜயதுஜயது ப்ருத்வீ பாராணுசோமுகுந்த:) என்று மங்களா சாசனம் செய்து நிருத்தம் சமபாகத்தில் பானுதாசனைப்பார்த்து ஓ மகாத்துமா! உன்னாலல்லவா இந்த ஜெகதீசனை மறுபடியும் பார்க்கலானோமென்று சொல்லி அவர்விஷயத்தில் உபசாரசமூர்த்தி செய்தார் இப்பொழுதும் ஸ்ரீபண்டரிபுரத்தில் கார்த்திகைமாதத்தில் ரதோஸ்வ தினத்தில் இந்த அதிசயம் காணுகின்றது இதுமகா. ஆனந்தபரவசமகோற்சவமாயிருக்கின்றது இப்படியல்லவோ துதிசெய்ய வேண்டுமென்று சொன்னவுடனே சூரியன் தாயின் கர்ப்பத்திலடைந்துவிட்டான். இதையறிந்து எல்லோருமெழுந்து அவரவர்கள் இருப்பிடங்களுக்குச் சென்றார்கள்.

இராமராஜன் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணயநம:

இருபத்தாருவது

# பயரமபட்டு சரித்திரம்.

விருத்தம்.

ஆதியேயநாதி யருள்பெருகுநற்கடலே
ஐயனேயன்பர்துய ரகல்வித்தநற்பேறே
சோதியேசுகமேதூய நற்சோதிமயமே
சுத்தமேயெமையாளுந் தொல்லாழியிடங்கொண்ட
நீதியேநிர்மலா நிஷ்களங்கநிர்க்குண
நித்தமேதுதிசெய்த பத்தர்கட்கருள்செய்த
வேதியாவிமலா வேதத்துட்பொருளே
விசிதமாயெனையாண்டு விளக்குவாய்முக்தியன்றே.

இப்படி யிருக்கும் சமயத்தில் நாபாஜிசித்தர் சூரியபகவான் உதயமானதைக்கண்டு மகா சந்தோஷமடைந்து கிரமப்படி காலைக்கடனை முடித்துக் கொண்டு கங்கைக் கரையடைந்து ஸ்நானம்செய்து நெற்றிக்கு திருமண்காப்பு தரித்து பட்டுபீதாம்பரம் இடையில் தரித்து திவ்யமாகிய புஷ்பங்களை யெல்லாம் தங்கதாம்பாளத்தில் எடுத்துக்கொண்டு பகவான் சன்னிதியருகில் வந்து பகவானுக்கு அபிஷேகமுதலாகிய ஷட்கிரியைகளை முடித்து அதின் பிறகு புஷ்பம் அலங்காரம்செய்து ஒ பகவானே! யான் எக்காலத்திலும் உனது சேவைகாணும்படியும் திவ்வியமாகிய உன்னுமத்தை தியானிக்கும் பொருட்டும் அருள்தந்து ஆட்கொள்ளவேண்டும் இதுவல்லாமல் எமனென்ற பெரும்பாசத்திற்கு என்னையணுகாமல் காக்கவேண்டுமென்று பெரும் தோத்திரம் செய்து நிற்கும்சமயத்தில் இந்த நாபாஜிசித்தருடைய சிடரெல்லாம் கும்பலாக ஆற்றுக் கரை யடைந்து ஸ்நானம்செய்து ஜெபதப முடித்துக்கொண்டு அதில் பெருந்தன்மையாயிருப்பவரை பார்த்து அதில் ஒருவன் சொல்லத்தொடங்கினன். கேட்டீரோ மூத்தவரே! நாம் இதுகாலபரியந்தம் நமது குருநாதரிடம் சென்று ஞானபோதனை தெரிவிக்கும்பொருட்டு கேட்க நமது முகம்கோணுதபடிக்கு ஒர் திவ்யமாகிய சரித்திரம்சொல்லி காலம் போக்குகின்ருர். நாம் எல்லோரும் இன்று சென்று குருநாதரை பாதாரவிந்தம்பிடித்து நமது மனக்கவலை தீரும்படியான வழிகேட்டு அடையலாமென்று எல்லோரும் கும்பலாகசென்று நாபாஜி சித்தரிடமடைந்து ஒ பகவானே! நாங்கள் இதுகாலபரியந்தம் தம்மை நாடிவந்தும் வீண்போகின்றது தாங்கள் தயைகூர்ந்து எங்களுக்கு முக்தி அடையும்படியான மார்க்கத்தை அருள்செய்ய வேண்டும் சுவாமி! என்று சொன்னமாத்திரத்தில் நாபாஜி சித்தர் கேட்டு கலீலென்று சிரித்து சொல்லத்தொடங்கினர். கேட்டீரோ சீடர்களே இதுவரைக்கும் உமக்கு சொன்னவைகளெல்லாம் வெயிலுக்கு காய்ந்த நிலவுக்கு சமமாச்சுது ஆனபோதிலும் பெரிதல்ல ஆனல் இப்பூவுலகில் மோக்ஷமடைந்தவரில் ஒருவராகிய பரமபட்டு என்னும் பெயருடைய ஓர் தாசியின் சரித்திரம் சொல்லுகிறேன். அதைக்கேட்ட பிறகு உங்களுக்கு முக்தி யடையும்படியான மார்க்கம் இன்னதென்று விளங்கும் அதை சொல்லும்படிசொன்னல் சொல்லுகிறேன் என்று சொன்னமாத்திரத்தில் சீடரெல்லாம் சந்தோஷமடை

ந்து குருநாதா! தமது இஷ்டப்படியே அச்சரித்திரத்தை யடியார்களுக்கு விளங்கும்படி அருள்செய்ய வேண்டும் சுவாமியென நமஸ்கரிக்கும் சமயத்தில் நாபாஜிசித்தர் இதைப்பார்த்து சந்தோஷமடைந்து அச்சரித்திரத்தை சொல்லத்தொடங்கினர்.

கேட்டீர்களோ சீடரே! அது எப்படியென்றால் பிரதிவஷேயமென்கிற ஒரு பட்டணமிருந்தது அப்பட்டணத்தில் பயரமபட்டுவென நாமதேயமுடைய ஒரு பிராமணன் இருந்தார். அவரோ ஜோதிடவிஷயத்திலும் வேதாந்த விஷயத்திலும் மகாதேர்ச்சி யடைந்தவராயிருந்தார். இப்படியிருக்கும் சமயத்தில் அந்நாட்டில் இருக்கப்பட்ட அனேக கவிசிகாமணிகள் இவரிடம் வந்து அநுசரித்து வேண்டியவைகளை அறிந்துகொண்டுபோவார். இதுவல்லாமல் இவருடைய உபதேசமடைந்து அநேகஜனங்கள் மகா கவிசிகாமணிகளானார்கள். இவரோ பஞ்சகால நிர்ணயத்தை அறிந்து தினந்தோறும் கங்காஸ்நானம் செய்துகொண்டு நித்திய நைமித்திய கர்மத்தைக் கிரமமாக அனுஷ்டித்துக்கொண்டு போஜனகாலத்திலும் ஸ்ரீபாகவத பாராயணஞ் செய்துகொண்டிருப்பார்.

இப்படி இருக்கும் சமயத்தில் ஒருநாள் இந்த பயரமபட்டு புசித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் ஒரு பதார்த்தத்தில் லவணமில்லாதபடியால் தனது பத்தினியைப்பார்த்து சொல்லத் தொடங்கினர். ஒ நாயகி! இன்றையத்தினம் நீ சமையல்செய்த காய்கனி பதார்த்தத்தில் லவணமில்லாதபடி செய்யவேண்டிய காரியமேது? அடியேனுக்குத் தெரியச்சொல்லும் என்று கேட்டமாத்திரத்தில் இம்மொழியைக் கேட்ட அப்பதிவிரதை புன்சிரிப்பு அடைந்து தனது நாயகனைப் பார்த்து ஒ நாயகா! உனக்கு வயது அறுபது ஆகிவிட்டது. இன்னமும் உனது நாவானது ருசி என்னும் இன்பத்தைக் கோரிக்கொண் டிருக்கின்றதல்லவா? இவ்வளவு ருசிபக்குவம் பகவத்விஷயத்தில் உண்டாயிருந்தால் எமபாசத்திற்குத் தப்பித்து முக்தியடையலாம் என்று சொன்னமாத்திரத்தில் தனது பத்தினிசொன்ன மொழியைக் கேட்டமாத்திரத்தில் பயரமபட்டு என்பவருக்கு ஜென்மாந்தரத்தில் செய்த தபமோ? அல்லது நிர்ஹேதுவாய் லபித்த பகவத் கடாக்ஷமோ? இவருக்கு ஞானோதயம் லபித்து வைராக்கிய யுக்தனைய்த் தான் புசித்துக்கொண்டிருப்பதைவிட்டு எழுந்து கைகால்களைச் சுத்திசெய்துக்கொண்டு தன்னுடைய பத்தினியைத் தனக்கு ஞானோபதேசம் உபதேசிக்கும்படி அநுக்கிரகித்து வந்த ஆசாரியரூபியாகவந்த பகவான் என்று தன்மனதில் எண்ணமிட்டுக்கொண்டு அந்த உத்தமிக்கு வலப்பிரதக்ஷணமாய் நமஸ்காரம் செய்து ஜெகத்குருவான ஸ்ரீ வாசுதேவமூர்த்தி உனது ரூபமாய்வந்து எனக்கு ஞானோபதேசம் செய்தபடியால், நீ எனக்குப்பிரதமகுருவாகிவிட்டாய். கர்மமானது கர்மயோகத்தால் ஒருபோதும் சாந்தமாகாது. யாகம் செய்யச் செய்ய அக்கினியானது அதிகரிப்பதுபோல் இந்தக் கர்மம் அதிகரித்துக்கொண்டிருக்கும். இதுவல்லாமல் இந்த பூமியில் சகல தியானங்களும் ஸ்வர்ணம் முதலாகிய சிலாக்கிய பதார்த்தங்களும் கஜாஸ்வாதிப சுவர்க்கங்களும் அழகுபொருந்திய ஸ்திரீஜனங்களும் ஒருவன் ஆசைக்கு எட்டாமலிருக்கின்றது. ஆகையால் அப்படிப்பட்ட ஆசைகளைப் பூர்த்தி செய்வதற்கு அசாத்தியமாகும். அப்படியாகையால் தன்னுடைய கர்மத்தை நிவர்த்திப்பது மேன்மையல்லவா? இது எப்படியென்றால், சகல பூதத்திலும் இராஜத்வேஷ ரூபமான பாவத்தை நிறுத்தாமல் சமதிருஷ்டியாயிருக்கப்பட்ட புருடனுக்கு எதிலும் சுகமேயுண்டாகும். தகிக்ககூடாத சரீரத்தை கிரகித்தபோதிலும் கிரகிக்காமல் விர்த்தியடைய ஆசையை நிவர்த்திக்காத புத்தியீனனுக்கு துக்கமே யுண்டாகும். மனிதன் சமுசாரசிந்தையால் நசித்தவனயிருந்தால் அவன் தலைமயிரும் தந்தங்களும் விழுந்துபோகின்றது. பிராணேச்சையும்திரவியேச்சையுமாகிய இந்த இரண்டுமாத்திரம் ஒருபோதும் நசிக்காது. இதற்குத் திருஷ்டாந்தம் எப்படியென்றால் அறுபதுவருடம் போகானுபவங்களை அனுசரிக்கும் எனக்கு ஆசையென்னும் பேரிடி கொஞ்சமாகிலும் குறைவுபடாமல் அதிகரித்துக் கொண்டு வருகின்றது. ஆகையால் யான் இனிமேல் உனது ஆசையென்னும் பிரகாசத்தைவிட்டு இம்மனதைப் பரப்பிரமத்தின்மீதுசெலுத்தி தொந்தமானதுக்கத்தை மமதையென்னும் பேராசையும் அவைகளை நிக்கிரகித்து மிருகங்களோடு சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றேன் என்றுசொல்லி அந்தக்ஷணமே தனது வீட்டைவிட்டு வெளியாகி காட்டிற்கு நடக்கலானர்.

இப்படி நடந்தபிறகு அவருடைய பந்துஜனங்களும் சினேகிதரும் எல்லோரும் ஏகோபித்து இவரைத்தேடிக்கண்டுபிடித்து அநேகவிதமாக நிர்ப்பந்தித்து வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வரும் சமயத்தில் பயரமபட்டு தன்மனதில் தானே துக்க

மடைந்தார். அது எப்படியென்றால் ஆ! ஆ! இந்த பந்துக்களும் சிநேகிதரும் யான் எங்கு சென்றபோதிலும் என்னைவிடாமல் நிர்ப்பந்திப்பாரென்று இப்போது தோன்றுகிறது. ஆனால் இவர்களெல்லோரும் என்விஷயத்தில் லச்சையடைந்து அவர்களே என்னை வெறுக்கும்படியான மார்க்கத்தைத் தேடிக்கொண்டு இவர்களிடம் அகப்படாமல் வாசுதேவனுடைய திவ்வியநாமத்தைத் தியானமடைந்து சுகமாய் வாழவேண்டும். என தன்மனதில் தானே யோசித்துக்கொண்டு திடீரென ஒரு துலுக்கனிடம் சென்று ஐயா! யான் உமது மதத்தில் வருவதற்கு அபேக்ஷையா யிருக்கின்றேன். ஆகையால் அதற்கு எனக்குச்செய்யவேண்டியசமாச்சாரங்களைச்செய்து உங்களில் என்னைச் சேர்த்துக்கொள்ளுவீர் எனப் பிரார்த்தித்தார். அதற்கு அந்தத்துலுக்கன் சம்மதமடைந்து தன்னுடைய மதாசாரப்பிரகாரம் அவனுக்கு சுன்னத்துமுதலான சம்ஸ்காரம் செய்தான். இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சகலமான பந்துமித்திராதிகள் விசனமடைந்து, இவரை அநேகவிதமாகத் தூஷித்து மரணமடைந்தவனுக்கு சமமென்று மனதிடம் செய்துக்கொண்டு அவரவர் வீட்டைப்போய்ச் சேர்ந்தார். அதன்பிறகு பயரமபட்டு சிலகாலம் அங்குவசித்துக்கொண்டிருந்து ஓர்நாள் அங்கிருக்கப்பட்ட பக்கிரிகளைப் பார்த்து ஓ பக்கிரிகளே! நான் இப்பொழுது துலுக்கனாய் விட்டேனா? என்று அவரைக் கேட்டமாத்திரத்தில் அவர்கள் இம்மொழிக்குச் சந்தோஷமடைந்து ஐயா! சாஸ்திரவிதிப்படி உம்மைத் துலுக்கனுக்கி விட்டேனென்று சொன்னமாத்திரத்தில் பயரமபட்டு கலகலவென்று நகைத்து அவர்களைப்பார்த்து ஐயா! நீங்கள் என்னை துலுக்கனுகச்செய்தது உண்மையாயிருந்தால் எனது செவிதனில் குத்தியிருக்கப்பட்ட ரத்தினங்கள் போகவேண்டியது அப்படியில்லாமல் அது எப்போதும்போலிருந்தால் நீங்கள் எனக்குச்செய்த மஹம்மதிய சம்ஸ்காரங்கள் நிஷ்பிரயோஜனமாகி விட்டது. ஐயா! இதுவல்லாமல் இன்னம் கேளும் நேத்திரங்கள் அதிக பிரகாசமா யிருப்பவனைக் குருடனென்று சொல்வதுபோலும். அதிக துரிதமாய் நடக்கப்பட்டவனை இவன் மொண்டியென்று சொல்வதுபோல் நீர்சொல்வது மகா உசிதமாயிருக்கிறது. எப்படியென்றால் இந்துமதத்தில் சாஸ்திர யுக்தமாய் கர்ணரந்திரம் மாறுமலிருக்கிறது. அதைப் பாராமல் என்னைத் துலுக்கனென்று சொல்லுகின்றாய். இது உனக்கு நீதியாகுமா? என்று கேட்டவுடனே அங்கிருந்த துலுக்கரெல்லோரும் வெட்கமடைந்து ஏதும் மறுமொழிகூறுமல் மௌனமாயிருந்து விட்டார். அதின்பிறகு பயரமபட்டு அந்தவிடத்தை விட்டு கங்காதீரமடைந்து அங்கிருக்கும் 'பிராமண கோஷ்டியர்க்குச் சாஷ்டாங்க வந்தனம் புரிந்து நடந்த சவிஸ்தாரமெல்லாம் விசிதமாய் சொல்லியதின்பிறகு அவர்களைப்பார்த்து ஓ பிராமணோத்தமரே! எனக்கு சாஸ்திரயுக்தமான பிராயச்சித்தம் செய்து அந்த ஆத்மாவுக்கு உஜ்ஜீவனம் உண்டாகும்படி செய்வீரென பிரார்த்திக்கிறேனென்று பரிதாபத்தோடு சொன்னமொழியை அந்தபிராமணர் எல்லோரும் தீர்க்கமாய் ஆலோசித்துத் தர்மசாஸ்திரவிதிப்படி அவருக்குப் பிராயச்சித்தம் செய்தார்கள். இதன்பிறகு பயரமபட்டு அந்தப் பிராமணரைப் பார்த்து ஓ விப்பிரகுலோத்தமரே! இன்று எனக்கு எங்குமில்லாத சந்தேகம் ஒன்று உண்டாயிருக்கிறது. அது எதுவென்று கேட்டீரானால் சொல்லுகிறேனென்று சொன்னமாத்திரத்தில் பிராமணர் சுவாமி! எது சந்தேகம் அதை வெளிப்படுத்துவீரென்று கேட்ட மாத்திரத்தில் பயரமபட்டு புன்சிரிப்படைந்து சொல்லத் தொடங்கினர். அது எதுவென்றால் ஐயா! முன்னர் எனக்கு துலுக்கன்போல் சுன்னத்து முதலான சம்ஸ்காரங்கள் செய்திருக்கின்றார். அது இப்போது நீங்கள் பிராயச்சித்தம் செய்தபடியால் என்னைப் பிராமணோத்தமனுய்ச் செய்து விட்டோமென்று சொல்லுகின்றீர். ஆனால் முன்செய்த சுன்னத்து மாறுதபடிக்கு எப்போதும்போல இருக்கின்றது. ஆகையால் அது மாறிவிட்டாலல்லவோ என்னைப் பிராமணனென்று சொல்லுவதற்கு நியாயமுண்டாகும்? இப்போது துலுக்கனும் பிராமணனென்றும் சொல்லுவாரென்று சொன்னமொழி அந்தப்பிராமணர்கேட்டு இவனுக்கு ஈஸ்வரரேவந்து சமாதானம் சொல்ல வேண்டுமென்று ஒன்றும் சொல்லாமல் மௌனிபோல் இருந்துவிட்டார்.

இதையறிந்த பயரமபட்டு உலகத்தார் தன் விஷயத்தில் செய்யும்படியான நிந்தைக்குத் தன்னுடைய மனதில் சலிப்பில்லாமல் அநேக தேசங்தோறும்திரிந்துகொண்டு பட்டபானலமென்னும்கிராமமடைந்தார். அங்கு நாகநாதரென்னும் ஒரு மகாத்துமா இருந்தார். அந்த உத்தமசீலன் பகவங்மந்திரம் நிர்மிப்பதற்காய்த் தச்சையால் ஓர் வண்டியை செய்து பர்வதாகாரமாகிய மலையருகில் சென்று அதிக பிரமாண்டமாகிய கற்களை அந்தவண்டியில்

ஏற்றிக்கொண்டு இரண்டு குரங்குகளை அந்தவண்டிக்குக் கட்டி நடத்திக்கொண்டு வந்தார்.

இந்த ஆச்சரியத்தைப் பயரமபட்டு கண்காக்ஷி கொண்டு, ஆ! ஆ! இந்த நாகநாதன் பரமசித்தனு யிருக்கின்ருர். ஆகையால் இவரால் எமது சமுசயம் நிவர்த்தியாக வேண்டுமென்று தன்மனதிலெண்ணி அந்த ஆலயத்துக்குள்பிரவேசித்து அந்தநாகநாதன் எதிராக நின்று ஐயா! யான் யாரென்று சொல்லுமென்று கேட்டான்? அது ஏனென்ருல் அவருடைய சமர்த்து அறியலாமென்று தைரியத்தோடு கேட்டான். இவன்கேட்டமொழியை அந்த மகானுபாவன் அறிந்தமாத்திரத்தில் கோபாக்கிரந்தனுய் ஆனந்தநடனம் செய்து தனது கையிலிருந்த பிரம்பினுல் பயரமபட்டவினுடைய சிரசின்மீது அடித்து கூறுவாய் என்று சொல்லிவிட்டார். உடனேபயரமபட்டு பூமிமீதுவிழுந்து பிராணத்தைவிட்டுவிட்டார். அப்பொழுது நாகநாதன் தன்னுடைய சீடரை அழைத்து இந்தப்பிரேதத்தைஉரலில்போட்டு மாவுபோல் இடித்து என்முன்னில் கொண்டுவாருமென்று நியமித்தார். அதுபோல் அந்தப்பிரேதத்தைக் கொண்டுபோய் குரு ஆக்கினைப்படிசெய்து குருவின் எதிரில் கொண்டுவந்து வைத்துவிட்டு ஆ! ஆ! நமது குருநாதன் இன்னம் இந்தப் பிண்டத்தை ஏது செய்கின்ருரோ என்று பெருஞ்சந்தேகம் அடைந்து நின்றுகொண்டிருந்தார். அதன்பிறகு குருநாதன் வரட்டிகளை அடுக்கி அதில் இந்த பிண்டத்தைப்போட்டு மேல்வரட்டிகளைமூடி தீயிட்டுவிட்டார். அதன்பிறகு அந்தப்பிண்டம் பஸ்பமாய்விட்டது. அதன்பிறகு அந்தப் பஸ்பத்தைக் கும்பலாகச்செய்து பகவானுடைய கிருபாகடாக்ஷத்தால் மனமிரக்கங்கொண்டு அந்தப் பஸ்பத்தின்மேல் ஜலத்தை புரோக்ஷிதம்செய்தார். உடனே பயரமபட்டு சுகஜீவனுய் முன்னுக்காகிலும் அதிகமான தேஜஸ்ஸு உண்டாகி அழகுபொருந்திய ரூபமுண்டாகி நித்திரை செய்பவர்போல எழுந்து நாகநாதருக்கு வந்தனம்செய்து அஞ்சலியஸ்தனுய் அவருக்கெதிரில் நின்றுக்கொண்டிருந்தார். இப்படி நிற்கையில் நாகநாதர் பயரமபட்டைப் பார்த்து அடாமூடா! இப்பொழுது நீ யார்? அதையறிந்து சொல்லுமென்று கேட்டார். இம்மொழிக்கேட்ட மாத்திரத்தில் பயரமபட்டு தன்னுடைய சிரத்தில் முதலில் விப்பிரவர்களால் செய்யப்பட்ட சமஸ்காரம் அதன்பிறகு துலுக்கரால்செய்த மஹம்மதீய சம்ஸ்காரம். இதுவெல்லாம் ஒன்றும் காணுதபடியால் இவர் மறுமொழி ஏதுஞ் சொல்லாமல் மவுனமா யிருந்துவிட்டார். அப்பொழுது நாகநாதர் அவருடைய சிரத்தில் தனது கரத்தால் தடவிக்கொடுத்து ஸ்ரீதாரகமந்திரத்தை உபதேசித்து அடா! யான் யார்? நீ அதைச்சொல்லும் பார்ப்போம் என்று என்னைக்கேட்டாயல்லவா. அதற்கு மறுமொழி சொல்லுகிறேன் நீ கவனமாய் கேட்பாய். அது எப்படியென்ருல் நீ பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர, பிரமசாரி இதுவல்லாமல் சன்னியாசிகளில் உடன்பட்டவனல்ல. இந்த சஞ்ஞைகள் சரீரசதமா யிருக்குமேதவிர ஆத்மாவுக்கு ஏதும் கிடையாது. ஆத்மா நித்தியமாம். அவிகாரமாய் ஞானநந்தஸ்வரூபமாய் ஞானகுணத்திற் கலக்க பரமாத்துமாவுக்கு சேஷமாயிருக்கும். ஆகையால் முன்னர் பிராமணரும் துலுக்கரும் செய்த சமஸ்காரங்கள் உனது சரீரத்துக்கே யல்லாது ஆத்மாவுக்குக் கிடையாது. ஆகையால் உனது ஸம்ஸ்காரத்தால் உன்னுடைய ஸ்வரூபம் மாறுமலிருந்தது. அஹம்சப்த்தவாச்சுதன் ஆத்மாவேயல்லாது சரீரமாகாது. அப்படியிருக்கும் பிராமணே ஹம்ரூத்ரேஹம் குருசோஹம் இருத்தோஹம் இப்படிப்பட்ட குணங்களை சரீர தர்மத்தை ஆத்மாவில் ஆரோகித்து விவகரிப்பதால் லோகத்தில் வழக்கமாயிருக்கின்றது. ஆனபோதிலும் விவஹாரதிசையில் எப்படிப்பட்ட மொழியைச் சொன்னபோதிலும் புத்திவான்கள் எக்காலமும் இடைவிடாமல் ஆத்மசொருபத்தை சிந்தித்துக் கொண்டிருக்கவேண்டும். இந்த ஆத்மாவுக்குக் கர்மானுகுணமாய் அநேக ஜென்மங்கள் அநுபவத்தால் உண்டாகின்றது. விவேகியானவன் சற்குருவை உபாசித்து அவன் கிருபையால் ஞானஒளி யடைந்து அஞ்ஞானதிமிரத்தைப் பறக்கடித்துத் தன்னைத்தானறிந்து தனது ஆத்மபாரத்தைப் பகவான் பாதாரவிந்தத்தில் சமர்ப்பித்து அந்தப் பகவானுடைய கடாக்ஷத்தால் பிரகிருதியந்தங்கெட்டு யுக்தனுய்ப் புனர்ஜன்மமில்லாமல் மோக்ஷவீட்டை யடைவான். ஆகையால் நீ பகவான் ஆஞ்ஞைக்கு ஸ்ருதி ஸ்மிருதிகள் உள்ளம்சித்து சாஸ்திரோக்த மார்க்கமாய் நடந்துக்கொண்டு எக்காலமும் பகவன்னுமஸ்மரணை செய்துக்கொண்டு பகவத்தியானபரனுய் உனது தேகமே பகவத் கைங்கிரியமாய் வினியோகித்திருக்கும். இதுவல்லாமல் ஆத்மாவென்னும் அதிகாரன் சரீரமென்ற ரதத்தை ஆரோகணித்திருக்கின்ருன்.

இந்த ரதத்திற்கு இந்திரியமென்ற அஸ்வமாய் மனமென்றசயனும் புத்திசாரதியாய் இருக்கும். ஆகையால் புத்திவான் இந்திரியங்களென்ற குதிரைகளை அதிக ஜாக்கிரதையோடு சாஸ்திரயுக்த மார்க்கமாய் நடத்திக்கொண்டு நிர்ப்பயனயிருந்தால் மோக்ஷத்தை அடைவான். சாரதியான புத்தி சாக்கிரதைதவிர மனமென்னப்பட்ட கயிறைத் தளரவிட்டால் இந்திரியமென்ற துஷ்டக்குதிரைகள் இந்தச் சரீரத்தை இராஜமார்க்கமென்ற வேதாந்தநிதியைவிட்டு துஷ்டமார்க்கத்தில் இழுத்துக்கொண்டு போய்விடும். அந்தமார்க்கம் ரதிகனை ஆத்மா யமபட்டணத்தில் அடையும். ஆகையால் பகவான் என்னுள்ளத்தில் ஆவேசித்து உனக்குச்செய்த இதோபதேசத்தை மறக்காமல் சாதுஜனங்களோடு சாவகாசம் செய்துக்கொண்டு ஆயுஸ்சேஷத்தைப் போக்கி பிரமானந்தமடைந்து சுகிப்பாயென்று இப்படிப் . பலவாறு இதோபதேசம் செய்தவுடனே நாகநாதகுருவின் வசனத்தைக்கேட்டு நிர்மலசித்தனய் அவருக்கு சாஷ்டாங்க வந்தனம்செய்து ஒ குருபுங்கவா! இனி யான் தன்யனகிவிட்டேன். இதற்கு முன்பு யான் கண்ணில்லாத குருடனகி யிருந்தேன் இதையறிந்து பகவான் உன்ரூபமாய் வந்து எனக்குச் சித்தௌஷதம் கொடுத்தார். அதைத் தின்றமாத்திரத்தில் எனது நேத்திரம் பளிங்காய் உனது கடாக்ஷத்தால் முக்தியடைந்தேன். இதுவல்லாமல் ஸ்ரீ பாண்டுரங்கமூர்த்தியை அனேகபக்தர்கள் உபாசித்துக்கொண்டிருக்கின்றார். ஆனபோதிலும் அர்ச்சரூபமாய்ப் பகவானை சஹவாஞ்ஞை யடைந்து பூசித்த நாமதேவருக்கும் பாகவதாராதனத்திற்காக புத்திரன் தலையையறிந்த கபீருக்கும் மஹிஷம் அவரால் நாலுவேதாத்தியயனம் இருக்கப்பட்ட பாகவதருக்கும் சமம்கிடைக்கச் சொல்லும்படி செய்த ஞானதேவருக்குத் தன்னுடைய ஆத்மாவில் பண்டரிநாதனை யொளித்து வைத்துக்கொண்டிருந்த சாமந்தருக்கும் இதுவல்லாமல் இப்படிப்பட்ட விசித்திர சரித்திரங்களை அனுஷ்டித்த இந்தக்காலத்தில் ஸ்பர்ஸவேதியால் இரும்பு தங்கமாவதுபோல் எனது சரீரத்தைப் புடம்வைத்து என்னைப் பரிசுத்தனய்ச் செய்தாய். ஆகையால் உனக்குச் சமம்கிடைப்பரோ? நிர்மல காதநினனை ஸ்ரீமத் பண்டரிநாதன் தனக்குத் தானய் சத்ருசமானதுபோல் உனக்குள் நீயே சத்ருசமாகிவிட்டாய். இப்படியாகச்சொல்லி ஆசாரியரை ஸ்மரித்து அவருடைய பாதாரவிந்தத்தில் சிலகாலம் வாசம் செய்துக்கொண்டிருந்து ஆசாரியருடைய அனுமதி யடைந்து பண்டரிபுரத்துக்கு வந்து ஸ்ரீபாண்டுரங்கநாதனைச் சேவை செய்து சாதுகோஷ்டியுடனிருந்து பிரமானந்தமடைந்து ஸ்ரீபாகவதத்தில் பன்னிரண்டு ஸ்கந்தங்களை மகாராஷ்டத்தில் அக்ஷாரம்மா யெழுதிவிட்டு ஆசாரியர் விதித்தபடி எதும் தவறிடாமல் சிலகாலம் வாழ்ந்து அதன்பிறகு பகவத்தியான மடைந்தார்.

கேட்டீரோ சீடரே! இப்படியல்லவா பக்தி வைராக்கியம் அடையவேண்டும். இப்படி பக்தி செய்யாதவர்க்கு எப்படி மோக்ஷம லபிக்கும்? ஆகையால் கிஞ்சித்துகாலம் பகவானைத் தியானிக்கும்பக்ஷத்தில் பகவான் நமதுமீது அருள்கூர்ந்து மோக்ஷமென்னும் வீட்டைக்காட்டி அருள்தருவார் என்று சொன்னமாத்திரத்தில் சூரியன் மேற்குத் திசையடைந்தார். இதையறிந்து எல்லோருமெழுந்து அவரவர் இருப்பிடமடைந்தார்.

பயரமபட்டு சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ண பரப்ரம்மணேநமஃ

இருபத்தேழாவது

# சமர்த்தராமதாசு சரித்திரம்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

அன்பரது துயர்தீர்த்த வண்ணலேதிருப்பாலென்
றுழியிலேசயனித்த வைநீலவண்ணனே
மன்பதைகளிதயங்கள் மன்னியேநின்றுலவு
மாயாவதாரனே மகிமைமிக்கவனே
நன்மகிமையாளர்கட் கினியமலரடியீந்த
நாயகாவைகுந்த நண்பனேமுகுந்தனே
உன்பதகஞ்சத்தை யுள்ளத்திலெண்ணினேன்
உறுதுன்பமணுகாம லுவந்தளிப்பாயே.

இப்படியாகச் சூரியன் உதயமானவுடனே நாபாஜிசித்தர் துயிலெழுந்து கங்காநதியடைந்து ஸ்நானஞ்செய்து திருமண் காப்பணிந்து பட்டு பீதாம்பரம் தரித்து திவ்ய புஷ்பம்பறித்து ஸ்ரீராமச்சந்திரனுக்கு எதிரில்வந்து புஷ்பத்தால் பூஜித்து ஓ பகவானே! யான் இனி எந்த ஜென்மத்திலும் ஜெனிக்காதபடி எனக்குத் திருவருள் செய்யவேண்டும் சுவாமி யென்று அனேகவிதமாய் ஸ்தோத்திரம் செய்து நிற்கும்சமயத்தில் இந்த நாபாஜி சித்தர் சீடர் உதயமானவுடனே எழுந்து எல்லோரும் ஏகோபித்து மூத்தனைப்பார்த்து அண்ணு! நாம் இதுகாலபரியந்தம் நமது குருநாதரை யடுத்தும் ஏதுபலன் பெற்றோம். ஏதும் கிடையாது. ஆகையால் நாம் இன்றையதினம் குருநாதரிடம் சென்று நமது கவலையைத் தெரிவித்து நமது எண்ணத்தைப் பூர்த்திசெய்து கொள்ளலாமென்று சொல்லி எல்லோரும் சென்று நாபாஜிசித்தரைப் பார்த்து, ஓ பகவானே! நாங்கள் எத்தனைதினத்திற்கு இப்படி பாழும் சபலமெடுத்து வாழ்வது? இனியாவது திருவருள் கூர்ந்து எம்மைக் கடாக்ஷிக்கும் மார்க்கம் பார்க்கலாகாதா? பகவானே என்று தோத்திரம் செய்ய இவைகளையெல்லாம் அறிந்த நாபாஜிசித்தர் புன்சிரிப்படைந்து, ஓ சீடரே! நான் இதுகாலபரியந்தம் உங்களுக்குச்சொல்லி வந்தவைகளெல்லாம் ஆற்றில் கரைத்த புளியாய்விட்டது. ஆகையால் இன்று எனக்குத் தெரிந்தமாத்திரம் ஓர்சின்னகதை சொல்லுகிறேன். அதைக்கேட்ட பிறகாகிலும் முக்தியடையும் மார்க்கத்தைத் தேடுவீரென்று சொன்னமாத்திரத்தில் சீடரெல்லோரும் சம்மதமடைந்து, ஐயா குருநாதரே! இதோ பக்தியால் அதைக் கேட்டு ஆனந்தமடைகிறோம் உமது திருவாய்மொழியால் அருள் புரியவேண்டும் சுவாமியென்று சொன்னமாத்திரத்தில் நாபாஜிசித்தர் சந்தோஷமடைந்து சொல்லத்தொடங்கினர்.

அது எப்படியென்றால், கேட்டீரோ சீடரோ! முன்னொரு காலத்தில் கங்கைக்கரை யோரத்தில் அதிக மேன்மைபொருந்திய ஜாம்பூநகரமென்று ஒரு பட்டணம் உண்டு அந்நகரத்தில் ஸ்ரீராமோபாசகனென்று ஒரு பிராமணன் வாழ்ந்துகொண்டிருந்தான். அந்த உத்தமசீலனே பரமபாகவதனையும் மகா சாதுர்யனும் சுஞ்ஞானியாயும் பெயரடைந்திருந்தான். இப்படி யிருக்கும்சமயத்தில் இவருக்குப் பரம பதிவிரதையான பத்தினியைப் பாணிக்கிரகணம் செய்துக்கொண்டு பதிக்குத் தகுந்த பத்தினியைக்கூடி சுகித்திருந்தான். இப்படியிருக்க இந்த இருவரும் இராக்காலமெல்லாம் ஸ்ரீராமபஜனை செய்துக்கொண்டு காலத்தைக் கழித்

துக்கொண்டிருந்தார். இவர்களுக்குப் பூததயையும் பச்சாதாபமும்கூடி (ஆத்மவத்ஸர்வபூதானி) என்னும் மொழிபோல சகலமான ஆத்மாவும் தன் ஆத்மாபோல் பாவித்துக்கொண்டு நிஜபக்தியோடும் அதிதிகளை ஆராதித்துக்கொண்டு சைத்திரசுத்த நவமிமுதல் பன்னிரண்டு தினம்வரைக்கும் ஸ்ரீராமோற்சவம் அதிக பக்தியோடு நடத்திக்கொண்டிருந்தான். அந்த உற்சவகாலத்தில் தூரதேசவாசிகளாகிய பரமசாதுக்கள் அநேகரை வரவழைத்துப் பூஜித்துக்கொண்டு காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் ஓர்நாள் இராத்திரி இவர்களுடைய கனவில் ஸ்ரீராமச்சந்திரன் சாக்ஷாத்கரித்து, ஐயா தாசாதிதாசனே? எனக்கு அந்தரங்கபக்தனை ஆஞ்சனேயன் உமக்குப் புத்திரனாக அவதரித்து மகா தியானபுருடனாய் எக்காலமும் என்பக்தியே அதிகரித்தவனா யிருப்பானென்று அனுக்கிரஹித்து அந்தர்த்தானமாகிவிட்டார். இந்தக்கனவை அறிந்தவுடனே இந்தத்தம்பதிகள் நித்திரை தெளிந்தெழுந்து தாங்கள் கண்ட கனவின் சவிஸ்தாரத்தை பரஸ்பரமாய் சொல்லிக்கொண்டு ஆனந்தமடைந்திருந்தார். இப்படி யிருக்கும் சமயத்தில் அந்த உத்தமிக்கு அதுவே கர்ப்பம்தரித்து மாதமாதம் விருத்தியடைந்து தசமாதம் சென்றபிறகு ஸ்ரீராமச்சந்திரர் கடாக்ஷானுக்கிரஹத்தில் ஆஞ்சனேயம் சகசிதனை சுபுத்திரன் ஜெனித்தான். ஸ்ரீஜானகிபதி அனுக்கிரகத்தால் இப்படிக்கு உண்டான பாலகனுக்கு ஜலகமாட்டி திலகம் தீட்டி தொட்டிலிட்டுத் தாலாட்டி பன்னிரண்டாம் நாள் சுபலக்கினமறிந்து இராமதாசன் என்று நாமகர்ணம் செய்துவிட்டார்.

அதன்பிறகு அக்காலத்தில் அவருக்கு நல்ல சுபலக்கினமறிந்து வித்யாரம்பம் செய்து சகல வேதபாராயணம்படித்து வல்லவனென்று பெயரடைந்து வாழும் சமயத்தில் இவருக்கோ வயது ஒன்பதாய்விட்டது. இந்தச் சமயமறிந்து தாய் தந்தை இருவரும் விவாகம்செய்து கன்காக்ஷி அடையவேண்டுமென்று மனம்கொண்டு தகுந்த பெண்ணைப் பார்த்து விவாகம் நியமித்து அச்சுப தினத்தில் விவாக மண்டபம் அலங்கரித்து இந்த இரண்டுபேரையும் அலங்கரித்து விவாகம்செய்ய எத்தனித்தார். இந்தச்சமயத்தில் இந்த இராமதாசன் லோகசிந்தையைவிட்டு சகல பிரபஞ்சமும் ஸ்ரீராமச்சந்திர சொரூபமாகப் பாவித்து எக்காலமும் ஸ்ரீராமத்தியான பரவசமடைந்திருப்பதால் விவாகவிஷயத்தை ஏதும் கவனியாமல் இருந்தார் இது இப்படியிருக்கும் சமயத்தில் தன்னை அலங்கரித்து விவாகமண்டபத்திற்கு அழைத்துக்கொண்டு வந்த ஜனநீஜன்கர் பந்துக்கள் முதலானவர் எல்லோரும்சேர்ந்து விவாககிருத்தியங்களை நடத்துவதையும் இவர் கொஞ்சமானபோதிலும் மனதில் எண்ணுமல் ஸ்ரீராமமந்திர தியானபரனாய் இருந்துவிட்டார். இந்து நிஷ்டை சௌரவீர மகாராஜன் காளிகாதேவியை யடைந்து சிலகாலம் தவம்செய்து தன்னுடைய சங்கற்பசித்திக்காக அந்தத்தேவிக்கு நரபலிகொடுப்பதாய் எத்தனமடைந்து அதற்காகத் தன்னுடைய சாரதியை நோக்கிச் சொல்லும் சமயத்தில் அந்தச் சாரதி எங்கும்தேடியும் பலிக்கு தகுந்தபுருடன் அகப்படாததால் ஆரண்யத்தில் பரப்பிரமானுபவநிஷ்டனாய் உன்மத்த சித்தனாய் சஞ்சரித்துக்கொண்டிருந்த ஜடாபரனைப் பிடித்துக் கொண்டுபோய் அலங்கரித்து காளிகாதேவியின் அக்கிரபாகத்தில் நிறுத்துஞ் சமயத்தில் அப்போது ஜடாபரன் ஒன்றும் அறியாதபடிக்குப் பரப்பிரம தியானநிஷ்டனாயிருந்து நிஷ்டைக்கு சத்ருகமாயிருந்தான். அதுபோல் விவாகமண்டபத்தில் நடக்கவேண்டிய காரியங்களெல்லாம் நடத்தி மாங்கல்ய தாரணம் செய்யும் சமயத்தில் சாவதானமென்றார். அப்பொழுது இராமதாசன் இது என்ன விபரீதம் என்று தன்மனதில் தானே துக்கமடைந்து அங்கு நடந்த சவிஸ்தாரமெல்லாம் அறிந்து தாய்தந்தை முதலான பந்துஜனங்களைப் பார்த்து ஆ! ஆ! என்ன விபரீதம் செய்தீர்? சமுசாரசமுத்திரத்தை நீந்துவதற்கு யாருக்கும் சாத்தியமாகாது. சமுத்திரத்தைக் கையால் நீந்தினாலும் நீந்தலாம். மகா சமுத்திரமான சமுசாரத்தை நீந்துவதற்கு எப்படி சாத்தியமாகும்? அது சமுத்திரம். இதுவோ மகா சமுத்திரம். அந்த சமுத்திரம் அகாதமான ஜலத்தைக் காற்றால் பறக்கடிக்கும் அலைகளும் சுழிகளும் முதலைகள் உண்டாகி பயங்கரமாயிருக்கும். இந்தச் சமுசாரசமுத்திரம் ஆசையென்னும் ஜலத்தாலும், மன்மதனென்னும் காற்றாலும், பரக்கடிக்கப்பட்ட மோகமென்ற அலைகளும், வசையோடு பெண்டாட்டி என்னும் சுழியோடும், புத்திரசகோதரரென்னும் முதலைக்கூட்டத்தோடும் மகா பயங்கரமாயிருக்கும். இதுவல்லாமல் ஆபத்துக்காலத்தில் ரக்ஷிக்கப்பட்டவரல்லவா பந்துக்களாவார். ஸ்ரீராமசந்திரதியானம் செய்துக்கொண்டு பிரமானந்தசுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்த என்னைக் கெடுக்கும்பொருட்டு பீமகமான சமுசார சமுத்திரத்

தில் தள்ளுவதற்கு எத்தனைமடைந்தீர். நிர்ட்பல மானவனை என்னை இப்படிப்பட்ட கடினமாகிய தண்டனை விதிப்பதற்கு வேந்தனுய் நின்றீர். உங்களை என் ஞானரத்தினத்தை அபகரிப்பதற்குப் பகலில்வந்த திருடரென்று பாவிக்கலாம். உங்களுடைய சாவகாசம் இவ்வளவே போதுமானது. யான்போய் வருகின்றேன். என்னுடைய பிராணுபீஷ்டமாகிய இராமச்சந்திரன் உங்களுக்கு உபகாரம்செய்வாரென்றுசொல்லி இராமபாணம்போல் மகாவேகத்தோடு காட்டிற்கு ஒடிப்போய்விட்டார். இதை அறிந்த தாய்தந்தைகள் பின்தொடர்ந்து எவ்வளவோ பிரியத்தோடும் அழைத்தும் அவர்களுடைய பிரார்த்தனைக்கு உடன்படாமல் தன்னிச்சையாய் போய்விட்டார்.

அதன்பிறகு தாய்தந்தைகள் இவருடைய ஒட்டத்தைப் பிடிப்பதற்கு அசக்தராயும் இவருக்குத் தகுந்த சமாதானம்சொல்லி வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போவதற்கு சக்தியில்லாதவராய் நின்றுவிட்டு அச்சமயத்தில் அவர்களுடைய கனவில் பகவான் சொன்னது அப்போது நினைவிற்கு வந்து நாம் இனிமேல் துயரப்படுவதில் பயனில்லை. இதுவல்லாமல் இப்பாலகனைப் பாதிப்பதில் நியாயம் ஒன்றுமில்லை. இது எப்படியென்றால், ஆஞ்சநேயன் நமக்குப் பாலகனை ஜனிப்பான் என்று பகவான் அநுக்கிரகித்தபடி அந்த சத்தியம் எப்படி தப்பிநடக்கும். சுக்கிரீவ அங்கதா நீல ஜாம்புவாதிகள் இருக்க அவர்களைவிட் அந்தம்புரசாரியத்துக்கு வீரியசக்தியுடையவன் அஞ்சனு புத்திரனே தகுந்தவனென்று ஏதுமறியாமல் ஸ்ரீராமதியானம் தாரக போஷக போக்கியமுண்டாகி இருக்கும் வாயுவு குமாரன் ஒருவனே ஸ்ரீராமபக்தி சகாயபுருடனென்றும், சுவாமி காரியத்தை நிர்வகிக்கப்பட்டவனென்று தன்னுள் இச்சை யடைந்திருப்பதால் ஸ்ரீராமச்சந்திரன் தன் கணையாழியை இந்த மாருதி கையில் கொடுத்தனுப்பினர். இதுவல்லாமல் இந்த இராமச்சந்திரதூதனும் இராவண அந்தப்புரத்தில் சென்று மதிராபானவவாசமாய் ஒருவர்க்கொருவர் கௌகலித்துக்கொண்டும் அவரவர் உதிரங்கள் தொடைகள் நாபிமூலங்கள் கக்ஷமூலங்கள் ஸ்தனங்கள் சரீரம் தன்னைமறந்து நித்திரை யடைந்திருக்கும் சமயத்தில் வனிதாஜனங்களை யவலோசித்து யதாரமர்மம் நிரிக்ஷண பயமுண்டாகி அங்கு பிரமசாரியான யான் இதரமானவர்கள் மர்மங்கள் அறியாதபடி தர்மஹீனமடைந்தேனென்று துக்கித்துக் சீதையை அந்த ஸ்ரீஜனங்களுக்குள்ளாக தேடவிருக்குங் காலத்தில் தேடுவார். அது எப்படியென்றால் யான் இச்சாந்தாமணிகளை மதனவிகுருதமானசனுய் பார்க்கப்பட்டவனல்ல. இதுவுமல்ல. இது எப்படியென்றால் அந்தப் புண்ய சுலோகியாகிய ஸ்ரீராமச்சந்திரன் அனுப்பியதால் எனக்கு எதிலும் சுபமே உண்டாகுமென்று தன்னுள்ளே தான் சந்தோஷமடைந்தார். அப்படிப்பட்ட புண்யசுலோகன் ஸ்ரீராமானுக்கிரஹத்தால் நமக்குப் புத்திரனுக பிறந்தான். இப்படிப்பட்ட பரமவிரக்தியை நாம் பாதிப்பது நியாயமாகாது யென்று தன்னுள்ளே தான் எண்ணிக்கொண்டு தன் கிருஹமடைந்த ஸ்ரீராமச்சந்திர தியானத்தையே தியானமடைந்து காலம் கழித்துக் கொண்டிருந்தார். இது இப்படியிருக்க, இராமதாசன் அரண்யமத்தியிலமர்ந்து தன்னுள்ளே தான் சிந்தையடைந்தார். அது எப்படியென்றால், ஒபகவானே! யான் இனிமீது சமுசாரமென்னும்வலையில் அகப்படாமல் பக்தி வைராக்கியமடைந்து எக்காலமும் இராமதியானபரராய் நிர்மலஞானமென்மடைந்திருந்தார். இது எப்படியென்றால் மிதிலாநகரத்தில் வாசம்செய்துகொண்டிருந்த பிங்களவென்னும் மாதுசிரோமணி திரவியத்தின்மீது அபேக்ஷையடைந்து தன்னுடைய பர்த்தாவைவிட்டு அதிகமாய் தனம் கொடுக்கப்பட்ட எவ்வர்ண புருஷனையடைந்து அவன் பின்பற்றி வீடடைந்து அன்று இராத்திரியெல்லாம் நித்திரையில்லாமல் அனேக விதமாய் மதனலீலாகிருத்யங்களைசோரபுருஷனேடு யிருந்து சந்தோஷிக்கும்படி செய்து அவனேடு திரிந்துகொண்டு இருந்தும் திரவியமென்னும் பொருள் கிடையாமல் மனம்வெறுத்து, ஐயோ! ஒ பேதை மனதே! இந்த ஆத்மாவுக்குச் சுகத்தை உண்டாகச் செய்பவனே! பர்த்தாவென்று உன்மனதில்நிச்சயித்துக்கொண்டு ஆ! ஆ! தன்அபேக்ஷையால் இன்று இராத்திரியெல்லாம் சோரபுருஷனேடு நானுவிதமாய் உபசரித்து அவன் பின்திரிந்தும் ஏதும்பலன் கிடைக்கவில்லை; இதுபோல் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத்தியானித்தால் பரமபதத்தையடையலாம் என விசாரணையடைந்து நிஜசயனுதி போக்கிய பதார்த்தனைவர்ஜ்ஜித்து அதிவேகமாய் வாசுதேவன் சரணுரவிந்தத்தைத் தியானமடைந்து இந்தத்தேகம் அஸ்திரமென்றுஸ்திரமடைந்து பரமதத்துவத்தில் சித்தத்தைநிறுத்தி முத்தியடைந்தாளென்று ஸ்ரீகிருஷ்ண பரமாத்துமா தாவுத்தனுக்குஉபதேசித்தாரல்லவா? ஆகையால் யான் சங்கரஹிதனுய் தைலதாரம்போல் நவசின்னமான இராமபக்தியோடுசேர்ந்து தன்யனு

வேன் என்று சிந்தையடைந்து பரமவைராக்கிய சீலராய் ஆகாரங்களைவெறுத்து காய்கனிகளைப் புசித்து பத்மாசிலமடைந்து ஸ்ரீராமச்சந்திரப் பெருமானைத் தியானம்செய்து நின்றார். எப்படியென்றால்,

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

ஜாதியென்ற பேதத்தை மாதருடைய சோகத்தை
வெறுத்துக் கொள்வது சமாதி
நிலையில்லாக் காயத்தை நிலையென்று நாட்டுவது
இதுவே சமாதி
பகையென்ற மோக்ஷத்தைக் கதியென்று நாடிதான்
பார்ப்பதே சமாதி
பரிபூரணந்தன்னிலே பேசமனதாய் நின்று
பார்த்துக்கொள்வதே சமாதி
நீதியோடு பலதொழிலை சதமென்று மனதினில்
நிற்காமல் கொய்வது சமாதி
நெஞ்சத்தை யோடாமல் நெட்டிக் கயிறுல்கட்டி
நிஷ்டிப்பதே சமாதி
மதயானை போலவே யதஞ்செய்யு மாய்கையை
மடிப்பதே சமாதி
மன்னவர்கள் போற்றிடும் வைகுந்த நாதனே
வரவேண்டு மென்றனருகே.

ஓ மனப்பேயே! யான்சொல்வதைக் கவனமடைவாய். அது எப்படியென்றால் ஜாதிபேதத்தை நினைக்கலாகாது. மாதரென்ற பெரும்சமுசாரசிந்தையை வெறுத்து நிற்பதும், நமதுகாயமென்னும் திரேகம் ஸ்திரமடைவதல்ல. இதை ஸ்திரப்படுத்துவதும் மோக்ஷமென்னும்பெரும்வீட்டைக்கண்டுஅதில்குடியிருப்பதும் பஞ்சமாபாதகராகிய ஐந்துகள்ளரை நாடவொட்டாதபடிக்கு ஒட்டுவதும் மதயானை போல் தோன்றிவரப்பட்டமாய்கையென்னும் காமத்தைக்கொய்துநிற்பதே சமாதியென்று முன் பெரியோர் சொல்லியிருப்பதால் அதுபோல நீயும் நிலையோடுநின்று மோக்ஷமென்னும் விட்டில் குடியிருப்பாய் நெஞ்சமேயென்று இந்த நெஞ்சத்துக்குத் தகுந்த புத்திமதிகளைச் சொல்லி மறுபடியும் இராமபிரானை தியானம்செய்யத் துணிந்தான்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

வேடிக்கை யாகவே பாதத்தைச் சிந்தையில்
வைப்பதினி யெக்காலமோ
வீரகெண்டாமணியை யுள்ளத்திலாட்டியே
விரியமடைவ தெக்காலமோ
கோடானகோடி குடிகொண்ட மாய்கையைக்
கொய்வதினி யெக்காலமோ [ட்டி
கோபமென்றபெரும்யானையைக் கோடாலியால்வெ
கொலைபுரிவ தெக்காலமோ
தேடியே மெய்ஞ்ஞான வேதாந்தப்பொருளை நான்
தேடித்திரிவ தெக்காலமோ
தேயாமல் வாசியை ஓயாமல் ஓடியான்
தெருவீதிசுற்றுவ தெக்காலமோ
கோதண்ட தீக்ஷனே பாதத்தைத் தந்துமே
குடிகொண்டிருந்து வாழ்வாய்
கொப்பவே யுன்பாதம் இப்பவே நம்பினேன்
கோபாலா வென்முன்வாராய்.

ஓ இராமசந்திரா! கோசலேந்திரா! கருணாகரா! இராக்ஷசபீகரா! கம்சநேத்திரா! கமநியகாத்திரா! அய்யனே! மெய்யனே! அன்பரைக்காக்கும் கையனே! அடியேன் இந்த ஆரண்யமத்தியில் ஏகாங்கியாய் உன்சேவையை அபேக்ஷித்துக்கொண்டிருக்கின்றேன்.

ஐயனே! நீர் சிருங்கிபேரபுரத்தில் குகனுக்குச் சேவைதந்து அனுக்கிரகித்ததுபோல எனக்குப் பிரத்திடக்ஷமாகிவந்து என்னை இரக்ஷிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் இராக்ஷசாந்தகனை அஞ்சனைபுத்திரன் அகோரரூபத்தோடு வருவதைப்பார்த்து இராமதாசன் எழுந்து வந்தனம்செய்து ஸ்ரீராமபக்தகநேசரா! உனது கோரரூபத்தைக்கண்டு யான் பயமடையமாட்டேனென்றால் காமக்குரோதலோப மத மாச்சரியத்தை வெறுத்திருக்கும் என்னை கிருபாதிஷ்டியால்பாரும். இதுவல்லாமல் என்பக்தஜனங்கள் எல்லோரும் என்னைச் சமுசார சமுத்திரத்தில் தள்ளுவதற்கு எத்தனமடைந்திருக்க யான் அந்தச்சோரரிடத்தில் அகப்படாமல் தப்பித்துக்கொண்டு இந்தக் கோரமான காட்டிற்குவந்தேன். சரீரசுகமிடாதவர்கள் காமாதிமிச்ர சத்துருக்கள் எனது ஞானரத்தினத்தை அபகரித்துக் கொள்வதாய் ஒளித்துக்கொண்டிருந்து இது நல்லசமயம் என்று காத்துக்கொண்டிருந்தார். ஆகையால் ஐயா! பூர்வீகத்தில் இராவணகும்பகர்ண விபீஷணரோடு சேர்ந்தும் சுற்றிலும் ஜலவோடை நிறைந்திருக்க, அப்படிப்பட்ட இலங்கையிலிருக்கப்பட்ட சீதாபிராட்டியார்போல யானும் இப்பொழுது இராஜச தாமச சுவாதீனங்களோடு சேர்ந்து அகங்கார மமகாரரூபமான கோரசமுத்திரத்தால் பரிகோஷ்டிக்கப்பட்டிருக்கும்சரீரநகரத்தில் வாசம் செய்துகொண் டிருக்கின்றேன். ஐயா! நீர் சீதாபிராட்டியாருக்குமுத்திரைமோதிரம் தந்ததுபோல என்னுடைய வித்தியாவனத்தை நிர்மூலம் செய்யுங்கள். இதுவல்லாமல் அங்கு இலங்காநகரந்தீயிட்டது போல இங்கு எனக்கு இருக்கப்பட்ட அன்னத்வேஷத்தை தஹிக்கச்செய்யும்ர. மெய்யனே! ஜானகீ

பிராட்டியார் சோகத்தை ஸ்ரீராமருக்குத் தெரிவித்ததுபோல எனதுசோகத்தை ஸ்ரீ ராமச்சந்திரருக்குத் தெரியச்சொல்லுவீர். ஐயா! இதுவல்லாமல் இலங்கைப்பட்டணத்திற்கு இராமச்சந்திரனை அழைத்துக்கொண்டுபோனதுபோல்ஸ்ரீராமபிரானை இங்கு அழைத்துக்கொண்டு வருவீர். ஐயா! கும்பகர்ண இராவணாதிகளை இராமபிரான் கையால் நிக்கிரஹித்ததுபோல் என்னுள்ளத்திலிருக்கும் இராஜச தாமச குணங்களை அந்தப்பகவான்கையால் அதம்செய்யச் சொல்லுவீர். இதுவல்லாமல் அந்த இராமபிரான் கையால் விபீஷணனுக்கு இலங்கையை ஸ்திரம்செய்ததுபோல் அத்தேவனால்என்னுடையசாத்வீகத்தை ஸ்திரப்படுத்தச் செய்யும் இராவணனுடைய அந்தரங்கத்திலிருந்த சீதாபிராட்டியை உமது உள்ளங்கையில்கொண்டுவந்ததுபோல்இந்தப்பிராகிருதசரீர வியோகாநந்தரம் என்னைப்பிரணவாதரூடராய்செய்துக்கொண்டு போகவேண்டும். அந்தச்சீதாபிராட்டி அக்கினிப் பிரவேசமாகி லோகநிந்தையைப் போக்கிக்கொண்டதுபோல் யான் விரஜாஸ்தானத்தால் சூக்ஷுமசரீரவாகனரேணுவை வெறுத்துக்கொள்ள வேண்டும். அந்த அக்கினி தனதுகையால் சீதாபிராட்டியை ஸ்ரீராமசந்நிதியில் விட்டதுபோல் யான் அமானவகர ஸ்பரஸத்தால் பஞ்சோபநிஷண்மய திவ்யசரீர பரிகிரஹணம்செய்து ஸ்ரீவைகுண்டம் அடையவேண்டும். ஸ்ரீஜானகி ஸ்ரீராமரோடு புஷ்பவிமானத்தில் ஆரோகணித்ததுபோல் யான் பகவானோடு சேஷபரியந்தம் வாயில் ஆரோகணிக்கவேண்டும். ஆனால்இத்தனைமொழியேன். ஓ மாருதி! உமது கடாக்ஷத்தால் எனக்கு இத்தனையும் லபிக்கவேண்டுமென்று மனதிச்சையடைகிறேன். இப்படி பரிதாபத்தோடு சொன்னமொழியை மாருதிகேட்டு சந்தோஷமடைந்து இராமதாசனைப்பார்த்து நீர்சோகத்தை விட்டுவிடும். என்போலவே நீயும் இராமதாசனாகி விட்டீர். ஆகையால் பகவான் அந்தரங்கசுத்தியில்லாத வேஷதாரிகளுக்குத்தூரமாய் இருப்பானேயன்றி உம்மைப்போல் வைராக்கியசீலனுக்குச் சமீபத்திலிருப்பான். என்னிடத்தில் அந்த ஜானகீபதி செய்த அநுக்கிரஹத்தை உம்மீதும் செய்வார். நீர் கோரியபடி சீதாமனோஹரன் சேவைதருவார் என்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டார்.

அதின்பிறகு அந்த ஆரண்யமத்தியில் ஸ்ரீராமபஜனைசெய்துக்கொண்டு நிர்ப்பயனாய்வாசஞ்செய்துகொண்டு பகற்காலமெல்லாம் சமீபத்திலிருக்கும் கிராமத்திற்குச்சென்று பிக்ஷான்னமென்று ஐயமெடுத்துக்கொண்டு வந்து புசித்து காலம்கழித்துக்கொண்டு இருக்க, இது எப்படியென்றால் (மயேவமனுஷ்யானும் காரணம்பாதமோக்ஷயோ பந்தாய விஷயாசம்கீ முக்த்திநிர்விஷயம்நம:) இதுபோல் மானிடஜன்மத்துக்கு மனதே அந்த மோக்ஷத்திற்குக்காரணமாயிருக்கும். மனது விஷயத்தோடு சேர்ந்து பந்த ஏதுவாகும். அந்தமனதை நிர்விஷயமாய் முக்தி ஏதுவாகும். இப்படியெல்லாம் நிச்சயித்துக்கொண்டு மனது விஷயமாய் இருநூறு சுலோகம் எழுதிவிடுவார். அந்தச்சுலோகத்திற்குஅர்த்தமறிந்து ஸ்தம்பனம் செய்பவர் வைராக்கியசீலராவார். இந்த இராமதாசன் காட்டிலிருக்கும்மிருகங்களோடு சஞ்சரித்துக்கொண்டு (அஸ்வத்தமேனம் சுவிரூடமூல மகங்கசஸ்ரேண திருடேனசித்வா) என்னும் மொழிபோல திருடமான வேரோடுசேர்ந்த சமுசார விருக்ஷம்போல் விரக்தியென்னும் ஆயுதத்தால் வெட்டியெறிந்து ஸ்ரீராமநாம மிருதுபானம்செய்துகொண்டு பரமானந்தபரிதனாய் இருந்தார்.

இப்படியிருக்கும்சமயத்தில்இராமதாசனருகில் ஆஞ்சநேயன்வந்து, ஓ இராமதாசனே! ஸ்ரீமத்பண்டரிபுரத்தில் ஆஷாடசுத்த ஏகாதசி மகோத்ஸவம் சமீபித்திருக்கின்றது. ஆகையால் நீர் அங்கு போவீரானால் ஸ்ரீராமபிரானைத் தரிசனமடையலாமென்று சொல்லி பண்டரிபுரம் செல்லும் மார்க்கத்தைக் காட்டிவிட்டுமறைந்துவிட்டார். அதன்பிறகு இராமதாசன் அம்மொழியைக்கேட்டவுடனே பண்டரிபுரமடைந்து சாதுஜனங்களோடு சேர்ந்து பகவன்னாமசங்கீர்த்தனை பாடிக்கொண்டு கோலாகலத்தோடு ஆனந்தமடைந்துசந்திரபாகநதியில்ஸ்நானம்செய்து ஆஞ்சநேயருக்கு நமஸ்காரம்செய்து உட்பிரவேசித்துப் புண்டரீகவரதனைச் சேவிக்கும் சமயத்தில் அந்த மகானுபாவர் கடிகயஸ்தனாய் சமகரணனாய் செங்கல்மீது நின்றுகொண்டிருந்தார். அப்பொழுது இந்த இராமதாசன் அசம் துஷ்டியடைந்து பகவானைப் பார்த்து, ஓ சுவாமி! நீர் ஏன் தனுர்பாணத்தை விட்டுவிட்டீர்? அஸ்தத்தை ஏன் இடுப்புமீது வைத்துக்கொண்டிருக்கின்றீர்? சரயுநதியும் இங்கு கிடையாது. வானரசைன்யம் எங்கு போய் விட்டது? இந்த ஆஞ்சநேயன்மாத்திரம் மகாதுவாரத்தினருகில் இருக்கின்றான். ஏகபத்தினிவிரதனை நீர் சீதையைவிட்டு அனேக பத்தினிமாரை ஏன் அபேக்ஷித்தீர்? உமது விஸ்வேஷத்தைச் சகிக்காமல் காட்டிற்கு உம்மைத் தொடர்ந்துவந்த இலட்சுமணன் இப்பொழுது உம்மை எப்படிவிட்டு நின்றார்? இராவணபவிருதனைய் லங்கையில் யேகாக்ஷி முதலான இராக்ஷசஸ்திரீகள் காவலுக்குள்ளிருந்த

காலத்தில் (மாசாதுர்த்வமநஜீவட்ஷ்யே) என்னும் மொழிபோல் ஒரு பாதத்திற்கு உள்ளாக பெஜ்ஜிவ தேவனே பார்க்காமல் யான் ஜீவித்து இருக்கிறே னென்று ஆஞ்சநேயனிடம் சொல்லியனுப்பி சீதா தேவி விரோதிகளில்லாமல் இக்காலத்தில் என்னை விட்டு அங்குசென்றார். இதுவல்லாமல் நீர் ஏன் இந்த ரூபத்தை பரிக்கிரகித்தீர்? மந்தபாக்கியனுன எனக்குச் சேவையருள்செய்வதற்கு இஷ்டமில்லா மல் இந்த விருக்கிரூபத்தைத் தரித்துகொண்டீர்? ஆகையால் கோதண்ட தீக்ஷாகுரு அகிலஜகத்குரு நீ இவ்வளவு உபேக்ஷித்தால் யான் எதையண்டு வேன்? என்னுடைய பரிதாபத்தை எவருடன் சொல்லுவேன். ஐயா! ஸ்ரீராமரூபத்தால் இருந்த ப்க்ஷத்தில் சரணுகதியடைகுவேன். எனது இர க்ஷணபாரம் உனக்குத் துஸ்யமாய் இருப்பேனெ ன்று சாரசோரசிகாமணியாகும் ஸ்ரீகிருஷ்ணரூபம் பரிக்கிரகித்தீர். ஆகையால் ஆஞ்சநேயருடன் இங்கு சானித்தியம் செய்திருக்கின்றீரென்று கேட்டு வேக மாய்வந்தேன். இதற்குள்ளாக எந்தபக்தன் உம் மை இந்த ரூபமாய்த்தியானித்து தமது ரூபத்தை மாற்றினர். எனக்கு அப்படிப்பட்ட திடபக்தி யிருந்தால் என்பிரார்த்தனை ஸ்ரீகிருஷ்ணரூபம் மாற் றிவிட்டு ஸ்ரீராமரூபமாகுவீர். அப்படிப்பட்ட பரம பக்திநிஷ்டை என் உள்ளத்தில் இல்லாமல் போன போதிலும் உமதுகுணபூர்த்தியைச் சமிர்த்த என்னை அனுக்கிரகித்தாலும் இது எப்படியென்றுல் குழந் தையுடைய பசியானது அதிக கொரமாயிருந் தால் அந்தக் குழந்தையைப்பெற்ற தாய்க்கல்லவா இரண்டு பாற்குடம் பொங்கி அக்குழந்தை பசியை யாற்றுவதுபோல் இத்யாதி அநேகபக்தி மந்தமான போதிலும் உமது வாச்சல்யம் என் தப்பிரிற்கும்? ஒ பக்தவத்ஸலா! கருணித்துப்பாரும். என்னைப் பெற்றெடுத்த தாய் தந்தைமார் பந்துஜனங்களை விட்டு(த்வமேவமாதாசபிதா த்வமேவத்வமேவ பந் துச்சருகு த்வமேவத்வமே வித்தியாத்ரவிணம் த்வ மேவ த்வமேசர்வம்மமதேவதேவ) இதுபோலாக உம்மையே சர்வமாக எண்ணமிட்டு வரலானேன், நம்பி நிற்கின்றவனை ஆற்றில்தள்ளும்படியான கதை யல்ல. வசிஷ்டமகாமுனியுடைய சிடராயிருந்து உமக்கு இப்படிப்பட்ட குணமாகாது. இட்சுவாகு வம்சத்தில் பிறந்தவர்கள் சகலத்தையும் அபேக்ஷித் துத் தமது குணங்களை க்ஷமிப்பதற்கு ஆவலடை வார். ஐயா! உமது தந்தையான தசரதமகாராஜன் அசத்தியத்திற்குச் சகிக்காமல் உம்மைக் காட்டிற்கு அனுப்பிவிட்டு உனது விஸ்வேஷ துக்கத்தால் மரணமடைந்தார். அப்படிப்பட்டவருக்கு நீர் பிற ந்து மகாதர்மத்தைக் கைப்பிடித்து இப்போது ஏன் அபகீர்த்தியடைகிறீர்? இதுவல்லாமல் விபீஷண னுக்கு இலங்காதிபட்டம்கொடுத்தகாலத்தில் உமது ஆப்த சிசுவுக்கள் இராமசைப் பார்த்து, அய்யா! இராவணன் ஜீவித்திருக்கும் சமயத்தில் விபீஷண னுக்கு இலங்காபுரியைப் பட்டம்கட்டுவது நியாய மல்லவே. இப்பொழுது இராவணன் சரணுகத மடைந்தால் நீர் என்னசெய்வீரென்று கேட்கும் சமயத்தில், அப்பொழுது நீர்சொன்னதாவது அப் படிப்பட்ட தற்சமயம் வந்து இராவணன் சரணு கதமடைந்தால் அவனுக்கு எனது அயோத்தியைக் கொடுப்பேனென்று சொன்னீரல்லவா? அப்படிக்கு உமது சரணுகதமடைந்தால் என்னைப் பாராமலிரு ப்பது நியாயமா? இப்போது இங்கு வசிஷ்டர் யிரு ந்தால் உமக்கு இந்தத்தர்மம் தகாதென்று சொல்லி உம்மைத் தண்டிக்கச்செய்வேன். இதுவல்லாமல் அயோத்தியிலிருந்தால் இப்படி நிர்ப்பந்தங்கள் உண்டாகுமென்று பயமடைந்து பண்டரிபுரத்து க்கு வந்தீரென என்மனம் எண்ணமிடுகின்றது. அப் படி யில்லாவிட்டால் என்னை ஏன் அயோத்திக்கு வரச்சொல்லாமல் இங்கு அழைத்துக்கொண்டு வந் தீர்? ஐயா! யான் எவ்வளவோ வேண்டியும் உமது மனம் உருகாம லிருக்கின்றதே? மௌனம் சர்வார் த்த சாதனமென்று இருக்கின்றாய். யான் எங்கும் சஞ்சரித்து உனது நீதியைப் பிரகடனஞ் செய்கி றேன் என்றுசொல்லிப் பகவானுக்குச் சந்தோஷ முண்டாக்கினன். அப்போது கிரீடகுண்டலாதி திவ்ய ஆபரணபூஷிதனுய் தனுர்பாணியைத் தூணிர யுகமாய் ஸ்ரீசீதாலட்சுமண பரதசத்துருக்ன அனு மந்த சமேதராய் சுக்கிரீவாதி வானரவீர பரிவேஷ் டனுய் சேவைதந்தார். அப்பொழுது இராமதாசன் ஆனந்த பரவசமடைந்து சொல்லத்தொடங்கினர்.

சுலோகம்.

ஆபதாமபஹர்தாரம் தாதாரம்ஸர்வசம்பதாம்
லோகாபிராமம்ஸ்ரீராமம் பூயோபூயோநமாம்யஹம்
இராமாயராமபத்திராய ராமசந்திராயவேதசே
ரகுநாதாயநாதாயசீதாயஃ பதயேநமஃ
நமஃகோதண்டஹஸ்தாய சம்நீகுருதகராயச
தண்டிதாகிலதைத்தியாய ராமாயாபண்ணிவாரிணே
ஆர்தாநாமார்திஹம்தாரம் பீதாநானம்பீதிநாசனம்
த்விஷதரம்கரலதண்டம்ஸ்ரீராமசந்திரம்நமாம்யஹம்

இப்படியாக இராமதாசன் தியானஞ்செய்து அனேககோடி வந்தனஞ்செய்து, ஒ நாதா! இத்தனை

நாளாக உமது ரூபம்காணுமையால் உபாசித்த எனது நேத்திரங்களுக்குப் பூரண ஆரமாய் அனுக்கிரகித்தீர். என்று சொன்னவுடனே, பகவான் மந்தஹாசமடைந்து, ஒ ராமதாசனே! யான் ரூபரஹிதனுகினேன். எனது நிஜஸ்வருபத்தை சாக்ஷாத்கரிக்காமல் தேவாதிகள் முதலானவர்கள் என்னைத் திவ்வியரூபத்தை விசிஷ்டமாய்த் தியானித்துக்கொண்டிருக்கின்ருர். நீ இப்பொழுது சேவையடைந்த ரீதியை என்னை இராமரூபத்தோடு எக்காலமும் தியானித்துக்கொண்டிரும், சகல சேதனுசேதனங்கள் எனது ரூபமாய்த் தியானித்துக்கொள்ளும். எனது உபதேசத்தால் லோகத்திலிருப்பவர் என்மீது பக்தி உண்டாகச் செய்யுமென்று சொல்லி இராமதாசனுடைய சிரசை தன்கரத்தால் சரம்பலம்கரித்து முந்திபோலவே ஸ்ரீபாண்டுரங்கரூபம் பரிக்கிரகித்தார். இராமதாசன் ஸ்ரீபாண்டுரங்கனை அனேகவிதமாய்த் தியானித்து ஆனந்த நடனம்புரிந்து அனேக கீர்த்தனைகள்செய்து உத்ஸவாந்தகாலத்தில் பகவன்னிய மனமடைந்து ஸ்வஸ்தானத்திற்குச் சென்ருர்.

அதன்பிறகு இராமதாசன் பண்டரிபுரத்தை விட்டு பிரயாணமடைந்து தனது சொந்தராஜ்ஜியத்துக்கு வந்துகொண்டிருக்க அந்த மார்க்கமத்தியிலிருக்கப்பட்ட ஜேசூரி என்று ஒரு பட்டணமிருக்க அதைக்கண்டு அங்கு தங்கிப்போவோமென்று வந்தார். அந்த நகரத்தில் பார்வதி நேசனுகிய பரமசிவன் இராமதாசனுடைய சாங்கத்தியத்தை அபேக்ஷித்து இந்த ராமதாசன் ஸ்ரீராமரூபத்தைத்தவிர மற்றரூபத்தை ஆராதிக்கமாட்டார். ஸ்ரீபாண்டுரங்கமூர்த்தி இவருக்காக இராமரூபமெடுத்து சேவைதந்தார். இப்படிப்பட்ட வைராக்கியபுருடன் எனது நிலயத்துக்கு எப்படிவந்தார்? (சுதூரமபிசம்தவ்யம் யத்ரபாகவதாகப்திதா:) என்னும் பிரமாணமாய் கௌரவித்து யான் இந்தப்பாகவதன் இடத்திற்கு போகவேண்டுமென்று நிச்சயித்து அந்தத்தேசத்தை யாளப்பட்ட சிவாஜிராஜனைப்போல் வேஷத்தைத் தரித்து அஸ்வாரூடனுய் வந்து இராமதாசனைப் பார்த்தமாத்திரத்தில் அஸ்வத்தை விட்டிறங்கி நடந்துவந்து இராமதாசருக்கு வந்தனம் செய்து, ஒ பாகவதோத்தமனே! இன்று சுதினம் தமதுசேவை எங்களுக்கு அகஸ்மாத்தாய் லபித்ததென்று சொல்லி அவரை ஆலிங்கனம் செய்துக்கொண்டு, ஒ மகாத்துமா! இனிமேல் நீர் பண்டரிபுரத்துக்குப் போகும்போதும் மறுபடியும் வரும்போதும் எனக்கு இங்குச்சேவை தரவேண்டுமென்று பிரார்த்தித்தார். ஸ்ரீராமபத்தினிஷ்டரால் எனக்கு பிராணசஹாயராய் இருப்பார். என்னை மறவாதீரென்று சொல்லி மறுபடியும் போய்வருகிறேனென்று சொல்லி மறைந்துவிட்டார். இதைக்கண்டு இராமதாசன் ஆச்சரியமடைந்து இப்பொழுது வந்தவர் தாரக மந்திரோபாசகனுகிய சங்கரமூர்த்தியென்று நிச்சயித்து சந்தோஷமடைந்து மலைமீது சானித்தியமாயிருக்கும் கங்காதரனைச் சேவைசெய்து முகமண்டலத்தில் நின்றுகொண்டு இராமச்சந்திரனைப் பஜித்து சந்திரசேகரனுடைய அனுமதிவாங்கி மலையிறங்கிப் போகும்சமயத்தில் சிவாஜிவேந்தன் இந்தச் சவிஸ்தாரத்தைக்கேட்டு வேகமாய்வந்து இராமதாசனைச் சரணமடைந்து அவருடைய கிருபைக்குப் பாத்திரவானுய், அவரால் ஸ்ரீதாரக மந்திரோபதேசமடைந்து தன்யனுய்விட்டார். இராமதாசன் இதுபோல் அனேக ஆத்துமாக்களை அனுக்கிரகித்து நிஜாஸ்வமத்தில் வசித்து ஈஸ்வரவிபூதியான சேதனுசேதனங்களைச்சமர்சமாய்ச்செய்து ஆனந்தமடைந்து சுயோதமான கிரந்தங்களை எழுதிவிட்டார். அந்தக்கிரந்தங்களைப் பக்தியோடு படிக்கப்பட்டவர்களுக்கு ஞானவைராக்கியம் லபித்து பேதஞானம் நசிக்கும். இதுவல்லாமல்அந்தக்கிரந்தத்தைப் படனஞ் செய்பவர் ஜீவன்முக்தியடைவார். இராமதாசன் பிரமாத்வைஸ்வர்யங்களைக் கருணித்து நின்றவர் சகலவற்றையும் பகவத்ஸ்வரூபமாய்ப் பார்க்கப்பட்டு பிரமானந்தம் அனுபவித்து எக்காலமும் இராமஸ்மரணை செய்துக்கொண்டு ஒவ்வொரு வருடமும் ஆஷாடசுத்த ஏகாதசியன்றைக்கு ஸ்ரீபாண்டுரங்கரைச் சேவையடைந்து உபதேசானுஷ்டானத்தால் அனேகரைத் தன்னைப்போல் செய்து ஆயுஸ்சேஷத்தைக் கழித்து தேஹாவசானகாலத்தில் ஸ்ரீராமச்சந்திர சாயுஜ்யத்தை யடைந்தார். கேட்டீரோ சீடரே! இதுபோலல்லவா பக்திசெய்யவேண்டியது. இப்படி பக்திசெய்யாதவர்களுக்கு எப்படி ஞானம் லபிக்கும்? என்று சொல்லியவுடனே சூரியன் மேற்குதிசையடைந்து தன்னிருப்பிடம் சென்ருர். இதையறிந்து எல்லோரும் அவரவரிருப்பிடம் சென்ருர்கள்.

சமர்த்தராமதாசு சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

இருபத்தெட்டாவது

# கணேசநாதன் சரித்திரம்.

கணேசநாதன் சரித்திரத்தைக்கழற
உணேக்கமான வுறுதியைநல்கியே
அணேக்கீர்த்தியு மன்பையுமருளுமே
விணேர்க்குநாதனும் விஷ்ணுவடிகளே.

திரிபுரமூன்றெரித்தானும்மற்றைமலர் மிசைமேலயனும்வியப்ப
முரிதிரைமாகடல்போல்முழங்கி மூவுலகும்முறையால்வணங்க
எரியனகேசரவாளெயிற்ருே டிரணியனுகமிரண்டுகூரு
அரியுருவாமிவரார்கொலென்ன அட்டபுயக்கரத்தேனென்ருரே.

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் இந்த ஈரேழுபதினுன்கு லோகங்களினும் பெயர்பெற்றதாய் விளங்கும் பாலேகாம் என்னும் ஒருநாடு இருந்தது. அது,

"நாடென்பநாடாவளத்தனநாடல்ல
நாடவளந்தருநாடு."

என்று முன்னேர்கள்சொல்லியிருப்பதுபோல் சகல வளங்களும் நிறைந்துள்ளது. அந்த நாட்டில் சாரசம் என்றும், உச்சனியென்றும் இரண்டு சிறு ஊர்கள் இருந்தன. அவைகள் நீர்வளம்-நிலவளம்-நிறைந்து சகல விடங்களினும் ஏரிகள் குளங்கள் கிணறுகள் கால்வாய்கள் ஊற்றுகள் முதலிய ஸ்தானங்களிலிருந்து மலிவதால் அவ்வூர்களில் நன்செய் புன்செய்த் தானியங்கள் மேம்பட்டு சதாக்ஷேமகரத்தோடு காணப்பட்டுவந்தன. அந்த இரண்டு ஊர்களினுமே சஞ்சரிப்பவராய் ஒருவரிருந்தார். அவர்பெயரோ கணேசநாதரென்று அக்காலத்தவர்களால் வழங்கப்பட்டுவந்தது. ஆனல் அவருடைய குணதிசயங்களை விசாரிக்கப் புகுந்தால் தமக்குள்ள அறிவு இப்படிப்பட்டதென்று உணர்ந்தவரும், வைராக்கியகுணத்திற் சிறந்தவரும், உள்ளன்புள்ளவருமாவாரென்று சொல்லுவதுண்டு. ஆயின் இவர் கௌபீனந்தவிர மற்றைய ஆடைகளை விரும்பாதவர். இவருக்கு ஆடையாதிகளில் விருப்பமில்லாமலிருந்தது போலவே எம்பிரான்மீது பக்தியில்லாமலிருந்ததோ என்ருல் இல்லை, இல்லை. ஆகையால் இவர் சதா பரமபதநாதனுகிய மகாவிஷ்ணுவைத் துதிசெய்துக்கொண்டு வருவார்.

இப்படி நடந்துகொண்டிருக்குங் காலத்தில் இவர் பகற்காலமுழுவதும் காட்டுக்குப்போய் அங்கேகுடியிருந்து இராத்திரிகாலத்தில் மாத்திரம் ஊருக்குள்ளேவந்து ஸ்ரீ அரிநாமஸ்மரணைசெய்துக்கொண்டு திரிந்து பிச்சையெடுத்துத் தின்றுகொண்டிருப்பார். இதனல் அவருக்கு இகழ்ச்சியென்பதும் புகழ்ச்சியென்பதுமில்லை.

இவர் இப்படியாக அரிநாமஸ்மரணையில்காலங்கழித்துக்கொண்டு வருங்காலத்தில் அந்நாட்டை ஆறிலொருகடமைவாங்கிச் செங்கோல்தவருது அரசாண்டுவருகின்ற சிவராஜன் என்னும் ஓர் அரசன் ஸ்ரீபண்டரிநாதனுடைய சர்வகாருண்யத்தை உணர்ந்து அவ்வெம்பெருமானைச் சேவிப்பதற்குப் பிரயாணமாய் அவ்வூர்வழியேவந்தான். அவ்விடத்தில் இக்கணேசநாதரது பெருமையைக் கேள்விப்பட்டு அரசன் அவ்விடத்திலிறங்கி அவரைக்கண்டு வணங்கி அவரது ஞானவலிமையையும், வரகவியின் திறமையையும் பேசும்வார்த்தையையுங் குறித்துச் சந்தோஷமடைந்து எம்பெருமானே! ஸ்ரீயப்பதியை மறவாத இறைவனே! என் மனக்குறைதீர்க்கும் வள்ளலே! என்று பலவாருகத்துதிசெய்து தம்முடைய புதிய கட்டிலின்மேல் இவரை ஒருநாள் சயனிக்கச்செய்து பிறகு தான் அதிற் சயனித்தால் நன்மையென்று தீர்க்காலோசனை செய்து அவரைநோக்கி சுவாமி! தேவரீர் அடியேனுடைய சிறுவீட்டுக்கு எழுந்தருளிவந்து ஒருநாள் தங்கியிருந்து என்னைப் புனிதனுக்கவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அதுகேட்ட கணேசநாதர் அப்படியேயாகவென்று அவ்வரசனுடைய பிரார்த்தனைக்குச் சம்மதித்து அவனிஷ்டம்போலவே அவனுடனேபோய் அவ்வரசனுடைய அரண்மனையிற் பிரவேசித்து, அவ்வரசனல் செய்யப்பட்ட உபசாரங்களை ஸ்ரீவிஷ்ணுப்ரீதியாய்ஏற்று அவனுல் இடப்பட்ட உண்டியாதிகளைப் புசித்து மௌனமாயிருந்தார்.

அத்தருணத்தில் அரசனனவன் மகா மகிமை பெற்று விளங்குபவராகிய கணேசநாதருக்கு எதிரேவந்து சாஷ்டாங்கமாய் நமஸ்காரம்செய்து எம்மை இடைவிடாமல் தொடர்ந்துகொண்டே வரும் பவப்பிறவிகளைக் கழிக்கவந்தபுனிதனே! அடியேன் விண்ணப்பஞ்செய்யும் எம்முறை குறைபாட்டைத் தீர்த்து இரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அப்பிரார்த்தனைக்குக் கணேசநாதர் உடன்பட்டு அங்ஙனே யாகுக. ஆகையால் உன்னுடைய எண்ணத்தைத் தெரிவிக்கவென்று சொன்னர்.

அதைக்கேட்ட அரசன் உள்ளஞ் சந்தோஷித்துத் தேவரீர் அடியேனுடைய புஷ்பசயனம் அமைக்கப்பெற்ற புதிய கட்டிலின்மேல் ஒருநாள் சயனித்து எம்முடைய குடிமுழுவதுமுய்யக் கொள்ள வேண்டும் என்றனர் அதற்குக் கணேசநாதர் அக்கட்டிலின்மீது சயனிக்கப் போவதற்கு முன் இம்முற்றத்தில் சில பரற்கற்களைத்தேடி எடுத்தார். அதைக்கண்டு அரசன் ஓ சுவாமி! தேவரீர் இந்தக் கற்களைத் தேடியெடுப்பது எதற்காகவென்று கேட்டார். அதற்கு அவர் ஸ்ரீஹரிநாமத்தை எண்ணுதற்கென்று சொன்னர். இதைக்கேட்ட அரசன் இவரைக் கட்டிலின்மேலேற்றிச் சுற்றிலுந் திரைபோட்டுவிட்டுப் போய்விட்டான்.

அதன்பிறகு அக்கணேசநாதர் அந்தக் கட்டிலின்மேல் இருந்துக்கொண்டு இந்த இடத்தைவிட்டு நீங்குவது எப்பொழுதோவென்று மனவருத்தங்கொண்டு தாம் தேடியெடுத்த கற்களை அந்தச் சயனத்தில் பரப்பி அதன்மேல் தாம் படுத்துறங்கினர். இவ்வண்ணம் அன்று இராத்திரிபொழுது நீங்கி வைகறையானவுடனே அரசனனவன் எழுந்து நித்திய கடன்களை முடித்துக் கணேசநாதர் சயனித்திருந்த கட்டிலிடத்தில்வந்து இவரைவணங்கி வாழ்த்தி அந்தச் சயனத்தின்மேலிருக்கிற பரற்கற்களைப் பார்த்து அக்கணேசநாதரை நோக்கி, ஓ சுவாமி! தாங்கள் சுகமாய்ப் படுத்துறங்க புஷ்பசயனம் அமைத்திருக்க, அதன்மீது சயனிக்காமல் பரற்கற்களின்மேல் துயில்வதற்குக் காரணம் என்னவென்று கேட்க, அதற்குக் கணேசநாதர் சிவராஜனை நோக்கி ஓ மகாராஜனே!

'இலவம் பஞ்சிற்றுயில்'

என்று ஔவையார் சொன்னவாறே மெத்தென்ற சயனத்திற் படுத்தால் அந்த நித்திரையானது அதிகரிக்கும்.

'நித்திரைக்கழகு மெத்தென்றிருத்தல்'

என்று சொல்லி யிருக்கின்றதாகலின், ஆகவே நித்திரை அதிகரிக்க நேரிட்டால் அந்தச் சுழுத்தியின் விசேஷத்தால் சரீரத்தை மறக்கும்படி உண்டாகும். அவ்வண்ணம் மெய்ம்மறந்து தூங்கினல் பகவஸ்மரணைக்குக் கெடுதியுண்டாகும். ஆகையால் உன்னுடைய விருப்பத்திற்கு யாதொரு இடையூறுமில்லாமல் கட்டிலின்மேல் படுத்தாலும் பகவானுடைய ஸ்மரணை தவறுதிருக்கும்பொருட்டு இந்தக் கற்களை சயனத்தின்மீதுபோட்டுப் படுத்தேன் என்றுர். இவர் இப்படி சொல்வதைக்கேட்ட அரசன் மிகவும் அநுதாபங்கொண்டு இவரை வணங்கி இவருடைய திருவருளைப்பெற்று அன்றுமுதல் ஸ்ரீஹரிநாமஸ்மரணையை இடைவிடாதவனுக யிருந்தான். அதன்பின்னர் கணேசநாதர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு முன்னர் தாமிருந்த இடத்தை யடைந்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு தம்மை உள்ளன்போடு வந்து அடுத்தவர்களுக்கு ஸ்ரீராமதாரக மந்திரத்தை உபதேசித்தவுடனே, அவ்வுபதேசத்தைப் பெற்றவர்களெல்லாரும், சகல துன்பங்களையும் விளைவிப்பதற்கு ஏதுவாகிய உலகமாயையினின்றும் நீங்கினவராய் உண்மை ஞானநிலையை அடைந்து ஜகமுழுதும் விளங்கினர்கள்.

இப்படியாக ஒருவருஷ காலங்கழியவே இந்தக் கணேசநாதருக்கு முந்நூற்றறுபது சீடர்கள் சேர்ந்தார்கள். இவ்வண்ணம்சேர்ந்த முன்னூற்றறுபது சீடர்களும்.

'யதாகுரு ததாசிஷ்யஃ'

என்னும் சுலோகபாதம்போல தங்களுடைய ஆசாரியருக்கு ஒப்பானவராய் வைராக்கியமுள்ளவர்களா யிருந்தார்கள். இப்படியிருப்பதை அவ்வூரிலுள்ளவர்களெல்லோரும் பார்த்து இவரது செய்கையைநோக்கி ஒருவருக்கொருவர் இவருடைய திருவடிகளை ஆஸ்ரயித்தோர் யாவரும் இவர்போலவே வைராக்கியசீலராயினரென்றும், இவர்தம்மை அடுத்தவரை மயக்குங் குணமுடையவரென்றும், ஸ்ரீபண்டரிநாதரே இந்த மானிடரூபமாய் வந்திருக்கின்றாரென்றும் இவரைச் சேவைசெய்வது ஜன்மவேரை அறுப்பதற்குக் காரணமாக்குமென்றுஞ் சொல்லிக்கொள்பவராய் இப்படி பலவகையாகப் பேசிக்கொண்டு, ஒருவரையொருவர்உலாவி ஆலோசனை செய்துகொண்டிருந்தார்கள்.

இவ்வண்ணமிருந்து இவர் எழுந்தருளியிருக்கிற மாமரத்தின் நிழலில் சென்று இவரைக்கண்டு, ஓ ஹரிதாசனே! நீர் இவ்விடத்திலிருந்து உம்மிடத்தில் வருகின்றவர்களையெல்லாம் அத்தியந்த சிஷ்யர்களாக்கிக்கொண்டு அவர்களுக்கெல்லாம் ஹிதோப

தேசஞ்செய்து, இதுவரைக்கும் முன்னூற்றறுபது பேரை நும்பக்கல் திருப்பிக்கொண்டீர். இன்னமும் ஊரிலுள்ளவர்களையெல்லாம் உம்மிடத்துக்கு வரும்படி செய்துகொண்டு வருகின்றீர். இதனால் அவர்களுடைய இல்லறவாழ்வுக்குக் கெடுதி யுண்டாகின்றது.

ஆகையால் தேவரீர் இன்றுமுதல் இங்கிருக்கின்ற மரங்களுக்கெல்லாம் ஞானோபதேசஞ்செய்துகொண்டிருங்கள். அங்ஙனஞ் செய்வீரானால் உம்முடைய திருவருளானது மிகவும் விளக்க மடையுமென்று சொன்னார்கள்.

அதைக்கேட்ட கணேசநாதர் அப்படியேயாகவென்று சொல்லித் தனக்கு நிழலாயிருந்த மராமரமாகிய மாமரத்தை யழைத்து அதற்குத்தானுணர்ந்ததும் இதுவரைக்குஞ் சீடர்களுக்கு உபதேசஞ் செய்ததுமாயிருக்கின்ற ஸ்ரீதாரகமந்திரத்தை உபதேசஞ்செய்தார்.

இப்படி இவர்செய்த உபதேசத்தைக்கண்டோரெல்லாரும் இவரை நோக்கி, ஒ தாசரே! நீர் இதுவரைக்கும் மனிதர்களுக்கு உபதேசஞ் செய்துகொண்டிருந்தீர். அதனால் அவர்களுடைய இயற்கை மனமானது மாறுபட்டிருப்பதை பிரத்தியட்சானுபவமாகக் கண்டிருக்கின்றோம். இப்பொழுதோ தேவரீர் மரத்திற்கு உபதேசஞ் செய்தீர். அதற்குக் குணம் மாறுபட்டதற்கு என்ன அநுமானமிருக்கின்றது? ஒன்றுமில்லையேயென்று சொன்னார்கள். அதைக்கேட்ட கணேசநாதர் அப்படியாயென்று சொல்லி அன்றைக்குத் தமக்குக் கிடைத்த ரொட்டியையும், கீரையையும் பகவானுக்கு நிவேதனஞ் செய்து அவைகளைத் தமது கைகளிலே ஏந்திக்கொண்டு அந்த மாமரத்துக்கு எதிரேநின்று, ஒ மாமரமே? என்று கூப்பிட்டு நான் பகவத் கடாக்ஷத்தால் உனக்குத் தாரகமந்திரோபதேசஞ்செய்தது உண்மையானால், அவனுடைய திருவருளை முன்னிட்டு இன்றைக்குக் கிடைத்திருக்கின்ற பகவத் பிரசாதமான இதனை நீ உண்ணவேண்டுமென்று சொன்னார்.

அந்தத் திருவாக்கைக்கேட்ட மாமரமானது கொஞ்சம் வெடித்தது. அதைக்கண்டு அவர் உடனே அந்தப் பிரசாதத்தை அதற்கு ஈதலும் அதை அது உள்ளே வாங்கிக்கொண்டு வெடித்தவாய் மூடிக்கொண்டது. இப்படி நடந்த அதியற்புதத்தைக் கண்டு அங்கிருந்தவர்கள் யாவரும் மகிழ்ந்து இவரது திருவடிகளில் விழுந்து உள்ளன்போடு உள்ளபடியே துதிசெய்தார்கள்.

இவ்வண்ணம் அவ்வூரார்களெல்லாரும் துதிசெய்து விடைபெற்றுப்போன பின்னர் இக்கணேசநாதரானவர் முன்போலவே காட்டிற்குச்சென்று ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் காட்டிலிருக்கும் இவரது குணாதிசயங்களைக்கண்டு வரும்படி ஒவ்வொரு வருணத்திலும் சிற்சிலராக நான்கு வருணத்தாருஞ் சென்றார்கள். அங்கு அவர்களை நோக்கி அக்கணேசநாதர் நான் ஹரிபஜனை செய்கின்றேன். நீங்கள் எல்லோரும் கைத்தாளம் போடுங்களென்று சொன்னார். அதைக்கேட்ட பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களென்னும் நான்கு வருணத்தவர்களுள் பிராமணர்கள் நீங்க மற்ற மூன்று வருணத்தார்களும் அவருடைய சொற்படியே கைத்தாளம்போட்டார்கள். பிராமணரோ இந்தக் கணேசநாதரை நோக்கி நீ ஹீனனாயிருக்கின்றாய். ஆகையால் நீ தாளம் போடென்று சொன்னார்கள். அதற்கு அக்கணேசநாதர் நீங்கள் போடாமற்போனால் சும்மாவிருங்கள். உங்களுக்குப் பதிலாக இந்தக் கற்கள் போடுமென்று சொல்லி அங்கே கும்பல் கும்பலாய்க் கிடந்த கற்களைநோக்க, அந்தக்கற்கள் ஒன்றோடொன்று தாக்கித் தாளத்தின் சப்தத்தைப்போல் சப்தித்ததைக்கண்ட அந்த வேதியர்கள் மிகவும் ஆச்சரியமடைந்து அசேதனமாகிய கற்கள் இவருடைய விஷயத்தில் இப்படி உபயோகப்படும்போது நாம் சும்மாவிருக்கக்கூடுமா? இருக்கக்கூடாது. என்று மனதிலெண்ணிக்கொண்டு தாங்களுந் தாளம்போடத் தொடங்கினார்கள்.

அதன்பின்னர் இவரது மகிமையைக்கண்டு எல்லா வருணத்தாரும் ஒன்றாய்க்கூடிப் புகழ்ந்து கொண்டாடி இவரதுகோஷ்டியோடு ஸ்ரீஹரிபஜனை செய்தார்கள். பின்னர் அந்தக்கணேசநாதர் ஸ்ரீஹரிபஜனையை முடிவுசெய்து பகவானுக்கு நிவேத்தியமீந்து அங்கு சபைகூடியிருந்த அடியார்களெல்லாருக்கும் பிரசாதங்கொடுத்து அவ்வவர்களுக்கு உத்தரவுகொடுக்க அவர்களெல்லாரும் விடைபெற்றுக் கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்றார்கள்.

கேட்டீர்களோ சித்தர்களே! இப்பால் இவ்வாறு ஸ்ரீஹரிபஜனை செய்துக்கொண்டிருந்த கணேசநாதருடைய பக்திவிசேஷத்தைப் பகவான் உணர்ந்து விடோபா என்கிற மூர்த்தியாய் அக்கணேசருக்கெதிரே! எழுந்தருளி, பக்தனே! நீ இதுவரைக்கும் செய்துக்கொண்டு வந்ததுபோலவே எந்தக் காலமும் என்னைப்பஜித்துக் கொண்டிருக்கக்கடவாயென்று நியமித்துமறைந்து அந்தர்த்தானமாயினர்.

இதைக்கேட்ட கணேசநாதரும் அவ்வாறே ஹரிபஜனை செய்துக்கொண்டு தம்மை குருவாகக் கொண்டு வந்தடுப்பவர்களுக்குத் தாரகமந்திரோபதேசஞ்செய்து இனிது வாழ்ந்திருந்தார் என்று நாபாஜிசித்தரானவர் தம்மையடுத்த சித்தர்கூட்டங்களுக்குச் சொல்லி முடிக்கிறசமயத்தில் சூரியனானவன் மேற்கே அஸ்தகிரிக்குச்சென்றனன் பொழுது போயிற்று. ஆகையால், நாபாஜிசித்தர் மற்றகதைகளை சூரியன் உதயமானால் சொல்லுகிறேனென்று அவ்வவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடஞ்சென்றார்.

கணேசநாதன் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநமஃ

இருபத்தொன்பதாவது

# கோபிசந்தராஜன் சரித்திரம்.

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

மணிகொண்டநிலவலயந்தன்னில்மேக
வண்ணனுயமர்ந்துற்ற வாசுதேவா
கணிகொண்டதண்டுழா யலங்கல்வேந்த
கண்வளருந்திருப்பாலென் கடலிற்பள்ளி
துணிகொண்டவெம்பெருமான் சேவைதந்து
துயர்தீர்க்கவெழுந்தருளி வந்தென்தூய
பணிகொண்டுதிருவுளங் கண்டென்தீமை
பாற்றுவிப்பாயடிமலரிற் பயிலுமாறே.

கேட்டீர்களோ சித்தர்களே! இவ்விதமாக நாபாஜிசித்தர் சென்று சந்தியாவந்தனம் முடித்து சர்வேஸ்வரனை சாஸ்திரோக்தமாய் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அன்று இரவு யோகநித்திரையில் அமர்ந்து சூரியோதயமானவுடன் துயில்நீங்கி எழுந்து காலைக்கடனை சமயநூலிற் சொல்லியபடி கழித்து நித்தியக்கடனை முடித்து சூரியநாராயணருக்கு அர்க்கியபாத்தியந் தந்து முக்குடிநீர் ஆசமனஞ் செய்து நெற்றிமுதலிய பன்னிரண்டிடங்களிலும் திருமண்காப்பை அழகுபெறத்தரித்து, ஸ்ரீஎம்பெருமானுடைய சந்நிதியிற் சென்று ஸ்ரீமந்நாராயண மூர்த்தியை உள்ளன்போடு வணங்கி ஆங்கு எழுந்தருளியிருக்குஞ் சமயத்தில் அவருக்குச் சீடர்களாகிய சித்தர்களெல்லாம் வைகறையிலெழுந்து நித்திய கடன்களை முடித்துக்கொண்டு தங்களுடைய குருவையடுத்து ஓ ஸ்வாமி! தேவரீர் நேற்றையதினம் மாலை மற்றக்கதைகளை இன்றைக்குச் சொல்லுவதாகச் சொன்னீர். ஆயினும் இதுவரைக்கும் தாங்கள் சொல்லிவந்த கதைகளால் யாங்கள் ஒன்றும் பயனடைந்தோமில்லை. எங்களுக்கோ வயதும் முதிர்ந்துவிட்டது.

வேதநூல்பிராயம்நூறு மனிதர்தாம்புகுவரேனும்
பாதியுமுறங்கிப்போகும் நின்றதில்பதினையாண்டு
பேதைபாலகனதாகும் பிணிபசிமூப்புத்துன்பம்
ஆதலால்பிறவிவேண்டே னரங்கமாநகருளானே.

என்றவாறு ஏற்படுகின்ற நூறுவயதில் ஐம்பது நித்திரையாலும், பதினைந்துவருஷம் பேதை பாலகனும், பிணி பசி, மூப்பு துன்பம் இவைகளினால் வருந்துவதாலும், கழிந்துபோகின்றது. ஆகையால் எங்களுக்கு வீணேகாலம் செல்லுவது நன்மையாய்க் காணப்படவில்லை. ஆகையால் தேவரீர் இனியேனும் ஞானமார்க்கத்தைப் போதிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

கேட்டீரோ பக்தி வைராக்கியங்களில் சிறந்த சித்தர்களே! முன்னொருகாலத்திலே நான்குவகைக் கண்டங்களில் உத்தரகண்டத்திலே சர்வ வளங்களிலும் யாதொரு குறைவுமின்றி நிறைந்திருக்கின்ற கௌடபங்கால் என்னும் இராஜ்ஜியம் ஒன்று இருந்தது. அந்த இராஜ்ஜியத்தில் சித்திரகாஞ்சனபுரி என்னும் ஒரு பட்டணமிருந்தது. அதற்குத் திரிலோகசந்தன் என்னும் ஒரு அரசன் இருந்தான். அவ்வரசன் தன்னையொத்த புஜபல பராக்கிரமமுள்ளவர் வேறொருவரிலராய்.

"மன்னவர்க்கழகு செங்கோன்முறைமை"

என்னும் நீதிப்படி செங்கோலினின்றுந் தவறுமல் பார்ப்பவர். இப்படிப்பட்ட அரசன் இவ்வீரேழு பதினன்கு லோகங்களிலுங் கிடைப்பது அரிதென்று சொல்லும்படி அரசாண்டுகொண்டிருந்தான். அவன் இவ்விதமாக அரசாட்சி செய்து வருங்காலத்தில் அவன்,

"கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை"

என்கிற வாக்கியப்படி கற்பிற்கு அருந்ததி போலுங் குணத்தினையுடைய மைனுவதி என்பவளைத் தனக்கு மனைவியாகப் பெற்றனன். இவ்வண்ணம் இவர்கள் இருவரும்.

"மருவியகாதன் மனையாளுந்தானும்
இருவராய்ப்பூண்டீர்ப்பினல்லால்-ஒருவரால்
இல்வாழ்க்கையென் னுமியல்புடையவான்சகடஞ்
செல்லாது தெற்றிற்றுநின்று.

என்னும் நீதிப்படி அவ்வரசனும் அரசியும் இல்லறம் வழுவாது நடாத்திக்கொண்டு வந்தனர். இவர்கள் இவ்விதமாக வாழ்ந்துகொண்டு வருநாளில், அவ்வரசன் மனைவியாகிய மைனுவதியின் அழகிய கர்ப்பத்தில் சாமுத்திரிகா லட்சணங்கள் ஒன்றுலுங் குறைவில்லாமல் அழகானது ஒரு துளிர் விட்டாற்போன்ற சௌந்தரியத்தையுடைய ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்குச் சகல மங்களங்களையுஞ்செய்து சுற்றத்தார்களெல்லாரும் சூழ்ந்திருக்க சகல சாஸ்திரங்களினும் வல்லவராய் விளங்குகின்ற சில பிராமணோத்தமர்களை வரவழைத்து நல்ல சுபலக்கினத்தில் சாதககர்மஞ் செய்து அதற்கிசைந்த பேரிட்டு, பூர்வ புண்ணியத்திற்குத் தகுந்தவண்ணம் கோபிசந்தன் என்னும் அருமையான பெயரிட்டு, கைத்தாய், செவிலித்தாய், முதலியோர் அன்போடு வளர்க்க வளர்ந்து ஐந்து வயதானவுடனே நல்லாசிரியன்பால் சகல சாஸ்திரங்களையுங் கற்பித்து, பின்னர் அரசுக்குவேண்டிய யானையேற்றம் குதிரையேற்றம் முதலிய சகல வித்தைகளையும் உணர்வித்தார்கள். இவ்விதமாகக் கோபிசந்தனுகிய அரசகுமாரன் தக்க பருவத்தை யடைந்தான்.

அக்காலத்தில் அவனுடைய தந்தையான திரிலோகசந்தன் காலகதியால் தேகவியோக மடைந்தனன். உடனே அங்கிருந்த பெரியவர்களெல்லாங் கூடி கோபிசந்தனுகிய அரசகுமாரனுக்கு இராஜ்ஜிய பாரத்தைத் தாங்கும்படி முடிசூட்டினுர்கள்.

இவ்விதமாக முடிசூட்டப்பட்ட அன்றுமுதல் இராஜ்ஜியபாரத்தை ஆண்டுக்கொண்டு வந்திருக்குங் காலத்தில், ஒவ்வொருவராக ஆயிரத்திருநூறு மனைவியரைத் திருக்கலியாணஞ் செய்துகொண்டும் ஆயிரத்தறுநூறு நாககன்னியரை சேர்த்துக்கொண்டும் இரவும்பகலும் இடைவிடாமல்,

ஊருளொழுந்த வுருகெழுசெந்தீக்கு
நீருட்குளிப்பின் முயலாகும்-நீருட்
குளிப்பினுங்காமஞ் சுடுமேகுன்றேறி
யொளிப்பினுங் காமஞ்சுடும்.

என்னும் வாக்குப்படி காமவிரகனுய் விஷயானந்தக்கடலில் மூழ்கியிருந்தான். இவன் இப்படியிருக்குங்காலத்தில் இவனுடையதாயாராகிய மைனுவதியார் தம்முடைய நாயகன் காலம்சென்ற மனவருத்தத்தால் மிகுந்த வைராக்கியமுடையவளாய் ஒருநாள் தாமிருந்துவாழும் உப்பரிகையின் மேல் மாடத்திலேறி நான்கு பக்கங்களையும் கவனமாய்ப் பார்க்கும்போது ஜாலந்தரர் என்னும் பக்தர் ஒருவர் தமது கண்களுக்குக் காணப்பட்டார். அவரோ எண்வகையான சித்திகளையும்பெற்று, எந்தப் பொருளிலும் ஆசையைவிட்ட ஆண்டிஜாதியாயும், இடைவிடாத ஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்பவராயும், பிட்சான்னத்தால் பசியை யொழிப்பவராயும், தபம் சாந்திமுதலிய நற்குணங்கள் நிறைந்தவராகியும் இருந்தார். இவர் அந்தச்சமயத்தில் குளிர்காய்வதற்காகக் காட்டுக்குப்போய் அங்கு உலர்ந்து கிடக்கிற விறகுகளைக் கட்டாகக்கட்டித் தலைமேல் வைத்துக்கொண்டு விரைந்து வந்தார். அந்த விறகுக்கட்டானது அவருடைய தலையின்மேல் தாக்காமல் தலைக்கு ஒரு முழத்துக்குமேலே அந்தரமாயிருந்தது. இந்தப் புதுமையைக்கண்ட மைனுவதி இது என்ன புதுமையாயிருக்கிறது? என்று பிரமித்து ஆ! ஆ!! இவர் மனிதர் அல்லர். தெய்வமேயாவாரென்று நினைத்து இவரால் என்பாவம் நீங்கிவிடுமென்று மனேவுறுதிகொண்டு அவளுக்கு முன்னிருந்த மானம் வெட்கம் முதலியவைகளைவிட்டு சீக்கிரத்தில் தான் ஏறியிருந்த உப்பரிகையைவிட்டுக் கீழேயிறங்கி அவர் திருவடியையடைந்து வணங்கிப் பிழைக்கலாம் என்னும் எண்ணத்துடனே அவருக்கு உபசாரம் செய்வதற்குரிய பந்துக்களையெல்லாம் சேகரித்துக்கொண்டு அவரிருக்கும் இடமாகிய மடத்திற்குப்போய் எக்காலமும் இடைவிடாமல் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்பவராய், பரமானந்தபஜித இருதயராயிருக்கின்ற அந்த ஜாலந்தாருக்கு எதிரே நின்று கைகூப்பி வணங்கி, ஒ சுவாமி! தேவரீர் அடியேனுக்கு ஞானேபதேசஞ்செய்து அடியேனை உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டுமென்று உண்மையுள்ளத்தோடு பிரார்த்தனைசெய்தாள். அதைக்கேட்ட ஜாலந்தரர் அவளை நோக்கி நானே எளியவன். மேலும் எங்குந் திரிந்துகொண்டிருப்பவன். நீயோ அரசனுக்குத் தாயாயிருப்பவள். உனக்குத் தகுந்த

ஆசாரியரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள்வது நன்மையாகுமென்று சொன்னர். அதைக்கேட்ட மைனவதியார் ஓ சுவாமி! நீர் அப்படிச்சொல்வது நியாயமாகுமா? உம்மினுஞ் சிறந்த ஆசாரியரை நான் எங்கேபோய்த் தேடுவது? மேலும் நானே பெண்பாலாயிற்றே. உம்மைச்சரணமடைந்த ஏழையாகிய என்னை எப்படியாகிலும் கடைத்தேற்றவேண்டுமென்று பலமுறை வணங்கிப்பிரார்த்தித்தாள். இதுகேட்ட தபசியானவர் அவளுடைய சித்தசுத்தியை அறிந்துக்கொண்டு மிகவுஞ் சந்தோஷித்து அவளைச் சமீபத்தில் அழைத்து அவளுடைய தலையின்மேல் திருக்கரத்தை வைத்து ஞானோபதேசஞ் செய்தருளினர். அவ்வுபதேசத்தைப் பெற்றவுடனே அவளுடைய அகங்காரமமகாரமுழுவதும் நீங்கிப் பகவானை சாக்ஷாத்காரமாகக் கண்டு தன்னுடைய ஆசாரியமூர்த்தியைத் தொழுது பேரின்பக் களிப்பை யடைந்து, விடைபெற்றுத் தமது அரண்மனைக்குப்போய் ஒய்வு ஏற்பட்டகாலங்களிலெல்லாம் ஞானசிரியரிடத்திற்கு வந்து வணங்கி ஆத்மாநுபவத்தைப் பேசிக்கொண்டு மனைக்குப்போய்க் கொண்டிருந்தார். இவ்விதமாக மைனவதியார், ஆத்மாவுக்கநுபவம் விளைவித்துக்கொண்டு ஸ்ரீஹரிபக்தியில் சிறந்து விளங்கிக்கொண்டிருந்தார்.

இவ்விதமாக நடந்து வருங்காலத்தில் இந்த மைனவதியாருடைய புத்திரராகிய கோபிசந்தராஜர் ஒருநாள் தன்னிடத்தில் எக்காலத்தும் எவ்விடத்தும் அன்பு செலுத்துபவளாகிய தன்னுடைய மூத்த மனைவியிடம் சென்றார். அவளோ தன்னுடைய நாயகன் வரவைக்கண்டு அவருக்குச் செய்ய வேண்டிய உபசாரங்களை ஒன்றுங் குறையாமல் வழக்கம்போல் செய்து நித்திரையிலிறங்கி தாம்பூலாதிகளைக் கொடுத்து என்னுடைய உயிர்ச்சகாயரே! நான் உங்களுக்குச் சொல்லவேண்டிய வார்த்தை ஒன்றிருக்கின்றது. அதை நான் சொன்னல் தாங்கள் அதைத் திருச்செவிசாய்த்து அப்படியே அடியேனுக்குத் திருவருள் செய்யவேண்டும் என்றனள்.

அதைக்கேட்ட அரசன் பெண்ணே! நீசொல்லவிருக்கிறது யாது? அதைச் சீக்கிரஞ்சொல் என்று கேட்டான். அதற்கு அம்மூத்தமனைவியார் அரசனே! உம்முடையதாயார் யாரோ ஒரு பரதேசியின் மடத்திற்குப்போய் அவரிடத்தில் ஏதோ சில உபதேசங்களைப் பெற்றுக்கொண்டு வந்திருக்கிறர். ஆகையால் அன்றுமுதல் அடிக்கடி அப்பரதேசியாரிடம் போவதும் வருவதுமாயிருக்கிறர். அதுபற்றி நமது குடிக்குப் பழியுண்டாயிருக்கிறதென்று சொன்னள்.

அதைக்கேட்ட அந்தக் கோபிசந்தராஜன் அதிககோபங்கொண்டு பெண்ணே! நீ சொல்லுவதை உதயத்தில் அறிகிறேனென்று சொல்லிப்போய் மறுநாள்உதயத்தில் இராஜசபைக்குப்போய் அங்குவந்த மந்திரியைப்பார்த்து மந்திரி! நமது நகர்ப்புறத்தில் அநேகநாட்களாய் வாசஞ்செய்துக்கொண்டிருக்கிற ஜாலந்தரர் என்னுஞ் சந்நியாசியை நான் சேவை செய்ய விரும்புகின்றேன். ஆகையால் நீர் சென்று அவரை இங்கே அழைத்து வாருமென்று, சொல்லவும், அவ்வாறே மந்திரியானவன் சென்று அந்த ஜாலந்தரரைப் பலவகைஉபசாரமொழிகளால் அரசனிடம் வரவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர்.

அதைக்கேட்ட ஜாலந்தரர் அப்படியேயாகுக என்று சொல்லி உடனே புறப்பட்டு அரசனிடம் வந்தார். அவரைக் கண்ட அரசன் அவரை எதிர்கொண்டு அழைத்துக்கொண்டுபோய் வணங்கி ஒரு ஆசனங்கொடுத்து, சுவாமி! தேவரீர் இன்று இங்கு எழுந்தருளினதால் நான் புனிதார்த்தனய் விட்டேன். என்று இனிமையான வார்த்தைகளாடி உபசாரஞ்செய்து, அன்று இரவிலும் அவரை அவ்விடத்திலேயே நித்திரைசெய்யும்படி செய்து, சிலரை யழைத்து, இன்று இரவு அவரைக்கிணற்றில் தள்ளி விடுங்களென்று ஆஞ்ஞாபித்தான். அவர்களும் அரசனாணையைப்போல அவரை ஒருகிணற்றில் தள்ளி விட்டார்கள். அவரோ அக்கிணற்றில் அழுந்திப் போகாமல் மிதந்துகொண்டு ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டிருந்தார்.

இப்படியிருக்க, சூரியோதயமானவுடனே அரசனுடைய தாயாராகிய மைனவதியார் தன்னுடைய சிறிய நித்தியகடன்களை முடித்துக்கொண்டு ஞானசிரியரைத் தரிசிக்கும்பொருட்டு அவருடைய மடாலயத்திற்குச்சென்று அவரைத்தேடிக்காணமல் பரிதபித்துப் புலம்பி ஞானசிரியர் எங்கேபோனரோவென்று மனம் வருந்தியிருக்கையில் ஜாலந்தரருடைய சீடர்களில் சிறந்தவனை கானேபா என்பவன் அவருடையசீடர்கள் எழுநூறுபேருடன் உலக முழுவதுந் தேடிக்கொண்டிருந்தார். இப்படி யிருக்குங்காலத்தில் ஒருநாள் அரசனனவன் தன் அரண்மனை முற்றத்தில் அநேகமாதர்கள் உபசரிக்க உலாவிக்கொண்டிருந்தான். இவ்வைபவத்தைமேல்வீட்டிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த அவ்வரசனுடைய தாயாராகிய மைனவதியார் தம்முடைய புதல்வனது பேரழகைக்கண்டு அந்தோ! இவ்வளவு அழ

குள்ள நமது புத்திரன் கடைசியில் ஒருநாளில் எமன்கையில் கட்டுப்பட்டு வருந்துவானல்லவா? அவரவருடையவினைவசத்தாலுண்டாகின்ற மரணத்தையும் எமபாதையையும் நீக்க நம்மாலாகுமா? ஆகையால் நாம் என்னசெய்வோமென்று மனம் வருந்தியழுதாள். அந்தக் கண்ணீரானது முற்றத்திலிருந்த அரசனாகிய தன்னுடைய புத்திரன்மேல் விழவே அரசனானவன் மேலிருந்து யாரோ தண்ணீர் தெளித்தார்களென்று நிமிர்ந்து பார்க்கையில் அழுதுகொண்டிருக்கிறதாயாரைப்பார்த்து, அம்மா! நீ அழுகிறதற்குக் காரணம் என்னவென்று கேட்டார்? அதற்கு அவள் தான் நினைத்து வருந்தியதை உண்மையாகச் சொல்ல, அவன்கேட்டு வருந்துகையில் தாயாராகிய மைனாவதியார் அப்பா மைந்தனே! உள்ளதுபோலக் காணப்படுகின்ற இவ்வுலகத்தில் கண்களுக்கு ரூபமாத்திரமாகக் காணப்படுகின்ற எல்லாப்பொருள்களும் அழிந்துவருவனவேயன்றி இருப்பன ஒன்றுமில்லை. ஆகையால் நீ உண்மையாகிய ஞானசிரியரை யடைந்து அவருடைய திருவருளைப்பெற்று உன்னுடையசரீரத்தைத் தெய்வீகமாக்கிக் கொண்டால் நன்மையை யடைவாயென்று சொன்னாள். அதுகேட்ட அரசன் என்னைப்பெற்ற தாயே! நீர் சொல்லியபடி உண்மையையுணர்ந்த ஞானசிரியர் எங்கே அகப்படுவாரென்று கேட்க? அதற்குத்தாயாகிய மைனாவதியார் அப்பா! நம்மூரின்கண் ஜாலந்தரர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் ஆசாரியலட்சணங்கள் யாவும் இமையப்பெற்றவர்; அவரைப் பன்னிரண்டு வருஷங்களாகக் கண்டிலேன் என்றுசொல்ல; அரசன் அதைக்கேட்டு ஒன்றுஞ்சொல்லாமற்போய் ஸ்நானஞ்செய்து போஜனஞ்செய்த பிறகு மிகுந்த பரிதாபத்தோடு தன்னுடைய தாயினிடம் வந்து நடந்த சங்கதிகளைச் சொல்லி வருத்தப்பட்டான்.

இவர்கள் இவ்விதமாக வருத்தப்பட்டுக்கொண்டிருக்குஞ்சமயத்தில் கானேபா என்பவர் எழுநூறு சீடரோடு பல இடங்களில் தேடியுங் காணமல் பரதேசத்தை யடைந்தார். அங்கே மச்சேந்திரரைத் தேடிவந்த கோரக்கரானவர் அங்கிருந்த கானேபாவைக்கண்டு காடாலிங்கனஞ்செய்துக்கொண்டு அவ்விடத்தில் தங்கியிருக்குங்காலத்தில் அங்குவந்த கோரக்கர் அவர்களைநோக்கி கோபிசந்தன் ஜாலந்தரரைக் கிணற்றிலே தள்ளிவிட்டான். நீங்கள் இதையறியாமல் ஏன் வருத்தப்படுகின்றீர்கள்? அப்படித் தேடுவதில் என்னபிரயோசனம்? என்று சொன்னார். அதைக்கேட்ட கானேபாவானவர் குருவினுடைய இருப்பிடத்தைத் தெரிந்துகொண்டு கோரக்கரைநோக்கி ஒ கோரக்கரே! மலையாளத்தில் உம்மால் சந்நியாசம் பெற்ற குருக்கள்மாரில் பெண்ணாசைகொண்டு எத்தனைப்பேர் குழந்தைகளைப் பெற்றுக்கொண்டு அந்த மனைவிமக்களை நீங்காதிருக்கிறார்கள் என்றும், அதையறியாமல் எம்மை இகழ்ந்தீரென்றும், விளையாட்டாகப் பேசிக்கொண்டு எழுந்திருந்து இருவருமாகப்போய் காஞ்சனபுரிச்சோலையில் மைனாவதியாரைக்கண்டு இந்தச் செய்தியைச் சொல்லவேண்டுமென்றெண்ணிக்காத்திருந்து பிறகு மைனாவதியார்க்கு கானேபாவானவர், தாம் வருவதைத் தெரிவிக்கும்பொருட்டு முன்னே சிலதூதர்களை அனுப்பினார். அந்தத் தூதர்களால் கானேபாவின்வரவைக்கேட்ட மைனாவதியார் மகிழ்ச்சியடைந்தார். உடனேகொஞ்சநேரத்திற்குள் கானேபாவானவன்வந்து மைனாவதியாரைப் பார்த்து நீர் மனம் வருந்தவேண்டாம். இன்னும் ஏழுதினத்தில் ஜாலந்திரரைக் காண்பீர். என்று சொல்லக்கேட்ட மைனாவதியாரானவர் மிகுந்த மனக்களிப்பை யடைந்து தம்முடைய புத்திரசிகாமணியாகிய கோபிசந்தராஜனிடத்திற்குப்போய் அவரைநித்திரையைவிட்டு எழுந்திருக்கச் செய்து, தூக்கமயக்கத்தைத் தெளிவித்து, இன்றையதினம் நம்முடைய ஆசாரியராகிய ஜாலந்தரருடைய சீடராகிய கானேபா என்பவர் எழுந்தருளிவந்து நமது சோலையின்கண் இரங்கியிருக்கின்றார். அவருடைய திருவடிகளைக்கண்டு சேவைசெய்தால் நீ முன்ஜென்மத்திலும் இந்தஜென்மத்திலுஞ் செய்த எல்லாப்பாவங்களும் உன்னைவிட்டொழியும். அங்ஙனமொழிந்தால் எல்லாப் பதவிகளிலும் உயர்ந்த மோட்சபதவியை அடைவாய் என்று சொன்னார்.

அதுகேட்ட அரசன் என் தாயானவள் நான் நன்மையை அடையச்சொன்ன உண்மைவார்த்தையை நான் கைசோரவிடேனென்று தாயாருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அங்குவிட்டு அகன்று, தம்முடைய கொலுச்சபையைச்சேர்ந்து அங்குள்ளமந்திரியையும் சதுரங்கச்சேனைகளையும் அழைத்துக்கொண்டுபோய்க் கானேபாவைக்கண்டு மிக்க அன்புடன் அவருடையதிருவடிகளைப்பணிந்து உள்ளன்போடு தோத்திரஞ்செய்துநின்றார். அப்போது அந்தக் கானேபா அவ்வரசனைப் பார்த்து நீயார்? என்றுகேட்க, அடியேன் கோபிசந்தராஜன் என்று சொன்னார். அதுகேட்ட கானேபா அரசனை இன்னானென்றறிந்துகொண்டு அடா மூடா? கள்ளை அமுதென்றும், கழுதையைக் குதிரையென்றும், சொல்

லுவதுபோல்,உனக்குஇந்தப்பெயரிட்டவர்யாரோ? அறிகிலேன். நீயோ எமதுஷ்டனு யிருக்கின்றாய். புத்தி கூர்மையில்லாதவனுகிய நீ உன்னுடைய பெண்சாதி வார்த்தையைக் கேட்டு ஆசாரியரை கிணற்றில் தள்ளினுய். ஆகையால் நீ எள்ளளவும் எண்ணுமல் மகாபாவஞ் செய்தாய். ஆகையால் பாவியாகிய உனக்கு சொர்க்கநரக பிராப்தியுண்டு. இவைகளெல்லாம் உனக்குத் தெரிந்திருந்தும் நீ இந்தக்காரியஞ் செய்யலாமா? என்று பலவாருகக் கோபித்துச் சொன்னுர்கள். அதைக்கேட்ட கோபி சந்தராஜன் மிகவும் பயந்து கைகால் நடுக்கமடைந்து, தேவரீர் அடியேன்செய்த மிகப் பெரும்பிழையை இதுசமயத்தில் மன்னித்து மனதில் வைக்காமல் பொறுத்து அடியேனைரட்சித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்.

அந்தச்சமயத்தில் தாயாராகிய மைனுவதியார் அவருக்கு எதிரேவந்து அந்தக் கானேபாவுக்குச் சமாதானஞ்சொன்னதின்மேல் அவர் மனமகிழ்ந்து ஒருவகையாக விருந்தார். அந்தச்சமயத்தில் மைனுவதியார் தம்முடைய புதல்வராகிய கோபிசந்தராஜரைப் பிடித்து அந்தக்கானேபாவின் கையில் கொடுத்து, இவன் என்னுடைய புத்திரனே. ஆகையால் இவன் எப்படிப்பட்ட பிழைகளை விளைவித்திருந்த போதிலும் அவைகளையெல்லாம் பொறுத்து திருவருள் செய்யவேண்டும் என்றுசொல்லி வணங்கினுள். அதைக்கேட்டு கானேபாவானவர் மனமகிழ்ந்திருந்தனர். அந்தச்சமயத்தில் மைனுவதியார் அந்தக் கானேபாவை நோக்கி, ஒ சுவாமி! தேவரீர் எங்கள் பட்டணத்திற்கு வந்து எங்களை ஆண்டருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதற்கு அங்ஙனமே யாகுகவென்று அவர் முதலிய யாவரும் வருவதும் அவர்களையெல்லாம் கோபிசந்தராஜன் எதிர்கொண்டு பணிந்து அழைத்துக்கொண்டுவந்து உயர்ந்த ஆசனங்கொடுத்துப் பாதபூஜைசெய்து, பின்னர்அவரைப்பார்த்து, ஒசுவாமி! தேவரீர் முதலிய யாவரும் இவ்விடத்தில் அமுதுசெய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதற்குக் கானேபாவானவர் ஆகவென்றுசொல்லி அவ்விடத்தில் திருவமுதுசெய்துஅமர்ந்திருக்க, அரசனுனவன் அவர்களுக்கெல்லாம் புஷ்பம், சந்தனம், தாம்பூலம், இவைகளைக் கொடுத்து அதன்பின்னர் கானேபாவானவர் கோபிசந்தராஜனைப் பார்த்து, ஒராஜனே! நீ என்னுடைய ஞானசிரியரை நீ எந்தக்கிணற்றில் தள்ளினுய்? உண்மையாய்ச்சொல்லவேண்டுமென்று கேட்டார். அதற்கு அவ்வரசன் இந்தக்கிணற்றைச் சுட்டிக்காட்டி இந்தக் கிணற்றிலே தள்ளினேனென்று பயந்துசொல்ல, கானேபாவானவர் அரசனை நோக்கி அரசனே! நீ கடைத்தேறும் வழியிருக்கின்றது. ஆகையால் நீபயப்படவேண்டாம். ஆனுல், இரும்பினுலும், செம்பினுலும், வெள்ளியினுலும், பொன்னினுலும், உன்னைப்போன்ற உருவங்கள் தனித்தனியாய்ச் செய்விப்பாயாகவென்று நியமித்தார். அதுகேட்ட அரசனும் அப்படியேசெய்வித்து அந்தக் கிணற்றிற்கருகேவந்து ஆசாரியர்மேல் மூடியிருந்த இலத்தியை எடுப்பிக்கவே, சற்குருநாதரானவர் பூரணச்சந்திரனைப்போல் விளங்கினுர். இவ்விஷயத்தை யாவருங்கண்டு நேத்திரானந்தங்கொண்டார்கள். அப்போது கானேபாவானவர் ஞானசிரியர் திருவடிகளை மனதில்வைத்து, ஒ சுவாமி! இவ்வரசனுக்கு அடியேன் அபயங் கொடுத்திருக்கின்றேன். ஆகையால்தேவரீர் இவன்செய்தகுற்றத்தைக் குறித்துச் சபிப்பதாயிருந்தால் அந்தச்சாபமானது இந்த அரசனுடைய உருவத்தைப்போலச் செய்து வைத்திருக்கின்ற பதுமைகள்மேல் வியாபிக்கும்படி திருவருள் செய்து இரட்சிக்கவேண்டுமென்று மனத்தி லெண்ணிக்கொண்டு கோபிசந்தராஜனைப் பார்த்து, ஒ அரசனே! நீசெய்த இரும்பு முதலாகிய லோகங்களால் செய்யப்பட்ட பதுமைகளை இந்தக் கிணற்றில்விட்டு அந்தச்சுவாமிக்கு சமாதானஞ்சொல்லக்கடவையென்று சொன்னுர்.

அதுகேட்ட அரசன் அப்படியே செய்தான். அப்பொழுது கிணற்றிற்குள்ளிருந்த ஞானசிரியராகிய ஜாலவந்தர் நீயாரென்று அரசனைக்கேட்க; அரசன் சுவாமி! நானே கோபிசந்தனென்றுசொன்னுர். அதற்கு குருநாதரானவர் நீ சாம்பலாகக்கடவாயென்று சபித்தார். அப்போது அந்தச் சாபமானது அரசனைவந்து சேராமல் அந்தப் பதுமைகள்மேல் வியாபிக்கவே, அப்பதுமைகள் அவ்வாறே நீருயின. அப்போது கானேபாவானவர் அரசனைப் பார்த்து ஒ அரசனே! நீ பயப்படாமல் கிணற்றினருகே யிருந்து நம்முடைய ஞானசிரியருக்கு சமாதானஞ்சொல்லும் என்றனர்.

அதைக்கேட்ட அரசன் ஒ சுவாமி! நான் இதுவரைக்கும்போனதுபோக இனி என்னவிளையுமோ? என்று பயப்படுகின்றேன். ஆகையால் நீரேகதியாவீரென்று சமாதானஞ்சொல்ல, கிணற்றிலிருந்துகேட்டிருந்தவராகிய குருநாதர் அரசனை மறுபடியும் நீ யாரென்று கேட்டார். அதற்கு அரசன் மைனுவதியார் புத்திரனென்றுசொன்னுர். அப்போது ஞானசிரியர் ஆனுல், நீஅமரமாகக்கடவையென்று வாழ்த்

தினர். இவ்வார்த்தையைக்கேட்ட்வர் யாவரும் கை கொட்டிச் சந்தோஷித்து மனக்களிப்பை யடைந் தார்கள். அதன்பிறகு அந்தஞானசிரியரைவெளியே வரும்படியாகச்செய்து அரசன் தாயாராகிய மைனு வதியார் அவருடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ஆற்றைப்போல் கண்ணீர்பெருக அவருடைய திருப்பாதங்களைக்கழுவி பாதபூஜைசெய்து முடிந்த பிறகு கோபிசந்தரும் பாதபூஜை முதலியவைகளைச் செய்து வணங்கித் தன்னுடைய மந்திரிமார்களைப் பார்த்து ஒ மந்திரிமார்களே! நீங்கள் என்னுடைய அரசாட்சியைஎன்னுடையகுமாரனுக்குக்கொடுத்து விடுங்களென்றுசொல்லிவிட்டுஞானசிரியரைநோக்கி ஒ சுவாமி! அடியேனுக்குத் தேவரீருடைய துறவற தர்மத்தைக் கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த் தனை செய்தார்.

அதைக்கேட்ட குருநாதர் ஒ கோபிசந்த மகா ராசனே! நானே உனக்கு அமரமாக ஆசீர்வாதஞ் செய்திருக்கின்றேன். அதைப்பெற்று இந்தராஜ்ஜிய பரிபாலனத்தைச்செய்து சுகபோகத்தை அநுபவிக் காமல்விட்டு வைராக்கியத்தை யடைந்து வீணாகச் சரீரத்தை வருத்தப்படுத்துவதினால் என்ன பிரயோ சனம் ஒன்றுமில்லை. ஆகையால் இந்த உலகத்தில் வைராக்கியத்தை அடைவதைப்பார்க்கிலும் விஷத் தைத்தின்னலாம். ஆகாபத்தில் உலாவலாம். ஏழு கடல்களையும் நீந்தலாம் இன்னுமிருக்கின்ற இதர மான அருமையான காரியங்களையும் செய்யலாம். ஆகையால் வைராக்கியத்தைக் காப்பாற்றுவது மிக வும்அருமையாகுமென்றுசொன்னார்.அதைக்கேட்ட கோபிசந்தர் தம்முடைய ஞானசிரியருடைய திருவ டிகளை உள்ளபடியே தாழ்ந்துவணங்கி, ஒ சுவாமி! இதுவரைக்கும் அடியேன் அநுபவித்த விஷயானந் தம் என்னளவிற்போதுமானதேயா யிருக்கின்றது. ஆகையால் நான் தேவரீருடைய கட்டளைக்குத் தகு ம்படி செய்தருள வேண்டுமென்று பலமுறையும் பிரார்த்தனைசெய்ய, ஞானசிரியரானவர் கோபிசந்த ராஜனுடைய எண்ணத்தின் வண்ணமே துறவற ஆசிரமத்தை அருளிச்செய்தார்.

இவ்விதமாக ஞானசிரியர் திருவருள் செய்த வுடனே கோபிசந்தராஜன் சந்நியாசி வேஷத்தைத் தரித்து சோளிகையைச் சுமந்து அவ்விராஜ்ஜியத்தி லுள்ள வீடுகள்தோறும் பிச்சையெடுத்து வரும் போது தம்முடைய வீட்டின் வாசற்படியில் வந்து நின்று கொஞ்சமும்மனவருத்தம்வைக்காமல் ஆலக் தாயே! என்றுசொல்லிப்பிச்சைகேட்டவுடனே அந் தசத்தத்தைக்கேட்ட தன்னுடைய பெண்சாதியா னவள் சீக்கிரமாக வெளியேவந்து கணவரைப்பார்த்து, அந்தோ! என்னுடைய பிராணநாதரே! நீர். இப்படிப்பட்டகாரியஞ்செய்ததுதகுதியாகுமா?என் னிடத்தில் ஏதோ குற்றத்தைக்கண்டு இப்படி செய் தீர்போலும் தோற்றுகிறது. ஏனென்றால்.

"பத்தாவுக்கேற்ற பதிவிரதையுண்டானால்
-எத்தாலுங்கூடியிருக்கலாம்-சற்றே
ஏறுமாறாக விருப்பாளே யாமாயின்
கூறாமற் சந்நியாசங்கொள்"

என்று முன்னோர்கள் சொல்லியிருக்கின்றார். ஆகலின் அப்படியானாலும் நான் எந்தக் குற்றத்தை யும் செய்தேனில்லையே. என்று பலவகைப்படத் துக்கித்து என்னுடைய கணவர் இந்தக் கோலங் கொண்டு வருவதை இந்த உலகத்திலுள்ள பெண் கள் பார்த்தால் மனம் பொறுப்பார்களா? என்று சொல்லிப் புலம்பி அழுவதை அரசனாகிய கோபிசந் தன் பார்த்து அவளுக்கு வேண்டிய புத்திமதிகளைச் சொல்லித் தேறுதல்செய்து அங்குவந்த மற்றவர்க ளுடைய துக்கத்தையும் நீக்கித் தன்னுடைய தாயா ரிருக்கிற இடத்திற்குப்போய் அவளை நமஸ்காரஞ் செய்து நிற்கையில் அந்தத்தாயாகிய மைனாவதியார் தம்முடைய குமாரனாகிய கோபிசந்தனை அன்புடன் அணைத்து மார்போடிறுகத்தழுவி உச்சிமோந்து ஆசைகாட்ட அரசனாகிய சந்நியாசி அவர்களை நோக்கி என்னுடைய அன்பும் பிரியமுமுள்ள தாயே! எனக்கு உன்கையால் பால்சோறு இடவேண்டும். அம்மணீ என்று வேண்டிக்கொண்டனர். தாயாகிய மைனாவதியார் அப்படியே ஆக, என்று சொல்லி விட்டு அவ்வரச சந்நியாசி அதை அமுதுசெய்கின்ற சமயத்தில் தாயாகிய மைனாவதியார் தன்னுடைய புத்திரனைப் பார்த்து என்வயிற்றிற் பிறந்த நீ எவ ராலும் அடைதற்கரிய இப்படிப்பட்ட வைராக்கி யத்தை யடைந்து என்னுடைய குலமுழுவதையும் ஈடேறச்செய்தாய். ஆகையால் இந்தச் சந்நியாசி ஆச்சிரமம் பெற்றுக்கொண்ட உன்னைப் பார்க்கிற என்னுடைய மனதிற்கு உண்டாயிருக்கிற பேரான ந்தத்திற்கு ஒரு அளவில்லை. ஆகையால், குழந்தாய்! நீ உன்னுடைய இஷ்டப்படியே திவ்வியதேச யாத் திரை செய்துகொண்டு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இவ்விடத்திற்கு வந்து நான் கொடுக்கும் பால்சோற்றை யுண்டு என்னுடைய மனதைப் பெருமகிழ்ச்சி செய்வித்துப் போகவேண்டுமென்று சொன்னார்.

அதைக்கேட்ட கோபிசந்தர் அப்படியே செய் கிறேனென்று சொல்லித் தாயினிடத்தில் விடைபெ

ற்றுக்கொண்டு வெளியிற் புறப்பட்டுப்போய்ப் புண்ணியதீர்த்த யாத்திரையும், புண்ணியக்ஷேத்திர யாத்திரையுஞ் செய்துகொண்டு வரும்போது பத்திராவதி நகரத்திற்குப்போய், அந்த நகரத்தின்கண்ணிருக்கும் சம்பாவதி என்னும் பேரையுடைய தன்னுடைய தங்கையை நினைத்து அவருடைய வீட்டுவாசற்படியில்போய் நின்று 'ஆலக்' என்று பிச்சை கேட்டார். அதைக் கேட்டுக்கொண்டிருந்த வேலைக்காரி விரைவாக ஓடிவந்து இவரைப் பார்த்து ஆச்சரியப்பட்டு வீட்டுக்குள்ளே விரைந்துபோய் எஜமாட்டியாகிய சம்பாவதியைப் பார்த்து அம்மா! இவ்விடத்தில் நம்முடைய வாசற்படியினிடத்தில் ஒருவர் பிச்சான்னத்திற்கு வந்திருக்கிறார். அவரைப் பார்த்தால் கோபிசந்தர்போலக் காணப்படுகின்றனர். ஆகையால் நீயும் வந்து பாரென்று அழைத்தாள். உடனே அவளும் வெளியே விரைந்துவந்து இவரை நன்றாய் நிதானித்துப் பார்த்து தன்னுடைய தமையனென்று உணர்ந்து அடியற்ற பனைமரம்போல் கீழேவிழுந்து அழுது தேம்பிக் கதறி அண்ணா! அண்ணா! அரம்பாஸ்திரிசள்போல் பேரழகுவாய்ந்த அநேகபெண்களையும், அளகாபுரிக்குயர்ந்த பட்டணத்தையும், இந்திரனுடைய அந்தப்புரத்தைப்போல் விளங்குகின்ற அந்தப்புரத்தையும், அநேககோடி செல்வத்தையும் விட்டு இந்தச் சந்நியாசிகோலமாய் வரவேண்டிய காரணம் என்ன? என்று கேட்டார். அதற்கு சந்நியாசிவேடங்கொண்டிருக்கிற கோபிசந்தராஜன் தன்னுடைய தங்கையை நோக்கி அம்மா சம்பாவதி! நான் ஞானசிரியருடைய திருவருளைப் பெற்றபிறகு என்னுடைய மனமானது ஸ்ரீநாராயணமூர்த்தியினுடைய திருவடிகளில் செல்லுவதேயன்றி வேறொன்றிலுஞ் செல்லுவதேயில்லை. ஆகையால் நான் இந்த வேடத்தோடுசென்று அவரிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு தீர்த்தயாத்திரைசெய்து தாயினுடைய உத்தரவுபோலவே பன்னிரண்டு வருஷங்கள் கழிந்த பிறகுதான் நான் தாயினிடம் போவேனென்றான். அம்மாதிரியே தாயினிடத்திற்கு வந்து அவரைச் சேவைசெய்து அவரால் கொடுக்கப்பட்ட பால் சோற்றை அமுதுசெய்து போயினர். அதற்குப் பின்னர் மங்கையர்களுக்கெல்லாம் தலைவியாய் விளங்குபவளாகிய பிரேமளா என்பவளால் அரசாளப்பட்டு வருகின்ற மலையாளதேசத்திற்கு மச்சேந்திரநாதர் என்பவர் ஒருகாலத்தில்போயினர். அப்பொழுது அந்த மங்கையர்க்கரசியானவள் இந்த மச்சேந்திரநாதருடைய பேரழகைக்கண்டு மயங்கினாள் அந்தச்சமயத்தில் அவளுடைய அழகைக்கண்டு இவரும் மயங்கினார். இவ்விதமாக ஒருவரிடத்தில்ஒருவர் மோகங்கொண்டு, அதினால் இருவருங்கூடி விஷயானந்தசாகரத்தில் மூழ்கி அழுந்திக் கிடக்குங்காலத்தில், இந்தப் பிரேமளா என்னும் பெண்மணியின் வயிற்றில் ஒரு. ஆண்குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு மீநாதன் என்று பெயரிட்டு அதிக ஆவலோடு வளர்த்துக்கொண்டு வந்திருந்தார்கள். இப்படி யிருக்குங்காலத்தில் ஒருநாள் பிரேமளாதேவியின் முகத்தைநோக்கி பெண்ணே! நான் தீர்த்த யாத்திரை செய்யவந்து உன்னுடைய மிகுந்த காமத்தீயிற் சிக்கி உன்னைப் பிரிய மனமில்லாமல் பரிதபிக்கின்றேன். ஆகையால் என்னை அழைத்துக்கொண்டு போவதற்குக் கோரக்கன் வருவான். அவன் என்னுடைய மாணாக்கன் என்று சொன்னார். அதைக்கேட்ட பிரேமளாதேவி மிகுந்த மனவருத்தத்துடன் தன்னுடைய மந்திரிமார்களை நோக்கி, ஓமந்திரிமார்களே! நம்முடையநகரத்தைச் சுற்றிலும் காவல்வீரர்களைவைத்து துறவிகள் யாராவது வந்தால் அவர்களைச் சிரச்சேதஞ் செய்யுங்களென்று கட்டளை கொடுங்களென்று சொன்னாள். அவர்களும் அப்படியே நகரைச்சுற்றிலுங் காவல் வீரரை ஏற்படுத்தி இந்த ஏற்பாட்டை அவர்களுக்குச் சொல்லிவைத்தார்கள். இப்படியிருக்குங்காலத்தில் கோரக்கரானவர் தமது குருவாகிய மச்சேந்திரநாதரைத் தேடிக்கொண்டுவந்து இந்த நகரத்துக்குட்பிரவேசித்து ஒருவீட்டு வாசற்படியில் நின்று ஆலக் என்று சொன்னார்.

அதைக்கேட்ட அந்த வீட்டுக்காரி விரைந்து வெளியேவந்து இவருடைய வயது அழகு முதலியவற்றைக்கண்டு இரக்கம்கொண்டு, ஓ துறவி! இந்த நகரத்தைச்சுற்றிக் காவல்வீரர்களிருக்கின்றார்கள். அவர்கள் துறவியாகிய உம்மைப்பார்த்தால் கொன்றுவிடுவார்கள். இதுவோ இந்த ஊரையாள்கின்றவளாகிய பிரேமளாதேவியின்கட்டளையாகும். ஆகையால் நீர் இந்த ஊரிலிருக்கவேண்டாம்; சீக்கிரம் வேறேயிடத்திற்குப் போய்விடும் என்று சொன்னாள். அதைக்கேட்ட கோரக்நாதர் பயங்கொண்டு நம்முடைய ஞானசிரியரை எப்படி தேடிக் காண்பது? என்று மிகுந்த மனவருத்தத்தோடு ஒரு மரநிழலில் உட்கார்ந்திருந்தார். அந்தச்சமயத்தில் அந்த வழியாகச் சில வேஷதாரிகள் வந்தார்கள். கோரக்கரானவர் அவர்களைப்பார்த்து நீங்கள் இந்த வேஷத்தோடு இங்கேவந்ததற்குக் காரணம் யாதென்று கேட்டார்? அவர்கள் அதற்குக் கோரக்கரைப்

பார்த்து, ஒ சுவாமி! இந்தநகரத்தையாளும் அரசன் இடத்திற்குப்போய் எங்களுடைய கூத்தாட்டின் அதிசயங்களைக்காட்டி ஏதாவது லாபம் அடையலாமென்றெண்ணி இவ்விடம்வந்தோம். வரும்போதே வழியில் மிருதங்கக்காரன் நோயாளியாகிவிட்டான். ஆகையால் இனி யாம் என்ன செய்வதென்று எண்ணியெண்ணி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தோம் என்று சொன்னார்கள். அதைக்கேட்ட கோரக்கநாதர் அவர்களைப்பார்த்து நான் மிருதங்கம் நன்றாய் வாசிப்பேன். ஆகையால் என்னை அழைத்துக்கொண்டு போங்களென்று சொன்னார். அந்த வேஷதாரிகள் அதைக்கேட்டு மனஞ் சந்தோஷித்து இவரையுங் கூடவே அழைத்துக்கொண்டு நகரத்திற்குள் பிரவேசித்து மச்சேந்திரநாதரும் பிரேமளாவும் சேர்ந்து ஒரே ஆசனத்திலிருக்கக்கண்டு, அவர்களுக்கெதிரே விசித்திரமாய் நடனஞ்செய்ய,கோரக்கரும் அந்த நடனத்திற்கிணங்க மிருதங்கமடித்தார். அப்போது கோரக்கர் தாம்வந்ததை முரனுசிரியர் உணரும்படி அந்த மிருதங்கவோசையால் தெரிவித்தார். உடனே மச்சேந்திரநாதர் உணர்ந்துகொள்வதற்கு முன்னரே பிரேமளா உணர்ந்துகொண்டு மனந்திடுக்கிட்டு கையைநீட்டி கோரக்கர் வந்துவிட்டாரென்று மச்சேந்திரநாதருக்குத் தெரிவித்தார். அதை அவர் தெரிந்துக்கொண்டு ஆசனத்தைவிட்டு எழுந்துவந்து சீடனை அணைத்து இனியசொற்கள் பேசிக்கொண்டிருக்கும்போது, அந்தப் பிரேமளாவானவள் அந்த வேஷதாரிகளுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்தனுப்பினர். அதின்பிறகு தன்னுடையநாயகரைக் கோரக்கர் அழைத்துக்கொண்டு போய்விடுவாரே என்கிற ஏக்கத்தால் அன்னபானுதிகளைவெறுத்து இரவும்பகலும் துக்கித்துக்கொண்டிருந்தார். இதையுணர்ந்த கோரக்கரோ தகுதியான சமயம் பார்த்துக்கொண்டேயிருந்து ஒருநாள் குருவைப்பார்த்து ஒ சுவாமி! தேவரீர் அடியேனேடு இப்போது எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அதுகேட்ட மச்சேந்திரநாதர் தமது பேரன்பினையுடைய நாயகியைப் பிரியமாட்டாதவராய் கோரக்கரைப்பார்த்து அப்பா! நீர்வளம்நிலவளம்முதலிய பலவளங்களும் அமைந்த இந்த நகரத்தைப்போல உடலுக்கும், உயிருக்கும் இன்பஞ் செய்வதாகிய நல்ல நகரம் வேறென்றில்லாமையாலும், பிறந்த குமாரன் மிகவும் பிரியமுள்ளவனாகையாலும், இந்த வூரைவிட்டு வருவதற்கு இஷ்டமில்லாமலிருக்கின்றது. ஆகையால் நீ வாவென்று என்னையழைப்பதுங் குற்றமாயிருக்கின்றது ஆதலால் நான் ஒன்றுஞ்சொல்லமாட்டேன் என்று மனம்வருந்துகிற ஞானகுருவினுடையவருத்தத்தை கோரக்கரானவர் பார்த்து இதற்கு நாம் என்ன செய்யவல்லோமென்று எண்ணியெண்ணிச்சிலநாள் அங்கேயிருக்க, ஒருநாள் ராத்திரியில் மனைவியோடு நித்திரை செய்துகொண்டிருக்கிற மச்சேந்திரநாதருடைய குழந்தை மிருதுவாகிய சயனத்தின்மேல் ஜலமலங்களைவிட அதனைப்பார்த்துக்கொண்டிருந்த மச்சேந்திரர் தமது மாணக்கராகிய கோரக்கனைப் பார்த்து, அப்பா! நீ இந்தக் குழந்தையைக் கழுவிக் கொண்டுவாவென்று சொன்னர். அதைக்கேட்ட கோரக்கர் அவ்வாறேகுழந்தையை ஆற்றிற்குக்கொண்டுபோய்க்கழுவிக் கல்லின்மேல்மோதி சரீரம் முழுவதும்சிதைந்து துண்டு துண்டாய்த் தெறிக்கும்படி சிதைத்துவெயிலில்நன்றாய்உலர்த்தினர். அப்போது மச்சேந்திரர்கோரக்கரைப்பார்த்து எங்கேகுழந்தையென்றுவினவ, அவர் நீரில்துவைத்து வெயிலில் உலரவைத்தேன் என்றுசொன்னர். அதைக்கேட்ட மச்சேந்திரர் கோரக்கரைப்பார்த்து இவன் குழந்தையைக் கொலைசெய்தானென்று உணர்ந்து நிலத்தின்மேல் விழுந்து அலறி மூர்ச்சித்தார். அப்பொழுது அவருடைய மனைவியாகிய பிரேமளாவானவள் வயிற்றிலும் மார்பிலும், முகத்திலும், தலையிலும் அறைந்துக்கொண்டு கோகோவென்று அலறி புரண்டு விழுந்தாள். ஞானசிரியராகிய மச்சேந்திரர் மயக்கந்தெளிந்து கோரக்கரைப்பார்த்து என்குழந்தையைக் கொன்றது உனக்கு அழகோ? அந்தக் குழந்தையாகிய மீனநாதனை இந்தக்ஷணத்தில் நான் பார்க்கும்படி வரவழைக்காமற்போனயானல் நீ நல்ல மாணக்கனகாயென்று சொல்லுவதற்கு முன்னர் கோரக்கரானவர் நூற்றெட்டு குழந்தைகளை உண்டுபண்ணிக் காட்டினர். அதைக்கண்ட பிரேமளாவானவள் இதைக்கண்டு மிகவும் ஆச்சரியமடைந்து இவர்களில் என்னுடைய வயிற்றிற் பிறந்தவன் இன்னனென்றுகாட்டவேண்டுமென்றுகோரக்கரை. வேண்டிக்கொண்டனர். அதுகேட்டகோரக் அந்தப் பிரகாரமே நூற்றெட்டுகுழந்தைகளைமறைத்து ஒரு குழந்தையைப் பிரேமளாவினிடத்திற் கொடுத்து இதுதான் உன்னுடைய குழந்தையென்று சொல்லி பிறகு தன்னுடைய ஞானசிரியராகிய மச்சேந்திரரைவணங்கி ஒ சுவாமி! இவ்விடத்தில் நெடுநாளாக இருந்தீர். இப்போதாவது என்னுடன் வரவேண்டுமென்றுசொல்ல, அதுகேட்ட மச்சேந்திரர் இந்தக் கோரக்கன் சொன்னபடியே இவனேடு போகாதிருந்தால் இன்னும் என்னென்ன தீங்கு நேரிடுமோவென்று எண்ணுதுமெண்ணி, தனது நாயகியாகிய

பிரேமளாவின் முகத்தைப் பார்த்து, ஒ பெண்ணே! என்னுடையமாணாக்கராகிய கோரக்கர் அழைக்கிற தினால், நான் போய்வருகிறேன் என்று சொல்ல, பிரேமளாவானவள் தமது நாயகர் போகத்தில் மிகவும் இச்சையுடையவராயிருந்தும் இவரை நிறுத்தினால் இன்னும் என்ன விபரீதங்கள் உண்டாகுமோ? என்று எண்ணி அவருக்கு வழிச்செலவுக்கு உதவ வேண்டுமென்று ஒரு தங்கப்பாளத்தைக் கோரக்கருக்குத் தெரியாமல் சோளியில் வைத்துக் கண்ணீர் விட்டுக் கதறியழுதாள். பிறகு உம்மை இனிமேல் எப்போது காண்பேனென்றுசொல்லிஅனுப்ப, மச்சேந்திரர் கோரக்கராகிய சீடரோடு அந்தநகரத்தை விட்டுச் செல்லும்போது வழியில் ஒருஆரணியம்வந்தது. அந்த ஆரணியத்தில் செல்லும்போது அங்கே ஒருவரும் நடவாமல் இருக்கிற இடத்தைப்பார்த்து சீடரைநோக்கி இந்தவழியில்திருடர்பயம்உண்டோவென்றுகேட்க, அதற்குச் சீடராகிய கோரக்கர் ஒ சுவாமி! எல்லாவற்றையும்விட்ட உமக்குத் திருடர் பயம் உண்டானதற்குகாரணம் என்னவென்றுகேட்டார். அதற்கு யாதொன்றும் பதில் சொல்லாமல் மௌனமாயிருந்துவிட்டார். பிறகு இருவரும் அங்குள்ள தடாகக்கரையிற்போய்ச்சேர்ந்தார்கள். அப்பொழுது ஞானசிரியர் தம்முடைய சோளியை சீடரிடத்திற் கொடுத்துவிட்டு சௌசவிதி செய்யப் போனபோது கோரக்கர் அந்தச்சோளியைபரிசோதித்துப்பார்த்து அதனுள்ளே தங்கப்பாளம் ஒன்று இருக்கக்கண்டு இதனாலல்லவோ நமது குருநாதருக்கு அச்சமுண்டாயிற்று. என்று நன்றாய் ஆலோசனைசெய்து அதை அந்தத் தடாகத்திலெறிந்துவிட்டு பாளத்தின்பளுவு எவ்வளவோ அவ்வளவு பளுவுள்ள கற்களைச் சோளியில் நிறைத்துவைக்க குருநாதரானவர் தமது அனுஷ்டானங்களை முடித்து வந்து சோளியைத் தூக்கித் தோளில் மாட்டிக்கொண்டு இருவருமாகவழியேவழிநடந்துபோய் எதிரே ஒருவனத்தைக்கண்டு சீடர் முகத்தைநோக்கி இந்த வழியில் கள்ளர்பயமுண்டோவென்றுகேட்க, சீடர் ஒ சுவாமி! திருடர்பயம் முன்னரே நீங்கிவிட்டது என்றார். அதுகேட்ட குருநாதர் இவன் இவ்விதமாகச்சொன்னதற்குக் காரணமென்னவிருக்குமென்று நன்றாய் ஆலோசனைசெய்து அதிசயத்தோடு தம்முடைய சோளி கையில் கையிட்டு ஆராய்ந்துபார்த்து அதிலிருந்த தங்கப்பாளத்தைக் காணமல் கற்கள் நிறைந்திருப்பதைக்கண்டு அவைகளையெல்லாம் எடுத்து வேறிடத்தில் எறிந்துவிட்டு, ஒ என்னுடைய அன்புடைய மாணாக்கனான கோரக்கா! என்பிரிய நாயகியானவள் நமக்கு வழிச்செலவுக்குக்கொடுத்த தங்கப்பாளத்தை யெறிந்துவிட்டுச் சோளியில் கற்களைநிறைத்துவைத்தாய். இவ்விதமாகச்செய்த காரியம் மிகவும் விசித்திரமாயிருக்கின்றது. உலகத்தில் சீடர்களாயுள்ளவர்கள் தமது ஞானசிரியர்களுக்கு உடல்பொருள் ஆவிகளாகிய இந்த மூன்று பதார்த்தங்களையும் தத்தஞ்செய்வார்கள். அப்படியிருக்க, நீ என் குழந்தையாகிய பொன் எல்லாவற்றையும் கொடுத்து நாசஞ்செய்தாய். ஆகையால் நீ எனக்கு நல்லமாணாக்கனாகமாட்டாய். ஆகையால் நீ என்னை விட்டுப்போவென்று கடுகடுத்துச் சொன்னார். அது கேட்ட சீடராகிய கோரக்கர் தாங்கள் போகும் வழியிலுள்ள ஒரு மலையைப்பார்த்து அதின்மேல் சிறுநீர்விட அந்தமலைமுழுவதும் பொன்னாய் விட்டது. அப்போது குருநாதரைப்பார்த்து ஒ சுவாமி! தேவரீருக்கு வேண்டிய பொன்னை எடுத்துக் கொள்ளலாமென்று கோரக்கரானவர் பொன்மலையைக் காட்டினார். அதைக்கண்ட குருநாதர் நான் மாயையால் உணர்வழிந்தேன் என்றுசொல்லி மனந்தெளிந்து ஆராய்ந்து, கோரக்கா! தேவர்களுக்கு அமிர்தங் கொடுத்ததிருமாலே! நீ என்பதைத் தெரிந்துகொள்ளாமற் போனேன் என்று சொல்ல கோரக்கரும் ஞானசிரியரைநோக்கி, ஒ சுவாமி! தேவரீர் சாக்ஷாத் சிவபெருமானே யல்லவோ இப்படி அவதரித்து அடியேனுடைய மகிமையைப்பெற்று விளங்கும் பொருட்டு உலகமாயையில் கட்டுப்பட்டுத் திரிகின்றவர்கள்போல் நடிக்கிறீரென்று பலதோத்திரஞ்செய்து கொண்டாடி வணங்கினர்.

இவ்விதமாக எல்லாவுலகத்தாரும் வணங்கத் தகுந்தவராகிய ஞானசிரியராகிய மச்சேந்திர நாதர் நகைத்து பொன்மலையை முன்போலவே கல்மலையாகச்செய்து இருவரும் வந்து புஷ்கரதீர்த்தத்தைக் கண்டார்கள். அவ்விடத்தில் கானோபாவுடன் ஜாலந்தரர்வந்து கண்டு ஆலிங்கனஞ் செய்துகொண்ட பிறகு இவர்களும் இனியவசனங்களைச்சொல்லி எல்லோரும் பேரின்பக்கடலில் மூழ்கி ஸ்ரீ சீதரகுணாநுபவஞ்செய்து, சிலநாள் அங்கிருந்து பிறகு ஒருவரிடத்தில் ஒருவர் விடைபெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் இடங்களுக்குப் போய்விட்டார்.

இப்படிப்பட்ட மிக்க கீர்த்தியினையுடைய இவ்வன்பர்களைத் துதிசெய்பவர்களும், தியானிப்பவர்களும் இவர்களுடைய வைபவங்களைக் கேட்பவர்களும் சர்வசித்திகளையும் பெற்று உண்மைஞானத்தையடைந்து நித்தியவாழ்வையுடையவர்களாய் நிர்மலனாகிய பகவானுடைய ஸ்ரீவைகுந்தபதவியையும் அடைவார்களென்று பூர்வத்தில் சிவபெருமானானவர் உமாதேவியாருக்குத் திருவருள் செய்தார். ஆகையால் சித்தர்களே! நீங்கள் இப்படிப்பட்டவர்களுடைய சரித்திரங்களை உண்மையாக உள்ளந் திரிகரணசுத்தியோடு கேட்பீரானால் மோட்ச சாம்பிராஜ்ஜியத்தை வெகு எளிதில் பெறுவீர்களென்று சொன்னார். அந்தச்சமயத்தில் சூரியனும் நாம் இப்படிப்பட்டகுணாநுபவங்களை அடையவில்லையேயென்று வெட்கங்கொண்டவன்போன்று குணபாற்சென்று மறைந்தான். இதுகண்டசித்தர்களெல்லாம் தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்றார்கள்.

கோபிசந்தராஜன் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

முப்பதாவது

# பத்மநாப்வேதியர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

ஒருமாலே வந்தென்னை யுண்மை நிலையைப்போக்கி
கருமாலே விளைவித்து கண்ஞானம் போக்கும்
திருமாலே யவ்வினையைத் தீர்த்தருள வேண்டும்
ஒருமாலே கொண்ட வுயர்கிருஷ்ண சீலனே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் கோபிசந்தமகாராசனுடைய சரித்திரத்தை நன்ருய்க்கேட்டுச்சென்று சந்தியாவந்தனஞ்செய்து அன்று இரவு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத் தியானித்து உண்டியாதிகளெடுத்துக்கொண்டு உறங்கினர். நாபாஜிசித்தர்களும் அங்ஙனமே செய்தார்.

இப்பால் அன்று இரவுசெல்ல வைகரையிலெழுந்து நித்தியக்கடனை முடித்துக்கொண்டு சித்தர்களெல்லாம்ஒன்ருய்ச்சேர்ந்துநாபாஜிசித்தரிடம்வரத்தொடங்கினர்கள். அப்போதுநாபாஜிசித்தர் தம்முடைய காலைக்கடனை முடித்துக்கொண்டு ஸ்ரீ எம்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலுக்குவந்து ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியை நமஸ்காரஞ்செய்துகொண்டிருந்தார். அந்தச்சமயத்தில் சூரியபகவானனவன் நாபாஜிசித்தர் சொல்லுகின்ற கதையைக் கேட்க வருபவன்போல் கீழ்த்திசையில் தோன்றினன். அப்போதுசித்தர்களெல்லாரும்வந்து நாபாஜிசித்தரைக்கண்டு, ஒசுவாமி! தேவரீர் இதுவரைக்கும் அடியேன்களுக்குச் சொல்லிக்கொண்டுவந்த சரித்திரங்களால் நாங்கள் ஏதும் பயனடைந்தோமில்லை. ஆகையால் தாங்கள் எங்களைப்புனிதார்த்தர்களாக்க மனங்கொண்டு வேறுசரித்திரங்களைச்சொல்லி அருளல்வேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். அதற்கு நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர். எப்படியென்ருல்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னெருகாலத்தில் வடதேசத்தில் சிறந்து விளங்குவதாகிய காசிக்ஷேத்திரத்தில் ஒரு வணிகன் இருந்தான். அவன் குபேரனைப்போல் செல்வத்திற் சிறந்தவன். அவன் தன்னுடைய குலத்தில் கோத்திர சூத்திரங்களுக்கேற்கக் கற்பிற்சிறந்த ஒருபெண்ணை விவாகஞ்செய்துகொண்டு அவளுடன்கூடி இல்லறதருமத்தை நடத்திக்கொண்டு வருங்காலத்தில், அவர்களுக்கு ஐந்து குழந்தைகள் உண்டாயின. இவ்வைந்து குழந்தைகளுடன் தாங்களுஞ் சுற்றத்தாருடன் கூடி வாழ்ந்துக்கொண்டிருந்தார்கள். அப்படி இருக்குங்காலத்தில் அந்த வணிகனுக்குக் குஷ்டநோய் உண்டாயிற்று. அதனுல் அவன் மிகுந்த வருத்தத்தை அநுபவித்துக்கொண்டிருந்தான். ஆனல் இவன்மிகுந்த நற்குண நற்செய்கைகள் உள்ளவனனபடியால் பல பெரியோர்கள் சேர்ந்துவந்து இவனுக்குச் சொன்ன தானதர்மங்களை இவன் இடைவிடாமல் செய்துக்கொண்டுவந்தான். அப்படிச்செய்தும்அந்த நோய் எள்ளளவும்நீங்கவில்லை. வயித்தியர்கள்கொடுத்த உயர்ந்த ஔஷதங்களாலும் நீங்கவில்லை. இவ்விதமாக அந்தநோய்க்கு அநேகவிதமான பரிகாரங்களைச்செய்யச்செய்ய அது அதிகரித்துக்கொண்டே வந்தது. ஆகையால் அதின் துன்பத்தைப் பொறுக்கமுடியாதவனைச் சில பெரியோர்களை வரவழைத்து, ஐயன்மீர்! இந்தப் பிணியால் உண்டாகிற துயரத்தைச் சகிக்க என்னுல் முடியவில்லை. ஆகையால் என்னைக் கொண்டுபோய்க் கங்கையில் விட்டுவிடுங்களென்று பிரார்த்தனை செய்தார். அதைக்கேட்ட அவர்கள் இவன் பொறுக்கமுடியாத துன்பத்தையும் மனத்துணிவையும் ஆலோசனைசெய்து இவன் விரும்பினபடி நாம் செய்யாமற்போனல்

நமக்குப் பழியுண்டாகும் என்று எண்ணி இவனைக் கொண்டுபோய்க் கங்கைக்கரையில் வைத்து ஜலத்தில் விட்டுவிடத் தொடங்கும்சமயத்தில் அவ்விடத்தில் ஸ்ரீ ஹரிநாமபஜனையைச் சதா செய்துக்கொண்டிருக்கின்றவராகிய பத்மநாபவேதியர் நீராடவந்தார். அவருக்கு இங்கொரு கூட்டங் காணப்படவே அதைப்பார்த்துச் சமீபத்தில்வந்து என்ன சங்கதி நடக்கிறதென்று விசாரித்தார். அப்போது அங்கிருந்த அவர்கள் இவ்வணிகனுடைய வரலாறு முழுவதுஞ்சொன்னார்கள். அதைக்கேட்ட பத்மநாபவேதியர் அக்கூட்டத்தாரைநோக்கி, அநேகஜன்மங்களுக்குள் இந்த நரஜென்மம் மிகவுஞ் சிறந்தது. ஆகையால் இந்த ஜன்மத்தைக்கொண்டு மோட்சத்தை அடையலாம். அப்படியிருப்பதினால் இந்த ஜென்மத்தை வீணாக்கி ஜலத்தில்விழுந்து உயிர்விட்டால் நரகமேயுண்டாகும். இப்படியிருப்பதால் நீங்கள் அப்படி செய்யவேண்டியதில்லை. நான் இந்த நோய் ஒழிந்து சுகப்படும்படியான சிறந்த பரிகாரம்சொல்லுகிறேன். அப்படிச் செய்வீர்களானால் இவனுடைய நோயுந்தீரும். மோக்ஷலாபத்தையும் அடையலாமென்று சொன்னார். அதைக்கேட்ட அந்தக் கூட்டத்தாரெல்லாரும் அந்தப் பரிகாரத்தைச் சொல்லவேண்டுமென்று பலமுறை பிரார்த்தனை செய்ததின்மேல் அந்தப்பத்மநாபவேதியர் நீலமேகவண்ணனாகிய பகவானுடைய திருநாமமாகிய ராமனென்னும் ஈரட்சரமந்திரத்தை மூன்றுமுறை உள்ளன்போடு உச்சரித்தால் அந்தக்ஷணமே நோயானது நீங்கிவிடும். ஆகையால் நீங்கள் இந்தப் பரிகாரத்தைச் சீக்கிரமாகச்செய்யுங்களென்றுசொன்னார். அதன்பிரகாரமே அவர்கள் எல்லோருங்கூடி மூன்றுமுறைசொல்லி அவனைக்கொண்டுஞ் சொல்லுவித்தார்கள். உடனே அந்த நோயானது நீங்கியது. அவன் மிகவும் அழகுள்ளவனாகவிளங்கினான். பிறகு அவனும் அவனைக் கொண்டுவந்தவர்களும் அந்தப் பத்மநாபவேதியர் திருவடிகளில் சாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ்செய்து பணிந்து தோத்திரஞ்செய்து காசிப்பட்டணத்திற்குப் போய்விட்டார்கள். அவர்களிற் சிலபேர் கபீர்தாசருடைய திருமாளிகைக்கு வந்து அவரை உள்ளன்போடு வணங்கி தேவரீருடைய சீஷராகிய பத்மநாபவேதியர் தபோமகிமையிற் சிறந்தவர்; ராம என்னும் இரண்டு எழுத்தினால் மகா வியாதியைத்தீர்த்தருளினார். பிணியாளரையேயன்றி இவ்வூரிலுள்ளவர் யாவரையும் அந்த ராமநாமசங்கீர்த்தனபராக்கினர் என்று சொல்ல கபீர்தாசர் மிகவும் மனமகிழ்ந்து அந்த ராம என்னும் இரண்டெழுத்தின்பெருமையை எவராலுஞ்சொல்ல முடியாது. அந்த இரண்டெழுத்துக்களாகிய தாரக மந்திரத்தை உச்சரித்து முற்காலத்தில் சிவபெருமானவர் நஞ்சுண்டதினாலாகிய துன்பத்தைவிட்டு நீங்கினார். ஆகையால் அதுபோலச் சிறந்த மந்திரம் ஒன்றுமில்லை. ஆகையால் அதை ஒருதரஞ் சொன்னால் பாபவினைகளும் ஒருமிக்க நீங்கும். அதை மூன்றுதரஞ் சொன்னால் வணிகனுடைய நோய் நீங்காமலிருக்குமா? என்று அந்தப் பத்மநாபவேதியர் இந்த ராம மந்திரத்தின் அருமை பெருமைகளை அறியமாட்டானென்று சொல்லுவதைப் பத்மநாபவேதியர் காதிற் கேட்டுக்கொண்டேவந்து தமது ஞானாசிரியராகிய கபீர்தாசருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி, எந்தக்காலத்திலும் அரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு பேரின்பத்தையடைந்து வாழ்ந்திருந்தார். என்று சொல்லக் கேட்டவுடனே அவரவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்றார்கள்.

பத்மநாபவேதியர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநமஃ

முப்பத்தோராவது

# ரோகிதாசர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

போகத்தா லுண்டாகும் புதுமைகளைப் போக்கி
ரோகத்தால் மெலியாமல் ரூட்சையா னலியாமல்
ஆகத்தால் வணங்கின வன்பர்கட் கருள்செய்த
நாகத்தான் பொன்னடியை நாம்வணங் குவமே.

இவ்விதமாகச் சென்றவர்கள் யாவரும் அன்று இரவு அவரவர்களுடைய இருப்பிடத்தில் நித்திரை செய்து பொழுது விடிந்தவுடன் எழுந்து நித்திய கடன்களைமுடித்து எல்லோரும் ஒன்றாகச்சேர்ந்து நாபாஜிசித்தரிடம் வந்தார்கள். அந்தச்சமயத்தில் நாபாஜிசித்தர் வழக்கம்போலக் காலைக்கடனை முடித்து ஸ்ரீ எம்பெருமானர் திருக்கோயிலிற்சென்று ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியைவணங்கி, ஓ எம்பெருமானே! தேவரீர் அடியேனுடைய பிறவிக்கடனை ஒழிப்பது என்றைக்கோ? அதை அறிகிலேன். ஆனால் அது எனக்குத் தெரியாவிட்டாலும் பிறவியைமட்டும் ஒழித்தருளவேண்டும் என்று குறையிரந்துநிற்கும் சமயத்தில் சித்தர்களெல்லாரும் அவ்விடம்வந்து நாபாஜிசித்தரைக்கண்டு வணங்கி, ஓ குருநாதா! பாசக்கடலை அறுக்கும் பரமாத்துமா! பக்தவற்சலனை இடைவிடாமல் வணங்கிப் பரமபதத்தை எளிதிலடைய முயற்சிசெய்யும் பரமகாருண்யனே! அடியோங்களுக்கு இதுவரைக்கும் அனேக பக்தர்களுடைய விஜயங்களையெல்லாம் உள்ளங்கைநெல்லிக்கனியைப்போல் எடுத்து அருளிச்செய்தீர். அப்படியிருந்தும் எங்களுடையமனம் உறுதியடையவில்லை. ஆகையால் இன்றைக்கு யாருடைய சரித்திரத்தையாவது எங்களுக்குச்சொல்லி எங்களுடையமனதை உறுதிப்படுத்துவீர்க ளென்று கோருகின்றோம் என்று வணங்கிச் சொன்னார்கள். அதற்கு நாபாஜி சித்தர் மிகவும் மனமலர்தலையடைந்து அப்படியே சொல்லுகிறேனென்று சொல்லத்தொடங்கினர்.

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் தோல்வேலை செய்பவனாகிய ஒரு சக்கிலியிருந்தான். அவனோ அந்தச்சாதியில் உயர்ந்தவன். அல்லாமல் ஆத்மானுபவகுணமுள்ள வைஷ்ணவசமயத்தில் மிகவும் விருப்பமுள்ளவர். ஜீவகாருண்யமுள்ளவர். திருமாலாகிய நாராயணமூர்த்திக்கு உயிர்போல்பவர். சகலஜீவர்களையும் ஒரேதன்மையாக நினைப்பவர். தயையுள்ளவர். ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் திருவடியாரைக்கண்டால் சாஷ்டாங்கமாய் விழுந்து தண்டம் சமர்ப்பிக்கும் அபிமானமுள்ளவர். திவ்விய தேசங்களுக்கு யாத்திரை செய்பவரைத் தம்மாலானவரைக்கும் உபகாரஞ்செய்பவர். இப்படிப்பட்ட இவர் நாள்தோறும் பிராதக்காலத்தில் எழுந்து முன்னதாகத் தம்முடைய வயிற்றினிடத்தில் மூண்டு எரிகின்ற உதராக்கினியை ஆகாராதிகளால் தணித்துக்கொண்டு பின்னர் நீராடி பகவதாராதனஞ்செய்து அவர்களை உபசரிப்பர். ஆகையால் இந்தக் கலியுகத்தில் வருந்துகின்ற பசிநோயானது அதிகரித்தால் மனஞ்சலிக்கும். அதனால் உண்மை யுணர்வு கெடும். அவ்வுணர்வின் கெடுதி பகவத்பக்திக்கு விரோதமாகும். என்று இவர் முன்னதாகப் பசியைத் தணித்துக்கொண்டு பின்னர் பகவதாராதனம் செய்வது இவருக்கு வழக்கம். ஆகையால் இவரை அவ்வூரார்யாவரும் ரோகிதாசர் என்று பேரிட்டுக் கூப்பிட்டுக்கொண்டுவருவார்கள். இப்படிப்பட்டவர் ஒருநாள் ஒருதோல்துருத்தியில் ஜலத்தை நிரப்பிக்கொண்டு மடி ஆசனம் முதலிய

யாவற்றையும் தோலினலேயே உண்டாக்கிக்கொண்டு, அவ்விடத்தில் பரிசுத்தமாகிய பிருந்தாவனத்திற்குப்போய் அங்கு இன்னும் நான்குவேதங்களும் காணலாமென்று முயற்சிசெய்தும் அறியப்படாத ஸ்ரீமந் நாராயணனை துதிசெய்துக்கொண்டிருந்தார். அந்தச்சமயத்தில் இந்த ரோகிதாசரானவர் பகவத்தியானஞ்செய்துக்கொண்டிருந்த அந்த இடத்திற்கு ஒரு பிராமணன்வந்தான். அப்போது அந்த ரோகிதாசரானவர் அப்பிராமணனுக்குத் தம்மால் செய்யக்கூடிய உபசாரங்களை யெல்லாஞ்செய்து மிகவும் புகழ்ந்தனர். அந்தச்சமயத்தில் அந்தப் பிராமணன் இவரை நோக்கி, ஐயா ரோகிதாசரே! சாளக்ராம பூசைசெய்தால் எல்லார்க்கும் மிகவுஞ் சிறந்த காரியமேயாகும். அப்படிப்பட்ட சாளக்ராமத்தை நீர் தோலின்மீதுவைத்துப் பூசைசெய்வதுசரியாகுமா? இப்படிச் செய்வது உனக்குத்தகுமா? இந்தச் சாளக்கிராமம் பிராமணன் முதலியவர்களால் பூசிக்கப்படுவதல்லவா? என்று வினவினர். அதற்கு ரோகிதாசர் அந்தப் பிராமணனைப்பார்த்து, ஓ அந்தணரே! நீர் சொல்லுகின்ற வார்த்தை மிகவும் நன்ருகயிருக்கின்றது, எக்காலத்திலும் சர்வ பொருள்களுக்குள்ளும் அந்தரியாமியாய்கலந்து நிறைந்திருக்கிற பகவானுன ஸ்ரீமந் நாராயணனைத் தியானம் பண்ணுகிற மனமானது இருப்பதற்கு இடமாயிருப்பதுபோலே, பரிசுத்தமான ஆத்மாக்கள்தங்கியிருப்பது தோலாற் செய்யப்பட்ட சரீரமே என்று சொன்னர். அதுகேட்ட பிராமணன் ஓ ரோகிதாசரே! முப்புரிநூலாகிய பூணூலைத்தரித்த பிராமணரே யல்லாமல் மற்றவர்கள் பகவதாராதனஞ் செய்ய யோக்கியராகமாட்டார்கள். ஆகையால் நீ இப்படி செய்யவேண்டாம் உனக்குப் பாவம் சம்பவிக்குமென்று சொன்னர்.

அதைக்கேட்ட ரோகிதாசர் அந்தப் பிராமணனைப்பார்த்து, ஓ பிராமணரே! நீர் என்னிடத்தில் உபவீதமிருப்பதை நீர் அறியமாட்டீர் என்றுசொல்லித் தம்முடைய நெஞ்சைப்பிளந்தார். அப்போது உபவீதம் வெளிப்பட்டது. அதைக்கண்ட பிராமணன் இது என்ன ஆச்சரியமென்று ரோகிதாசரை உள்ளபடியே திரிகரண சுத்தியோடு வணங்கி, தாசரே! முப்புரிநூலால் என்ன பிரயோசனம்? பரிசுத்தமான மனத்தையுடையவர்கள் பகவதாராதனஞ் செய்யலாம். அதற்குத் தடையில்லை என்று சொல்லித் தன் வீட்டுக்குப்போய்விட்டான். அந்தப் பிராமணன் போனபிறகு ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினுடைய அனுக்கிரகத்தால் ரோகிதாசருடைய மார்பு பிளப்புண்ட இடந்தெரியாதபடி மறைந்து இரண்டுபிளப்பும் ஒன்றுபட்டுப்போயின. பின்னர் ரோகிதாசரும் பகவத்தியானவிசேடராய் எழுந்தருளியிருந்தார் என்றுசொல்லி நாபாஜிசித்தர் தம்முடைய இருப்பிடஞ்சென்ருர். மற்றைய சித்தர்களும் அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அவ்வவர்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்ருர்கள்.

ரோகிதாசர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீசற்குருவேநமஃ

முப்பத்திரண்டாவது

# மாண்கோஜிபோதலே சரித்திரம்.

துதி கவி.

மாண்கோஜி போதலே சரிதத்தை நிலவுலகில்
மன்னியே கற்றுணர் மானிடர்க ளென்றும்
ஆண்மகவு நனிபெறுவ ராண்டுகளு மிகவடைய
ரஞ்ஞான மதையகல்வ ரெஞ்ஞான்று மிதுதவிர
சேண்மகவான் பதியமர்வர் நால்வகையா மருள்பெறுவர்
திருமாலி னடிமலரை யொருவாத மனமுறுவர்
ஆண்மையினை மிகவடைவர் அன்புமனை மும்கொள்வர்
அன்னவா கனனுட்டை யண்மியும் வாழ்ந்திடுவர்.

இந்தப்பிரகாரஞ் சென்ற சித்தர்களெல்லாம் மறுநாள் உதயத்தில் எழுந்து நித்தியகடன்களைமுடித்துக்கொண்டு நாபாஜிசித்தரிடம் வந்து, ஓ சுவாமி! அடியேங்களுடைய ஜென்மவேரை எக்காலத்திலறுத்து எங்களை முத்தியென்னுங் கரையேற்றுவீர் என்று பலவாறு பிரார்த்தித்து வணங்கினர். அது கேட்ட நாபாஜிசித்தர் மற்றைய சித்தர்களைப் பார்த்து, ஓசிடர்களே! நீங்கள் நான் சொல்லிக்கொண்டு வருகின்ற சரித்திரங்களை திரிகரணசுத்தியோடு சிரவணித்துக் கொண்டுவந்தால் கூடிய சீக்கிரத்தில் மோட்சத்தை யடைவீர். தவிர ஸ்ரீமந்நாராயணனுடைய சரித்திரங்களைக்கேட்பதைவிட அவனுடைய திருவடிகளை யடைந்த பாகவதர்களுடைய சரித்திரங்களைக் கேட்பது கோடிபங்கு அதிகமாகும். ஆகையால் நான் சொல்லுகிறபடி கேளுங்களென்று சொல்லத்தொடங்கினர்.

கேட்டீர்களோ சித்தர்களே! இந்தப்பூலோகத்தில் மகா சிறப்பினையடைந்த தாமணம் என்னும் இயற்பெயரினையுடைய பாலேகாட்டு என்னும் ஒரு நகரம் இருந்தது. அதில் பிரம்ம-க்ஷத்திரிய-வைசிய சூத்திரர் என்னும் நான்கு வருணங்களில் சூத்திர வருணத்தில் அவதாரஞ்செய்து மாண்கோஜிபோதலே என்னும் திருநாமம் பூண்டவர் ஒருவர் இருந்தார். அவருடைய குடிப்பேரோ ஜக்தாப் என்று சொல்லுவார்கள். அவருடைய கற்பிற்சிறந்த மனைவியார் பெயர் மமதாயி என்பவர். இவர்களோ,

"கற்றாரென்னும் பதினுலுலகுங்
கண்டாரெனினுந் தண்டாமிருடற்
றற்றாரெனினுந் திருமாலடியா
ரல்லாதவர்வீ டில்லாதவரே."

என்னும் வாக்கியத்தை நன்றாயுணர்ந்து ஸ்ரீமந்நாராயணருடைய திருவடிசம்மந்தத்தில் மேல்பட்டு விளங்கினர். இவர்கள் இருவருக்கும் ஒரு புதல்வர் அவதரித்தார். அப்புத்திரனுக்கோ ஏமாஜி என்று நாமகரணஞ் செய்தார்கள். பிறகு தக்க நல்லாசிரியனிடத்தில்வித்தைகற்பித்து தகுந்தபருவத்தில் தாங்கள் குடிக்குத் தகுந்தகுடியில் ஒரு நற்குணமுள்ள பெண்ணைப்பார்த்து திருக்கலியாணம்முடித்துவைத்தார்கள். அந்தப் பெண்ணின்பெயரோ பாக்ஷி என்பது. இந்தநால்வரும் உலகவாழ்க்கையானது மாயா சம்பந்தப்பட்டதென்று விசாரித்தறிந்து, உலக வாழ்க்கையில் விரக்தர்களாய் அகோராத்திரம் பாண்டுரங்கப் பெருமானுடையதிருவடிகளை இடைவிடாமல் தியானிப்பவர்களா யிருந்தார்கள். ஆனால் இவர்கள் தங்களுடைய வீட்டுச்செலவுக்கு வேண்டியவரைக்கும் சேகரித்து வைத்திருப்பார்கள். இவர்களில் மாண்கோஜிபோதலே என்பவர் ஏகாதசிகள்தோறும் ஸ்ரீபண்டரிபுரத்திற்குத் தவறாமற் போய் ஸ்ரீகண்ணபிரானைத் தரிசித்து அன்புடன் ஸ்தோத்திர ரூபமாகத் துதிசெய்து கண்விழித்து மறுநாள் காலை துவாதசிதினத்தின் உதயத்தில் பிராமணர்களுக்கு அன்னதானஞ் செய்து பிறகு

ஏழைகளுக்கும் அப்படியேசெய்து மறுநாள் பாலேகாட்டில் வந்து சேர்ந்து வாழ்ந்திருப்பார்கள். இவ்விதமாக நெடுநாள் வரைக்கும் நடந்தேறி வருங்காலத்தில் மேகமானது கால மழை பெய்யாமையால் சிறுவிலைக்காலம் வந்து உயிர்களையெல்லாம் மிகவும் வருத்தின. இவ்விதமாக உயிர்களெல்லாம் பசிப்பிணியினல் வருத்தப்படுவதைமாண்கோஜிபோதலேயென்பவர்பார்த்து தம்முடையதேவியாரைப்பார்த்து பெண்ணே! இவ்வுலகத்திலுள்ள உயிர்களெல்லாம் பசிப்பிணியால் இறந்தொழிய, நாம் மாத்திரம் சுகமாயிருப்பது அழகாகுமா? அழகாகாது. ஆகையால் ஆதுலர்க்குச்சாலை, அறுசமயத்தார்க்குண்டி, ஓதுவார்க்குணவு, ஆவுக்கு வாயுறை முதலிய முப்பத்திரண்டு தருமங்களில் கூடுமான தர்மங்களை நம்மாலியன்ற அளவு செய்வதல்லவா இல்லறவாழ்க்கைக்கு அழகு. ஆகையால் அப்படி செய்பவர்களுடைய பாவங்குறைந்து உண்மைஞானமானது விர்த்தியாகும். அங்ஙனம் விர்த்தியாகவே பிறவிநோயானது நீங்கும். அப்போது பாண்டுரங்கபகவானுடையகிருபைக்குப் பாத்திரராகலாம். என்று சொல்லக்கேட்ட மனைவியாரானவர் அப்படியே செய்யலாமென்று அன்னதானம் செய்வதுந்தவிரகோதானமுஞ்செய்து யாவரையும்உள்ள மகிழச்செய்து பகவத்தியானஞ்செய்துகொண் டிருக்குங்காலத்தில் மாண்கோஜிபோதலே என்கிற இந்தப் புருஷாகாரிக்கு எதிரே ஸ்ரீகண்ணபிரானனவர் பிரத்தியக்ஷமாகி நின்றார். இவ்வற்புதத்தைக் கண்ட மாண்கோஜிபோதலே என்பவர், தரிசனந்தந்த பாண்டுரங்கபகவானுடைய ஸ்ரீ பாதங்களை வணங்கினர். அப்போது பகவானும் இவருக்குக் கிருபாகடாட்சஞ்செய்துபோய்விட்டார். அதன்பிறகு ஸ்ரீமந்நாராயணருடைய பக்தர்களுடன் சேர்ந்து ஸ்ரீஹரிதினத்தில் பாண்டுரங்கபகவானைச் சேவை செய்யும் பொருட்டு ஸ்ரீபண்டரிபுரத்திற்குப் போகும்போது இவருடைய தேவியாரானவர் செலவுக்குப் பொருள் சிறிதுமில்லையே யென்று மனவருத்தப்பட்டு ஜீரணவஸ்திரத்தை யுடுத்து விறகொடித்து விற்று அதனல் கிடைக்கும் பொருளைக்கொண்டு நாளை துவாதசியைநடத்துவோம் என்று எண்ணிக்கொண்டு போகும்வழியில் கிடைத்த விறகுகளைக் கட்டிச் சுமையாகத்தலைமேற்சுமந்துகொண்டுபோய் ஸ்ரீபண்டரிபுரத்துவீதியில்விற்று, அதனல்கிடைத்த பொருளைக்கொண்டு கணவனுந்தானுமாக ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைவணங்கி வாழ்த்தி சந்திரபாகாநதியில் நீராடி ஒரு பிராமணனுக்கு ஒருகாசு கொடுத்துச் சங்கற்பஞ் செய்வித்து, ஒருகாசுக்குத் திருத்துழாய் முதலியவை வாங்கிக்கொண்டு எம்பெருமானுடைய சந்நிதிக்குவந்து விடலபெருமானைப் பூசித்துத் தழுவிக்கொண்டு சாஷ்டாங்கமாகத்தெண்டன் சமர்ப்பித்து, அன்று இராத்திரிமுழுவதும் கண்விழித்து ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்ருந்து விடியற்காலத்தில் எழுந்து சந்திரபாகா நதியில்நீராடினபின்னர் மாண்கோஜிபோதலேயானவர் தமதுதேவியாரைப்பார்த்து, ஒ பெண்ணே! இன்று ததியாராதனத்துக்குப் பொருளில்லையே. இதற்கு என்னசெய்யலாம்என்றுகேட்டார். அதைக்கேட்ட தேவியார் விறகுவிற்ற பொருளில் செலவழிந்தது போக மிகுந்திருக்கிற பொருளைக்கொண்டு நடத்திவிடலாமே யென்று சொல்லி அந்தப்பொருளில் அரைச்சேர் அரைத்தமாவை வாங்கித் துணியில் முடிந்துகொண்டு கணவருடைய கையில் கொடுத்தார். அதை அவர் வாங்கிக்கொண்டு அந்தோ! அறுசுவையோடு உண்ட பிராமணர்கள் இந்த அற்பமாகிய மாவை உண்பார்களா? என்று எண்ணிக்கொண்டு இருக்கும்போது இவரது கருத்தையறிந்த பாண்டுரங்கபகவான்ஒருகிழப்பிராமணவேடங்கொண்டு தன்னுடையதலையில்மழையகுல்லாவும் கையில் தடியும் இடுப்பில் கோவணவுடையுமாக இவருக்கு எதிரில் எழுந்தருளிவந்து இவரைப்பார்த்துச்சொல்லுகின்றர். ஐயா பக்தரே! நீர்நெடுநாட்களாகக்கொடுக்கிற அன்னத்தைத் திருப்தியாக உண்டு உம்மை ஆசீர்வதித்துக்கொண்டு ஜீவனஞ்செய்திருக்கிறேன். ஆனல் இந்த ஊரிலுள்ளவர்கள் செல்வர்க்குக் கொடுக்கிறர்களே யல்லாமல் என்னைப்போன்ற ஏழைகளுக்குக் கொடுப்பதில்லை. ஆகையால் உம்மிடத்தில் எப்படிப்பட்ட உணவிருந்தாலும் ஏற்றுக்கொள்ளுகிறேனென்று சொல்லக் கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்து இந்த அற்பமாகிய மாவைவாங்கி உண்ணத்தகுந்தவர்கள் இந்த உலகத்தில்யாவரிருக்கின்றனர்? ஆகையால் இவர் ஸ்ரீமந்நாராயண கிழப்பிராமணன் வேஷந்தாங்கிவந்தாற்போல் காணப்படுகிறதென்று ஆழ்ந்த சிந்தையோடு நினைத்துத் துணியில் முடிந்திருந்தமாவை மிகவும் வெட்கத்தோடு அவிழ்த்து அந்தப்பிராமணன் கையில் கொடுத்து நமஸ்காரம்பண்ணிச் சொல்லுகின்றர். ஐயரே! இந்த மாவையல்லாமல் உனக்குக்கொடுப்பதற்கு என்னிடத்தில் வேறு பொருளில்லை. ஆகையால் இந்தமாவை மிக்க இஷ்டத்தோடு அமுதுசெய்தருள வேண்டுமென்று பிராத்தனைசெய்தார். அதைக்கேட்ட பிராமணர் மாண்

கோஜிபோதலேவைப் பார்த்து தாசரே! நீர் இது விஷயத்தில் மனம்வருத்தப்படவேண்டியதில்லை. நீர் அன்புடன் கொடுத்த மாவானது தேவாமிர்தத்தினும் சிறந்ததென்று சொன்னார். அதற்கு மாண்கோஜிபோதலேயானவர் அந்த வெறும்மாவை இந்தப் பிராமணர் எப்படி உண்ணுவார் என்று ஆலோசனை செய்துக்கொண்டிருக்குஞ்சமயத்தில் பிராமணரானவர் இவரைப்பார்த்து, ஐயா தாசரே! இந்த மாவை அடைசுட்டு உண்ணுகிறேன் என்றனர். அதைக் கேட்ட மாண்கோஜி நெருப்பு மூட்டுதலும், பிராமணர் அங்குள்ள சந்திரபாகையில் நீராடி ஈரவஸ்திரத்தோடுவந்து அந்த மாவைப்பிசைந்து அடைதட்டிக் கொண்டிருப்பதை யறிந்த ருக்மணிதேவியானவர் இந்தக்கிழப்பிராமணருக்குத் தகுந்த ஒரு கிழவியாகி நடைதளர்ந்து கையில் ஒரு தடிபிடித்துக்கொண்டுவந்து இந்தப்பிராமணருக்குச்சமீபமாக நின்று இவர் அடைதட்டுவதைப்பார்த்து நகைத்து எக்காலத்திலும் என்னைவிட்டுப்பிரியாமலிருந்த நீர் இன்று பிரிந்துவந்து இவ்விடத்தில்அடைதட்டுகிறீரே! இது என்ன புதுமை! என்னிடத்தில்கொடும்; நான் சுட்டுக்கொடுக்கிறேன் என்றுசொல்ல அதைக்கேட்ட அவர் அப்படியேகொடுத்துவிட்டு சமீபமாகவிருந்து பார்த்துக்கொண்டிருந்தார். அப்போதுமாண்கோஜி போதலேயானவர் நாம்கொடுத்த இந்த மாவானது ஒருவருக்கேபோதாது. அப்படியிருக்க இவர்களிருவரும் எப்படி உண்பார்கள்? என்று ஆலோசித்துக் கொண்டிருக்க, அந்தப்பிராமணக்கிழவி அடையைச் சுட்டுவைக்க, அதைக்கண்ட பிராமணர் இவர்களைப் பார்த்து எம்மோடு நீங்களும் உண்ணவாருமென்று தாசரையழைக்க, ஒ சுவாமி! நீங்களிருவரும் உண்டு மிச்சமான உச்சிட்டத்தைத் தருவீரானல் நான் உண்பேனென்றுசொன்னார். அதைக்கேட்ட பிராமணரும் தம்முடைய தேவியாருடன் அமுதுசெய்யும் போது ஆகாசவீதியில் சித்தர் - முனிவர் - தேவர் ஆகிய இவர்களெல்லாருந் திரண்டு நின்று வாழ்த்தி யோகம்முதலியவற்றைச்செய்வோர் அமுதுண்ணக் கடவீரென்று பிரார்த்தனை செய்தால் சந்தோஷப்பட்டு அமுது செய்யாத பகவான் ஒரு அன்பர்வீட்டில் சிறிதும் உப்பில்லாத அடையைச்சுட்டு, தம்முடைய தேவியாராகிய ருக்மணிபிராட்டியாரோடு உண்டு அன்பரை மகிழச்செய்வதை நீங்கள் எல்லோரும் பார்த்திர்களோவென்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருக்க, எதிலும் பற்றில்லாத பகவான் பிராட்டியாரோடு அமுதுசெய்தபிறகு சேஷத்தைத் தாசர்கையிற் கொடுத்து மறைந்தார். இவர் அந்தச் சேஷத்தை தமது தேவியாரோடு அருந்தின பிறகு சந்நிதிக்குவந்து பகவான் உல்லாசமாய் நிற்பதைக்கண்டு வணங்கி எல்லாரும்பார்க்கும்படி வேதியர் உருவங்கொண்டு ஸ்ரீபெரியபிராட்டியாரோடு எழுந்தருளி அடியேன் தந்த வெறும்மாவை அடைசுட்டு அமுதுசெய்துண்டு சந்தோஷமடைந்து சேஷத்தைஅடியேனுக்குக்கொடுத்துவிட்டுக்கோலாகலஞ்செய்துபோனரே. என்பாக்கியமே பாக்கியம். இனி எனக்கு ஒரு குறைவுமில்லையென்று சொன்னார். அதைக்கேட்ட பகவானனவர் அனேக தனவான்கள் ததியாராதனஞ்செய்யுங்காலத்தில் நானும் போவது வழக்கந்தான். என்னை அவர்கள் மதிக்கிறதில்லை. அதை நீ காணவேண்டுமானல் நான் காட்டுகிறேன் என்று சொன்னர். மாண்கோஜி போதலேயானவர் அதைக்கேட்டு அப்படியே காணவிரும்பினேன் என்றுசொல்லி அவ்விடத்திலிருந்தார். அன்றையதினத்தில் ஒருபணக்காரன் ஆயிரம் பிராமணருக்கு இன்றையதினத்தில் அன்னதானஞ்செய்கிறேனென்று சொல்ல, அநேக பிராமணர் திரண்டுவந்து அவனுடைய வீட்டிற்கு வெளியேயிருக்க ஸ்ரீ பண்டரிநாதரும் ஒரு கிழப்பிராமணராகி இந்தத் தாசரையும் அழைத்துக்கொண்டு அவ்விடத்திற்குப்போனார். அப்போது அந்தப்பணக்காரன்ஆயிரம்பேரையும் எண்ணிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் தாசரை வெளியிலே நிறுத்தி இவ்விடத்தில்நடக்கிற காரியங்களையெல்லாம் பார்த்துக்கொண்டிருமென்று விட்டுத் தாம் வீட்டுக்குள்ளேபோய் அந்தப் பணக்காரனைப் பார்த்து என்னுடைய பசிக்கு அன்னமிடவேண்டுமென்றார். அதற்கு அந்தப் பணக்காரன் இவ்விடத்தில் உமக்கு அன்னங் கிடையாது. நீ வெளியே போவென்று சொன்னன். அதுகேட்ட விருத்தவேதியராகிய பகவானனவர், அப்பா! ஆயிரம்பேருக்கு அன்னம்போடுகின்றீரே; எனக்கு அன்னமில்லையென்று சொல்லுவது நியாயமாகுமா? என்று சொன்னர். அதைக்கேட்ட அந்தப் பணக்காரன் ஆயிரம் பேரை எண்ணிக்கொண்ட பிறகு நீ வந்தாய். இன்னும் உன்னைப்போல் எத்தனைபேர் வருவார்கள் அவர்களெல்லாருக்கும் அன்னங்கிடைக்குமா? ஆயிரம்பேருக்கு ஆகும்படியான அன்னந்தானேதயாராயிருக்கின்றது. அதற்கும் அதிகமாக எங்கேயிருந்து வரும்? ஆகையால் நீ வெளியேபோ என்று சொன்னன். அப்படி சொல்லியும் இந்தக் கிழவேதியர் போகாமல் ஐயா! நானே கிழவன்; மேலும் பசியாயிருக்கின்றேன் என்று சொல்லி ஒரு இலையில் உட்கார்ந்தார். அதைக்கண்ட அந்தப்பணக்காரன் தன்

னுடைய வேலைக்காரரைப் பார்த்து ஊழியர்களே? இந்தப் பிராமணன் மிகவும் பிரட்டு செய்கிறான், ஆகையால் இவனைத்தடியாலடித்து வெளியே தள்ளி விடுங்களென்றுசொன்னான். அதைக்கேட்ட வேலைக்காரர்கள் அப்படியே இவரைக் கால் கை சிகை என் பவைகளோடு சேர்த்துப் பிடித்து தூக்கிக்கொண்டு வந்து வெளியே விட்டுவிட்டார். அந்தக் கிழப்பிராமணர் மெதுவாகஎழுந்து சரீரம்வாடித் தளரவாடிக் கொண்டு நடந்துபோய் விட்டார். அதன்பிறகு ஆயிரம் பிராமணருக்கும் இலைகளில் அன்னம் பல காரவகை பதார்த்தவகை முதலியவை பரிமாறி உண்ணுங்களென்று பணக்காரன் சொன்னான். அப்படியே அவர்கள் உண்ணத் தொடங்கும்போது ஒரு பெருங்காற்றுண்டாகி மண்ணைவாரிக்கொண்டு வந்து அவர்களுடைய அன்னம் முதலியவைகளில் கலந்துவிட்டது. அதனைக்கண்டவேதியர் எல்லாரும் எழுந்துபோய் விட்டார்கள். இவைகளை யெல்லாம் கவனித்துப் பார்த்துக்கொண்டிருந்த மாண்கோஜி போதலேயென்னுந் தாசருடையமுகத்தைப் பகவானவர் பார்த்து இங்கே நடந்தசெய்திகளைப் பார்த்தீரல்லவா? உலகமுழுமையும் டம்பத்தை யநுசரித்தேயன்றி ஏழைகளைக்காப்பாற்றுவதில்லை. நீ மாத்திரம் அன்புள்ளவனாகையால் உன்னுடைய மேலான அன்பின்பொருட்டு உம்முடைய மாவை வாங்கி அடைதட்டிஉண்பேனென்றுசொன்னதைக்கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் பகவானே! உம்முடைய மகிமையைத் தெரிந்துக்கொள்ள வல்லவர் இவ்வுலகத்தில் யாவரிருக்கின்றனர்? என்று கைகுவித்து வணங்கி தோத்திரஞ்செய்து விடைபெற்றுத் தாமிருந்துவாழுந் தாமணத்துக்குப் போகப் புறப்பட்டு ஒருகாட்டில்போகும்போது அதிகதாகமுண்டாய் நீர் கிடைக்காமல் வருத்தப்படுவதை யறிந்த ஸ்ரீகண்ணபிரான் ஸ்ரீருக்மணிதேவியோடு இந்தத் தாசருடைய சாதியார்களைப்போல வேஷம்பூண்டு இவர் வரும்வழியில் ஒருவீடுண்டாக்கிக்கொண்டு இருவரும் தயிரையும் அடையையும் அமைத்துவைத்துக்கொண்டு தாசர் தேவியாரோடு வருவதைக் கண்டு நீங்கள் பண்டரிபுரத்திற்குப்போய் திரும்பி வருகிற ஹரிதாசர்களாகையால் எமது சிறுகுடிசைக்குள் எழுந்தருளி நாங்கள் கொடுப்பதையுண்டு எம்மைப் பரிசுத்தராக்கி உம்முடைய ஊருக்கு நீங்கள் எழுந்தருள வேண்டும் என்று பிரார்த்தித்தார். அதுகேட்ட மாண்கோஜிபோதலேயானவர் இவ்விடத்தில் மனுஷசஞ்சாரமேயில்லை. இவர்கள் இவ்விடத்தில் எதிர்ப்பட்டது புதுமையாயிருக்கிறது என்று அவர்களைப் பின்பற்றி அவர்களுடைய குடிசைக்குப்போய் அவர்கள்கொடுத்ததையுண்டு, ஆயாசம் நீங்கி தம்முடைய ஊருக்குப்போகப் புறப்பட்டுத் திரும்பிப்பார்க்கும்போது அவர்களில்லாமல் மறைந்துபோனதனால் மாண்கோஜிபோதலேயானவர் அந்தோ! நாம் இக்காட்டிற்கு வரும்போது தாகத்தினால் வருந்தினதை இறைவனுணர்ந்து இப்படிவந்து நம்முடைய தாகத்தை ஒழித்து விட்டுப் போனாரென்று மனத்தில் மிகவுஞ் சந்தோஷித்துத் தாமும் தம்முடைய தேவியுமாகக் கூடி அந்த வழிமுழுமையும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைத் துதிசெய்துக்கொண்டே சென்று தம்முடைய தாமணத்தைச் சேர்ந்தார்கள். இப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் இவர் தாம் பயிரிட்டுவருகின்ற சோளக்கொல்லையைக் காத்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில் பட்சிக்கூட்டங்களெல்லாம் ஒன்றுய்த்திரண்டுவந்து அந்தச்சோளத்தைத்தின்ன அவர் அவைகளை யோட்டாமல் அவைகளுக்குள்ளே ஸ்ரீமந்நாராயணர் நிறைந்திருக்கின்றான் என்பதை உண்மையாக உணர்ந்தவராகையால் அப்பட்சிகளெல்லாம் இச்சோளக்கதிர்களை உண்டி பசியாறுவதே நன்மையாகுமென்று இருப்பவராகியும், அவ்விடத்தில் வருவோர்களுக்குச் சோளக்கதிர்களைத் தானே பறித்துக் கொடுத்து அவர்களுடைய மனத்தை மகிழச் செய்துகொண்டிருப்பவராயும் சதா ஸ்ரீமந்நாராயணசங்கீர்த்தனம் செய்துகொண்டிருப்பவராயும் இருக்கும்போது இவருடைய தேவியார் அந்தச் சோளக்கொல்லையைக் காவல் காத்துக் கொண்டிருக்கிற இவரது நாயகராகிய மாண்கோஜி போதலேவுக்கு உணவு கொண்டுபோய் இவரை உண்பித்தபிறகு பறவைகள் சோளத்தைத் தின்பதையும் இவர் அவைகளை ஒட்டாமல் மனஞ் சந்தோஷித்திருப்பதையும் கண்டு; நாயகரைப் பார்த்து ஐயரே! நீர் இந்த சோளக்கொல்லையில் விளைவதையெல்லாம் அந்நியருக்குக் கொடுத்துப் பாழாக்கிவிட்டால் நீதிமுறை தவறாத அரசாளும் அரசனுக்கு எப்படி வரிசெலுத்துவீர்? அன்றி, நம்முடைய இல்லறவாழ்க்கை எப்படி நிறைவேறும்? இனி இங்கேயிருந்துகொண்டு இவ்விடமாக உம்முடைய கையினால் கொடுத்துக் கொண்டு வருவீரானால் பாண்டுரங்கன்மேல் ஆணையுண்டு என்றுசொல்லி தமது வீட்டிற்கு அழைத்துக் கொண்டுபோய் வீட்டிலிருக்கச் செய்தார்.

அப்போது பண்டரிபுரத்திற்கு யாத்திரையாகப் போகின்றவர்களில் சிலபேர் அங்கேவர, இவர்

அவர்களைநோக்கி இவர்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணருடைய ஆத்மார்த்த பக்தர்களென்று அன்பின்மிகுதியால் அவர்களையெல்லாம் உள்ளன்போடு வணங்கி வாழ்த்தி, நீங்கள் இவ்விடத்திற்குவர அடியேன் என்ன தவஞ்செய்தேனோ? என்று சொல்ல, அங்குவந்த வேதியர்களில் ஒருவர் இவருக்குச்சமீபமாகவந்து நின்று, ஐயா! நீர் விளைவிக்கும் சோளக்கதிர்களில் எங்களுக்குக்கொஞ்சங்கொடுத்தால் நாங்கள் அதையுண்டு எங்கள்பசியைத் தீர்த்துக்கொள்ளுவோமென்று சொன்னார். அதைக்கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் இந்தப் பிராமணரைப் பார்த்து, ஓ ஐயரே! என்னுடைய மனைவியானவள் ஆணையிட்டிருக்கின்றாள். ஆகையால் அதை என் கையால்கொடுக்கக்கூடாது. ஆகையால் நீங்கள் உம்முடைய கையால்வேண்டியமட்டும் ஒடித்துக்கொள்ளும் என்று சொன்னார். அவரும் அப்படியே செய்தார். இவ்விஷயத்தைப் பார்த்துக்கொண்டிருந்த மற்றப் பிராமணர்களும் அவர்கேட்டவாறே மாண்கோஜிபோதலேவைக் கேட்க, அவர்களுக்கும் அவ்வாறே ஒடித்துக்கொள்ளுங்களென்று உத்தரவு கொடுத்தார். அவர்களும் அப்படியே ஒடித்துக்கொண்டு போயினர். இவ்விதமாக யாவரும் மனஞ்சந்தோஷிக்கும்படி உத்தரவுகொடுத்ததனால் சோளக்கொல்லையானது பூர்வத்தில் குரங்குச்சேனைகளால் மதுவனம் அழிந்தாற்போல அழிந்தது வந்து கேட்டவர்களுக்கெல்லாம் ஒடித்துக்கொள்ளும்படி இவர் உத்திரவுகொடுத்த வரலாற்றையும் அவர்கள் கதிர் ஒன்றேனுமில்லாமல் ஒடித்துப் பாழாக்கினதையும் பார்த்தவர்கள் யாவரும் இந்த மாண்கோஜிபோதலேவுக்கு உணர்வு அழிந்துபோயிற்று என்று பேசிக்கொண்டார்கள். ஆனால் உண்மையை உள்ளபடியே உணர்ந்தசிலர் இந்த மாண்கோஜிபோதலேவுக்கு புத்தி ஒன்றும் கெட்டுப்போகவில்லை. ஆனால் இவர் உலகவிஷயத்தில் விரக்தராய்விட்டாரென்றார்கள். இவ்விதம் பலவாறு பேசிக்கொள்ள இவரது மனைவி மகன் இவர் முதலானவர் கடிந்து பேசுவார்கள் என்று பயந்து வீட்டிற்குவராமல் கொல்லையையடுத்திருந்தார். அப்போது இவருடைய குமாரர் அந்தச் சோளக்கொல்லைக்குவந்து சோளக்கதிர்களை ஆராய்ந்து பார்த்தெடுக்கும்போது அவரைநோக்கி அப்பா குழந்தாய்! ஈக்கள் தாம் உண்ணவேண்டும் என்கிற எண்ணத்துடன் சேர்த்துவைக்கிற தேனை பிறர் கைக்கொண்டு உண்பதுபோல சத்விஷயத்தில் உபயோகிக்கிறபொருளை அந்நியர்கள் உபயோகஞ் செய்தார்கள். ஆகையால் நமது பொருள்கள்யாவும் ஸத்பாத்திரத்தில் உபயோகித்தால் ஸ்ரீமந்நாராயணனுகிய பகவானுடைய கிருபைக்குப் பாத்திரராகலாம். இதைத் தீர்க்கமாய் ஆலோசித்து நீ வருத்தப்படாமல் இருக்கக்கடவாய் என்று சொன்னார். இதைக்கேட்ட புதல்வர் கொஞ்சம் நிதானித்து இவர் சொன்னசொற்களின்சாரத்தை உட்கொண்டு மனத்தெளிவை யடைந்தார். அது கேட்டபிறகு தம்முடைய குமாரரானவர் தந்தையின் திருவடிகளில் விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கி அவரை வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய் முன்போலவே அவரிடத்தில் இடைவிடாத அன்பைப் பாராட்டி தன்னைப்பெற்ற தாய்க்கும் பிரியவசனங்களைச் சொல்லி அவருடைய கோபத்தைத் தணிவித்தார். அதன்பிறகு தாயானவர் நாம் பாண்டுரங்கன்மீது ஆணையிட்டிருந்தும் இவர் இப்படிசெய்தாரே? இனி அரசன் கடமைக்கு ஏழுவராகன்கட்டவேண்டுமே? அதற்கு என்ன செய்வோம்? என்று மனவருத்தப்பட்டு இருக்கிறகாலத்தில் நாள்வாயதாகாரர்களும் வந்து தாங்கள் கட்டவேண்டிய பணத்தைக் கேட்டார்கள். அப்போது மாண்கோஜிபோதலேயானவர் வீட்டிலிருந்த மூன்றுவராகனைக் கொடுத்து மற்றைய நான்குவராகனையும் நாளைக்குக் கொடுக்கிறேனென்று சொல்ல, அவர்களும் போய்விட்டார்கள். அப்படி போனபிறகு மாண்கோஜிபோதலேயானவர் அந்த ஊரிலிருக்கிற நாகாபாயி என்னும் ஒரு பிராமணஸ்திரீயினிடத்திற்குப்போய் அம்மணி! எனக்கு நான்குவராகன் வேண்டும்? நீ இந்தச் சமயம் கொடுத்தாயானால் பின்னால் வட்டியுடனே கொடுத்துவிடுகிறேனென்று சொன்னார். அதற்கு அவள் நாளைக்கு கொடுக்கிறேனென்று சொன்னாள். அதைக்கேட்ட தாசரானவர் மனதில் யாதொரு கலக்கமு மில்லாமலிருந்தார்.

அதன்பிறகு அந்த பிராமணஸ்திரீயானவள் இந்த மாண்கோஜிபோதலேயின் குணாதிசயங்களைப் பற்றி தெரிந்தவர்களை விசாரித்தறிந்து இவருக்குக் கொடுக்கும் பணம் மறுபடியும் நம்முடையவர்க்கு வராதென்று ஆலோசித்து கொடுக்காமலிருப்பதே நல்லதென்று சும்மாவிருந்தாள். ஈதுணராத இந்தத் தாசர் மறுநாள் உதயத்தில் அவளிடத்திற் போய்க் கேட்டார். அதற்கு அவள் ஒருவன் எனக்குக் கொஞ்சம் பணம் பாக்கியிருந்தது அதை அவன் இன்றைக்குக் கொடுப்பதாகச் சொல்லியிருந்தான். அவனை நம்பி நான் உனக்குக் கொடுப்பதாகச் சொன்னேன். இப்போது அவன் பொய்த்துப் போனான். இதற்கு நான் என்னசெய்வேனென்றாள்.

அதைக்கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் திரும்பி வந்துவிட்டார். இவ்விதம் திரும்பிவந்துவிட்ட இவர் பணங்கிடைக்காத சங்கதியை தம்முடைய மனைவியாருக்குத் தெரிவித்து வேறொரு ஊருக்காவதுபோய் பணங்கொண்டு வருகின்றேனென்று சொல்லிப் புறப்பட்டுப் பணங்கிடைக்கத்தகுந்த ஊருக்குப்போனார். இவர் இவ்விதமாகப் போன பிறகு இந்த ஊரிலுள்ளார் யாவரும் வாய்தாபணம் கட்டமுடியாமல் எங்கேயோபோய்விட்டானென்று பேசிக்கொண்டார்கள்.

இப்படி யிருக்குஞ்சமயத்தில் வாய்தாகாரர் வந்து இவருடைய வீட்டின் வாசற்கதவை மூடி இராஜசின்னமான முத்திரையை அதற்கிட்டு நீர் நெருப்பு முதலியவை உள்ளே பிரவேசிக்காமல் செய்து அவர்களை வருத்தப்படுத்தினார்கள். இவ்விதமாக இவர்கள் படுங்கஷ்டத்தை யறிந்த ஸ்ரீமந்நாராயணன் ஒரு வெட்டியானைப்போல வேஷந்தரித்து நான்குவராகன் கையிலெடுத்துக்கொண்டு வாய்தாக்காரரிடத்தில்வந்து ஐயா! தங்களுக்கு மாண்கோஜிபோதலேயானவர் நானுவராகன் கொடுக்கவேண்டியதாக என்னிடத்தில் கொடுத்தனுப்பினார் என்று சொல்லிக் கொடுத்து மறைந்துபோய்விட்டார். அதன்பிறகு இந்தத் தாசரானவர் போனவூரில் தமக்கு வேண்டிய பணம் கிடைக்கப்பெற்று மறுநாள் வந்து வாய்தாக்காரரிடத்திற்குப்போய் ஐயா! உமது பணம் இதோ கொண்டுவந்திருக்கிறேன். இதை வாங்கிக் கொள்ளுங்கள்? என்று சொன்னார். அதற்கு அவர்கள் ஐயா தாசரே! உமது பணத்தை உம்முடைய வெட்டியானிடத்தில் நாங்கள் பெற்றுக்கொண்டோம்? என்று சொன்னார்கள். அதைக்கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் தம்முடைய வீட்டில்வந்து வெட்டியானிடத்தில் பணங்கொடுத்தது யாரென்று கேட்டார். அவர்கள் நாங்கள் யாரும் கொடுக்கவில்லை யென்று சொன்னார்கள். பிறகு அந்த ஊர் வெட்டியானைக் கண்டு கேட்க, அவனும் எனக்கு ஒன்றுந் தெரியாதென்று சொன்னான். பிறகு மாண்கோஜிபோதலேயானவர் வெட்டியான் வேடங்கொண்டுவந்து பணங்கட்டினவர் ஸ்ரீமந் நாராயணரே வந்தாரென்று உணர்ந்து என் பொருட்டுப் பகவான் இந்த வேஷத்துடன் வருவதற்கு நானெப்படிப்பட்டதவஞ்செய்திருந்தேனோ? என்று சொல்லிப் பகவானுடைய கிருபா விசேஷத்தைக்குறித்து புகழ்ந்து ஸ்ரீபகவந்நாமசங்கீர்த்தனம் செய்து ஐயனே! என்பொருட்டு நீர் பறையன் வேஷந்தாங்கி வந்தீரே? ஒ கிருபைக்கடலே! என்று ஸ்தோத்திரம் செய்துகொண் டிருக்கும்போது ஸ்ரீமந் நாராயணரானவர் இவருக்குப் பிரத்தியக்ஷமானார். மாண்கோஜிபோதலேயானவர் அந்தப் பகவானை உள்ளன்போடு தரிசித்து வணங்கி வாழ்த்தினார். அதற்குப் பகவானனவர் மிகவுஞ் சந்தோஷத்தையடைந்து இவரைத் தழுவிக்கொண்டார். அதன் பிறகு தாசரானவர் பகவானே! உமக்கு இந்த நான்குவராகன் எங்கே கிடைத்ததென்று கேட்க' பகவானனவர் தாசரே! உனக்குப் பொருள்கொடுக்கிறதாகச்சொல்லி நம்பியிருக்கப்பண்ணி பிறகு தவறிப்போனவனுடைய பொருளைக் களவாடிக்கொண்டு வந்தேனென்று சொன்னார். அதுகேட்ட தாசர் கலீலென்று நகைத்து இப்படிசெய்யலாமா? அந்த ஏழை பிராமணத்தியின் பொருளை ஏன் களவாடினீர்? நான் கொண்டுவந்த பொருளை அவளுக்குக் கொடுத்துவிடுகிறேன் என்று சொல்லக்கேட்ட ஸ்ரீபண்டரிநாதர் சாதுக்களுக்குக் கொடுக்காதவனுடைய பொருளை நீர்கொடுத்தால் நான் முழுதும் அழித்துவிடுவேனென்று சொன்னார். அதற்குத் தாசர் மிகவும் பயந்து அதற்கு யாதொருதடையுஞ் சொல்லாமல் பயந்து சும்மாயிருந்துவிட்டார். இவர் இவ்விதமாகப் பயந்து தளர்ச்சியடைவதைக்கண்ட பகவானனவர் இவருடைய கொல்லையிலுள்ள சோளத்தை நன்றாய் விளையும்படி செய்தார். இவ்விதம் இவர் செய்தவுடனே அந்த விளைவைக்கண்ட அவ்வூரார் எல்லாரும் இவரை நன்கு மதித்தார்கள். தவிர அழிந்துபோன சோளக்கொல்லையானது இப்படி விளைந்தது என்னபுதுமை என்றும், இவர் ஸ்ரீமந் நாராயணருடைய அன்பராகையால் இவருக்கு எல்லாங் கைகூடிவருமென்றும், யாவரும் சொல்லிமகிழ்ச்சியடைந்தார்கள். இதுகண்ட மாண்கோஜிபோதலேயானவர் தம்முடைய களஞ்சியங்களில் நிறைந்திருக்கிற தானியங்கள் முழுவதும் கேட்பவர்கள் யாவராயினும் அவர்களுக்கெல்லாம் அவ்வவர்களுடைய இஷ்டப்படியேகொடுத்து அவர்களையெல்லாம் மகிழச்செய்து பிறகும் அந்தக்கொல்லையை ஸ்ரீராமநாமஸ்மரணை செய்துக்கொண்டே காவல் காத்திருந்தார். இப்படி யிருக்குங்காலத்தில் சர்வ வளங்களும் யாதொரு குறைவுமில்லாமல் நிறைந்திருக்கின்ற ராளேராசு என்று ஊரை அரசாள்பவரும் இவருக்கு அம்மானுமாகிய ஒருவர் இருந்தார். அவர் தம்முடைய பெண்சாதியுடன் சுவர்க்கலோகத்தை யடைந்தபின்னர் அவருக்கிருந்த இரண்டு குமாரர்களும் துன்மார்க்கர்களாய் தம்முடைய குடும்பத்தைக் காப்பாற்றாமல் யதேச்சை

யாய்த் திரிந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் அப்படி திரிவதனுல் இதுவரைக்கும் அவர்களிடத்தில் ஊழியஞ்செய்து வருபவராகிய ஹாசியென்னும் பெயருள்ள ஒரு அம்மையார் அந்தக்குடும்பத்தைக் காப்பாற்றிவந்து கொண்டிருந்தார். ஆகையால் அந்தக் குடும்பத்திற்கு யாதொரு குறைவுமில்லாமல் வருபவராகிய இந்த அம்மையார் ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனத்தை அகோராத்திரம் செய்துக்கொண்டு வருபவராயிருந்தார். இப்படிப்பட்ட இவர்சோளக் கொல்லையைக் காற்றுக்கொண்டிருக்கின்ற மாண்கோஜிபோதலேயின் ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனத்தை நாள்தோறும்போய்க் கேட்டுவருவார். இப்படியிருக்க ஒருநாள் இந்த அம்மையார் மாண்கோஜிபோதலேயின் அழகிய திருமுகத்தைப் பார்த்து, ஓ சுவாமி! அடியேன் பராதீனையா யிருக்கின்றேன். ஆகையால் நான் ஸ்ரீஹரியின் திருவடிகளை என்றும் பிரியாமல் அடைந்திருக்கும்படி நீர் அடியேனைத் திருத்தி ஆண்டருளவேண்டும் என்று மிகவும்பிரார்த்தனை செய்தார். அதுகேட்ட மாண்கோஜிபோதலேயானவர் இவ்விதமாகவிருக்கிற இவள் எந்த விதத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிக்கு உரியவளாவாள்? என்று நன்றுய் ஆலோசித்து அந்த அம்மையாரைப்பார்த்து நீ அநுதினமும் ஸ்ரீபகவந்நாமஸ்மரணை செய்துக்கொண்டும், ஏகாதசி விரதத்தை அநுஷ்டித்துக்கொண்டும் என்னிடம்வந்து ஸ்ரீராமபஜனையை உள்ளபடியே கேட்டுக்கொண்டும் இருக்கவேண்டும். இவ்விதமாகச் செய்வதற்கு யாதொரு இடையூறும் உண்டாகா திருக்கும்படி உன்னை ஏவலாளாகக் கொண்டிருக்கிற எஜமானர்களுடைய உத்தரவைப் பெற்றுக்கொள்ளவேண்டும் இப்படி செய்துவருவாயானுல் ஸ்ரீ ருக்குமணிகாந்தனுகிய ஸ்ரீமந்நாராயணருடைய திருவடிகளுக்குரியவளாவாய் என்று சொல்லியருளினர்.

இவ்வண்ணமாக மாண்கோஜிபோதலேயானவர் சொல்லக்கேட்ட அம்மையாரானவர் தேவரீர் சொன்னபடியே செய்கிறேனென்று சொல்லி அவருடன் உத்தரவு பெற்றுக்கொண்டு தம்முடைய வீட்டிற்குத் திரும்பிவந்து அகோராத்திரம் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டும், வீட்டுவேலைகளையும் தடையில்லாமல் செய்துக்கொண்டும் ஏகாதசி விரதத்தை இடைவிடாமல் அநுஷ்டித்துக்கொண்டு எஜமானர்களுடைய உத்தரவைப் பெற்றுக்கொண்டு மாண்கோஜிபோதலேயின் ஊருக்கு வந்து ஏகாதசியன்று இராத்திரிகளில் ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனத்தைக் கேட்டுக்கொண்டுமிருந்தார்.

இவர் இப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் மாயபுரத்திலிருந்து வருகிறவர்களில் ஒருவன்விஷந்தீண்டி யிறந்தான். அவ்விஷயத்தைப்பார்த்த அங்கிருந்தவர்களெல்லாரும் ஒன்ருகக்கூடி அவனைத் தூக்கிக்கொண்டுவந்து மாண்கோஜிபோதலேயானவர் ஸ்ரீஹரிநாமபஜனை செய்துக்கொண்டிருக்கிற இடத்தில் கிடத்த இவ்வன்பர் செய்கிற ஹரிநாமசங்கீர்த்தன மகிமையால் இவன் உயிர்பெற்றெழுந்தாலும் எழக்கூடுமென்று நம்பியிருந்தார்கள். அது கண்ட மாண்கோஜிபோதலேயானவர் அவர்களை நோக்கி ஸ்ரீஹரிநாமமானது அமிர்தத்தைவிட உயர்ந்தது. ஆதலால் நீங்கள் எல்லாரும் கைகொட்டிக்கொண்டு ஸ்ரீஹரிநாமத்தை உள்ளபடியே பஜனை செய்யுங்களென்று சொன்னர்.

அவ்வண்ணமே அவர்களெல்லாரும் கைகொட்டிக்கொண்டு ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்கிற காலத்திற் பிரேதமாய் கிடக்கிற இவனும் நம்மைப்போலவே நம்முடன்கூடிக்கைகொட்டாமலும் நாம் செய்கிற ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்யாமலும் இருக்கின்ருனே யென்று பேசிக்கொண்டார்கள். அதைக்கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் அந்தப் பிரேதத்தைப்பார்த்து ஓ சவமே! மனிதராகப் பிறந்திருக்கின்ற ஒவ்வொருவரும் ஸ்ரீமந்நாராயண நாமங்களை மனவிருப்பத்துடன் கைகொட்டிக்கொண்டு பாடுதலே மிகவும் சிறந்தது. ஆகையால் இந்தப் பொருளைவிடச் சிறந்தபொருள் வேறென்றும் இல்லை என்று உயிருள்ள சரீரத்திற்குச் சொல்லுவதுபோல் சொல்லியருளினர். இந்த மாண்கோஜிபோதலேயானவர்சொன்ன அமிர்தவாக்கை ஸ்ரீமந்நாராயணமூர்த்தி யுணர்ந்து இங்கே இந்த சமயத்தில் இந்தச்சவம் உயிர்பெற்று பேசாமற்போனுல் என்னுடைய பேருக்கும் என்னுடைய அடியார்களுக்கும் அவமரியாதை நேரிடுமென்று திருவுள்த்திலெண்ணி எமதருமராஜனை நினைத்தார். உடனே அவன் வந்தான். அவனைநோக்கி இந்தச்சவத்தினுள்ளிருந்த உயிரை முன்போலிருக்கச் செய்யக்கடவீர் யென்று ஆஞ்ஞாபித்தார். அவ்வாறே எமதருமராஜனும் அந்தச்சவத்திற்குமுன்போலவே உயிரைக் கொடுத்தான். அப்பொழுது அவ்விடத்தில் சவமாயிருந்தவன் பிழைத்தெழுந்து அந்த மாண்கோஜிபோதலேயுக்கெதிரே தன்னுடைய நாவினல் ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமங்களை உச்சரித்து கைகொட்டி ஆநந்தக்கூத்தாடினன். அதைக் கண்டிருந்த யாவரும் மனமிகச் சந்தோஷித்து ஆநந்தக்கூத்தாடினர்கள். இதைக்கண்ட தாசரானவர் ஸ்ரீமந்

நாராயணனைக்குறித்து சவமாயிருந்ததை யுணர்ந்து கொள்ளாமல் துக்கிக்கிறவனென்று நினைத்து ஸ்ரீமந் நாராயணநாமங்களை சொல்லென்று சொன்னேன். அப்படியே அடியேன் சொல் பழுதாகாமல் அவனை பிழைக்கச் செய்தருளினை. தவிர எந்தப் பொருளினும் நோக்காமல் தள்ளிவிடுகின்ற என்னையும் ஒரு பொருளாகக்கொண்டு உன்னுடைய திருவருளுக்கு ஆளாக்கினை. என்மீது உன்னுடைய திருவருளிருந்தவாறு என்னே! என்னே!! என்றுசொல்லி ஆநந்தக்கண்ணீரானது ஆறுகப் பாய்கின்றார். பின்னர் சூரியோதயத்துக்கு முன்னே விட்டலப்பெருமானுக்கு ஆராதானஞ்செய்து பிரசாதங்கொடுக்க அதை அங்குவந்திருந்தவர்கள் யாவரும் பெற்று மகிழ்ந்து ஸ்ரீமந்நாராயணரே இந்த அவதாரமாய் வந்தாரென்று மாண்கோஜிபோதலேவை மிகவும் புகழ்ந்து கொண்டாடித் தங்கள் தங்களிருப்பிடங்களுக்குப் போய் விரைவிற் சேர்ந்தார்கள்.

இவ்விதமாக இங்கே நடந்த சங்கதிகளையெல்லாங்கண்ட ஹாசியென்பவன் ஸ்ரீநாராயணருடைய திருவடித்தாமரைகளைத் தியானஞ் செய்துக்கொண்டிருந்தார். இப்படியாக இவர் மூன்றுவருஷகாலஞ் சென்றபிறகு மூஹதம் என்பவர் பெற்ற புத்திரர்களிருவரும் காளைப்பருவத்தையடைந்து தங்களிடத்திலுள்ள எல்லாப்பொருள்களையும் பாகித்துக் கொள்ள விரும்பி வேலைக்காரியும் ஒரு பொருளாகையால் இந்த ஹாசியையும் விற்றுப் பொருள் வாங்க நினைத்தார்கள். இவ்விதமாக இவர்கொண்ட எண்ணத்தை உண்மையறிந்த ஹாசியென்பவர் ஸ்ரீமந்நாராயணரை உள்ளபடியே தியானித்து ஒ சுவாமி! என்னை விற்றால் அன்னியர்கள் யாராவது வாங்கக்கூடும். அந்தக்காலத்தில் அடியேன் தாசரைப் பிரியவேண்டிவரும் என்று துக்கித்தார். இவர் இவ்விதமாக துக்கிப்பதை மாண்கோஜிபோதலேயானவர் உணர்ந்து அந்த அம்மையைப்பார்த்து நீ ஏன் துக்கப்படுகின்றாய்? எந்தக்காலத்தில் எது நடக்கவேண்டுமோ அது நடந்தேதீரும். அதைத் தடுக்கமுடியாது என்று சொன்னார். இவ்விஷத்தைக் கேட்ட ஹாசியம்மையானவர் அடியேனை நீரேவிலைக்கு வாங்கிக்கொண்டால் நான்தேவரீருடைய ஊழியங்களைச் செய்துக்கொண்டு காலங் கழிப்பேனென்று சாஷ்டாங்கமாய் வணங்கி நமஸ்காரஞ் செய்தார். அப்போது மாண்கோஜிபோதலேயானவர் என்னிடத்தில் பொருளில்லையானாலும் ஸ்ரீபண்டரிநாதருடைய திருவடிகளைப் பற்றியிருக்கிற எனக்கு ஒரு குறைவுமில்லை. ஆகையால் என்னுடைய கொல்லையை விற்றுவது உன்னை வாங்குவேன். ஆகையால் நீ அஞ்சவேண்டியதில்லை. உன் ஊருக்குப் போ? நான் உன் பின்னே வருகிறேனென்று கொல்லக் கேட்ட ஹாசியானவர் மனமகிழ்ச்சியோடு வீட்டுக்குப்போனார். இவ்வாறு நிகழ்ந்தபிறகு ஸ்ரீஹரிதாசராகிய மாண்கோஜிபோதலேயானவர் ஒருநாள்தன்னுடைய மைத்துனரிருக்கும் ஊருக்குப் போய் அவர்களைக்கண்டு நீங்கள் ஹாசியம்மாளை விற்கப் போகிறதாகக் கேள்விப்பட்டோம். ஆகையால் அவளை நீங்கள் உண்மையிற் விற்கிறதாயிருந்தால் நான் வாங்கிக்கொள்ளுகிறேனென்றார். அதைக் கேட்ட அவர்கள் உடனே மிகவுங்கோபங்கொண்டவர்களாய் ஐயா! நாங்கள் அந்த அம்மையை அன்னியர்களுக்குச் சும்மாகொடுத்தாலுங் கொடுப்போம். உமக்குக் கொடுக்கமாட்டோம் என்று சொன்னார்கள். இங்கு நடந்த விஷயங்களையெல்லாம் வீட்டுக்குள்ளிருந்துகேட்ட ஹாசியம்மையார் இவ்விதமாக நடப்பதற்குக் காரணம் என்னுடைய ஊழ்வினையேயென்று மனத்திலெண்ணி மிகவும் வருத்தப்படுவதை மாண்கோஜிபோதலேயானவர் உள்ளபடியே உணர்ந்து அம்மா! நீ வருத்தப்படவேண்டியதில்லை. என்று சொல்லி பிறகு பலபேருக்கெதிரே நின்று நான் விடோபாவை அனுப்பி உன்னை வாங்கும்படி செய்கிறேனென்றுசொல்லிவிட்டு தம்முடைய ஊருக்குப்போனார். இவர் சொன்னதைக் கேட்டவர்கள் யாவரும் இவருக்கு ஸ்ரீபண்டரிநாதர் வசப்பட்டிருப்பதால் இவர் சொற்படியே நடக்குமென்றுசொல்லிப் பேசிக்கொண்டார்கள். இப்படியிருக்க இந்தத் தாசருடைய மைத்துனர்களிருவரும் இந்த ஹாசியை மாண்கோஜிபோதலேயானவர் விலைகொடுத்து வாங்குவதற்கு முன்னரே யாருக்காவது விற்றுவிடுவோமென்று தீர்மானித்து இந்த அம்மாளை வாங்குவோரைத் தேடினார்கள்.

அந்தச்சமயத்தில் ஒருவன் அந்த அம்மாளை இருபத்தைந்து வராகன்கொடுத்து வாங்குவதற்குச் சம்மதித்து இவர்களிடத்திற்கு வந்தான். அந்தச் சமயத்தில் ஹாசி என்பவர் ஸ்ரீமந்நாராயணரைத் தியானஞ்செய்து ஒ சுவாமி! என்னுடைய ஞானசிரியராகிய மாண்கோஜிபோதலேயானவர் சொல்லிவிட்டுப்போனது ஒருக்காலும் தவறாது என்று நான் இதுவரையில் உயிர்பெற்றிருந்தேன். ஆயினும் அவர் இதுவரைக்கும் வரவில்லை. ஆகையால் உம்முடைய தாசர்களுடைய சொல்லானது தவறாதபடி காப்பாற்றுவது உமக்குக் கடமையாகுமென்று சொல்லி அநேகவிதமாகப் பகவானைத் தோத்திரஞ்

செய்தார். இவ்வண்ணஞ்செய்தவுடனே ஸ்ரீபண்டரி நாதரானவர் ஒரு பிராமண வடிவங்கொண்டு வந்து அங்குள்ளவர்களைப் பார்த்து இங்கே நடந்த சங்கதி என்னவென்றுவிசாரித்து உண்மையறிந்துகொண்டு ஹாசி அம்மையை நோக்கி உன்னுடைய ஞானாசிரியரானவர் உன்னை அழைத்துவரச்சொல்லி என்னை அனுப்பினரென்று சொன்னர்.

அதுகேட்டஹாசியார் பிராமணரைப்பார்த்து என்னுடைய ஞானசிரியரானவர் சொன்னசொல் எள்ளளவும் தவருர் என்று சொல்லித் தம்மக்களுடன் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார். அதுகண்ட வேதியர் ஹாசியையும் அவருடைய மக்களையும் தம்மோடு சேர்த்துக்கொண்டு மறைந்துவிட்டார். அந்தச்சமயத்தில் அங்கிருந்தவர்களெல்லாரும் போதலே என்கிற தமது தாசர்சொன்ன சொல்லானது தவருகாமல் ஸ்ரீபண்டரிநாதர் ஹாசியென்பவரை அவருடைய புத்திரர்களுடன் தமது திருவடியில் சேர்த்துக்கொண்டார். இது ஆச்சரியமென்று மாண்கோஜிபோதலேவைப் புகழ்ந்து கொண்டாடினர்கள். அதன்பிறகு அவ்விடத்தில் ஹாசியை வாங்குவதற்காக வந்து முஹதம் என்னும் புதல்வரிடத்தில் பொருள் கொடுத்தவன் அவர்களைநோக்கி ஓ முஹதம் புதல்வரே! நீர் முன்னதாக என்னிடத்தில் நீ பொருள்கள் பெற்றுக்கொண்டு இப்போது உங்களுடைய அடிமைப்பெண்ணைக் கொடுக்காதிருக்கிறீர்கள். ஆகையால் நீங்கள் என்னிடத்தில் வாங்கிக்கொண்ட பொருளைக் கொடுத்துவிடுங்களென்று கேட்டார்.

அதற்கு அவர்கள் எங்களுடைய அடிமைப் பெண்ணுகிய ஹாசியை அவளுடைய பிள்ளைகளோடு உமக்குக்கொடுத்துவிட்டபிறகு நீ கொடுத்த பொருளை எப்படி திருப்பிக் கொடுக்கக்கூடும்? கூடாது. ஆகையால் அவர்களை மாண்கோஜிபோதலேயானவர் அழைத்துக்கொண்டு போயிருக்கிருராகையால் அவரிடத்தில் பொருள் வாங்கிக்கொள் என்ருர்கள். இவ்விதமாக அவர் சொன்னவுடனே அதைக்கேட்டு பொருள் கொடுத்தவன் மாண்கோஜிபோதலேயானவர் அழைத்துக்கொண்டு போனதை நான் பார்க்கவில்லை. ஆகையால் அவரைப் பொருள் கொடுக்கும்படி நான் எப்படிகேட்கலாம்? என்று கோபித்துக்கொண்டான். இவ்விடத்தில் வழக்கு இப்படியிருக்க முன்னேபோன மாண்கோஜிபோதலேயானவர் தாம் தங்கியிருக்கும் இடத்திலிருந்துகொண்டே இந்தச் சங்கதிகளைக் கேள்விப்பட்டு மிகுந்த அன்புடன் ஓ பாண்டுரங்கா! உன்னை அடியேனுனவன் பிரார்த்தனை செய்வதற்கு முன்னமே அவ்விடத்திற்குப்போய் இந்த விதமாக ஹாசியை அழைத்துக்கொண்டாயோ என்று சொல்லி மனமகிழ்ச்சியடைந்தார். இப்படி நடந்த அந்தக்காலத்தில் அந்தஊருக்குச்சமீபத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கின்ற ஒரு புலையன் மாண்கோஜிபோதலேயானவர் இருக்குமிடத்திற்கு நாள்தோறும் வந்து அவருடைய திருவடிகளை வணங்கி எனக்குத் தேவரீர் உபதேசஞ் செய்தருளவேண்டும் என்று மிகவும் பிரார்த்தனை செய்தான். இவ்விதமாகப் பிரார்த்தனைசெய்த அந்தப் புலையனைப் பார்த்து அப்பா! நான்ஒருவருக்கும்உபதேசஞ்செய்வதில்லை. ஆகையால் நீபோய்த் தகுதியான ஞானசிரியரை அடுத்து அவரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள் என்று சொல்லினர். அதைக்கேட்ட அந்தப் புலையன் அவரை இடைவிடாமல்நிர்ப்பந்தஞ்செய்தான். அதற்கு அந்தப் புலையனைப் பார்த்து நீ நான் சொன்னசொல்லைக் கேளாமல் நீ என்னை வற்புறுத்தித் தொந்தரவு செய்கிறதினுல் நான் பண்டரிநாதருக்குத் தெரிவித்து அவர் உத்தரவுகொடுத்தால் நான் உனக்கு உபதேசஞ் செய்கிறேனென்று சொல்லி ஆம்மையாண்டு திருவருள்செய்யும் ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானை மனதினுல் திரிகரணசுத்தியோடு தியானஞ்செய்தார்.

இவ்விதமாகத் தியானஞ் செய்தவுடனே ஸ்ரீ பாண்டுரங்கப் பெருமானுனவர் அவருடைய மனத்திலெழுந்தருளி நீ அந்தப்புலையனுக்கு உபதேசஞ் செய்வதற்கு என்னுடைய சம்மதியைப்பெற விரும்பினுய். ஆனல் மாணுக்கலட்சம் உள்ளவனுக்கு உபதேசிக்க வேண்டியதே. இவனே அப்படிப்பட்ட நற்குணங்கள் உடையவனுகமாட்டான். இவனிடத்தில் இரக்கமில்லாமை, பொய், களவு, கள்ளுண்டல், காமம், கொலை குரு உபதேசத்தை வெளிப்படுத்தல் முதலிய துர்க்குணங்கள் மிகவும் நிறைந்திருக்கின்றன. ஆகையால் இவனுக்கு நீ உபதேசஞ் செய்யலாகாது. நீ இவனுடைய இயற்கையை அறிய விரும்பினுல் அதற்கு ஒரு உபாயஞ் சொல்லுகிறேன். அதை நீகேளென்று சொல்லுகிருர். எப்படியென்ருல் நீர் ஏர் உழுகிற எருதுகளில் ஒன்றை இந்தப் புலையனைக்கொண்டு கொல்லுவித்துச் சமைத்து உமது உறவினரோடு கூடியுண்டு பிறருக்கு இந்தச் சங்கதியைச் சொல்லவேண்டாமென்று உறுதியாகச் சொல்லிப் பாரும் என்று சொன்னர். அதைக் கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் ஸ்ரீமந்நாராயணனை நோக்கி உயிர்வதைசெய்வது

ஏன்? உண்ணுததை உண்பது ஏன்? அடியேனுக்கு தேவரீர் சொன்ன காரியஞ்செய்வதிற் கொஞ்சமும் சம்மதமில்லை என்று சொன்னர்.

இவ்விதமாக இவர் சொன்னசொல்லைக்கேட்ட ஸ்ரீமந்நாராயணரானவர் ஒதாசரே! நீர் என்னுடைய சொல்லைப் பிரமாணமாகக் கொண்டு செய்வீரானல் உமக்கு கொல்லுவதாலுண்டாகும் பாவமும் புலாலுண்ணும் பாவமும் உம்மை வந்து சேரா. ஆகையால் நான் சொன்னபடியே செய்யக்கடவீர் என்று சொல்லிவிட்டு மறைந்துபோயினர். இவைகளையெல்லாங் கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் அந்தப் புலையனைப் பார்த்து அப்பா! நீ என்சொல்பிரகாரம் நடந்தாயானல் நீயே நல்ல மாணக்கனவாய். அப்பொழுது இதை மனமகிழ்ச்சியுடன் உனக்கு உபதேசஞ்செய்வேன். ஆனல் அதுஎன்னவென்ருல் எனக்கிருக்கின்ற எருதுகளில் ஒன்றைக்கொன்று சமைக்கக்கொடுத்து இந்தச் சங்கதியைப் பிறருக்குச் சொல்லாதிருக்கக் கடவாயென்று சொன்னர். அதுகேட்ட புலையன் உடனே ஒரு எருதைக்கொன்றுதந்தான். அந்த மாண்கோஜிபோதலேயானவர் ஸ்ரீமந்நாராயணருடைய சொற்படியே சமையல் செய்வித்து தம்முடைய உறவினர்களோடு கூடியிருந்து உண்டார். அந்தக்காலத்தில் அவரோடுகூடியிருந்து உண்டவர்கள் கொலைசெய்யாத இவர் ஆட்டைக் கொன்றது மிகவும் ஆச்சரியமென்று சொல்லிக்கொண்டு போய்விட்டார்கள். இவ்வாறு இவர்கள் சொல்லிக்கொண்டு போனபிறகு மாண்கோஜி போதலேயானவர் புலையனைப்பார்த்து அப்பா! நீ கொன்ற எருதினுடைய எலும்பு, தோல், கொம்பு, குளம்பு முதலானவைகளைக் கொண்டுபோய் என்னுடைய கொல்லையில் புதைக்கக்கடவாயென்று சொன்னர். அவ்வாறே அந்தப் புலையனும் இராக்காலத்தில் அவைகளை எடுத்துக்கொண்டுபோய்ப் புதைத்துவிட்டான். விடிந்தபிறகு அந்தப்புலையனவன் அன்று விருந்துண்டோர்களில் ஒருவர் வீட்டினுள்ளே நுழைந்து ஒருபுறத்தி லிருந்தான். அதைக்கண்ட அவ்வீட்டுக்காரன் அடா புலையா! நீ வீட்டுக்குள்ளே வரலாமோவென்றுகேட்டார். அதற்குப் புலையனவன் அந்த வீட்டுக்காரனைநோக்கி, நானே சண்டாளன்; நீரோ உயர்ந்தஜாதியார். ஆனலும் உமக்கும் எனக்கும் பேதம் ஒன்றுமில்லை. எப்படியென்ருல் நேற்றையதினம் மாண்கோஜிபோதலேயானவர் அவருடையஎருதைக்கொன்று சமையல்செய்வித்து உங்களுக்கெல்லாம்விருந்திட நீங்கள் அதைச்சாப்பிட்டீர்கள். அப்படியிருக்க இன்றைக்குத் தாங்கள் என்னை இகழ்ச்சி செய்வதற்குக் காரணம்யாதோ? சொல்லுங்கள் என்று சொன்னன். இவ்விதமாக அவன்சொன்னவுடனே அந்தவீட்டிலிருந்தோர்களெல்லோருங்கூடிமாண்கோஜிபோதலேயானவர் இப்படிப்பட்ட காரியத்தை ஒருக்காலுஞ் செய்யமாட்டாரென்றும், இவன் சொல்லுவது தப்பிதமென்றும், ஆனல் அந்தத் தாசருடைய எருது இருந்தவிடத்தில் காணப்படவில்லை யென்றும், பல பல விதங்களாகப் பேசிக்கொண்டு அந்தத் தாசரிடத்திற்குப்போய் இதனுடைய உண்மையை உணர்வோமென்றுஆலோசனைசெய்துகொண்டு இந்தப் புலையனைப் பார்த்து அப்பா! உன்சொல் உண்மையென்று சொல்லுவதற்குச் சாக்ஷியுண்டோவென்று கேட்டார். அதைக்கேட்டபுலையன் என்சொல்பொய்யாகாதபடி உங்களுக்கு உண்மையாகக் காட்டுகிறேனென்ருன். அதைக்கேட்ட யாவரும் இந்த மாண்கோஜிபோதலேயானவர் இந்தக்காரியத்தைச் செய்தது உண்மையாயிருக்குமானல் நாம் இவனைக் கொல்லுவோம். அதுபற்றி ராஜதண்டனை கிடைத்தாலுங் கிடைக்கட்டும் பார்ப்போமென்று நினைத்து ஆயுதபாணிகளாய்ப் புறப்பட்டுப்போய் கண்மூடிக்கொண்டு பகவத்தியானத்தி லிருக்கிற மாண்கோஜிபோதலேவுக்கு எதிரேவந்து உன்னைக் கொல்லவந்தோம். ஆகையால் நீ கண்திறந்து பார் என்றுசொன்னர்கள். அன்றியும் எருதைக்கொன்று விருந்துசெய்வது தகுதியாகுமோ? இப்படிப்பட்ட துரோகம் உனக்கு எப்படி உண்டாயிற்று? என்று அதட்டிக் கேட்டார்கள். அதைக்கேட்ட மாண்கோஜிபோதலேயானவர் கண்களைத் திறவாமல் அந்தோபகவானே! நீர்சொன்னசொற்படியே நான் செய்ததனலுண்டான இந்த ஆபத்தை உடனே நீக்கியருளல்வேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். இங்ஙனம் இவர் நிற்பதை வந்தவரெல்லோரும் பார்த்து எங்களையெல்லாம் குலவீனர்களாக்கிவிட்டுபகவத்தியானஞ்செய்கின்றீரே; இது மிகவும் அழகாயிருக்கின்றது என்று இகழ்ந்துபேசி, அந்தப் புலையனைநோக்கி, புலையனே! நீ எருதைக் கொன்றதற்குச் சரியான திருஷ்டாந்தங் காட்டவேண்டுமென்று சொன்னர்கள். அதைக் கேட்ட புலையன் அப்படியே ஆகட்டுமென்று அவர்களெல்லோரையும் அழைத்துக்கொண்டுபோய் மாண்கோஜிபோதலேயின்கொல்லையில் தான்புதைத்துவைத்த தோல், எலும்பு, கொம்பு முதலியவைகளை வெளியிலெடுத்து அங்கு வந்தவர்கள் யாவரும் பார்க்கும்படி வெளியில் வைத்தான். இவ்விதம் இவனல் எடு

த்து வைக்கப்பட்ட தோல் முதலியவைகளெல்லாம் ஆட்டின்தோல் முதலியவைகளாக மாறியிருந்தன. அதைக்கண்ட அவர்களெல்லாரும் புலையன் பொய் பேசினான். ஆகையால் இவனைக் கொல்லுவோமெ ன்று உள்ளத்தில் நினைத்துக்கொண்டு மாண்கோஜி போதலேயிடத்தில் முன்னிருந்த எருது இருக்கி றதா இல்லையா? அதைப் பார்ப்போமென்று அங்கி ருந்து மறுபடியும் இங்கே நடந்து அவருடைய எரு துகளைக் கட்டுகிற இடத்திற்பார்த்து அவ்விடத்தில் அது இருக்கக்கண்டு பின்னர் அந்தப் புலையனைப் பார்த்து அடா! புலையா! ஸ்ரீமந்நாராயணமூர்த்தியி னுடைய உண்மை அன்பைச் செலுத்துபவராகிய மாண்கோஜிபோதலேயின்மீது இப்படிப்பட்ட நிந் தனைச்சொல்சொன்னாயல்லவா? ஆகையால் உன்னைக் கொலைசெய்வோமென்று சொல்லும் சமயம் அந்தப் புலையனானவன் மனம் நடுங்கிச் சரீரம் பதைபதை த்து அந்த மாண்கோஜியின் தலைவாயிலை யடைந்து ஓவென்று இரைந்து புலம்பி ஓ! சுவாமி! இவர்கள் என்னை வதைசெய்யாதிருக்கும் வண்ணம் தடை செய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்தான். இதைக்கேட்ட ஸ்ரீஹரிதாசராகிய மாண்கோஜிபோ தலேயானவர் தம்முடைய சுற்றத்தாரைப்பார்த்து பெரியோர்களாகிய நீங்கள் இவன்செய்த குற்றத் தைப் பொறுத்து இவனைக் காப்பாற்றவேண்டும் என்றார்கள். அதுகேட்ட அவர்களும் நாங்கள் செ ய்தபிழையை நீங்கள்பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அந்த மாண்கோஜிபோ தலேயைப்பார்த்து அவர்களுக்கு வணக்கஞ் செய்த னர். பிறகு அவ்வவர்களுடையஇருப்பிடங்களுக்குப் போய்விட்டார்கள்; அதன்பின்னர் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர் ஸ்ரீமாண்கோஜிபோதலேயின் மன த்தின்கண் தரிசனங்கொடுத்து ஸ்ரீமாண்கோஜிபோ தலே! நான் முன்னதாகச்சொன்ன பறையனது நன்மைநிலையைப் பார்த்தீரா? என்று கேட்டார். அதற்குத் தாசரானவர் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி யைப் பார்த்து தினதயாளா! தேவரீர் அடியேனை ஒருபொருளாக எண்ணித் தாங்கள் என்னிடத்தில் செய்யும் புதுமைக்கு ஒரு அளவு இருக்கின்றதோ? என்று உள்ளன்போடு துதிசெய்தனின்றார். இவ்வித மாக இவர்செய்த சிறந்த ஸ்தோத்திரத்திற்குப் பக வானனவர் திருவுளமிரங்கி நகைத்துக்கொண்டே போய்விட்டார். அதன்பின்னர் இந்த மாண்கோஜி போதலே யானவரும் தமது சுற்றத்தாரோடுங் கூடி மனஞ் சந்தோஷத்துடன் வாழ்ந்து கொண் டிருந்தார்.

இவ்விதமாக இவர் இருக்குங்காலத்தில் அந்த வருஷம்முழுமைக்கும் மழையில்லாமலிருந்து பிறகு கடைசியாக ஒருமழைபெய்தது. அந்தச் சமயத்தில் இந்த மாண்கோஜிபோதலேயென்னுந் தாசருடைய புத்திரர்கள் தங்களுடைய வீட்டிலிருந்த விதைகளை யெல்லாங் கொண்டுபோய் இவ்வருஷத்தில் நல்ல விளைவு உண்டாகுமென்று நினைத்து தங்களுடைய நிலத்தில்விதைத்தார்கள். அந்தச்சமயத்தில்நாளுக்கு நாள் மழை அதிகமாய்ப் பொழியத் தலைப்பட்ட தனால் இவர்கள் விதைத்த விதைகளெல்லாம் பூமியி லேயே அழுகிப்போயின. அதைப்பார்த்த தாசரா னவர் அங்குள்ள அன்னியரிடத்தில் தங்களுக்குப் போதுமான விதைகளைக் கடனாக வாங்கிக்கொண்டு கொஞ்சம் நிதானித்து விதைக்கலாமென்று நினைத் துத் தம்முடையவீட்டில் பத்திரப்படுத்திவைத்தார் கள். அந்தக்காலத்தில் பண்டரிபுரத்தில் ஸ்ரீபுண்டரீ வரதனுக்கு மகோற்சவம் தொடங்கிற்று. ஆகை யால் அதைச் சேவிக்கவேண்டுமென்று அநேக தேசங்களிலிருந்தும் புறப்பட்டு அநேக ஜனங்கள் வந்தார்கள். அப்படி வந்தவர்கள் இந்தமாண்கோஜி போதலேயானவர் வாழ்ந்துகொண்டிருக்கும் ஊர் வழியாய் வந்து இவரைக்கண்டார்கள். இவரும் அத்தாசர்களைக்கண்டு சாஷ்டாங்கமாய் வணங்கி ஓ! சுவாமிகளே! நீங்களெல்லோரும் அடியேனை ஒரு பொருளாகநினைத்து இங்கு எழுந்தருளிவந்தீர். இத ற்கு அடியேனால் செய்யப்பட்ட தவம்யாதோ அறி கிலேன் என்று சொன்னார். அந்தச்சமயத்தில் அவ் விடம் வந்த ஹரிதாசர்களில் ஒருவர் இந்த மாண் கோஜிபோதலேயைப்பார்த்து ஐயா! இந்த கருப் புக்காலத்தில் தேவரீரே எங்களைக்காப்பாற்றவேண் டும், உம்மைப்போல சர்வ உயிர்களிடத்திலும் அரு ளுள்ளவர்கள் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை, என்று சொன்னார். அதைக்கேட்ட மாண்கோஜிபோதலே யானவர் இவர்களுக்குச் சாப்பாடுபோட்டு உபசரி க்கலாமென்றால் கடன்வாங்கி விதைக்கவேண்டு மென்று வைத்திருக்கிறவிதைகளேயல்லாமல் வேறு தானியம் நம்மிடத்திலில்லையே! இதற்குநாம் என்ன செய்வோமென்று ஆலோசனை செய்து தம்முடைய புத்திரர்களை ஒரு தனியிடத்திலழைத்து மக்களே இங்கே வந்திருக்கின்ற இந்த ஹரிதாசர்களுக்கு போஜனஞ் செய்வித்தால் நமக்கு அளவில்லாத பெ ரும் புண்ணியமுண்டாகும். ஆகையால் நாம் விதை க்க வேண்டுமென்று கடன்வாங்கி வைத்திருக்கின்ற விதையைத்தான் இவர்கள் விஷயத்தில் உபயோகி க்கவேண்டியதாயிருக்கிறது. ஆகையால் சடமாகிய

நிலத்தில் விதைவிதைத்து அதிகமாய் உழைத்தால் அந்த உழைப்புக்குத் தகுந்த சிறுபலனை அடையலாம். உயிருள்ள சரீரங்களில் விதைத்தால் உழைப்பில்லாமலே பெரும் பயனையடையலாம். அதிலும் ஸ்ரீமந்நாராயணருடைய பக்தர்கள் வயிற்றில் விதைத்தால் இந்தப்பிறப்பில் பெரும்பயனையும், மறுமையில் மேலான மோட்சத்தையுமடையலாம். ஆகையால் நம்முடைய விதையை இந்த ஹரிதாசர்களுக்குக் கொடுக்கும்படி நீங்கள் சம்மதிக்க வேண்டுமென்று சொன்னார். அதற்குப்புத்திரர்கள் யாதொருதடையுஞ்சொல்லாமல் சம்மதித்தார்கள். உடனே தங்களிடத்திலிருந்த விதையை எடுத்துக்கொண்டு வந்து அந்த ஹரிதாசர்களுக்குக்கொடுத்தார். அவர்கள் அதை வாங்கிக்கொண்டு போய்விட்டார்கள். அதன்பிறகு இவர் தம்முடைய நிலத்தில் விதைக்கும்பொருட்டு வேறொருவனிடஞ் சென்று விதை கடன்கேட்டார். அவனோ பேய்ப்பரங்கிவிதையைக் கடனாகக் கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு வந்து தம்முடைய நிலத்தில்விதைத்தார். இந்தச்சங்கதியை அவ்வூரார்களெல்லாருங்கேட்டு மிகவும் சிரித்தார்கள். இவ்விதமாகச் சிரித்ததுமல்லாமல் இவர் தம்மிடத்திலிருந்த விதைகளையெல்லாம் வந்து கேட்டவர்களுக்குக் கொடுத்துவிட்டு அந்தச் சமயத்தில் பேய்ப்பரங்கிக்காயை விதைத்துப் பயிரிடுகின்றார். ஆகையால் இனிமேல் ஏதாவது கேட்க வருபவர்களுக்கு அந்தப் பேய்ப்பரங்கிக் காயைக்கொடுப்பார் என்று சொல்லிச் சிலநாள்கள் பொறுத்து இவருடைய பயிரைப் பார்க்கலாமென்று இவருடையநிலமிருக்குமிடத்திற்குப் போய்ப் பார்த்தார்கள். அப்போது அங்கேபேய்ப்பரங்கிக்காய்கள் அதிகமாய்க் காய்த்திருந்தன. அதைப்பார்த்து ஒருகாயை அறுத்து உடைத்துப்பார்க்க, அந்தக்காயினுள்ளே முழுதும் கோதுமைகள் நிறைந்திருந்தன. அதைக்கண்டு அதிசயித்து ஸ்ரீபண்டரிநாதருடைய திருவருளே இப்படி யிருப்பதற்குக் காரணமாகும் என்று மிகவும் அதிசயங்கொண்டார்கள். இவ்விஷயத்தைஉணர்ந்த அவ்வூரதிகாரியானவன் இதை ஒரு கடிதத்தி லெழுதி அவன் சக்கரவர்த்திக்கு அறிவித்தான். இவ்விதமாக அனுப்பிய கடிதத்தில் எழுதப்பட்டிருந்த சங்கதியை மண்டலீகனாகிய துருக்கனானவன் உணர்ந்து மிகவும் அதிசயித்து உடனே சிலதூதர்களையழைத்து நீங்கள்போய் மாண்கோஜிபோதலேயை இங்கு அழைத்துக்கொண்டு வாருங்களென்றுசொல்லி யனுப்பினார். அவர்களும் அவ்விதமாகவே அந்தத்தாசரை அழைத்துக்கொண்டுவந்து ராஜசபையின்கண் விட்டார்கள்.

அரசனானவன் அவரைப்பார்த்து நடந்த சங்கதி என்னவென்று கேட்டார். நான் ஒன்றும் அறியமாட்டேன். ஸ்ரீபண்டரிநாதரே அறிவார் என்று சொன்னார். அதைக்கேட்ட அரசனானவன் மிகவுங் கோபித்து இவனோ வஞ்சகன். இவனை இன்றைக்கு நம்முடைய ஜாதியில் சேர்த்து விடுகிறேனென்று மனந்துணிந்து பசுவினது மாமிசத்தை அன்னத்தோடு கலந்து இவருக்கெதிரில் வைத்து இதை நீர் உண்ணக்கடவீர் என்று சொன்னான்.

அதைக்கேட்ட தாசரானவர் அந்த அன்னத்தை உற்றுப்பார்க்கவே அது ஸ்ரீமந்நாராயணருடையகிருபையால் புஷ்பமும் துளசியுமாகக்காணப்பட்டது. இவ்விதமாகவே அரசன் முதலானோர்க்கும் காணப்பட்டது. ஆகையால் அரசன் இவர்பரிசுத்தரென்று அதிகபயமும் ஆச்சரியமுங்கொண்டு இவருடைய திருவடிகளை வணங்கித் தேவரீருக்கு வேண்டுவனவற்றைக் கொடுக்கிறேன். ஆகையால் உங்களுக்கு வேண்டியவற்றைக் கேளுங்களென்று சொன்னார். அதைக்கேட்ட தாசர் சக்கரவர்த்தியாகிய துருக்கனைப்பார்த்து அரசனே! எனக்கு ஒன்றும் வேண்டியதில்லையென்று சொல்லித் தம்முடைய இருப்பிடத்தை யடைந்து மூடஜனங்களும் ஸ்ரீஹரிபக்தியைப் பெற்றுப் பிழைக்கும்படி இரவும் பகலும் ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டு இனிமையாக வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி முடித்தவுடனே சூரியன் அஸ்தமன மாயினன். அதைக்கண்ட நாபாஜிசித்தரானவர் மற்றைய சித்தர்களுக்கு நாளையதினத்தில் வரும்படிசொல்லி உத்தரவுகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடஞ்சென்று நித்தியக்கடனைமுடித்து ஸ்ரீமந்நாராயணனை நமஸ்காரஞ்செய்தார். மற்றைய சித்தர்களும் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச்சென்றார்கள்.

மாண்கோஜிபோதலே சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீசற்குருவேநமః

முப்பத்திமூன்ருவது

# கேசவசுவாமி சரித்திரம்.

துதி கவி.

பாசமுற்றும் பறியவருள்செய்த
ஈசன்மலரடி யிணங்கித்தினமுமே
ஆசையோடேயவன் மகிமைபெற
கேசவன்மலர் கிடைத்துவைநெஞ்சமே.

இவ்விதமாகச் சித்தர்களெல்லாம்சென்று அன்று இரவு ஸ்ரீமந்நாராயணனைத் தியானம் செய்துக்கொண்டிருந்து பிராதக்காலையில் எழுந்து காலைக்கடன்களை எவ்வாற்ருனும் யாதொரு குறைபாடில்லாமல் முடித்து ஸ்ரீ நாபாஜிசித்தரிடஞ்சென்று அவரைக் கண்டு சாஷ்டாங்கமாய்ப் பணிந்து நமஸ்காரஞ்செய்து பிறவிப்பெருங்கடலை ஒழிக்கவந்த பிஞ்ஞகனே! பெரும்வெள்ளமே! அஞ்ஞானத்தை யொழித்துத் திருவருளை யளிக்கும் அச்சுதசொரூபியே! தேவரீர் இதுவரைக்குஞ் சொல்லிவந்ததுபோல் இன்றைக்கும் எந்த பக்தர்களுடைய சரித்திரத்தையாவது சொல்லி அடியோங்களுடைய கர்மபாசத்தை ஒழித்து இரட்சிக்கவேண்டும் என்று பிரார்த்தனை செய்தார். அதைக்கேட்ட நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர். எப்படியென்ருல்,

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் இந்தத் தேசத்தில் உள்ளவரென்று பாகுபாடு அமைக்கப்பெருமல் எந்தஊரிலுஞ்சஞ்சரிப்பவராய் கேசவசுவாமி என்னும் திருப்பேருடையவராய் ஒருவர் இருந்தார். அவர் பிறவியென்னுந்தளையை ஒழிப்பவரென்னும் அடையாளம் விளங்க வைராக்கியக் குறியாக கடகத்தைத் தரித்தவராயுமிருந்தார். அவர் ஒருநாள் விஜாபூருக்கு வந்து பஞ்சாக்கினியின் மத்தியிலிருந்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக் கொண்டிருந்தார். இவருடைய சங்கீர்த்தனத்தை கேட்கும்பொருட்டு அவ்வூரிலுள்ள நான்கு வருணத்தார்களும் வந்து கூடினர்கள். இவ்விதமாய்க் கூடினவர்களில் சிலர் சகல சாஸ்திரங்களையும் நன்ருயுணர்ந்த சாதுஜனங்களாகவும், சிலர் வேதமார்க்கத்தை ஆராய்ந்த வைதிகர்களாகவும், சிலர் இலக்கிய இலக்கணங்களை ஆராய்ந்த பண்டிதர்களாயும் இருந்தார்கள்.

அப்போது கேசவசுவாமியானவர் தமது மாணுக்கர்களில் ஒருவராகிய ஒரு கிழப்பிராமணரை அழைத்து இன்றைக்கு ஏகாதசிவிரதமாகையால் எல்லாருக்கும் பரிசுத்தமானபிரசாதங் கொடுக்கவேண்டும், ஆகையால் ஐயரே! நீர் கடைத்தெருவிற்குப் போய் சர்க்கரை சுக்கு முதலிய சாமான்களை வாங்கிக்கொண்டு வாருமென்று கட்டளையிட்டார்.

அந்தக் கட்டளையையேற்ற அந்தக் கிழப்பிராமணர் கடைத்தெருவிற்குப்போய் அங்கு எல்லாக் கடைகளும் மூடியிருப்பதைக் கண்டு இனி இந்த இராத்திரிகாலத்தில் எங்கே போகலாமென்று மூடப்பட்டிருக்கின்றகடைகளில் ஒருகடையின் கதவைத் தட்டினர். அப்போது அதில்நித்திரைசெய்து கொண்டிருந்த செட்டியானவன் நித்திரையை விட்டெழுந்து என்னவேண்டுமென்று கேட்டான். அதற்கு அந்தக் கிழப்பிராமணரானவர் சுக்கு முதலிய வஸ்துக்கள் வேண்டுமென்று சொன்னர். அதற்கு அந்தச்செட்டியானவன் இப்பொழுது விளக்கில்லாமல் இருட்டாயிருப்பதினுல் அவனுடையகை நிதானத்தின்மேல் சுக்குப்பையைவிட்டு நாவிப்பையை அவிழ்த்து அதுவும் சுக்கைப்போலவே கைக்குக் காணப்பட்டதனுல் அதைச்சுக்கென்றே நினைத்துக் கொடுத்து சர்க்கரை முதலான மற்றப்பண்டங்களையுங்கொடுத்தான். அவைகளையெல்லாம் அந்தக்கிழப்பிராமணர் கொண்டுபோய்க் கேசவசுவாமியிடத்தில் கொடுத்து பிறகு பிரசாதமானது சித்தமாய்க்கொண்டிருக்கும்போது இந்தச் சங்கதியையுணர்ந்த ஸ்ரீமந்நாராயணனுனவர் இன்றைக்குப் பிரசாதம் உண்போர்களெல்லாம் மரணமாவார்கள். அவ்விதம் மரணமடைந்தால் ஸ்ரீஹரிபஜனைக்குப் போனவர்களெல்லோரும் இறந்துவிட்டார்களென்று நம்மேல் நிந்தனையுண்டாகும். தவிர இவ்வுலகத்திலுள்ளவர்களில் பெரும்பாலோர் பாமரர்களாகையால் அவர்களெல்லாரும் ஸ்ரீஹரிபஜனையானது அன்பர்களைக் கொல்லுவது என்று நிந்தனை சொல்லுவார்கள். அதனல் ஹரிபஜனை செய்வோர்களுக்கு இகழ்ச்சியே யல்லா

மல் புகழ்ச்சியுண்டாவதில்லே. ஆகையால் நம்முடைய திருநாமம் தாரகமென்பதும் பொய்யாய்முடியும் என்று சங்கற்பஞ்செய்து, அந்தக்கிழபிராமணர் கொண்டுவந்த நாவியின் சத்தைத் தாம் ஆக்கிரகித்துக்கொண்டு அதை ருசி முதலியவைகளால் சுக்குக்கு ஒப்பாயிருக்கும்படி செய்தருளினர். இது இப்படியிருக்க கேசவசுவாமியானவர் ஸ்ரீஹரிபஜனே செய்து முடிந்தவுடனே ஸ்ரீமந்நாராயணனுக்கு ஹாராதி சமர்ப்பித்து அன்பர்களுக்கெல்லாம் பிரசாதங்கொடுக்க வாங்கிக்கொண்டு போய்விட்டார்கள். இப்படியிருக்கக் கடைக்காரச்செட்டியானவன் மறுநாள் காலேயிலெழுந்து கடையைத்திறந்து சரக்குப்பைகளே வரிசையாய்வைக்கும்போது அவிழ்ந்திருக்கிற நாவிப்பையைப்பார்த்து, அந்தோ! நேற்று இரவு இந்நாவியைச் சுக்கென்று கொடுத்தோமே; அதைப் போட்டுச்செய்த பிரசாதத்தை உண்டவரெல்லாரும் இறந்திருப்பார்களே! அதனுல் நாம் பெரும்பாவத்துக்கு ஆளானேம். இதற்கு என்ன செய்வோம்என்று மனதில் எண்ணுதுமெண்ணி வருத்தப்பட்டுக் கடையைவிட்டு அந்த ஊர் வீதிகளில் வந்துநின்று நன்ருய் நிதானித்து எவ்விடத்திலும் அழுகுரல் இல்லாதிருப்பதையும் மயானத்திற்குப் போய் ஒருபிராமணனுவும் வேகாதிருப்பதையும் உணர்ந்து ஆலோசித்துக் கொண்டிருக்கும்போது ராத்திரி கேசவசுவாமி பஜனேக்குப்போயிருந்த ஒரு பாகவதர் அந்தவழியாக வந்தார்.

இந்தச் செட்டியாரானவர் அவரைப்பார்த்து ஓ சுவாமி! தேவரீர் நேற்று இராத்திரிபோயிருந்த கேசவசுவாமி பஜனேயில் என்னபிரசாதங் கொடுத்தார்களென்றுகேட்டார். அதற்கு அந்தப்பாகவதர் செட்டியாரே! சுக்கு முதலிய திரவியங்கள் சேர்ந்த திவ்வியமான சர்க்கரைப்பொங்கல் கொடுத்தார்களென்று சொன்னர். அதைக்கேட்ட செட்டியானவன் மிகவும் அதிசயமடைந்து ஸ்ரீபண்டரிநாதரானவர் நாம்கொடுத்தநாவியைச் சுக்காக்கிவிட்டார்போலிருக்கிறதென்று தீர்மானித்து மனந்தெளிந்து மகிழ்ச்சியடைந்து தன்னுடைய கடைக்குவந்து பகவானுடைய திருவடிகளேத் தியானஞ்செய்துகொண்டிருந்தார். இவர் இப்படியிருக்க, இப்பால் கேசவசுவாமியானவர் விடியற்காலத்திலெழுந்து ஸ்நானஞ்செய்து அனுஷ்டானமுதலியவைகளேமுடித்து பகவதாராதனம் பஜனே முதலியவைகளேயுஞ் செய்து ஹாராதி சமர்ப்பிக்கும்போது ஸ்ரீமந்நாராயணனுடைய திருமேனி கறுத்திருக்கக் கண்டார். இவர் இவ்விதமாகக் கண்டவுடன் நம்முடைய ஸ்ரீமந்நாராயணனுவர் இதுகாறுமில்லாத கறுப்பு நிறத்தை இன்று அடையவேண்டிய காரணமென்ன? என்று தீர்க்காலோசனே செய்துகொண்டிருக்குஞ் சமயத்தில் அவ்விடத்தில் செட்டியானவன் வந்து இவருடைய திருவடிகளே வணங்கி இராத்திரிநடந்த சங்கதியைச்சொல்லி அடியேன் அத்தி பூர்வமாகச்செய்த அபராதத்தைத் தேவரீர் பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தனேசெய்தான். அதுகேட்டகேசவசுவாமியானவர் கண்களில் நீர்த்ததும்ப விசனப்பட்டு நின்று, ஓ ஸ்ரீபண்டரிநாதனே! உம்முடைய பிரசாதத்தை உண்ட அன்பரை மரணமடையாமற் செய்து உம்முடைய வெற்றியை யாவரும் உணரும்படி விளக்கியருளினீர். நாவியின் சத்தையுண்டு திருமேனி கறுத்தீர். ஆகையால் பிரகலாதாழ்வானும் உருத்திரமூர்த்தியும் உமது திருநாமோச்சாரணத்தினுல் விஷத்தையுண்டும்பிழைத்திருக்கிருர்கள். தவிர அவர்களுடைய நிறம் ஒன்றும் மாறுபடவில்லே அப்படியிருக்க உம்மைமட்டும் கறுத்த நிறஞ் சேர்ந்திருப்பதைப்பற்றி ஆலோசனே செய்யுமிடத்தில் நீர் நாவியின்சத்தை ஆக்கிரகித்ததாக ஏற்படுகின்றது. ஆயின் அது அமிர்தத்தை மரணநோய் அணுகினது போலவும், சூரியனே இருள் அணுகினுற்போலவும், குளிர்ந்த சந்திரனுக்கு வேர்வை யுண்டானுற்போலவும் இருக்கின்றது. ஆகையால்தேவரீர் அடியோங்களுடைய மனத்தின்கணுள்ள துன்பங்களெல்லாம் மாறுபட்டு தேவரீர்திருமேனியில் இப்போதிருக்கிற நிறம்மாறி முன்னேய நிறத்தைக்கொண்டு எங்களுக்குத் தரிசனங் கொடுக்கவேண்டாமென்று இடைவிடாமல் பிரார்த்தனே செய்தார்கள்.

அப்படியே ஸ்ரீமந்நாராயணனும் அவர்களுடைய மனவிருப்பத்தின்படியே தமது நிறம் மாறி முன்போலவே சேவைகொடுத்தருளினர். இந்த அதிசயத்தைப் பார்த்தவர்களெல்லோரும் சந்தோஷித்துக் கொண்டாடினர்கள். கடைக்கார செட்டியும் அடியார்களில் ஒருவனுயினன். கேசவசுவாமிகளும் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு இனிமையாக வாழ்ந்திருந்தார் என்று சொல்லச் சூரியன் மேற்கேசெல்ல மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தம்மிருப்பிடஞ் சென்ருர்.

கேசவசுவாமி சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

முப்பத்திநான்காவது

# லதீப்ஷாபக்தர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

ஐயனே யெனையாண்ட வண்ணலே யநாதியான
துய்யனே வைராக்கியந் துலங்கினோர்க் கருள்செய்
மெய்யனே பாலாழி மேவுகின்ற வப்பனே
கையனே யெனைமுத்திக் கரைவிடுத் தாளுவையே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்று இரவை வெகு பிரயாசையுடன் கழித்து மறுநாள் காலையிலெழுந்து நித்தியகடன்களை முடித்துக்கொண்டு வெகு பயபக்தியுடன் விரைந்து நாபாஜி சித்தர் இருப்பிடத்திற்குவந்து அவரை உள்ளன்போடு வணங்கி நமஸ்காரஞ்செய்து எங்களுக்குத் தேவரீர் இவ்விதமாகத்தினமுஞ் சொல்லிக்கொண்டு வருகின்றீர். நாங்களுங் கேட்டுக்கொண்டு வருகின்றோம். ஆனால் ஒருபிரயோசனத்தையும் இதுவரைக்கும் அடைந்ததில்லை. ஆகையால் இனியர்வது எங்களுக்கு மோட்சசாம்பிராஜ்யங் கைகூடும்படியான சரித்திரங்களைத் திருவாய் மலரவேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தர் மிகவுங் கருணையுடன் ஸ்ரீமந் நாராயணனை அசைவற்றுக் கொஞ்சநேரமிருந்து தியானித்து அதன் பின்னர் அந்தச் சித்தர்களைப்பார்த்து அன்பிற்சிறந்த சித்தர்களே! நீங்கள் கேட்டவாறே இன்றைக்கு அந்நியமதஸ்தனுகிய லதீப்ஷாபக்தனுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன். அதை நீங்கள் நன்றாய்க் கேளுங்கள். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் மகம்மதியமதத்தில் லதீப்ஷா என்கிற பேருள்ளவர் ஒருவர் இருந்தார். இவர் துருக்கமதத்தில் பிறந்தவராகையால் அந்த மதத்திற்குரிய அநேக நூற்களை ஆராய்ந்தும், ஒன்றும் பலனை யடையாமையால் அவர் கீதை பாகவதம் முதலாகிய புராணங்கள் இவைகளை உள்ளந்திரிபறக் கேட்பவராயும், யாவராலும் குற்றமெடுத்துச் சொல்லப்படாத வைஷ்ணவமதத்தை மேற்கொண்டவராயும், அகோராத்திரம் ஸ்ரீமந் நாராயணனைக்குறித்துப் பஜனைசெய்பவராயுமிருந்தார். நாள் தவறினாலும் நாழிகை தவறாமல் ஸ்ரீ விஷ்ணு பூசை செய்பவராயுமிருந்தார்.

இவர் இவ்விதமாகவிருப்பதை உள்ளது உள்ளவாறேயுணர்ந்த இவர் மதத்தினராகிய துஷ்டர்களான துருக்கர்கள் தங்களுடைய அரசனிடத்தில் போய் அரசனே! நம்முடைய துருக்கசாதியிற் பிறந்த லதீப்ஷாபக்தராயினர். நம்முடைய மதத்தினராயிருந்தும் நமக்கு அந்நியமதமாகிய வைஷ்ணவ மதத்திற்போய்ச் சேர்ந்திருக்கிறார்; ஆகையால் அவரை மீண்டும் நம்முடைய சாதியிற் சேர்க்க வேண்டுமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட அரசன் அவர்களைப்பார்த்து, ஜனங்களே! நீங்கள் நம்முடைய மதத்திற்குவிரோதியாயிருக்கின்ற லதீப்ஷா என்பவனது வீட்டிற்புகுந்து அவனுக்கென்று இருக்கிற பொருள்களையெல்லாங் கொள்ளையிடுங்கள் என்று சொன்னான். அவர்களும் அப்படியே போய் அவருடைய வீட்டில் நுழைந்து இவரைப் பார்த்தார்கள். உடனே அவர்களுக்குச் சாந்தமுண்டாய் தங்களைத் தாங்களே இகழ்ந்துகொண்டு இதுவரைக்கும் நாம் செய்துகொண்டிருந்த ராஜசேவையானது மிகவுங்கொடியது. ஆகையால் இனி இராஜசேவையைவிட்டு இவரிடத்தில் தங்கியிருந்து பகவத்கீத காலக்ஷேபம் முதலியவைகளை உள்ளன்போடு கேட்டுக் கடைத்தேறுவோமென்று எண்ணித்தீர்க்கயோசனைசெய்து அவ்விடத்தின்கண்ணே

யிருந்துவிட்டார்கள். இவ்விடத்தில் இப்படி நடந்த சங்கதிகளையெல்லாம் அரசன் கேள்விப்பட்டுத் தானே நேராகவந்து இவரை வருத்தப்படுத்தவேண்டுமென்று நினைத்து இராஜமாளிகையிலிருந்து புறப்பட்டு லதிப்ஷாவின் வீட்டுக்குள்ளே நுழைந்து அப்போது இவர் செய்துக்கொண்டிருந்த ஸ்ரீபாகவத காலக்ஷேபத்தைக் கண்ணாரக்கண்டு நாமும் கொஞ்சநேரம் நின்று கேட்போமென்று நின்று கேட்டுக்கொண்டிருந்தான். அப்போது அந்த வீட்டின் சுவர்முழுவதும் ஸ்ரீமந் நாராயணனுடைய தசாவதாரச் சித்திரங்கள் எழுதப்பட்டிருப்பதைப் பார்த்து மிகவும் அதிசயித்து அந்தச் சித்திரங்களுக்குள்ளே ஒன்று ஸ்ரீகண்ணபிரானுக்கு ராதையானவள் வெற்றிலையை மடித்துக்கொடுக்கிறதுபோல ஒரு சித்திரமிருப்பதைக் கண்டு, ஓ சுவாமி! இதோ இங்கு இருக்கிற சித்திரங்களில் ஒன்று ராதா என்பவர் வெற்றிலைச் சுருளை மடித்துக் கையில் வைத்துக்கொண்டு நிற்க, அதைக் கண்ணபிரான் ஏற்றுக்கொள்ளாம லிருக்கின்றாரே அது ஏன்? அதைச் சொல்லுமென்று லதிப்ஷாவை அரசன் கேட்டான். அதைக்கேட்ட லதிப்ஷாவானவர் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைத் தியானஞ்செய்து ஓ பரமகாருண்யனை பகவானே! நீர் ராதாபிராட்டியார் ஏந்திக்கொண்டு நிற்கிற வெற்றிலை மடிப்பைத் தேவரீர் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று மிகவும் பிரார்த்தனைசெய்தார். இதையறிந்த சித்திரரூபமாயிருந்த கண்ணபிரானனவர் அழகிய தம்முடைய பவழம்போலும் வாயைத்திறந்து வெற்றிலைச்சுருளை வாங்கிக்கொண்டார். அதைக்கண்ட மகம்மதிய அரசனானவன் மிகவும் ஆச்சரியப்பட்டு சித்திரமாகிய கண்ணன் வாயைத் திறந்ததும், சித்திரமாயிருந்த ராதை தன் கையிலிருந்த வெற்றிலைமடிப்பை அவர் வாயிலிட்டதும் மிகவும் ஆச்சரியமா யிருக்கிறதென்று இவரது மகிமையைப் புகழ்ந்து கொண்டாடி, இவரது திருவடியை வணங்கிநின்று இப்படிப்பட்ட மகாத்துமாவாகிய உம்முடைய பெருமையை நான் அறியாமல் உம்மை வருத்தப்படுத்த வேண்டுமென்றுநினைத்து, இவ்விடத்திற்கு வந்தேன். ஆகையால் தேவரீர் என்னுடைய அபராதத்தை நீர்க்ஷமித்து எமக்குத் திருவருள் செய்ய வேண்டுமென்று பிரார்த்தனைசெய்து அவரிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு தன்னுடைய ஊரிற்போய்ச் சேர்ந்தான். அதன்பின்னர் லதிப்ஷா என்பவரும் இடைவிடாமல் ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு மிகவும் நன்றாய் வாழ்ந்து கொண்டிருந்தார், என்றுசொல்லி மற்றச் சித்தர்களைப்பார்த்து, சித்தர்களே! சூரியன் அஸ்தமனமாகிற சமயமாயிற்று. ஆகையால் நீங்கள் சென்று நாளையகாலையில் வாருங்களென்றுசொல்லி உத்தரவு கொடுத்து அனுப்பினார். அவர்களும் அவ்வாறே தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்றார்கள். நாபாஜிசித்தரும் தம்முடைய ஆசிரமத்தை அடைந்தார்.

லதிப்ஷாபக்தர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ
ஸ்ரீகிருஷ்ணாயநம:

முப்பத்தைந்தாவது

# அங்கதபூபதி சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

இங்கித மாகிய வெண்ணத்தை நீக்கியே
சங்கரி ரூபமாய்த் தயங்கின விறைவனை
மங்குத லின்றியே மனத்திற்கொண் டுன்னுறும்
அங்கத பூபதி யன்பை விளம்புவாம்.

இவ்விதமாகச் சென்ற சித்தர்களெல்லாம் அன்று இரவை ஸ்ரீமந் நாராயணனிடத்தில் அன்பு பாராட்டிக் கழித்து மறுநாள் உதயத்தில் எழுந்து நித்தியகடன்களை முடித்துக்கொண்டு இறைவனைத் துதிசெய்து அங்கிருந்துபுறப்பட்டு நாபாஜி சித்தர் வாசஞ்செய்துக்கொண்டிருக்கிற இடத்திற்கு வந்து காலைக்கடனை முடித்து ஸ்ரீமந் நாராயணனைத் துதிசெய்து கொண்டிருக்கும் நாபாஜிசித்தரைக் கண்டு உள்ளன்போடு வணங்கி, ஓ சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் எங்களுக்குச் சொல்லிவந்த பக்த விஜயங்களால் அடியேங்களுடைய உள்ளங்களெல்லாம் சிறிது ஒடுங்கப்பட்டன. ஆயினும் எப்பொழுதும் அப்படியே நிலைக்காமல் தடுமாறுகின்றன. ஆகையால் தாங்கள் எங்கள்மீது முக்கிய கிருபா கடாட்சம்வைத்து இன்னும் இப்படிப்பட்ட பக்தர்களுடைய விஜயங்களைத் திருவருள்செய்து எங்களுடைய மனம் ஒடுங்கும்படி திருவருள்செய்யவேண்டுமென்று பலமுறையும்வேண்டிக்கொண்டனர். அது கேட்ட நாபாஜிசித்தர் அப்படியே ஆகட்டுமென்று சொல்லத்தொடங்கினார். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! உங்களுக்கு நான் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் பரம காருண்யத்தால் மனம் ஒரேநிலையில் நிலைக்கத்தக்க பரமபக்தர்களுடையவிஜயங்களை அநேகமாக எடுத்துச்சொல்லியும் உங்களுடைய மனம் பூர்த்தியாக ஒடுக்கநிலையை யடையாமையால் உங்களுக்கு இப்போது அங்கத பூபதியின் சரித்திரத்தைச் சொல்லுகிறேன். அதை நீங்கள் உள்ளன்போடு சிரவணஞ்செய்து வருவீர்களானால் நீங்கள் கொண்டிருக்கிற எண்ணங்கைகூடும் என்று சொல்லி அதைச் சொல்லுகின்றார்.

கேட்டீர்களே சித்தர்களே! பூர்வத்தில் யாவராலும் புகழத்தக்க ஒரு நகரம் இருந்தது. அதில் அங்கதபூபதி என்னும் பெயர்களைப்பெற்ற இரண்டு சகோதரர்கள் இருந்தார்கள். அவர்களில் ராயசிங் என்று மூத்தவனுக்கும், அங்கதபூபதி என்று இளையவனுக்கும் பெயர்களிருந்தன. இவர்கள் அந்த ஊருக்கு அரசர்களாக யிருந்தார்கள். ஆனால் இவர்களில் இளையவராகிய அங்கதபூபதியின் மனைவியார் மிகுதியும் அரிபஜனையிற் சிறந்தவரும், சாதுக்கள் பூஜை செய்பவரும், ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ்செய்பவருமாயிருந்தார். இவருக்கு இவ்வாறு பஜிக்க உபதேசஞ்செய்த ஞானகுருவானவர் ஒருநாள் அவ்விடம்வந்தார். அந்த அம்மையார் அவரைப் பார்த்துப் பூசித்துச் சாஷ்டாங்கமாக வணங்கி வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் உபசாரஞ்செய்ய எத்தனஞ்செய்வதை இவருடைய நாயகராகிய அங்கத பூபதி என்பவர் பார்த்து பதிவிரதா ஸ்திரீகளுக்கு தம்முடைய புருஷர்களேயல்லாமல் குரு என்னும் வேறொரு தெய்வம் உண்டென்று யார் சொன்னார்கள்? என்று கோபித்து பெண்ணே! நீ இப்படி சொல்வது தகுதியல்லவென்றுசொன்னான். அதைக் கேட்ட மனைவியார் பதில் உத்தரம் ஒன்றுஞ் சொல்லாமல் அன்னபானாதிகளைவெறுத்து மூன்றுநாள் வரைக்கும் பட்டினியாயிருந்தார். அந்தச்சமயத்தில் ஸ்ரீலட்சுமிநாதரானவர் அங்கதபூபதியின் கனவில் தோன்றி அவருக்கு எதிரேநின்றார். உடனே அங்கதபூபதியானவர் அவரை எதிர்கொண்டு வணங்கி நின்றார். அப்போது பகவானானவர் இவரைப்பார்த்து அன்பனே! நீ உன் மனைவியின்மீது கோபங்கொண்டு நீ வணங்கி வழிபடுகின்ற தெய்வத்தைக்

காட்டென்று சொல்லி வற்புறுத்தினய். ஆகையால் நான் உனக்கு எதிரே தோன்றினேன். இதைக் கண்டுகொள்ளென்றுசொல்லி மறைந்தார். அதைக் கண்ட அங்கதபூபதியானவர் கண்விழித்தெழுந்து மனைவியாரிடத்துக்குவந்து பகவானனவர் உன்னுடைய பக்திக்கு மனமகிழ்ந்து எனக்குச் சேவை சாதித்தார். ஆகையால் உன்னைக் கடுஞ்சொற்களால் வற்புறுத்தின என்னுடைய அபராதத்தையும் பொறுத்தருள வேண்டுமென்று மிகுதியும் பிரார்த்தனை செய்தார்.

இவ்விதம் வேண்டிக்கொண்டவர் பிறகு தம்முடைய மனைவியார்க்கு அநுக்கிரகஞ்செய்த ஞானசிரியரை அழைப்பித்து அவரிடத்தில் தாமும் அநுக்கிரகம்பெற்று தம்முடைய மனைவியாருந் தானும்சேர்ந்து ஸ்ரீஹரிசேவை குருசேவைகளைச் செய்துகொண்டிருந்தார்கள்.

இவர்கள் இவ்விதமாக இருக்குங்காலத்தில் இவருக்கு மூத்தவராகிய ராயசிங் என்பவர் இவரைப் பகைவர்மேல் படையெடுத்துப்போய் வென்று வரும்படி ஏவினர். இவரும் அப்படியே சென்று பகைவர்களை ஜெயித்து அநேக இரத்தினங்களையும் தனதானியாதிகளையும் கொண்டுவந்து ஸ்ரீவிஷ்ணு பக்தர்களுக்குத் தானம்பண்ணி மிகுதியான பொருள்களைத் தம்முடைய மனைக்குக் கொண்டுவந்து அதில் ஒரு ஒளிமிகுந்த வயிரத்தைப்பார்த்து அதை ஸ்ரீஜகந்நாதப்பெருமானுக்குச் சமர்ப்பிக்க வேண்டுமென்று எண்ணியிருந்தார்.

இவர் இப்படியிருக்குஞ் சமயத்தில் இதை அறிந்த அங்குள்ள சிலர் இந்தச் சங்கதிகளை இவருக்கு மூத்தவராகிய சிங்கிடத்தில் போய்ச்சொன்னர்கள். அவர் அந்த வயிரத்தைத் தனக்குத் தரவேண்டுமென்று சொல்லியனுப்பினர். அதற்கு அங்கதபூபதியானவர் நான் அதை ஜகந்நாதப்பெருமானுக்குச் சமர்ப்பிக்க வேண்டுமென்று வைத்திருக்கிறேன். ஆகையால் அதைக் கொடுக்கமாட்டேன். வேறு எந்தப் பொருளைக் கேட்டாலுங் கொடுப்பேன் என்று சொன்னர். இதைக்கேட்ட ராயசிங்கு மிகவுங் கோபங்கொண்டு தம்முடைய தங்கையை அழைத்து தங்காய்! அங்கதனுக்கு விஷங்கலந்த அன்னத்தையிட்டு அவனைக் கொல்லக்கடவாய்? என்று உத்தரவு கொடுத்தார். அவளும் இவன் சொன்னபடி செய்யாவிட்டால் நம்மைக் கொல்லுவானென்று பயந்து, ஒருநாள் விஷங்கலந்த அன்னத்தை அங்கதபூபதிக்குப் படைத்தாள். அவரும் வழக்கப்படியே அந்த அன்னம் முதலியவற்றைப் பகவதர்ப்பணம்பண்ணி உண்ணும்போது இவனது மனோதிடத்தை அறியும்பொருட்டு நீ பகவதர்ப்பணம் பண்ணின இந்த அன்னம் விஷங்கலந்தது. ஆகையால் இதை நீ உண்ணவேண்டாமென்று சொல்லவும், இவர் பகவதர்ப்பணமானதை உண்ணுமலிருக்கமாட்டேனென்று சொல்லி மிக்க விருப்பத்தோடு உண்டபிறகு தம்முடைய மனைவியிடம் வந்து நடந்த சங்கதியைச்சொல்லி இனி இங்கே இருக்கத் தகாதென்று மனைவியும் தாமும் புறப்பட்டு ஸ்ரீ ஜகந்நாதத்துக்குப் பிரயாணப்பட்டுப் போகும்போது இந்தச் சங்கதிகள் யாவையும் சிலர் போய் ராயசிங்குக்குச் சொன்னர்கள்.

அதைக்கேட்ட இராயசிங் இவர் போகிறவழியில்போய் இவரைத்தடுத்து வயிரத்தைப் பறித்துக் கொண்டுவரும்படி தன்னுடைய மந்திரியை ஏவினன். அந்த மந்திரியானவன் தன்னுடைய சேனைகளுடன்கூடிவந்து இவர் போகும்வழியிலுள்ள ஒரு ஆற்றங்கரையில் இவரை வளைத்துக்கொண்டான். இதைக்கண்ட அங்கதபூபதியானவன் இவன் வயிரத்தைப் பறித்துக்கொண்டு போக வந்தானென்று உணர்ந்து அந்த வயிரத்தைத் தமது கையில் வைத்துக்கொண்டு அந்த மந்திரிக்குக் காட்டி அப்பா மந்திரி! இது ஜகந்நாதப்பெருமாளுக்கு அர்ப்பணம் என்றுசொல்லி அதை அந்த ஆற்றில் எறிந்துவிட்டார். அப்போது மந்திரியானவன் சிலரை ஏவினன் அவர்கள் ஆற்றிலிறங்கித் தேடுவதைக்கண்ட இவர் அப்பா! நீங்கள் ஏன் கஷ்டப்படுகிறீர்கள்? அது உங்கள் கைக்கு அகப்படாது. அது ஸ்ரீஜகந்நாதப் பெருமானுடைய திருமார்பில் ஆபரணமாய் அமர்ந்திருக்கிறது. நீங்கள் அதைப் பார்க்க எண்ணங் கொண்டால் என்னோடு வாருங்கள் காட்டுகிறேனென்றுசொன்னர், அதைக்கேட்ட மந்திரி முதலாயினோர் அப்படியே காட்டுமென்று அவருடன் தொடர்ந்துபோய் ஸ்ரீ ஜகந்நாதத்தை யடைந்து கோயிலுக்குள்ளேபோய் பகவானுடைய திருமார்பின் பதக்கத்தில் வச்சிரம் அமைந்திருப்பதைப் பார்த்து ஆற்றில் எறியப்பட்ட வயிரக்கல் இந்தப் பகவானுடைய மார்பின் பதக்கத்தில்வந்து அமர்ந்திருப்பது எப்படியென்று அங்குள்ள அர்ச்சகர்களை வினவினர். அதற்கு அவர்கள் மந்திரியைப் பார்த்து ஐயா! இரண்டுநாளைக்குமுன்னமே இந்தப்

பெருமானனவர் எங்கள் கனவில் எழுந்தருளி என்னுடைய அன்பனுகிய அங்கதபூபதி ஒரு வயிரக் கல்லை என்னுடைய நிமித்தம் ஆற்றிலெறிந்தான். அது இங்கே வந்திருக்கும். அதை எடுத்து என் பதக்கத்தில் சேருங்களென்று உத்தரவுகொடுத்தார். அவ்வாறே நாங்கள் எழுந்து பார்க்கும்போது அது சந்நிதியில் காணப்பட்டது. அதையெடுத்து பகவான் உத்தரவைப்போல் பதக்கத்தில் அமைத்தோம் என்று சொன்னர்கள். அப்போது மந்திரி முதலாயினேர் அந்தப்பதக்கத்தை உற்றுப்பார்த்து இது ஆற்றிலெறியப்பட்ட கல்லேயென்று அறிந்து இது என்ன அற்புதம்! என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு இவ்விடத்தில் நடந்த சங்கதிகள் யாவற்றையும் ஒரு கடிதத்தில் எழுதி, ஒரு தூதன் கையில்கொடுத்து ராயசிங்குக்கு அனுப்பினர்கள். அந்தத் தூதனனவன் சீக்கிரமாகப்போய் அந்தக் காகிதத்தைக் கொடுக்க, அந்த ராயசிங் படித்துப் பார்த்து, ஐயோ! ஸ்ரீமந் நாராயணனுடைய பக்தனை என்னுடையதம்பியை வீணகவருத்தினேனே யென்று அனுதாபங்கொண்டு ஒரு கடிதம் எழுதுகின்றன். எப்படியென்றல்,

என்னுடைய அன்பும் பிரியமுமுள்ள சிரஞ்சீவி தம்பி அங்கதபூபதிக்கு ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினுடைய கிருபையால் சகல நன்மைகளும் மேன்மேலும் உண்டாவதாகவும். இவ்விடம் க்ஷேமம். உன்னுடைய க்ஷேமமும் அவ்வாறேயாகுக. நீ ஜகந்நாதருக்குப் பக்த அன்புள்ளவனென்று உணராமல் உன்விஷயத்தில்செய்த அபராதத்தைப் பொறுத்து இந்தக்ஷணமே வந்து எனக்கு உன்னுடைய முகதரிசனங் கொடுக்கவேண்டும். தவறவேண்டாம்.

இங்ஙனம்:

(கையெழுத்து) இராயசிங்.

என்று எழுதித் தூதன்கையில் கொடுத்தனுப்பினர். அதைத்தூதன் கொண்டுவந்து அங்கதபூபதியின் கையிற் கொடுக்க அங்கதபூபதியானவர் அதைப் படித்துப்பார்த்து என்னுடைய தமையனுக்கு ஸ்ரீஜகந்நாதப் பெருமானனவர் நல்ல புத்தியை இப்பொழுதுதான் கொடுத்தருளினரென்று மனம் சந்தோஷித்து ஸ்ரீஜகந்நாதப்பெருமானை உள்ளபடியேவணங்கி விடைபெற்றுத் தம்முடைய ஊரையடைந்து தமையனைக் கண்டார். தமையனும் இவரை அன்போடு தழுவிக்கொண்டான். பிறகு ராயசிங்கானவர் ஹரிபஜனையில் மிகவும் விருப்பமுள்ளவராயிருந்தார். இவரும் தம்முடைய மனைவியாருடன்கூடி ஹரிபஜனை செய்துக்கொண்டு இனிமையாக வாழ்ந்திருந்தார். என்றுசொல்லி நாபாஜி சித்தர் அஸ்தமனமானதைப்பார்த்து அவரவர்களுக்கு விடைகொடுத்தனுப்பித் தாமும் தமது இருப்பிடஞ்சென்றர்.

அங்கதபூபதி சரித்திரம் முற்றிற்று.

---



முப்பத்தாறுவது

# மண்டலீகராஜன் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

அண்டர்கோன் திருப்புகழை யவனிதனில்நிறுத்திவைத்த
யன்பர்கட்கருள்செய்த வச்சுதவைகுந்தனே
தொண்டர்கட்டுயர்தீர்த்த சூரியநாராயணு
தோற்றுமுயிர்பவக்கடலை தொலைவித்ததீனனே
மண்டுபுகழ்கொண்டிலகு மாயாவதாரனே
மறலிதுயரெஞ்ஞான்று மாநிலரைவருத்தாது
மண்டலீகர்க்கருளு மாதவா கேசவா
மலரடியைவணங்கினேன் மகிழ்ந்தெனைக்காப்பையே.

இவ்விதமாகவே மறுநாள் பிராதக்காலத்தில் சித்தர்களெல்லாம் எழுந்து நித்தியக்கடனை முடித்துக்கொண்டு நாபாஜிசித்தரிடம் வந்து சாஷ்டாங்க நமஸ்காரம்பண்ணி, ஓ சுவாமி! தேவரீர் இதுகாறும் திருவாய்மலர்ந்த சரித்திரங்களால் அடியோங்களுடைய உள்ளமானது சிறிதுதெளிவடைந்தது. ஆனுலும் மற்றக்காலங்களில் சிறிதுவியாபாரத்தில் செல்லுகின்றது. ஆகையால் தேவரீர் எங்களுடைய மனமானது எப்பொழுதும் ஒரே தன்மையாயிருக்கும் வண்ணம் திருவாய்மலரவேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தர் ஆனுல் அப்படியே சொல்லுகிறேனென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றுல்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னெருகாலத்தில் இந்துஸ்தானம் என்னும் நகரமிருந்தது. அதை மண்டலீகன் என்னும் உண்மைப்பெயருள்ள ஒரு அரசன் இராஜ்யபரிபாலனஞ் செய்துக்கொண்டிருந்தான். அவனே கற்பிற்கு அருந்ததிபோன்ற குலஸ்திரீயை விவாகஞ் செய்துக்கொண்டான். அவள் அவனுடன்கூடி வாழுங்காலத்தில் மகா குணவதியாக வாழ்ந்து கொண்டிருந்தனள். இவளுடைய பெயரோ அக்காலத்தவர்களால் சுலக்ஷணி என்று சொல்லப்பட்டு வந்தது. இவர் ஸ்ரீமந்நாராயணருடைய பக்தியிற் சிறந்தவராயும், ஏகாதசிவிரதத்தை ஓயாமல் நடத்துபவராயுமிருந்தார். இவர் கணவராகிய மண்டலீக அரசரோ விரதம், அனுஷ்டானம் முதலியவைகள் இல்லாதவராய் மனத்தில் மாத்திரம் ஹரிநாமத்தை தியானஞ்செய்துக்கொண்டிருந்தார். ஆனுல் இவருடைய மனேவுறுதியை அவருடைய பத்தினியார் நன்குஉணராமையால் அரசனைநோக்கி என்னுடைய பிராணநாதரே! நீர் விஷ்ணுபூஜைசெய்யவேண்டும் என்றுள். அதுகேட்ட அரசன், ஓபெண்ணே! நான் இராஜ்ஜியபரிபாலனஞ் செய்வதினுல் மனநிலையில்லாதவனுகவிருக்கிறேன். ஆகையால்நான் ஹரிபூசைசெய்யமுடியாதென்றுசொன்னுர். அதைக்கேட்ட சுலட்சணி என்னும் அரசனுடைய பத்தினி மனவருத்தத்தோடிருக்குங் காலத்தில் ஒருநாள் இராஜாவானவர் நித்திரையி லிருக்குங்காலத்தில் ராமாவென்று உச்சரித்ததைக் கேட்ட தேவியார் விடியற்காலத்தில் எழுந்திருந்து நீராடிவந்து நித்திய கர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீஹரி பூஜை பிராமணசமாராதனை ஹரிநாமசங்கீர்த்தனம் உற்சவம் முதலியவைகளைச் செய்யத் தொடங்கினுர். இதைக்கண்ட இராஜாவானவர் இன்று நீர் இப்படிசெய்வதற்குக் காரணமென்னவென்றுகேட்டார். அதற்குத் தேவியார் நாயகரைப் பார்த்து உமது வாயால் ஒருதரமானுலும் ராமநாமோச்சாரணஞ்செய்ய நான் ஒருகாலத்திலும் கண்டதில்லை. இதற்காக நேற்றைய இரவு நீர் நித்திரை செய்துகொண்டிருந்த காலத்தில் ராமநாமோச்சாரணத்தை உமது வாயினுல் சொல்லக்கேட்டு மனங்களிப்படைந்து அந்தக் களிப்பினுல் இந்த உத்ஸவாதிகளை நடத்தினேன் என்று சொன்னுர். அதைக்கேட்ட அரசர் ஒருவருமறியாதிந்த என் மனத்திற் பொதிந்து வைத்திருக்கின்ற ஸ்ரீராமரானவர் அந்த மனமாகிய இடத்தைவிட்டு வாயின் வழியாக வந்து வெளிப்பட்டாரோவென்றுசொல்லி, அந்த ஸ்ரீராமபிரானுடைய திருவடிகளுக்குத் தமது உயிரைச் சமர்ப்பித்தார். அதைக்கண்ட தேவியாரும் உடலைவிட்டு நீங்கி தம்முடைய நாயகரைத் தொடர்ந்து போயினர். ஆகையால் இந்த இரண்டுபேருடைய உண்மையாகிய அந்நியோந்நிய நிலைமையைப்பார்த்திரோவென்று யாவரும்வியந்து கொண்டாடினர்கள் என்றுசொல்லி முடிந்தவுடன் சூரிய நாராயணனவன் இக்கதைகளைக்கேட்டிருந்து போனவன்போல் அஸ்தமனமாயினன். ஆகையால் நாபாஜிசித்தரானவர் மற்றைய சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தம்மிருப்பிடஞ் சென்றுர். இதுபோலல்லவோ பக்தியிருக்க வேண்டுமென்று யாவரு மறிகின்றுர்கள்.

மண்டலீகராஜன் சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநமஃ

முப்பத்தேழாவது

# குணவதிபாயி சரித்திரம்.

மணமக்கள்மிகவாழ்வர் மாதநனிவருவள்
மங்கலநன்வினை பெருகுமாநிதியம்வளரும்
இணைமக்களெய்துவரிங் கினியில்லையெனும்பயனு
மீதுடனுமெண்ணமெலா மிறைவனருள்கூடும்
அணிமருவுகுலத்திவர்க்கு மாங்காரநீங்கியே
யஞ்ஞானமிரிந்தநனி விஞ்ஞானமெய்துமே
குணவதியாள்திருச்சரிதக் கூற்றினையுட்கொள்வோர்க்கு
கொண்டல்வர்ணன்திருவருளுங் கூடிவருமன்றே.

இவ்விதமாகச் சென்ற சித்தர்களெல்லாம் அன்று இரவு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் திருவடிகளையே உள்ளன்போடு தியானஞ் செய்துக்கொண்டிருந்து பிராதக்காலத்திலெழுந்து இந்திரதிக்கிற்சென்று நித்தியக்கடனை முடித்துக்கொண்டு உண்டியாதிகளைக் கிரமப்படி எடுத்துக்கொண்டு அங்கிருந்தும்புறப்பட்டு நாபாஜிசித்தர் இருக்குமிடத்திற்குப் போய், அவரைக்கண்டு எம்பெருமானே! தீனதயாளா! தெய்வசிரேஷ்டா! உன்மனுதிதா! உயிர்களுக்குள் விளங்கும் உத்தமசிலா! என்று அவரை ஸ்ரீ விஷ்ணுரூபமாகப் பாவனைசெய்து வணங்கி, ஐயா! அடியோங்களுக்கு இன்று ஒரு சரிதத்தைத் திருவாய்மலரவேண்டும் என்று இறைஞ்சினர். அது கேட்ட நாபாஜிசித்தர் மிகவும் தம்முடைய திருவுள்ள மகிழ்ந்து அப்படியே சொல்லுகிறேனென்று சொல்லத் தொடங்கினர்.

கேட்டீர்களோ சித்தர்களே! நான் இதுவரைக்கும் சொல்லி வந்ததைப்போல் இதுவும் கேட்பவர்களுக்கு மகாமோட்சசாதனத்தை உண்டாக்குவதாகும். ஆகையால் இதை உள்ளன்போடு கேட்பீராக.

முன்னொருகாலத்தில் இவ்வுலகத்தில் சிறந்து விளங்கினதாகிய ஒருநகரம் இருந்தது. அதற்கு மாதவசிங் என்று திருப்பேரையுடைய ஒரு அரசனிருந்தான். இவனுக்குக்குணவதிபாயிஎன்றுபெயருள்ள ஒரு மனைவியிருந்தாள். இவ்விருவரும் இல்லற தருமத்தில் யாதொரு குறைபாடுமில்லாமல் நடத்தி வந்துகொண்டிருக்குங் காலத்தில் இவர்களுக்கு இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். இந்தப் புத்திரர்கள் இருவரையும் குணவதியாருடைய தாதிமார்கள் மிகவும் அன்போடு வளர்த்துக்கொண்டு வந்திருந்தார்கள். இப்படி யிருக்குங்காலத்தில் இந்தக் குணவதியாருடைய தாதிமார்களுள் ஒருதாதியானவள் எப்பொழுதும் ஸ்ரீஹரிநாமத்தை வாயால்சேபித்துக் கொண்டிருப்பது வழக்கம். இப்படியிருக்கும் ஒருநாள் அவள் உதடு துடிப்பதைக்கண்டு அவளைப் பார்த்து எப்பொழுதும் உன் உதடு அசைந்துகொண்டே யிருப்பதைப் பார்க்கிறேன். அதற்குக் காரணம் யாது? என்று குணவதியார் கேட்டார். அதற்கு அந்தத்தாதியானவள்குணவதியாரைப்பார்த்து அம்மா! இந்தக் கர்மதேகத்தோடு கூடிவாழ்கிற வாழ்க்கையை யொழித்து மோட்சபதத்தையடைய விரும்பி எப்பொழுதும் மோட்சபரமான ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனம் செய்து கொண்டிருக்கிறேன் என்று சொன்னாள். அப்படி சொல்லக்கேட்ட குணவதியானவர் அந்தத் தாதியைப்பார்த்து ஓ தாதி! அப்படியானால் எனக்கும் இந்த ஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்யவேண்டிய கிரமத்தை அநுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்தாள். அதைக்கேட்ட தாதியும் இவளுடைய மனநிலையை உணர்ந்து ஸ்நானஞ் செய்வித்து இருக்கவேண்டிய முறையி லிருக்கச்செய்து ஸ்ரீகண்ணபிரானுடைய உருவம் ஒன்றைக்கொடுத்து அதைப் பூஜிக்கும்வழியையும் விவரமாய்ப்போதித்து ஸ்ரீ ஹரிநாமத்தையும் உபதேசஞ் செய்தாள். அந்த உபதேசத்தைப் பெற்றநாள் முதலாக குணவதிபாயியானவர்

ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டும் ஸ்ரீ கிருஷ்ணவிக்கிரகத்தை பூஜித்துக்கொண்டும் தம்மை நாடிவருகிற சாதுக்களாகிய ஹரிதாசர்களை உபசரித்து அமுதளித்தல் முதலியவற்றால் மகிழச்செய்து கொண்டுங் காலங்கழித்து வந்தார். இவர் இவ்விதமாக நாளுக்குநாள் ஸ்ரீஹரிபக்தி விருத்தியடைந்து வருவதால் இவருக்குப் பிரபஞ்ச விவகாரங்களில் சிறிதும் பற்றில்லாமல் ஒழிந்துபோயிற்று. இப்படி இவர் பிரபஞ்ச விவகாரங்களில் பற்றில்லாம லிருப்பதை அரசன் உணர்ந்து இவளுக்கு யாதோ ஒரு வெறியுண்டானதென்று நினைத்து அதை யொழிக்கப் பலவகையாய்ப் பிரயத்தனஞ் செய்து பயன்படாமையால் குணவதிபாயியாரைப் பார்த்து நீ பிரபஞ்ச விவகாரத்தை முழுதும் மறந்திருக்கிறாயே. இதற்குக் காரணம் என்னவென்று கேட்டார். அதற்கு அவர் தம்முடைய அரசனாகிய கணவனைப்பார்த்து சுவாமி! ஸ்ரீமந்நாராயணனாகிய பகவானை இடைவிடாமல் எப்பொழுதும் தியானஞ் செய்து கொண்டிருக்கிறேன், ஆகையால் அந்தப் பகவானானவர் எனக்கு இன்னும் பிரத்தியக்ஷமாகாமலிருக்கிறார். ஆகையால் இப்படி பிரபஞ்ச விவகாரங்களை மறந்து அந்தப்பகவத்விஷயத்திலேயே மனம் பதித்தவளாயிருக்கின்றேன் என்று வருந்திச்சொன்னார்.

இவ்விதமாக குணவதிபாயியானவர் சொல்லுவதைக்கேட்ட அரசன் மிகவும் கோபங்கொண்டு கண்சிவந்து முறைத்துப் பார்த்தார். இதைக்கண்ட குணவதியார் கணவன் முகத்தை நோக்கப் பயந்து கண்களை மூடிக்கொண்டார். அந்தச் சமயத்தில் ஸ்ரீகண்ணபிரானானவர் இவருடைய பயத்தைத் தீர்க்கும்பொருட்டு இவருக்குக் காட்சி கொடுத்தருளினார். அதைக்கண்ட குணவதியாரும் அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய திருவுருவத்தைத் தரிசனஞ்செய்து அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினார். இவ்வண்ணம் வணங்கினவுடனே பகவானானவர் இந்தக் குணவதிபாயினுடைய சிரசின் மீது தமது திருக்கரத்தைவைத்து அம்மா! நீ மனத்தளர்ச்சி கொள்ளவேண்டாம். உனக்கு யாதொரு துன்பமுமில்லை. உன்பக்ஷத்தில் நான் இருக்கிறேன் என்றுசொல்லி மறைந்துபோனார். அதன்பிறகு குணவதிபாயியானவர் மனமகிழ்ந்து சற்றும் அஞ்சாமல் கணவன் முகத்தைப்பார்த்து எதிரே நின்றார். பகவானானவர் குணவதிபாயியாருக்குக் காட்சிகொடுத்து மறைந்துபோன செய்தியையறியாத அரசன் இவரைப்பார்த்து நீ இப்படியே இருப்பாயானால் உன்னைத் தண்டிப்பேனென்று அதட்டிச் சொல்லிவிட்டு வெளியில் வந்து வாயிற்காவலாளரைப் பார்த்து இவள் யாரோ ஒரு துறவியின் வழியிலிருக்கிறாள். ஆகையால் உள்ளே யாவரையும் விடவேண்டாமென்று கட்டளையிட்டுத் தன்னுடைய பரிவாரங்களுடன்கூடி மந்திரியை நோக்கி, இங்கே ராஜரீகத்தைப் பார்த்துக்கொண்டிரு. நான் வேட்டையாடப் போகிறேனென்று சொல்லிக் காட்டுக்குப் போய்விட்டான்.

இப்பால் இங்கே குணவதிபாயியானவர் ஸ்ரீ கண்ணபிரானை உள்ளபடியே ஆராதனை செய்துக்கொண்டும், அவனது திருநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டும், அடியார்களைப் பூசை செய்துக் கொண்டும் இருப்பதைப்பார்த்த மந்திரியானவன் இந்தச் சங்கதிகளை எழுத்துமூலமாய் அரசனுக்குத் தெரிவித்தான். அதைக்கேட்ட அரசன் மிகவுங் கோபங்கொண்டு உடனே கொலைசெய்வோர் நால்வரை யழைத்து நீங்கள் சீக்கிரமாக நரகத்துக்குப் போய் என்னுடைய மனைவியைக் கொலை செய்துவிட்டு வாருங்களென்று ஏவினான். அவர்களும் அப்படியேபோய்க் கொலைசெய்ய எத்தனிக்கும் போது அவர் ஸ்ரீஹரிபூசை செய்துக்கொண்டிருந்ததைக் கண்டு கொஞ்சம் நிதானித்தார்கள். இதை யுணர்ந்த ஸ்ரீமந்நாராயணனானவர் ஒரு புலியுருவங் கொண்டுவந்து இவர் பூஜைசெய்கிற விக்கிரகத்திலிருந்து வெளிப்பட்டு நிற்க, இவர் நீ இவ்வுருவங் கொண்டுவந்ததற்குக் காரணம் என்னவென்று கேட்டார். அதற்குப் புலியுருவங் கொண்டுவந்த பகவானானவர் மறுமொழிசொல்லாமல் கொலைசெய்ய வந்த நால்வரையும் கொன்று மறைந்துபோனார். அப்பொழுது சமீபத்திலிருந்தவர்கள் இந்தப் புலிக்குரலைக் கேட்டுவந்து பார்த்து கொலையாளர் இறந்துகிடப்பதைக் கண்டும் புலிக்குரலுக்குப் பயந்தும் அழுதுகொண்டு நின்றார்கள். அதன்பிறகு குணவதியார் தமது பூஜையைமுடித்து அடியாரைப் பூஜைசெய்யும்பொருட்டு வெளியேவந்து கொலையாளர் இறந்து கிடப்பதைப் பார்த்து, ஓ பகவானே! இவர்களைக் கொல்லத்தானோ தேவர் புலியுருவங்கொண்டு வந்தீர்? என்று சொல்லி நிற்கும்போது சாதுக்களும் மற்றவர்களும் இந்தக் கொலையாளர்கள் மாண்டுகிடப்பதையும், இவர்களைக் கொல்லவந்த புலியைக்குறித்தும் அதிசயித்து இந்த அதிசயங்களெல்லாம் ஸ்ரீகண்ணபிரானுடைய

திருவருளாலே நிகழ்ந்தனவென்று குணவதிபாருடைய பக்தியைக் குறித்துப் புகழ்ந்து கொண்டாடினார்கள். இந்தச் சங்கதிகள் யாவற்றையும் மந்திரியானவன் அரசனுக்கெழுதி யனுப்பினான். அரசனானவன் உடனே குணவதியாருடைய மகிமையை யுணராமல் அபராதஞ் செய்தேன். இனி அவர் இஷ்டம்போல ஹரிபூஜை முதலியவற்றைச் செய்து கொண்டிருக்கட்டும். அதற்காக அவருக்கு வேண்டிய பொருள்களைத் தடையில்லாமல் கொடுக்கவென்று மந்திரிக்கு எழுதியனுப்பினான்.

அதன்பிறகு அரசனானவன் தன்னுடைய சேனைகளோடு நகரத்துக்குத் திரும்பிவரும் வழியில் உள்ள ஒருநதியில் வெள்ளம்பெருகி ஓடுவதைக் கண்டு அந்த நதியைக் கடப்பதற்கு ஒரு ஓடமமைத்து அதிலேறிச் செலுத்திக்கொண்டு வரும்போது, அது நட்டாற்றில் ஒரு பெருஞ்சுழியில் அகப்பட்டுப் பம்பரம்போல் சுழன்று நீரில் அழுந்தும்படியான நிலையிலிருந்தது. அதைக்கண்ட அரசனும் சேனைகளும் மிகவும் பயந்து தாங்கள் கரைசேர்வதற்குத் தகுந்த தந்திரம் ஒன்றுந் தோன்றாமல் மனங்கலங்கும்போது, அரசனானவன் தன்மனைவியாகிய குணவதிபாயியாரை உள்ளன்போடு நினைத்தான். இவ்விதமாக அவன் நினைத்தவுடனே நீர்ச்சுழியில் அகப்பட்டுச் சுழன்று கொண்டிருந்த ஓடம் அந்தச் சுழியிலிருந்து நீங்கிப்போய்க் கரையை யடைந்தது. இதுகண்ட அரசனும் சேனைகளும் மிகவுஞ் சந்தோஷத்தோடு நகரத்தை யடைந்தார்கள். அப்போது அரசனானவன் தன்னுடைய அரண்மனையைச் சேர்ந்து பெண்சாதி பிள்ளைகளைக் கண்டு பெருங்களிப்படைந்து குணவதிபாயியாரைத் தழுவிக்கொண்டு நீயே ஹரிபக்தியிற் சிறந்தவளாக விருக்கின்றாய் என்பதையும் உன்னுடைய மகிமையையும் சிறிதும் அறியாமல் உனக்குத் தீமையை விளைவிக்க நினைத்தேன். உனக்கு ஸ்ரீமந்நாராயணனானவர் கைவசமாயிருப்பதை இப்பொழுதுதான் அறிந்துகொண்டேன், தவிர நாங்கள் வந்தவழியில் ஆற்றில் எங்களுடைய படகும் நாங்களும் முழுகிப்போகிற சமயத்தில் உன்னை நினைத்ததனால் நாங்கள் யாவரும் கரையேறிச் சுகமாய் வந்துசேர்ந்தோம். ஆகையால் உன்னுடைய பெருமையைச் சொல்லவல்லவர் யாவர்? ஆனது பற்றி நான் உன்விஷயத்தில் செய்த அபராதத்தை மன்னிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து, அன்றுமுதல் அரசனும் ஸ்ரீஹரிபக்தியிற் சிறந்தவளாய் குணவதிபாயியாராகிய தன்னுடைய பத்தினியாரோடும் மக்களோடுங்கூடி இனிமையாக வாழ்ந்து கொண்டிருந்தார் என்று சொல்லி நாபாஜிசித்தர் மற்றைய சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாம் ஸ்ரீமந்நாராயணனை அந்திசேவை செய்யச்சென்றார். சூரியனும் மேற்குக்கடலிற் குளிக்கச் சென்றனன்.

குணவதிபாயி சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

புண்டரீகபரப்பிரம்மணே நமஃ

முப்பத்தெட்டாவது

# திரிபுரதாசர் சரித்திரம்.

துதி கவி.

அரிபுரதியானஞ்செய் யண்ணலாமெங்கள்
திரிபுரதாசர் சரிதத்தைச்செப்பினல்
நரஹரிமுதலான நாதர்கள்யணியவே
வரரிஷியாவாழ்வர் வையமீதிலே.

இவ்விதமாகச் சென்ற சித்தர்களெல்லாம் தங்களுடைய மனந் தெளிவடைய வில்லையேயென்று மிகவும் மனம் வருந்தி அன்று இரவெல்லாம் சரியான நித்திரையில்லாமல் எப்பொழுது பொழுது விடியுமோ என்கிற எண்ணமுடையவராயிருந்து பிராதக்காலத்திலெழுந்து நித்திய கடன்களை முடித்துக்கொண்டு ஸ்ரீசூரிய நமஸ்காரஞ்செய்து உண்டியாதி எடுத்துக்கொண்டு ஸ்ரீநாபாஜிசித்தரிடம் வந்துசேர்ந்து, தங்கள் குறைகளையெல்லாம் மிகவும் வணக்கமாய்ச் சொல்லிக்கொண்டார்கள். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் மிகவும் மனஞ் சந்தோஷித்து சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் தென் தேசத்திலே எல்லாவளங்களினுஞ் சிறந்து விளங்குவதாகிய மதுராநகரம் என்று ஒன்று இருந்தது. அதற்கு நீதிவழுவா நெறிமுறைமையினுல் குடிகளை வருத்தாது அரசாள்பவனுகிய ஒரு அரசனிருந்தார். அவருக்குச் சர்வ சாமர்த்தியமுங் கூடியவரான ஒரு மதிமந்திரி யிருந்தார். அவருடைய பெயரோ திரிபுரதாசன் என்று சொல்லுவார்கள். அவர் அந்த மந்திரித்தொழிலை வெகுநீதியாய் நடத்திக்கொண்டு வந்து சிலநாள் சென்றவுடனே அவருக்குப் பிரபஞ்சத்தில் வெறுப்புண்டாகி தனக்குள்ள தானியாதிகளையெல்லாம் ஊரார்கொள்ளைகொள்ளும்படி விட்டுத் தம்முடைய தேவியாரோடு பிருந்தாவனத்துக்குப்போய் அவ்வனத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமந்நாராயணனைக்கண்டு வணங்கி அந்த க்ஷேத்திரத்திலேயே யிருந்தால் நலமென்றெண்ணிச் சிலகாலம் அங்கேயேயிருந்தார். அப்படி இருக்குங்காலத்தில் ஒருநாள் தம்முடைய தேவியாரை நோக்கி, ஒபெண்ணே! ஸ்ரீகண்ணபிரானுக்கு ஒரு பரிவட்டம் சமர்ப்பிக்க எண்ணினேன் என்று சொன்னர். அதைக்கேட்டதேவியார், நாயகா! நம்மிடத்தில் கொஞ்சமும் பொருளில்லையே. அந்நியர்கள் கொடுக்கின்ற தானியாதிகளைக்கொண்டு ஜீவனஞ் செய்கின்றோமே. இப்படியிருக்கின்ற நமக்கு இந்த எண்ணம் ஏன்? பகவானுக்கு என்ன குறை? நீர் இந்த எண்ணங்கொண்டது தகுதியல்லவென்று சொன்னர். அதைக்கேட்ட திரிபுரதாசர் பெண்ணே! பகவானுக்கு ஒருகுறைவும் இல்லை. ஆனாலும் என்னுடைய அன்பினல் என்னுடைய மனதிற்கு இசைந்தவண்ணம் என்னுடைய சக்திக்குத் தகுந்தபடி உபசாரம் செய்தே தீரவேண்டுமென்று சொல்லி தம்முடைய வீட்டிலிருந்த மசிக்கூட்டை எடுத்துக்கொண்டு போய் அதைவிற்று ஒரு ரூபாய் பெற்று அந்தத் தொகைக்கு உயர்ந்த ஒருவஸ்திரத்தை வாங்கிக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனுடைய கோயிலிற்போய் இந்த வஸ்திரத்தைப் பகவானுக்குச் சாத்தக்கடவீர் என்றுசொல்லி அக்கோவிலின் அர்ச்சகன் கையிற் கொடுத்தார். அர்ச்சகன் அதை வாங்கிக்கொண்டு ஐயா! இந்த வஸ்திரத்தைப் பகவானுக்குச் சமர்ப்பிக்கச்சொல்லி என்னுடைய கையிற்கொடுத்தாயே, உனக்குக் கொஞ்சமும் வெட்கமில்லையோ? சிறந்த

பீதாம்பரதாரிக்கு இது தகுமோவென்றுசொன்னார் அதுகேட்ட திரிபுரதாசர் அந்த அர்ச்சகனைநோக்கி சுவாமி! நீரே பகவானுக்குத் தெரிவித்து இதை அங்கீகரிக்கும்படி செய்யவேண்டுமென்று பிரார்த்தனை செய்து போய்விட்டார். அப்போது அந்த அர்ச்சகன் அவ்விதஞ் செய்யாமல் அந்த வஸ்திரத்தை கீழேவிரித்து அதின்மீது படுத்துக்கொண்டு நித்திரைசெய்தான். அப்போது ஸ்ரீமந்நாராயணனவர் அந்த அர்ச்சகன் முதலிய பிராமணருக்குத் தம்முடைய அன்பர் பெருமையைத் தெரிவிக்கும்பொருட்டு தமது திருமேனியைக் குளிரினால் நடுங்கும்படி செய்தார். அந்த நடுக்கத்தைக் கண்டவர்கள் யாவரும் அந்த நடுக்கத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு பலவகையான வஸ்திரங்களைப் போர்த்தும் நடுக்கமானது நீங்கவில்லை. பின்னர் தீச்சட்டியை வைத்தார்கள். அதினாலும் குளிர்நீங்கவில்லை. இன்னும் அநேக உபாயங்களெல்லாஞ் செய்தார்கள். இவர்கள் இவ்விதமாகக் குளிரை நீக்க முயன்றுகொண்டிருக்கும்போது பகவானனவர் அந்த அர்ச்சகன் கனவில் எழுந்தருளி பிராமணனே! என்னுடைய அன்பன் கொடுத்த வஸ்திரத்தை என்மேல் போர்க்கக்கடவாயென்று நியமித்தார். உடனே அவனெழுந்து கனவின் செய்தியைச் சொல்லக்கேட்டவர் யாவரும் வியந்து அப்படியே செய்வோமென்று அர்ச்சகன் விரித்துப் படுத்துக் கொண்டிருந்த அந்த வஸ்திரத்தைக் கொண்டுவந்து பகவானுக்குச் சமர்ப்பித்தவுடனே குளிர் நீங்கிற்று. அப்போது ஸ்ரீமந்நாராயணனனவர் முன்போலவே பிரகாசித்து நின்றார். இந்த விஷயங்களைக்கண்டவர்கள் யாவரும் இந்த வஸ்திரத்தைச் சமர்ப்பித்தவரே பகவானுக்கு மெய்யன்பரென்று புகழ்ந்து கொண்டாடினதுமல்லாமல் திரிபுரதாசரிடம் வந்து அவரை உள்ளன்போடு வணங்கி நடந்த செய்திகளையெல்லாஞ் சொன்னார். அதைக்கேட்ட தாசரும் கோவிலுக்குள்ளே போய் பகவானே! அடியேன் சமர்ப்பித்த வஸ்திரத்தைப் பீதாம்பரத்திலும் சிறந்ததாகத் திருவுளம்பற்றினீரே. உமது பெருங்கருணையை என்னவென்று சொல்லிப் புகழப்போகிறேனென்று ஆனந்தக்கண்ணீர் பெருக விழுந்து வணங்கினார். உடனே ஸ்ரீமந்நாராயணனவர் இவருக்குப் பிரத்தியட்சமாகி அபயாஸ்தமளித்து மறைந்தருளினார். அது பெற்ற திரிபுரதாசரும் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு அவ்விடத்தில் வாழ்ந்துகொண்டிருந்தார் என்றுசொல்லி நாபாஜிசித்தர் தமதிருப்பிடஞ் சென்றார். மற்றைய சித்தர்களும் அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தமதிருப்பிடஞ் சென்றார்கள்.

திரிபுரதாசர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணயநமஃ

முப்பத்தொன்பதாவது

# சுகாநந்தர் சரித்திரம்.

துதி கவி.

அகாரமாகிய வட்சரப்பொருளாகி
விகாரமாகிய விஷவத்தைமாற்றும்
மகாரவட்சர மாயாவதாரனே
சுகாநந்தன்கதை சொலவருள்வாயே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் மறுநாள் வைகறையிலெழுந்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு எல்லாரும் ஒன்ருகக்கூடி இறைவனை உள்ளன்போடு தியானஞ்செய்து ஸ்ரீ நாபாஜிசித்தரிடம்வந்து இவ்வீரேழு பதினுன்கு லோகங்களிலும் உள்ள பக்தர்களுடைய சரித்திரங்களைச்சொல்ல வல்லவர் நீரேயன்றி வேறு யாவர் இருக்கின்றனர்? ஒருவருமில்லையே. ஆகையால் தேவரீர் எங்களுக்கு எந்தக் கதையையாவதுசொல்லுங்கள்; நாங்கள் அதை பக்தியுடன் சிரவணஞ்செய்கின்ருேம். ஆயினும் எங்களுடைய மனமட்டும் ஒடுங்கி முத்திப்பேற்றை யடையும்படி செய்யவேண்டும் என்றுசொல்லி மிகவும் வணங்கினர். அதைக்கேட்ட நாபாஜிசித்தர் உங்களுடைய பிராரத்துவம் எவ்வளவிருக்கின்றதோ அவ்வளவுதான் உங்களுடையமனமொடுங்குமென்றுசொல்லிச் சொல்லத்தொடங்கினர். எப்படியென்ருல்:—

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் இவ்வுலகத்தில் பிரசித்திபெற்ற ஒரு ஊரில் சுகாநந்தர் என்று ஒருவரிருந்தார். இவர் ஸ்ரீமந்நாராயணனுக்கு அடியவராகவும், பக்தர்களைக்கண்டால் மிகவும் அன்போடு உபசாரஞ்செய்து அமுதளிப்பவராகவும் இருந்தார். இவருக்கு சுரசுரி என்பவர் மனைவியாராகவிருந்தார். இவரோ பதிவிரதாசிரோன்மணியாயும், அன்பர் பக்தியிற் சிறந்தவராயும் அவ்வன்பர்களுக்கு வேண்டியவைகளையெல்லாங் கொடுத்து உபசரிப்பவராயுமிருந்தார். இந்த இருவரும் மனம் ஒன்றுபட்டவராய் இல்லறதருமம் வழுவாமல் இல்லறத்தை நடத்திவருங்காலத்தில் சில துஷ்டர்கள் இவரைச் சோதிக்க எண்ணங்கொண்டு கடையில் லட்டு வர்க்கத்தை வாங்கிக்கொண்டு வந்து ஓ சுவாமி! இது பகவத்பிரசாதம் இதனை உண்ணக்கடவீர்களென்று இவர் கையிற்கொடுத்தார். இவர் அதை களங்கமில்லாமல் வாங்கி அன்புடனே உண்டார். அப்போது அந்தத் துஷ்டர்கள் இவரைநோக்கி கடையிலிருந்து வாங்கிவந்ததை உண்டீரே நீர் வெறியராவீரோ வென்று பரிகாசஞ்செய்து சிரித்தார்கள். தவிர பிராமணரே! நீங்கள் பிராயச்சித்தம் செய்து கொள்ளாதபட்சத்தில் உம்மைச் சாதியார்கள் நீக்கிவிடுவார்களென்று சொன்னர்கள். இதைக் கேட்ட சுகாநந்தர்தாம் ஒருநாழிகைநேரமென்று விழுங்கின லட்டு வகைகளையெல்லாம் பழைய படியே செய்து வாயிலிருந்தெடுத்துக் கொடுத்தார். அதைக்கண்ட அந்தத் துஷ்டர்கள் மிகவும் பயந்து இந்தச் சுகாநந்தருடைய திருவடிகளை வணங்கி நமஸ்காரஞ்செய்து உமக்கு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய சகாயமிருப்பதனுல் உமக்கு எல்லாக்காரியங்களுங் கைகூடுகின்றன. ஆகையால் அடியோங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று மிகவும்பிரார்த்தனைசெய்துவிடைபெற்றுக்கொண்டு போய்விட்டார்கள். அதன் பிறகு சிலநாள் கழிந்த பிறகு சுகாநந்தரானவர் தம்முடைய மனைவியாகிய சுரசுரி யென்பவளைப்பார்த்து நம்மிடத்திற்கு வருகிற சாதுக்களை சகல உபசாரங்களோடு அமுதளித்து மகிழ்வித்துக் கொண்டிருக்கக் கடவாயென்று சொல்லிவிட்டு யாத்திரைக்குப்போய்விட்டார். அந்தச் சமயத்தில் ஒரு துஷ்டன் சாதுவேஷம் பூண்டு

வந்தான். அவனைக்கண்ட சுரசுரியானவர் மிகவும் அன்போடு பூசித்துக்கொண்டிருக்கும் பொழுது இவருடைய சவுந்தரியத்தினால் மதிமயங்கி ஒ பெண்ணே! உன்னுடைய ரூபசவுந்தரியசாகரத்தில் மூழ்கிவிட்டேன். ஆகையால் என்னைக் கரையேற்றி போகதாகங் கொடுக்கவேண்டுமென்று சொன்னான் அதற்குச் சுரசுரியானவர் சற்றும் மனங்கலங்காமல் சுவாமி! அப்படியே யாகட்டும் முன்னே அமுது செய்தருளும் என்று பிரார்த்தனை செய்து அமுது பரிமாற, அவன் இனிதாகஉண்டான். உண்டபிறகு அவன் இன்றைக்கு நம்முடைய எண்ணம் பலித்ததென்று பொழுது போகிறவரைக்கும் அவ்விடத்திலேயே காத்துக்கொண்டிருந்தான். சுரசுரி என்பவர் அஸ்தமித்து ஒருஜாமநேரங் கழிந்தபிறகு புஷ்பசயனமமைத்து அதன்மேல் தாம் இருந்துகொண்டு அந்தச் சாதுவேஷம் பூண்டுவந்த துஷ்டனைப் பள்ளியறைக்குள்ளே வரவழைக்க, அவனும் மிகவும் ஆவலோடு பள்ளியறைக்குள்ளே புகுந்து சயனத்தின்மேல் ஒரு புலியிருப்பதாகத் தன் கண்ணுக்குத் தோன்றினதினால் மிகவும் நடுநடுங்கி வெளியே புறப்பட்டு ஓடி பொன்னரம் என்று நினைத்தெடுத்தது பாம்பாய்முடிந்த கதைபோலவும் ஒரு பெண்ணென்று நாம் நினைத்தது புலியாய் முடிந்ததேயென்று ஏங்கினான். அந்தச்சமயத்தில் சயனத்தின் மேலிருந்த புலியானது இவனை உறுமிப்பார்க்க இவன் மிகவும் பயந்து தாயே! நான்செய்த அபசாரத்தை மன்னித்தருள வேண்டுமென்று வணங்கி தூரமாய்ப்போய் ஓரிடத்தில் படுத்து நித்திரை செய்தான்.

இவ்விதமாக நடந்தபின் மறுநாள் உதயத்தில் சுரசுரியார் சாணந்தெளிக்க வெளியேவர இவன் தூரத்தேயிருந்துபார்த்துச் சமீபத்தில்வந்து வணங்கித் தோத்திரம் செய்து நிற்க, சுரசுரியானவர் மனமிரங்கி அவனைக் கருணைசெய்து தம்முடைய ஊழியக்காரனாக வைத்துக்கொண்டார். அவனும் அவருடைய மனதுக்கிணங்க ஊழியஞ் செய்துகொண்டு நான்குமாதகால மிருந்தான். பிறகு யாத்திரை போயிருந்த சுகாநந்தர்வந்து சேர்ந்தார். அப்போது ஊழியக்காரன் இவரைக்கண்டு வணங்கி தான்செய்த அபசாரத்தை விண்ணப்பஞ் செய்துகொண்டான்.

அதைக்கேட்ட சுகாநந்தர் அவனுக்கு அபயங்கொடுத்து அநுக்கிரகஞ்செய்து அவனை ஹரிதாசனாக்கி தாமும் ஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டு இனிமையாக வாழ்ந்திருந்தார் என்று சொல்லி நாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ்சென்றார்.

சுகாநந்தர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீபுண்டரீகபரப்பிரம்மணேநம:

நாற்பதாவது

# மாதவதாசர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

மாதவனேகேசவனே மாலாழிகைகொண்ட
மன்னவனேகண்ணவனே மாதலத்தினில்வுற்ற
ஆதவனேயருள்பெருகு மன்பருளங்குடிகொள்ளும்
அச்சுதனேதிருவடியை யன்பர்முடிவைத்தவனே
கோதைமனமகிழ்வித்த கொற்றவனேயுத்தமனே
கொடியவரைவெறுத்து வருகுற்றமிலாச்செஞ்சுடரே
மாதவதாசர்சரிதமன மகிழ்ந்தேயுரைக்க
மலரடியையெனக்களிப்பாய் மகிழ்ந்துனியன்றே.

இவ்விதமாகச் சுகாநந்தர் சரித்திரத்தைக்கேட்டுச் சென்ற சித்தர்களெல்லாம் ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியின் சிந்தனையாகவே அன்று இராத்திரி முழுவதுங் காலத்தைக் கழித்துவிட்டு மறுநாள் உதயத்திலெழுந்து அவரவர்களுடைய மனேநிலைக்குத்தக்கவண்ணம் நித்தியகடனை முடித்துக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை மனத்தின்கண் ஆவாகனஞ்செய்து ஒருவர்க்கொருவர் தங்களுடைய மனம் ஒடுங்காமையைப்பற்றிப் பேசிக்கொண்டே ஸ்ரீநாபாஜிசித்தர் இருக்குமிடத்திற்குப்போய் அவரைக்கண்டு பன்முறை வணங்கி நமஸ்காரஞ்செய்து ஒ சுவாமி! தேவரீர் இதுகாறும் சொல்லிவந்ததுபோல இன்றைக்கும் ஒரு கதைசொல்லி எங்களுடைய மனத்தை ஒருவழிப்படுத்த வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர் அதுகேட்ட நாபாஜிசித்தர் அப்படியே யாகட்டுமென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் வேதசாஸ்திரங்களில் மிகவும் தேர்ந்தவராகவும் இல்லறத்திலிருந்தும் பிரபஞ்சத்தின்மேல் கொஞ்சமும்பற்றில்லாத பரிசுத்தராகவும் மாதவதாசர் என்னுந் திருநாமமுள்ளவராகவும் ஒருவரிருந்தார் இவர் தன்னுடைய குலத்திற்குத்தக்க ஒருபெண்ணை விவாகஞ் செய்துகொண்டிருந்தார் அவர்இவருடன்கூடிச் சிலகாலம்வாழ்ந்திருந்து காலகதியடைந்தனர். பிறகு இவர் நமக்குச் சமுசாரபந்தம் அற்றது என்று தம்முடைய வீட்டிலிருந்த தனதானிய முதலிய சொத்துக்களெல்லாவற்றையும் பிராமணர்களுக்குத் தத்தஞ் செய்துவிட்டு ஸ்ரீஜகந்நாத ஸ்தலத்திற்கு யாத்திரை போயினர். இவ்விதமாகச்சென்ற இவர் ஸ்ரீ ஜகந்நாத ஸ்தலத்தைசேர்ந்து ஆற்றில் ஸ்நானம் செய்து அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ ஜகந்நாதப் பெருமாளைக்கண்டு வணங்கித் தோத்திரஞ்செய்து ஒ சுவாமி! அடியேனுக்குத் துக்கரூபமாயிருந்த சமுசாரபந்தமானது நீங்கிவிட்டது ஆகையால் இனி அடியேனுக்கு தாய், தகப்பன், குரு, தெய்வம், உறவினர் ஆகிய எல்லாம் தேவரீரேயென்று நம்பியிருக்கின்றேன். ஆகையால் தேவரீரே அடியேனை ரக்ஷித்தருளவேண்டும் என்று பிரார்த்தனைசெய்து நின்றார். அப்போது இவருடைய நிலைமையைக்கண்டு அர்ச்சகனானவன் ஏன் வெறுங்கையோடு வந்து விழுந்துவிழுந்து கும்பிடுகிறாய். ஆகையால் வெளியே போவென்று இவரைப்பிடித்துத் தள்ளிவிட்டான். அதனால் இவர் மனங்கலங்கி ஒரு தனியிடத்தி லிருந்துகொண்டு பகவானே! உனது சுகுண ரூபத்தைக்காண விரும்பினேன். சேவை சாதித்தருள வேண்டுமென்று மூன்றுநாள் வரைக்கும் அன்னபானங்களை வெறுத்து ஏகாக்ர சித்தராயிருந்தார். அப்போது பகவானுக்கு இவர்மீது கருணையுண்டாகி தம்முடைய தேவியாராகிய ருக்மணி பிராட்டியாரைப் பார்த்து இன்று நீ சுகுணரூபங்கொண்டு மாதவதாசனுக்கெதிரேபோய் அவனுக்கு நல்ல ஆகாரங்கொடுக்க வேண்டுமென்று ஆஞ்ஞாபித்தார். அப்படியே ருக்மணிதேவியானவர் தேவாமிர்தத்துக்குச் சமானமான திவ்விய அன்னத்தை ஒரு பொற்கிண்ணத்தில் எடுத்துக்கொண்டு வந்து பகவத் தியானத்திலிருந்த மாதவதாசனை எழுப்பி அமுதைக்கொடுத்தார் அப்போது தாசர் பிராட்டி

யாருடைய ரூபத்தின் அழகைக்கண்டு அதிசயித்து தாயே! நீர் யாரென்றுகேட்டான். அதற்கு அந்த அம்மையார் தாசரைப்பார்த்து நீயாரைத்தியானஞ் செய்து கொண்டிருக்கிறுயோ, அந்தப் பகவானுடையதிருமார்பிலமர்ந்திருக்கிறவள் நானேயாவேன் என்பேர் ருக்குமணியென்று சொல்லுவார்கள். நீ பசித்திருக்கிறுயென்று உனக்கு ஆகாரங்கொடுக்கும் பொருட்டு என்னையனுப்பினுர். ஆகையால் இன்னும் சிலநாட்களுக்குள்ளாக அவருடையசுகுணரூபத்தை உனக்குச் சேவை சாதித்தருளுவார் ஆகையால் நீ இந்த உணவை விரைவில் உண்ணக்கடவாயென்று சொல்லினர். அதைக்கேட்ட தாசர் அந்த உணவை வாங்கி உடனே உண்டார் பிறகு தாம் உணவுகொண்டுவந்த பொன்தட்டையும் ரத்நகஜிதமான அகப்பையையும் அங்கேயே வைத்துவிட்டுப் போய்க் கோயிலை யடைந்தார். தாசரானவர் அவைகளைச்சுத்தஞ்செய்து தம்மிடத்தில் வைத்துக்கொண்டு நித்திரைசெய்தார். இப்படியிருக்க மறுநாள்சூரியோதயமானவுடனே கோயிற் பரிசாரகர்களாகிய அர்ச்சகர்முதலானோர்வந்து கதவைத்திறந்து ஹாரதிசெய்யும்போது சொர்ணத்தட்டு காணுமையால் யாரோ வந்து களவு செய்தாற்போலத் தோன்றுகின்றதேயென்று ஆலோசித்துக்கொண்டு வெளியில்வந்து உறங்குவோராகிய தாசரிடத்தி லிருக்கக்கண்டு இவன்யாரோ நான்கு நாள்களாகக் கொக்கைப் போலக் கண்களைமூடித் தியானித்துக் கொண்டிருந்தான். இவன் இவ்விதமாகப் பொய்வேஷம் போட்டுத் தியானஞ்செய்திருந்தது இதைத்திருடுவதற்கேயாகுமென்று தீர்மானஞ்செய்து இவரைக் கட்டிக் கொண்டு போய் ஒரு அறையிலடைத்து வைத்தார்கள்.

இவ்விதஞ்சென்ற அன்று இரவில் ஸ்ரீஜகந்நாத சுவாமியானவர் அர்ச்சகருடைய கனவில்தோன்றி அந்தத் தாசனுனவன் என்னைக்குறித்து மூன்றுநாள் உபவாசமா யிருந்ததனல் ருக்மணியைநோக்கி அவனுடைய பசியையொழித்து வாவென்று சொல்லியனுப்பினேன். அவள் உணவை எடுத்துக்கொண்டு போய் பொன்னுல் செய்யப்பட்ட தட்டை அவ்விடத்தில் வைத்து மறந்து வந்துவிட்டாள் இப்படியிருக்க அவனை ஏன் வீணுய் வருத்தப்படுத்துகின்றீர்கள்! என்றுசொல்லி மறைந்தார். இக்கனவைக் கண்ட அர்ச்சகர் உடனே கண்விழித்துத் தூக்கத்திலிருந்து எழுந்து ஹரிதாசரை வீணுக வருத்தப்படுத்தினேமே என்று அநுதாபங்கொண்டு தாசரை உடனே கட்டவிழ்த்து விட்டு அவருடைய திருவடிகளை வணங்கி ஓ சுவாமி அறியாமற்செய்த எம்முடைய பிழையைப் பொறுத்து திருவருள் செய்ய வேண்டுமென்று மிகவும் பிரார்த்தனைசெய்து பகவத் சந்நிதியிற் கொண்டுவந்து பகவானை ஆலிங்கனஞ் செய்வித்தார்கள். அதன் பின்னர் பகவத்பிரசாதமுங் கொடுத்து உபசாரஞ் செய்தார்கள் அப்போது அதைத் தாசரும் உண்டு மகிழ்ச்சியடைந்திருந்தார். இவ்விதமாக நாள்தோறுஞ் செய்து வருங் காலத்தில் ஒருநாள் இராத்திரியில் அர்ச்சகர்கள் கோயில்வேலைகள் யாவும் முடிந்தவுடனே கோயிலின் வாசற்கதவைமூடிவிட்டுப்போன பிறகு வெளியிலிருந்த மாதவதாசரானவர் ஸ்ரீஹரிபாதத்தியானத்தோடு நித்திரைசெய்யும்போது இவருடைய உடம்பானது குளிரினுல் நடுங்கக்கண்ட பகவானுனவர் தமது மேற்போர்வையைக் கொண்டுவந்து இவர்மேல் போர்த்துவிட்டுப்போயினுர் இவர் இவ்விதமாகச் செய்துவிட்டுப்போன பிறகு சூரியோதயமாயிற்று. அப்போது அர்ச்சகரானவர்வந்து கதவைத் திறந்து பகவானுடைய மேற்போர்வையில்லாதிருக்கக்கண்டு மனம் மிகவும் கலங்கி வெளியே விரைந்து வந்து அந்தப்போர்வையானது அந்த மாதவதாசர் மீதிருக்கப்பார்த்து ஸ்ரீகண்ணபிரான் இந்தத்தாசர் மீது மிகுந்தகருணைவைத்திருக்கிறுர் என்று இவரை வணங்கித் துதித்துப்போய்விட்டார். பிறகு அந்த ஊருக்கு அரசனுயிருப்பவன் இவருடைய மிகுந்த பெருமையைக்கேள்விப்பட்டு இவரிடம்வந்து நமஸ்காரஞ்செய்துதோத்திரஞ்செய்தான். அதைக்கண்ட தாசர் இவ்வளவுபெருமை நமக்குவேண்டாமென்று அவ்விடம் விட்டுப் புறப்பட்டு வடமதுரைக்குப் போய் ஸ்ரீகண்ணபிரானைச் சேவைசெய்து நின்றுர். அப்போது அவ்விடத்திலுள்ளவர்கள் இவர் கர்ப்பகிரகத்தில் பகவானுக் கருகேவரத் தகுமோவென்று இவரைஅடித்து வெளியேதள்ளிவிட்டார்கள். பிறகு தாசரானவர் ஒரு தனிமையான இடத்தில் பகவானைத் தியானஞ்செய்து கொண்டிருக்கும்போது ஒரு கனவானுனவன் போஜனத்திற்குரிய பொருள்களெல்லாவற்றையுங்கொண்டுவந்துஇவரிடத்தில்கொடுத்து சமைத்துண்ணக்கடவீரென்று பிரார்த்தித்தான் அதற்குதாசரானவர் அவ்விதபாகஞ்செய்து வைத்துக்கொண்டு பகவானைபிரார்த்தனைசெய்தார். உடனே பகவானுனவர் இவருக்குப் பிரத்தியக்ஷமாகி நின்றுர். அவ்விதமாக நிற்கவே தாசரானவர் வணங்கக்கண்ட பகவானுனவர் இவரை மார்போடணைத்து இறுகத் தழுவிக்கொண்டு நீயோ என்னுடைய பிராண சிநேகன் உன்னுடைய பெருமையை

அறியாத அர்ச்சகர்கள் உன்னைப்பிடித்து வெளியே தள்ளிவிட்டார்கள். அதனால் உன்னைத் தேடிவந்தே னென்று கண்ணீர்விட்டார். பிறகு பகவானும் தாசரும் அமுதுசெய்து முடித்தபிறகு பகவானவர் கோயிலையடைந்தார். அதன்பிறகு கோயிலில் நாள் தோறும் பூஜிப்பவர்கள் வந்து நிவேதனஞ்செய்து எதிரே நிற்கக்கண்ட பகவானவர் அவர்களைநோக்கி நான் இப்பொழுதுதான் மாதவதாசரோடுகூடியுண்டுவந்தேன். ஆகையால் நீர்கொண்டுவந்த நிவேதனம் எனக்கு வேண்டாம் எனக்கு இப்பொழுது பசியில்லை. என்னுடைய அன்பராகியமாதவதாசரை வெளியில் தள்ளிவிட்டதுமுதல் அவர் கோபங்கொண்டு வெளியில் ஒரிடத்திலிருக்கிறார் அவரைச் சமாதானஞ்செய்து அழைத்துக் கொண்டுவந்தால் தான் நான் உண்பேன் இல்லாவிடில் உண்ணமாட்டேன் என்று அசரீரியாய்ச் சொல்லியருளினர் அதைக்கேட்ட அர்ச்சகர்கள் அவ்விதமேபோய் மாதவதாசரைச் சமாதானஞ்செய்து அழைத்துக் கொண்டு வந்தார்கள் வந்தவர்கள் அந்த வடமதுரையில் நான்கு மாதகாலம் ஹரிபஜனை செய்துகொண்டிருந்து பிறகு கோகுல பிருந்தாவனத்துக்குப் போய் அங்கே பகவானைச்சேவித்து அங்கிருந்தும் புறப்பட்டு ஸ்ரீஜகந்நாதத்துக்குப்போய் அங்கே ஸ்ரீ கண்ணபிரானைச் சேவித்துக்கொண்டு சிலநாள் தங்கியிருந்தார்.

இவ்விதமாக இருக்கும்போது இவருக்கு அதிசார நோயுண்டாயிற்று. அதனால் அவர் மிகவும் அசக்தராய் நடக்கவலிவில்லாமல் கடற்கரையையடைந்து அடிக்கடி எழுந்துபோய்ச்சௌசம்செய்யக்கூடாத இவருடைய நிலைமையை ஸ்ரீகண்ணபிரான் கண்டு சுகுணரூபங் கொண்டுவந்து கலசத்தில் நீர் மொண்டுகொண்டுவந்து கொடுப்பதையும் வஸ்திரம் தோய்த்து உலரவைத்துக் கொடுப்பதையும் மற்றுமுள்ள வேலைகள் செய்வதையும் மேற்படி தாசரானவர் பார்த்து ஓ பகவானே தேவரீர் அடியேனை ஒரு பொருளாக எண்ணிவந்து அடியேனுக்கு ஊழியஞ் செய்யத்தகுமோ! இந்த நோயைத் தீர்க்க உமக்குச் சக்தியில்லையோவென்று சொன்னர்.

அதைக்கேட்ட பகவானவர் ஐயா! தாசரே! இந்த சரீரத்தை எடுத்தாலும் பிராரத்துவ கர்மபலத்தை யநுபவித்தே தீரவேண்டும். இந்தக் குடல் நோயைத்தீர்க்கும் வல்லமை எனக்கு இல்லாமற் போகவில்லை. எப்படி என்றால் இந்தநோய் தீருமானல் அந்த பிராரத்துவ கர்மத்தை யனுபவிக்கும் பொருட்டு இனிமேலும் வேறு சன்மம் எடுக்கவேண்டிவரும். ஆயினும் இந்த நோயானது இன்னும் நான்கு நாட்களில் நீங்கி ஆரோக்கியத்தை அடைவீர். ஆகையால் இந்த நான்கு நாட்கள் மாத்திரம் பொறுத்துக்கொண்டிரும், என்று சொன்னர். அதைக்கேட்ட தாசரும் அப்படியே நோயைச் சகித்துக்கொண்டிருந்தார். நோயும் நான்கு நாட்களில் தீர்ந்தது. தாசரும் ஆரோக்கியமடைந்து சிலநாள் கழிந்தபிறகு தர்க்கசாஸ்திரத்தில் மிகவும் சாமர்த்தியமுள்ளவனை ஒருவன் தாசரிடம் வந்து தாசரே! நீர் மகா வேதாந்தியாகையால் உம்மோடு தர்க்கஞ் செய்யவேண்டுமென்று எண்ணி இங்கு வந்தேன் என்று சொன்னர். அதைக்கேட்ட தாசர் அப்படியே ஆகட்டும். இப்போது நான் கொல்லைக்குப்போய் வருமளவும் இங்கேயே இரும் என்றுசொல்லிக் கடற்கருகேபோய் நின்று ஓ! பகவானே! வாதுசெய்யுங் காலத்தில் அந்தத் தர்க்க சாஸ்திரிக்கு அவமானம் உண்டானல் அதனல் எனக்கு உண்டாகும் பிரயோசனம் என்ன? இதற்கு என்ன செய்வேனென்று இந்தக் கவலையை நீயே தீர்க்கவேண்டுமென்றும் பிரார்த்தனைசெய்தார். அப்போது பகவானவர் தாசருடைய ரூபத்தைக்கொண்டு அந்தத் தர்க்கவாதியிடஞ் சென்று தர்க்கஞ்செய்து வந்த தர்க்கனை வென்று மறைந்து போய்விட்டார். அதன்பின்னர் தாசரானவர் அவனிடத்திற்கு வரக்கண்டு ஓ! தாசரே! நான் இவ்வுலகத்தில் எப்படிப்பட்ட மகா பண்டிதர்களையும் வென்று இவ்விடம் வந்தேன். அப்படிப்பட்ட என்னை நீர் ஒரு வார்த்தையால் வென்றுவிட்டீரே யென்று புகழ்ந்து சொன்னர். அதுகேட்ட தாசர் நான் உம்மை வெல்லவில்லை. உம்மை வாதுசெய்து வென்றவர், உலகத்தை யுண்டவராகிய ஸ்ரீகண்ணபிரானே யென்றார். அதைக்கேட்ட பிறகு பண்டிதனவன் மேற்படி தாசருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி அடியேனுக்கு தேவரீர் அநுக்கிரகஞ் செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதுகேட்ட தாசரும் அவன் விரும்பினபடியே அநுக்கிரகஞ்செய்து அவனை ஹரிபக்தனுக்கித் தாமும் ஸ்ரீஹரிபஜனை செய்துகொண்டு அவனோடுகூடி இனிமையாக வாழ்ந்து கொண்டிருந்தார். இத்தன்மை போலல்லவோ பக்தியிற் சிறந்து ஹரிபஜனைசெய்து கொண்டிருந்தால் இகபரசுகம் பெறலாம் என்று சொல்லி நாபாஜிசித்தரானவர் பொழுதுபோனபடியால் நாம் ஸ்ரீஹரிபஜனை செய்யவேண்டுமென்று சொல்லி மற்றைய சித்தர்களுக்கெல்லாம் விடைகொடுத் தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்றார்.

மாதவதாசர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீசற்குருவேநம:

நாற்பத்தோருவது

# லாடபாவா சரித்திரம்.

துதி கவி.

ஆடுபாவலர் ஆழ்ந்தசிந்தையும்
கோடுகொண்டலர் கொள்கைமுடிகொள்கை
வீடுவேண்டினர் விரும்புபலனெய்தும்
லாடபாவா சரிதையைநாடினேன்.

இவ்விதமாக சென்ற சித்தர்களெல்லாம் மாதவ தாசர் சரித்திரங்களையெல்லாம் உள்ளன்போடு சிர வணஞ் செய்துவிட்டுச் சென்ற சித்தர்களெல்லாம் அன்றிரவு முழுமைக்கும் அந்த மாதவதாசருடைய சரித்திரத்தையே மனனம் பண்ணிக்கொண்டிருந்து வைகறையை யுணர்ந்தெழுந்து நித்தியக் கடன்களை முடித்துக்கொண்டு எல்லாரும் ஒன்றாகச்சேர்ந்து உண்டியாதிகளை யொழித்து அங்கிருந்தும் புறப் பட்டு ஸ்ரீநாபாஜிசித்தர் இருக்கின்ற திவ்வியஸ்தா னத்திற்கு வந்து சேர்ந்தார். அப்போது நாபாஜி சித்தரானவர் துயிலைவிட்டு நீங்கி அசௌச முதலிய வைகளைச்செய்து பின்னர் நித்தியக்கடனை முடித்து ஸ்ரீஎம்பெருமானார் திருக்கோயிலிற் சென்று பல கால் பிரதட்சணஞ்செய்து வணங்கி ஓ! சுவாமி! திருப்பாற்கடலைக் கடைந்த திருமேனியா! ஒரு அடியவர்பொருட்டு உருகறுத்த உத்தமா! அடியே னுடைய மனக்கவலையை ஒழிக்க வொண்ணாதோ? வென்று பல வகையாக ஸ்தோத்திரஞ்செய்து இனி என்றைக்கு என்னுடைய ஜென்மத்தை ஒழிப்பாய் என்று வருந்தியிருந்தார்.

அந்தச்சமயத்தில் சித்தர்களெல்லாம் அவ்வி டத்தில்வந்து அவரைக்கண்டு வணங்கி ஓ! சுவாமி! தேவரீர் எங்களுடைய மனம் ஒடுங்கி நாங்களும் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளுக்குப் பாத்தி ரர்களாக ஆகவேண்டும் ஆகையால் தேவரீர் எங் கள்மீது கிருபாகடாட்சம் வைத்து இதுவரைக்கும் சொல்லிவந்ததுபோல இன்னுமொரு பக்தருடைய விஜயத்தை அருள்செய்யவேண்டுமென்று வேண் டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்த ரானவர் மிகவும் சந்தோஷித்து அப்படியே ஆகுக வென்று சொல்லிச் சொல்லத்தொடங்கினர். எப் படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொரு கால த்திலே நீர்வளம், நிலவளம் முதலியவைகள் நிறை ந்திருக்கின்ற ஜோதபூர் என்னும் ஒரு ஊர் இருந் தது. அதில் லாடபாவாயென்று ஒருவரிருந்தார். அவரோ ஹரிபக்தியிலும் எல்லா உயிர்களையும் தம்முடைய உயிரைப்போல் பார்ப்பதிலும் சிறந் தவராயும் பிரபஞ்சத்தில் விரக்தராகவு மிருந்தார். ஆகையால் இவர் தீர்த்தயாத்திரை செய்ய விரும்பி புறப்பட்டு வழியிலுள்ள பலவகையான க்ஷேத்திரங் களையுங்கண்டு சேவித்துப் பல ஹரிதாசரைக்கண்டு வணங்கியும் மனமகிழ்ந்து காவூர் என்னுந் தேசத் தை யடைந்து, அங்குள்ளவர் யாவரும் சற்றும் இரக்கமில்லாதவராகவும் சத்தியை யாராதிப்பவரா கவும், அந்தச் சத்திக்கு நரபலி முதலியவற்றைச் செய்பவராகவு மிருப்பதை யறியாமல் அவ்வூரில் பிரவேசித்தார். அவ்வூரார் அன்றைக்கு நரபலி க்கு ஆள் அகப்படாமல் தேடிக்கொண்டிருந்தார். ஆகையால் இவரைக் கண்டவுடனே இவரைப் பிடி த்துக் கட்டிக்கொண்டுபோய் காளிகோவிலில் தேவி க்கெதிராக நிறுத்தி மூன்றுபேர் அசையாமற் பிடி

த்துக்கொண்டு நின்றார்கள். உடனே ஒருவன் வாளேந்தி வந்து இவரை வெட்டக்கிட்டினன். அப்போது இவர் ஸ்ரீகண்ணபிரானைத் தியானஞ்செய்து ஓ! பரமதயாளா! நீ என்னை இந்தச்சமயத்தில் காப்பாற்றினாலுஞ்சரி கைவிட்டாலுஞ்சரி என்றுசொல்லி திடமான சித்தத்துடனே நின்றார். அப்போது காளியானவள் கோரரூபங்கொண்டு கோயிலைவிட்டு வெளியேவந்து இவரைப் பிடித்துக்கொண்டு வெட்ட உத்தேசித்து நின்ற நால்வரையும் கொன்று சாந்தரூபங்கொண்டு லாடபாவாவின் திருவடிகளை வணங்கி ஹரிதாசராகிய உமக்கு என்னால் நேரிட்ட அபராதத்தை மன்னித்து அருள்புரியவேண்டுமென்றும் உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளுமென்றும் மிகவும் பிரார்த்தனை செய்தாள். அதுகேட்ட தாசரானவர் காளியைநோக்கி எனக்கு யாதொன்றும் வேண்டியதில்லை. நீ இதுவரையில் கொலைக்கு இசைந்திருந்ததையும், இவ்வூரார் கொலைசெய்து வந்ததையும் ஒழிப்பீர்களானால் போதும். இதுவுமல்லாமல் இவ்வூரார் யாவரும் ஹரிதாசராய் ஹரிபஜனைசெய்யும்படி அவரவர்களை நீ நிறுத்தவேண்டுமென்று சொன்னார். சத்தியும் அப்படியே ஆகுகவென்று அந்த வேண்டுகோளுக்கிசைந்து அன்று இரவு அந்தவூர் அரசனுடைய கனவினிற்போய் அரசனே, இன்றுமுதல் உன் ஊராரெல்லாரும் கொலைத்தொழிலைவிட்டு என்கோயிலில் வந்து தங்கியிருக்கிற ஹரிதாசரைக்கண்டு வணங்கி அவருக்கு அடியவராதலல்லாமல் என்கோயிலில் முன்போல நரபலி முதலிய துர்க்கிருத்தியங்களைச் செய்தால் உன்னையும் உன் ஊரிலுள்ள ஜனங்களையும் நாசஞ்செய்வேனென்று சொல்லிவிட்டு மறைந்தாள். உடனே அரசனானவன் விழித்தெழுந்து தன்னுடைய ஊரார் யாவரும் உயிர்வதை செய்வதை நிறுத்தவேண்டுமென்றும் காளிகோயிலில் வந்திருக்கிற ஹரிதாசரைவணங்கி அவருடைய அநுக்கிரகத்தைப் பெறவேண்டுமென்றும் பறையறைவித்துத் தானும் அக்காளிகோயிலுக்குப் போய் அங்கே மாண்டுகிடக்கிற நால்வரையுங்கண்டு மிகவும் அதிசயித்து மிகுந்த அச்சத்தோடு லாடபாவா என்னும் தாசரை வணங்கி அவருடைய அநுக்கிரகத்தைப்பெற்று ஹரிபஜனைசெய்யத் தலைப்பட்டவர்களாய் ஏகாதசி விரதத்தையும் அநுஷ்டிப்பவர்களானர். அதின்பிறகு லாடபாவா வானவர் பகவானை உள்ளபடியே நமஸ்காரஞ்செய்து ஓ! ஸ்வாமி! தேவரீர் உமது சுகுணரூபத்தைக் காட்டி அருளவேண்டுமென்று மிகவும் பிரார்த்தனை செய்தார். அவ்விதமாகவே பகவானும் கெருடவாகனரூடராய் பிரத்தியக்ஷமாகி அபயம் தந்து இன்னம் சிலகாலம் சென்றபிறகு நான்காம்பதவியாகிய சாயுஜ்ய பதவியைத் தருகின்றேன், என்று சொல்லி மறைந்தார். அதன்பிறகு தாசரும் பலதீர்த்த க்ஷேத்திர யாத்திரை செய்துவந்து ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ்செய்து இனிமையாக வாழ்ந்துகொண்டிருந்தார், என்றுசொல்லி அவர்களுடைய மனதிற்கு உறுதிப்பாட்டைக் கொடுத்து அவர்களுக்கு உத்தரவு கொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்றார்.

லாடபாவா சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநமஃ

நாற்பத்திரண்டாவது

# தனுசாடர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

அரியானே யந்தணருக் ககத்தொளிரு மண்ணலே
யாதியிலே யாதிமூலப் பொருளென் றழைத்திட்ட
கரியானே கமலத்தில் வசித்தருளுங் கண்ணனே
காஞ்சிமுதற் பலபதிகள் கலந்துறையுங் கோவே
விரியான வேதங்கள் விளக்குவித்த விண்ணவா
வேதன்முத லடியவர்கள் விளங்குநற் பேரான
கரியானசங்குடைய சுத்தனே யச்சுதனே
துயர்க்கடலை நீக்குவாய் துரிதத்தில் வந்தின்றே.

இவ்விதமாகச் சித்தர்களெல்லாஞ் சென்று அன்று இரவெல்லாம் லாடபாவாவின் சரித்திரவிசேடங்களை ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந்து அன்று இரவை ஒருவாறு ஒழித்து மறுநாள் உதயத்திலெழுந்து நித்தியக்கடன்களைமுடித்து ஸ்ரீகண்ணபிரானை உள்ளன்போடு தியானித்து அவ்வரவர்களுக்குத்தக்க போஜனங்களைச்செய்து அங்கிருந்தும் புறப்பட்டு ஸ்ரீ நாபாஜிசித்தரிடம் வந்து சாஷ்டாங்கமாய் திருவடிகளில் விழுந்து நமஸ்காரம் செய்து எழுந்து உள்ளன்போடு தியானித்து ஓ சுவாமி! தேவரீர் எங்களுக்கு வழக்கம்போல் ஒரு பக்தவிஜயம் சொல்லவேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தர் சிறிது நேரம் ஆசனத்தில் அமர்ந்து ஸ்ரீமந் நாராயணனைத் தியானஞ்செய்து தனுசாடர்சரித்திரத்தையுணர்ந்து கண்விழித்து மற்ற சித்தர்களைப்பார்த்து அப்படியே சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் ஒரு ஊரில் தனுசாடர் என்னும் பெயருள்ள குடியானவர் ஒருவரிருந்தார். அவருக்கு ஏழுவயது நிறைந்தகாலத்தில் அவர் அந்த ஊரிலிருக்கின்ற ஹரிதாசர்களிடத்தில் மிக்க அன்புள்ளவராய் அவர்களை பூசைசெய்வதில் மிகவும் ஊக்கமுள்ளவராய் இருந்தார். இவர் இப்படி யிருக்குங்காலத்தில் சில ஹரிதாசர்கள் இவனிடத்தில்வந்து நீராடி சாளக்கிராமபூசை செய்வதைப்பார்த்து அவர்களை வணங்கி சுவாமிகளே! நீங்கள் நானும் இப்படி பூசை செய்யும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று மிகவும் பிரார்த்தனை செய்தார். அதற்கு அந்த ஹரிதாசர்கள் இவனோ சிறுவனாயிருக்கின்றான். இவன் சாளக்கிராமம் பூசைசெய்யும் பருவமுள்ளவனல்லனென்று எண்ணி இவனுடைய வயதிற்குத் தகும்படி ஒரு சிறுகருங்கல்லை இவரிடத்தில் கொடுத்தார்கள். அதை இவர் மிகுந்த அன்புடன் இரண்டு கைகளாலும் ஏற்று நாள்தோறும் தாம் மாடுமேய்க்கப் போகிற காட்டில் ஒருபக்கத்தில்வைத்து ஸ்நானஞ் செய்து அக்காட்டிலுள்ள புஷ்பங்களையெல்லாங் கொண்டுவந்து அவைகளைக்கொண்டு அர்ச்சனை செய்து தாம் உண்ணுவதற்குத் தம்முடைய வீட்டிலிருந்து எடுத்துக்கொண்டுபோன கட்டுச்சோற்றை அப்பெருமானுக்கு நிவேதனஞ்செய்து ஸ்ரீமந்நாராயணனே! நீ இதை அன்போடு அமுதுசெய்யக் கடவீர் என்று பிரார்த்தனைசெய்தார். பகவானானவர் இவருடைய பக்திக்கு மனஞ்சந்தோஷித்து அதை அமுது செய்தருளினர். அவர் உண்டபின் அந்தச் சேஷத்தை இவருமுண்டார்.

இவ்விதமாக நடந்துக்கொண்டிருக்கும்போது ஒருநாள் இவர் வயலில் விதைவிதைக்கப் போகும்

போது சில ஹரிதாசர்கள் அவ்விடம் வந்துசேர்ந்து, இவரைப் பார்த்து நீர் நாள்தோறும் ஹரிதாசர்களை பல வழியாக உபசாரஞ்செய்து அன்னமிடுகிறீரென்று கேள்விப்பட்டுவந்தோம் ஆகையால் எமது பசியைத்தணிக்சவேண்டுமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட இந்தத் தாசரானவர் இவர்களுக்கு எப்படி பசியைத் தணிக்கலாம் இந்த விதையேயல்லாமல் நம்மிடத்தில் வேறொன்றும் இல்லையே என்று மனதில்நினைத்து அந்தவிதையை அரிசியாக்கிச் சமைத்து அந்த ஹரிதாசரை யழைத்து உபசாரஞ்செய்து படைத்தனர். அவர்களும் அவ்வாறேயுண்டு பசிதணிந்து இவரைப்பார்த்து நீர் எமது பசியைத்தணித்தீர். ஆகையால் உமக்கு இதுமுதல் மேன்மேலும் ஸ்ரீலட்சுமிநாதருடைய திருவருள் உண்டாகக்கடவதென்று அவரை ஆசீர்வதித்துவிட்டுப் போய்விட்டார்கள்.

இவ்வாறு அவர்கள் போனபின்னர் அவ்வூரிலுள்ளவர்களெல்லாரும் இல்லறத்தை நடத்தியல்லவோ பரமார்த்திகமானவற்றைச் செய்யவேண்டும். இவர் தம்மிடத்திலிருந்த விதை முழுவதையும் ஹரிதாசருக்கு உபயோகித்துவிட்டாரே? இனி இவர் எப்படி பயிரிடுவது? என்று இகழ்ந்து பேசிக்கொண்டார்கள். அவர்கள் இப்படி பேசிக்கொள்வதைக்கேட்ட தாசரானவர் விதையை நிலத்திலிடுவதைப்பார்க்கிலும் உயிர்களின் வயிற்றிலிடுவது மகா புண்ணியம். அதிலும் ஹரிதாசர்கள்வயிற்றிலிடுவது சிறந்த புண்ணியமென்று துணிந்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டும், முன்பு தாம் செய்துக்கொண்டிருந்த பூஜையையும் இடைவிடாமற் செய்துக்கொண்டிருந்தார்.

அதையறிந்த ஸ்ரீமந் நாராயணனவர் இவருடைய விளைவுநிலத்தில் விதையை விதைத்து முளைத்துச் செழிக்கச்செய்தார். அதுகண்ட இவரை யிகழ்ந்தவர்கள்யாவரும் இவருடைய பயிர் செழித்திருக்கக்கண்டு இவர் ஹரிபக்தர் ஆதலால் இவருக்கு அந்தப் பகவானே முன்னின்று உதவிசெய்ததாகக் காணப்படுகிறதென்று யாவரும் பேசிக்கொண்டார்கள்.

அதைக்கேட்ட இவரும் அந்தப் பயிரைப்பார்த்து இது இறைவனுடைய திருவருளே யல்லாமல் வேறல்லவென்று மனதிலெண்ணிக்கொண்டு பகவானை ஸ்தோத்திரம்பண்ணி விளைந்திருந்த கோதுமையைக் கொண்டுவந்து ஹரிதாசர் விஷயத்தில் உபயோகப்படுத்திப் பகவானை இடைவிடாமல்துதி செய்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார்கள். என்று சித்தர்களுக்குச் சொல்லி அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடஞ் சென்றார்.

தனுசாடர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

நாற்பத்திமூன்ருவது

# ஹரிவியாஸர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

சர்வபரி பூரணனே சர்வந்தரி யாமியே
சகலவுயி ரிதயத்துந் தங்கிவளர் பொருளே
கர்வமுறு வோர்க்கரிய கண்ணனே வைகுந்த
கஞ்சமலர் வாசனே கமலைவாழ் மார்பினனே
பர்வதத்தை யோராழி பற்றியே நிறுத்தினவா
பாழ்மனதை நீக்கியே பயனருள் செய்குவாய்
மர்மமுறு முன்பதத்தை வணங்குமடி யவர்களையே
மாருமலருள்செய்வாய் மாநிலத்தி லன்றே.

இவ்விதமாக சரித்திரத்தைக் கேட்டகன்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இஷ்டப்படி அவரவர்கள் பக்தர்களுடையவிஜயங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்து பொழுதுவிடியவே எல்லோரும் எழுந்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு சூரியநாராயணனை நமஸ்காரஞ்செய்து எல்லோரும் ஒன்ருகச்சேர்ந்து ஸ்ரீ நாபாஜிசித்தரிடஞ் சென்ருர்கள். அப்போது அவர் சர்வ காரியங்களையும் முடித்துக்கொண்டு ஸ்ரீகண்ணபிரானுனவர் எழுந்தருளியிருக்கும் திருச்சந்நிதியையடைந்து இறைவனை உள்ளபடியே வணங்கிக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் சித்தர்களெல்லாம் அவரைக்கண்டுவணங்கித் துதித்து ஒரு பக்தவிஜயத்தைச் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அதற்கு அவரும் அப்படியே யாகட்டுமென்று சொல்லிச் சொல்லத் தொடங்கினர். எப்படியென்ருல்,

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் தென் தேசத்திலே வடமதுரை என்னும் பெயருடைய ஒரு க்ஷேத்திரமிருந்தது. அதில் ஹரிவியாசர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் பகவத் பக்தியிற் சிறந்தவரும் சதுர்வேதபாராயணரும் அன்பு அருள் முதலிய ஆன்மாவின்குணங்கள் பூர்த்தியாயுள்ளவருமானவர். இப்படிப்பட்ட இவர் தம்முடைய சிஷ்யர்களோடும் ஸ்ரீ ஜகந்நாதர் யாத்திரைபோகும் போது வழியில் ஒருமனேகரமான பூஞ்சோலையைக் கண்டு அதிலிறங்கினர். அங்கே ஒரு காளிகோவில் இருந்தது. அதில் ஒருவன் ஒரு ஆட்டைக்கொண்டு வந்து பலியிட்டான். அதைக்கண்ட ஹரிவியாசர் மிகவும் மனம்வருந்தி இவ்விதமாக உயிர்வதை செய்யத்தகுந்தவிடத்தில் நாமிருக்கத்தகாதென்று தமது சிஷ்யர்களோடும்புறப்பட்டு மிகுந்த விசனத்துடன் இந்தத் தேசத்தார் மிகவும் கெடுதியுள்ளவர்கள். ஆகையால் இந்தச் சோலையில் நாம்வந்து இறங்கினதும் பாவமென்று சொல்லிக்கொண்டு மிகுந்த பசியோடு அதைவிட்டுப் போகும்போது காளியானவள் மனம்வருந்தி ஸ்ரீஹரிபக்தரானவர் இந்த இடத்தைவிட்டுநீங்கிப் பசியோடு போகின்ருரே அந்தப் பாவம் என்னைச் சேருமேயென்று சீக்கிரமாக ஓடி அவருக்கு எதிரேபோய்ச் சாஷ்டாங்கமாகவணங்கி அவரைப் போகவொட்டாமல் நிறுத்தி ஒ சுவாமி! என்னிடத்தில் வந்து பசியோடு போவீரானல் என்னுடைய தெய்வத்தன்மை நீங்கும். ஆகையால் நீர் கோவிலில்வந்து அமுதுசெய்து போகவேண்டும் என்று மிகவும் பிரார்த்தனை செய்தாள். அதற்குத் தாசரானவர் காளியைப்பார்த்து ஓகாளி! நீ கொலை

செய்வதை விடுவாயானல் உன்னிடத்திற்கு வருவே னென்ருர். அதைக்கேட்ட காளியானவள் அப் படியே செய்கிறேனென்று உறுதிமொழி கூறி அழைத்தாள். அதற்குத் தாசரும் சம்மதித்துவந் தார். வந்தவுடனே காளியானவள் தன் கோவிலைச் சுத்தஞ்செய்ய ஏற்பாடுசெய்து சமையல்செய்வித்து தாசருக்கு ஊட்டி மகிழச்செய்தாள். தாசரும் அவ ருடைய சிடர்களும் அதையுண்டு மகிழ்ச்சியடைந் திருந்தார்கள். இப்படியிருக்கக் காளியானவள் அன் றிரவில் அவ்வூருக்கு அரசனுயிருப்பவனுடைய கன விற்போய் அரசனே! இனி இவ்வூரார் என்னுடைய கோவிலில் ஆடு முதலியவற்றையும் பலியிடாதபடி கட்டளையிட்டு உயிர்வதையை பரிசுத்தமாய் நீக்க வேண்டும். அப்படி நீ செய்யாதபட்சத்தில் உனக் கும் இவ்வூராருக்கும் அதிக துன்பத்தை உண்டா க்குவேன் என்று சொன்னுள்.

அதைக்கேட்ட அரசன் உடனே கண்விழித்து தான்கண்ட கனவின் செய்தியை மந்திரிக்குத் தெரி வித்து அவன்மூலமாகவே அந்த ஊராருக்கெல்லாம் கொலை பாவத்தைச் செய்பவர்கள் தண்டிக்கப்படு வார் என்கிற ஏற்பாட்டைத் தெரிவித்தபிறகு காளி கோவிலுக்குப்போய் அங்கேதங்கியிருக்கிற தாசரை வணங்கி அடியேனுக்கு அநுக்கிரகம் செய்தருள வேண்டுமென்று மிகவும் பிரார்த்தித்தான். அதற்கு தாசரும் அப்படியே திருவருள்செய்து இனிமேல் உன்னுடைய ஊரில் ஜீவவதை நடக்கக்கூடாது என்று வற்புறுத்தி ஹரிபஜனை செய்யும்படி கட் டளையிட்டருளினுர்.

அதைக்கேட்ட அரசனும் ஓ தாசரே! அப்ப டியே செய்கிறேனென்று ஒத்துக்கொண்டு அந்தத் தாசரைத் தன்னுடைய ஊருக்கு அழைத்துக் கொண்டுபோய் மிகவும் அன்புடனே பூஜித்துக் கொண்டிருந்தான். இவ்வாறு அவனுடைய உபசர ணையில் ஆறுமாதகாலம்வரைக்குந் தங்கியிருந்தார். அப்போது அரசன் அவ்வூரில் பஜனைமடம் ஒன்று கட்டுவித்து யோகீசுரர்முதலானேர்களை அந்தமடத் தில்வந்து தங்கும்படிசெய்து அவரவர்களுடைய சிடர்களும் தங்கும்படிசெய்தான். அதன்பின்னர் தாசரானவர் ஸ்ரீஜகந்நாதக்ஷேத்திரத்திற்குப்போய் எம்பெருமானை வணங்க பகவானுனவர் இவரைத் தழுவிக்கொண்டு அபயம்கொடுத்து மறைந்தருளி ஞர். உடனே ஹரிவியாசரானவர் புறப்பட்டு வட மதுரைக்குப்போய் அங்கே ஸ்ரீ கண்ணபிரானைப் பஜித்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார்களெ ன்றுசொல்லி நாபாஜிசித்தரானவர் தமது இருப்பி டஞ் சென்றுர். மற்றச் சித்தர்களும் அவரிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் இருப் பிடங்களுக்குப் போய்ச்சேர்ந்தார்கள்.

ஹரிவியாஸர் சரித்திரம் முற்றிற்று.

---



ஸ்ரீ
ஸ்ரீகிருஷ்ணயநமஃ
நாற்பத்தினன்காவது

# திரிலோசனதாசர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

கருவினற்படுந்துயரங் கண்டவர்க்குமிகவே
கருத்தழிக்குமாகையினல் கமலமலரடியை
உருவின்மேல்வைத்திங்குயர் பொருளைநல்காய்
உத்தமனேயச்சுதனே யோங்காரப்பொருளே
மருவினுயர்பக்தஜனர்களுக் கருளுந்துய
மாதவனேகேசவனே மாலாழிகொண்ட
குருவுருவமாகவருங் கோதிலாமணியே
கொற்றவனேநித்தியமுங் கைகுவித்தேனுனையே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாரும் அங்குவிட்டகன்று அவரவர்களிருப்பிடஞ் சேர்ந்து அன்று இராப்போஜனமுண்டு அன்று இரவெல்லாம் சரியான நித்திரையில்லாமல் மனமொடுங்கவில்லையே என்கிற ஏக்கத்துடனேயிருந்து வைகறையுண்டாகவே துயில்விட்டெழுந்து நித்தியக்கடன்களை முடித்துத் திருமண்காப்பைத் தரிக்கவேண்டிய இடங்கள் ஒன்றிலுந் தவருமல் தரித்து உண்டியாதி வினைகளை யொழித்துக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனுச்சாரணத்துடன் எல்லோரும் ஒன்ருய்க்கூடி வழியில் தங்கள் தங்களுடைய மனவொடுக்கத்தைப் பற்றிப் பேசிக்கொண்டு நாபாஜிசித்தரானவர் இருக்கின்ற இடத்திற்குச்சென்ருர்கள். அந்தச்சமயத்தில் நாபாஜிசித்தரானவர் எல்லாக் காரியங்களையும் முடித்துக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனுடையசந்நிதியில் எழுந்தருளியிருந்தார். அப்போது சித்தர்களெல்லாம் சென்று அவரைக்கண்டு வலப்பிரதட்சணஞ்செய்து ஒ சுவாமி! எங்களுடைய புண்ணியப்பேறே! சர்வபக்தர்களிடத்திலுங் கலந்திருக்கின்ற இறைவனே! உன்னுடைய திருவருளினலேயே நாங்கள் இதுவரைக்கும் உஜ்ஜீவித்திருக்கின்ருேம். ஆகையால் தேவரீர் தயவுசெய்து எங்களுக்கு முன்போலவே திரிலோசன பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லியருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரானவர் அப்படியேயாகட்டுமென்றுசொல்லிச் சொல்லத்தொடங்கினர். எப்படியென்றல்.

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னெருகாலதில் சர்வ வளமும் நிறைந்த ஒரு ஊரில் திரிலோசனர் என்னுந் திருநாமத்தையுடைய ஒரு கம்மாளரிருந்தார். அவர் குடும்பத்தோடு கூடியிருந்தும் அதின் விஷயத்தில் மிகவும் விரக்தராயும் ஆபரணங்கள் செய்யும்பொருட்டு ஊரார் கொடுக்கிற பொன் வெள்ளிகளில் கொஞ்சமும் அபகரிக்க மனமில்லாதவராயுமிருந்தார், இவர் இப்படி யிருக்குங்காலத்தில் அந்தவூருக்கு அரசனுடைய வீட்டில் ஒரு கலியாணம் நேரிட்டது. அப்போது அரசன் இந்தக் கம்மாளரை யழைத்து திரிலோசனனே! நீ நவரத்தினங்களால் ஒரு ஜேனகில் என்னும் ஆபரணம் செய்துகொடுக்கவேண்டுமென்று சொல்லி பொன்னும் ரத்தினங்களுங் கொடுத்தான். அதன்பின்னர் அவனைப்பார்த்து இந்த ஆபரணத்தை மூன்று நாளைக்குள்ளாகச் செய்துகொடுக்கவேண்டுமென்று அரசன் சொன்னன்.

அதைக்கேட்ட இவர் அந்தப்பொன்னையும் ரத்தினங்களையும் தன்னுடைய வீட்டுக்கு எடுத்துக்கொண்டுவந்து பத்திரப்படுத்தி வைத்துவிட்டுவெளியே வந்தார். அப்போது சில ஹரிதாசர்கள் திரண்டு வந்தார்கள். இவர் அவர்களைக் கண்டவுடனே சாஷ்டாங்கமாக வணங்கி தம்முடையவீட்டிற்கு அழைத்துக்கொண்டு வந்து ஆசனங்கொடுத்து நல்லஆகாரங்கொடுத்து உபசரித்தார். அவர்களும் உண்டு மகிழ்ச்சியடைந்திருந்தார்கள் இவ்விதமாக அவர்கள் இரண்டுநாளிருந்து போய்விட்டார்கள் இவர்இப்படியே வருகின்ற இந்தப் பாகவத கயிங்கிரியத்திலேயே மனம் வைத்திருப்பதனல் அரசன் கொடுத்த வேலையை மறந்துவிட்டார். இவ்விதமாக மூன்று நாள் செல்லவே அரசனுனவன் மூன்ருவதுநாள் சிலரை ஏவினன் அவர்களைக் கண்டவுடனே இவர் மிகவும் பயந்து அரசனிடத்திற்குப் போனர் இவரைக்கண்ட அரசன் நீ நான் செய்யச் சொல்லிக் கொடுத்த ஆபரணத்தை நாளை கால

யில் கொடுக்காமற் போனல் உன்னைத் தண்டனை செய்வேனென்று சொன்னன். அதைக் கேட்ட இவரும் நாளைக் காலையில் கொடுக்கத் தவறமாட்டேனென்று சொல்லி, வீட்டுக்கு வந்து இந்த நகையைச் செய்வதற்கு நான்குநாள் செல்லுமே நாளைக்குக் கொடுக்காமற்போனல் அரசன் தண்டிப்பானே என்செய்வோமென்று சொல்லி ஒரு காட்டில்போய் ஒரு இடத்திலிருந்து ஸ்ரீலட்சுமிநாதனுகிய பகவானை உள்ளபடியே பயந்து தியானஞ்செய்து கொண்டிருந்தார். அப்போது பகவானுனவர் தம்முடைய பக்தருடைய வார்த்தை பிசகாமலிருக்கவேண்டுமென்று தாசருடைய ரூபத்தைத்தாங்கி அந்தத் தாசருடைய வீட்டிற்குள்ளேபோய் பொன்னையும் ரத்தினங்களையுமெடுத்து, தக்ஷணமே அரசன் சொன்ன ஆபரணத்தைச் செய்து முடித்து எடுத்துக்கொண்டு அரசனிடம்போய் வந்தனம்செய்து ஆபரணத்தைக் கொடுத்தார். அந்த ஆபரணத்தைக்கண்ட அரசன் மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்து, இது மிகவும் நேர்த்தியாயிருக்கிறதென்று அளவற்ற பொருள்களை வெகுமானங்கொடுத்தான். அவைகளையெல்லாம் வாங்கிக்கொண்டு வந்து தாசருடைய மனைவியார் கையிற்கொடுத்து இன்றைக்குச் சாதுஜனங்களுக்கு நல்ல உணவுகளைச் செய்யவேண்டுமென்று சொல்ல அவரும் அப்படியே செய்ய அதை வந்த சாதுக்களுக்கெல்லாம் உபசாரஞ்செய்துஉண்பித்து அவர்கள் திருப்தியடைந்து போனபிறகு தாமும் உண்டு தமது முன்றானையில் கொஞ்சம் உணவை யெடுத்து முடிந்துகொண்டு காட்டில் வாழ்பவராகிய தம்முடைய அன்பரிடத்திற்கு வேறு தாசர் போல் ரூபங்கொண்டு போனர். இவ்விதஞ்சென்ற இவர் காட்டிலிருக்குந் தாசரைப்பார்த்து ஐயா தாசரே! எனக்கு இந்தக்காட்டில் வழிதெரியவில்லை. ஆகையால் நீர் வழிகாட்ட வேண்டுமென்று கேட்டார். அதற்குத் தாசரானவர் இவர் யாரோ ஒரு பக்தரென்று நினைத்து வணங்கி இந்தக்காட்டில் கானுறுகளையெல்லாங் கடந்து இவ்வளவுதூரம் ஏன் வந்திரென்று கேட்டார். அதற்குப் பகவானுனவர் இந்தக் காட்டையடுத்த நகரத்திலுள்ள தட்டானை அரசனுனவன் அழைத்து பொன்னையும், மணிகளையுங்கொடுத்து ஆபரணஞ்செய்யச் சொல்லிக் கட்டளையிட அந்தத் தட்டானுனவன் அந்த ஆபரணத்துக்காகக் கொடுத்த பொருளைக்கொண்டு இன்று அளவற்ற சாதுஜனங்களுக்கு நல்ல உணவளித்தான். அவ்விடத்தில் வந்து உண்டவர்களில் நானுமொருவன் அவ்விடத்தில்வயிறுநிறையஉண்ட மயக்கத்தால் வழிதப்பி வந்துவிட்டேன். அன்றி அந்த உண்டியில் இன்னும் ஒரு வேளைக்காகும்படியாக வெடுத்துக்கொண்டு வந்தேன். உன்னுடைய முகவாட்டத்தைப் பார்க்குமிடத்தில் நீயும் பசியினல் வருந்தியிருக்கிறதாகக் காணப்படுகின்றது. ஆகையால் இந்த உணவை நீ உண்டு பசிதணியக் கடவையென்று சொன்னர். அதைக்கேட்ட தாசரும் அப்படியே சம்மதித்து உண்டுகொண்டே நாம் இங்கேயிருக்க நம்முடைய பெயரைக் கொண்டு அரசனுக்கு நகைசெய்து கொடுத்தவர் யாரென்று யோசனைசெய்து அதைப்பற்றிப் புகழ்ந்து உண்டு முடிந்தபிறகு வந்த பகவானை தாசரானவர் அழைத்துக்கொண்டு தம்முடைய வீட்டிற்கு வந்து புறந்திண்ணையில் தாசவேஷங்கொண்டு வந்த பகவானை இருத்தி தாம் வீட்டுக்குள்ளே நுழைந்து, தேவியாரைப்பார்த்து இங்கே இன்று நடந்த சங்கதி யென்னவென்று கேட்டார். அதற்குத் தேவியார் தாசரைப்பார்த்து உமக்கென்ன சித்தப் பிரமையோ! அரசனுக்கு ஜேவர்செய்து கொடுத்ததற்கு அவன் பரிசாகக்கொடுத்த திரவியத்தைக் கொண்டு வந்து சாதுஜனங்களுக்கு நல்லுணவளித்து தாங்களுமுண்டு கொஞ்சம் உணவை வஸ்திரத்தில் முடிந்துகொண்டு போனீரே அதை முழுதும் மறந்து வந்து என்னை இப்படிக்கேட்டது ஆச்சரியமாயிருக்கிறதென்று சொன்னள்.

அதைக்கேட்ட தாசரானவர் காட்டிலிருந்து நம்மிடத்திற்கு வந்து ஒரு சாதுவானவர் சொன்ன படியே இங்கே நடந்திருக்கின்றது. அவரைப்பார்ப்போமென்று புறந்திண்ணையில் வந்து பார்த்து அவரைக் காணுமையால் பகவானே இவ்விதமாக எழுந்தருளி இந்த அதிசயத்தை நடத்திப் போனுரென்றுணர்ந்து, சர்வலோகசரண்யராகிய பகவானுனவர் என்பொருட்டு இவ்வளவு சிரமமெடுத்துக் கொண்டாரேயென்று அநுதாபங்கொண்டு, இந்த அபராதத்தை நான் எப்படிதீர்த்துக்கொள்ளுவேனென்று மனம் வருந்தி ஸ்ரீமந்நாராயணனைத் தோத்திரஞ்செய்தார். இவற்றையுணர்த்தி மறைந்த பகவானுனவர் உடனே இவருக்குப் பிரத்தியக்ஷமாகி அநுக்கிரகஞ் செய்துபோனர். அந்தச் சங்கதிகளை யறிந்த பக்தர்களெல்லாரும் அந்தத் தாசரை வணங்கி வாழ்த்திப் போனர்கள். இவரும் ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டும் வருடந்தோறும் இப்படி ததியாராதனேத்ஸவம் செய்துகொண்டும் இனிது வாழ்ந்திருந்தாரென்று சொல்லி நாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு நாபாஜிசித்தரும் தமதிருப்பிடஞ் சென்முர்.

திரிலோசனதாசர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீசற்குருவேநம:

நாற்பத்தைந்தாவது

# குபராபாயி சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

ஆதியிலேகடல்கடைந்த வண்ணலேபோற்றி
அற்புதங்கள்பலசெய்த வையனேபோற்றி
சோதியிலேயடியவரை கலப்பித்தபொருளே
துயரத்தினின்றன்னைத் தொலைவித்தவருளே
காதியிலாவருமசுரர்களை வென்றமணியே
கருணையுடன்திருத்தாளை கரகாட்டுவாய்போற்றி
நீதியிலேயுனைத்துதிசெய் நிர்மலர்களுள்ள
நெகிழ்ந்துறையுமெம்பெருமா னின்கழலேபோற்றி.

இவ்விதமாகச் சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று அன்று இரவெல்லாம் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை உள்ளன்போடு தியானஞ் செய்துகொண்டு காலங்கழித்துப் பொழுது விடிந்தவுடன் இந்திர திக்கிற் சென்று ஆசௌசாதிகளை முடித்துக்கொண்டு பின்னர் நித்தியக்கடனை முடித்து திருமண்காப்பிட்டு சூரியநாராயணனை நமஸ்காரம் செய்து உண்டியை பொழித்து ஸ்ரீகண்ணபிரானைத் தியானஞ்செய்துகொண்டு யாவரும் ஒன்றாகச்சேர்ந்து அவர்கள் இதுவரைக்கும் கேட்டுவந்த சரித்திரங்களைப்பற்றி ஒருவர்க்கொருவர் உலாவிக்கொண்டு நாபாஜிசித்தரிடம் வந்தார். அப்போது நாபாஜிசித்தரானவர் தாம் செய்யவேண்டிய நித்தியக்கடன்களை முடித்து ஸ்ரீமந்நாராயணனுடைய சந்நிதியில் வந்து ஸ்ரீகண்ணபிரானைப் பிரதட்சணம்வந்து சாஷ்டாங்கமாய்வணங்கித் துதிசெய்து கொண்டிருந்தார். அப்போது சித்தர்களெல்லாம் அவரைப்பார்த்து வணங்கித் துதிசெய்து சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் சொல்லி வந்ததுபோல குபராபாயி சரித்திரத்தை இன்றைக்கு எங்களுக்குச் சொல்லியருள வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதற்கு நாபாஜிசித்தரானவர் அப்படியே யாகவென்று சொல்லத்தொடங்கினார். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் சரவாகனன் என்னும் பெயருள்ள ஒரு அரசனிருந்தான். அவனுடைய இராஜகாரியங்களில் இனிவருங் காரியத்தை முன்னே யுணர்ந்துசொல்ல வல்லமையுடையவராகிய ஒரு புரோகிதரிருந்தார். அவருக்கு ஒரு புதல்வியுண்டாக அந்தப் புதல்விக்கு குபராபாயி என்று பெயரிட்டு அவளை அன்போடு வளர்த்துவருங் காலத்தில் குபராபாயியானவர் தம்முடைய இளமைப்பருவம் முதற்கொண்டு ஸ்ரீஹரி பக்தியிற் சிறந்தவராய் ஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டிருந்தார். இவருக்கு யவ்வனபருவம் வந்தது. இந்தச்சங்கதியை இளமைப் பருவத்திலேயே இவரை விவாகஞ் செய்துகொண்ட மாப்பிள்ளை வீட்டார் உணர்ந்து இவரை அழைத்துக்கொண்டுபோக வந்தார்கள். இவர்கள் அழைத்துக்கொண்டுபோக வந்த சங்கதியை இவர் உணர்ந்து மனவருத்தத்துடன் ஆலோசிக்கின்றார். எப்படியென்றால் நமது சுற்றத்தார் என்னை அழைத்துக்கொண்டுபோய் என் கணவனிடத்தில் சேர்த்தால் எனக்குக் கிடைக்கும் லாபம் விஷயாநுபவம். அந்த விஷயாநுபவத்தால் மக்கட்பேறுண்டாகும். அதனால் உண்டாகிற துன்பங்களுக்கு ஒரு அளவில்லை. அந்தத் துன்பமிகுதியால் நமக்கிருக்கிற ஹரிபக்தியும் குறையும். அப்படி குறைவதனால் மேலே நற்கதியும் லபிக்காமற்போகும். இதற்கு என்ன செய்யலாமென்று பலவாறு நினைந்து வருந்தியிருக்கும்போது வீட்டைவிட்டு வெளிப்படுவதே நன்மையென்று ஒரு முடிவான எண்ணமுண்டாயிற்று. அந்த எண்ணத்தைப் பூர்த்திசெய்வதற்காகவே, இவர் அன்று நடுராத்திரியிலெழுந்து யாவருக்குந் தெரியாமல் வெளியே வந்து ஸ்ரீஹரிதியானஞ்செய்துகொண்டே நகர்வாயின் கதவினருகில் நின்று கதவு மூடப்பட்டிருப்பதைக்கண்டு அவ்விடத்தில் ஸ்ரீகண்ணபிரானை நினைத்தார். அப்பொழுது அவர் ஒரு பெண்ணுருக்கொண்டு வந்து கதவைத் திறந்தார். அந்தச்சமயத்தில் இவர் வெளியே வந்து மனமகிழ்ச்சியுடன் தம்மீதிருந்த ஆபரணங்களையெல்லாம் கழற்றி மடியில் வைத்துக்கொண்டு பிருந்தா

வனத்திற்குப்போய் யமுனாநதியில் கிரகாட் என்னும் துறையில் ஸ்நானஞ்செய்து அங்கேயிருந்த சாதுக்களுக்குத் தம்முடைய ஆபரணங்களைக் கொடுத்துவிட்டு கோயிலுள்ளே புகுந்து ஸ்ரீமந்நாராயணனைக்கண்டு வணங்கி ஓ! பகவானே! தேவரீர் இன்று அடியவளாகிய என்னை ஜன்மபந்தத்தினின்றும் நீக்கி ரக்ஷித்தருளவேண்டுமென்று சொல்லிச் சாஷ்டாங்கமாக பூமியில் விழுந்து வணங்கினள். பிறகு ஒரு ஏகாந்த ஸ்தலத்திலிருந்துகொண்டு பகவானே! உன்னுடைய திவ்வியவிக்கிரகத்தைக் காண விரும்பினேன். ஆகையால் தேவரீர் அடியேனுக்குச் சேவை சாதித்தருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்து நின்றாள். அதைக்கேட்ட பகவானானவர் இவருடைய மனோதிடத்தைக்கண்டு இவருடைய தியானத்திற்கு எழுந்தருளிச் சேவைதந்தருளி அம்மணி! நீ வருத்தப்படவேண்டாம். நீ ராதாகுண்டத்தை யடைந்து சுகமாக வாழ்ந்துக்கொண்டிரு என்றுசொல்லி மறைந்தருளினர். உடனே இவரும் ராதாகுண்டத்தை யடைந்து அங்குள்ள ஸ்ரீகண்ணபிரான் நாள்தோறும் உணவு கொண்டுவந்து கொடுக்க அவ்விடத்தில் உண்டு மகிழ்ந்து கொண்டிருந்தார்.

இப்படி யிருக்குங்காலத்தில் இவரை அரிதிற் பெற்றெடுத்த தந்தையானவர் இவரை வீட்டில் காணாமல் பல இடங்களிலும் தேடிக்கொண்டே வந்து அவரை ராதாகுண்டத்திற் கண்டு குழந்தாய்! நீ இங்கே தனியே வந்திருப்பதற்குக் காரணமென்ன? உன்னுடைய கணவனுக்கு நானென்ன சொல்லுவேன்? பருவம் வந்தபிறகு நீ இப்படி தனியே யிருப்பது எங்களுக்கு அவமானமல்லவா? நம்முடைய குலத்திற்குத் தகாதகாரியத்தைச்செய்தாயே என்று சொன்னர்.

இப்படி சொல்லுகிற தந்தையாரைக் குபராபாயியார் பார்த்து ஐயா! உமக்கு அறுபது வயதாகியும் நீர்இன்னும் இல்லறவாழ்வில் உழன்றுகொண்டிருக்கிறீரே, ஸ்ரீஹரிபக்திசெய்து ஈடேற நினைத்திருக்கின்ற என்னையும் கெடுக்கப் பிரயத்தனப்படுகின்றீரே இது உமக்குத் தகுதியல்ல, என்னைவிட்டு நீரும் ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ்செய்து ஈடேறக் கடவீரென்று சொன்னர். இப்படி குபராபாயியார் சொல்லுவதைக்கேட்ட தந்தையானவர் மனஞ் சந்தோஷித்து என்னுடைய தாயே! அப்படியே செய்கிறேன். நீ இந்தக்காட்டைவிட்டு நம்முடைய வீட்டில் இருந்துகொண்டே அரிநாம சங்கீர்த்தனஞ் செய்திருக்கலாம், வாவென்றழைத்தார். அதற்கு ஸ்ரீகண்ணபிரானும் அந்தக் குபராபாயியைப் பார்த்து உன்னுடைய தந்தையின் இஷ்டப்படியே வீட்டிலிருந்துகொண்டு ஸ்ரீபகவானை அகோராத்திரம் துதிசெய்துக்கொண்டிருப்பாயாக என்று உத்தரவு கொடுத்தார். அதைக்கேட்ட குபராபாயியானவர் தந்தையாருடன் கூடிச்சென்று தம்முடைய வீட்டை யடைந்து அன்றுமுதல் பகற்காலத்தில் அரிபூஜை சாந்திபூஜை முதலானவைகளையும் இராத்திரி காலத்தில் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனத்தையும்செய்து கொண்டிருந்தார். இவர் இப்படி செய்யும் ஹரிபஜனையை அவ்வூரிலுள்ளார் யாவரும் வந்துகேட்டு ஆனந்தப் பரவசராய் மகிழ்ந்திருந்தார்கள். இவ்விதமாக நடந்தேறுவதை அந்த ஊர் அரசன் கேள்விப்பட்டு தம்முடைய புரோகிதரை வரவழைத்து உமது புதல்வியானவள் அனுதினமும் செய்து வருகின்ற ஸ்ரீஹரிபஜனையானது மிகவும் சேவிக்கும் இன்பம் தருவதாக பலரால் கேள்விப்படுகிறேன். ஆகையால் நானும் ஒருநாள் உமது வீட்டிற்குவந்து அந்த பஜனையைக்கேட்டு ஆனந்தமடைய விரும்புகிறேனென்று சொல்லி அதுபோலவே ஒருநாள் இராத்திரிகாலத்தில் புரோகிதர் வீட்டிற்குப்போய் குபராபாயியார் செய்யும் பஜனையைக்கேட்டு ஆனந்தித்திருந்ததுமன்றி இவருடைய கட்டழகைக் கண்டு மோகித்து நிற்க இவனுக்கு அந்தச்சமயத்தில் ஒரு கனவு உண்டாயிற்று. அதில் ஒரு பெரிய நதி பெருகி ஓடுவதாகவும் அந்த நதியினக்கரையில் குபராபாயியார் இருந்துகொண்டு பாவி! நீ இந்தக் கரைவந்து சேரக்கடவாயென்று அழைப்பதாகவும் கண்டு அஞ்சி இந்தக்கனவின் பிரயோசனமும் அர்த்தமும் என்ன இருக்குமென்றுலோசித்து இப்பொழுது நாம் கனவிற்பார்த்த நதி பிறவிக்கடல், குபராபாயி முத்திகாந்தை. அவள் நிற்கு மக்கரையே முத்தி. நம்மை இந்தப் பிறவிக்கடலைக்கடந்து அக்கரையாகிய முக்தியையடைந்து சுகித்திருக்கும் பொருட்டு அழைக்கிறாள், என்று தீர்மானித்து நின்றார். அந்தச்சமயத்தில் அரசனுக்குத் திடீரென்று மெய்ஞ்ஞானமுண்டாகி குபராபாயியாரை தான் விரும்பினதைப்பற்றி அனுதாபங்கொண்டு பயபக்திகளோடு அவளுடைய திருவடித்தாள் உள்ளன்பின்மேலிட்டால் வணங்கி உம்மிடத்தில் நான் செய்தபிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தனை செய்ததுமல்லாமல் நீர்எனக்கு உபதேசித்து என்னை ஈடேற்றவேண்டுமென்று தோத்திரஞ்செய்து குபராபாயியாரால் உபதேசிக்கப்பெற்று தன்னுடைய அரண்மனையை யடைந்து நாள்தோறும் ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்து ஹரிபக்தனய் வாழ்ந்திருந்தான் என்றுசொல்லி சித்தர்களே ஒரு பெண்பால்செய்த மகிமையைக் கவனித்து நீங்களே பக்தியின் மகிமையை உணர்ந்து கொள்ளுங்களென்று அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்று ஸ்ரீஹரி பஜனை செய்துகொண்டிருந்தார்.

குபராபாயி சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீபுண்டரீகபரப்பிரம்மணேநம:

நாற்பத்தாறுவது

# சஜ்ஜநகசாருகர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

மணிவண்ணா நின்புகழை மன்னிநின்று வேதியர்கள்
மார்க்கமாய் நாடிநின்று மகிழ்ந்துறைந் தார்கள்
கனிகண்ணன் முதலானோர் கண்வளர்ந்தார் திருவடியில்
கமலமலர் வதிந்துறையுங் காட்சியை யிங்கென்றே
அணிநண்ணி யெனக்கருள் வகங்கொள்வை யோவறியே
னந்தனனே பாற்கடலில் வந்தவனே மாணிக்க
மணிவண்ணங் கொண்டிலகு மாதவனே கேசவனே
மாயாவ தாரனே மகிழ்ந்தளிப்பா யின்றே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் ஒருவாறு மனந்தெளிந்தவர்களாய் அன்று இரவு ஸ்ரீ ஹரிபஜனை செய்துக்கொண்டிருந்து சூரியோதயத்தில் துயிலைவிட்டெழுந்து காலைக்கடன்களைக் கழித்து சூரியநாராயணனுக்கு அர்க்கியபாத்தியங்கொடுத்து உண்டியாதிகளை முடித்துக்கொண்டு ஸ்ரீ நாபாஜிசித்தரிடஞ்சென்று அவரைக்கண்டு சாஷ்டாங்கமாக வணங்கி நமஸ்காரஞ்செய்து ஓசுவாமி! தேவரீர் இதுவரைக்கும் எங்களுக்குச்சொல்லிவந்த சரித்திரங்களால் எங்களுக்குச் சிறிது மனவொடுக்கம் உண்டாயிருக்கின்றது. ஆகையால் தேவரீர் இன்றைக்கு சஜ்ஜநகசாருகர் சரித்திரத்தைச் சொல்லியருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதைக் கேட்ட நாபாஜிசித்தரானவர் அப்படியே யாகட்டுமென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்திலே ஒர்ஊரில் சஜ்ஜநகசாருகரென்னும் பெயருள்ள ஒருவரிருந்தார். இவர் சாருகராய்ப் பிறந்தும் தம்முடைய குலத்திற்கேற்ற கொலைத்தொழிலை விட்டு மாமிசத்தை விலைக்குக்கொண்டு தம்முடைய இல்லறதருமத்தை குறைவில்லாமல் நடத்துபவராகவும் உலகத்தில் பற்றில்லாதவராகவும் சாதுஜனங்களைப் பூசிப்பவராகவும் அகோராத்திரம் ஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டிருப்பவராகவும் இருந்தார். அவ்விதமாக இவர் தம்முடைய கற்புடைய மனைவியாரோடுகூடி இல்லறதருமத்தை யாதொரு குற்றமுமில்லாமல் நடத்திக்கொண்டுவருங் காலத்தில் ஸ்ரீகோபாலசுவாமியின் வடிவமாகிய சாளக்கிராமமே இவர் மாமிசம் நிறுக்குங் கல்லாக உபயோகப்பட்டிருப்பதை உணர்ந்த ஒருபிராமணன் இவரிடத்திற்குவந்து ஓ சஜ்ஜநகரே! நீர் பிராமனர் பூஜிப்பதற்குரிய சாளக்கிராமத்தை நீ பூஜித்தாலும் அதை மாமிசம்நிறுக்கும் கல்லாக உபயோகப்படுத்தலும் உனக்குநன்மையல்ல. ஆகையால் அதை என்னிடத்திற் கொடுத்துவிடென்று கேட்டார். அதற்கு இவர் ஒன்றுந் தடைசொல்லாமல் கொடுத்துவிட்டார். அதை அந்தப்பிராமணன் கொண்டுபோய் தன்னுடைய வீட்டில் பிரதிஷ்டைசெய்து பிராமணபோஜனம் முதலானவைகளுஞ் செய்வித்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ்செய்து உள்ளங் குளிர்ச்சியோடு இருந்தான். அன்று இரவில் ஸ்ரீகண்ணபிரானனவர் எழுந்தருளிவந்து சஜ்ஜநகர்வீட்டில் சுகமாய் வாழ்ந்திருந்த என்னைக் கொண்டுவந்து வைத்திருக்கிறாய் ஆகையால் ஒருக்ஷணநேரமானாலும் இங்கேயிருக்க எனக்கு மனமில்லை. ஆகையால் என்னை அவன் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடு? இல்லாதபக்ஷத்தில் உன்னை உன்னுடைய குலத்தோடு நாசஞ்செய்வே

னென்று சொல்லியருளினர். அதைக்கேட்ட பிராமணன் தூக்கத்தை விட்டெழுந்து மிகவும் பயந்து விடியற்காலத்தில் சாளக்கிராமத்தைக் கொண்டு போய்த் தாசரிடத்தில் கொடுத்துத் தான்கண்ட கினவையுஞ் சொல்லி, நான் ஜாதியபிமானத்தால் செய்த அபராதத்தைப் பொறுத்து திருவருள் செய்யவேண்டுமென்றுபிரார்த்தனைசெய்தான். இது இப்படியிருக்க தாசரானவர் சாளக்கிராமம்போன நாள்முதல் தீர்த்தத்தையும் உட்கொள்ளவில்லை ஆகையால் அதை மிகவும் இஷ்டத்தோடு பூஜித்துத் தீர்த்தத்தை ஸ்வீகரித்து பிறகு கற்புடைய மனைவியாரும் தாமுமாக அமுதுசெய்து வாழ்ந்திருந்தார். இவ்விதமாக நெடுங்காலஞ்செல்ல இவருக்கு ஒரு நாள் ஸ்ரீஜகந்நாதப்பெருமானைக் சேவிப்பதற்குச் செல்லுகின்றவர்களையும் ஜகந்நாதப்பெருமானையும் சேவிக்கவேண்டுமென்கிற எண்ணமுண்டாகி ஜகந்நாதயாத்திரை போகிறவர்களைத் தொடர்ந்துபோய் வழியில் ஒரு ஊரில் ஒருநாள் இரவில் தங்கும்படி நேரிட்டது. அவ்விதம் தங்கினபோது அவ்விடத்தில் ஒரு விபசாரியானவள் இவருடைய அழகைக் கண்டு ஆசைப்பட்டு வந்து இவரை வணங்கி சமையலுக்கு வேண்டிய பொருள்களையெல்லாங் கொண்டு வந்து கொடுத்து ஓ சுவாமி! நீர் இதைக்கொண்டு பாகஞ் செய்துகொண்டு இங்கேயே தங்கியிருந்து நாளை உதயத்தில் போகலாமென்று பிரார்த்தித்தாள். இவர் அவளுடைய நடத்தை உணராதவராய் அவள்செய்யும் உபசாரத்திற்கு மனஞ் சந்தோஷித்து சமையல்செய்துண்டு நித்திரைசெய்தார். இப்படியிருக்க அவள் நடுராத்திரியிலெழுந்து இவரிடம் வந்து இவரையெழுப்பித் தன் கருத்தைத் தெரிவித்தாள். இவர் மகா வைராக்கியசாலி ஆகையால் அதற்கு உடன்படாமல் அவளைப்பார்த்து பெண்ணே! உன் கணவன் அதோ தூங்குகிறான். அவனைக் கலந்து மகிழ்ச்சி யடையக்கடவாயென்று சொன்னார். அதைக்கேட்ட அவள் தன் புருஷனைக் கொன்றுவிட்டுவந்து அவருக்குக் காண்பித்து என் கணவன் இறந்தானே இனியாவது என்னைச் சேரவேண்டும் என்று சொன்னாள். அதற்குத் தாசரானவர் இவள் மகா பாபியென்று அவ்விடம்விட்டு வெளிப்பட்டார். அப்போது அவள் இவரைப்பார்த்து என்னுடைய மனதை மகிழ்விக்காமற் போகின்றாயாதலால் இதோ உன்னைக் கொல்லுவிக்கின்றேன் பாரென்று வைராக்கியஞ் செய்துக்கொண்டு ஓ! என்று உரத்த சப்தத்தோடு அலறி அழுதாள். அப்போது அந்தச் சத்தத்தைக்கேட்ட அயலாரெல்லாரும் திரண்டு வந்து என்னசங்கதியென்று விசாரித்தார்கள். அதற்கு அவள் இந்த மனிதன் இங்கேவந்து நான்கொடுத்த பொருள்களைச் சமையல்செய்து உண்டு நித்திரைசெய்து பாதிராத்திரியில் என்னுடைய கணவனைக் கொலைசெய்துவிட்டுப் போகிறானென்று சொன்னாள். அதைக்கேட்ட அவர்கள் உடனே இவனைக் கட்டிக்கொண்டுபோய் அரசனுக்கெதிரில் விட்டார்கள், அவளும்வந்து அலறியழுதாள். அப்போது அரசன் ஒருவாறு அவள் கையினால் தீண்டுவித்து தாசருடைய இரண்டுகைகளையும் அறுத்து விட்டான். அப்போது தாசர் கைகளையிழந்து மிகவும் மனம் வருந்தி ஜகந்நாதயாத்திரை செய்வோருடன் கூடி அவ்வூருக்கு அருகே பகவன்நாமஸ்மரணை செய்துக்கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீஜகந்நாதப்பெருமான் இவருடைய உண்மைநிலையையறிந்து அர்ச்சகருடைய கனவிற்போய் அன்பனாகிய கோருகசஜ்ஜகன் நம்முடைய ஊர்ப்புறத்தில் வந்திறங்கி இருக்கிறான். அவனை நீங்கள்போய் வணங்கிப் பல்லக்கில் ஏற்றிக்கொண்டு வாருங்கள் என்று உத்தரவுகொடுத்தார். உடனே அர்ச்சகர் விழித்து எழுந்து பல்லக்குடன்போய் இவரைக்கண்டு தமக்குப் பகவான் கட்டளையிட்டதைச்சொல்லி இந்தப் பல்லக்கில் ஏறியருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். இவரும் அதிசயங்கொண்டு பல்லக்கேற உத்தேசிப்பதும் இதைக் கண்டவர்கள் யாவரும் கொலைசெய்த குற்றத்திற்காக கையறுப்புண்டவன் பல்லக்கில் ஏறும்படிவாய்த்ததே? இது இவனுடைய கருணைவிசேஷமென்று ஆச்சரிய மடைந்தார்கள். சிலர் இவருடைய மனநிலையை யறிந்தல்லவோ ஸ்ரீபகவான்சொல்ல அர்ச்சகர் பல்லக்குக் கொண்டு வந்தது. இதையறியாமல் இவரை வீணாக இகழ்ந்து ஏன் பாவத்தை சம்பாதித்துக் கொள்ளவேண்டும் என்று பேசிக்கொண்டார்கள். அப்போது அர்ச்சகர்கள் அந்தத்தாசரைப் பிரார்த்தனைசெய்து ஓ சுவாமி! தாமதிக்காமல் பல்லக்கில் ஏறுங்களென்று பிரார்த்தனை செய்தார்கள். அப்போது தாசரானவர் கண்களில் நீர் ஆறாகவழியநின்று நான் ஒரு அபராதத்தையும் செய்யாமலிருக்க பகவானானவர் என்னுடைய கைகளை அரசன் சேதிக்கும்படி ஏன் செய்தார்? என்று எண்ணுதமெண்ணி ஓ தீனதயாளா! பக்தவத்ஸலா! ஆபத்ரக்ஷகா! இந்த ஆபத்காலத்தில் காப்பாற்றாமற் போவீரானால் உமக்கு பதிதபாவகன் என்னும் விருதுகூடாது என்று பலவாறாகப் புலம்பித் தோத்திரஞ்செய்தார். அதையறிந்த பகவானானவர் இவர்விஷயத்தில் மனமிரங்கி இவ

ருக்குப் பிரத்தியக்ஷமானர். அப்படிவந்த அந்தப் பகவானைக் கண்டமாத்திரத்தில் இவருக்கு இரண்டு கைகளும்வளர்ந்து முன்போலாயின. அதைக்கண்ட சஜ்ஜனகர் மனமகிழ்ந்து பகவானுடைய திருவடியில் விழுந்து வணங்கினர். இப்படி வணங்கின தாசரை பகவானனவர் தம்முடைய திருக்கரத்தால் எடுத்து மார்போடணைத்துக் கொண்டார். அப்போது இவர் பகவானைப்பார்த்து நான் ஒருவருக்கும் ஒரு தீமையையும் செய்யவில்லையே? அப்படியிருக்க என்னுடைய கை அறப்புண்ணச்செய்தாயே! இது தானே உன்னுடைய திருவடிகளின்குணம்? என்று கேட்டார். ஸ்ரீஜகந்நாதப்பெருமாள் இவரைப்பார்த்து நீ பூர்வகாலத்தில் ஒரு பிராமணனுக்ஒருநாள் கங்காநதியில் மூழ்கி அந்நதியின் கரையிலிருந்து என்னைமனத்திலிருத்தித் தியானம்பண்ணிக்கொண்டிருக்கும்போது ஒரு கொலையாளி கோவை வதைக்கும்பொருட்டு கட்டிவைத்த பசுவானது அறுத்துக் கொண்டுவர அவன் அதை தேடிக்கொண்டு அந்த வழியாய் வந்து உன்னைக் கேட்டான். அப்போது அந்தப்பசு இப்படி போயிற்றென்று வாயாற்சொல்லாமற்போனாலும் கையாற் சுட்டிக்காட்டினர். அப்படியே அவன்போய் அந்தப் பசுவைக் கண்டுபிடித்துக்கொண்டுவந்து கொலைசெய்தான். கொலை செய்யப்பட்ட அந்தப் பசுவானது ஒருபெண்ணைப்பிறந்து அதற்குச் சாருகன் கணவனனன். அவ்விருவரும் புணர்கின்ற வீட்டுக்குள்ளே நீ போனய். அப்போது உன்னைக்கண்டமாத்திரத்தில் அந்தப்பெண்ணனவள் உன்மேல் மோகங்கொண்டு தன்னுடைய கணவன் தலையை அறுத்ததுமன்றி உன் கைகளையும் அரசனைக்கொண்டு அறுப்பித்தாள். முன்ஜென்மத்தில் என்னைத் தியானிக்குஞ்சமயத்தில் ஒசாருகனைக்கண்ட பாவத்தால் இப்பொழுது சாருகனய்ப் பிறந்தாய். ஆனாலும் உன்னுடைய தபோமகிமையால் உனக்குக் காட்சிகொடுத்தேனென்று சொல்லி மறைந்தருளினர். அப்போது அங்கேயிருந்தவர்களெல்லாம் இவருடைய அறுப்பட்ட கைகள் வளரவே அதைக்கண்டு மிகவும் ஆச்சரியமடைந்து இவருக்குப் பகவானுடைய கருணைவிசேஷத்தால் கைகள் முன்போலவே வளர்ந்தனவென்று இவரைப் புகழ்ந்து கொண்டாடினர்கள். பிறகு இவர் சமுத்திர ஸ்நானஞ்செய்து ஸ்ரீ ஜகந்நாதப்பெருமானைச் சேவித்து வணங்கி அந்த க்ஷேத்திரத்தில் நான்கு மாதகாலம் வரைக்கும் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டிருந்தார். பிறகு அவ்விடம்விட்டுப் புறப்பட்டுத் தம்முடைய ஊருக்குவந்து தினந்தோறும் சாதுசேவையும் ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனமுஞ் செய்துகொண்டு இனிமையாக வாழ்ந்திருந்தார். என்று சொல்லியும் தவிர அவர்களுக்கு வேண்டிய மனோதிடத்தையுஞ்சொல்லி சித்தர்களே! நீங்கள் பயப்படாதீர்கள். உங்கள் மனமானது ஸ்ரீமந்நாராயணனுடைய கிருபையால் கூடியசீக்கிரத்தில் ஒடுக்கத்தையடையும் ஆகையால் நீங்கள் காலையில் வாருங்களென்றுசொல்லி அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு தாமும் தமது இருப்பிடஞ்சென்று ஸ்ரீமந் நாராயணனைத் துதிசெய்துக்கொண்டிருந்தார்.

சஜ்ஜநகசாருகர் சரித்திரம் முற்றிற்று.



நாற்பத்தியேழாவது

# கிரிதரலால் சரித்திரம்.

துதி கவி.

கரியினைக் காத்தளித்த கண்ணா மணிவண்ணா
உரியினிற் றயிருண்ட வுத்தமனே நித்தனே
அரியுருவங் கொண்ட வப்பனே யொப்பனே
கிரிதரன் கதைசொல கிருபை வையுமே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் மறு நாளுதயத்தில் துயில்விட்டெழுந்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு திருமண்காப்பிட்டு உண்டியாதி வினைகளை யொழித்துக்கொண்டு ஸ்ரீநாபாஜி சித்தர் எழுந்தருளி யிருக்கிற இடத்திற்குவந்து நமஸ்காரஞ்செய்து வணங்கி ஓ சுவாமி! தேவரீர் நேற்றையதினம் திருவாய் மலர்ந்ததுபோல் எங்களுக்கு ஒரு பக்தருடைய விஜயத்தைச் சொல்லியருளல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அது கேட்ட நாபாஜிசித்தர் அப்படியே சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களே சித்தர்களே! முன்னொருகாலத்தில் க்ஷேத்திரங்கள் எல்லாவற்றுளுஞ் சிறந்துவிளங்கினதாகிய ஒரு க்ஷேத்திரமிருந்தது. அதன்பெயரோ பிருந்தாவனம் என்பது. இதில் கிரிதரலால் என்னும் பெயருடையவர் ஒருவர் இருந்தார். இவர் பரம பாகவத சிரோன்மணியாயும் உண்மைஞானம் நல்லொழுக்கம் உத்தமகுணம் இவைகளுள்ளவராயும் ஸ்ரீஹரிபக்தராயும், பூததயையுள்ளவராயு மிருந்தார்.

இவர் நாள்தோறும் சாதுபூஜை செய்வதில் மிகவும் விருப்பமுள்ளவர். ஆனால் இவர் காலில் சதங்கைகட்டிகின்று கையிலே தம்புருபிடித்து சங்கீத சாஸ்திரத்தின் விதிப்படி நடனஞ்செய்துக்கொண்டு ஹரிபஜனை செய்வது வழக்கமாயிருந்தது. இப்படிப்பட்ட இவர் ஒருநாள் ஸ்ரீகண்ணபிரானுடைய திருக்கோயிலிற் பிரவேசித்து பஜனைசெய்யத்தொடங்குங்காலத்தில் அங்கே வந்துகூடின சாதுக்கள் எல்லாரும் முற்காலத்தில் ஸ்ரீகண்ணபிரான் செய்தருளின ராஜக்கிரீடையைக் கீர்த்தனத்திலமைத்துப் பாடும்படி பிரார்த்தனைசெய்தார்கள். அதற்கிணங்கி அதற்குத்தகுந்த வஸ்திரம் வீட்டிலிருக்கின்றது. போய் எடுத்துக்கொண்டு வரலாமென்றால் நேரஞ் செல்லுமேயென்று ஸ்ரீ கண்ணபிரானுக்கு எதிராக நின்றார். அப்போது ஒரு பீதாம்பரம் ஆகாசத்திலிருந்து அவருடைய கைக்குநேரேவர இவர் அதையேற்றுக்கொண்டார். இதைக்கண்ட சாதுக்களெல்லாரும் இவருடைய பக்தியையும் ஸ்ரீ கண்ணபிரானுடைய பெருங்கருணையையும் குறித்துக் கொண்டாடினார்கள். பிறகு இவர் அந்தப் பீதாம்பரத்தை யுடுத்தி சாதுக்கள் நியமித்தபடியே ராஜக்கிரீடைக் கீர்த்தனம்பாடக் கேட்டவர் யாவரும் ஆனந்தசாகரத்தில் மூழ்கினார்கள். மற்றொருநாள் ஒரு பைராகியானவர் பன்னிரண்டு நாமங்களையுந்தரித்து அவ்வூர்ப்புறத்திலிருந்துவரக்கண்டு அந்தப் பைராகியின் திருவடிகளை விளக்கி ஸ்ரீபாததீர்த்தத்தைக்கொண்டு மனமகிழ்ச்சி யடைந்திருந்தார். இதைப்பார்த்த யாவரும் அவர்மேற்கோபங்கொண்டு இவன் பிணம்பட்ட நீரையுண்டான். ஆகையால் இவன் வேதியனல்லன். இவன் இனி வேதமோதத்தகுந்தவனல்லன் என்று நிந்தனைசெய்து பேசினார்கள். அதைக் கிரிதரானவர்கேட்டு இவர் இவ்வுலகத்திற்கு நன்மை செய்யவந்தவர். இறப்பும்பிறப்புமில்லாதவர். ஆகையால் இவரை நீங்கள் நிந்திக்கத்தகாதென்று சொன்னார். அதைக் கேட்டவர்களெல்லாம் ஐயா! நீர்பேசுகிற வார்த்தைகளால் ஒன்றும் பிரயோசனமில்லை. இந்தப் பிணத்தைப் பிழைப்பித்தால் உம்முடைய ஞானத்தை நம்பலாம். இல்லாதபக்ஷத்தில் உம்மை ஜாதியிலிருந்து நீக்கிவிடுவோமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட கிரிதரர் ஸ்ரீ கண்ணபிரானைத் தியானித்துக்கொண்டே அவர்கள் கொண்டுவந்த பிணத்தைப் பார்த்தார்கள். அப்போது பிணமாய் இருந்தவன் உயிர்பெற்று எழுந்தான்.

இவ்விதமாக எழுந்தவன் எதிரேயிருக்கிற கிரிதரரை வணங்கி ஸ்ரீகண்ணபிரானைத் தியானஞ்செய்துக்கொண்டு தன்னுடைய ஊருக்குப் போய்விட்டான். அப்போது அங்குவந்திருந்த சாதுக்களெல்லாரும் அந்தத் தாசரைப் புகழ்ந்து கொண்டாடி வணங்கி, ஓ சுவாமி! தேவரீருடைய பெருமையை புகழ வல்லமையுடையவர் எவரிருக்கின்றனர்? ஒருவருமில்லையென்று உள்ளபடியேதோத்திரம்பண்ணி தாங்கள் தங்கள் இடங்களுக்குப் போய்விட்டார்கள். கிரிதரரோ தம்முடைய வழக்கம்போல் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார். என்று கிரிதரலாலின் மகா வைபவத்தை மற்ற சித்தர்களுக்குச் சொல்லிப் பார்த்தீர்களா சித்தர்களே! ஸ்ரீ கண்ணபிரானிடத்தில் உள்ளபடியே பக்திசெலுத்தினமையால் எந்தக்காரியமும் லேசாகமுடிந்தது. ஆகையால் இந்த மானிட ஜன்மமெடுத்த ஒவ்வொருவரும் ஸ்ரீகண்ணபிரானை உள்ளபடியே தியானஞ்செய்துவந்தால் அநேகவிதமான முத்திப்பேற்றையும் அடையலாமென்று சொல்லி அவர்களுக்கு உத்தரவுகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடஞ் சென்றார்.

கிரிதரலால் சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

நாற்பத்தெட்டாவது

# கமலாகரர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

விமலநாயகர் மெல்லடிவழுத்து
கமலநாயகன் கதையையிசைத்து
அமலனுகிய வையன்மலரடி
விமலமாகவிளம்புவை நெஞ்சமே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்று இரவு தங்கள் இருப்பிடங்களுக்குச் சேர்ந்தபிறகு மிகவும் மனவாட்டத்துடன், அந்தோ! வெகுகால மாக பக்தர்களுடைய சரித்திரங்களைக் கேட்டுகொண்டு வருகின்றோமே யொழிய அவர்களால் செய்யப்பட்ட அரியகாரியங்களைச்செய்து ஸ்ரீகண்ணபிரானுடைய திருவடிகளுக்குப் பாத்திரவான்களாக வில்லையே! இதற்கு என்ன செய்வோமென்று மனம் வருந்தி சரியான நித்திரையின்றி ஏக்கமாகவே யிருந்து சூரியன் உதயமானவுடனே எழுந்து ஆசௌசாதிகளை முடித்து சுத்த தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து நித்திய கடன்களை நிறைவேற்றி சூரிய நமஸ்காரஞ்செய்து ஸ்ரீகண்ணபிரானை உள்ளபடியே சிந்தித்து போஜனுதிகளை எடுத்துக்கொண்டு எல்லோரும் ஒன்ருகக்கூடி அவ்விடத்திலிருந்தும் புறப்பட்டு நாபாஜிசித்தரிடம் வந்து சாஷ்டாங்கமாக வணங்கி நமஸ்காரஞ் செய்து ஒ சுவாமி! அடியோங்கள் இத்தனைகாலமாகத் தாங்கள் சொல்லும் சரித்திரங்களைக் கேட்டுவிட்டுப் போகின்றோமே யல்லாமல் உண்மை யுணர்ந்து அதன்வழியாக நடந்து ஸ்ரீகண்ணபிரானுடைய திருவருளை யடைந்தோ மில்லையே! இதற்கென்ன செய்வோமென்று ஒருவாறு மனம்வருந்தி வார்த்தையாடினர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரானவர் சித்தர்களைப்பார்த்து ஒ சித்தர்களே! மானிடஜன்மமானது பூர்வத்தில் செய்த உயர்ந்த புண்ணியத்தாலுண்டாவது. அது உண்டானபோது அதற்குத் தகுந்தசெய்கைகளும் பூர்வ புண்ணியத்தினுலேயே கைகூடவேண்டியது. அதுவும் விட்டகுறை, தொட்டகுறை, என்னும் இரண்டையும் அநுசரித்தேவரும். இவ்விரண்டும் பூர்வத்தில் இல்லாமல்போனுல் கஷ்டத்தினுல்தான் திருவருள்கூடும். ஆகையால் நீங்கள் அதைப்பற்றி அதைரியப்படவேண்டாம். நாள்தோறும் இவ்விதமாகப் பக்தர்களுடைய கதைகளைக் கேட்டுக்கொண்டு வந்தால் ஒருகாலத்தில் விரக்தியுண்டாகி ஸ்ரீபக்தருடைய குணத்தை யடையலாம். அப்போது ஸ்ரீகண்ணபிரானுடைய திருவருள் கைகூடும். ஆகையால் இன்றைக்கு கமலாகரருடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன். அதை உள்ளன்போடு கேளுங்களென்று சொல்லிச் சொல்லத்தொடங்கினுர். எப்படியென்ருல்.

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் புண்டரிபுரத்திலே கமலாகரர் என்னுந் திருநாமத்தை யுடைய ஒருவரிருந்தார். அவருக்குச் சுமதி என்கிற ஒருபெண் மனைவியாயிருந்தார். இவர்களிருவருங்கூடி வாழ்ந்து கொண்டிருக்குங் காலத்தில் இவருடைய கர்ப்பத்தில் ஒரு ஆண்குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்குப் பதுமாகரர் என்று பெயரிட்டு மிகவும் அன்பாக வளர்த்துக்கொண்டு வந்தார்கள். இப்படி யிருக்குங் காலத்தில் அக்குழந்தைக்கு ஐந்துவயதாயிற்று. அப்போது இவர்கள் நாள்தோறும் நதிக்குப்போய் நீராடி நித்தியகர்மங்களை முடித்து அவ்வூரிலுள்ள வீடுகள்தோறும்

போய் பிச்சை எடுத்துக்கொண்டுவந்து தம்வீட்டில் சமையல் செய்வித்து திருமாலடியாரை முன்னே உபசரித்து பிறகு தாமும் தம்முடைய மனைவி மக்களோடு கூடியுண்டு வாழ்ந்திருந்தார்.

இப்படி யிருக்குங்காலத்தில் புதல்வனேடும் புறப்பட்டுப் பிச்சை யெடுத்துக் கொண்டுவந்து கொள்ளப்போகும்போது, இந்த இடத்தில் ஸ்ரீஹரி நாம சங்கீர்த்தனம் செய்யும் சத்தங்கேட்டது. அதைத் தேடிவரும்போது நிவர்த்தியும் ஞானதேவரும், சோபாநதேவரும், முக்தாபாயியாரும், நாமதேவரும்,கோராகும்பரும் சாரங்கதேவரும்சமர்த்த தாசரும் ஆகிய இவர்களெல்லாருங்கூடி ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு ஒரு பக்கத்திலிருந்தார். அதைக்கண்டு தாமும் தமது புதல்வருமாகப் போய் அந்தச் சாதுகோஷ்டிக்கெதிரே விழுந்து வணங்கித் துதித்து நின்று சுவாமிகளே! நான் இதுவரைக்குஞ் செய்த தவத்தின் பயனல் உங்களைக் காணப்பெற்றேன். ஆகையால் நீங்களெல்லாம் அடியேன் வீட்டுக்கு வந்து அடியாங்களை ஈடேற்ற வேண்டும் என்று பிரார்த்தனை செய்தார். அப்போது அந்தச் சாதுக்களெல்லோரும் இவரைப் பார்த்து ஓ தாசரே! நீர் அடியாரிடத்தில் பக்தியுள்ளவர் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனல் லௌகிக விஷயத்தில் மிகவும் எளியவர் நாங்கள் சிலருமல்ல, பலராயிருக்கிறேம். இத்தனைபேரையும் நீர் திருப்தி யடைவிப்பது வருத்தம். ஆகையால் நீர் பேசுகிற இந்த உபசாரவார்த்தைகளே எங்களை மிகவும் மனங்களிக்கச்செய்தன. இதுவே போதுமென்று சொன்னர்கள். அதைக்கேட்ட கமலாகரர் சாதுக்களை நோக்கி ஓ சுவாமிகளே! ஸ்ரீபாண்டுரங்க பகவானும் ரகுபாயும் அடியேனுக்குத் தந்தைதாயாராய் அமைந்திருக்கிறர்கள். ஆகையால் அடியேனுக்கு ஒரு குறைவுமில்லை. அடியேனிடத்தை உமது இடமாகப் பாவித்துச் சந்தோஷத்துடன் எழுந்தருளி வந்து தங்களுக்கு அடியேன் செய்யும் பூஜையை அங்கிகரித்தருள வேண்டுமென்று, மிகவும் வணக்கமாய்ப் பிரார்த்தனைசெய்தார். அதுகேட்ட சாதுக்கள், இவருடைய பிரார்த்தனையை மறுக்கமாட்டாமல் ஓ கமலாகரரே! உமதிஷ்டம்போலவே யாகட்டும். நாங்கள் நீராடிவருகிறேம் நீர் முன்னே போகலாம் என்றுசொல்ல, இவர் மிகவும் மனக்களிப்போடு விரைந்துபோய்த் தம்முடைய இடத்தை யடைந்து மனைவியாராகிய சுமதியைப்பார்த்து ஓ பெண்ணே! இன்றைக்கு விசேஷமான பாகவத கோஷ்டிகள் நம்மிடத்திற்கு வருவார்கள்; அவர்களுக்கெல்லாம் நல்ல உணவுகளை யமைத்து வைக்க வேண்டுமென்று சொன்னர். தேவியாரும் அப்படியே ஆகட்டுமென்று சொன்னர். அதைக்கேட்ட தாசர் அந்தச் சாதுக்களை யழைத்து வருவதற்குப் போனர். வருவதற்கு முன்பே, சுமதிதேவியார் அயல்வீட்டில் தமக்குவேண்டும் பொருள்களெல்லாம் கடனக வாங்கிவந்து பாகஞ்செய்து முடிவில் பாயாசஞ் செய்துகொண்டிருக்கும்போது விறகு பற்றுமற்போக வேறொரு உதவி யில்லாமையால் தம்முடைய புத்திரனை யழைத்து புத்திரனே! நமது புழைக்கடையிலிருக்கிற எருமுட்டைகளில் சிலவற்றை யெடுத்துவா? என்றேவினள். அப்படியே அவன்போய் எடுக்கும்போது அந்த எருமுட்டைக் குவியலினுள்ளே பதுங்கியிருந்த ஒரு பாம்பானது சீறியெழுந்து இச்சிறுவனைக் கடித்தது. அதைக்கண்ட சிறுவன் பெருங்குரலிட்டலறினன். இந்தச் சப்தத்தைக்கேட்ட சுமதிதேவியாரானவர் விரைந்தோடி மைந்தனைக்கண்டு விசாரித்தும் செய்தியை அவனுலேகேள்விப்பட்டு மிகவும் மனங்கலங்கி நிற்கும்போது மைந்தனும் விஷத்தின் வேகத்தால் கிறுகிறுத்து விழுந்திறந்தான். அதைக்கண்ட சுமதிதேவியார் பூர்வகாலத்தில் மைந்தனுகிய லோகிதனை யிழந்து வருந்தினசந்திரமதியைப்பார்க்கிலும் அதிக துக்கமுள்ளவளானள். ஆனுலும் ஹரிதாசர்களுடைய பூஜைக்கு விரோதமுண்டாகாமல் குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து தொட்டிலில் வளர்த்தி விட்டு நீராடி பாயாசவேலையையும் முடித்து சாதுக்களுடைய வரவை எதிர்பார்த்திருந்தார். இப்படியிருக்கும்போது கமலாகரரும் சாதுக்களை யழைத்து வந்து அவருடைய திருவடிகளை விளக்க, பிறகு சுமதிதேவியாரும் விளக்கினர். அதன்பிறகு சாதுக்களெல்லாருக்கும் ஆசனங்கொடுத்து அவர்கள் உட்கார்ந்தபிறகு இலைபோட்டு கறிவகை பரிமாறி அமுதுபடைத்து அதின்மேல் பருப்புபொய்து நல்ல நெய்யைவார்த்து சாதுக்களே! நீங்கள் அமுதுசெய்யுங்களென்று அவர்களைப் பிரார்த்தனை செய்தார். அவர்களுக்குள்ளே நாமதேவர் ஸ்ரீ கண்ணபிரானைத் தியானஞ்செய்தார். அவர் தியானிப்பதற்கு முன்னே எழுந்தருளுகிற ஸ்ரீகண்ணபிரான் அன்றைக்கு எழுந்தருளவில்லை. அப்போது நாமதேவர் ஸ்ரீ கண்ணபிரான் எழுந்தருளாமைக்குக் காரணமாகிய தடை ஏதோ இருக்கின்றதென்றறிந்து கமலாகரரைப் பார்த்து ஐயரே? நாங்கள் புதல்வனை எங்களோடிருந்து உண்ணுவதற்கு அழையுங்களென்று

சொன்னார். அதைக்கேட்ட சுமதியார் அவன் இப்பொழுதுதான் உண்டு தொட்டிலில் உறங்குகிறானென்று சொன்னார். அதற்கு நாமதேவர் உமது புதல்வனைவிட்டு நாங்கள் உண்ணமாட்டோம். ஆகையால் அவனை யெழுப்பிக்கொண்டு வாருங்களென்று சொன்னார்கள். அதற்குச் சுமதிதேவியார் நாமதேவரைப்பார்த்து ஓ சுவாமி! அவனை எழுப்பினாலும் எழுந்திருக்காமல் மகாநித்திரை செய்கிறான். ஆகையால் நீங்கள் அமுது செய்யுங்களென்று சொன்னார். அதைக்கேட்ட நாமதேவரானவர் வீணையோடெழுந்து நின்று ஸ்ரீ விடலப்பெருமானுடைய திருவடிகளை நினைத்து எமக்குக் காட்சி கொடுத்தருளவேண்டுமென்று கைகளில் தாளத்தையேந்தி, திருநாம சங்கீர்த்தனஞ்செய்து ஓ பிரகலாதவரதா! நீ எழுந்தருளாவிட்டால் நாங்கள் உண்ணமாட்டோமென்று சொல்லினர். அதற்குப் பகவானனவர் எழுந்தருளி அருளோடு இவரைத் தழுவிக்கொண்டு உன்னுடைய கருத்தென்ன? என்று கேட்டார். அதற்கு நாமதேவரானவர் ஓ பகவானே! இந்தச் சுமதியாருடைய புதல்வன் உறக்க மொழிந்தெழுந்து எம்மோடிருந்துண்ணும்படி தேவரீர் திருவருள் செய்யவேண்டுமென்று திருவடிகளை வணங்கினர். அப்போது அந்தப் பகவத் கிருபாவிசேஷத்தால் தொட்டிலிலிருந்த பாலகன் விழித்து தெளிவுடன் தாயை யழைத்து அம்மா! நீர் விரைவாக தாகத்துக்குக்கொண்டு வாருமென்று சொன்னான். அந்த குரலைக்கேட்ட சுமதியார் விரைந்துபோய் மைந்தனை யெடுத்து மார்போடணைத்து உச்சிமோந்து முத்தமிட்டு ஹரிதாசர் சந்நிதியிற் கொண்டுவந்து நாமதேவருடைய திருவடிமேற் கிடத்தி நீங்கள் எழுந்தருளி வந்ததால் எங்களுடைய துன்பம் நீங்கிவிட்டதென்று சொன்னார். அதைக்கேட்ட சாதுக்களெல்லாம் உம்முடைய புத்திரனுக்கு நேர்ந்தது என்னவென்று கேட்டார்? சுமதிதேவியார் அப்போது உண்மைமையைச் சொல்லிவிட்டார். அதைக்கேட்ட சாதுக்கள் இது மிகவும் அற்புதமென்று நாமதேவரை நோக்கி நீர் சாக்ஷாத் பகவதம்ஸமே என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை, என்று புகழ்ந்து கொண்டாடினார்கள். அதன்பிறகு அவர்களெல்லாரும் புதல்வனோடிருந்து அமுதுசெய்து சந்தன புஷ்பமுதலிய வாசனைத் திரவியங்களோடு தாம்பூலந் தரித்து அந்தக் கமலாகரரையும் தேவியாரையும் புத்திரனையும் ஆசீர்வாதஞ் செய்தார்கள். அதன்பிறகு இந்த மூவரும் அந்த நாமதேவரிடத்தில் உபதேசம்பெற்று ஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டு இல்லறம் வழுவாமல் நடத்தி சுகமாக வாழ்ந்திருந்தார்கள், என்றுசொல்லி சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்றார்.

கமலாகரர் சரித்திரம் மூற்றிற்று.

---



நாற்பத்தொன்பதாவது

# ஜம்புதாசர் சரித்திரம்.

துதி கவி.

அம்புஜத்திலமர்ந்தருளி யாதரிக்குமெங்கள்
தும்புஜத்திலும்புயத்து மானதொருசுருதியிவம்
அம்புஜத்துமெழுந்தருளு மண்ணல்திருவடியா
மம்புஜத்தையெந்நாளு மன்புசெய்வாய்மனமே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்று இரவு ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைச் சிந்தைசெய்து கொண்டிருந்து பொழுது விடிந்தவுடன் ஈசானதிக்கிற் சென்று புல் பூண்டு முளைத்திராத வெறுந்தரையில் ஆசௌசாதிகளைக் கழித்து சுத்தகங்கையில் ஸ்நாநாதி நித்தியக் கடன்களை முடித்துக்கொண்டு திருமண்காப்பிட்டு சூரியநமஸ்காரஞ் செய்து யாவருங் கூடிக் கலந்துகொண்டு நாபாஜிசித்தரிடம் சென்று அவரை நமஸ்காரஞ்செய்து வணங்கி ஓ சுவாமி! தேவரீர் இதுவரைக்குஞ் சொல்லிவந்ததுபோல் இன்றைக்கும் ஒரு பக்தருடைய விஜயத்தைச் சொல்லியருள வேண்டுமென்று சொல்லி நமஸ்காரஞ் செய்தார். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே ஆகவென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்;

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் ஒரு ஊரில் ஜம்புதாசர் என்கிற ஒருகுடியானவரிருந்தார். அவர் ஸ்ரீஹரியின் திருவடியை அகோராத்திரம் தியானஞ்செய்துகொண்டும் சாதுக்களை பூஜை செய்துகொண்டுமிருப்பதே தமக்குத் தொழிலாகப் பெற்றிருந்தார். இவர் பயிர்த்தொழிலைச் செய்து அதனாலுண்டாகும் பிரயோஜனத்தைக்கொண்டு தம்முடைய சுற்றத்தாரையும் சாதுக்களையும் காப்பாற்றிவருபவர். இவர் இப்படிவருங்காலத்தில் ஒருநாளிரவில் இவருடைய உழுமாடுகளிரண்டையும் திருடர்கள் கொண்டுபோனார்கள். அதைப் பகவானானவர் அறிந்து நம்முடைய பக்தனாகிய ஜம்புதாசன் எருதுகளில்லாமல் வருத்தப்படுவானேயென்று மனமிரங்கி அப்பொழுதே இரண்டு எருதுகளையுண்டாக்கி தாசருடைய மாட்டுத் தொழுவத்தில் கட்டிவிட்டுப்போய்விட்டார். ஈதுணராத தாசரானவர் தம்முடைய வழக்கம்போலவே விடியற்காலத்திலெழுந்து தொழுவத்திலிருந்த எருதுகளைக்கொண்டு போய் தம்முடையகொல்லையை யுழுதுகொண்டிருக்கும்போது நேற்றைய இரவில் எருதுகளைத்திருடின கள்வர்கள் கண்டு இதுவென்ன ஆச்சரியமென்று தம்முடைய வீட்டிற்போய்த் தங்கள் களவுசெய்த மாடுகளிருக்கக் கண்டு நல்லது இன்றைக்கும் போய் இவர் உழுதுக்கொண்டிருக்கிற இந்த எருதுகளையும் கொண்டுபோய்விடலாமென்றெண்ணியிருந்து அன்றைய இராத்திரியிற்போய் இவருடைய தொழுவத்திலிருந்தஎருதுகளைக்கொண்டுபோய்விட்டார்கள். அன்றைக்கும் பகவானானவர் நேற்றுசெய்ததுபோலவேசெய்தார். தாசரும் வழக்கம்போலவே மறுநாளும் அவ்வெருதுகளைக் கொண்டு உழுதுகொண்டிருந்தார். அதைத்திருடர்கள்சண்டுவியந்து அன்று இரவிலும் அப்படியேசெய்யப் பகவானும் அப்படியே செய்துகொண்டுவர இப்படிப் பலநாள்கழிந்த பிறகு அந்தத்திருடருக்கு இந்தத் தாசரிடத்தில் அச்சமும் அன்பும் உண்டாகி இவரிடம் வந்து ஓ சுவாமீ! உம்முடைய பெருமையை யுணராமல் உம்முடைய எருதுகளைத் தினந்தோறும் நாங்கள் திருடிக்கொண்டுபோக பகவானானவர் மீண்டும் மீண்டும் படைத்து உம்முடைய தொழுவத்தில் கட்டிக்கொண்டேயிருந்தார். நீர் ஸ்ரீமந்நாராயணனை உள்ளபடியே பக்திசெய்கின்றவர்களாகையால் உமக்கு யாதொருகுறைவும் உண்டாகமாட்டாது. உமக்குத் தீங்குசெய்த எங்களுடைய பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்து வணங்கினர். அதைக்கண்ட தாசரும் அவர்களுடைய பிரார்த்தனைக்கு மனமிரங்கி பகவானை உள்ளன்பினால் ஸ்தோத்திரம் செய்து, ஓ சுவாமீ! அடியேன்பொருட்டு பிரதிதினமும் இடைவிடாமல் இப்படிப்பட்ட காரியஞ் செய்துகொண்டு வந்தீரே! இந்த விஷயத்தில் அடியேன் மிகவும் அபராதியானேனென்று மிகவும் அநுதாபத்தோடு நின்றார். அப்போது பகவானானவர் இவருடைய அநுதாபத்திற்கு மிகவுமிரங்கி இவருக்கெதிராக எழுந்தருளி இவரை மார்போடுறுகத் தழுவிக்கொண்டு இவருடைய வணக்கத்தைப்பெற்று அபயந்தந்து பின்னர். மறைந்தருளினார். அதன்பிறகு தாசரானவர் அந்தத் திருடர்களுக்கு திருவருள்செய்தனுப்பிவிட்டு ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டிருந்து சிலநாளில் ஸ்ரீகண்ணபிரானுடைய சாயுஜ்ஜியபதவியைப் பெற்றார் என்றுசொல்லி மற்றசித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு தாமும் தமதிருப்பிடஞ்சென்றார். இதுவல்லவோ பக்தியின்பெருமையென்று சொல்ல வேண்டும்.

ஜம்புதாசர் சரித்திரம் முற்றிற்று.

ஐம்பதாவது

# பலக்கார் சரித்திரம்.

துதி கவி.

திருமாலையுள்ளன்பாய்த் தியானிப்பவர்கட்கு
கருமாலும்வாராது கஞ்சனருள்வரும்
ஒருமாலென்றுலகர்க ளுன்னுந்திருவருள்
தருமாலுமுன்வந்து தரணியிற்காப்பனே.

இவ்விதமாகச் சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்களுடைய வாசஸ்தலங்களுக்குச் சென்று அன்று இரவெல்லாம் ஸ்ரீமந்நாராயணனுடைய பஜனையிற் காலங்கழித்து மறுநாளுதயத்தில் காலைக்கடனை முடித்துக்கொண்டு நாபாஜிசித்தரிடம் எல்லோரும் திரண்டுவந்து ஓ! பகவானே தாங்கள் இதுவரைக்குந் திருவருள்செய்து பக்தர்களுடைய விஜயத்தைச் சொல்லிவந்ததுபோல இன்றைக்கும் எங்களுக்கோர் சரித்திரத்தைச் சொல்லி மனமொடுங்கும் வகையைத் தேடவேண்டுமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட நாபாஜிசித்தர் அப்படியே உங்களிஷ்டம்போல பலக்கார் என்பவருடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேட்பீராக. எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் பலக்கார் என்னுந் துருக்க அரசன் ஒருவனிருந்தான். இவன் பதினெட்டுலக்ஷம் குதிரைகளுள்ளவன். இவன் ஆயிரத்தறுநூறு என்னுந் தொகையை யுடையவரும் அரம்பைப் பெண்கள்போன்ற கட்டழகுடையவரும் ஆகிய மனைவியரை யுடையவன். இவன் தன்னுடைய அரசாளுகைக்கு உட்பட்ட குடிகளை யாதொரு துன்பமும் அணுகாதபடி காத்தருளுவோன். இப்படிப்பட்ட உயர்ந்த குணங்கள் எல்லாவற்றையும் உடையவனானாலும், மாதர்மேல் அதிக மோகமுள்ளவனா யிருந்தான். இப்படியிருக்குங் காலத்தில் ஒருநாள் தன்னுடைய எட்டு மந்திரிகளையும் யழைப்பித்து அவர்களைப் பார்த்து எனக்கு நற்கதியடையும் விருப்பமுண்டாயிருக்கின்றது. ஆகையால் இதற்கு உபாயம்யாதோ அதை நீங்கள் ஆராய்ந்துசொல்ல வேண்டுமென்று கேட்டார். அதைக்கேட்ட மந்திரிகள் அதைப்பற்றி நன்றாய் ஆலோசனைசெய்து ஓ மஹாபிரபுவே! காசி க்ஷேத்திரத்தில் கபீர்தாசரிருக்கின்றார். அவருடைய திருவடிகளை ஆஸ்ரயித்தால் நற்கதியடையலாமென்று சொன்னார். பிறகு கபீர்தாசருடைய மகிமையையுஞ் சொன்னார்கள். இவ்விதமாக இவர்சொன்னதைக்கேட்ட அரசனானவன் மிகவும் மனமகிழ்ந்து ஒருநாள் காசிநகரத்துக்கு வந்து கபீர்தாசருடைய மனைக்குள்ளே நுழைந்து மேற்படி தாசரை அடிவணங்கிநின்று அடியேனைக் கடைத்தேற்ற வேண்டுமென்று பிரார்த்தனைசெய்தார். அதைக்கண்ட தாசரானவர் அரசனுடைய பிரார்த்தனைக்கு மனமிரங்கி அவ்வரசனுக்கு ஸ்ரீராமதாரக மந்திரத்தை உபதேசஞ் செய்து அதை அநுஷ்டிக்கவேண்டிய விதத்தையுஞ்சொல்லி விடைகொடுத்தார். அவனும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தன்னுடைய ஊருக்குப்போய் கபீர்தாசர் சொன்னபடி ஸ்ரீராமநாமத்தை அநுஷ்டிக்காமல்சிலகாலங்கழித்தான். அதின் பிறகு ஒருநாள் இவன்படுத்து நித்திரை செய்கிற கட்டிலை அலங்காரஞ்செய்த தாசியானவள் அந்தக் கட்டிலின்படிமேல் உட்கார்ந்து கட்டிலின்மேல் தலையைச் சாய்த்து நித்திரைசெய்தாள். அப்படி அவள் படுத்துக்கொண்டு நித்திரைசெய்யும்போது அரசனானவன் வந்துபார்த்து மிகவுங் கோபங்கொண்டு சேவகரைக்கொண்டு நான்குசவுக்குகள் துண்டுகளாகத் தெறிக்குமளவும் மாறிமாறி யடிக்கச்செய்தான். இந்த அடிகளால் தன் உடம்பு முழுதும் இரத்தமானது அதிகமாக வழிந்தோடக்கண்டும் அந்தத் தாசியானவள் துன்பப்படாமல் நகைத்துக்கொண்டிருந்தாள். இதைக்கண்ட அரசன் அதிக பயங்கொண்டு இவளைப்பார்த்து நீ ஏன் நகைத்தாயென்று கேட்டார். அதற்கு அவள் அவனைநோக்கி ஓ! மகாபிரபுவே! உன்னுடைய புஷ்பசயனத்தினருகே கொஞ்சநேரம் மெய்மறந்து நித்திரை செய்த எனக்கு இந்தத் தண்டனையுண்டானபோது அந்தப் புஷ்பசயனத்தில் எப்போதும் படுத்து நித்திரை செய்கிற உமக்கு எப்படிப்பட்ட தண்டனை கிடைக்குமோ வென்றதைக் குறித்துச் சிரித்தேன், என்று அச்சமில்லாமல் மறுமொழிசொன்னாள். அவள் இந்தப்பிரகாரம் சொல்லக்கேட்ட அரசன் உடனே ஞானவானாகி தன்னுடைய மிகுந்த சம்பத்துக்களையெல்லாம்வெறுத்துத் தனியனாகி நகரத்தை விட்டு நீங்கும் சமயத்தில் தன்னைப் பின்தொடர்ந்தவர்களை நோக்கி நான் இந்த உலகவாழ்க்கையைப் பொய்யென்றுணர்ந்து துறந்துபோகிறேன். நீங்கள் என்னைத் தொடர்ந்து வருவதில் உங்களுக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை என்றுசொல்லி அவர்களை நிறுத்திவிட்டு ஸ்ரீராமநாமத்தை உச்சரித்துக்கொண்டே ஒரு காட்டை யடைந்தான். அவ்விடத்தில் நான்குநாள் வரைக்கும் அவ்வரசன் தங்கியிருக்க ஸ்ரீகண்ணபிரானானவர் தம்முடைய திவ்வியாயுதங்களாகிய சங்குசக்கராதிகளோடும் இவ்வரசனுக்குப் பிரத்தியக்ஷமாகி அபயங்கொடுத்து மறைந்துபோனார். பிறகு இவர் சாதுக்களுடன் சேர்ந்து பசிதாகங்களையும் பொறுத்து ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தனங்

களையும் குறைநுபவத்தையும் கேட்டுக்கொண்டிருந்தான்.

இவ்விதமாகக் காலங்கழித்துக் கொண்டிருக்கும்போது அவ்விடத்தில் ஒரு பக்கீரியானவர் வாழ்ந்துகொண்டிருப்பதை யுணர்ந்து அவரிடஞ் சேர்ந்தான். அந்தப் பக்கீரியானவர் நெடுநாளாக பகவத்தியானம் செய்துகொண்டிருப்பதனல் அவர் பொருட்டாக தினந்தோறும் இரண்டுஅப்பங்களும் கீரையும் அருள்செய்வ் துவழக்கமாயிருந்தது. ஆகையால் அன்றும் அப்படியே இரண்டு அப்பங்களும் கீரையும் பகவானல் அருள்செய்யப்பெற்ற அந்தப் பக்கிரானவர் அவற்றை உண்ணப்போகிற சமயத்தில் இந்த அரசன் வரக்கண்டு நீயார்? நீ எத்தனை நாளாக இந்த வேஷங் கொண்டிருக்கிறுய்? என்று கேட்டார். அதற்கு நான் க்ஷீராப்தி நாதனுகிய பகவானை நம்பி இந்தவேஷம் பூண்டு எட்டுநாளாயிற்றென்றுன். இதைக்கேட்டபக்கிரானவர் நீ நல்லவன் என்று சொல்லிவிட்டு இவனை நாம் நம்மிடத்தில் சேர்த்துக்கொள்ளுவோமானுல் நமக்கு வருகின்ற இரண்டு அப்பங்களில் இவனுக்கு ஒரு அப்பங்கொடுக்கவேண்டி வரும் என்று மனதில் ஆலோசனை செய்துகொண்டு அரசனைநோக்கி, நீ நூதனமான பக்கிராதலால் இங்கேயிருக்க முடியாது. வெளியே போய்விடென்று சொன்னுர். அதைக்கேட்ட அரசனும் அவ்வார்த்தையைக் கொண்டே வெளியே வந்து தங்கியிருந்தான். அப்போது ஸ்ரீ லக்ஷ்மிநாதராகிய பகவானுனவர் பெரிய பிராட்டியாரைப் பார்த்து என்னுடைய அடியவனொருவன் எட்டுநாட்களாகப் பசிதாகங்களைப்பொறுத்து என்னையே தியானஞ் செய்துக்கொண்டிருக்கிறுன். அவனுக்கு நல்ல உணவுகொண்டுபோய்க்கொடுத்துவாவென்று நியமித்தார். அவ்விதமாகவேபிராட்டியாரும் ஒரு பொற்பாத்திரத்தில் சிறந்த உணவையேந்திக் கொண்டு போய் அரசனுகிய பலக்காரை நோக்கி அந்த உணவை யுண்ணக்கடவாயென்று சொன்னுர். அப்படியே அந்த அரசன் பிராட்டியாரைப் பார்த்து இவர் லோகமாதாவாகிய திருமகளேயாவாளென்று நிச்சயம் செய்துகொண்டு அவரை வணங்கி அவர் கொடுத்த அமுதைப்பெற்று உண்டு பசியாறி மகிழ்ச்சி கொண்டிருந்தார். இதைக்கண்ட பக்கிரானவர் மனம் பொறுக்காமல் பகவானுனவர் எட்டு நாளாகத் துறந்திருப்பவனுக்குப் பொற்கலத்தில் சிறந்த இனிமையாகிய அமுதைக் கொண்டுவந்து உண்பித்தார். நான் நெடுநாளாகத் துறவியாய் தம்மைப் பஜித்துக்கொண்டிருக்கின்றேன். எனக்கோ நாள்தோறும் இரண்டு மாவடையும் கீரையுங் கொடுக்கிறுர் இப்படி வஞ்சனை செய்வது இந்தப் பகவானுக்குத் தகுமோ? இனி இவர் கொடுக்கிற அப்பங்களை நான் உண்ணமாட்டேனென்று சொல்லி மனவருத்தத்தோடு நித்திரை செய்யும்போது அந்தப் பக்கிருடைய கனவில் பகவானுனவர் ஒரு பக்கீர் வேஷந் தாங்கிவந்து எதிரே நின்று இவன் அரசனுயிருந்து சகல சம்பத்தோடு வாழ்ந்திருந்தவன். இவன் அப்படிப்பட்ட பெருஞ் செல்வத்தையெல்லாம் வெறுத்து என்னிடத்தில் அன்புசெய்து தியானித்து வைராக்கியசீலனுயிருக்கிறுன். நீயோ சாதாரணமனிதன், ஆனுல் நீயும் என்னையே தான் நம்பிப் பஜித்துக்கொண்டிருக்கின்றுய் ஆகையால் நீங்களிருவரும் என்னிடத்தில் பக்தி செய்வதில் சமானமானவர்களாயிருந்தாலும் உங்களுடைய பூர்வாசிரம நிலைகளுக்குத் தகுந்தவண்ணமே உங்களிருவருக்கும் அமுதளிப்பது எனக்குக் கடமை ஆதலால் இவ்விதமாக ஏற்பாடு செய்தேன். இதைக்குறித்து நீ என்னை வெறுத்துக் கொள்ளுவது நீதியல்லவென்று சொல்லி மறைந்துபோனுர். உடனே பக்கிரியானவர் விழித்தெழுந்து வந்து பலக்கார் திருவடிகளில் விழுந்து வணங்கிப் பலவகையாய்த் தோத்திரஞ் செய்தார் பிறகு பலக்காரரானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப் போகும்போது ஒரு பெரிய நகரத்தைக் கண்டு அதனுள்ளே பிரவேசித்து அங்கிருந்த ஒரு மடத்தில் அநேக பக்கிரிகளிருக்கப் பார்த்து அவர்களைக் கிட்டும்போது அவர்கள் இவரைப்பார்த்து இவன் உண்மையான பக்கிராயிருந்தால் இவன் கையில் ஜபமாலைமுதலிய சின்னங்களிருக்க வேண்டுமல்லவா? அவைகளில்லாமையால் இவனை நாம் சேர்க்கக்கூடாதென்று ஆலோசித்து உள்ளே வரவேண்டாமென்று தடுத்தார். அப்பொழுது இவரும் வெளியேவந்து தங்கியிருந்தார். அப்போது கிருபாசமுத்திரமாகிய பகவானுனவர் ஒருசிறந்த பக்கீர் வேஷங்கொண்டுவந்து மடத்திலிருந்த பக்கீர்களைப் பார்த்து பலக்காரரைப்போல திரிகரணசுத்தியுள்ளவர்களும் வைராக்கிய சீலர்களும் நிஷ்டை ஜீவகாருண்யமுதலானவைகள்உள்ளவர்களும்திரிலோகங்களிலும் இருக்கமாட்டார்கள். ஆகையால் அந்தப் பலக்காருடைய மனதில் ஜபமாலை முதலானவைகள் அமைந்திருக்கின்றனவென்று சொல்லி விலகினுர். அதைக்கேட்ட பக்கீர்களெல்லாரும் அதிசயங்கொண்டுவெளியில்வந்து பலக்காரைப்பார்த்து ஒன்றுன கடவுளே! இந்தவேஷம்பூண்டு வந்திருக்கிறுரென்று இவரிடத்தில்பக்தியுள்ளவர்களாக மடத்துக்குள்ளே அழைத்துக்கொண்டுவந்து பலவகையாய்த்தோத்திரஞ்செய்துவணங்கினுர்கள். அன்றுமுதலாகபலக்காரானவர் தாம் நினைத்தபோதெல்லாம் பகவானுனவர் எழுந்தருளச் சேவைசாதிக்கப்பெற்று அந்த மடத்தில் சுகமாக வாழ்ந்திருந்தார்களென்று சொல்லி சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ்சென்றுர்.

பலக்கார் சரித்திரம் முற்றிற்று.

ஐம்பத்தோராவது

# குபாகும்பார் சரித்திரம்.

துதி கவி.

மாணிக்கவண்ணன் மலரடியையுன்னி
ஆணிப்புகழ்பெறு மன்பர்கள்சரிதையைக்
கோணுதலின்றிக்கூற வருடரும்
பாணிச்சங்குடையவன் பாதபங்கயங்களே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் சென்று அவ்வவர்களுடைய வீட்டில் அன்று இரவு ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்துகொண்டிருந்து, மறுநாள் உதயத்தில் ஆசௌசாதிகளைக் கழித்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு திருமண் காப்பிட்டு ஸ்ரீகண்ணபிரானைத் துதிசெய்து எல்லோரும் ஒன்றாகச்சேர்ந்து நாபாஜிசித்தர் இருப்பிடம்சென்று அவரைக்கண்டு சாஷ்டாங்கமாக வணங்கி எழுந்து ஓ! சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் சொல்லிவந்ததுபோல் இன்றைக்குஞ் சொல்லி யருளவேண்டும். ஆனால் நாங்கள் வேண்டுகின்ற குபாகும்பார் சரித்திரத்தைச் சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தர் சொல்லுகிறார். ஓ! சித்தர்களே! உங்களுடைய இஷ்டப்படியே சொல்லுகிறேனென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொரு காலத்திலே பூலோகத்தில் மார்வாட தேசத்திலே சிதடம் என்னும் ஒரு நகரமிருந்தது. அது எல்லாவளங்களும் யாதொன்றிலும் குறைவில்லாமல் பெருகியதாயிருந்தது. அவ்வூரில் குபாகும்பார் என்கிற பேருடையவர் ஒருவரிருந்தார். அவரோ சாதியில் குயவர். இவர் பொறுமை, சாந்தம், தயவு வைராக்கிய முதலிய நற்குணங்கள் நிறையப்பெற்றவர். இப்படிப்பட்ட இவர் தம்முடைய கற்பிற் கருந்ததி போலும் மனைவியுடன்கூடி வாழ்ந்துகொண்டிருந்த காலத்தில் நாள்தோறும், ஒவ்வொரு பாண்டஞ்செய்து முப்பது நாளானவுடனே முப்பது பாண்டத்தையும் சூளைபோட்டு எடுத்து வைத்துக்கொண்டு நாளொன்றுக்கு ஒவ்வொரு பாண்டத்தைவிற்று அதனால்வரும் பணத்தால் ஸ்ரீவிஷ்ணுபக்தர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்துத் தாமும் போசனஞ் செய்து சுகதுக்கங்களைச் சமமாயெண்ணி ஸ்ரீஹரி நாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டிருப்பார். இவர் இப்படி யிருக்குங்காலத்தில் அவ்வூருக்கு அரசனானவன் இவர் சூளைபோட்டு ஜீவனஞ் செய்வதற்காகப் பத்துப்பாண்டம் மாதந்தோறும் வரிகொடுக்கவேண்டுமென்று உத்தரவுசெய்தான். அப்படியே அவரும் சூளையைப் பிரித்தவுடனே பத்துப் பாண்டம் கொடுத்துவிட்டார். பிறகு பத்துப்பாண்டம் குறைந்து வருமே, இந்த மாதத்தில் பத்து நாள் செலவுக்குப் போதுமான பாண்டமுமில்லையே, யென்று இவர் கவலை கொள்ளாதபடி விடலப்பெருமானானவர் பத்துப்பாண்டம் இவர்சூளையிலதிகமாக விருக்கும்படி மனதிலெண்ணினர். அப்படியே ஆயிற்று. பிறகு தாசரானவர் அப்பொழுது போட்ட சூளையைப் பிரித்துப் பார்க்கையில் முப்பதுபாண்டங்களும் சரியாயிருந்தன. இதைக்கண்டு தாசரானவர் மிகவும் ஆச்சரியங்கொண்டு, ஸ்ரீவிடலப்பெருமானே! இப்படிச் செய்தாரென்று உணர்ந்து எனக்காகப் பகவான் இவ்வளவு பிரயாசையெடுத்துக்கொண்டாரேயென்று அநுதாபங் கொண்டு கண்ணீர் ஆறாகப் பெருகிக்கொண்டிருக்க அப்போது விடலப்பெருமானானவர் இருநூறு சாது ஜனங்களில் தாமுமொருவராகக் கலந்துகொண்டு வந்து இவ்வூரில் யாராவது அன்னதானஞ் செய்வாருண்டோவென்று விசாரிக்கும்போது பணக்காரரெல்லோரும் சிறிதும் இரக்கமில்லாமல் குபாகும்பாரைப் பார்த்துச் சுட்டிச்சொன்னார்கள். அதைக்கேட்ட விட்டோபாவானவர் சாதுக்களோடு சேர்ந்துகொண்டு குபாகும்பார் வீட்டு வாசற்படியிற் போய் நின்று, சீதாராம்! என்று கூவினர். அதைக்கேட்ட வீட்டுக்குள்ளே யிருந்த குபாகும்பார் இந்தச் சத்தத்தைக்கேட்டு வெளியேவந்து அங்கிருந்த சாதுக்களைப் பார்த்து வணங்கி சாதுக்களே! வாருங்கள்! வாருங்கள்! நீங்களெல்லோரும் என்னை நாடிவர நான் பூர்வத்தில் என்ன தவஞ்செய்திருந்தேனோ! வென்று சொல்லி நீங்கள் வந்தகாரியத்தைச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அதுகேட்ட சாதுக்களெல்லாரும் இவரைப்பார்த்து எங்களுடைய பசியைத் தணிக்க வேண்டுமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட குபாகும்பார் அப்படியே ஆகட்டுமென்று அவர்களை யிருக்கச்சொல்லி வெளியேவந்து இத்தனைபேருக்கும் உணவளிப்

பது எப்படியென்று எண்ணி ஒரு வணிகனிடத்திற் போய் ஐயா! என்வீட்டில் சிலசாதுக்கள் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் அமுது படைக்க வேண்டும். அதற்குவேண்டிய பொருள்களெல்லாம் கொடுத்தீரானால் விலைகொடுக்கிறேனென்று சொன்னார். அதைக்கேட்ட வணிகர் இவரைப்பார்த்து, நீர் ஏழை, நீர் எப்படிக்கொடுப்பீர்? அது இருக்கட்டும். நான் ஒரு கிணறெடுக்கவெண்டும். அந்தக் கிணறு தோண்டிக்கொடுத்தால் போதுமென்று சொன்னான். அதுகேட்டதாசர் அப்படியே செய்கிறேனென்று உறுதிவாக்களித்து வேண்டிய சரக்குகள் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டுபோய்ச் சாதுக்களுக்குக்கொடுத்தார். அவர்களும்அவைகளைக்கொண்டு இவரைப்பார்த்து உமக்கு மிகவும் ஐஸ்வரியமுண்டாகக் கடவதென்றும் ஸ்ரீவைஷ்ணவ சேவை உண்டாகுமென்றும் வாழ்த்துதல்செய்து போய்விட்டார்கள். மறுநாள் இவர் தாமும் தம்முடைய மனைவியாருமாக கடப்பாரை மண்வெட்டி கூடை இவைகளை எடுத்துக்கொண்டு வணிகனிடத்துக்குப்போய் அவன் காட்டின இடத்தில் கிணறு தோண்டத்தொடங்கி மண்ணைத்தோண்டி யெடுக்கும்போது நீருங் காணப்பட்டது. அதைக்கண்டு வணிகனும் இவர்களுங் களிப்படைந்திருக்கும் போது இவர் நிற்குமிடத்தில் நிலமானது ரூபவறையாய் அடியற்று இடிந்து விழ்ந்தது. இவரும் அந்த இடிகிணற்றில் விழ்ந்தழுந்தினர். இதைக்கண்ட இவருடைய தேவியார் கரைமேலிருந்து ஓலமிட்டலரும்போது எல்லாரும் அவ்விடத்தில் வந்துசேர்ந்து, இவர்கிணற்றில் அழுந்தியிருப்பதையும் மேலே மணலால் மூடப்பட்டுக் கிணறு தூர்ந்திருப்பதையுங் கண்டு இவரை யெடுப்பதற்குச் சாத்தியப்படவில்லையே! யென்று வருத்தப்பட்டு அவரவர்களுடைய விதிப்படி எல்லாக்காரியங்களும் நடக்கின்றனவென்று தேறி இவருடைய மனைவியைப்பார்த்து அம்மா! நீ துக்கப்படவேண்டாம். எல்லாந் தெய்வச் செயலேயன்றி வேறல்ல. ஆகையால் நம்மால் செய்யக்கூடிய காரியம் ஒன்றுமில்லையென்று, தேற்றிவிட்டுக்கனுப்பினார்கள். பிறகு அவ்விடத்தில் கூட்டமாய்க் கூடினவரெல்லாம் ஸ்ரீஹரிதாசருக்கு இப்படிப்பட்ட கதி உண்டாகலாமோ, வென்றும் மட்கலஞ் செய்யுங் குயவன் கிணறுவெட்ட வரலாமோ வென்றும் யாராயிருந்தாலும் அவரவர்செய்த வினைப்பயனை அனுபவித்தே தீரவேண்டுமென்றும், எப்படிப்பட்ட துன்பங்களுண்டானாலும் அவைகளையெல்லாம் நீக்கியருளவல்லவன் ஸ்ரீமன் விடோபாவே யல்லாமல் இன்னொருவரால் ஆகாதென்றும் இப்படிப் பலவாறாகப் பேசிக்கொண்டு தத்தம் இருப்பிடங்களுக்குப் போய்விட்டார்கள். இப்படி ஒரு வருஷகாலங்கழித்து பிறகு அந்தக் கிணற்றுவழியாக வருபவர்கள் அவ்விடத்திலிறங்கிச் சமையல் செய்து உண்டு இராக்காலத்தில் அங்கேதானே சயனித்துக்கொண்டு நித்திரைசெய்யும் வழக்கம் உண்டாயிற்று. அப்படி படுத்துறங்குவோர் நிலத்துக்குள்ளே தாளம் மிருதங்கம் வீணைமுதலிய வாத்தியங்கள் முழங்கப் பஜனைசெய்கின்ற சத்தத்தைக்கேட்டு அதிசயங்கொண்டு அந்தச் சங்கதியை அரசனுக்குத் தெரிவித்தார்கள்.

இதைக்கேட்ட அரசனானவன் உடனே அந்த இடத்திற்குவந்து அவர்கள் சொன்னபடியே பூமியின்கீழ் பஜனைசெய்கிற சத்தத்தைக்கேட்டு அதிசயங்கொண்டு அந்தக் கிணற்று மணலைத் தோண்டியெடுக்கும்படி ஏவலாளரை யேவினான். அவர்களும் அரசனுடைய உத்தரவுபிரகாரமே மணலையெல்லாந் தோண்டி யெடுத்தபின்னர் உள்ளே பஞ்சாயுதங்களையுடைய சதுர்ப்புஜங்களோடு ரத்னகிரீட குண்டல கேயூராதிகளோடும் ஸ்ரீவிடலப் பெருமானானவர் எழுந்தருளியிருக்கவும், அங்கே அந்தப் பகவானுக்கெதிராகவே குபாகும்பார் நின்று ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்யவுங் கண்டு அந்த விட்டல விக்கிரகத்தையும் குபாகும்பாரையும் மேலே யெடுத்து மிகவும் ஆவலுடன் வணங்கி இவர் மனிதரல்லரென்று மிகவும் புகழ்ச்சிசெய்து கொண்டாடி அவ்விடத்திலேயே ஒரு மடம் ஏற்படுத்தி, அதில் விட்டல விக்கிரகத்தை பிரதிஷ்டைசெய்து அரசனுடன் அவ்வூராரெல்லாம் குபாகும்பாருக்குச் சீடர்களாகி அளவற்ற திரவியத்தை அந்த மடத்துக் குரிமையாக்கினார்கள். அந்தவிடத்தில் பகற்காலமுழுவதும் விஷ்ணுபக்தர்களுக்கும் அதிதிகளுக்கும் போஜனமிடுதலும், இராக்கால முழுவதும் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனத்தாலும் பொழுதைப் போக்கிக்கொண்டும் வருஷந்தோறும் ஆடிமாதம் கார்த்திகைமாதம் இவ்விரண்டு மாதங்களின் ஏகாதசிகளில் பண்டரிபுரத்திற்குப்போய் ஸ்ரீகண்ணபிரானை தரிசித்துக்கொண்டும், சுகமாக வாழ்ந்திருந்தார்கள், என்று சொல்லி நாபாஜிசித்தரானவர் மற்ற சித்தரைப் பார்த்து கேட்டீர்களோ! சித்தர்களே! இப்படிப் பட்ட பக்தி செலுத்த எவரால் முடியும்? ஆகையால் நீங்கள் உள்ளன்போடு ஸ்ரீமந்நாராயணனைத் தியானஞ் செய்யுங்களென்று சொல்லி அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தம திருப்பிடஞ் சென்றார்.

குபாகும்பார் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ
ஸ்ரீபுண்டரீகபரப்பிரம்மணேநம:

ஐம்பத்திரண்டாவது

# ஷேக்பரீத்தாசர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

கடலமுதையொருகாலங் கடவுளருக்கருளியசீர்க்
கண்ணனேமணிவண்ணு கஞ்சற்குத்தந்தாய்
அடலவுணருங்கிண்ட வாதிமூலப்பொருளே
அஞ்சனஞ்செய்கண்ணியக மகிழ்ந்துறைகின்ற
விமலனேயாயர்பாடியி னுலகுமெய்யனே
வேதனேவேதாந்தனே வேதியர்க்கருள்செய்த
திடவுருவனேயெம்மைத் திரிவடையாவணங்காத்துத்
தீவினைகளணுகாமல் திருவடிநல்குவையே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் குபாகும்பார் சரித்திரத்தை மிகவும் உள்ளன்பின்மேலீட்டால் திரிகரணசுத்தியோடு கேட்டு ஆனந்தங்கொண்டு அன்றிரவு இதைப்பற்றி யோசனை செய்து கொண்டிருந்து மறுநாளுதயத்தில் எழுந்து நித்தியக்கடன்களை முடித்து, எல்லோரும் ஒன்ருகக்கூடி நாபாஜிசித்தர் இருக்கின்ற இடத்திற்கு வந்து அவரைக்கண்டு வணங்கி, நமஸ்காரஞ்செய்து ஒ! சுவாமி! தேவரீர் இதுவரைக்குஞ் சொல்லிவந்ததுபோல இன்றைக்கும் நாங்கள் உஜ்ஜீவிக்கும்பொருட்டு ஷேக்பரீத்தாசருடைய சரித்திரத்தைச் சொல்லியருளல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே சொல்லத்தொடங்கினர். எப்படியென்ருல்.

கேட்டீர்களோ! சித்தர்களே! முன்னெருகாலத்தில் சகல வளங்களும் நிறைந்திருக்கின்ற ஒரு ஊரில் கணவனை யிழந்த ஒரு மாதுசிரோன்மணியிருந்தாள். அவளுடைய வயற்றில் ஒரு புதல்வர் அவதாரஞ்செய்தார். அவருக்கு ஷேக்பரீத் என்று பேரிட்டு அவரை அன்போடு வளர்த்து வருங்காலத்தில் இவருக்குத் தக்கவயது வந்து அறிவு விர்த்தியாயிற்று. இப்படியிருக்கையில் இவர் ஒருநாள் தமது தாயைப்பார்த்து அம்மா! எனக்கு ஸ்ரீமந் நாராயணனைக்கண்டு சேவிக்கவேண்டுமென்கிற விருப்பமுண்டாயிருக்கின்றது. ஆகையால் அவரைக் காட்டவேண்டுமென்று மிகவும் பிரார்த்தனை செய்தார். இதைக்கேட்ட தாயானவள் இவரைப் பார்த்து அப்பா குழந்தாய்! அந்த ஜகத்ரக்ஷகனுகிய பகவானை எளிதாகக் காணமுடியாது. அநேகம் பெரியோர்கள் அவரைத் தரிசிக்க விருப்பங்கொண்டு காமக்குரோதாதிகளாகிய உட்பகைவரை வென்றும், காடுகளிற்போய்க் கடுந்தவஞ் செய்தும் வைராக்கியசாலிகளாய் பாலைவனத்திற் பயின்று திரிந்தும் சாங்கியதாரக அம்நஸ்கங்கள் என்றும், மந்திரலயஹடங்கள் என்றும் அநேக வேறுபாடுகளோடு கூடின யோகங்களைச்செய்தும் ஆத்ம விசாரணை செய்தும், பிரபஞ்ச வாழ்க்கையையும், அன்னபானுதிகளையும் வெறுத்தும் ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசி விரதம் முதலானவற்றை நியமந் தவருது அனுஷ்டித்தும், பலவகையான யாகங்களைச் செய்தும், பலவகையான தானதர்மங்களைச் செய்தும் எல்லாவுயிர்களையும், தம்முயிரைப்போலப் பாவனைசெய்தும், ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்தும், இன்னும் அநேகமான வழிகளில் முயற்சிசெய்தும், ஸ்ரீமந் நாராயணனைக்கண்டு உஜ்ஜீவிக்கின்ருர்கள், ஆகையால் அப்படிப்பட்ட வழிகளில் உனக்கு அனுகூலமான மார்க்கமொன்றை அவலம்பித்து நீ அந்தக் கடவுளைக் காணக்கடவாயென்று சொன்னுள். இப்படித் தம்முடைய தாயாரானவர் சொலக்கேட்ட ஷேக்பரீத் தாசரானவர், உடனே வைராக்கியசீலராய் உணவாதிகளை வெறுத்து, தன்னுடைய தாயைப்பார்த்து அம்மா! நான் காட்டுக்குப் போய்க் கடவுளைக் காண்பேன். ஆகையால் நீ எனக்கு ஒரு அடை சுட்டுக் கொடுக்கவேண்டுமென்று

சொன்னார். அதுகேட்ட தாயார் இவரைப்பார்த்து அப்பா குழந்தாய்! அன்னபானுதிகளை வெறுத்த உனக்கு அடை யாதுக்கு? என்று கேட்டார். அதற்கு ஷேக்பரீத் ஆனவர் எனக்கு மனச்சலனம் அற்று ஒழிந்துபோகிறவரைக்கும் என்னுடைய கையில் ஒரு அடை யிருக்கவேண்டுமென்று சொன்னார். அதைக்கேட்ட தாயாரும் அப்படியே ஒரு அடை சுட்டுக்கொடுத்தார். அவரும் அதைப்பெற்றுக்கொண்டு ஒருவஸ்திரத்தில்முடிந்து அந்த வஸ்திரத்தைத் தமதுவயற்றிற்சேர்த்துக் கட்டிக்கொண்டு காட்டிற்குப்போய், ஒரு மலையின்மேலேறி பகவத் தியானத்திலிறங்கியிருந்தார். இவ்விதமாகவேஅநேக நாட்கள் செல்லவும் ஸ்ரீமந்நாராயணனுடைய தரிசனங்கிடைக்கவில்லை. அதனால் பிறகு தமது தியானத்துக்கு இரங்கி கடவுள் தரிசனங் கொடுக்கவில்லையே என்றும் மனோவேகத்தால் பசியானது இவருக்கு அதிகப்பட்டு அவரை வருத்தப்படுத்தியது. அப்போது அந்தப் பசியைத்தணிக்கு நிமித்தம் தாம் வைத்துக்கொண்டிருந்த அடையை உண்ணாமல் அங்குள்ள தழைகளைப் பறித்துண்டு பசியைத் தணிவித்துக்கொண்டிருந்தார். இவ்விதமாகக் காலத்தைக் கழித்துக்கொண்டிருக்கும்போது அவ்விடத்தில் ஒரு செட்டியானவன் எருதுகளின்மேல் சர்க்கரைப் பொதிகளை யேற்றிக்கொண்டு வந்தான். அதை இந்தத் தாசரானவர் பார்த்து, இவ்வெருதுகளின்மேலிருக்கிற பொதிகளில் என்ன சரக்கு அடங்கியிருக்கிறதென்று கேட்டார். அதற்கு அந்தச் செட்டியானவன் ஏளனமாக இவை மண்பொதிகளென்று மறுமொழி சொல்லிவிட்டு எருதுகளை ஒட்டிக்கொண்டுபோய்த் தம்முடைய ஊரைச்சேர்ந்து அந்தப் பொதிகளை யவிழ்த்துப் பார்த்தார். அப்போது அவைகளெல்லாம் மண்ணாயிருந்தது. இப்படி யிருப்பதைக்கண்ட அந்தச் செட்டியானவன் மிகவும் பயந்து அந்தோ! வழியிலே நம்மை இது வென்ன பொதியென்று கேட்ட பக்கிருக்கு உண்மையைச் சொல்லாமல் இது மண்ணென்று ஏளனமாகச் சொன்னோமே அந்தப் பாவத்தால் இப்படி நேரிட்டது. ஆகையால் அந்தப்பக்கிர்மிகவும் பகவத் பக்தியுள்ளவராகவும், மஹானாகவுங் காணப்படுகின்றது. ஆகையால் அவரிடம்போய் நமது குறையை நீக்கிக்கொள்ளவேண்டுமென்று எண்ணி, அந்தப் பொதிகளை முன்போலவே எருதுகளின்மேலேற்றிக்கொண்டு தாசரிருக்குமிடத்திற்கு வந்தார். அப்போது தாசரானவர் அவனைப்பார்த்து முன்போலவே இந்தப் பொதிகளில் என்ன சரக்கிருக்கிறதென்று கேட்டார்? அதற்கு அவன் சர்க்கரைப் பொதிகளென்று மறுமொழிசொல்லிவிட்டு அங்கே தானே அந்தப் பொதிகளை அவிழ்த்துப்பார்த்து அவை முழுவதும் சர்க்கரையாகவே யிருக்கக்கண்டு இவர் மகாத்துமாவென்று அதிசயங்கொண்டு ஒரு பொற்றட்டில் சர்க்கரையை யேந்திக்கொண்டுவந்து தாசருக்கு எதிரே வைத்து தேவரீர், அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று மிகவும் பிரார்த்தனை செய்து வணங்கினான். அது கண்ட தாசரானவர் ஓ! பகவானே! இந்தச் சர்க்கரைச் சுவையைக்காட்டி என் மனதை மயங்கச்செய்கிறாயோ வென்று அதைப் பெற்றுக்கொள்ளாமல் அவ்விடத்தைவிட்டு ஓடிப்போனார். அதைக்கண்ட பிறகு செட்டியானவன் தன்னுடைய ஊரையடைந்தான். தாசரும் முன்போலவே வந்து முன்னிருந்த இடத்திலேயே பன்னிரண்டு வருஷம் வரைக்கும் உணவில்லாமல் பகவானைத் தியானஞ் செய்துகொண்டிருந்தார். அப்படியிருந்தும் ஸ்ரீகண்ணபிரானானவர் இவருக்குப் பிரத்தியக்ஷமாகவில்லை. பிறகு இவர் பகவானைக் காணாமையாலுண்டான மனவருத்தத்தோடு மறுபடியும்வந்து தமது நகரத்தை யடைந்து தாயைக்கண்டு வணங்கி நடந்த சங்கதிகளை யெல்லாஞ்சொன்னார். இவ்விஷயத்தைக்கேட்ட தாயானவள் இவரைச் சமீபத்திலழைத்து இப்படியல்லவா மரத்தினிலைகளை உருவினாயென்று சொல்லி, இவருடைய சடையைப்பற்றி யிழுத்துத் தலையைக் குலுக்கினாள். அப்போது தாசரானவர் தாயே என்னுடையதலைநோகின்றது. ஆகையால்விட்டுவிடு என்று சொன்னார். அதைக்கேட்ட தாயானவள் இவரைப் பார்த்து அப்பா மகனே! உன்னுடைய சடையைப் பற்றி யிழுத்தால் உனக்கு இவ்வளவு சிரமமாயிருக்கின்றதே அந்த மரத்தினிலைகளை உருவினபோது அந்த மரத்துக்கு எவ்வளவு துன்பமுண்டாயிருக்கும். அதை நீ கொஞ்சமும் உபாசித்தாயில்லையே என்றும் இந்த ஏதுவினாலே உனக்குப் பகவானானவர் பன்னிரண்டுவருஷகாலமாக சேவை சாதிக்கவில்லையென்றும் சொன்னார். அதுகேட்ட தாசரானவர் நமது தாயானவள் சொல்லுகிறது உண்மைதானென்று மனதில் நினைத்து, தமது அரையிற் கட்டி வைத்திருந்த அடையை அவிழ்த்துத்தாயின் கையிற் கொடுத்து வணங்கினார். இவ்விதமாக வணங்கவே தாயானவள் ஆசீர்வதித்து விடைகொடுக்கப்பெற்று மறுபடியும் முன்போலவே காட்டிற் போய் தழைகளைப் பறிக்காமல் மரங்களின்கீழே உதிர்ந்துகிடக்கிற சருகுகளையெல்லாம் பொறுக்கித்

தின்று சிலகாலம் அவ்விடத்திலேபோயிருந்து ஸ்ரீ கண்ணபிரானைத் தியானஞ்செய்துகொண்டிருந்தார். இவர் அவ்விதமாக சருகுகளைத் தின்றுகொண்டிருந்தும் இவருக்குப் பகவானானவர் பிரத்தியக்ஷமாகத் தரிசனங் கொடுக்கவில்லை. அதனால் இவர் சில கொடிகளால் தம்முடைய காலைக்கட்டி அந்தக்கால்களை மரத்தின் கிளையில் மாட்டிக்கொண்டு அதில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டும் பகவத்தியானஞ் செய்துகொண்டுமிருந்தார். இவ்விதமாக அநேக நாள் செல்லக்கழித்தும் ஸ்ரீமந்நாராயணனுடைய தரிசனம் இவருக்குக் கிடைக்கவில்லை; ஆகையால் அன்னபானாதிக ளில்லாமையால் இவருடைய சரீரமானது வற்றி யாதொரு அளவுமில்லாமல் தாங்கிக் கொண்டிருந்தது. அதைக்கண்ட பட்சிகளெல்லாம் இது உயிர் நீங்கின உடம்பேயாகுமென்று மனதிலெண்ணி உடம்புமுழுதுங் குற்றின; அதைக்கண்ட தாசரானவர் அந்தப் பறவைகள் கொத்துவதனால் தமக்குண்டாகிற துன்பங்களை எள்ளளவும் பாராட்டாமல் பொறுத்துக்கொண்டு அந்தப் பட்சிகளைப் பார்த்து பட்சிகளே! நானோ பகவானைக் காண வேண்டுமென்கிற பெரிய ஆசையினால் அவனையடைய எண்ணங்கொண்டிருக்கிறேன். ஆகையால் நான் அந்த ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைக் காண்பதற்கு முக்கிய ஆதாரமாயிருக்கின்ற கண்களைமாத்திரம் கொத்தாமல் விட்டுவிட்டு என்சரீரத்தில் வேறெந்த இடத்திலாவது கொத்தித்தின்று நீங்கள் உங்களுடைய பசியை யொழியுங்களென்று மிகவும் சந்தோஷமாய்ச் சொன்னார். அப்போது அவர் சொன்னதை அந்தப் பட்சிகள்கேட்டும் தங்களுடையஜாதியிலிழிவாய் அவைகள் அவருடைய சொல்லைக் கேளாமல் தங்களுடைய பசியின் மிகுதியால் இவர் சொன்ன கண்களையும் அவைகள் கொத்தத் தொடங்கின. அந்தச் சமயத்தில் அந்தத் தாசரானவர் ஸ்ரீமந்நாராயணனை நோக்கி உள்ளன்புமேலீட்டால் ஓ! கருணைக்கடலே! ஸ்ரீகஜேந்திர வரதனே! நானோ உன்னைக்காணும்படி அவாக்கொண்டிருக்கிறேன். ஆகையால் என்னுடைய கண்களை இந்தப் பட்சிகள் கொத்துகின்றனவே, இக்கண்களும்போய் விட்டால் இனி உன்னை எப்படிக்கண்டு களிகூர்வேன்? ஆகையால் தாயினுஞ் சிறந்த தயாளுவே! என்று பலவாறு தோத்திரஞ்செய்தார். இவ்விதமாகச்செய்யவும் அந்தப்பகவானானவர் தம்முடைய திருவுளமிரங்கி திருமுடிவிளங்கவும், குண்டலங்கள் பிரகாசிக்கவும், பஞ்சாயுதங்கள் ஜொலிக்கவும் நான்கு திருத்தோள்களும் அவைகளி லணிந்த திருத்துழாய் மாலையும் பொன்னாடையும் விளங்க, இவருக்குப் பிரத்தியக்ஷமாகி தம்முடைய திருக்கரங்களால் இவருடைய காலின் கட்டினை யவிழ்த்து, உடம்பு முழுமையுந் தடவினார். அவ்வாறு தடவின உடனே இவருடையசரீரமானது திவ்வியமாகவிளங்கியது. அதன் பிறகு பகவானுடைய ஸ்ரீபாதகமலங்களைவணங்க, பகவானும் இவரைத் தழுவிக்கொண்டார். அதன் பின்னர் ஸ்ரீமந்நாராயணனைவர் அந்தத் தாசரைப்பார்த்து ஓ! அன்பனே! நீ என்னைக்காண ஆசைப்பட்டு இருபத்துநான்கு வருஷம் அருமையான தவம்செய்தாய். அதனால் நீ உன்னுடைய ஊருக்குப்போய் என்னைத் தியானம் செய்துகொண்டு சுகமாக வாழ்ந்திரு, என்று ஆசீர்வதித்து அவருடைய சிரசின்மேல் தம்முடைய திருக்கரங்களை வைத்தார். அதன் பிறகு அந்தத் தாசரானவர் இறைவனை வாழ்த்திக்கொண்டிருக்க மறைந்துபோனார். இவ்விதமாக இறைவன் மறைந்துபோன பிறகு இந்தத் தாசரும் பகவானானவர் தமக்குச் சேவைசாதித்த திருவுருவத்தை மனதிலமைத்துக்கொண்டு தம்முடைய ஊருக்குப் போய் தமது தாயைக்கண்டு ஓ! தாயே! தேவரீருடைய அநுக்கிரகத்தால் மேகவண்ணனாகிய ஸ்ரீமந்நாராயணனைக்கண்டு என்னுடைய துன்பம் முழுமையும் நீங்கப்பெற்றேனென்று சொன்னார். அதைக்கேட்ட தாயாரும் புத்திரனுடைய சொல்லைக்கேட்டு மிகவும் மனமகிழ்ச்சி யடைந்திருந்தாள். அதன் பிறகு தாசரும் அன்றுமுதலாக பகவந்நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டும் தம்மைவந்து அடுத்தவர்களையும் ஹரிபக்தராகச் செய்துகொண்டும் சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தார். என்றுசொல்லி நாபாஜிசித்தரானவர் மற்றச் சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தம்முடைய இருப்பிடஞ்சென்றார்.

ஷேக்பரீத்தாசர் சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணயநமஃ

ஐம்பத்திமூன்ருவது

# ஹரிபாளதாசர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

அஞ்ஞானம்போக்குவிக்கு மாநந்தமாக்கடலே
யாரணர்கள்பரவுறா உமரிநமோநாராயணு
மெஞ்ஞானமுண்டான வேதியர்க்குமேனையர்க்கு
மிகுஞானவஞ்ஞானமேனவித்த மெய்ச்சுடரே
அஞ்ஞானிகட்கென்றுந் துகளொழிக்குமேனியனே
சுகசொருபமாகவே தோற்றுவித்ததாய்மையோய்
அஞ்ஞானமுடையேனை யாதரிப்பதுன்கடன்
அகநெகிழத்திருவடி தந்தாளுவையிங்கன்றே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்றிரவு முழுமையும் ஸ்ரீமந் நாராயணனுடைய கலியாண குணங்களை உள்ளபடியே எடுத்துப் பேசிக்கொண்டிருந்து காலத்தைக்கழித்து, வைகறையானவுடனே எழுந்து ஆசௌசாதிய வினைகளைக் கழித்து நித்தியக் கடன்களை முடித்து அங்கு எல்லோரும் ஒன்ருகச்சேர்ந்து அங்கிருந்தும் புறப்பட்டு நாபாஜிசித்தரிருப்பிடம் சேர்ந்து அவரைக்கண்டு வணங்கி நமஸ்காரஞ் செய்து, ஓ! சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் எங்களுக்குத் திருவருள் மேலிட்டால் சொல்லிக்கொண்டுவந்த பக்தவிஜயங்களைப்போல் இன்றைக்கும் அடியோங்களுக்கு ஹரிபாள் தாசருடைய சரித்திரத்தைச் சொல்லியருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தர் அப்படியே யாகவென்று சொல்லிச் சொல்லத் தொடங்கினர். எப்படியென்ருல்:—

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னெரு காலத்தில் இப்பூமியில் சிறந்த நகரமிருந்தது. அந்த நகரத்தில் ஹரிபாளர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் அவ்விடத்தில் வரும் சாதுஜனங்களுக்கும் ஏழைகளுக்கும் பூசித்தும் நேசித்தும் அன்னவஸ்திர முதலானவைகளை யாதொரு குறைவுமில்லாமல் கொடுத்து மகிழ்ச்சியடைவித்தும், ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டும் இருந்தார். இவர் இவ்விதமாக அன்னதான முதலானவைகளை விசேஷமாகச் செய்வதனல் இவரிடத்திலிருந்த பொருள் முழுவதுஞ் செலவாய்விட்டது. அப்படியிருந்தும் ஸ்ரீஹரிதாசர்கள் இவருடைய பெருங்கீர்த்தியை கேள்விப்பட்டு இவரிடத்திற்குவருகிற வழக்கம் எள்ளளவும் நீங்கவேயில்லை. ஆகையால் அவர்களுக்குத் தம்மால் கூடுமானவரைக்கும் உதவிசெய்து அவர்களை மகிழச்செய்விக்கவேண்டுமென்கிற எண்ணம்மாத்திரம் இவரைவிட்டு நீங்கவேயில்லை. ஆகையால் இந்த ஹரிபாளதாசரானவர் திருடியாவது அச்சாதுஜனங்களை ஆதரிக்கவேண்டுமென்கிறஎண்ணங்கொண்டு தாமே திருடர் வேடம்பூண்டு அங்கே வழிநடப்பவர்களை மறித்து அவர்களுக்குப் பயங்கொடுத்து அவர்களுடைய பொருள்களையெல்லாம் கொள்ளையடித்துக்கொண்டு வந்து சாதுஜனங்களுக்கு உதவிசெய்து கொண்டிருந்தார். இப்படியிருக்குங்காலத்தில் ஒரு நாள் இவர் தம்முடைய கையில் ஒரு காசுமில்லாதிருந்ததைப்பார்த்து இன்றைக்குவருஞ் சாதுக்களை உபசரிப்பதற்கு ஒருகாசாகினுமில்லையே! இதற்கு நாமென்ன செய்வோமென்று மிகவும் மனம் வருந்தி, வில்லையும் அம்பையும் கையிலெடுத்துக்கொண்டு ஒரு காட்டிற்போய் இந்தவழியாய் எவர் வருவாரோ வென்று நெடுநேரம் எதிர்பார்த்திருந்தும் ஒருவரும் வரக்காணுமையால் மிக்க துக்கசாகரத்திலழுந்தியிருந்தார். அப்போது ஸ்ரீலக்ஷ்மிநாதராகிய பகவானனவர் பணமுள்ள ஒருவணிகனைப்போல் வேஷந்தாங்கி ஆடையாபரணுதிகளால் மிகுதியாய் அலங்கரிக்கப்பெற்ற தம்முடைய தேவியாரை வண்டியிலேற்றிக்கொண்டு அந்த வழியாக வந்தார். அப்படி வந்தவர்களை இவர் உடனே அதிக சந்தோஷத்தோடு அவர்களுக்கெதிரேபோய் அம்பு வில் முதலியவைகளைக்காட்டி உங்களுடைய ஆபரணுதிகளையெல்லாம்கொடுத்துவிடுங்கள். அப்படி நீங்கள் கொடுக்காதபட்சத்தில் உங்களை இப்பொழுதே கொன்றுவிடுவேனென்றுசொன்னர். அதைக்கேட்ட வணிகர் ஐயா! தாங்கள் எங்களை உயிர்வதைசெய்ய

வேண்டாம். எங்களுடைய ஆபரணங்கள் முழுமையும் நாங்களே கொடுக்கின்றோம், என்று சொல்லித் தாங்கள் அந்த காலத்தில் தரித்துக்கொண்டிருந்த ஆபரணங்களெல்லாவற்றையும் யாதொரு ஆட்சேபணையுமில்லாமல் கழற்றிக்கொடுத்தார். ஸ்ரீஹரிபாளதாசரும் அவைகளெல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு தம்முடைய வீட்டுக்கு வந்து சாதுக்களுக்கு அன்னமிட்டு உபசாரஞ்செய்து மகிழ்ச்சியடைந்திருந்தார். இவர் இவ்விடத்தில் இப்படியிருக்க கமலமலரில் வாசஞ்செய்பவளாகிய லட்சுமியானவள் ஸ்ரீமந்நாராயணனைப்பார்த்து உம்முடைய தாசனானவன் நம்முடைய ஆபரணங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டு போய்விட்டானே! அவனேயல்லவா உனக்குப் பிரியமானவனும் யோக்கியனுமாகக் காணப்படுகின்றது, என்று சொன்னார். அதைக் கேட்ட பகவானனவர் நகைத்து அவன் நம்மைக் கொல்லாமல் விட்டுப்போன உபகாரத்தைச் சற்றாகிலும் யோசிக்காமல் பேசுகிறாய். அவன் என்பேரை உள்ளபடியே சொல்லாத தீயோரை வருத்தப்படுத்தி அவர்களுடைய பொருளைப்பறித்து, என்பேர் சொல்லுகிற சாதுக்களுக்கு உபசாரஞ் செய்கிறானென்பதையும் நினைத்தாயில்லை, என்று சொன்னார். அதைக்கேட்ட பிராட்டியார் நீ சொல்வது உண்மையானல் அவனுடைய கருத்தை வெளிப்படையாக அறியவேண்டுமென்று சொல்ல, அதற்குப் பகவானனவர் சம்மதித்து இருவரும் சாதுக்களைப் போல் வேடந்தரித்து ஸ்ரீஹரிபாளதாசருடையவீட்டிற்குவந்து "சீதாராம்" என்று சொன்னார்கள். அப்போது வீட்டுக்குள்ளேயிருந்த அந்த தாசரானவர் சீக்கிரமாக வெளியே ஓடிவந்து இவர்களை அழைத்துக்கொண்டு உள்ளேபோய் உயர்ந்த ஆசனங்கொடுத்து உபசாரத்தோடு அமுதுபடைத்து, புஷ்பம், சந்தனம் தாம்பூலாதிகளும் கொடுத்து சுவாமிகளே நீங்கள் என்னை நாடிவர நான் பூர்வத்தில் என்ன தவஞ் செய்திருந்தேனே என்று புகழ்ந்து உங்களுக்கு எந்தப்பொருள் வேண்டுமோ அதை தேவரீர் சாதித்தால் அடியேன் தருகிறேனென்றார். அதைக் கேட்ட பகவானனவர் தாசரைநோக்கி, ஓ! சாதுபூசாதுரந்தரரே! நானே வணிகன். இவள் என் மனைவி, நாங்களிருவரும், ஒரு காட்டில் போகும்போது அவ்விடத்தில் ஒரு திருடனனவன் வந்து எங்களை அதட்டி பயங்காட்டி எங்கள் பொருள்களெல்லாவற்றையும்வழிபறித்துக்கொண்டுபோனன் அதனல் நாங்கள் இவ்வேடம்பூண்டு இங்கே வரும்படி நேரிட்டது, என்று சொன்னார்கள். அதைக் கேட்ட தாசரானவர் சுவாமிகளே! உங்களுடைய பொருள்களைக் கொள்ளைகொண்டுபோன திருடன் எங்கேயிருந்தாலும்அவனைக்கைபிடியாய்ப்பிடித்துக் கொண்டு வருகிறேனென்று சொன்னார். அதற்குப் பகவானனவர் தாம் முன் பூண்டிருந்த வேடத்தைக் காட்டியருளினர். அதைக்கண்ட தாசன், அந்தோ! இவர்களுடையபொருளைப்பறித்தவன், நான்தானே என்று மனமஞ்சி நாணமடைந்து, அநுதாபப்பட்டு ஸ்ரீவைகுண்ட நாதனே! இப்படிப்பட்ட வேடங்கொண்டு இந்தபூமியின்மேல் வேதாந்தத்தில் விளங்குகிற தம்முடைய திருவடிகளைத் தோயும்படி நடந்து எழுந்தருளினரே; இதையுணராமல் நான் செய்கிற அபராதத்திற்கு என்ன செய்வது, என்று மனம்வருந்திப் பின்னர்ஒருவாறுதேர்ந்து, ஆயினும் தேவர் முனிவர் முதலியோரும் பெருங்கஷ்டப்பட்டும் காண்பதற்கு அருமையான இப்பரமபதநாதருடைய திருக்கோலத்தைக்காணப்பெற்றேன்; ஆதலால் என் பாக்கியமே பாக்கியம் என்று தமதுகண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக நின்றார்.

ஓ! சுவாமி! தாங்கள் காட்டில் வரும்போது தேவரீருடைய பொருள்களை அபகரித்தவர் நானே, ஆகையால் இப்பிழையை பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்து, உள்ளன்போடு துதிசெய்தார். பகவானும் இவரைக் கருணையோடு நோக்கித் தமது சுயரூபத்தைக்காட்டி தழுவிக்கொண்டு தாசனே! நீ இன்றுமுதல் இந்தக் கோரக் கிருத்தியத்தை விட்டுவிடுவாயாக; அங்ஙனம்விட்டுவிட்டால்உனக்கு அஷ்டமாசித்திகளும் கைகூடும். அவற்றைக்கொண்டு சாதுபூஜைகளைக் குறைவர நடத்திக்கொண்டு சுகமாயிருக்கக்கடவாயென்று ஆக்யாபித்து, மறைந்தருளினர். பிறகு தாசரும் அப்படியே சாதுபூஜை முதலான கைங்கரியங்களைச் செய்துகொண்டு சுகமாக வாழ்ந்துக்கொண்டிருந்தார், என்று சொல்லி நாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களைப்பார்த்து, சித்தர்களே! உங்களுக்கு இன்றுசொன்ன சரித்திரத்தால், மனம் பரிசுத்தராகக் கடவீர்கள். ஆகையால் சாது கைங்கரியத்தில் திருவுளம்வையுங்கள்? என்று சொல்லி அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பித் தாமும் தமது ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்.

ஹரிபாளதாசர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணயநம:

ஐம்பத்திநாலாவது

# சந்தோபாபக்தர் சரித்திரம்.

துதி கவி.

அந்தோவெனவலறு மைங்கணேயினாலே
வெந்தோமெனவரற்றும் விதியினை நீக்கியே
சந்தோஷமுநீக்கி நாமுய்யவருளுமே
சந்தோபாவினடித் தாமரைகளே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தாங்கள் சிரவணஞ்செய்த ஸ்ரீஹரிபாளதாசர் சரித்திரத்தாலுணர்ந்த அவருடைய பக்தியைப் பார்த்து அன்று இரவெல்லாம் அதன் மகிமையையே பேசிக்கொண்டிருந்து காலங்கழித்து விடியற்காலத்திலெழுந்து காலைக்கடனை முடித்து திருமண்காப்பிட்டு ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்துகொண்டு நாபாஜி சித்தரிடஞ்சென்று அவரை சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து துதித்து ஆசாரியமூர்த்திகளே! நீங்கள் அடியோங்களுக்கு இதுவரைக்குஞ் சொல்லி வந்ததுபோல் இன்றைக்கும் ஒரு பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லியருளவேண்டுமென்று மிகுதியும் வணக்கமாகக் கேட்டுக்கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே ஆகவென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ! சித்தர்களே! முன்னொருகாலத்திலே உலகத்தில் ராஞ்சணம் என்னும் பேரையுடைய ஒரு ஊரிருந்தது. அவ்வூரில் சந்தோபாவென்னும் பேருள்ளவர் ஒருவரிருந்தார். அவர் சதுரங்க சேனைகளோடுங்கூடிச் செல்வத்தால் குபேரனுக்குச் சமானமானவராயும் தம் சாதியருள் மேன்மையுடையவராகவும் வாழ்ந்துகொண்டிருந்தார். இவர் இப்படி இருக்குங்காலத்தில் ஒருநாள் இவர் துக்காராம் சுவாமிகளுடைய கதையைக் கேட்டு இந்தக் குடும்பவாழ்வும் சரீரமும் பொய்யென்கிற உண்மை ஞானத்தை அடையப்பெற்று வைராக்கிய சீலராய் இனி பிறவியை விரும்பாமல் இனி அரைநிமிஷமானாலும் வீண்காலங் கழிக்கலாகாதென்று உள்ளபடி ஆலோசித்து தம்மிடத்திலுள்ள பரிசாரகர்களுக்கெல்லாம் வேண்டியவரைக்கும் பொருள்முதலியவற்றைக் கொடுத்து அவரவர்களுடைய ஊர்களுக்கு அனுப்பிவிட்டு வேதியர்களுக்குத் தம்முடைய பொருள் முழுமையும் தத்தம் பண்ணிவிட்டு நான்குமுழ வஸ்திரத்தை அரையிலுடுத்திக்கொண்டு ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டு வெளியேவந்து பீமா நதிக்கரையின் ஒரு பக்கத்தில் உயர்ந்து விளங்கியிருக்கிற ஒருமலைமேலேறி கூட்டிலிருந்து வெளிப்பட்ட கிளிபோலவும் தாமரை மலரிலிருந்து வெளிப்பட்ட வண்டுபோலவும் மிகவுங் களிப்போடு ஸ்ரீஹரிபஜனை செய்துகொண்டிருக்க, இவருடைய தாயானவள் இவர் இப்படி வைராக்கியத்தை யடைந்து மலைமேல் வசிப்பதைக் கேள்விப்பட்டு இவருடைய பெண்சாதியை அலங்காரஞ் செய்துகொண்டு போய்விட்டால், அவள் மேல் ஆசையினாலாவது வருவாரென்று எண்ணி இவருடைய பெண்சாதியை மிகவும் அலங்காரஞ் செய்து அவளைப் பல்லக்கிலேற்றி யனுப்பினாள். அவளும் அப்படியே போய்க் கணவரை வணங்கி அடியேனுக்கு உம்மையன்றி வேறே தெய்வமில்லை. ஆதலால் நான் உம்மை வந்தடுத்தேன், என்று சொன்னாள். அதைக்கேட்ட சந்தோபாவானவர் பெண்ணே! நீ என்னுடைய சொற்பிரகாரஞ் செய்வதாயிருந்தால் என்னிடத்திலிருக்கக்கூடும் இல்லையானால் ஊருக்குப் போய்விடலாம் என்று சொன்னார். அதைக்கேட்ட மனைவியார் நாயகா! நான், நீர் சொல்லுவதுபோலவே நடக்கிறேனென்று சொன்னாள். அதைக்கேட்ட தாசரானவர் மனைவியாரை நோக்கி ஓ நாயகி? நீ உன்னுடைய ஆடையாபரணதிகளெல்லாவற்றையும் நீக்கி நான்குமுழ வஸ்

திரமுடுத்தி என்னோடுகூடி இங்கேயிருந்தால் இருக்கலாமென்று சொன்னார். அதற்கு மனைவியாரும் சம்மதித்து நான்குமுழ ஆடையை யுடுத்திக் கணவருக்குச் சமீபத்திலிருந்தார். இப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் சந்தோபாவுக்கு பசியதிகரித்து மனைவியாரைநோக்கி ஓ! பெண்ணே! எனக்கு இன்றைக்கு அதிக பசியாயிருப்பதால் நீ ஊருக்குள்ளேபோய் நமது உறவினரும், சிநேகிதருமாகிய அவர்கள் வீடுகள்தோறும்போய், ஒவ்வொரு வீட்டிலும் அரையடைக்கு அதிகமாய் ஏற்காமல் பிச்சை எடுத்துவரக்கடவாயென்று நியமித்தார். அதற்கு மனைவியாரும் இவரை வணங்கி நான்குமுழ வஸ்திரமும் தாலியுமன்றி வேறொன்று மில்லாதவராய் ஊருக்குச்சென்று வீடுகள்தோறும் பிச்சையேற்று முடிவில் தம்முடைய கணவருடைய தங்கை வீட்டுக்குப் போய் பிச்சை கேட்டாள். அப்போது அவள் வந்து இந்த அம்மாளைப்பார்த்து அம்மணீ! உன்னுடைய பெருஞ்செல்வத்தை யிழந்து இவ்விதமாகப் பிச்சையெடுத்து ஜீவிக்க நேரிட்டதா? இதுவும் தெய்வச்செயல்தான் என்று பரிதாபங்கொண்டு வீட்டுக்குள்ளேபோய் சர்க்கரையும் நெய்யும் சேர்ந்த இரண்டு அடைகள் கொண்டுவந்து கொடுத்தாள். அதைப்பார்த்த இவருடைய மனைவியார், அம்மணீ! என்னுடைய கணவரானவர் அரையடைக்கு அதிகமாய் வாங்கவேண்டாமென்று எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றார். ஆகையால் அந்தச் சொல்லைத்தவறி அதிகமாக எடுத்துக்கொண்டு போகக் கூடாது என்று சொன்னாள். அப்படி சொல்லியும் அவள் கேளாமல் இரண்டு முழு அடையை கொடுத்துவிட்டுப் போய்விட்டாள். இவ்விதமாக அவள் கொடுத்த இரண்டு அடைகளையும் வாங்கிக்கொண்டு தம்முடைய கணவரிருக்கு மிடத்திற்கு வந்து சுவாமீ! அமுது செய்யலாமேயென்று சொன்னாள். அதைக்கண்ட தாசரானவர் பெண்ணே நான் முன்னமே சொல்லியிருந்தும் முழுவடைகள்என் வாங்கிகொண்டு வந்தாயென்று கேட்டார். அப்போது மனைவியார் பிராணநாதா! நான் எவ்வளவு சொன்னாலும் கேளாமல் உன்னுடைய தங்கை கொடுத்ததை நான் தடுக்காமல் வாங்கிக்கொண்டு வந்தேன் என்றாள். அதைக்கேட்ட தாசரானவர் இந்த முழு அடையைக் கொடுத்துவிட்டு வந்தால்தான் நான் உண்பேனென்று சொன்னார். அதைக்கேட்ட மனைவியார் கணவருடைய சொல்லின்படியே அந்த அடையை எடுத்துக்கொண்டு விரைவாகப்போய் அடைகளைக் கொடுத்தவரிடத்தில்கொடுத்துவிட்டுத் திரும்பி வரும்போது மழைபெய்து வழிமுழுவதும் காளுறுனது பெருகி ஓடுவதைக்கண்டு இந்த ஆற்றைத் தாண்டிப்போகும் விதம் எப்படியென்றும், நமது கணவர் பசித்திருப்பாரே யென்று துன்பமிகுந்து ஸ்ரீபாண்டுரங்கப்பெருமானை அங்கு நின்றுமே தியானஞ்செய்தார். அப்போது ஸ்ரீபாண்டுரங்கப் பகவானுனவர் இவர்மேல் இரக்கங்கொண்டு ஆறுகடத்துவோனைப்போல் ரூபங்கொண்டு அவ்விடத்தில் வந்து இவரைப்பார்த்து நீர் ஏன் வருந்துகின்றீர்? என்று கேட்டார். அதற்கு இவர் என்னுடைய கணவர் அந்தக்கரையிலிருக்கிறார். நான் அவருக்கு உணவுகொண்டு போகும்வழியில் இந்த ஆறுனது தடைப்படுத்தினதால் நான் மனம் வருந்திநிற்கின்றேன் என்று சொல்லிப் பின்னருஞ் சொல்லுகின்றாள். ஐயா! இந்தச்சமயத்தில் தேவரீர்என்னை உம்முடைய தங்கையாகப் பாவித்து அந்தக்கரையில் சேர்ப்பாயானால், உனக்குப் பெரும் புண்ணியமுண்டாகும் என்றுசொல்லி அவ்வாறு செய்யும்படி மிகவும் வேண்டிக்கொண்டாள். அதற்குப் பகவானுனவர் இவருடைய வேண்டுகோளின்படியே இவரைத் தம்முடைய திருத்தோளில் ஏற்றிக்கொண்டு அவ்வாற்றை நீந்தி விரைவில் அக்கரையிற்சேர்ந்து அழைத்துக்கொண்டு இவருடைய கணவரிருக்கிற இடம்வரைக்குஞ்சென்று உன்னுடைய பிராணநாதரைக் கண்டாயா? என்று சுட்டிக்காட்டி மறைந்து போனார். பகவானுனவர் போனபின்பு இவர் தம்முடைய கணவரிடஞ்சென்று நிற்கக்கண்ட தாசரானவர் ஓ! பெண்ணே! இந்த மழையில் எப்படி ஆற்றைக்கடந்து வந்தாய்? என்று கேட்டார். அதற்கு இவர் நடந்தசெய்திகளைச் சவிஸ்தாரமாய்ச் சொன்னார். அதைக்கேட்ட தாசரானவர் ஸ்ரீபாண்டுரங்கப் பெருமான் உனக்குச் சேவை சாதித்தார். அதுபோலவே எனக்கும் அவர் வந்து சேவைசாதிக்குமளவும் உண்ணுமலிருப்பேன் என்று வைராக்கியம் பூண்டிருந்தார். அதற்கு மறுநாள் ராஞ்சனத்தில் வாழ்கிற பரமபாகவதனுகிய ஒரு செட்டியின் கனவில் ஸ்ரீபாண்டுரங்கப்பெருமான் எழுந்தருளி ஐயா! செட்டியாரே சந்தோபாபக்தரானவர் பசித்திருக்கின்றார். அவருடைய பசியானது தணியும்படி நீ உயர்ந்த அன்னத்தைக் கொண்டுபோய் உண்பித்தால் உனக்குப் புண்ணியம் இயல்பாக உண்டாவதுமன்றி, நாமும் உண்டாக்குவோம், என்று வற்புறுத்திச் சொல்லி, மறைந்து விட்டார். அதையுணர்ந்த அந்தச்செட்டியானவன் கண்விழித்தெழுந்து அன்று தம்முடைய கனவில் பகவான் நியமித்தபடியே

புளிப்பு, உவர்ப்பு, தித்திப்பு, கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு, என்னும் அறுசுவையும், பொருந்தி உண்ணல் நக்கல், பருகல் தின்னல் என்னும் நான்கு வகை உண்டிகளையும் சித்தம்செய்து அவை களை எடுத்துக்கொண்டு சந்தோபாபக்தர் இருப்பி டத்திற்குப்போய் ஐயா! தாசரே! நானோ ராஞ் சனத்திலிருப்பவன். நேற்று இரவு ஸ்ரீமந்நாரா யணரானவர் என்னுடைய கனவில் பிரத்தியக்ஷ மாகி தாங்கள் பசித்திருப்பதாகவும் தங்களுக்கு அறுசுவைகளோடு கூடிய வுணவைக் கொண்டு போய் அவரை உண்பிப்பாயென்றுசொல்லி மறை ந்தனர். ஆகையால் நான் தங்களுக்காக அப்படிப் பட்ட அமுதத்தைக் கொண்டுவந்தேன். அதைத் தேவரீர் திருவமுது செய்யவேண்டும் என்று வேண் டிக்கொண்டனர். அதற்குத் தாசரானவர் அந்தச் செட்டியாரைப் பார்த்து ஓ! செட்டியாரே! உனக் குச் சேவைசாதித்த பகவானானவர் எனக்கு எதிரே வராமலிருக்கின்றார். ஆகையால் அவர் எனக்குச் சேவை சாதிக்குமளவும் நான் உண்ணமாட்டே னென்று சொன்னார். அதற்குச் செட்டியானவர் இவரது மனவுறுதியைப் பார்த்து இவரை நிர்ப்பந் தஞ் செய்யாமல் தன் ஊருக்குப் போய்விட்டான். பிறகு இந்தச் சரீரமானது அன்னமயமல்லவா என் பதனைச் சிறிதுமுணராமல் இப்படிப் பசியோடிருக் கிற இவருடைய உறுதி நிலைக்கு ஸ்ரீபாண்டுரங்கப் பெருமான் மிகவுமகிழ்ந்து, சுகுணரூபத்தோடு இவ ருக்கெதிரே எழுந்தருளினர். அதைக்கண்டு மிகவும் ஆவலோடு வணங்கித் தோத்திரஞ்செய்யப் பகவா னானவர் இவருக்கும் அபயங்கொடுத்து மறைந்தரு ளினர். அதன்பிறகு இவர் அந்த ஸ்ரீமந்நாராயண னுடைய மங்களகுணங்களை ஸ்மரித்துக்கொண்டும் அவனுடைய திருநாம சங்கீர்த்தனஞ் செய்துகொ ண்டும் ராஞ்சனம் என்னும் ஊரில் தினந்தோறும் பிச்சையெடுத்துண்டு மலையில் வாசஞ் செய்துகொ ண்டிருந்தார். அப்போது அந்த ஊரில் குடியிருப்ப வனும், துஷ்டபுத்தி யுள்ளவனுமாகிய ஒரு பிராம ணன் குடும்பவாழ்க்கையில் மிகுந்த ஆசையுள்ளவ னாகவிருந்தான். அவன் எப்பொழுதும் தன்னுடைய மனைவியுடன் சண்டைசெய்வதும் அவள் அதற்கு எதிர்மொழி கொடுத்தால் இந்தக் காட்டில் வாழ் கின்ற சந்தோபாபக்தரைப்போல இந்தக் குடும்ப வாழ்க்கையைவிட்டு நீங்குவேன். அப்போது நீ என்ன செய்வாயென்று பயமுறுத்துவதுமாகிய தொழிலை மேற்கொண்டிருந்தான். அப்போது அவ னுடைய மனைவியானவள் நாம் நம்முடைய கணவ னோடு எதிர்த்து பேசுவோமானால் இவன் நம்மைக் கைவிட்டுவிடுவானானால் நாம் என்செய்வோமென்று அவனுடன் எதிர்த்துப் பேசாமல் அடங்கியிருந் தாள். இவ்விதமாக விருக்குங் காலத்தில் ஒருநாள் சந்தோபாபக்தரானவர் அவளுடைய வீட்டின் தலை வாசலில் வந்து நின்று பிச்சை கேட்டார். அதைக் கேட்ட அவள் பிச்சையைக் கொண்டுவந்து இவரு டைய பாத்திரத்திற்போட்டு அங்கேநின்று ஐயரே! என்னுடைய கணவரானவர் தினந்தோறும் என் னோடு சண்டை செய்கிறார். நான் அவரோடு எதிர்த் துப் பேசினால் உம்மைச் சுட்டி உம்மைப்போல நான் துறவுபூண்பேனென்று சொல்லுகின்றார். இத ற்கு நான் என்ன செய்வேன்? என்று சொல்லிப் புலம்பினர். இதைக்கேட்ட சந்தோபாபக்தரான வர் அவளைப்பார்த்து ஓ! அம்மா! நீ அதற்காகப் பயப்படவேண்டாம். இனிமேல் உன்னுடைய கண வனானவன் உன்னோடு சண்டைசெய்வானானால் நீயும் அவனுடன் எதிர்த்துப்பேசு? அதற்கு அவன் நான் துறவியாய் விடுவேனென்று சொல்லுவான். அப் போது நீ ஒன்றும் பயப்படாமல் உடனே துறந்து விடு என்று சொல்லிவிடு? அப்போது அவன் என்னி டத்தில் வருவான் அப்போது அவனுக்கு நான் உப தேசஞ் செய்து, மறுபடியும் என்னிடத்தில் வந்து இல்லற தருமத்திலமர்ந்து ஆண்டிகையிலகப்பட்ட குரங்கைப்போல உனக்கு அவனை அடக்கிநடக்கும் படி செய்கிறேனென்று சொன்னார். அதற்கு அவள் மகாமகிமைகளை யுடையவரான சந்தோபாபக்தரை உள்ளன்போடு வணங்கி மகிழ்ச்சியடைந்திருந்தாள். இவரும் தம்முடைய ஆச்சிரமத்தை யடைந்தார். பிறகு அந்தப் பிராமணன் வீட்டிற்குவந்து எனக் குப் பசிமேலிட்டிருக்கிறது நீ ஏன் இன்னும் சமை யல் செய்யவில்லை? நீ என்ன எப்பொழுதும் இப்ப டியேசெய்துவருகிறாய். ஆகையால் நீ இனிஇப்படிச் செய்வாயானால் நான் உன்னைவிட்டு நீங்குவேன் என்று சொன்னான். அதைக்கேட்ட அவளும் உடனே தன்னுடைய நாயகனைநோக்கி உம்முடைய இஷ்டம்போலவே சீக்கிரமே போகலாம் என்று சொன்னாள். இவ்விதமாக மனைவியானவள் சொல் லக்கேட்ட அந்தப் பிராமணனானவன் ஆகா! மோச சம்வந்தது. இனிமேல் நாம் இவ்விடத்திலிருப்போ மானால் நம்முடைய பெருமைக்குக் குறைவு நேரிடு மென்று எண்ணி உடனே ஒரு செம்பைக்கையிலெ டுத்துக்கொண்டு சந்தோபாபக்தரிருக்கிற இடத் திற்குவந்துசேர்ந்து ஓ!தாசரே! உம்மைப்போலவே நானும் குடும்பத்தைவிட்டு வந்து உம்மைச் சரண

கதியடைந்தேன். ஆகையால் நீர் எனக்கு நன்மையைத் தருகின்ற உபதேசம் செய்யவேண்டுமென்று பிரார்த்தனை செய்தான். அதைக்கேட்ட தாசரும் பிராமணனைப்பார்த்துபிராமணரே! உன்னைப்போல் இப்படிப்பட்ட வைராக்கிய சீலர்களை நான் எவ்விடத்திலுங் கண்டதில்லை; ஆயினும் உனக்கு உபதேசஞ்செய்ய யாதொருதடையுமில்லை, என்று சொல்லி செம்பும் ஆடையுங்கொண்டு சென்றால் திருடர்கள் பறித்துக் கொள்ளுவார்கள். ஆகையால் அவைகளை நீக்கிக் கோவணமொன்றைமாத்திரம்உடுத்தி சுரைக்குடுக்கையைத் தூக்கிக்கொண்டுபோய் ஜலம் கொண்டுவா வென்று நியமித்தார். அதைக்கேட்ட பிராமணனும் அவ்வாறே கோவணமும் சுரைக்குடுக்கையுமாகப் போனான். அவன் போனபிறகு இந்தச் சந்தோபாபக்தரானவர் அவனுடைய ஆடையைத் துண்டுதுண்டாகக்கிழித்தெரிந்துவிட்டு செம்பையும் ஒரு பள்ளத்தில்போய் விழும்படி வீசி எறிந்தார். பிறகு நீர் கொண்டுவரப்போன பிராமணன் நீர் கொண்டுவந்து தாசரிடஞ் சேர்ந்தான். அப்போது தாசரானவர் தாமும் தம்முடைய மனைவியுமாக வேப்பங்காய்களை உணவாக உண்டுக்கொண்டிருந்தார்கள். அங்குவந்தவேதியனும் மேற்படிதாசரைப் பார்த்து, ஐயா! தாசரே! எனக்குப் பசியாயிருக்கிறதென்று சொன்னார். அதைக்கேட்ட தாசர்கள் உண்டு கொண்டிருந்த வேப்பங்காய்களை அள்ளி உண்ணென்றுகொடுத்தார். பிறகு அவரே அப்பிராமணனைப்பார்த்து ஐயா! பிராமணரே! நாமோ துறவறத்தை யடைந்திருக்கின்றோம். நமக்கு சுவையின் மேல் விருப்பங்கூடாது. ஆகையால் பசிவந்தபோது எதுகிடைத்தாலும் புசிப்பதே துறவுக்கு அழகு. இதனை உள்ளபடியே யுணர்ந்து கொள்வாயாக என்று சொன்னார். இதைக்கேட்ட பிராமணன் ஐயோ! நான் என்னுடைய மனைவியைவிட்டு என்ன லாபத்தை யடையும்பொருட்டு இவ்விடத்திற்கு வந்தேன்? பசிக்கு உலர்ந்த அடையானாலும் அவ்விடத்தில் கிடைக்குமே இவ்விடத்தில் அதுவுங்கிடைக்காமல் வேப்பங்காய் கிடைத்ததேயென்று கண்ணீர் விட்டழுதான். இதைக்கண்ட தாசரானவர் ஐயரே! ஏன் அழுகிறாயென்று வினவினர்? அதற்கு வேதியன் தன் குடும்பத்தில் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லி உம்மை நான் நம்பிவந்ததற்கு உண்ண வேப்பங்காய் கிடைத்தது. பசித்தீயோ எரிக்கிறது. குளிரோ நடுக்குகின்றது. வஸ்திரமோ பறந்துவிட்டது. இப்படிப்பட்ட துன்பம் அநுபவிக்கக் காரணமாக நான் எப்படிப்பட்டபாவத்தைச்செய்திருந்தேனோ? மனைவியை தினந்தோறும் வருத்தப்படுத்தின பாவமானது இப்படிநான் வருந்தச்செய்தது? நான் அறிவீனத்தால் மனைவியைத் துறந்து வந்ததே மோசம். ஆகையால் இந்தக்கோவண வேஷத்தோடு மறுபடியும்வீட்டிற்குஎப்படிநாணமில்லாமற்போவேன்? அப்படி நாணத்தைவிட்டு நான்போனாலும் என்னுடைய மனைவியானவள் மிகவும் வைராக்கியத்துடன் துறந்துசென்ற நீ மறுபடியும் வீட்டிற்கு வரலாமோவென்றுகோபங்கொண்டுபேசுவாள்.இதற்கு நான் என்னசெய்வேனென்று புலம்பி யழுதான். இப்படி இந்தப் பிராமணன் அழுவதைக்கண்ட சந்தோபாவானவர் அப்பிராமணனைப் பார்த்து பிராமணரே! நீ முன்போல நாள்தோறும் உன்னுடைய மனைவியோடு சண்டை செய்யாமலும் அடிக்கடி துறந்துபோவேனென்று சொல்லாமலும் உன்னுடைய மூர்க்ககுணங்களை விட்டுவிட்டு சாந்தகுணத்தை உள்ளபடியே யடைந்து அவளுக்கு உறவாக நடந்துகொண்டிருப்பாயானால் உன்னுடைய மனைவியோடு உன்னைக் கொண்டுபோய்ச் சேர்த்து அவளுக்கு வேண்டிய சமாதானஞ்சொல்லி வருகிறேனென்று சொன்னார்.

அதைக்கேட்ட பிராமணனானவன் தாங்கள் அப்படியே செய்தால் நான் முன்போல் சண்டை செய்தல் முதலாகிய தீயசெய்கைகளைவிட்டு அவளோடு ஒற்றுமையாய் வாழ்ந்திருப்பேனென்று உறுதியாய்ச்சொன்னார். அதுகேட்ட தாசரானவர் பொழுதுபோன பின்பு அவனை வீட்டுக்கழைத்துக் கொண்டுபோய் அவனுடைய மனைவியை யழைத்து உன்னுடைய கணவனுக்கு உபதேசஞ் செய்து அழைத்துக்கொண்டுவந்தேன். இனி நீ அவனை உன் வசப்படுத்திக் கொண்டு மன சந்தோஷத்துடன் வாழ்ந்திருக்கக்கடவாய். ஆயினும் அவன்கோவணத்துடன் வருவான் அவனை இகழ்ச்சிசெய்யாமல் அவனுக்கு நல்ல ஆடையைக்கொடு என்று சொல்லி விட்டு அந்தப் பிராமணனைப்பார்த்து நீ இனி மனந் தளரவேண்டாம் உன்னுடையமனையாளுக்கு வேண்டிய புத்திமதிகளைச்சொன்னேன் ஆகையால் நீ உன்னுடையவீட்டிற்குப்போவென்று நியமித்தார். அதுகேட்ட பிராமணன் அந்தச் சந்தோபாதாசரைப் பார்த்து ஓ! சுவாமி! நான் உம்முடைய சொல்லைத் தள்ளமாட்டேனென்று வணங்கி தன்னுடைய வீட்டில்பிரவேசித்தான். இவனைக்கண்டவுடனே மனைவியானவள் உயர்ந்த வஸ்திரங்கொடுத்து இனிமையான ருசிபொருந்திய அன்னமும் படைத்தாள்.

பிராமணனும் அன்று முதலாக யாதொரு கலகமுமில்லாமல் மனைவியோடும் ஒற்றுமையாய் வாழ்ந்து கொண்டிருந்தான்.

இந்தவிதமாக அந்தப் பிராமணனைத் திருத்தி இல்லறத்தில் இன்பத்துடனே வரும்படி சேர்த்து வைத்த சந்தோபாபக்தரானவர் ஆடிமாதம் ஏகாதசிக்கு ஸ்ரீபண்டரிபுர யாத்திரைசெய்ய விரும்பி வீணை, மிருதங்கம், தாளம், கருடக்கொடி இவை முதலானவைகளோடு ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டும், ஆனந்தக்கீர்த்தனம் பாடிக்கொண்டும் இரண்டாயிரம் ஹரிதாசர்களோடுகூடி ஏகாதசிக்குமுன்னாளாகிய தசமிதினத்தில் நரசிங்கபுரத்திற்கு அருகேபோனார். அப்போதுஹரிதாசர்கள் எல்லாரும் அங்குள்ள நதிப்பெருக்கைக்கண்டு பண்டரிபுரத்திற்குப்போய் ஸ்ரீருக்மணி நாயகனாகிய பகவானை ஸ்ரீஹரிதினமாகிய நாளைக்கு எவ்விதமாகத் தரிசனஞ் செய்யப்போகிறோம்? இந்த நதியின்வெள்ளத்தைக் கடப்பதற்குரிய ஒரு ஓடம் நேரிட்டால் நன்றாயிருக்குமென்று வருத்தப்படும்போது பக்தரானவர் அவர்களைப்பார்த்து நீங்கள் மனம் வருந்தவேண்டாம். ஆகையால் என்னோடு வாருங்கள். பகவானானவர் நம்மைக் காப்பாற்றினாலுஞ்சரி கைவிட்டாலுஞ் சரியென்று மனமகிழ்ச்சியுடன் நதியிலிறங்கி முன்னே போகக்கண்டு ஸ்ரீஹரிதாசர்களெல்லோரும் இந்தச் சந்தோபாபக்தரைப் பின்தொடர்ந்து போனார்கள். அப்போது ஸ்ரீலட்சுமிநாதனான பகவான் கூர்மரூபமாகி நீரினுள்ளேயிருந்து தாங்க, நீரானது கணைக்காலளவாக இருந்ததனால் தாசர் முதலிய எல்லாரும் சுலபமாய் நடந்து அக்கரையையடைந்து பண்டரிபுரம்சேர்ந்து சந்திரபாகாநதியில் நீராடிப் புண்டரீகருடைய திருவடியைப்பணிந்து கோயிலுக்குள்ளேபோய் ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானைச் சேவித்து அன்போடு பணிந்து அவரைத் தழுவிக்கொண்டு அவனுடைய திருநாமங்கள் யாவற்றையும் சொல்லித் தோத்திரஞ்செய்து பகவானே! தேவரீர் உலகத்திலுள்ள அன்பர்களுக்கெல்லாம் அன்பனாகி அவர்கள் விரும்பினவைகளெல்லாவற்றையும் கிருபை செய்கின்றாய். உன்னுடைய புகழோ சேடனுக்குஞ்சொல்லி முடியாதென்றால் என்னுடைய சொல்லுக்கு அடங்குமோ? இன்று கூர்மரூபமாகி எங்களெல்லாரையும் காத்து இரக்ஷித்தருளின கருணைக்கடலாகிய தேவரீருடைய திருவடிகளைவிட்டு நீங்காமலிருக்கும்படி எனக்குத் திருவருள் செய்யவேண்டுமென்று பிரார்த்தனைசெய்தார். அதுகேட்ட ஸ்ரீபாண்டுரங்கப்பெருமானும் திருவருள் சுரந்து உன்னுடைய இஷ்டப்படியே என்னைவிட்டு நீங்காமல் நீ இவ்விடத்திலேயே வாழ்ந்திருக்கக்கடவாயென்று ஏற்பாடு செய்தார். அதற்குச் சந்தோபாபக்தரும் தமது குடும்பத்தோடு சேர்ந்து அந்தப் பண்டரிபுரத்தில் தங்கி ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டு சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தார், என்று சொல்லி அவர்களுக்கெல்லாம் விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்றார்.

சந்தோபாபக்தர் சரித்திரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

ஐம்பத்தைந்தாவது

# உத்தவசித்கனர் சரித்திரம்.

துதி கவி.

பத்தராயரி பாதத்தைநாடிய
சித்தராலவன் திருவடியைப்பெறு
கர்த்தராயரசன் கவல்நீக்கிய
உத்தமன்கதை யுரைப்பாயேநெஞ்சமே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று அன்று இரவெல்லாம் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை உள்ளன்போடு தியானஞ் செய்துகொண்டிருந்து பொழுது விடிந்தவுடன் யாவரும் நித்திரை விட்டெழுந்து கீழ்த்திசையை நோக்கிச்சென்று புல் பூண்டு முதலானவைகளெல்லா மில்லாத தரையில் ஆசௌசாதிகளைக் கழித்து வேறு சுத்தமான கங்கையில் ஸ்நானஞ்செய்து திருமண்காப்பிட்டு ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீநாபாஜிசித்தரிடஞ் சென்று வணங்கி உள்ளன்போடு துதித்து சுவாமீ! தேவரீர் அடியோங்களுக்கு இதுவரைக்குஞ் சொல்லி வந்ததுபோல் இன்றைக்கும் உத்தவசித்கனர் சரித்திரத்தைச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் அப்படியேயாக என்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்திலே தாரூர் என்னும் நகரத்தில் தத்துவப்பெருமானை முற்றுமுணர்ந்தவர்களும் விரக்தியோடுகூடிய மனதையுடையவரும் அநேக சாஸ்திரங்கள் செய்து முடித்தவருமாகிய உத்தவசித்கனர் என்பவர் ஒருவர் இருந்தார். இப்படிப்பட்ட இவர் சித்திரை சுத்தப் பிரதமைதினத்தில் புறப்பட்டு பேதரிநகரத்தில் வந்து ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ்செய்து அவ்வூரிலுள்ள பக்தர் முதலான யாவரும்கேட்டு மனமகிழ்ந்து ஆனந்தப் பரவசராய், இவரை வணங்கி ஸ்ரீராம நவமிவரைக்கும் இவ்விடத்தில் எழுந்தருளியிருக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அவர்கள் அந்தப் பிரார்த்தனையை மறுக்காமல் சம்மதித்து அவ்விடத்தில் தங்கியிருந்தார். இப்படியிருக்கும் நாளில் ஸ்ரீராமநவமி உற்சவம் நெருங்குதலும் அவ்வூரில் எவ்விடத்திலும் அலங்காரஞ்செய்து ஸ்ரீராமபிரானை எழுந்தருளச்செய்து ஸ்ரீராமநாம சங்கீர்த்தனத்தை அன்புடன் செய்து உற்சவதினங்களிலும் நாள்தோறும் ததியாராதனம் நடத்தி உற்சவஞ் சாத்து செய்யுந் தினத்தில் அநேக வகைப்பட்ட வாத்தியங்களையெல்லாம் நன்றாயொலிக்கச்செய்து ஸ்ரீ கருடக்கொடியையேற்றி ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டு ஊர்வலம் வந்தார்கள். இவ்விதம் வரும்போது வழியிலேயுள்ள ஒரு மசூதியில் பல துருக்கர்களிருந்தார்கள். அவர்களெல்லாம் இந்த ஊர்கோலம் வருகிற ஆடம்பரத்தைக்கண்டு இவர்களை வருத்தப்படுத்தவேண்டுமென்று நினைத்து ஸ்ரீஹரிதாசராகிய வேதியர்மேல் சாணியுண்டைகளை எறிந்து கருடக்கொடியை யொடித்து வீணை முதலிய வாத்தியங்களையும் அழித்தார்கள்.

அப்போது தாசர்முதலிய யாவரும் நகருக்கு ஓடி உத்தவசித்தனரிடத்தில் சென்று நடந்தசங்கதிகளையெல்லாம் சொன்னார்கள். அதைக்கேட்டஅவர் ஸ்ரீராமபிரானுடைய சந்நிதியை யடைந்து கேசவாதி திருநாமங்களால்ஸ்தோத்திரஞ்செய்து ஸ்ரீமந்நாராயணனே! ஹரிதாசர்கள் உன்னுடைய திருநாமசங்கீர்த்தனஞ் செய்வதில் உனக்குப்பிரியமில்லை

யோ? அதனல்தானே துருக்கர்செய்யும் இடையூறு களைப் பார்த்தும் தேவரீர் சும்மா இருக்கிறீர். தாங்கள் இப்படியிருந்தால் அந்தத் துருக்கர்கள் உம்முடைய பக்தரை மிகுதியும் வருத்துவார்களே. அந்தப் பக்தர்கள் வருத்தப்படவேண்டுமானல் உனக்கு பக்தபரிபாலனன் என்கிற திருநாமம் எப்படி நிலைத்திருக்கும்? என்று மிகுந்த வருத்தத்தோடு சொன்னர். அதைக்கேட்ட துருக்கர்கள் அவ்விடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த ராமபிரானை ஒரு மாடத்தில் சேர்த்து அலங்காரமுழுதும் கலைத்துவிட்டு அந்தத் தாசருடைய தெய்வத்தைக் கெடுத்துவிட்டோமே என்கிற எண்ணத்துடன் களித்திருந்தார்கள். இந்தச் சங்கதியை ஆஞ்சநேயர் உணர்ந்து இப்படிப்பட்ட துஷ்ட துருக்கரை சிட்சை செய்யவேண்டுமென்று நினைத்து, அந்த துருக்கர்களிருந்த மசூதி இப்பொழுதே இடிந்துவிழும்படி மோதுவேனென்று அதிக கோபாவேசத்தோடு வரும்போது அவ்விடத்தில் ஞானவானுகிய ஒரு பக்கிரியானவர் இவர் செய்யப்போகுங் காரியத்தை யுணர்ந்து இவரைப் பிரதட்சனஞ்செய்து வணங்கி எதிரேநின்று ஓ! மஹாநுபாவா! அடியேன் இருக்குமிட மாத்திரமழியாமல் இருக்கும்படி கிருபைசெய்து மற்றவைகளை உம்முடைய இஷ்டம்போல நாசஞ்செய்யலாமென்று பிரார்த்தனை செய்தார். இவன் பிரார்த்திப்பதைக்கண்ட அந்தத் துருக்கர்கள் இந்தப் பக்கிரிக்குப் பித்தம் பிடித்ததென்று அவமதித்து பேசினர்கள். அதைக்கேட்ட பக்கிரியானவர் அவர்களைப்பார்த்து ஐயன்மீர்! ஏன் துள்ளுகின்றீர்? இன்னும் கொஞ்சநேரத்தில் நீங்களும் உங்களுடைய மசூதியும் படுகிறபாட்டை நீங்களே பார்க்கப்போகிறீர்கள் என்று சொன்னர். அதற்குத் துருக்கர்கள் ஐயா! எங்களுடைய மசூதியை அழிப்பதற்கு இவன் அவ்வளவு சமர்த்தனுவானு? இவனைப்பெற்ற ஐயனும் சமர்த்தனுகமாட்டானே யென்று புகழ்ந்து இகழ்ந்து சொல்லித் தங்களுடைய சௌரியத்தைப் பேசிக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் ஆஞ்சநேயரானவர் மிகவும் கோபத்தோடு வந்து தம்முடைய மலையைப்போன்ற கையினல் அவர்களுடைய மசூதியை மோதியடித்தார். அப்போது இவருடைய கை படுமுன்னமே அந்தமசூதியானது மேருமலையானது இடிந்துவிழுந்தாற்போல இடிந்து விழுந்தது. அப்போது அதிலிருந்த ஐந்நூறு துருக்கர்களும் மடிந்தார்கள். இந்தச் சங்கதிகளை பக்கத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த வேறு சில துருக்கர்கள் அவைகளையெல்லாம் விரைவாக ஓடிப்போய் தம்முடைய அரசனிடத்தில் முறையிட்டார்கள். அதைக்கேட்ட அரச துருக்கன் இந்த விஷயத்தில் மிகவுங் கோபங் கொண்டான். உடனே அவனுடைய வயிற்றிற் பொறுக்கக்கூடாத ஒருவகைநோய் உண்டாயிற்று. அந்த அரசன் அந்த நோயை எள்ளளவும் பொறுக்காமல் பூமியின்மேல் விழுந்து புரண்டு உத்தவசித்தனரிடத்தில் வந்து அவரை மும்முறை பிரதட்சணம் வந்து அன்போடு பணிந்து தோத்திரஞ்செய்து ஓ! சுவாமி! உங்களை துன்பப்படுத்தினவர்களெல்லாரும் இறந்துபோனர்கள். ஆகையால் இப்போது ஆஞ்சநேயரைப் பிரார்த்தனைசெய்து என்மீது அவருக்குக் கிருபையுண்டாகும்படி செய்யவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அதற்கு அவரும் ஆஞ்சநேயரைப் பிரார்த்தனைசெய்து இந்த அரசனுடைய வயிற்றிலுண்டான நோயை அவனைவிட்டு நீங்கி ஒழியும்படி செய்தார்; அதன்பிறகு அந்தத் துருக்கனுகிய அரசனும் தன்னுடைய அரண்மனையை யடைந்தான். அப்போது ஸ்ரீஹரிதாசராகிய உத்தவசித்தனர் மறுபடியும் தாளம் முதலியவை முழங்க ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ்செய்து அந்த நகரத்தை வலம்வந்து மிக்கபேரானந்தத்துடன் சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தாரென்று சொல்லி நாபாஜிசித்தரானவர் இன்னுஞ் சொல்லுகின்றர். சித்தர்களே! இதுவல்லவோ பக்தியின் மகிமை. இப்படிப்பட்ட பக்திஉண்டாகும்படி நீங்களும் முயற்சி செய்தால் நற்கதியடைகுவீர், என்று புத்திசொல்லி மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்றர்.

உத்தவசித்தனர் சரித்திரம் முற்றிற்று.

---

ஸ்ரீமகா பக்தவிஜயம் நான்காம்பாகம் ஸம்பூர்ணம்.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயபரப்பிரம்மணேநமః

# ஸ்ரீமகா பக்தவிஜயம் ஐந்தாம்பாகம்.



ஐம்பத்தாறுவது

## ஸ்ரீதரபண்டிதர் சரித்திரம்.



துதி கவி.

சோதரெவரையும் தூய்மையாக்கியே
ஆதரம்வைத்துமிக் காநந்தமாகியே
காதரமின்றியே கசடறுத்தவெம்
ஸ்ரீதரபண்டிதர் திரம்விளம்புவாம்.

இவ்விதமாகச் சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்று அன்றிரவு ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை உள்ளபடியே தியானஞ்செய்துகொண்டிருந்து மறுநாள் உதயத்தில் பிராதக்காலத்திலெழுந்து ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு யாவருமொன்றாகச் சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தரிடஞ்சென்று அவரைக்கண்டு வலப்பிரதட்சணஞ் செய்து சாஷ்டாங்கமாக வணங்கி நமஸ்காரஞ்செய்து சுவாமிகளே! தேவரீர் அடியோங்களுக்கு இதுவரைக்குஞ் சொல்லி வந்ததுபோல் இன்றைக்கும் நாங்களெல்லாம் பரகதியை யடையுநிமித்தம் ஸ்ரீதரபண்டிதர் சரித்திரத்தைத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தனைசெய்தார். அதுகேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே சொல்லுகிறேனென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்:—

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வகாலத்தில் சகல நீர்வளங்களும் நிறைந்தோங்கிய ஒரு ஊர் இருந்தது. அந்த ஊரில் ஸ்ரீதரபண்டிதர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் உலகத்திலுள்ள யாவரிடத்திலும் விஸ்வாசமுள்ளவராகவும் எப்பொழுதும் ஸ்ரீஹரி பஜனை செய்பவராகவுமிருந்தார். இந்தப் பண்டிதரோ கற்பின்சிறந்த ஒரு மனைவியாரை வைத்துக்கொண்டுவாழ்ந்திருந்தார். இந்த ஸ்ரீதரபண்டிதரோ அந்த ஊரிலும் வேறிடங்களில் யாராவது ஏதாவது விகற்பமாய்ப் பேசினாலும், அவைகளையெல்லாம் உண்மையென்றேநம்புவார். இப்படியிருக்கஒருநாள் யாத்திரை செய்யத் துணிந்து தம்முடைய தேவியாரைக் குதிரையின்மேலேற்றிக்கொண்டு ஒரு காட்டின்வழியே போகும்போது சில திருடர்கள் இவர்களைப் பின்தொடர்ந்ததைப் பார்த்து தேவியாரானவர் பண்டிதரைப்பார்த்து ஐயா! நாயகா! சூரியாஸ்தமனகாலத்தில் நாம் காட்டில் பிரவேசித்து வருகின்றோம். ஆகையால் ஏதாவது தீமையுண்டாகுமென்று பயப்படுகின்றேன். ஆகையால் நாம் திரும்பிப்போய்விடுவோமென்றுசொன்னார். இதைக்கேட்ட திருடர்கள் நீங்கள் அஞ்சவேண்டியதில்லை; நாங்கள் உங்களுக்கு வழித்துணையாய் வருகின்றோமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட பண்டிதர் அந்தத் திருடரைப்பார்த்து உங்களுடைய சொல்

லில் எங்களுக்கு நம்பிக்கை யுண்டாகவில்லை. ஆகையால் எங்களுடைய மனதுக்கு நம்பிக்கை யுண்டாகும்படியாக சத்தியம் செய்வீரானால் நாங்கள் உங்களை வழிக்கு துணையாய் நம்பி உங்களைத் தொடர்ந்து வருவோமென்று சொன்னார். அதைக்கேட்ட திருடர்கள், ஐயா! அப்படியே ஆகட்டுமென்று சொல்லி உம்மிடத்திலும் எம்மிடத்திலும் வேற்றுமையில்லாமல் ஒருதன்மையாக வாழ்கின்ற ஒப்பற்ற சாட்சிபூதராகிய ஸ்ரீராமபிரானறிய எங்களிடத்தில் உங்களுக்கு செய்யும்படியான கெடுதி ஒன்றுமில்லை. ஆகையால் நீங்கள்வாருங்கள் என்று சொல்லினர். இதைக்கேட்ட பண்டிதரும் தேவியாரும் மனந்தெளிந்து அந்தத்திருடரைப் பின்தொடர்ந்து நடந்தார்கள். இந்த விதமாக வேதாந்த வசனத்தைப் பேசிக்கொண்டே இவர்களுடன்போன திருடர்கள் கொஞ்சதூரம் இவர்கள் வழிநடந்த பிறகு மேற்படி பண்டிதருடைய தலையை அறுத்துக் கீழே தள்ளிவிட்டு அவருடைய ஆடையாபரணங்களை யெல்லாம் அபகரித்துக்கொண்டனர். இதைக் குதிரையின் மேலேறிக்கொண்டு முன்னதாகப் போய்க் கொண்டிருக்கிறதேவியாரானவர் திரும்பிப்பார்த்து மிகவும் மனம் வருந்திநின்றார். அப்போது கொலை செய்த திருடர்கள் அவருடைய தேவியாரைப்பார்த்து உன்னுடைய கணவரை நாங்கள் கொன்றுவிட்டோம். அதைக் குறித்து நீ பார்ப்பதினாலும், துக்கப் படுவதினாலும் ஒன்றும் பிரயோசனமில்லை, என்று உக்கிரமாகச் சொன்னார்கள். இப்படித் திருடர் சொல்வதைக்கேட்ட தேவியாரானவர் நீங்கள் உங்கள் வாயினால் சாக்ஷியென்று சொன்ன அந்த ஸ்ரீராமபிரானும் இந்தக் கொலைத்தொழிலை நீங்கள் செய்யும்போது திருவுள்ளஞ் சம்மதித்திருந்தாரோ வென்று சொன்னார். இவர் இப்படிச்சொல்லிமுடிப்பதன் முன்னமே ஸ்ரீராமபிரானானவர் ஒரு நீண்ட வில்லைத் தமது திருக்கரத்திலேந்திக்கொண்டு வந்து அந்தத் திருடர்களை நிமிஷகாலத்தில் கொன்றுவிட்டார். இவ்விதமாக திருடர்களைக்கொன்று ஸ்ரீமந் நாராயணனானவர் ஸ்ரீதரபண்டிதரிடத்தில் வந்து அவரை தம்முடைய கிருபைக்கண்ணால் பார்த்தருளினார். இவர் இப்படிப்பார்த்தவுடனே பண்டிதரானவர் உயிர்பெற்றெழுந்து, தமது தேவியாரைப் பார்த்து சாக்ஷியே ஏற்பட்டிருந்தவர் நம்மைக் காப்பாற்றும் பொருட்டு மிகவும் அன்புடனெழுந்தருளினார். இவ்வற்புதத்தை நீ பார்த்தாயோவென்று சொல்லி பத்தினியும் தாமுமாக ஸ்ரீராமமூர்த்தியை உள்ளபடியே வணங்கினார்கள். உடனே ஸ்ரீராமமூர்த்தியானவர் இவ்விரண்டுபேருக்கும் அபயாஸ்தம் கொடுத்து இவர்கள் அந்தக் காட்டைத் தாண்டுகிற வரைக்கும் அந்த வழிக்குத் துணையாக வந்தார். பிறகு இவர்கள் கண்ணுக்குப் புலப்பட்டுக்கொண்டிருந்தே மறைந்துபோனார். இப்பால் இவர்களும் நிர்ப்பயனாய் தீர்த்தயாத்திரை செய்து மகிழ்ச்சியடைந்திருந்தார்கள், என்றுசொல்லிப் பிறகு மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்றார்.

ஸ்ரீதரபண்டிதர் சரித்திரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீபுண்டரீகபரப்பிரம்மணேநமஃ

ஐம்பத்தேழாவது

# ஜயமல்லராஜன் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

எந்தந்தையெந்தாய ரெங்குமரரெம்புதல்வி
யெவர்களுமேயொன்முன விறைவன்றன்னே
சந்ததமுமுள்ளபடி நினைவாரையெந்நாளுஞ்
சார்ந்துவாழ்பரம்பொருளைத் தனியேநின்று
நந்தமனமகிழ்வோடு நயந்துயோகஞானத்தில்
நாடிமிகவாழ்வோர்கள் நயனமீது
வந்துலவுபெரியோரை வணக்கஞ்செய்து
வாகாகத்திருவடியை வணக்கஞ்செய்வாம்.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று அன்று இரவு இந்தத் தாசருடைய பக்தியையும் அவருக்குப் பகவான்செய்த திருவருளேயும் புகழ்ந்து பேசிக்கொண்டு மறுநாள் காலேயில் எழுந்து நித்தியக் கடன்களே முடித்துக்கொண்டு அங்கிருந்தும் சித்தர்களெல்லாம் ஒன்ருய்ச்சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தர்களிருக்கிற இடத்தை எதிர்நோக்கி நமஸ்காரஞ்செய்து, அவரிடஞ்சென்று அவரைக்கண்டு உள்ளபடியே பிரதட்சணம் வந்து நமஸ்காரம்செய்து வணங்கி ஒ! சுவாமி தேவரீர் அடியோங்களுக்கு நீங்கள் திருவள் மேலீட்டால் சொல்லியருளிய சரித்திரங்களால் எங்கள்மனம் ஒன்றுந் தெளிவடையவில்லே. ஆயினுங் கேட்ககேட்க தெளிவடையுமென்று எண்ணுகிருேம். ஆகையால் எங்களுக்கு இன்றைக்கு ஜயமல்லராஜர் சரித்திரத்தைச் சொல்லியருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே யாகட்டுமென்று சிறிதுநேரம்மௌனமாயிருந்துஸ்ரீகண்ணபிரானைத்துதிசெய்து சொல்லத்தொடங்கினர். எப்படியென்ருல்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னெருகாலத்தில் இவ்விடத்தில் குமடம் என்னும் ஒரு ஊரிருந்தது. அதற்கு ஜயமல்லராஜர் என்பவர் ஒருவர் அரசராயிருந்தார். இவர் ஹரிபக்தியுடையவராயும் ஸ்ரீஹரிபூஜையை நியதியோடு நடத்தி வருவோரையும் பூஜைமுடிவில் ஒரு ஜாமநேரம் வரைக்கும் பகவத்தியானத்தில் நிச்சயமாயிருப்பவராயு மிருந்தார்.

இவர் இப்படி யிருக்கும் சமயத்தில் அவ்விடத்துக்கு ஒருவரும் வரக்கூடாதென்கிற கட்டளை பிறப்பித்தவராயிருந்தார். அப்படி யிருக்குங்காலத்தில் இவருடைய தம்பியானவன் இவர் ஆளுகின்ற ராஜ்ஜியத்தில் தான் சமபாகம்பெற விரும்பி அவ்வூரைவிட்டு அயலிலிருந்துகொண்டு சேனைகளைச் சேகரித்துக்கொண்டு இவர் பூஜை செய்துகொண்டிருக்கிற காலத்தில் வந்து தங்களுடைய கோட்டை முழுமையும் வளைத்துக்கொண்டான். இதைக்கண்ட இவருடைய மந்திரியானவன் தானும் சேனைகளோடு புறப்பட்டு அவனிருக்கு மிடத்திற்குச் சென்று அவனேடு யுத்தம்செய்தான். அப்போது வந்தபடைகள் அதிக பலமுள்ளவர்களாக இருந்தபடியால் அந்தச்செய்தியை மந்திரியானவன் தன் அரசனுடைய தாயினிடத்திற் சொன்னர். அவரும் இந்தச்செய்தியை அரசனுக்குச் சொல்லென்று சொன்னர். அதற்கு மந்திரியானவர் அம்மா! இப்போது அவர் பூஜையிலிருக்கிருரே நான் அவருக்கு எப்படி போய்ச் சொல்லுவேனென்று சொன்னர். அதைக்கேட்ட தாயானவள் அப்பா! மந்திரி! நாம் இந்தச்சமயத்தில் பூஜையைக் குறித்து தாமசமாயிருக்கக்கூடாது, என்று சொல்லிப்போய்த் தன் புதல்வராகிய அரசருக்குத் தெரிவித்தார். அவர் தாயைப்பார்த்து ஒரு மறுமொழியும் சொல்லாமல் தாமே சாமளன் என்று சொல்லி யிருந்தார். அந்தச்சமயத்தில் கிருபைக்கடலாகிய பகவானுனவர் தாம் ஒரு போர்வீரனைப்போல வேஷங்கொண்டு சர்வாயுதங்களேயுந்தரித்துக்கொண்டு கையில் வாளா

யுதத்தை யேந்தி ஒரு குதிரையின்மேலேறி கோட்டை வாசற்கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்து அந்தச்சமயத்தில் கோட்டையை வளைத்திருந்த சேனாசமூகங்களிற் பாய்ந்து அந்தச் சேனைமுழுமையும் அதஞ்செய்தார். அந்தச்சமயத்தில் அந்தச் சேனையில் பகவானால் இறந்தவர்களொழிய மற்றவர்களெல்லாம் சின்னாபின்னப்பட்டு ஓடுவதை அந்தக் கோட்டை மதிலின்மேலிருந்துபார்த்த அந்நகரத்து ஜனங்களெல்லாம் ஆச்சரியமடைந்து இவன்யாரோ தெரியவில்லை. இங்கிருந்தபலபேரையும் இவன் ஒருவனே அதஞ்செய்தான். என்று அந்தப் போர்வீரனுடைய வெற்றிப்பிரதாபத்தைப் புகழ்ந்துகொண்டிருந்தார்கள். அப்போது பகவானாகிய போர்வீரர் ஜயமல்லராஜனுடைய தம்பியை நன்றாகக் கட்டிக் கொண்டுவந்து மந்திரியினிடத்தில் சேர்த்துவிட்டு மறைந்துபோயினார். மந்திரியும் அவனைச் சிறைப்படுத்திவைத்தான் பிறகு ஜயமல்லராஜர் தாம்செய்யும் பூஜையைமுடித்துவெளியேவந்து மந்திரியைப்பார்த்தார். அப்போதுமந்திரியானவன் அரன் பூஜைசெய்யத் தொடங்கினதுமுதல் தம்பியைச் சிறைப்படுத்தினவரைக்கும் நடந்த சங்கதிகளையெல்லாம் அரசனுக்குச் சொன்னான். அதைக்கேட்ட அரசன் இது சாமளன் செய்த செய்கையென்றுணர்ந்து ஸ்ரீவனமாலாதரராகிய பகவானானவர் எம்பொருட்டு இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டாரேயென்று மிகவும் பரிதாபங்கொண்டு ஓ சாமளரூபனே! நீ தம்பிக்குச் சேவைதந்தருளினதுபோல எனக்கு ஏன் சேவைதராமற் போனாய்? அடியேன் உன்னுடைய திருவடிக்கு என்ன பிழைசெய்தேனென்று புலம்பினார். அதற்குக் கிருபாசாகரமாகிய பகவானானவர் திருவுளமிரங்கி அரசருக்குப் பிரத்தியக்ஷமாகி அபயந்தந்துமறைந்தருளினார். அதன்பிறகுஅரசர்தமது தம்பியை வரவழைத்துக் கட்டவிழ்த்துவிட்டார். உடனே அந்தத் தம்பியானவன் இவரை வணங்கி நின்று தேவரீருடைய மகிமையை அறியாமல் அடியேன் செய்தபிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தனைசெய்தார். அதைக்கேட்ட அரசர் தம்பியைப்பார்த்து தம்பி! ஸ்ரீருக்மணிநாதரானவர் உனக்குப் பிரத்தியக்ஷமானார். ஆகையால் இவ்வுலகத்தில் உனக்கு ஒப்பானவர்ஒருவருமில்லை. உன்பாக்கியமே பாக்கியமென்று மார்போடணைத்துக்கொண்டுமனமொருமைப்பாட்டுடனே தம்பியோடுவாழ்ந்திருந்தார். இவ்விதமாக வாழ்ந்துகொண்டிருக்குங் காலத்தில் ஒருதச்சனைக்கொண்டு ஒருகோயில்கட்டுவித்து அதில் ஸ்ரீ பகவானைப் பிரதிஷ்டைசெய்து கோயிலின் மதில்வாசல்வழியாய் ஒருவரும்போக்குவரவுகள் செய்யாதிருக்கும்படி சுற்றிலும் மதில்வளைத்து தாம்மாத்திரம் நூலேணியின் வழியாய் கோயிலுக்குள்ளேபோய் பகவானைப்பூஜைசெய்துவணங்கி வாழ்த்திக் கோவிலின் ஒருபக்கத்தில் மௌனமாயிருந்துகொண்டு ஓ பகவானே! தேவரீர் என்னுடைய மனதுக்கு தோன்றுவதுபோல என்னுடைய கண்களுக்குத் தோன்றியருள வேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். பகவானும் இவருடைய விருப்பத்தின்படியே இவருக்கு பிரத்தியக்ஷமானார். அப்படி பிரத்தியக்ஷமான பகவானை அரசர் கண்களிகூரக்கண்டு திருவடிகளைத் திருக்கையாற் பற்றி உடலம் புளகாங்கிதங்கொள்ளக் கண்ணீர் ததும்ப ஆநந்தபரிதராய் இரத்தினாசனத்திலேற்றி சோடசோபசாரஞ்செய்து சயனத்தில் கண்வளரச்செய்து ஸ்ரீபாதங்களை வருடி இவ்வுலகத்தில் என்னைப்போலப் பாக்கியவான்கள் யாரென்று மனமகிழ்ந்து நூலேணியின் வழியாய் வெளியேவந்து தாம் தம்முடைய அரண்மனைக்குப்போனார். இப்படி நெடுநாள் நடந்துகொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள் இவர் அவருடைய திருச்சந்நிதிக்குள்ளே போனவுடனே நூலேணியை எடுத்துவிடும் வழக்கம்போல எடுக்காமல் மறந்து சந்நிதிக்குள்ளேபோய்ப் பகவானை வணங்கி நமஸ்காரம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில், அரசனுடைய மனைவியாரானவர் அந்த நூலேணியின் வழியாய்க் கோயிலுக்குள்ளேபோய் பகவானுடைய திருவடியை வருடிக்கொண்டிருக்கிற கணவனைப் பார்த்துத் தாமும் பகவானை வணங்கித் தோத்திரம் செய்தார்.

அப்போது பகவானானவர் அந்த அம்மையார் செய்த தோத்திரத்துக்கு மிகவும் திருவுள்ளமிரங்கி அவருக்குத் திருவருள் பாலித்தார். அதை அரசனானவன் பார்த்து பெண்ணே! நீ எப்படி இங்கே வந்தாயென்றுகேட்க, அதற்கு அம்மையார் நாயகா! நூலேணியானது எடுக்கப்படாமலிருந்தது. நான் அதன்வழியாக வந்தேன். அங்ஙனம் வந்ததனால் ஸ்ரீமந்நாராயணனைச் சேவிக்கும்படியான பாக்கியம் பெற்றேனென்று சொல்லி வணங்கினாள். இவ்விதமாக அரசராகிய ஜயமல்லராஜரும் அவருடைய தேவியாரும் மனம் வொற்றுமை யுடையவர்களாய் தினந்தோறும் பகவதாராதனமும் பகவந்நாம சங்கீர்த்தனமும் செய்துகொண்டு சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தார். ஆகையால் சித்தர்களே! பெண்பால்செய்தபக்தியால் ஸ்ரீபரமபதநாதன் திருவருள் செய்தான். நீங்களும் அவ்வாறே மனமொடுங்கி ஸ்ரீமந் நாராயணனிடத்தில் உள்ளபடியே பக்தி செய்யவேண்டும் என்றுசொல்லி நாபாஜிசித்தரானவர் மற்றவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்றார்.

**ஜயமல்லராஜன் சரித்திரம் முற்றிற்று.**

ஐம்பத்தெட்டாவது

# பன்னஹாஜிரசபுத்திரர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

மன்னவர்கள்முதலான மகரிஷிகள்யாவரும் மகிழ்வாகப்போற்றிசெயு மன்னவனேயுன்றன் [தை
பொன்னடியைபோற்றிசெயாப் பூதலத்திற்கொடியேன் புரிவினையைப்போக்குவிக்கும் புண்ணியனேயெந்
மன்னவனேமங்கையருக் கருள்தந்தமகிபா மாணிக்கமாலையனே மச்சாவதாரனே
பன்னஹாஜிபுத்திரர் சரித்திரத்தைப்பன்ன பதந்தந்துரட்சிப்பதுங் கடமையன்றே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்று இரவு தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்று உண்டியாதி வினைகளையொழித்து யாவரும் ஒன்ருகச் சேர்ந்து ஸ்ரீமந்நாராயணரானவர் தம்முடைய பக்தர்களுக்குச் செய்து வருகின்ற அற்புதங்களையெல்லாம் கண்டு அவைகளைப்பற்றி வார்த்தையாடிக்கொண்டிருந்து, பாதிராத்திரியில் நித்திரை செய்துவைகறையானவுடனெழுந்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனைத் துதி செய்து உண்டிவினைகளையொழித்து யாவரும் ஒன்ருகச்சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தரிடம்சென்று அவரை வலப்பிரதட்சணஞ் செய்து சாஷ்டாங்கமாக வணங்கி நமஸ்காரம்செய்து ஓ! சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் அநேகசரித்திரங்கள் சொல்லிக்கொண்டுவந்தீர். அதனல் எங்களுடைய மனமானது சிறிது ஒடுக்கமடைந்திருக்கிறது. ஆகையால் இன்றைக்கும் பன்னஹாஜிரசபுத்திரர் சரித்திரத்தைச் சொல்லியருளவேண்டுமென்றுவேண்டிக்கொண்டனர். அதைக் கேட்ட நாபாஜிசித்தர் அப்படியே யாகட்டுமென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றல்;

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னெருகாலத்திலே குஜராத்தி தேசத்திலே டோகபூர்என்னுமோரூரிருந்தது. அதற்கு குமான்சிங்என்பவர் அரசனுகவிருந்தார். அவருக்குபன்னஹாஜிரசபுத்திரர் என்பவர் அத்தியந்தநண்பராயிருந்தார். இவர் எக்காலமும் ஸ்ரீமந்நாராயணனை மனதில் திரிகரணசுத்தியோடு நினைத்து ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனத்தை இடைவிடாமல் நடத்திவந்துகொண்டிருந்தார். இப்படியிருக்கும் காலத்தில் ஒரு தீபாவளி பண்டிகை நேரிட்டது. அப்போது அந்த அரசன் அந்த தீபாவளியன்று இராத்திரியில்நடத்தவேண்டிய தீபோற்சவத்தை வெகு விமரிசையாக நிறைவேற்றினன். அன்று நடு இராத்திரியில் பன்னஹாஜிரசபுத்திரரானவர் ஏதோ ஒர் கனவு கண்டாற்போல் சீக்கிரமேயெழுந்து தம்முடைய மேற்போர்வையைக் கசக்கினர். அதைப்பார்த்துக்கொண்டிருந்தஅரசன்பன்னஹாஜியைப்பார்த்து நீ ஒரு காரணமில்லாமல் இப்போது ஆடையை கசக்கவேண்டிய காரணமென்னவென்று கேட்டார். அதற்கு அவர் அரசனைநோக்கி அரசனே! துவாரகையில் ஸ்ரீகண்ணபிரானுக்கு இப்போது தீபோற்சவம் நடக்கிறது அதில் அர்ச்சகரானவர் அந்த கண்ணபிரானுக்கு ஆடையாபரணஅலங்காரஞ்செய்து ஆராதி சமர்ப்பிக்கும்போது ஒப்பற்றவராகிய அவருடைய அங்கியில் நெருப்பு பற்றிக்கொண்டது. அதை நான் கண்டு அவிக்கும் பொருட்டுஆடையைக்கசக்கினேனென்ருர். இதைக் கேட்ட அரசன் மிகவும் ஆச்சரியமடைந்து பன்னஹாஜியை நோக்கி நீர் சொல்வது உண்மையானல் இந்தசமயத்தில் அந்தகண்ணபிரானனவர் எவ்வகையான ஆடையைத் தரித்திருக்கிருர்? சொல்லுமென்று கேட்க அதற்கு பச்சை யுடுப்பென்று பன்னஹாஜிசொன்னர். அதைக்கேட்ட அரசன் ராவடாஊருக்கு அரசனுயிருக்கிற தன்னுடைய சட்டகனைக்கொண்டு இந்தசங்கதியின் உண்மை தெரிந்துகொள்ளலாமென்றெண்ணி துவாரகையில் என்ன ஆச்சரியமென்று ஒருகடிதம் எழுதினன். அதற்கு அவன் துவாரகையில் ஸ்ரீகண்ணபிரானுக்கு நடந்த தீபாவளி பண்டிகைகாலத்தில் பகவானுடைய பச்சையங்கியில் நெருப்புப்பற்றிக்கொண்டது. அந்த நெருப்பை பன்னஹாஜிரசபுத்திரரானவர் கசக்கி அணைத்துப் போட்டாரென்று கடிதம் எழுதினன். அதைக்கண்ட குமான்சிங்கு மிகவும் புகழ்ந்து பன்னஹாஜியைப்பார்த்து ஓ! பன்னஹாஜி நீர் இங்கிருந்துகொண்டே துவாரகையில் நடந்த சங்கதியை அறிய வல்லவராயிருக்கிறீர். ஆகையால் நீர் திருமாலுக்கு மெய்யன்பர். உமது பெருமையை என்னல் அளவிட்டுச் சொல்லக்கூடாமையா யிருக்கிறதென்று பலவகையாய்த்தோத்திரஞ்செய்து, அவருக்கு இரண்டுகிராமங்களைத் தத்தங்கொடுத்து இந்த இரண்டு கிராம வருமானத்தைக்கொண்டு சரீரத்திற்குவேண்டிய உணவாதிகளை சுகமாய் நடத்திக்கொண்டு தினந்தோறும் அடியேனுக்கு சேவைசாதித்துக் கொண்டுவரவேணுமென்று மிகவும் பிரார்த்தித்துச் சொன்னர். அதைக்கேட்ட பன்னஹாஜி பக்தரானவர் அரசனைப்பார்த்து நான் அப்படியே செய்கிறேன். நீயும் எப்போதும் ஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்யுமென்று நியமித்தார். அப்படியே அரசனும் அன்றுமுதலாக ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தன பரனுய் வாழ்ந்துகொண்டிருந்தான். பன்னஹாஜியும் ஸ்ரீதுவாரகையில் எழுந்தருளி சுகமே வாழ்ந்திருந்தாரென்று சொல்லி நாபாஜிசித்தரானவர் சித்தர்களுக்கு நற்புத்தியைப் புகட்டி தத்தம் மிருப்பிடங்களுக்கு ஏகவிட்டு தாமும் தமதிருப்பிடஞ்சென்ருர்.

பன்னஹாஜிரசபுத்திரர் சரித்திரம் முற்றிற்று.

---

ஐம்பத்தொன்பதாவது

# ராமசந்திரபட்டர் சரித்திரம்.

துதி கவி.

மணிவண்ணன் திருப்பேரை மகிழ்வுடனே துதிசெய்யுங்
கணிகண்ணன் திருப்புகழைக் காதலித் தென்றும்
துணிவுட னெழுந்து நற்றாய வடிகளை
கணித்துப் பரவுவங் காதலித் தென்றுமே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்று உண்டியாதிகளை யொழித்த அன்று இரவு ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளை உள்ளபடியே நமஸ்காரஞ்செய்து யாவரும் ஒன்றாகக்கூடி தாங்கள்கேட்டிருந்த கதைகளைப்பற்றி பேசிக்கொண்டு நித்திரை செய்துக்கொண்டிருந்தார். பிறகு விடியற்காலத்தில் துயில்விட்டெழுந்து நித்தியக்கடன்களை முடித்துக் கொண்டு ஸ்ரீமந் நாராயணனுடைய அறிகுறியாகிய திருமண்காப்பிட்டு ஸ்ரீபகவானை த்தியானஞ்செய்து யாவரும் ஒன்றாகச்சேர்ந்து அங்கிருந்தும் புறப்பட்டு ஸ்ரீநாபாஜிசித்தரிடம்சென்று அவரைக்கண்டு சுவாமிகளே! தேவரீர் இதுவரைக்குஞ் சொல்லிவந்த பக்தர்கள் சரித்திரங்களைப்போல இன்னுமொரு பக்தருடைய சரித்திரத்தை அடியேங்களுடைய மனமானது பரிசுத்தத்தையடைந்து அதனால் நாங்கள் உஜ்ஜீவிக்கும்பொருட்டு திருவருள் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே ஆகட்டுமென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்,

முன்னொருகாலத்திலே நான்கு வேதங்களிலும் ஆறுசாஸ்திரங்களிலும் வல்லவராயும் சர்வ ஆசைகளிலும் விரக்தியையுள்ளவரும் மண் பெண் என்பவைகளையும், கல் மணி என்பவைகளையும், ஒன்றாகப் பார்ப்பவரும் அக்கினிஹோத்திரஞ் செய்பவரும், ஸ்ரீஹரிபஜனையில் வல்லவரும் தாசரி பீமநதிக்கரையில் அமல்நேர் என்னும் ஊரில் வாழ்பவரும் ராமசந்திரபட்டர் என்னுந் திருநாமமுடையவருமாக ஒருவர் வாசஞ்செய்துக்கொண்டிருந்தார். இவர் அந்த ஊருக்குத் தலைவனாயிருக்கின்ற அரசனுக்கு குருவாயிருந்தும் தாம் பிச்சையெடுத்துத் தின்பதையே விரதமாக மேற்கொண்டிருந்தார். இவர் இவ்விதமாக வாழ்ந்துகொண் டிருக்குங்காலத்தில் ஒருநாள் அரசனுடைய மனைவியானவள் இவருக்கு ஏதாவது கொடுத்து உதவிசெய்ய வேண்டுமென்று நினைத்து இவருடைய தேவியாரைத் தம்மிடம்வரப் பண்ணி உயர்ந்த இரத்தினாபரணங்களை அவரிடத்தில் கொடுத்தனுப்பினர். இதை வாங்கிக்கொண்டு அவருடைய தேவியார் வீட்டுக்கு வருதலும் ராமசந்திரபட்டரானவர் தம்முடைய தேவியார் அரசனுடைய மனைவியாரிடத்தில் வாங்கிக்கொண்டுவந்த இரத்தினாபரணங்களைபார்த்து நாயகி! நீ இந்த உபாதியை ஏன் சுமந்துவந்தாய்? ஓ! இவைகளில் நமக்கு ஆசையிருந்தால் ஸ்ரீமந்நாராயணனனவர் நம்மை வந்து சேரமாட்டார் என்று சொன்னா. அதைக் கேட்ட தேவியார் இவர் சொல்லுவது உண்மையேயாமென்று அவைகளைத் தம்முடைய வீட்டிலிருந்த ஓமகுண்டத்தில் போட்டுப் புதைத்துவிட்டு உபாதி நீங்கியிருந்தார். இதைக்கண்ட ராமசந்திரபட்டரும் உள்ளம் மகிழ்ந்திருந்தார். இந்தச் சங்கதிகளையெல்லாம் அவ்வூரரசனறிந்து ஸ்ரீராமச்சந்திரபட்டரிடத்திற்குவந்து நமஸ்காரஞ்செய்து வணங்கி சுவாமிகளே! என்னுடைய தேவியானவள் உமக்குக்கொடுத்த ஆபரணங்களை யெல்லாம் கொடுத்துவிடும் என்று சொன்னான். அதுகேட்ட இவர் மனம்வருந்தி அவ்விடத்திலிருந்தே ஸ்ரீஹரியைத் தியானித்தலும் அந்த ஆபரணங்களெல்லாம் ஹோமகுண்டத்திலிருந்து வெளிப்பட்டன. அப்படி வெளிப்பட்ட இரத்தினாபரணங்கள் எல்லாம் முன்னிருந்ததைக் காட்டிலும் அதிகமாய்ப் பிரகாசிக்கக்கண்டு அரசனானவன் மிகவும் சந்தோஷமாயிருக்க, ஸ்ரீராமசந்திரபட்டரானவர் அவ்வரசனைப்பார்த்து அப்பா! உன்னுடைய ஆபரணங்களையெல்லாம் நீ எடுத்துக் கொண்டு போகலாமென்று சொன்னார். அதற்கு அரசனானவன் நான் உமக்குக் கொடுத்ததை மறுபடியும் வாங்கமாட்டேனென்று சொன்னான். அதைக் கேட்டபிறகு பட்டரானவர் அங்குள்ள அன்னியர்களை வரவழைத்து அவர்களுக்கு அந்த ஆபரணங்களையெல்லாம்கொடுத்து அவர்களை மகிழ்வித்து அரசனுக்கு உத்தரவுகொடுத்து அனுப்பிவிட்டு பிறகு தாம் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தார் என்றுசொல்லி சித்தர்களுக்கெல்லாம்விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடஞ்சென்று ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்துகொண்டிருந்தார்.

ராமசந்திரபட்டர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ
ஸ்ரீகிருஷ்ணாயநம:

அறுபதாவது

# சுஹக்ஷாபக்தர் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

ஆதியாய் நிறைந்திலகு மனாதியான
வண்ணலே திருமேனி யாலம்போலும்
சோதியே யெங்களை முன்னாண்டவனே
தொல்புவியி லினியேனுங் கருணைவைத்து
பாதியாய் பாற்கடலிற் பள்ளிகொண்ட
பன்னகத்தின் மேலரும் பரமநிதியே
வேதியனே மெய்யன்ப ருள்ளந்தன்னில்
விகசித்த மலரடியை விரும்பினேனே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச்சென்று அன்று இரவு நித்திரைசெய்து விடியற்காலத்தில் எழுந்து இந்திரதிக்கிற்சென்று நித்தியக்கடன்களைமுடித்துக்கொண்டு திருமண்காப்பிட்டு ஸ்ரீமந்நாராயணனை உள்ளபடியே சிந்தனைசெய்து யாவரும் ஒன்றுகூடி ஸ்ரீநாபாஜிசித்தரிடஞ்செல்லுங்காலையில், வழியிலே இதுவரைக்குங் கேட்ட அன்பர்களுடைய சரித்திரங்களையெல்லாம் கவனமாய்ப் பேசிக்கொண்டே போய் ஸ்ரீநாபாஜிசித்தரைக்கண்டு வணங்கி நமஸ்காரஞ்செய்து எங்களுடைய ஆசாரியமூர்த்தியே! தாங்கள் இதுவரைக்கும் சொல்லிவந்த அன்பர்களுடைய சரித்திரங்களால் நாங்கள் சிறிதுமனமொடுங்கப்பெற்றோம். ஆகையால் தேவரீர் இன்னும் ஒரு பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லி எங்களைப் புனிதார்த்தராக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரானவர் நீங்கள் கேட்டவாறே சொல்லுகிறோம் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோசித்தர்களே! முன்னொருகாலத்திலே ஆமதாபாத் என்னும் ஊரிலே சுஹக்ஷா என்னும்பெயருள்ளவர் ஒருவர் இருந்தார். அவர் ஆண் பெண் என்னும் இரண்டுமல்லாத அலியாயிருந்தார். ஆயினும் இவர் ஸ்ரீஹரிபாதத்தியானத்தில் மிகவும் ஆழ்ந்த மனமுள்ளவராயிருந்தார். ஆனால் இவர் தம்மைவந்தடுத்த மற்றப் பேடிகளோடுகூடி வெளிப்பட்டால் மனம் கண்டபொருள்களின்மேல் செல்லுமென்று தான் வீட்டைவிட்டு வெளியில் வருகிற பழக்கமில்லை. ஆயினும் பெண்களைப்போலவே ஆடையுடுப்பார். பொன்முதலிய பொருள்களில் கொஞ்சமும் ஆசையில்லாதவர். ஸ்ரீகண்ணபிரானுடைய திருவடிகளையே தியானித்துக்கொண்டு ஏகாக்கிரசித்தராயிருப்பவர். ஆகையால் இவருடைய மனதின் உண்மைநிலையை யறிந்த கண்ணபிரானவர் தம்முடையசுகுணரூபத்தை அனுதினமும் அவருக்குத் தரிசனம்கொடுத்துக்கொண்டுவந்தார். இப்படியிருக்குங்காலத்தில் ஒரு வருஷத்தில் அந்த ஊரில் மழை பெய்யாமலிருந்தது. அதனால் அங்குள்ள ஜனங்கள் அன்னபானாதிகள் கிடைக்காமல் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அதைக்கண்ட அவ்வூரரசன் காலமழையைப் பெய்விக்க விகற்பங்கொண்டு தவஞ்செய்யத் தொடங்கினான். இவ்வாறாக அரசனும் ஏழுநாள்வரைக்கும் அன்னபானாதிகளை வெறுத்து தவஞ்செய்கையில் ஒருநாள் இரவில் ஸ்ரீமந்நாராயணனானவன் அவ்வரசனுடைய கனவில் பிராமணராக எழுந்தருளி நீ சுஹக்ஷாபக்தரைக்கொண்டு வணங்கித் தோத்திரம் செய்தால் அவருடைய கருணையால் மழைபெய்யும் என்றும் அப்படிச் செய்யாதபட்சத்தில் கொஞ்சமேனும் மழைபெய்யாதென்றும் சொல்லிவிட்டு மறைந்தார். இவர் இவ்விதமாக மறைந்தவுடனே அரசனானவன் விழித்தெழுந்து தன்னுடைய சபையிலுள்ளவர்களுக்குத் தான் கண்ட கனவின் செய்

தியைச் சொல்லினர். அதுகேட்ட அந்தச் சபையாரும் அரசனைப்பார்த்து அரசனே! யாராகவிருந்தாலும் பகவத்பக்தர்களாயிருந்தால் எப்பொழுதும் அவர்களே சிறந்தவர்களாவார்கள். ஆகையால் அவர்களை வணங்குவதனால் நமக்கு ஒரு குறைவும் இல்லை. ஆகையால் லோகாபேட்சத்தின்பொருட்டு அவரை வணங்கலாம் என்றுசொன்னார்கள். அதைக் கேட்ட அரசனானவன் பக்தரைவணங்கச் சம்மதித்துப்போய் வணங்கி ஒ சுவாமி! நான் இவ்விதமாகக் கனவுகண்டேனென்று சொன்னார். அதற்கும் பக்தரானவர் பகவானே! ஆணாகவும் பெண்ணாகவுமல்லாமல் அலியாயிருக்கிற என்னை சிறந்த வேந்தனானவன் வந்து வணங்கும்படி செய்தாயே? ஒ கண்ணபிரானே! இது உனக்குத் திருவுளம்போலும். இந்தப் பெருமை எனக்கு ஏன் கொடுத்தாய்? என்று இப்படி சொல்லிக்கொண்டும் ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டும் முற்றத்தில்நின்று மழை பெய்ய வேண்டுமென்று சிந்தனைசெய்தார். இவ்விதமாக நெடுநேரம் நின்று சிந்தித்தும் மழை பெய்யவில்லை. அப்போது பக்தரானவர் மனவருத்தத்தோடு கண்களைமூடிக்கொண்டு ஒரு ஏகாந்தஸ்தானத்திலிருந்து ஒ பகவானே! அரசனுடைய கனவில் வேதிய வடிவாய்ப்போய் என்னை வணங்கும்படி அரசனுக்கு உத்தரவுகொடுத்து அவன் அப்படியே என்னைவந்து வணங்கிப் பிரார்த்தித்தார். நானே அந்தப் பிரார்த்தனைக்கிரங்கி உன்னைத் தியானஞ்செய்தேன். இந்தச்சமயத்தில் நீ இப்படி செய்வது உனக்கு நீதியாகுமா? என்று பலவாறுவேண்டியும் மழை பெய்யாமலே யிருந்தது. அதைக்கண்ட பக்தர்மனம்கோபங்கொண்டு இன்றுமுதலாக ஸ்ரீலட்சுமிநாதனை நான் நினைக்கவேமாட்டேனென்று சொல்லித் தன்னுடைய மூக்கிலணிந்த நத்தைக் கழற்றி எறிந்து கையிலணிந்திருந்த வளையலை உடைக்கப்போகும்போது லோகரக்ஷகனாகிய பகவானுடைய கிருபையால் ஆகாயத்திலிருந்து மழை பெய்தது. இந்த அதிசயத்தைக்கண்ட யாவரும் சந்தோஷித்துப் பக்தரைக் கொண்டாடினார்கள். அரசனும் வணங்கி ஒ சுவாமி! அடியேன் தருவதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றுபிரார்த்தனைசெய்தார். அதுகேட்ட பக்தரானவர் எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை? இனி இந்தப் பொய்யுடம்பை நீக்க நினைத்தேன். ஆகையால் எனக்குச் சமாதிகட்டித் தரவேண்டும் என்று சொன்னார். அப்படியே வேந்தனும் பக்தருக்கு ஒரு சமாதி கட்டிக்கொடுக்க, பக்தரும் ஸ்ரீ பகவானைத் தியானம்செய்தார். அதைக்கண்ட பகவானவர் தக்ஷணமே யெழுந்தருளி இவருக்கு அபயந்தந்ததை யாவரு முணர்ந்துவந்து புஷ்பம் அபீர்ப்பொடி முதலியவற்றை இவர்மீதிறைத்து ஸ்ரீ ஹரிபஜனை செய்து ஆனந்தக்கூத்தாடினார்கள். பக்தரானவர் அவர்களைப்பார்த்து என்னுடையதீக்ஷை பெறுபவர்கள் பிறவிக்கடலைக் கடப்பார்கள் என்று சொன்னார். இப்படிச்சொன்னதைஒருவருங்கவனிக்காம லிருந்தார்கள். இதைக்கேட்ட ஒரு அநாதன் மாத்திரம் அவரை வணங்கிநின்றான். அவர் அவனுக்கு உபதேசம்செய்து தம்முடைய நத்தை அவனுடைய மூக்கில்குத்தி கைவளையலையும் அவனுடைய கையில் அணிவித்து ஆசீர்வாதம்செய்து சமாதிகுழியில் இறங்கினார். இவரது தீக்ஷையைப்பெற்ற சீடனானவன் நத்து வளையல் ஆடை என்பவற்றைக் கொண்டணிந்து ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனம்செய்து கொண்டிருந்தார் என்றுசொல்லி மற்றச் சித்தர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடம் சென்றார்.

சுஹக்ஷாபக்தர் சரித்திரம் முற்றிற்று.

---



அறுபத்தோருவது

# நீளோபாபக்தர் சரித்திரம்.

துதி கவி.

காள நிறம்போல கண்ணனைத் துதிப்பவர்
காள நிறம்போறு மரசனை விலகுவார்
நாளை வருபவர் நமனுல கேகுவர்
காளை யாயினும் கடவுளை வணங்குவாம்.

இவ்விதமாகச் சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச்சென்று அன்று இரவு ஸ்ரீமந் நாராயணனுடைய திருக்கருணைவிசேஷத்தை உள்ளன்போடு தியானம் செய்துகொண்டிருந்து சிறிதுநேரம் துயின்று சூரியோதயத்தில் எழுந்து அவரவர்கள்வழக்கப்படி நித்தியகடன்களை முடித்துக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனை உள்ளபடியே சிந்தித்து யாவரும் ஒன்ருகச்சேர்ந்து நாபாஜி சித்தர் இருக்கின்ற இடத்தை எதிர்நோக்கித் தெண்டன் சமர்ப்பித்துக்கொண்டு உள்ளன்போடு சென்று ஸ்ரீ நாபாஜிசித்தரைக்கண்டு சாஷ்டாங்கமாக வணங்கி இதுவரைக்கும் சொல்லிவந்ததுபோலவே இன்றைக்கும் ஒருபக்தர்சரித்திரத்தைத் திருவாய்மலர்ந்தருளவேண்டும். எம்முடைய ஆசாரியமூர்த்தியே! என்று குறையிரந்து வேண்டிக்கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே ஆகட்டுமென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்ருல்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் சர்வ வளங்களும் நிறைந்த பிம்பளநேபி என்னும் திருநாமத்தையுடைய ஒரு ஊரிருந்தது. அதில் நீளோபா என்னுந் திருநாமத்தையுடைய ஒரு பக்தர் இருந்தார். அவர் அகங்கார மமகாரங்களை அறவே யொழியப்பெற்றவராயும், எப்பொழுதும் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனத்தை உள்ளன்போடுசெய்ய விருப்பங்கொண்டவரும் ஸ்ரீஹரிதாசர் சரித்திரங்களை எப்போதும் புகழ்ந்துபேசுபவரும் குடும்பத்தைத் தம்முடையதென்று மனதில் நினையாதவரும் யாசக விருத்தியினுலேயே திருமாலடியவருக்கும் தரித்திரர்களுக்கும் பக்தியோடு உதவிசெய்து தம்முடைய குடும்பத்தை மகிழ்விப்பவருமாக இருந்தார். இவருடைய கன்னிகைக்கு அந்தச்சமயத்தில் மணப்பருவஞ் சமீபித்தது. அதைக்கண்ட இவருடைய மனைவியார் இவரைப்பார்த்து நமது உறவினர் யாவரும் செல்வப்பெருக்கோடு கூடிவாழ்கின்ருர்கள். நாமோ எழைகளாகவிருக்கின்ருேம். அவர்களுக்கும் நமக்கும் எவ்விதத்தில் பொருத்தமாகும் என்று சொன்னுர். அதுகேட்ட தாசரானவர் பெண்ணே! நீ யாதொன்றுக்கும் பயப்படவேண்டாம். நம்மைக் காப்பாற்ற ஸ்ரீகஜேந்திரவரதரிருக்கின்ருர். அவர் நம்மைக் கைவிடாமல் காத்து இரட்சிப்பார். ஆகையால் நீ நம்முடைய உறவினருக்கு எந்தவிஷயத்திலும் அஞ்சவேண்டாமென்றுசொன்னுர். இப்படியே இவர்கள் பேசிக்கொண்டு வாழ்ந்திருக்கும்நாளில் விவாகதினத்துக்கு முன்னுளில் ஸ்ரீபண்டரிநாதன் ஒரு கிழவேதியனுகித் தன் கையிலுள்ள ஜீரணவஸ்திரத்தில் சமையலுக்கேற்ற சில பதார்த்தங்களை முடிந்துகொண்டு தாசருக்கெதிரே வந்துநின்று நான் தூர்ப்பலன். எளியவன் சமையலுக்குரிய சில பதார்த்தங்களைக் கொண்டுவந்தேன். அவைகளைச் சமைக்கச் சக்தியில்லாதவனுயிருக்கிறேன். ஆதலால் அவைகளைச் சமைத்துக்கொடுத்தால் பசிதீர வுண்பேன் என்று சொன்னுர். அதுகேட்ட தாசர் வேதியனைப்பணிந்து நீர் ஒரு பதார்த்தமும் கொடுக்கவேண்டியதில்லை. ஸ்ரீ பண்டரிநாதனுக்கு நிவேதிக்கும் பிரசாதத்தைக்கொடுக்கிறேனென்று சொல்லி அவரைக் கூப்பிட்டார். அதற்கு அந்த வேதியன் பண்டரிநாதனுக்கு நிவேதித்து நீர்கொடுக்கும் பிரசாதம் கொஞ்சம். அதையுண்டு என்னுடைய பசி தணியாது என்று சொன்னுர். அதைக்கேட்ட தாசரானவர் தமது மனைவியாரைப்பார்த்து இந்த வேதியருக்குச் சிறந்த திவ்வியான்னங்களைச் சமைத்து அன்போடு உண்பிக்க வேண்டுமென்று நியமித்தார். மனைவியாரும் அப்படியே ஆகட்டுமென்று சொல்லினர். அதற்குவந்த வேதியர் அவரைநோக்கி நான் கொண்டுவந்த இந்தப்பாகம் என்பொருள். இதனை உமது பெண்மணத்துக்கு சேகரிக்கப்பட்ட பொருள்களோடு சேர்த்துவைத்தால் மனமொத்து நீர் எனக்கிடும் அமுதை நான் இனிமையாக உண்பேன் என்று சொன்னுர். அப்பொழுது அந்தத்தாசருடைய மனைவியார் நாம் இந்த வேதியர் கொண்டுவந்த வஸ்துக்களை வாங்கிக் கொள்ளாமல் இவர் அமுதுசெய்யமாட்டார். அத

னுல் தீங்கு நேரிடுமென்று ஆலோசனை செய்து அந்தக் கிழப்பிராமணர் கொடுத்த வஸ்துக்களையெல்லாம் எடுத்துக்கொண்டு விவாக விஷயமாய்ச் சேகரித்த வஸ்துக்களின்நடுவேவைத்தார். அதைக்கண்டு இடைவிடாமல் ஹரிநாம சங்கீர்த்தனம் செய்து கொண்டிருப்பவராகிய தாசரானவர் இவர் விஷயத்தில் மிகவும் அன்பு பாராட்டினர். அந்தச் சமயத்தில் அந்தப் பிராமணனுனவன் தாசரைப்பார்த்து தாசரே! பகவானுக்கு நிவேதனம் செய்த பிரசாதத்தைமுன்னேகொடுத்தால் அதையுண்டு கொஞ்சம் பசி தணிந்திருப்பேன். அப்பால்சமையலாகிற உணவுகளை வயிரார உண்பேன் என்று சொன்னர். அப்படியே தாசரும் பகவானுக்கு நிவேதனம் செய்த பிரசாதத்தை மனவிருப்பத்தோடு அந்தப் பிராமணருக்குக் கொடுத்தார். அவரும் அதை விரும்பி உண்டருளினர். பிறகு தாசரானவர் தமது மனைவியைப்பார்த்து, பெண்ணே! நீ சீக்கிரமாய் சமையல் செய்யவேண்டுமென்று உத்தரவுகொடுத்தார். அவ்வாறே அவருடைய மனைவியாரும் அதிசீக்கிரத்தில் சமையல்செய்து அந்தப் பிராமணருக்குப் பரிமாறினர். அதை அந்த கிழப்பிராமணரானவர் வயிறு நிறைய திருவமுதுசெய்தார். அதன்பிறகு தாசரும் உண்டருளினர். அன்று இரவில் பிராமண ரூபங் கொண்டுவந்த பகவானுனவர் அந்தத் தாசருடைய முகத்தைப்பார்த்து உங்களுடையபெண்ணின்விவாகம் நாளைக்கு நேர்ந்திருப்பதால் நான் அந்தவிவாக காரியங்களெல்லாவற்றிற்கும் முன்னின்று முடிவளவும் உதவிசெய்து மணப்பந்தலிலேயே உண்ணுதற்கு என்னுடைய மனமானது விரும்புகின்றது என்றுசொன்னர். அதைக்கேட்ட மெய்யன்பராகிய நீளோபாபக்தரும் அப்படியே செய்யலாமென்று சொல்லி அவரைவணங்கினின்ருர். இவ்வாறேஅன்று இரவு நீங்கினது; பொழுதும்விடிந்தது. விடிந்த உடனே வேதியர் சீக்கிரமாகவெழுந்து மனைமுழுதும் விளக்கி மெழுகி காவடியைக் கொண்டுபோய் நீர்மொண்டுகொண்டு வந்து வீட்டில் செய்யவேண்டிய வேலைகளையெல்லாம் செய்து கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் மாப்பிள்ளையும் உறவினராகிய ஐந்நூறுபேரும் கொண்டுவந்துவைத்த பண்டங்களில் வேண்டியவற்றை எடுத்துக்கொண்டு சமையல் செய்து பலகாரவகைகளோடு வந்தவர்களெல்லோரும் வயிரார உண்ணும்படி பரிமாறி, அவர்களெல்லாரும் உண்டபிறகு எச்சில் இலைகளையும் தானே எடுத்தெறிந்து எச்சலிடம் பூசி கைகால்கள் சுத்தி செய்துகொண்டு சந்தனம் புஷ்ப தாம்பூலாதிகளுங் கொடுத்து மற்றுமுள்ள குற்றேவல்களுஞ்செய்தார். இவ்விதமாக இந்தப்பிராமணர் செய்த பணிவிடைகளெல்லாவற்றையும் கண்டு மனமகிழ்ந்து ஓ! சுவாமி! உம்முடைய நாமதேயமென்னவென்று கேட்டார். அதற்கு அந்த வேதியரானவர் என்னுடைய பெயர் விட்டலன் என்று சொல்லி ஐயா! தாசரே! உன்னுடைய பெண்ணின் விவாகத்தில் நான் வயிருரவுண்டு என்னுடைய இளைப்புதீர்ந்தேனென்று சொன்னர். அதுகேட்ட தாசரானவர் மிகவும் ஆசையுடன் இந்த வேதியருக்கு ஒருவஸ்திரங் கொடுக்கவேண்டுமென்று நினைத்திருந்தார். பிறகு நான்குநாள் கழிந்து ஐந்தாவதுநாளில் வந்தவரெல்லாரும் போய்விட்டபிறகு சிறந்த வஸ்திரமொன்றைத் தருவித்து விடோபாவுக்குக் கொடுக்கும்பொருட்டு அவரையழைக்க கலியாணவேலை முழுதும் நிறைவேற்றின அந்தக் கிழவேதியர் காணப்படாமையால் தாசரானவர் ஆலோசனைசெய்து இங்குவந்து நம்முடைய பெண்ணின் மனம்போலச் சற்றும்மிகுந்த அக்கரையுடன்நிறைவேற்றினவர்ஸ்ரீகண்ணபிரானேயென்று தீர்மானித்து பகவானே இவ்விதமாக வந்து நம்முடைய வீட்டுவேலைகளையெல்லாஞ்செய்ததனுல் நான் கொடிய அபராதியானேனென்று மனமிரங்கி மிகவும் தளர்ந்த மனதுடன் நித்திரை செய்துவிட்டார். அந்த நித்திரையில் அவரது கனவில் ஸ்ரீபண்டரிநாதன் எழுந்தருளி இடுப்பில்கையைவைத்து நின்றுகொண்டு தாசரே! உன்னுடைய அன்புக்கு நான் மிகவும் சந்தோஷமடைந்தேன் ஆயினும் உன்னுடையஉண்மையை உலகத்தார்களெல்லாம் உணரும்பொருட்டு நான் இவ்விடத்தில் எப்போதும்நிற்பேனென்றுசொல்லித் தம்முடைய திருக்கரங்களை இவருடைய சிரசில் வைத்தருளினர். உடனே தாசரானவர் துயில்விட்டெழுந்து பார்த்தனும் பகவானுனவர் கனவிற்கண்ட நிலைபோலவே எதிரே நின்றுகொண்டிருந்தார். அதைக்கண்டு தாசரானவர் மிகவும் உள்ளன்போடு வணங்கி வாழ்த்தி ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம்செய்து அவருடைய திருவடிகளைப் பூஜைசெய்து கொண்டிருந்தார். இப்போது அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவிட்டலமூர்த்தியை விரும்பி வருஷந்தோறும் பங்குனிமாதம் கிருஷ்ண பட்சம் துவிதியைதினத்தில் மஹோற்சவம் நடத்தப்பட்டு வருகின்றதென்று சொல்லி நாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடஞ் சென்ருர்.

நீளோபாபக்தர் சரித்திரம் மூற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

அறுபத்திரண்டாவது

# ஹரி அனந்தவைஷ்ணவர் சரித்திரம்.

துதி கவி.

சூரிகுலத்தைக்கையேந்துந் தூயமாதவனே
சுரர்களுக்குத்தலைவனே துன்பர்க்கு
மருமகளைமார்பகத்தில் வைத்திருந்தவனே
மாய்கையொழிதிரு நாராயணனும்வள்ளலே
குருபரனுவெப்பொழுதுங் குடிகொள்கோமானே
கோதகற்றுமெங்கள் குலக்கொழுந்தேநல்விருந்தே
ஹரியநந்தவைஷ்ணவரின் கதைசொல்லவென்றும்
ஆதரித்தவிறைவனே திருவருள்செய்வாயே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்று மாலை தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்று உண்டியாதிகளை யெடுத்துக்கொண்டு துயின்று விடியற்காலையிலெழுந்து ஸ்ரீகண்ணபிரானைத் துதிசெய்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு உண்டியாதிகளைமுடித்து ஸ்ரீமந்நாராயணனை உள்ளபடியே துதிசெய்துகொண்டு யாவரும் ஒன்றுய்ச் சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தர் எழுந்தருளியிருக்கிற இடத்தை எதிர்நோக்கித்தெண்டன் சமர்ப்பித்துக் கொண்டு ஒருவரையொருவர் பக்தியின் மகிமையைப்பற்றி உலாவிக்கொண்டும் அநேக காவதங்களைக் கடந்து ஸ்ரீநாபாஜிசித்தர் இருக்குமிடத்தை யடைந்து சாஷ்டாங்கமாக வணங்கி எழுந்து கைகட்டி வாய்பொத்தி பின்னர் ஒருவாறுதெளிந்து அநாதி மூர்த்தியே! தாங்கள் இதுவரைக்குஞ் சொல்லிவந்ததுபோலே இன்றைக்கும் ஸ்ரீஹரி அனந்த வைஷ்ணவர் சரித்திர வைபவத்தைச் சொல்லியருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே சொல்லுகிறேனென்று ஸ்ரீமந்நாராயணனைச் சிறிதுநேரம் திரிகரணசுத்தியோடு சிந்தித்துச் சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்:—

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்திலே இவ்வுலகத்தில் பிரசித்தி பெற்றதாகிய ஒரு ஊரிருந்தது. அதில் ஸ்ரீஹரி அனந்த வைஷ்ணவர் என்பவர் ஒருவரிருந்தார். அவரோ எதிராஜர் என்னும் ஆசாரியர் ஏற்படுத்தின ராமானுஜசித்தாந்தத்தை அநுசரித்து நடப்பவராகவும் ஸ்ரீஹரிபூஜா துரந்தரராகவும் எல்லா உயிர்களின்மேலும் பேரருளுள்ளவராகவும் சர்வஞ்ஞராகவும் ததியாராதனத்தில் மிகவும் விருப்பமுள்ளவராகவும் பரமபக்தி நிஷ்டையுள்ளவராகவும் இருந்தார். அவர் இப்படியிருக்கின்ற காலத்தில் அநேக அன்பர்கள் இவரைவந்து அடுத்தார்கள் அவர்களில் ஒருவன்மாத்திரம் இவரிடத்தில் மிகவும் பக்தியுள்ளவனாய் இவருடைய சேவை செய்வதே பரமபிரயோசனமென் றெண்ணி நாள்தோறும் அவ்வூரில் யாசகம்செய்து ஒரு படி மாவைச் சேகரித்துக்கொண்டு வந்து இவருக்கெதிரேவைத்து வணங்குவான். இவரோ அந்த மாவைத் தம்மை நாடி வருகின்ற சாதுக்களுக்கெல்லாம் உபயோகித்து வருவார் இவ்விதமாகவே நெடுநாள் நடந்துகொண்டிருக்க ஒருநாள் சிறந்த ஞானவானுகிய ராமாநந்தர் என்பவர் அனேக சீடர்களோடு அவ்வூருக்குவந்து ஒரு இடத்தில் தங்கியிருந்தார். ஹரியநந்தருடைய சீடர் நாள்தோறும் மாவை யாசித்துவருகிற வழக்கம்போலே அன்றைக்கும் யாசிக்கப்போய் வீடுகள்தோறும் யாசித்து வருகையில் ராமாநந்தர் இருக்குமிடத்தைப் பார்த்து அவரை மிகுந்த விருப்பத்துடன் வணங்கினர். அந்த ராமாநந்தர் இவரைப்பார்த்து இவன்சற்குருசேவை செய்வதில் மிகுந்த விருப்பமுள்ளவனென் றுணர்ந்து ஐயோ! இவன் நாளைய உதயத்தில் இறந்துபோகும்படியான அற்பாயுசுள்ளவனு யிருக்கின்றனே

யென்று விசனப்பட்டார். அப்போது இவன் மறுபடியும் அவரை நன்றாய்வணங்கி அந்தச்செய்தியை நன்றாயறிந்துகொண்டு தன்னுடைய ஆசாரியராகிய ஸ்ரீஹரியாநந்தரிடத்திற்போய் ஓ சுவாமி! இவ்வூரில் ராமாநந்தர் என்கிற ஒரு ஞானவான் வந்திருக்கிறார். அவர் என்னைப்பார்த்து நாளைய உதயத்தில் இறந்துபோகத்தக்க அற்பாயுசு உடையவனாகவிருக்கின்றாயேயென்று விசனப்பட்டார் என்று சொல்லி சுவாமி! நானோ எந்தக்காலத்திலும் தேவரீருடைய சேவை செய்துகொண்டிருக்க வேண்டுமென்றுவிரும்பியிருந்தேனே? இப்பொழுது அந்த எண்ணத்துக்கு மாறுபாடாக நாளை உதயத்தில் இறந்துபோகப் போகிறேனே? நான் எப்படிப்பட்ட நிர்ப்பாக்கியன் என்றுசொல்லி ஓவென்று கதறியழுதான். அதைக்கண்ட ஹரியநந்தர் அந்த சீடனைப்பார்த்து அப்பா! நீ அழவேண்டாம். பகவானுடைய அனுக்கிரகத்தால் உனக்கு ஒரு குறைவும் உண்டாகமாட்டாது. நாளைக்கு நீ இறந்துபோகமாட்டாய் என்று மிகுந்த தைரியமாயும் சந்தோஷமாயும் இரு என்று சொல்லி மறுநாள் உதயகாலத்தில் எழுந்து நீராடி சீடர் அருகே யிருக்கும்படி அவருக்கு நியமித்து ஸ்ரீலட்சுமிநாதராகிய பகவானைத் தம்முடைய மனதில நிறுத்தி தியானம் செய்துக்கொண்டிருந்தார். அப்போது பகவானானவர் தமது திவ்வியாயுதங்களாகிய சங்கு சக்கராதிகளுடன் கிரீட நூபுராதி அலங்காரத்தோடும் பீதாம்பரதாரியாய் இவருக்குப் பிரத்தியக்ஷமானார்; அவ்விதமாக எழுந்தருளின பகவானை இவர்கண்டு சேவித்து அவருடைய திவ்விய விக்கிரக சௌந்தரியத்தில் ஈடுபட்டு மனமானது அழுந்தியிருக்கையில் தமது சீடனுடைய உயிரைக் கவாவதற்கு எமன்வந்து பகவானும் ஹரியநந்த பக்தரும் மனம் களித்திருப்பதையும் பகவானுடைய சக்கராயுதமானது மேலே சுழன்றுகொண்டிருப்பதையுங்கண்டு நெடுநேரம் சமயம் பார்த்திருந்தான். அப்படியிருந்தும் சமயம் வாய்க்காமையாலும் சீடனுடைய ஆயுளளவு அதிக்கிரமித்ததினாலும் தன்னுடைய ஆணையைச் செலுத்துதற்கு இடமில்லாமற் போய்விட்டான். அதன்பின்னர் ஹரியநந்தர் நெடுநேரம் யோகநிஷ்டையில் அமர்ந்திருந்தார். அப்போது இந்தச் சீடர் உயிர்பிழைத்து அவருக்கு அருகேபோய் ஓசுவாமி! என்னுடைய மரணகாலம் கடந்து நான்கு ஜாமமாய்விட்டது என்று சொன்னார். அதைக்கேட்ட ஹரியநந்தர்விழித்துச் சீடனை நோக்குதலும் சீடனும் அவருடைய திருவடிகளை வணங்கினான். பிறகு மறுநாள் காலையிலெழுந்து வழக்கம்போல் மாவை யாசகம் செய்யும்பொருட்டுப்போனான். அப்போது ராமாநந்தர் இவனைப் பார்த்து நீ எப்படி உயிர்பிழைத்தாயென்று வினவினார். இவன் தன்னுடைய ஆசாரியருடைய கருணை விசேஷத்தால் பிழைத்த சங்கதியைச்சொல்லுதலும் ராமாநந்தர் மிகவும் அதிசயங்கொண்டு அங்கு நின்றும்வந்து ஹரியநந்தரை வணங்கினார். இவரும் அவரை வணங்கினார். பிறகு இருவரும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டார்கள். பிறகு ராமாநந்தர் ஹரியநந்தரைப்பார்த்து உம்முடைய பக்திக்கு ஒரு அளவில்லை. உம்முடைய சீடனுடைய உயிரை நீங்காமற்காத்தருளினீர். ஆகையால் உமக்குசமான மானவர் ஒருவருமில்லையென்று தோத்திரஞ்செய்தார். அப்போது ஹரியநந்தர் ராமாநந்தரைப்பார்த்து ஓ ராமாநந்தரே! ஸ்ரீ சக்கரபாணியாகிய பகவானுடைய கிருபையினால் எப்படிப்பட்ட அசாத்தியமான காரியமும் முடியுமென்று சொன்னார். அதைக்கேட்ட ராமாநந்தர் நன்றென்று விடைபெற்றுக்கொண்டுபோய்த் தம்மிடத்தை யடைந்தார். ஹரியநந்தரும் ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு சீடனுடனே சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தார். என்று சொல்லி அவர்களுக்குப் பக்தியை வற்புறுத்தி உத்தரவுகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடம் சென்றார்.

ஹரி அனந்தவைஷ்ணவர் சரித்திரம் முற்றிற்று.

---

அறுபத்திமூன்றுவது

# ஓகருசாவ்கார் சரித்திரம்.

துதி கவி. ஆகரமன்னத்திலான தென்றுரன், சாகரவாழ்வினில் தங்கிமயங்கயே
சேகரமானவன் தீமையிலொழியவே ஒகருசாவ்காருண்மை யுரைசெய்வாம்.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்று இரவு தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று உண்டிவினை யொழித்து சிறிது துயின்று வைகறையிலெழுந்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு திருமண்காப்பிட்டு போஜனம் செய்து யாவரும் ஒன்றாகச்சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தரிருக்கின்ற இடத்திற்குவந்து அவரைக்கண்டு சாஷ்டாங்கமாய்வணங்கி எழுந்து நின்று ஓ சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் சொல்லிவந்ததுபோல இன்றைக்கும் ஒகருசாவ்கார் சரித்திரத்தைச் சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அதுகேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே யாகட்டுமென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்;

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்திலே உத்தரதேசத்திலே ஒரு ஊரில் ஒகருசாவ்கார் என்றொரு வணிகரிருந்தார். அவர் அன்பு, ஞானம் முதலிய ஆத்மகுணங்கள்நிறைந்திருக்கின்ற உத்தமர். அவருடைய மனைவியாரோ கற்பிற் கருந்ததிபோன்றவரும் வருகிற சாது ஜனங்களை இனியில்லா அன்பினுடன் பூஜிப்பவராகவும் உலகிலுள்ள சேதனசேதன உயிர்களின்மேல் மிகுந்த அருளுள்ளவராகவுமிருந்தார். இப்படியிருக்கின்ற இவ்விருவரும் அக்கண்ணபிரானை நாள்தோறும் துதிசெய்துகொண்டும் நாள்தோறும் பத்து ஏழைகளுக்கு அன்னம் பகிர்ந்துண்டும் பாவமில்லாத நல்வழியால் திரவியத்தைச் சம்பாதித்துக்கொண்டு மிருந்தார்கள். இவ்விதமாக இவர்கள் நடந்துகொண்டு வருங்காலத்தில் ஒருநாள் பகவானனவர் இவ்விருவரையும் பரிசோதிக்க வேண்டுமென்று திருவுளம்கொண்டு ஒரு சாதுவின்வேஷத்தைத் தாங்கிவந்து, ஒகருசாவ்காரின் மனையாளைப்பார்த்து அம்மணி! உன்னுடைய நாயகர் எங்கேயென்று கேட்டார். அதற்கு மனைவியார் என்னுடைய நாயகரானவர் சந்தைக்குப்போயிருக்கிறார். ஆனால் விரைவாகவருவார். நீங்கள் இருங்களென்று சொல்லி ஆசனம்கொடுத்து உபசரித்தார். அப்போது பகவானனவர் எனக்குப்பசிமிகுந்திருக்கிறது. நீங்களோ இவ்விடத்தில்வருகிற சாதுக்களுக்கு அன்னமளித்து உபசரிக்கிறவர்களென்று எவவிடத்தும் பிரசித்தமாயிருப்பதால் இவ்விடத்தில் வந்தேனென்றுசொன்னர். அதைக்கேட்ட அந்தச் சாவ்காரின் மனைவியார் சீக்கிரமாகக் கடைக்குப்போய்க் கையில் காசில்லாமையால் தம்முடைய நத்தை குத்தகைவைத்து அரிசி பருப்பு முதலியவற்றைவாங்கிக்கொண்டுவந்துசமையல்செய்துஅன்னமிடுதலும் அதையுண்பவராகிய பகவானனவர் நான் வெகுநாட்களாக அன்னமில்லாமல் பசியால் வருந்தினேன். அப்போது இன்று நீ இட்ட அன்னத்தால் என்னுடைய பசிமுழுதும் நீங்கிவிட்டது என்று சொல்லி வயிறுரவுண்டு கால் கைகள் சுத்திசெய்துக்கொண்டபிறகு வீட்டுக்குள்ளே புகுந்து அடுக்குப்பானைகளெல்லாவற்றையும் தம்முடைய திருக்கரங்களால்தொட்டு தாயே! இன்றுமுதல் இந்த அடுக்குப்பானைகளில் உனக்குவேண்டும் பொருள்களெல்லாம் குறையாமல்நிறைந்திருக்குமென்றும் இதுபோலவே எப்பொழுதும் சாதுக்களை உபசரிக்கக்கடவாயென்றும் சொல்லிவிட்டு மறைந்துபோய்விட்டார். மறுநாள் சாவ்கார் வந்தவுடனே இங்கே நேற்று நடந்த சங்கதிகளையெல்லாம் மனைவியார் சொல்லக்கேட்டு மனம் சந்தோஷத்துடனிருந்தார். இப்படியிருக்கும் நாளில் ஒருநாள் அநேக சாதுக்கள் இந்தச்சாவ்காரிடம்வந்தார்கள் அவர்களை அவர்கண்டு இத்தனைபேருக்கும் அன்னமிடவேண்டுமானல் அதிகமானபொருள்வேண்டுமே! ஆனாலும் முன்னே ஒருசாதுவானவர் சொல்லிவிட்டுப் போனதைப் பரிசோதிப்போமென்றுபோய் அடுக்குப்பானையொன்றைத் திறந்து பார்த்து அதில் அநேக திரவியங்கள் நிறைந்திருப்பதைப் பார்த்து தமக்கு வேண்டியவரைக்கும் எடுத்துக்கொண்டுபோய் எல்லாப் பொருள்களையும் வாங்கிக்கொண்டு வந்து சமையல் செய்துவந்த சாதுக்களெல்லாருக்கும் அமுதுண்பித்துமகிழ்வித்து அனுப்பினபிறகு வணிகர் தம்முடைய மனைவியாருடைய முகத்தைப்பார்த்து நானில்லாத சமயத்தில் இங்கே வந்தவர்யாரோ? அவரை ஒருசாதாரணமான சாதுவென்று நினைக்கவேண்டாம். அவர் சாக்ஷாத் பகவானேயல்லாமல் வேறல்ல. ஆகையால் உனக்கெதிரேவந்து உன்னைப்புநிதையாக்கினபகவான் எனக்கெதிராக ஏன் எழுந்தருளவில்லை? என்று கேட்டுப் பரிதாபங்கொண்டு ஓ! பகவானே! பக்தவச்சலா! உம்மைக்கண்டு களிக்கவேண்டுமென்று என்னுடைய கண்கள் மிகவும் துரிதப்படுகின்றன. ஆகையால் தேவரீர் காட்சி தந்தருளவேண்டுமென்று தோத்திரம் செய்தார். இப்படியாக இந்த ஒகருசெய்த தோத்திரத்துக்குப் பகவானனவர் மனமிரங்கி சங்குசக்கர சதுர்ப்புஜ பீதாம்பர கிரீடநூபுராதிகள் விளங்கும்படி இவருக்குப் பிரத்தியக்ஷமானர். ஆதலும் ஒகருவானவர் பகவானுக்குசோடசோபசாரங்களும் செய்து திருவடிகளை வணங்கித் தோத்திரம் செய்தார். அதுகேட்ட பகவானும் இவருக்கு அபயந்தந்து மறைந்தருளினர். பிறகு சாவ்காரானவர் நம்மை நாடிவருகிற சாதுக்களுக்கெல்லாம் அமுதளித்து உள்ளமகிழ்வித்து தமது மனைவியாரோடும் ஸ்ரீகண்ணபிரானை ஸ்மரித்துக்கொண்டிருந்து சுகமாக வாழ்ந்துக்கொண்டிருந்தாரென்றுசொல்லி மற்றச் சித்தர்களுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடம் சென்று ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்துக்கொண்டிருந்தார்.

ஒகருசாவ்கார் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணுயநமஃ

அறுபத்திநான்காவது

# ராமாபாயி சரித்திரம்.

துதி கவி.

சோமன்முதலிய சொல்லருந்தேவரும்
மாமன்முதலிய மாய்கையால்நைந்தவர்
காமன்முதலிய களையால்வருந்தினர்
ஏமன்கடந்திட வெண்ணுவருன்பதமே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று அன்று இரவு ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை நமஸ்காரம்செய்துகொண்டிருந்து சிறிதுநேரம் துயின்று பொழுதுவிடிந்தவுடனெழுந்து நித்திய கடன்களை முடித்துக்கொண்டு திருமண்காப்பிட்டு உண்டியாதி வினைகளை காலத்திலொழித்து யாவரும் ஒன்ருகச் சேர்ந்து திருநாராயண சுவாமிகளை உள்ளன்போடு தியானம்செய்துகொண்டு ஸ்ரீநாபாஜிசித்தரிருக்குமிடத்தை எதிர்நோக்கி நமஸ்காரம் செய்துகொண்டு அவர் இருப்பிடத்தை யடைந்து அவரைக் கண்டு வணங்கி நமஸ்காரம் செய்து ஒ! ஆசாரிய சுவாமிகளே! தேவரீர் இதுவரைக்கும் அடியார்களுடைய கதைகளை உள்ளன்போடுசொல்லி எங்களை ஈடேற்ற உத்தேசம் செய்தீர். அதுபோலவே இன்றைக்கும் எங்களுடைய மனதை புநிதமாக்கித் திருவருள் செய்தற்குரிய ஒரு அடியவர் சரித்திரத்தைத் திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அதுகேட்ட நாபாஜிசித்தரும் சித்தர்களே! நீங்கள் கேட்டதுபோலவே சொல்லுகிறோம் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்:—

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னெருகாலத்திலே இந்த நிலவுலகத்தில் வடபூமியிலே காசியிலே சந்தராஜனென்று ஒரு அரசன் ராஜ்ஜிய பரிபாலனம் செய்துகொண்டிருந்தான். அவனே சாதுபூஜை செய்வதில் மிகவும்சிறந்தவன். அவனுக்குராமாபாயி என்றுஒருபெண்பிறந்தது. அப்பெண்ணுக்குத்தக்க பருவம் வருகின்றவரைக்கும் அப்பெண்ணை மிகவும் அன்புடனே வளர்த்துக்கொண்டுவந்து தக்க பருவம் வந்தபிறகு நல்ல குணஸ்தனுகிய ஒரு வாலிபனுக்கு புதல்வியாரை விவாகம்செய்துகொடுத்தான். அவனே ஸ்ரீஹரி பக்தியானது இப்படிப்பட்டதென்று தெரியாதவனுகவும் கனவில்கூட ஸ்ரீஹரி நாம ஸ்மரணை இல்லாதவனுகவும் காமுகனுகவும் இருந்ததனுல் ராமாபாயியாராகிய மனைவியார் மிகவும் வருத்தப்பட்டு நமது வினையின் பயன் இந்த விதமாகச் சம்பவித்ததென்று தீர்மானம் செய்துகொண்டு கணவனுக்கு அனுகூலமாக நடந்துக்கொண்டுவருகின்றகாலத்தில் அவருடையவயிற்றில் ஒரு சற்புத்திரன் பிறந்தனன். அப்படிப்பிறந்த அந்தப் புத்திரனை மிகவும் அன்போடு வளர்த்துவருகின்ற நாளில் ராமாபாயியார் தம்முடைய கணவனுக்கு ஸ்ரீஹரிபக்தியுண்டாவது எந்தக்காலத்திலோவென்று சிந்தனை செய்துக்கொண்டிருக்கும்போது, ஒருநாள் கணவனைப்பார்த்து உத்தமர்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்கள் வந்தால் அவர்களை அலட்சியம் செய்யாமலும் உயிர் கொலை செய்யாமலுமிருந்தால் உயர்ந்தகதி கிடைக்கும். அப்படிக்கில்லாமல் அவற்றைச் செய்தால் மீளாநரகமானது சித்திக்குமென்று சொன்னர். இப்படிச்சொன்ன அந்த வார்த்தையைக் கேட்ட அந்த வாலிபனுகிய துன்மார்க்கன் ராமாபாயியார் வார்த்தையை எள்ளளவும் எடுத்துக்கொள்ளாமல் ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசியில் ஒரு ஆட்டைக் கொண்டுவந்து கொலை செய்யப்போனுன்.

அதைக்கண்ட ராமாபாயியார் இன்று இப்படிப் பட்ட காரியத்தைச்செய்வது நன்மையல்லவென்று சொன்னார். அதை அவன் காதில் போட்டுக்கொள்ளாமலே தான் கொண்டுவந்த ஆட்டைக் கொலை செய்தான். அதுகண்ட ராமாபாயியார் மிகவும் விசனங்கொண்டு இதற்கென்ன செய்யலாமென்று ஆலோசனை செய்து தமது புத்திரனுக்கு விஷத்தைப் பாலுடன் கலந்து வார்த்துவிட்டுத் தொட்டிலில் வளர்த்தினார்.

அப்படி வளர்த்தின கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அப்புதல்வனானவன் நஞ்சின் கொடுமையால் இறந்துபோய்விட்டான். இவ்விதமாகப் புதல்வன் இறந்துபோனதை துராசாரனாகிய கணவன் முதலானோர் உணர்ந்து கோவென்று அலறியழுதார்கள். இதைக்கண்டராமாபாயியானவர் கொஞ்சமும் மனந் தளர்ச்சியடையாமல் ஸ்ரீஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டிருந்தார். இப்படிஇவர்இருப்பதைப் பார்த்தவர்களெல்லாம் அவரைப் பார்த்து அம்மணீ! உம்முடைய புத்திரன் இறந்துகிடப்பதைப் பற்றி நாங்களெல்லோரும் வருத்தப்படுகிறோமே. பத்துமாதம் சுமந்துபெற்று மிகுந்த அன்போடு வளர்த்த உன் மனமானது சற்றுங் கலங்காமலிருப்பது ஆச்சரியமா யிருக்கிறதென்று அழுதுக்கொண்டேசொன்னார்கள். அதைக்கேட்டராமாபாயியாரானவர் அப்படிச்சொன்ன அவர்களைப்பார்த்து ஐயன்மீர்! அழியும் பொருள்கள் என்றைக்காவது அழிந்தேதீரும். அதைக்குறித்து அழுதால் பிரயோஜனமென்னவென்று சொன்னார். அதைக்கேட்ட கணவனானவன் அவரைப்பார்த்து அப்படியானாலும் இந்தச் சிறுவயதில் சாவது சரிதானாவென்று வினவினார். அதற்குமனைவியாராகிய ராமாபாயியார் தகுதியல்லவராயினும் பகவானுடைய உத்தரவை யழிக்கமுடியாது. ஆனால் ஸ்ரீஹரிதாசர்கள் இப்பொழுது நம்முடைய வீட்டுக்கு எழுந்தருளி வருவார்களானால் நமது துன்பம் இப்பொழுதே நீங்கிவிடுமென்று சொன்னார். அதைக்கேட்டகணவன் அவர்கள் நம்மிடத்திற்கு வருவதெப்படியென்று கணவன் கேட்க ராமாபாயியார் நாயகா! ஸ்ரீஹரிதாசர்களைக்கண்டு வணங்கி அழைத்துக்கொண்டு வந்து அவர்களை அன்போடு உபசாரம் செய்து அவர்களுடைய திருவடிகளை விளக்கி அந்த ஸ்ரீபாததீர்த்தத்தை நமது புதல்வன்வாயிற்பெய்தால் இவன்பிழைப்பானென்றுசொன்னார். அதைக்கேட்டகணவனும் அப்படியேபோய் அங்குள்ளகோயிலிலிருக்கிற திருமாலடியாரை அழைத்துக்கொண்டுவந்து, பூஜித்துத் தோத்திரம் செய்து அவர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைக் குழந்தையின் வாயிற் பெய்தவுடனே குழந்தையானவன் தூங்கி விழித்தெழுந்தாற்போல் எழுந்திருந்தான். அதைக்கண்டு கணவன் முதலிய யாவரும் சந்தோஷித்து எம்முடைய துன்பம் நீங்கினதென்று சொல்லி அந்த ஹரிதாசரிடத்தில் அன்றுமுதல் மிகுந்த பக்தியுள்ளவனாகிய தீச்செய்கைகளை விட்டொழிந்து சாதுத்தன்மையையடைந்து, தினம் தவறாமல் ஹரிபஜனைசெய்துகொண்டும் ஹரிபூஜை செய்துகொண்டும் ஹரிகதைகளைக் கேட்டுக்கொண்டும் ஹரிதாசனாய்வாழ்ந்திருந்தானென்று சொல்லி ஸ்ரீநாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடம் சென்று ஸ்ரீஹரிபூஜை செய்துகொண்டிருந்தார்.

ராமாபாயி சரித்திரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீபுண்டரீகபரப்பிரம்மணேநம:

அறுபத்தைந்தாவது

# பிளாபாயி சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

களேபரங்களைக் களைந்தமணிவண்ணன்
உளேவருமாயையை யோட்டியகாரணன்
நளேயாயுயர்நன்மை நாடுதற்கருள்புரி
உளேபிளாபா யுண்மையுரைசெய்வோம்.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச்சென்று அன்று இரவு ஸ்ரீமந்நாராயணனை பூஜித்துக்கொண்டு இருந்து கொஞ்சநேரம் நித்திரைசெய்து வைகறையிலெழுந்து ஈசானதிக்கிற்சென்று ஆசௌசாதிகளைக் கழித்து சுத்த கங்காதீர்த்தத்திற்குச்சென்று நீராடி அங்கிருந்தும் புறப்பட்டுத் தாங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்று திருமண்காப்பிட்டு ஸ்ரீமந் நாராயணனையும் அவனுடைய அடியாரையும் உள்ளபடியேவணங்கி நமஸ்காரம்செய்து பிறகு தங்கள் தங்களுடைய சக்திக்கேற்ற பதார்த்தங்களுடன் போஜனம்செய்து யாவரும் ஒன்றாகச்சேர்ந்து நாபாஜிசித்தர் எழுந்தருளியிருக்கின்ற இடத்திற்குவந்து அவரைக்கண்டு வணங்கி நமஸ்காரஞ்செய்து ஓ சுவாமி! தேவரீர் அடியோங்களுடைய மனதைச் சுத்தம்செய்து இறைவனுடைய திருவடிகளுக்குச் சம்பந்திகளாகக் கோரிய பக்தர் ஒருவர் விஜயத்தை இதுவரைக்கும் சொல்லிவந்ததுபோலவே இன்றைக்கும் அருளிச்செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே சொல்லுகிறேனென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் சகல வளங்களும் நிறைந்திருந்த ஒரு ஊரில் ஒருபிரதானியின் புத்திரியிருந்தாள். அவள்பெயரோ பிளாபாயி என்றுசொல்லுவார்கள். அவள் அதிபாலிய தசையிலிருந்து ஸ்ரீஹரிபூசை செய்துகொண்டு வருபவள். இவளுக்குத் தகுதியான பருவம் வாய்த்தபிறகு இவளுடைய கணவர் இறந்துபோனதினால் இவள் தம்முடைய தகப்பனாரிடத்தை யடைந்து தம்முடைய நெடுநாள் வழக்கம்போலவே ஸ்ரீ ஹரிபூசை செய்துகொண்டிருந்தாள். இவள் இப்படி யிருக்குங்காலத்தில் இவளுடைய தகப்பனாரும் இறந்துபோனார். பிறகு இவள் தம்முடைய சகோதரர்களிடத்திலிருக்கத் தீர்மானித்து அப்போது அந்தச் சகோதரர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் விரோதப்பட்டு உள்ளபொருள்களையெல்லாம் பாதியாக பாகித்துக்கொள்ள எண்ணிப் பிரித்துக்கொள்ளும்போது இளைய சகோதரனுடைய பாகத்தில் பிளாபாயியாருடைய பூசைப்பெட்டி அகப்பட்டது. இந்தப் பிளாபாயியார் ஸ்ரீ பகவானைப் பூஜைசெய்யாமல் உண்ணமாட்டாராகையால் இளைய சகோதரனிடத்திற்கு பூஜைப்பெட்டியைக்குறித்து ஆள் அனுப்பினார். அவனும் அந்தப்பெட்டியைத் தேடிப்பார்த்து காணாமையால் என்னிடத்தில் இல்லையென்றுசொன்னான். அதைக்கேட்ட பிளாபாயியார் ஐந்துநாள் வரைக்கும் யாதொருஉணவும் உண்ணாமலிருந்தாள். இவருடைய மனோநிலைமையுணர்ந்த ஸ்ரீமந் நாராயணனானவன் பாயியாருடைய கனவில் ஒரு பிராமண வடிவங்கொண்டுவந்து பூசைப்பெட்டியைக் கொடுத்துவிட்டு மறைந்துபோனார். உடனே இவர் விழித்தெழுந்து விடியற்காலத்தில் சுத்தகங்கையில் நீராடிவந்து பகவதாராதனம்செய்து பிறகு தாமும் திருவமுது செய்தார். இவ்விதமாக நடந்த சங்கதிகளையுணர்ந்த இளைய சகோதரன் தமயனிடத்திலும் தமக்கையிடத்திலும் வந்து வணங்கி நீங்கள் நான் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தனைசெய்து, தன்னுடைய தமையனோடுகூடி விரோதமில்லாமல் வாழ்ந்துகொண் டிருந்தான். பிளாபாயியாரும் ஸ்ரீஹரிபூசையைத் தவறாமல்செய்துகொண்டு சுகமாக வாழ்ந்திருந்தாள். என்று சொல்லி ஸ்ரீநாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடம் சென்றார்.

பிளாபாயி சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநம:

அறுபத்தாறுவது

# சிளாபாயி சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

அரியானே யந்தணற்கு மருங்கலே வல்லவர்க்கு
மண்ணலே யெமைப் பயந்தவாதி சேஷா
கரியானே வேதியர்கள் கர்மமுறு கானிடத்தை
காட்டுவித்த உன்செய்கை கண்ணனே மணிவண்ணா
அரியான வவதார வண்டர்கள் போற்றும்
ஆதியனே வேதியனே யன்பர்துயர் தீர்த்த
பெரியானே பேருலகில் பெம்மானே சிளாபாயி
பெண்கதையைச் சொல்ல பேர்ந்திடுவேன் முன்னே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்றுமாலை தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்று இருக்கத்தக்க உண்டியாதிகளைக் கழித்து ஸ்ரீமந்நாராயணனை உள்ளன்போடு துதிசெய்து சிறிதுநேரம் துயின்று வைகறையிலெழுந்து நித்திய கடன்களை முடித்துக்கொண்டு திருமண்காப்பிட்டு ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து அங்கிருந்தும் யாவரும் ஒன்றாகச்சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தரிருக்கிற இடத்தை எதிர்நோக்கி நமஸ்காரம் செய்துக்கொண்டு அவரிருப்பிடம் வந்துசேர்ந்து அவரைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம்செய்து வணங்கி ஓசுவாமி! தேவரீர் இதுவரைக்கும் தாங்கள்சொல்லி வந்த சரித்திரங்களெல்லாம் எங்களுடைய மனதை ஒருவாறு புனிதப்படுத்தியிருக்கின்றது. அதுபோலவே இன்றைக்கும் அடியோங்களுடைய மனதைச் சுத்திசெய்து பரிஷ்கரித்திருக்கிற ஒரு பக்தருடைய சரித்திரத்தை திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் அப்படியே ஆகட்டுமென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்திலே ஒரு ஊர் இருந்தது. அந்த ஊரை மிகவும் அன்புடன் செங்கோல் செலுத்துபவனாகிய ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு ஒரு கற்பிற்சிறந்த மனைவியாரிருந்தார். இவ்விருவரும்கூடி இல்லறத்தை வழுவாமல் நடத்திக்கொண்டு வந்திருக்குநாளில் அவர்களுடைய முன் தவப்பயனால் இவர்களுக்கு ஒரு புத்திரி பிறந்தாள். அன்னாளுக்கு சிளாபாயியென்று பேரிட்டார். அவருக்குக் கல்விகற்கும் வயது வந்தவுடனே ஒரு உபாத்தியாயரிடத்தில் விட்டுக் கல்வி கற்பிக்கும்படி சொன்னார். அந்த உபாத்தியாயரும் அப்படியே கல்வி கற்பித்து வருகின்றகாலத்தில் அரசனாகிய தம்முடைய தந்தையார் சாளக்கிராமபூசை செய்துக்கொண்டுவருவது வழக்கமாய் இருந்தது. அதை அந்தப்பெண் பார்த்து தனக்குச் சாளக்கிராமபூசை செய்யவேண்டுமென்கிற விருப்பம் அதிகரித்திருக்கின்றபடியால் உபாத்தியாயரைப்பார்த்து உபாத்தியாயரே! தேவரீர் நான்நாள் தோறும் சாளக்கிராமபூசை செய்யவிரும்பியதனால் ஒரு சாளக்கிராமம் சம்பாதித்துக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அதைக்கேட்ட உபாத்தியாயர் இவருக்கு இந்தச்சிறுவயதில் இந்தப் புத்தி எப்படி உண்டாயிற்று என்பதைக்குறித்து மிகுந்த ஆச்சரியமடைந்து ஒரு கருநிறங்கொண்ட உருளைக்கல்லை இவர் கையிற்கொடுத்து இதைப் பூசைசெய்து கொண்டுவா வென்று சொன்னார். அதை அந்தப் பெண்மணியானவள் மிகுந்த அன்பினுடன் வாங்கிக்கொண்டுவந்து தன்னிடத்தில்வைத்

துக்கொண்டு தினந்தோறும் சூரியோதயகாலத்தில் எழுந்து சுத்ததீர்த்தத்தில் ஸ்நானம்செய்து தம்முடைய தந்தையைப்போல தாமும் சாளக்கிராம பூசையை மந்திரமில்லாமல் செய்துக்கொண்டு வந்தார். இப்படிசெய்கின்ற இவருடைய மனவுறுதியை ஸ்ரீபகவானனவர் உணர்ந்து அந்தக்கல்லிலே சாநித்தியம் செய்திருந்து இவர் செய்கிற நைவேத்தியங்களை அன்புடனே ஏற்றுக்கொண்டார். இவர் இவ்வாறு தினந்தோறும் சாளக்கிராமபூசை செய்கிறதைக்கண்ட தாய் தந்தையர்கள் இது இளந்தையில் செய்கின்ற ஒரு விளையாட்டு என்று இருந்தார்கள். இப்படி யிருக்குங் காலத்தில் இவருக்குத் தகுந்த பருவம்வந்ததைக்கண்டு இவரைத் தம்முடைய குலத்தவனாகிய ஒரு ராஜகுமாரனுக்கு திருக்கலியாணஞ் செய்துகொடுத்தார்கள். அவனும் இவரை அழைத்துக்கொண்டு தன்னுடைய ஊருக்குப் போகிறவழியில் இவர் தமதுபூஜைப்பெட்டியிலிருக்கிற சாளக்கிராமத்தை எடுத்துவைத்துப் பூஜைசெய்துக்கொண்டிருந்தார். அதைக்கண்ட இவருடைய கணவன் பெண்சாதியைப் பார்த்து பெண்ணே! இது என்னவென்று கேட்டான். அதற்கு அவள் என்னுடைய குலவொழுக்கமென்று சொன்னாள். அதற்கு அவன் இவள் இந்த சிறுவயதில் பூசைசெய்யத் தகுந்தவளோ? என்று இவருக்குத்தெரியாமல் அந்தப் பூஜைபெட்டியை யெடுத்து அங்கிருந்த ஒரு நதியிலெறிந்துவிட்டான். மறுநாள் உதயத்தில் நித்திரைவிட்டெழுந்து சுத்தகங்கையில் நீராடிவந்து பூஜைப்பெட்டியை வைத்த இடத்தில் பார்த்தாள். அப்படிப் பார்த்தபோது அவ்விடத்தில் காணாமையால் அவள் மிகவும்துக்கித்து ஓ பகவானே! நானே உன்னுடைய ஸ்வரூபமான சாளக்கிராமத்தைப் பூஜைசெய்யாமல் உண்ணமாட்டேனென்றுசொல்லி விசனப்படும்போது மாமனாரும் மாமியாரும்வந்து எவ்வளவு சமாதானம் செய்தாலும் கேளாமல் நான்குநாள்வரைக்கும் உபவாசமாயிருந்தார். இப்படி நான்குநாள் கழித்து ஐந்தாவதுநாள் விடியற்காலத்தில் ஸ்ரீகண்ணபிரானனவர் இவருடைய நிலைமையையறிந்து இவருக்குக் கல்விகற்பிக்கிற உபாத்தியாயரைப்போல வேஷந்தாங்கி இவருடைய கையிற் கொடுத்துவிட்டுப் போனார். அப்படி கனவு கண்ட இவர் உடனே கண்விழித்துப்பார்த்து தம்முடைய கையில் பூஜைப்பெட்டி யிருக்கக்கண்டு போய் சுத்தகங்கையில் நீராடிவந்து பூஜைசெய்துக்கொண்டிருப்பதை இவருடைய கணவன் கண்டு நான் பூஜைப்பெட்டியை நீரிலெறிந்துவிட்டேனே? அதை யார் எடுத்துக்கொண்டுவந்து இவருக்குக் கொடுத்தார்களென்று அதிசயப்பட்டு இவருடைய மனநிலையைக் கண்டு ஸ்ரீகண்ணபிரான் கொண்டுவந்து கொடுத்திருக்கலாமென்று துணிந்து அவனும் ஸ்ரீமந் நாராயணபக்தியிற் சிறந்த வைஷ்ணவனாகி ஹரிதாசனாய் சிளாபாயியாரோடு கூடிவாழ்ந்துகொண்டிருந்தான். என்று சொல்லியபின்னர் வேறு பக்தர்களுடைய சரித்திரங்களைச் சொல்லவந்தவர் மீண்டும் பொழுதுபோனபடியால் அதுவரைக்கும் நிறுத்தி அவர்களுக்கெல்லாம் விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடஞ்சென்றார்.

சிளாபாயி சரித்திரம் முற்றிற்று.

---



அறுபத்தேழாவது

# பிரேமாபாயி சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

சுருதிமுதல்யாவும் வழுத்துகின்றபெருமான் தூயநிலையருளுதற்குத் துணிந்துவந்தபெருமான்
பரவுவார்கள்வினையொழித்த பண்புடையவண்ணல் பாலகனும்பிரகலாத பண்ணவர்க்குமுன்னர்
பருதிபதபங்கயத்தைத் தந்தமணிவண்ணன் பயனில்லாவறிவிலிகள் பரவாதபெருமான்
விரவுதிருப்புகழ்படைத்த வேதாந்தமூர்த்தி விகசிதபங்கயமலரை விரும்பியுரைசெய்வாம்.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் நேற்றைப்பொழுது கேட்டுவந்த சரித்திரங்களால் மிகவும் நன்மையை யடைந்து, தங்கள் தங்கள் வீட்டில் அதைப்பற்றி உலாவிக்கொண்டிருந்து சிறிது நித்திரைசெய்து வைகறையானவுடன் துயில்விட்டெழுந்து ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து யாவரும் ஒன்றாய்ச்சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தர் இருக்கின்ற இடத்திற்குச்செல்லப் போகும்போது வழியே அவருடைய புகழைப்பேசிக்கொண்டு அவரிருக்குமிடத்திற் போய்ச்சேர்ந்து, அவரைக்கண்டு சாஷ்டாங்கமாக வணங்கி நமஸ்காரம்செய்து ஓ சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் நாங்கள் வேண்டிக்கொண்டதைப்போல எங்களுக்குப் பக்தர்களுடைய சரித்திரங்களை உள்ளபடியே சொல்லியருளினீர். அதுபோலவே இன்றைக்கும் ஒரு பக்தருடைய விஜயத்தைத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் சித்தர்களே! நீங்கள் கேட்டபடியே சொல்லுகிறேனென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் எவ்வகை வருணத்தாராலும் மகாமகிமையுள்ளதாகக் கொண்டாடப்படுகின்ற காசிக்ஷேத்திரமென்று ஒரு ஊரிருந்தது. அந்த ஊரில் பிரேமாபாயி என்னும் திருப்பேரையுடைய ஒரு அமங்கலியர் இருந்தார். இவரோ சாதுக்களிடத்தில் மிக்க அன்புள்ளவரும் ஸ்ரீ பாகவத புராணப் பிரசங்கங்களைக் கேட்பதில் மிக விருப்பமுள்ளவரும் ஸ்ரீ ஹரிநாமஸ்மரணையைமறவாதவரும் எல்லாஜீவர்கள் மேலும் அவாவுடையவருமாகி இருந்தார். இவர் பிரதிதினமும் சுத்தகங்கையில்நீராடிவந்து தம்மிடத்திலுள்ள ஸ்ரீகிருஷ்ணவிக்கிரகத்தை அர்ச்சித்தேத்தி வழிப்பட்டு ஆனந்தபாஷ்பமானது துளிக்கின்ற கண்களையுடையவராய் பரவசப்பட்டிருப்பார். இவர் இப்படியிருக்கிறகாலத்தில் இவருடைய வீட்டிற்கு ஒரு நாள் சில சாதுக்கள்சேர்ந்து வந்தார்கள். அப்போது இவர் அவர்களையெல்லாம்வணங்கி ஆசனம் கொடுத்து, இவர்களுக்கு அமுதளிக்கும் வேலையில் பிரவேசம்செய்தால் இன்றைக்கு ஸ்ரீபாகவத சிரவண மில்லாமற்போகின்றது. ஆகையால் இவர்களை பசித்திருக்கவிட்டுக் காலக்ஷேபத்திற்குப்போனால் பாகவதர்களுக்கு அமுதளிக்காத அபராதம் உண்டாகின்றது. இதற்கு என்ன செய்வோமென்று ஆலோசனைசெய்து தம்முடைய பத்துவயதுள்ள அருமை மகனைப்பார்த்து மகனே! நீ இன்றுபோய் பாகவதங்கேட்டுவந்து நடந்த கதையை எனக்குச் சொல்லவேண்டுமென்று சொல்லி அவனைப் பாகவதங்கேட்டுவர அனுப்பிவிட்டு ஸ்ரீ ஹரிநாமங்களையெல்லாம் சொல்லிக்கொண்டே நீராடிவந்து சமையல்செய்து சாதுக்களைப் பாதபூஜைசெய்து அவர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகாரஞ்செய்து பிறகு மிகுந்த உபசாரத்துடன் அமுதுசெய்வித்து கால் கைகள் சுத்திசெய்ய ஜலங்கொடுத்து புஷ்பசந்தன தாம்பூலங்கள் கொடுத்து அதன்பிறகு ஸ்ரீபாகவத காலக்ஷேபத்துக்குபோய்வந்த தம்முடைய புத்திரனோடு விருந்துண்டு மகனைப்பார்த்து அப்பா மகனே! நீ கேட்டுவந்த ஸ்ரீபாகவதகதையை எனக்குச் சொல்லென்று கேட்டார். அப்படி அவன் சொன்ன சரித்திரத்தின் முடிவில் ஸ்ரீகண்ணபிரான் தாயாகிய யசோதைபிராட்டி உறலோடு சேர்த்துக் கட்ட அந்தக்கட்டை அவிழ்த்துக்கொள்ளமாட்டாமல் கண்களில் நீராய்ப்பெருகி அழுதுகொண்டிருந்தார். என்பதைக்குறித்து மிகவும் மனம் வருந்தி நான்போய் அவரைக் கட்டினகட்டை அவிழ்த்துவிட்டு வருகிறேனென்று சொல்லிப் புறப்பட்டுக் கோகுலத்திற்குப் போகும்போது வழியிலே பிராணனைவிட்டுப் பரந்தாமத்தையடைந்தார். இந்தச் செய்தியை வந்திருந்த சாதுக்கள் கேள்விப்பட்டு மிகுந்த ஆச்சரியமடைந்து இவர் அந்தக் கண்ணன் விஷயத்தில் தாயினும் மிகுந்த அன்புள்ளவராய்ப் போய் உயிர்நீங்கினரல்லவாவென்று வியந்து புகழ்ந்தார்கள். அந்தச்சமயத்தில்தேவர்கள் பூமாரிபொழிந்தார்கள். பிறகுபுதல்வன் இவருக்குச்செய்யவேண்டிய கர்மக்கிரியைகளையெல்லாம் கிரமமாகச் செய்வித்து தானும் விஷ்ணுபக்தி யுடையவனாயிருந்து அதனால் ஹரிதாசன் என்னும் பெயரைப்பெற்று ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனம் செய்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தான். என்றுசொல்லி நாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களுக்கு உத்தரவுகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடம் சென்றார்.

பிரேமாபாயி சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநம:

அறுபத்தெட்டாவது

# நானக்தாசர் சரித்திரம்.

துதி கவி.

கண்ணனான வவதாரக்கடவுளை
வண்ணனான மாலாவதாரனே
திண்ணனான திருவருளைப்பெறு
மண்ணல்பாத மறைவதுண்மையே.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச்சென்று அன்று இரவு தங்கள் தங்களுக்குக்கூடிய உணவாதிகளை எடுத்துக்கொண்டு சிறிதுநேரம் துயின்று வைகறைகளானவுடனே பெழுந்து இந்திரதிக்கிற்சென்று ஆசௌசாதிகளைக்கழித்து சுத்தகங்கையில் நீராடி தங்களுடைய திருவீடுகளுக்குச்சென்று திருமண் காப்பிட்டு ஸ்ரீமந்நாராயணனை உள்ளபடியே தியானித்து நமஸ்காரம்செய்து காலையுண்டியை எடுத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீநாபாஜி சித்தரிருக்கு மிடத்திற்குச்சென்று அவரைக்கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம்செய்து வணங்கி ஒ சுவாமி! தேவரீர் அடியோங்கள் புனிதார்த்தராக வேண்டுமென்கிற எண்ணத்தால் ஒரு பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லியருள வேண்டுமென்றுசொல்லி மிகவும் வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட நாபாஜிசித்தரும் அப்படியேசொல்லுகிறேனென்று சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் இவ்வுலகத்திலே மிகவும் பிரசித்திபெற்றதான பஞ்சாப் என்னும் ஒருதேசமிருந்தது. அதில்நானக் என்னும் திருப்பேருள்ளவராகிய ஒருவரிருந்தார். அவரோ பிரதிதினமும் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனம் செய்பவரும் உயர்ந்த ஞானவறிவுடையவரும் வைராக்கியசீலருமாக இருந்தார். இவர் மிகுந்த செல்வமுடையவராகையால் அந்தச் செல்வமுழுமையும் நல்லவழியில் செலவுசெய்து ஸ்ரீகருடத்துவஜனான பகவத்பஜனையை இடைவிடாமல்செய்ய உத்தேசங்கொண்டு அவ்விடத்தில் மகா வுன்னதமாகிய ஒரு விஷ்ணுவாலயம் பிரதிஷ்டைசெய்தார். ஆனால் அது துருக்கதேசமாகையால் அந்தத் துருக்கர் யாவரும் இந்த ஆலயத்தைக்கண்டு பொறாமைகொண்டு தூஷித்துக்கொண்டிருப்பதை நானக்என்பவர் உணர்ந்து இவர்களோ துஷ்டர்கள். இவர்கள் தங்களுடைய அரசனுக்குச்சொல்லி ஆலயத்தை இடிக்கவும்செய்வார்கள். ஆகையால் அப்படி அவர்களால் இடிக்கப்படுவதற்கு முன்னரே நாமே இடித்துத் தள்ளிவிடுவது நன்மையாயிருக்குமென்று ஆலோசனைசெய்து தாம் கட்டுவித்த ஆலயத்தைத் தாமே இடித்துத் தள்ளிவிட்டார். இவ்விதமாக இடித்துத்தள்ளின பிறகு துருக்கருக்குச் சந்தோஷமுண்டாகும்படி ஒரு மசீது கட்டுவித்தார். அதைக்கண்ட இந்தியர்களெல்லாம் இவரை இகழ்ந்துபேசவே அதைக்கேட்ட அந்த நானக் என்பவர் அந்தமசீதையும் இடித்துத்தள்ளிவிட்டு அளவில்லாத கொல்லைகளை உண்டாக்கினர். இந்தவிதமாகப் பலவகையாலும் இவருடைய பொருள்களெல்லாம் நாசம் செய்வதைப் பார்த்தவர்களெல்லாரும்மறைவாகவிருந்து இவரை மகிழ்ந்துபேசினர்கள். அவர்களில் சிலர் மறைவாகவிருந்து ஏன் அவரைத்தூஷிக்கவேண்டும்? அப்படி தூஷிப்பது சரியல்லவென்று மனதிலெண்ணி அவரிடத்தில் நேரேவந்து அவரைக்கண்டு ஐயா! நானக் என்பவரே! நீர் இவ்விதமாக ஒன்றை நிருமிப்பதும் மீண்டும் அதை யழிப்பதும் வேறொன்றை நிருமிப்பதும் மீண்டும் அதை யழிப்பதுமாக விருந்துகொண்டு அநேகமான திரவியங்களையெல்லாம் வீணாகச் செலவிடுகின்றீர். நீர் இப்படி செய்வதற்குக் காரணமென்னவென்று கேட்டார். அதைக்கேட்ட இந்த நானக் என்பவர் ஐயன்மீர்! இவ்விடத்தில் சிலர் சங்கரனையும் சிலர் பிரமாவையும் சிலர் விஷ்ணுவையும்

சிலர் சூரியனையும் இன்னும் பலதேவர்களையும் வணங்குகின்றவர்களாக விருக்கின்றார்கள். அவைகள்யாவும் நல்லமதங்களேயாயிருக்குமென்று சம்மதித்து இப்படி செய்தேனென்று சொல்லினர். அதைக்கேட்ட அவர்களெல்லாரும்கலகலவென்று சிரித்து இவரைப் பக்கிரென்றாகிலும் பைராகி என்றாகிலும், சொல்லுதற்கிடமில்லை. ஆயினும் இவர் சுத்த சாத்துவீக மூர்த்தியாயிருக்கிறார், என்று எல்லாரும் தங்களுடைய அரசனிடத்திற்போய் அரசனே! நம்முடைய குலத்திற்பிறந்த ஒருவன் இப்படி திரிவதைக் குறித்து விசாரிக்க வேண்டுமென்று சொன்னார்கள். அதைக்கேட்ட அரசனும் ஒரு ஏவலாளனை வரவழைத்து ஏ! ஒற்றவனே! நீ நம்மூரிலுள்ள நானக் என்பவரிடத்திற்குப்போய் அவரை நீர் உம்முடைய குலாசாரத்திலிருந்தும்தவறக்கூடாதென்று வற்புறுத்தும்படிசொல்லியனுப்பினன். அதைக்கேட்ட ஒற்றன் அவ்வாறே சொல்லுவதாகச் சென்று, நானக் என்பவரிடத்திற்குப்போய் ஐயா! உம்மை அரசனானவன் நமதுகுலாசாரத்திற்கேற்க நடக்கும்படி உமக்குச் சொல்ல என்னை அனுப்பினனென்று சொன்னான். அதைக்கேட்ட தாசர் அந்த ஏவலாளனைப் பார்த்து அப்பா! மண் ஒன்றே கலங்கள் பலவானாற் போலவும், பொன் ஒன்றே ஆபரணங்கள் பலவானாற் போலவும் முதற்காரணமாகிய திருமால் ஒருவரே பலமதங்களுக்கேற்க பல தெய்வங்களாக விளங்குகிறார். என்கிற உண்மையையறிந்து நான் அவரைப் பலபொருளாய் எண்ணி அவரை அகோராத்திரம் பஜித்துக்கொண்டிருக்கிறேனென்று ஒருபாட்டையெழுதி அந்த ஏவலாளன்கையிற்கொடுத்தார் அவனும் அந்தப் பாட்டைக் கொண்டுபோய் அரசனிடத்திற்கொடுத்தான். அரசன் அந்தப்பாட்டைப் படித்துப்பார்த்து மிகவும் சந்தோஷத்தையடைந்து இவருடைய உண்மை நிலையை சோதித்து அறிய வேண்டுமென்றுநினைத்து வெளிக்கு மிகவும்கோபம் கொண்டவனைப்போலத் தோன்றி இந்த நாட்டுக்கு அரசனாயிருக்கிற என்னுடைய வார்த்தையை யிகழ்ந்தான். ஆகையால் அந்த நானக்கை கைப்பிடியாய் கொண்டு வாருங்களென்று உத்தரவு கொடுத்தான். அதைக்கேட்டவுடனே ஐந்நூறு பட்டாணித்துருக்கர்கள் ஒன்றாகச் சேர்ந்து புறப்பட்டு ஆயுதபாணிகளாய்த் தாசரானவர் இருக்கின்ற யிடத்திற்கு வந்து விட்டிற்குள்ளே நுழையலாமாவென்று உத்தேசித்துக் கொண்டிருக்கும்போது இதை நானக் என்பவர் உணர்ந்து ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானை உள்ளபடியே நினைத்தார். உடனே பகவானானவர் தம்முடைய நியமனத்தால் பதினாயிரம் போர்வீரர்கள் அவ்விடத்தில் திடீரென்று வந்து ஐந்நூறு துருக்கரும் மனம் தடுமாறியோடும்படி அடித்துத் துரத்தினார்கள். இவர்கள் இவ்வாறு அடித்துத் துரத்தவே அவர்கள் ஓடிப்போய் அரசனிடம் சொன்னார்கள். அதைக்கேட்ட அரசன் அஷ்டசித்திகளையும் பெற்றிருப்பவராகிய தாசரை இந்த மூடர்கள்சொன்ன சொல்லைக்கேட்டு வருந்தினேனென்று அனுதாபம் கொண்டு உடனே புறப்பட்டுவந்து நானக்தாசரை வணங்கி ஓ சுவாமி! பரமசாதுவாயிருக்கிற தேவரீரை அடியேன் அறிவில்லாத அஞ்ஞானத்தால் துன்பப்படுத்தினேன், ஆயினும் அந்த அபராதத்தை க்ஷமித்து அடியேனைக் காத்தருள வேண்டுமென்று மிகவும் பிரார்த்தனைசெய்து இவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சென்றார். இந்தச் சங்கதியை ஊராரெல்லாரும் உணர்ந்துவந்து பலவகைப் பொருள்களையும் சமர்ப்பித்து இவரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது. இவர் இவ்வழியாய்வருகிற பொருள்களையெல்லாம் தம்மிடத்திற்கு வருகிற சாதுஜனங்களுக்கு அன்னதானம்செய்யும் விஷயத்தில் உபயோகித்துக்கொண்டு வந்தார். இப்படியிருக்கும் நாளில் இவருடைய மடத்தில் சேர்ந்திருக்கிற இவருடைய சீடர்கள் பலபேருள்ளும் சூத்திரா என்றும் மர்தனா என்றும் இரண்டு சீடர்கள் இவரிடத்தில் மிகவும் அன்புபாராட்டித் தம்முடைய உடல் பொருள் ஆவியாகிய இந்த மூன்றையும் சதர்ப்பணம் செய்து உலகப்பற்று முழுமையும் விட்டவராய் இவரைவழிபடுதலே பரமபிரயோசனமாகிய மோட்சத்துக்குக் காரணமென்று உறுதியாகப்பிடித்து இவரது கருணைக்குப்பாத்திரராகி குருகுலவாசம்செய்துகொண்டிருந்தார்கள். இவ்வண்ணம் இவர் காலத்தைக் கழித்துக்கொண்டுவருங்காலத்தில் ஒருநாள் நானக் என்பவர் சூத்திராவைமடத்தில்வைத்துவிட்டு மர்தனாவை யழைத்துக்கொண்டு ஸ்ரீஹரிநாம ஸ்மரணையோடு வெளிப்பட்டார். இவ்விதமாகவெளிப்பட்டவர் மக்காவிலுள்ள துருக்கர் அவ்விடத்திலுள்ள கிருஷ்ண விக்கிரகத்தைப் பேர்த்துக் குப்புறக்கிடத்தி அதன்மேல் மாட்டெலும்புகளைக் குவித்து வைத்திருக்கிறார்களென்று கேள்விப்பட்டு அந்தக் கண்ணபிரானைச் சேவிக்கவேண்டுமென்று எண்ணங்கொண்டு மக்காவுக்குப் பிரயாணப்பட்டுப்போனார். அப்படிப்போகும்வழியில் ஒரு காட்டாறானது மிகவும் பெருகிக் குறுக்கே யோடுவதைப் பார்த்து அலக்நிரஞ்சகம் என்று ஒருதரம் சொல்லி அந்த நீர்

மேல்நடந்துபோயினர். அங்ஙனம் செல்லும்போது கூடவந்த சீடர் அந்த நீரிலிறங்கப்பயந்து அதன் கரைமேல் நின்றுவிட்டார். அவ்விதமாக நின்றவர் கள் குருநாதரை அஞ்சலிசெய்து ஓ சுவாமி! நான் உம்மோடுகூட நீரிலிறங்கப்பயந்து கரைமேல்நின்று விட்டேன். ஆகையால் அடியேன் உம்மை வந்து சேரும்படியான உபாயமொன்று சொல்லியருள வேண்டுமென்று தம்முடைய ஆசாரியரை மிகவும் வேண்டிக்கொண்டார்கள். அப்போது நானக்கர் தம்முடைய சீடரைப்பார்த்து அப்பா! சீடரே! நீ குருதியானம் செய்துகொண்டு மிகவும் ஊக்கத்து டன் நீரில் இறங்கினால் யாதொரு தீமையுமில்லாமல் என்னோடுவரலாமென்றுசொன்னார். அதைக்கேட்ட சீடரானவர் அவ்வாறே குருதியானம்செய்து நீரிலி றங்கினர். நீரும் இவருக்கு இடுப்பளவாயிருந்தது. ஆற்றின் நடுவே நீரானது கணைக்காலளவாக இரு க்க நின்ற குருநாதரைப்பார்த்து இவரும் நாம் நமது குருநாதரைப்போல அலக்நிரஞ்சனம் என்று சொல்லாமையாலல்லவோ நமக்கு அந்த நீர் இடை யளவாயிருக்கின்றது. ஆகையால் நாமும் அலக்நி ரஞ்சனமென்று சொல்லுவோமானால் நமக்கும் கணைக்காலளவாகவே இருக்குமென்று நினைத்து அலக்நிரஞ்சனம் என்று சொன்னார். அப்படிசொ ன்னவுடனே நீரானது இவருக்குக் கழுத்தளவாய்வி ட்டது. அப்போது இவர் அஞ்சிக் குருநாதரைப்பா ர்த்து அஞ்சலிசெய்து ஓ சுவாமி! ஆற்றில் அமிழ்ந்து போகின்றேனென்று கூவினர். அதைக்கேட்ட நானகரானவர்திரும்பிப்பார்த்து நீகுருதியானத்தை ஏன் விட்டாயென்று கேட்டார். அதைக்கேட்ட இவர் மறுபடியும் குருதியானம் செய்தவுடனே நீரானதுமுன்போலவேஇடுப்பளவாயிருந்தது. அத னால் குருநாதரோடுகூடவே போய்க் கரையேறினர். அப்போது நானகர் இவரை நோக்கிச் சீடரானவர் கள் தமது குருநாதர்கள் சொல்லும் வழியும் நடந் தால் நன்மையுண்டாகும். அப்படி நடவாமற்போ னால் தீமையுண்டாமென்று சொன்னார். அதைக் கேட்ட மர்தனுவானவர் இனிமேல் சற்குரு தியான த்தை மறக்கமாட்டேனென்று சொல்லி நானகரு டைய திருவடியை வணங்கிநின்றார். பிறகு குருசிஷ் யர் இருவரும் மக்காவுக்குச் சமீபத்திற் போய்ச் சேர்ந்தார்கள். அப்படிச்சேர்ந்தவுடனே அந்த மக் காவிலுள்ளவர்கள் மாட்டிறைச்சியும் சோறும் விற் கின்ற வழக்கத்தையும் இந்துக்கள் வந்தால் அவர் களைத் தம்முடைய ஊரில் பிரவேசிக்காமற் செய்வ தையும் தப்பிவந்தால் கொலைசெய்வதுமாகிய வழக் கத்தையும் நானக்கரானவர் உணர்ந்து அந்தமக் காவிலிருப்பவர்களுடைய கண்ணுக்குத்தோன்றாமல் தம்முடைய சீடருந்தாமுமாக ஊருக்குள்ளேபோய் ஸ்ரீகண்ணபிரானுடைய திருக்கோயிலிற் பிரவேசித் தார்கள். அப்போது அங்குள்ளமுஜாவர் இவர்களைப் பார்த்து நீங்கள் யார்? இவ்விடத்திற்கு எப்படி வந் தீர்களென்று கேட்க, நானகரானவர் இந்த முஜாவ ரைப் பார்த்து உற்பத்தி திதிகளுக்குக் காரணமாகி சிற்பரமாகி, சோதியாகி, சர்வகுணங்களுக்கும் அதீ தப்பட்டதாகி, சர்வவியாபகமாகி, நிராமயமாகி, தற்பரமாகி நிற்பது எந்தப்பொருளோ அந்தப்பொ ருளே நான். ஆகையால் உலகத்திலுள்ள அடியார் களைக் காத்துரட்சிக்கும் பொருட்டு இந்த ரூபங் கொண்டு இங்கேவந்தேனென்றுசொன்னார். அதைக் கேட்ட முஜாவரானவர் நீர் சொல்லுவது உண்மை யென்பதை உணரும்படி பரீட்சிக்க வேண்டியதா யிருக்கின்றது என்றுசொன்னார். அதற்கு நானகரா னவர் முஜாவரைப்பார்த்து ஐயா! உமது இஷ்டம் போலப் பரீட்சிக்கலாமென்று சொன்னார். அப் போது முஜாவர் பழமையாயிருந்த இந்துக்களு டைய விக்கிரகத்தை இவ்வூராரெல்லாரும் சேர்த்து மண்ணிற் புதைத்துவைத்திருக்கிறார்கள். அந்த விக் கிரகம் முன்போலவே வந்து கோயிலில் நிற்கும்படி செய்வீரானால் உம்முடையசொல்லைநம்பலாமென்று சொன்னார். அதைக்கேட்ட நானகர் பக்த பரா தீனராகிய ஸ்ரீகண்ணபிரானைத் தியானம்செய்து ஓ! சுவாமி! அடியேன்சொன்னசொல் வீணாகாமல் இந் தத் துருக்கர் பார்க்கும்படி தேவரீர் வந்து கோயி லில் முன்போலவே நின்று சேவைசாதிக்கவேண்டு மென்று பிரார்த்தனைசெய்தார். அதுகேட்டதிரிவிக் கிரமனாகிய பகவானானவர் இவருடைய பிரார்த்தனை க்குத் திருவுள்ளங் கனிந்து இவரது விருப்பத்தின் படியே தம்முடைய திருவாழி திருச்சங்கங்களோடு எழுந்தருளினர். அவ்விதமாக எழுந்தருளின பக வானை நானகர் பலவகையாகத் தோத்திரம் செய்து வணங்கி நின்றார். அதைக்கண்ட முஜாவரானவர் பயந்து நானகருடைய திருவடிகளில் விழுந்து வண ங்கித் தோத்திரம் செய்து ஓ! சுவாமி! நீர் உண்மை யான தெய்வம் என்பதற்குச் சந்தேகமில்லையென்று மிகவும் மகிழ்ந்து புகழ்ந்து கொண்டாடினர். பிறகு அங்கிருந்து புறப்பட்டு மலைச்சாரல்களெல்லாவற் றையும் கடந்து ஒரு நதியினருகேவந்தார். அவ்வி டத்தில் ஒரு அரசன் தன்னுடைய சேனைகளோடும் வந்தான். வந்தவன் அவ்விடத்திலோடுகின்ற அந்த நதியின் வெள்ளத்தைக்கண்டு பயந்து அதைத்

தாண்டிப் போகமாட்டாமல் அந்த நதிக்கரையி லேயே நின்றான். அப்படிப்பட்ட அந்த அரசன் இந்த நானக்தாசரைக் கண்டமாத்திரத்தில் இவரு டைய திருவடிகளை வணங்கி ஓ! சுவாமி! தேவரீர் நாங்கள் இந்த நதியைக் கடந்து போகும்படியான ஓர் உபாயத்தைச் சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்தனைசெய்தார். அதைக்கேட்ட இவர் அங்கு கிடைத்த ஒரு காகிதத்தால் ஒரு தோன்னைசெய்து அதை அரசன் கையிற்கொடுத்து அரசனே! நீ இந் தத் தோன்னையின்மேல் நீ உன்னுடைய பரிவா ரங்களுடன் ஏறிக்கொண்டு நிர்ப்பயமாய் ஆற் றைக் கடக்கடக்கலாமென்று சொல்லித் தாமும் தமது சீடருடன் விரைவாக ஆற்றைக் கடந்து வந்து வீற்றிருந்தார். அதைக்கண்ட அரசன் இவர் கொடுத்த தோன்னையின்மேல் தன்னுடைய பரிவாரத்துடன் ஏற அது புஷ்ப விமானம்போல இடம்கொடுத்துவந்தது. இவ்விதமாகச்சென்றஅரச னனவன் தனக்கு முன்னேவந்து நதியின் அந்தக் கரையில் வீற்றிருக்கிற நானக்தாசரைக் கண்டு அடி வணங்கி ஓ! சுவாமி! தேவரீர் சாக்ஷாத் பகவதம்ச மென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. ஆகை யால் அடியேனுக்கு ஸ்ரீமந்நாராயணனைக் காண வேண்டுமென்கிற ஆசை அதிகரித்திருக்கின்றது. ஆகையால் அடியோங்களுக்கு ஸ்ரீமந்நாராயணனு டைய சேவை உண்டாகும்படி செய்தருளவேண்டு மென்று பிரார்த்தனைசெய்தான். அதைக்கேட்ட நானக்தாசர் ஓ! அரசனே! அந்தப் பகவத்ஸேவை யானது ஞானசிரியனுடைய உபதேசமுகத்தால் கிடைக்குமேயல்லாமல் வேறுவகையால் கிடைக்க மாட்டாதென்று சொன்னார். அதைக்கேட்ட அரச னும் நல்லதென்று வணங்கித் தன்னுடைய ஊருக் குப் போய்விட்டான். அதன்பிறகு நானகரானவர் தம்முடைய சீடர்களோடும் அங்கிருந்தும் புறப் பட்டு புனாநகரத்திற்குப்போனார். அந்த நகரத்தில் பெருந்தவத்தினையுடைய கோரக்கர்என்பவர் எழுந் தருளியிருந்தார். அவரைக்கண்டு இவர் வணங்குத லும், கோரக்கரானவர் இந்த நானக்தாசரைப் பார் த்து ஓ! அன்பின்மிகுந்த நானகரே! உம்முடைய மகி மையானது இந்த உலகத்திலெல்லாம் பரவி விளங்கு கின்றது. இப்பொழுது ஹரித்துவாரத்தில் நான்கு லக்ஷம்பேர் ஹரிதாசர்கள்வந்து சேர்ந்திருக்கிறார் கள். அவர்களெல்லாருக்கும் அமுதளித்தால் நன் மையாயிருக்குமென்று சொன்னார். அதைக்கேட்ட நானக்தாசரானவர் அந்தக் கோரக்கரைப் பார்த்து ஓ! சுவாமி! தேவரீர் உத்தரவுப்படியே செய்கிறேனெ ன்றுசொல்லி, பிறகு அவரைப்பார்த்து நீர்முன்னே போய் அமுதுசெய்யவேண்டுமென்று அவர்களுக் குச் சொல்லிவைத்தீரானால் நல்லதென்று சொன் னார். அப்படியே கோரக்கர் அவர்களுக்குச் சொல் லப் புறப்பட்டு ஹரித்துவாரத்திற்குப் போய்க் கொண்டிருக்கும்போது இந்த நானகரானவர் அவ ருக்கு முன்னே ஹரித்துவாரத்திற்போய்ச் சேர்ந்து அங்கிருந்த நான்குலக்ஷம் ஹரிதாசர்களுக்கும் அமு தளித்து அவர்கள் உண்டுமகிழ்ந்து நானக்தாசரைப் புகழ்ந்தபிறகு ஆகாசமார்க்கமாய்ப் போன கோர க்கரானவர் அந்த இடத்திற்குப்போய் அங்கிருந்த ஹரிதாசர்களைப் பார்த்து இன்று நானக்தாசரான வர் உங்களுக்கெல்லாம் அமுதளிப்பதாக உங்களுக் குச்சொல்லச்சொன்னார் என்றுசொன்னார். அதைக் கேட்டவர்களெல்லாரும் கோரக்கரைப் பார்த்து கோரக்கரே! நானகரானவர் இன்று இவ்விடத்திற்கு வந்து எங்களுக்கெல்லாம் அமுதளித்து எங்களைமகி ழ்வித்து இப்போதுதான்போனார், என்று சொன் னார்கள். அதைக்கேட்ட கோரக்கரானவர் மிகவும் சந்தோஷித்துநானகரைப்புகழ்ந்துகொண்டிருக்கும் போது நானகரும் வந்து கோரக்கரை வணங்கினின் றார். அந்தச் சமயத்தில் கோரக்கரானவர் நானக ரைத் தழுவிக்கொண்டு நான் ஆகாசமார்க்கமாய் வந்துகொண்டிருக்க, நீர் சூட்சும ரூபங்கொண்டு எனக்கு முன்னேவந்து இங்கிருக்கும் ஹரிதாசர்க ளுக்கெல்லாம் அமுதளித்து அவர்களை மகிழச்செய் தீர். ஆகையால் உம்மைப்போல பகவத்பக்தர் இவ் வுலகத்தில் ஒருவருமில்லையென்றுசொல்லி மனம் சந் தோஷித்து ஆகாசமார்க்கமாய்ப் போய்விட்டார். நானகரும் தம்முடைய மடத்தையடைந்து சிஷ்ய வர்க்கங்களோடு சேர்ந்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனம் செய்துகொண்டு சுகமாக வாழ்ந்துகொண் டிருந்தா ரென்று சொல்லி, மற்றச் சித்தர்களுக்கு விடைகொ டுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடம் சென்று ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து கொண்டிருந்தார்.

நானக்தாசர் சரித்திரம் முற்றிற்று.

அறுபத்தொன்பதாவது

# நாபாஜிபக்தர் சரித்திரம்.

துதி கவி.

கருமேனி வண்ணனைக் கையாழி மெற்றுய்ந்த
திருமேனி மெய்யடியர் திடமடையச் செய்விக்கு
முருமேனி யுறுமைய வுமைப்போ னுமொருதெய்வ
மிருமேனி கொண்டென்று மிலையென்றே யுணர்ந்தேமால்.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்றிரவு தாங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச்சென்று சந்தியாவந்தனம் முதலியவைகளை வேதங்களிற் சொல்லியிருக்கின்ற கிரமத்துடன் செய்துகொண்டு பிறகு ஸ்ரீமந் நாராயணனை உள்ளபடியே இதயதாமரையின்கண் எழுந்தருளப்பண்ணித் தியானம்செய்து உண்டிவினையை யொழித்து சிறிதுநேரம் துயின்று வைகறையானவுடன் எழுந்து ஈசானதிக்கிற் சென்று ஆசௌசாதிகளைக்கழித்துப் பின்னர் சுத்த கங்கைக்குச் சென்று நீராடித் தமது கிருகங்களுக்குச்சென்று பன்னிரண்டு இடங்களிலும் திருமண்காப்பினை வேதவிதிப்படி தரித்து ஸ்ரீமந்நாராயணனை நமஸ்காரஞ்செய்து தங்கள் சக்திக்கேற்ற உணவுகளை எடுத்துக்கொண்டு யாவரும் ஒன்றாகச் சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தர் இடங்கொண்டெழுந்தருளியிருக்கின்ற இடத்தை எதிர்நோக்கி நமஸ்காரம் செய்துக்கொண்டே சென்று அவரைக்கண்டு வணங்கி நமஸ்காரம்செய்து எழுந்து ஓசுவாமி! அடியோங்களுக்குத் தேவரீர் இதுகாறும் சொல்லிவந்த சரித்திரங்களால் எங்களுடைய மனமானது பூரணமயத்தை அடையாவிட்டாலும் சிறிதாயினும் ஒரு நிஜத்தை அடைந்துகொண்டுவருகிறது. ஆகையால் தேவரீர் நாங்கள் இன்னும் சுகத்தையடைய இன்றைக்கும் ஒரு பக்தருடைய சரித்திரத்தைச் சொல்லியருள வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதைக்கேட்ட ஸ்ரீ நாபாஜிசித்தரானவர் சித்தர்களே! நீங்கள் வேண்டிக்கொண்டவாறே நாம் சொல்லுகிறோம் கேளுங்களென்று ஸ்ரீ கண்ணபிரானைத் தியானித்துச் சொல்லத்தொடங்கினார். எப்படியென்றால்,

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்தில் உத்தரநாட்டிலே ஸ்ரீ காசிக்ஷேத்திரம் என்று ஒரு திவ்விய நகரமிருந்தது. அதில் ஆனந்தசுவாமி என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சர்வகுண வைராக்கியங்களில் சிறந்தவராயிருந்தார். அவருடைய சீடர் நந்தாநந்தசுவாமி என்பவர். அவர் சீடர் போகாநந்ததாசர் என்பவர். அவர் சீடர்கள் அக்கிராஜி கிலஜி என்பவர் இருவர். இவ்விருவர்களில் மூத்தவரான அக்கிராஜி என்பவர் நாள்தோறும் விஷ்ணுபக்தியை இடைவிடாமல் செய்பவராய் அவருடைய கலியாணகுணங்களை யெடுத்து வேஷம் போல் வைராக்கியமுள்ளவராய் சாந்திகுணமுதலிய குணகணங்களுக்கு இருப்பிடமானவரா யிருந்தார். இவரோ பிரவேதனிபதம்ஹஸ்தி முதலியவர்களுக்கு ஸ்ரீ ஹரிபக்தியை மெய்யன்போடு போதித்தார். சிரவணம் முதலிய ஒன்பதுவகையான பக்திகளில் ஒவ்வொரு பக்தியை ஒவ்வொருவருக்குக்கொடுத்து அவர்களை ஈடேற்றினவராயிருந்தார். இப்படியிருக்கும் இவருக்கு ஸ்ரீலட்சுமிநாதனாகிய பகவானானவர் தம்முடைய சுகுணரூபத்தோடு இவர் நினைத்தபோதெல்லாம் சேவைசாதித்துக்கொண்டு வந்தார்.

இவர் இப்படியிருக்கும் காலத்தில் அந்தத் தேசத்தில் காலமழை இல்லாமல்போய் சிறுமையுண்டாகி மிகுந்த துன்பத்தால் உயிர்கள் மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அப்போது அவ்வூரில் ஒரு குணவதியிருந்தாள். இவள் தன்னுடைய குழந்தைகளுக்குச் சோறுகிடைக்காமல் மிகவும் துன்பங்கொண்டு அங்கேயிருந்த ஒருநதிக்கரையின் தன்னுடைய குழந்தையை வைத்துவிட்டு நதியில்விழுந்து இறந்தாள். அப்போது தனியாயிருந்த அக்குழந்தையானது தாயைக்காணாமையாலும், பசியின் கொடுமையாலும் ஓவென்றலறி அழுதது. அவ்விதமாக அழும்போது அவ்விடத்தில் நீராடவந்த அக்கிராஜிதாசரானவர் அந்தக் குழந்தையைக்கண்டு மிகவும் மனமிரங்கி அதனருகேபோய் ஏனழுகிறாய்? என்று கேட்டார். அதற்கு அந்தக் குழந்தையானது நான் என்னுடைய தாயைச் சோறுகேட்டேன்; அவள் என்னைவிட்டு எங்கேயோ போய்விட்டாள் என்று சொல்லிற்று. அதைக்கேட்ட அக்கிராஜி மிகுந்தகிருபையுடையவராய் நீராடி மறுபடியும் அவ்விடம்வந்து அந்தக் குழந்தையையழைத்து பயப்படாதேயென்று அபயாஸ்தங்கொடுத்தார். அதனால் அந்தக் குழந்தைக்கு நாபாஜி என்னும் பெயர் உண்டாயிற்று. அப்படி அந்தக் குழந்தைக்கு நாபாஜி என்னும்பெயர்சூட்டி தமது இடத்துக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார். அவ்

விடத்தில் இந்த நாபாஜி என்பவர் அந்த மடத்தினிடத்தில்வந்து திருவமுதுசெய்கிற பெரியோர்களுடைய எச்சிலையேயுண்டு வளர்ந்துகொண்டு வந்தார். இதைக்கண்ட அக்கிராஜியானவர் நாள்தோறும் செய்கிற தேவதா அர்ச்சனைமுதலியவற்றைப் பார்த்தலும், மடத்தின் புறத்திலிருந்து வருகிற பெரியோர்களையெல்லாம் திருவடிவணங்குவதாலும் மடத்தில் நடக்கும் ஸ்ரீ பாகவத காலக்ஷேபம் முதலியவற்றைப் பார்த்தலாலும் இவருடைய சஞ்சித கர்மங்களெல்லாம்நசித்து உண்மைஞானமுண்டாகி உலகத்திலுள்ள எல்லாருடைய இருதயத்தையும் அறியத்தக்க விவேகமுள்ளவனாய் முக்காலங்களிலும் நடக்கும் வர்த்தமானங்களையெல்லாம் அறியவல்லவராய் மவுனநிலையை யுவடயவராயும் இருந்தார்.

இப்படி இருக்குங்காலத்தில் ஒருநாள் அக்கிராஜியானவர் கங்கைக்கரையில் நீராடி ஸ்ரீஹரிபூஜை செய்துஹாரதிசமர்ப்பித்துஸ்ரீமந்நாராயணனுடைய சரணாரவிந்தங்களைத் தாழ்ந்து வணங்கி ஸ்ரீ நாபாஜியென்றே யழைத்து ஒருவரையும் உள்ளேவிடாமல் இருக்கக்கடவாய்? என்று உத்தரவுகொடுத்து, கதவினையடைத்து மேலே ஒரு கம்பளத்தைப் போர்வைசெய்து மானசபூசையிற் பொருந்தி ஏகாக்கிர சித்தமாகவிருந்து தியானம்செய்தார். இவரிவ்வாறு நெடுநேரம் செய்யவும் ஸ்ரீஹரியானவர் இவருக்கு முன் தரிசனம் கொடுப்பதற்கு வராதிருக்கவே இவருடையமனமானது மிகவும் வருத்தத்தையடைந்து தியானித்துத் தியானித்து ஒருவகையாக அமர்ந்து இருந்தார். வெளியே காவல் தொழிலிலிருந்த நாபாஜிபக்தரானவர் உணர்ந்து ஓ சுவாமி! சமுத்திரத்தில் ஒருவணிகனுடையகப்பல் முழுகிப்போகின்றது. அதை அந்தக் கப்பலுக்கு எஜமானனாகிய வணிகனானவர் பார்த்து ஸ்ரீ துவாரகா பரிபாலகனாகிய ஸ்ரீமந்நாராயணனை உள்ளபடியேநினைத்து என் கப்பல் முழுகாமல் கிருபைசெய்வாயானால் உனக்கு பரமபக்தனாயிருக்கின்ற அக்கிராஜிக்கு இந்தக் கப்பலிலுள்ள பொன்னில் ஐந்திலொருபாகங் கொடுப்பேன்? இந்தவிஷயத்தில் தவறமாட்டேன்? என்று பிரார்த்தித்துக்கொண்டான். அப்போது அந்த வணிகனுடைய கப்பலை முழுகிப்போகாமலிருக்கும் படி செய்வதற்காகவும் உமக்கு லாபமுண்டாக்குவதற்காகவும் ஸ்ரீமந் நாராயணனான பகவானானவர் அவ்விடத்திற்குப் போயிருக்கிறார். ஆகையால் நீர் சிறிதுநேரம் பகவானை நினையாதிருக்கவேண்டும் என்று சொன்னார். அதைக்கேட்ட அக்கிராஜியும் அவ்வாறே பகவானை கொஞ்சநேரம் நினையாதிருந்தார். அந்தச்சமயத்தில் கொஞ்சநேரம் பொறுத்து நாபாஜிபக்தரானவர் ஸ்ரீ அக்கிராஜியை அழைத்து ஸ்ரீகண்ணபிரானானவர் இதுவரைக்கும் வணிகனுக்காக மரக்கலத்தைக் காத்துக்கொண்டிருந்து இப்பொழுது திரும்பிவந்தார். ஆகையால் நீர் இப்பொழுது அவரைக்குறித்து தியானம் செய்யலாமென்று சொன்னார். அதைக் கேட்டவுடனே அக்கிராஜியும் கண்ணபிரானை உள்ளபடியே தியானம் செய்தார். அப்போது கண்ணபிரானும் இவருக்குப் பிரத்தியட்சமானார். அப்படி பிரத்தியட்சமான பகவானுடைய பீதாம்பர ஆடையானது நனைந்திருந்தது. அதைக்கண்டு வணங்கித் தோத்திரம்செய்து சக்கரபாணியாகிய பகவானே! நீ இந்நேரம் எங்கே போயிருந்தாய்? என்று வினவினார். அதைக்கேட்ட பகவானானவர் அந்த அக்கிராஜிபக்தருக்கு அப்பா! கடலில்முழுகும் வணிகனுடைய கப்பலை முழுகாதபடி காத்துவந்தேன். அன்று அவ்வணிகன் அந்தக் கப்பலிலுள்ள பொருளில் ஐந்திலொருபாகம் உனக்கு அனுப்புவான். அதை வாங்கி மடத்துக்கு உபயோகிக்கக்கடவாய்? உனக்கோ மடத்தின் செலவு அதிகமா யிருக்கின்றதென்று சொல்லி, இவர் செய்யும் மானசபூசை முடிந்தவுடன் மறைந்துபோனார். அதன்பிறகு அக்கிராஜியானவர் கதவைத்திறந்து நாபாஜிபக்தரை உள்ளேயழைத்து பிரமதேவனுக்கும் தெரிந்துகொள்ள வொண்ணாத சங்கதியை நீ எப்படி தெரிந்துகொண்டாய்? என்றுகேட்டார். அதற்கு நாபாஜியானவர் சிரித்தமுகத்தோடு நின்று ஓ சுவாமி! நாள்தோறும் சாதுக்களுடைய பிரசாதங்களை உண்டதனாலும் தேவரீருடைய கிருபாவிசேஷத்தினாலும் ஸ்ரீகண்ணபிரானுடைய செய்கைகளை உணர்ந்து சொன்னேன் என்று சொன்னார். அதைக்கேட்ட அக்கிராஜிபக்தரானவர் கருணைகூர்ந்து நாபாஜிபக்தருடைய திருமுகத்தைப்பார்த்து ஸ்ரீஹரியின் விசேஷ கலியாணகுணங்களைப் புகழ்வதிலும் அவருடைய அடியார்களைப் புகழ்ந்தால் அந்த இறைவனுக்கு மிகவும் திருவுள்ளமானது சந்தோஷமாகின்றது. ஆனால் இந்த இரகசியார்த்தமானது உலகத்தாருக்குத் தெரியாது. நானே இதனை உனக்கு விளங்கும்படிசொன்னேன். ஆகையால் இதனைத் தெரிந்துக்கொள்வாயாக என்று சொன்னார். அதற்கு நாபாஜியானவர் அக்கிராஜியின் திருவடிகளை வணங்கிப்புகழ்ந்து ஆசாரியர் நியமனப்படி பக்தருடைய சரித்திரத்தை குவாலியாருடைய பாஷையினும் பிராகிருதபாஷையிலும் வழங்கும்படி தினந்தோறும் பிரபந்தரூபமாக எழுதிக்கொண்டிருந்தார். இவர் இவ்விதமாக எழுதுவதை அந்தத் தேசத்திலுள்ளவர்கள் கேள்விப்பட்டு இவரை வணங்கி இவரிடத்தில் பக்த சரித்திரத்தை சிரவணம்செய்தும் மனனஞ்செய்தும்புகழ்ந்தும் இருக்கலானார்கள். என்றுசொல்லி மேலே மற்ற சித்தர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தமது இருப்பிடஞ்சென்றார்.

70 நாபாஜிபக்தர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

எழுபதாவது

# கோமாயியம்மாள் சரித்திரம்.

ஸ்தோத்திரம்.

மாமாயை களைந்திட வல்லபெரு மானெம்
ஆமாயை சொல்லடியை வணஞ் சென்றருள்
கோமானே நீயேயெங் கொள்கை யறிந்திடு
கோமாயி யம்மாள் கதையைக் கூறுவாம்.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்றிரவு தங்கள் தங்களுடைய திருமனைகளுக்குச் சென்று அன்றிரவு சந்தியாவந்தனம் முதலியவைகளை முடித்துக்கொண்டு போஜனம்செய்து ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து அன்றிரவு நித்திரை செய்து சூரியோதயமானவுடன் நித்திரைவிட்டெழுந்து கீழ்த்திசையிற்சென்று புல் பூண்டு முதலியவைகள் முளைத்திராத வெறுந்தரையில் நித்தியானுஷ்டானவிதிப்படி ஆசௌசாதிகளைக் கழித்து அங்கிருந்தும்வந்து சுத்தகங்காதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து திருமண்காப்பிட்டு நித்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து உள்ளன்போடு வணங்கி போஜனங்கள்செய்து அங்கிருந்தும் யாவரும் ஒன்றாகச்சேர்ந்து நாபாஜி சித்தரிருக்கின்ற இடத்தை எதிர்நோக்கித் தரிசனம் செய்து அவ்விடம்சென்று அவரைக்கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம்செய்து ஓ சுவாமி! தேவரீர் இதுவரைக்கும் எங்களுக்குத் திருவாய்மலர்ந்து வந்ததுபோல இன்றைக்கும் அடியோங்களுக்கு ஒரு பக்தருடைய விஜயத்தைத் திருவாய்மலர்ந்தருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். அதைக் கேட்ட நாபாஜிசித்தரானவர் நீங்கள்கோரியவாறே சொல்லுகின்றேனென்று சொல்லத்தொடங்கினர். எப்படியென்றால்;

கேட்டீர்களோ சித்தர்களே! முன்னொருகாலத்திலே ஒரு ஊரில் ஜீரணமான வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு வீடுகள்தோறும் இரந்துண்பதையே தொழிலாகக்கொண்ட ஒரு பிராமண விதவை இருந்தாள். அவள் பெயர் கோமாயியம்மாள் என்பது. ஒருநாள் இவள் ஸ்ரீ பண்டரிபுரயாத்திரை செய்வதாகப் புறப்பட்டு சந்திரபாகாநதியை யடைந்தார், அன்று ஆடிமாதம் சுத்ததசமி ஆகையால் அடுத்த நாளாகிய ஏகாதசி ஹரிதினத்தில் பண்டரிபுரத்திற்குப் போய்ச்சேரவேண்டுமென்கிற எண்ணத்துடன் இருக்கும்போது அந்த நதியானது அதிக வெல்லத்துடன் பெருகிவந்தது. அப்பொழுது யாத்திரைக்காரர் ஓடமேறிப்போய் அக்கரைசேர்வதையும்பார்த்து தம்மிடத்தில் ஓடக்காரனுக்குக் கொடுக்கக் காசில்லையே? இதற்கு என்னசெய்வோமென்று மனவருத்தப்பட்டுக்கொண்டே ஓடக்கார னிடத்தில் வந்து அப்பா! நீ எத்தனையோபேரைக் காசுவாங்கிக்கொண்டு அந்தக்கரையில் சேர்க்கிறாய். நானோ ஏழையாகிய பார்ப்பன விதவையாயிருக்கிறேன். என்னிடத்தில் காசில்லை. என்னை அந்தக்கரையிற் கொண்டுபோய்ச் சேர்ப்பாயானால் உனக்குப் பெரும் புண்ணியமுண்டென்று சொல்லி ஓடத்தை நெருங்கினாள். அதைக்கண்ட அந்த ஓடக்காரன் இவரை தண்ணீரில் தள்ளிவிட்டு ஓடத்தை நடத்திக் கொண்டு போய்விட்டான். இவரோ தன்னுடைய வஸ்திரங்களெல்லாம்நனைந்து கரையிலேறிப் பெருங்குரலால் ஓவென்று இரைந்து அழுதார். அப்போது அங்கிருந்த மற்றொரு ஓடக்காரன் அம்மா! காசு கொடுத்தாலல்லவோ அக்கரை சேரலாம் என்று சொன்னான். அதற்கு அம்மையார் அப்பா! என்னிடத்தில் காசில்லை. ஆனால் கொஞ்சம் மாவிருக்கின்றது. அதைத் தருகின்றேன்; என்னை அந்தக்கரை சேர்த்துவிடு என்று சொன்னாள். அதைக்கேட்ட அவனும் சீ! சீ!! காசு கொடுக்காமற்போனால் ஓடத்தில் ஏற்றமாட்டோம் என்று சொல்லி ஓடத்தை நடத்திக்கொண்டு போய்விட்டான். அதன்பிறகு கோமாயியம்மையார் என்செய்வார்? மிகவும் பரிதாபம்கொண்டு ஓபண்டரிநாதா! அடியேன் நாயேன் எப்படி உன் சந்நிதியை யடைவேனென்று மிகவும் துக்கித்தார். இவர் வருந்துவதைத் திருவுளம்பற்றின ஸ்ரீபண்டரிநாதர் ஒரு ஓடக்காரன் போலவந்து ஓ அம்மே! நீ ஏன் துக்கப்படுகிறாய்? இந்த ஓடத்தில் ஏறிக்கொள்? உன்னை அக்கரை சேர்க்கிறேனென்று சொன்னார். அதைக்கேட்ட அம்மையார் இவனும் காசுகேட்பானே யென்று நினைத்து அப்பா ஓடக்காரா! என்னிடத்தில் இப்

போது ஒன்றும் காசில்லே. ஆனல் கொஞ்சம் மாவு இருக்கிறது. அதைக் கொடுக்கிறேனென்று சொன்னர். இதைக்கேட்ட பண்டரிநாதராகிய ஒடக்காரர் அம்மே! இங்கே வருபவர்களாகிய ஏழைகளேக் காசு வாங்காமல் அந்தக்கரையில் சேர்க்கும்பொருட்டே நான் இங்கேயிருக்கிறேன்; எனக்கு நீ ஒன்றும் கொடுக்கவேண்டிய தில்லே யென்று சொன்னன். அப்போது அம்மையார் அந்த ஒடக்காரரைப்பார்த்து-அப்பா! நான் முதுமையும் துர்ப்பலமுமுள்ளவள். அல்லாமல் இந்த வஸ்திரம் ஒன்றேயல்லாது எனக்கு வேறே வஸ்திரமும் கிடையாது. இது நனேந்தால் குளிரினல் வருந்துவேன். ஆகையால் என்னே அதிக சாக்கிரதையாய்க் கொண்டுபோய் அந்தக்கரையில் சேர்க்கவேண்டுமென்று சொன்னள். அதைக்கேட்ட ஒடக்காரர் அம்மே! உன்னுடைய ஆடையல்லாமல் உன்னுடைய காலும் நீரில் படவொட்டாமல் கொண்டுபோகிறேனென்று இவரைத் தூக்கித் தோள்மேல் வைத்துக்கொண்டு போய் அந்தக்கரையிற்சேர்த்தார். அப்போது அம்மையார் காலினும் நீர்படாமலிருப்பதைப் பார்த்து அப்பா! நான் உன்னுடையதோளில் ஏறிக்கொண்டு வந்ததனல் என்னுடைய காலில் நீர்படாமலிருப்பது உண்மையே? ஆனல் நீ நீரிலிறங்கிவந்ததனல் உன்னுடைய காலில் நீர் பட்டிருக்கவேண்டுமே? ஏன் அப்படிப் படவில்லே. இது என்ன ஆச்சரியம்! என்று சொன்னள். அதைக்கேட்ட ஒடக்காரராகிய பகவானனவர் அம்மே! நான் இங்கே தோணி செலுத்துவோனல்லன். பவக்கடல் கடத்தும் படவுக்காரன். ஆதலால் யார்வந்தாலும் என்னேயடைந்தவரைப் பவக்கடல் நீர் சிறிதும் படாமல் அவர்களே மோக்ஷதீரத்தில்சேர்ப்பேன் என்ருர். அம்மையார் பகவான் சொன்ன வார்த்தையைச் சிரத்தையோடு ஆராயாமல் மறுபடியும் மாவை வாங்கிக் கொள்ளும்படி சொல்ல, பகவானகிய படவுக்காரர் நான் கொடுப்பதேயல்லாமல் ஒருவரிடத்தில் வாங்கும் வழக்கமில்லே. நாளேக்கு ஹரிதினமாகையால் அந்தமாவை அடைசுட்டு பண்டரிபுரத்தில் ஒரு ஏழை வேதியர்கையில் கொடுத்தால் எனக்குப் பெரும் புண்ணியமுண்டு என்றுசொல்லி மறைந்து போனர். மறைந்தபிறகு அம்மையார் நீலமணிவண்ணனகிய பகவான் கோயிலிற்போய்ச் சேவித்துப் புறத்தே தூங்கி விடியற்காலத்திற்போய் சந்திரபாகாநதியில் முழுகிவந்து உபவாசமாயிருந்து பகவானே வணங்கி அன்று இரவில் பக்தர்கள் ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனம் செய்வதைக் கேட்டுக்கொண்டிருந்து துவாதசிதினத்தன்று காலேயில் சந்திரபாகையில் முழுகிக் கரையேறி அன்றைக்கு நான்கு வேதியருக்கு அமுதுசெய்விக்கவேண்டுமென்று எண்ணினர். ஆயினும் உப்பு பருப்பு அரிசிமுதலிய சாமக்கிரியைகள் ஒன்றுமில்லாமல் வெறும்மாவைக் கொடுத்தால் யார் வாங்குவார்கள்? என்று கவலேகொண்டு அங்கிருந்த சில வேதியரைப் பார்த்து ஐயன்மாரே! நீங்கள் என்னிடத்திலுள்ள கொஞ்சம் மாவை உங்களில் யாராவது ஒருவர் கைக்கொள்ளுங்களென்று பிரார்த்தித்தார். அப்போது அவர்களில் ஒருவரும் இவர் கொடுக்க எண்ணின மாவை கைக்கொள்ளாமல் போய்விட்டார்கள். அப்போது அம்மையார் பாண்டுரங்க பகவானே உள்ளபடியே தோத்திரம்செய்து ஓ சுவாமி! இந்தத்தினத்தில் பிராமணருக்குத் திருவமுது செய்விக்காமல் அடியேன் உண்ணுவது எப்படி? என்று மிகவும் வருத்தப்படுவதை உணர்ந்த பாண்டுரங்க பகவானனவர் ஒரு வேதியர் உருவங்கொண்டுவந்து அம்மே! நான் பலஹீனனுகிய கிழவேதியன். எனக்கு ஒரு கை மாவைக்கொடுத்தால் பெரும்புண்ணியமுண்டாகும் என்று சொன்னர். அதைக்கேட்ட கோமாயியம்மையார் மிகவும் மனம் சந்தோஷித்து தம்மிடத்திலிருந்த மாவைக்கொடுத்தார். அதைக்கண்டு அந்த வேதியர் அம்மே! என்னுடைய மிகுந்த பசிக்கு உண்ணும்படி விரைவாக இந்தமாவை அடைசுட்டுக் கொடுக்கவேண்டுமென்று சொன்னர். அம்மையாரும் அப்படியே அடைசுட்டுக் கொடுத்தார். அதைப் பகவானகிய கிழவேதியர் வாங்கி உண்டுக்கொண்டிருக்கும்போது புஷ்பவாசகியாகிய பெரியபிராட்டியார் ஒரு வயதுசென்ற சுமங்கலியாக எழுந்தருளிவந்து என்னேவிட்டு நீர்மாத்திரம் விருந்துண்ணுகிறீரோ? என்று சொன்னர். அவர் அப்படி சொல்லும்போது பகவானனவர் அம்மையாரைப்பார்த்து ஒரு சுமங்கலே வந்தாள். ஆகையால் உம்முடைய துணியில் முடிந்திருக்கிற மாவையும் அடை சுட்டுத் தரவேண்டுமென்று சொன்னர். அதைக்கேட்ட அம்மையாரும் தமது துகிலில் மாவு இருக்கக்கண்டு அதை அடைசுட்டுக்கொடுக்கப் பகவானனவர் வாங்கித் தாமும் பிராட்டியாருமாகத் திருவமுது செய்தார்கள். செய்து முடிந்தவுடனே மறைந்து போனர்கள். கோமாயியம்மையாரும் அதன்பிறகு அமுதுசெய்து தமதிடத்தைச்சேர்ந்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டிருந்தாரென்றுசொல்லி மற்றசித்தர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாமும் தமதிருப்பிடம்சென்ருர்.

கோமாயியம்மாள் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணயநம:

எழுபத்தொன்றாவது

# புண்டலீகர் சரித்திரம்.

துதி கவி.

அண்டர்போற்று மருங்கலைவிநோதன்
தொண்டுசெய்பவர் துணையாகநின்றிடும்
வண்டலங்கலின் வயங்குறுதோள்பெறு
புண்டலீகர் சரித்திரத்தைப்புகலுவாம்.

இவ்விதமாகச்சென்ற சித்தர்களெல்லாம் அன்று மாலை தங்கள் தங்களுடைய வீடுகளுக்குச் சென்று உள்ளபோஜனங்களைப்புசித்து ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்து யாவருங்கூடி இதுவரைக்கும் அவர்கள் கேட்டுவந்தகதைகளைபற்றிப் பேசிக்கொண்டிருந்து துயின்று, பொழுது விடிந்தவுடனே நித்திரைவிட் டெழுந்து கீழ்த்திசைசென்று ஆசௌசாதிகளைக் கழித்து அங்கிருந்தும்சுத்தகங்கையிற்சென்றுநீராடி வீட்டுக்கு வந்து திருமண்காப்பிட்டு ஸ்ரீமந்நாராய ணனை உள்ளபடியே தியானஞ்செய்து, வணங்கி போஜனங்கள் செய்து யாவரும் ஒன்றாகச் சேர்ந்து ஸ்ரீநாபாஜிசித்தர் எழுந்தருளியிருக்கின்ற இடத்தை எதிர்நோக்கித் தியானஞ் செய்துகொண்டே வந்து, அவரைக்கண்டு சாஷ்டாங்கமாகநமஸ்காரஞ்செய்து வணங்கி எழுந்து நின்று ஓ சுவாமி! தேவரீர் அடி யோங்களுக்கு இதுவரைக்கும்சொல்லிவந்ததுபோல் இன்றைக்கும் ஒருபக்தருடையவிஜயத்தை திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று சொன்னர். அதைக் கேட்ட நாபாஜிசித்தரானவர் அப்படியே சொல்லு கிறேனென்று சொல்லத் தொடங்கினர். எப்படி யென்றால்:

கேட்டீர்களோ சித்தர்களே! பூர்வத்தில் உலகத்தினிடத்தில் வசிக்கின்ற எல்லா ஆன்மகோடிக ளும் புகழ்ந்து பேசுகின்ற மிகவும் பெருமைபெற்ற தாகவிருக்கின்ற பதுமபுராணத்திலே ஸ்ரீ உமாதேவி யின் திருவுள்ளமானது பிரகாசிக்கும் பொருட்டு திரிபுரதகனனுகிய ஸ்ரீபரமேசுவரனனவன் திருவாய் மலர்ந்தருளினதை கல்வியறிவொழுக்கங்களிற் சிறந் தவரான ஸ்ரீதரரென்பவர் விஸ்தாரமாய்ச் சொன்ன இந்தச் சரித்திரத்தை உள்ளன்போடு யாவரும்கேட் டுப் பிழைக்கவேண்டும். முன்னே அழகிய கயிலாய மலையில் தேவசம்மியனால் நிர்மாணஞ் செய்திருக்கிற நவரத்தினகஜிதமான ஒருமண்டபமிருந்தது. அதில் சிவபெருமானனவர் சர்வஆடம்பரங்களுடன் எழுந் தருளியிருந்தார். அந்தச் சமயத்தில் உமாதேவியார் தம்முடைய பிராணநாயகராகியசிவபெருமானை உள் ளன்போடு பார்த்து, சுவாமி! இந்த நிலவுலகத்தில் நிலைபெற்று விளங்குகின்ற ஸ்ரீபண்டரிபுரத்தில் ஸ்ரீ லட்சுமிநாதனுகிய திருமாலானவர் நித்திய வாசஞ் செய்வது யாதுகாரணத்தாலோ? அந்த விஷயத்தை தேவரீர் எனக்குத் திருவாய் மலர்ந்தருளவேண்டு மென்று பிரார்த்தனைசெய்து கேட்டருளினர். அத ற்கு அந்த சிவபெருமானனவர் உமாதேவியாரைப் பார்த்து பொற்கொடிபோல்பவளே! அதன் சங்க தியைச்சொல்லுகிறேன் கேளென்று சொல்லத்தொ டங்கினர். எப்படியென்றால் திருத்துழாய் மாலையை யணிந்த திருமாலானவர் ஸ்ரீவைகுண்டத்தில் வீற்றி ருந்த திருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்ற கால த்தில்யாவரும்புகழ்ந்து துதிசெய்வதற்குரியவளான பேரழகியாகியஇந்திராணியானவள் அவ்விடத்திற்கு வந்தாள். அவள்ஸ்ரீமந்நாராயணனைக்கண்டுசேவித்து மிகுந்த அன்பினால் பலவகையான தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டுநின்று அந்தத்திருமாலின்பேரழ காகிய சமுத்திரத்தில் முழுகி அவனுடைய திருவடி களைவணங்கி நின்று ஒருவார்த்தைசொல்லலுற்றாள். அது என்னவென்றால் இறைவனாகிய உன்னுடைய மடியின்மேல் நான் உட்கார்ந்திருக்கவேண்டும் என் பதாம். ஆகையால் நான் விரும்பினவண்ணமே என க்கு வரங்கொடுக்க வேண்டுமென்று வேண்டிக்கொ ண்டாள். அதற்குத் திருமாலானவர் அவளிடத்தில்

மிக்க அன்புள்ளவராய் அவளை நோக்கி பெண்ணே! நீ பூலோகத்திற்சென்று அறுபதினயிர வருஷம் அருமையான தவத்தைச் செய்தாயானல் நான் துவாரகையில் கிருஷ்ணவதாரம் செய்து உன்னுடைய விருப்பத்தின்படியே உன்னை என்னுடைய மடியின்மேல் வைத்துக்கொள்ளுவேன் என்று அருளிச்செய்துவிடைகொடுத்தனுப்பிவிட்டார். அதைக் கேட்ட இந்திராணியானவள் இறைவனுடைய திருவடிகளை சாஷ்டாங்கமாக வணங்கி தேவரீர் அடியேனுக்கு உத்தரவுகொடுத்த வண்ணமே செய்கிறேனென்று சொல்லிப்போய் நிலவுலகத்தில் ஒரு பரிசுத்தமான இடத்தையடைந்து மனம், வாக்கு, சித்தம், ஆகிய திரிகரண சுத்தியோடு அறுபதினயிர வருஷம் வரைக்கும் மிகவும் அருமையாகத் தவம் செய்தார். அந்தத் தவத்தின் பலனனது அவளைக் கோகுலத்தில் பிறக்கச் செய்தது. அவ்வாறு அவள் பிறந்து வளர்ந்து இளமைப் பருவமாயிருக்குங் காலத்தில் ஸ்ரீகண்ணபிரானுடன் கூடி விளையாடிக் கொண்டிருக்கையில் ஸ்ரீகண்ணபிரான் அந்தக் கோகுலத்தைப் பிரிந்த பிறகு இந்திராணியானவள் அவனுடைய பிரிவினல் மனம் மயங்கி உடலும் மெலிந்தாள். இப்படி அனேககாலம் கழிந்தபிறகு ஸ்ரீகண்ணபிரானை நினைத்துப் பூர்வகாலத்தில் தனக்கு அவர் கொடுத்த வரமானது தன்னைச் சீக்கிரமாக நடத்தி நடந்துபோய் துவாரகாபுரியைச் சேர்ந்து வேற்றுருக்கொண்டு அந்த மேகவண்ணனகிய ஸ்ரீகண்ணபிரான் எழுந்தருளியிருக்கின்ற கோயிலிற் பிரவேசித்து அவனுடைய பேரழகின் சிறப்பைப் பார்த்து அந்தத் திருக்கோயிலுக்கெதிரே நின்று வணங்கினமாத்திரத்தில் அந்த மேகவண்ணனகிய பகவானனவர் அந்தக்ஷணமே அவளை தம்முடைய கிருபை நிறைந்த திருக்கண்களாற் பார்த்து பூர்வரூபம் மாறியிருக்கிற ராதையை வாரியெடுத்து தன்னுடைய மடியின்மேல் என்றைக்கும் நிலைபெற்றிருக்கும்படி வைத்துக்கொண்டான். அதைக்கண்ட ஸ்ரீருக்மணி பிராட்டியானவர் தன்னுடைய மனம் பொறுக்காதவளாகி ஸ்ரீகண்ணபிரான்மேல் மிக்க கோபங்கொண்டு அவரை நிஷ்டூர வார்த்தைகள் சொல்லி இறைவன் எவ்வளவுதாழ்ந்து சமாதானம் செய்தாலும் கோபம் நீங்காதவளாக விருந்தாள். இதைக்கண்ட ராதையானவள் ஸ்ரீகண்ணபிரானை விட்டு நீங்கிப்போகத் தண்டம் என்றுசொல்லப்படுகின்ற திண்டீரவனத்தில் ஒப்பற்றவனகிய ஸ்ரீகண்ணபிரானைத் தன்னுடைய மனதிலிருத்தி சகல துன்பங்களும் நீங்குவதற்கேதுவாகிய அருமையான தவத்தைச் செய்துகொண்டிருக்கையில் துவாரகா நகரத்திலிருந்த ஸ்ரீகண்ணபிரானனவர் ஸ்ரீருக்மணி பிராட்டியாரைவிட்டு நீங்கி ராதையின் பிரிவைப் பொறுக்காதவனய் அவள் எவ்விடத்தில் இருக்கிருளோ வென்று மரங்கள் நெருங்கின காடுகளெல்லாந் தேடிக்காணமல் மறுபடியும் கோகுலத்தை யடைந்து பசுவர்க்கத்தை யோட்டுகிற கோலே தண்டமாகவும் சங்கமே கமண்டலமாகவும் கையிற் கொண்டு திருத்துழாய் மாலையைக் கழுத்திலணிந்து குண்டலத்தைக் காதில் தரித்து ஒரு துறவிபோல் வெளிப்பட்டு எவ்விடத்திலுந் தேடிக் கடைசியாகத் திண்டீரவனத்தைச் சேர்ந்து அந்த வனத்தில் மலர்ந்திருந்த மலர்களின் அழகையும் இனிய கறி காய்களின் கூட்டம் தழைத்திருப்பதையும் மயில் குயில் கிளி, நாகணவாய்ப்புள் முதலான பறவைக்கூட்டங்களின் அழகையும், தடாகங்களின் அழகையும், அந்தத் தடாகங்களிலுள்ள தாமரைமலர்களின் மீது அன்னங்கள் அழகா யமர்ந்திருப்பதையும் பார்த்து மிகவும் அதிசயம்கொண்டு இவ்விடத்தில் கமலாசனையானவள் தங்கியிருந்தாலு மிருக்கலாம் என்று நினைத்து என்னுடைய பிராணநாயகியே! என்று பலதரங்கூவிக்கொண்டு சண்பகம்,புன்னை, அசோகு முதலான மரங்கள் நெருங்கின சோலையை யடைந்து, அவ்விடத்தில் தவம் செய்துக்கொண்டிருந்த ராதையைக் கண்டு அவளுக்கெதிரே வந்து நின்று கமலாலயத்திலுள்ளபெண்ணே! என்னுடைய அரிய மயிலே! என்னுடைய மார்பைவிட்டு நீங்கி என்னை வேற்றுடம்பாக்கி இவ்விடத்தில் வந்து வீற்றிருந்ததற்குக் காரணமென்ன? மனுஷ சஞ்சாரமில்லாததாய் துஷ்டமிருக சஞ்சாரங்களுக்கிடமா யிருக்கின்ற இந்தக் கானகத்தில் எவ்வாறு பிரவேசித்தாய்? இப்படிப்பட்ட வனத்தில் பிரவேசிப்பதற்கு உன் மனம் எவ்வாறு துணிந்தது? நீ தனியே தைரியங் கொண்டு எவ்வாறு வந்தனை? என்று வினவினர். அதைக்கேட்ட அந்த ராதையானவள் ஸ்ரீகண்ணபிரானைப்பார்த்து நீ யாவன்? கோலைக் கைக்கொண்டு இவ்விடத்தில் யாது செய்யவந்தாய்? என்று வினவக்கேட்ட ஸ்ரீகண்ணபிரானனவர்அவளைப்பார்த்து சேல்போலும் கண்களையுடையாளே! நான் உன்னைத் தேடிக்கொண்டே இங்கு வந்தேனன்றி வேருெரு காரணமுமில்லை. நீ யாவனென்று என்னை வினவினையல்லவா? நானே உனக்குக்கணவனென்று சொல்லியருளினன். அதைக்கேட்டராதையானவள் ஸ்ரீகண்ணபிரானைப் பார்த்து என்னுடைய கணவனுக்கு அநேக தேவியர் இருக்கின்றார்கள். ஆகை

யால் அவர் அவர்களைவிட்டு என்னிடத்திற்கு வர மாட்டாரென்று துணிந்து நான்தனியேவந்து அருமையாகிய தவம்செய்ய நின்றேன். இவ்விடத்தில் நீ உன்னுடைய உருமாறி என்னுடையகணவனென்று சொல்லிக்கொண்டு வந்தாய். உன்னை மதித்துப் பார்க்குங்காலத்தில் வஞ்சகனென்று தோன்றுகின்றது. அதுவல்லாமலும்பெண்கள் தனியே இருக்கிற விடத்தில் அச்சமில்லாமல் நீ வந்தது தகாதகாரியமாகும். ஆதலால் கொஞ்சமானாலும் இவ்விடத்தில் நில்லாமல் உன்னிடத்திற்குப் போவென்று சொன்னார். அதைக்கேட்ட மேகவண்ணனாகிய ஸ்ரீகண்ணபிரானானவர் புத்திதடுமாறி கண்களை யிமைக்காமல் தன் கையிலிருந்த தடியைத் தன்னுடைய முழங்கால்களினால் இடுக்கிக்கொண்டு இடுப்பில் கையை வைத்து நாசிமுனையில் தன்னுடைய பார்வையை வைத்து விருப்பத்தோடு இக்காலத்தளவும் ராதையின்முன் நிற்கின்றான். அப்படி நின்ற காலத்தின் அளவு எவ்வளவென்றால் இருபத்தெட்டு துவாபர யுகமாகும் .என்று சொல்லக்கேட்ட பார்வதிதேவியானவள் தன்னுடைய கணவனான பிராண நாயகனைப்பார்த்து என்னுடைய பிராணநாயகா! அதன் பின் நடந்தவைகளையெல்லாம் கிருபையுடன் எனக்குச் சொல்லியருளவேண்டுமென்று திருவடிகளை வணங்கிப் பிரார்த்திக்கச் சிவபெருமானானவர் சொல்லத்தொடங்கினார். எப்படியென்றால்ஓ!என்பிராண நாயகி! முன்னே திண்டீரனென்னும் அசுரனானவன் மிகுந்த அந்தகாரத்தை நீக்கி உலகத்தை ரக்ஷிக்கின்ற சூரியன் தன்னுடைய தேர்மேல் ஏறிச்செல்லவொட்டாமல் அவனைக்கட்டி உலகத்திலுள்ள பிராணிக ளெல்லாவற்றையும் பிடித்துக்கொண் டிருந்தான். அப்படியிருந்தகாலத்தில் அரிய தபோதனர்களும் தேவர்களும் ஒன்றாகக்கூடித் திருமாலின் திருவடியை யடைந்து இந்தச் செய்தியை விண்ணப்பம் செய்தார். அதற்கு அந்தக் கண்ணபிரான் திருவருள் சுரந்து அவர்களைப்பார்த்து, நானே மல்லிகார்ச்சுனன் என்றும் பேருடையவனாக அவதாரம் செய்து உங்களுக்குள்ள துன்பத்தை நீக்குவேனென்று வரம் கொடுத்தருளினார். இதுவோ பூர்வ காலத்தில் நடந்த சங்கதியாகும். இப்படியிருக்கையில் ஸ்ரீசந்திரன் என்னும் பேருள்ள ஒரு அரசன் என்னைநோக்கிப் பெரிய தவம் செய்தான். ஆகையால் நான் அவனுக்குப் பிரத்தியட்சமாகி உன்னுடைய விருப்ப மென்னவென்று கேட்டேன். அதற்கு அவன் திருமாலைப்போன்ற ஒரு புத்திரன் வேண்டுமென்றான். அதற்கு நான் ஸ்ரீகண்ணபிரானே உனக்குப் புதல்வனாகப் பிறப்பான் என்று மிகுந்த விருப்பத்தோடு வரந்தந்தேன். அவ்வாறாகவே ஸ்ரீலட்சுமிபதியானவன் ஸ்ரீசந்திரன் என்னும் அரசனிடத்தில் அவதாரம்செய்தான். மேலும் அப்படிப்பிறந்த அந்தப்புத்திரன் மல்லிகார்ச்சுனன்என்னும் பெயரைப்பெற்றான். அவன் ஒருகாலத்தில் வேட்டையாடும் பொருட்டு திண்டீரவனம் சேர்ந்தான். அந்த ராஜகுமாரனை அந்த அசுரவேந்தனாகிய திண்டீரன்பார்த்து நான் இருக்கிற வனத்தில் நீ வேட்டையாடும்பொருட்டு வரலாமோ? நான் உண்ணும் உணவுக்குச் சமானமானவனே யென்று கடுஞ்சொல்லைச் சொல்லிவந்து போர்செய்யத் தொடங்கி ஆயிரவருஷம் வரைக்கும் தம்முடைய சரீரத்திலுள்ள சதைகளெல்லாம் சிந்தும்படி யுத்தம் செய்தார்கள். அப்படி போர்செய்த காலத்தில் ஒருவருக்கொருவர் தோற்காமலிருக்க மல்லிகார்ச்சுனன் என்பவன் இவன் பலநாள் யுத்தம் செய்தும் தோல்வியடையாமல் இருக்கின்றான். இவனுடைய உயிர் மாய்வது எப்படி? நாம் என்ன செய்வோமென்று ஆலோசனைசெய்து லோகதண்டமென்று சொல்லப்படுகின்ற கதாயுதத்தைக் கைக்கொண்டு அந்த அசுரனையடித்து அவனுடைய உயிரைவாங்கி அவனுடைய உடம்பைப் பூமியில் வீழ்த்தினான். அந்த அசுரன் உயிரை விடும்போது ஸ்ரீஹரி யென்று உச்சரிக்க அதனைக் குற்றமற்ற நெறியில் ஒழுகாநின்ற மல்லிகார்ச்சுனனானவன் உணர்ந்து பிரகாசம்பொருந்திய தன்னுடைய திருமேனியோடு அவனுக்கெதிரேசென்று ஓ அசுரவேந்தனே! உனக்குவேண்டியவரங்களைக் கேட்டுக்கொள் என்று நியமிக்க, அதற்கு அந்த அசுரன் உன்னுடையகையிலுள்ள கதாயுதத்தால் நான் உயிரைவிட்டேன் ஆகையாலே நீ கைக்கொண்ட கதையின் பேர்கொண்டு இந்தவனமானது லோகதண்டமென்று பெயர் விளங்கும்படி செய்து அழகிய நகர் ஒன்றையுமுண்டாக்கி அந்த நகரத்தில் நீரும் நித்தியவாசம்செய்து கொண்டிருக்கவும் உன்னை அவ்விடத்தில் வந்து தரிசித்தவர்களுடைய சகல பாவங்களையும் போக்கி விளங்காநின்ற பானுதீர்த்தத்தை யடைந்து, இவ்வுலகத்தில் பெருமைபெற்று விளங்குகிறதாய் நானிறந்த இடத்தில் என்போல் ஒரு தீர்த்தமுண்டாக்கி, அதனிடத்தில் உன்னுடைய கதாயுதத்தை நிறுத்தவும்வேண்டும். அந்தத் தீர்த்தத்தில் முழுகிவந்து இந்தக் கதாயுதத்தை ஆலிங்கனம் செய்பவர்களுடைய சகலபாவங்களும் நிவர்த்தியாகக் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்தனைசெய்தான். திருமா

லானவர் அந்தவரத்தை அன்புடன் கொடுத்து தன்னுடைய வைகுண்டலோகத்தை அந்த அசுரனுக்கு அருளிச்செய்தார். இவ்விதமாக நடந்த அன்று தொடங்கி அந்தவனமானது எல்லாவளங்களும் அமைந்து விளங்கிக்கொண்டிருந்தது. அதன் பிறகு லோகதண்டமென்னும் பெயர் பூண்ட அந்தவனத்தில் சகல சற்குணங்களும் நிறைந்தவரும், பாபமில்லாதவரும் பிறவித்துன்பங்கள் ஒருங்கே நசித்தற்குக் காரணமான ஸ்ரீமந்நாராயண தியானம் செய்துக்கொண் டிருப்பவரும் சற்கருமங்களிலேயே காலம்கழிப்பவரும், சத்தியமே விரதமாகக் கொண்டவருமாகி ஜந்து என்பவர் ஒருவரிருந்தார். அவர் தம்முடைய பிராமணகுலத்துக்கேற்ற சாத்யகி என்னும்பெயருள்ள ஒரு கன்னிகையை மணம் செய்து கொண்டு இல்லறம் வழுவாமல் நடத்திவரும் காலத்தில் தமக்குப்புத்திரரில்லாமையால் அந்தப்புத்திரப் பேற்றைக் குறித்து நெடுங்காலம்வரைக்கும் தவம் செய்து அந்தத் தவப்பயனால் ஒரு புத்திரனைப்பெற்றுஅந்தப்புத்திரனுடையசௌந்தரியத்தைக்கண்டு மனம் சந்தோஷித்து, அவனுக்குப் புண்டலீகர் என்று நாமகரணம் செய்து, அன்போடு வளர்த்து வருங்காலத்தில், அந்தப் புத்திரனுக்குப் பதினாறு வயது நிரம்பினவுடனே அவருக்குக் கலியாணம்செய்து சந்தோஷித்திருந்தார்கள். பின்பு அந்த மைந்தர் துஷ்டராய்த் தாய் தந்தையர்களைவருத்திப் பலவிதமாக நிந்தனைசெய்து துன்பப்படுத்தி நாள்தோறும் விலைமகளுக்கு வசப்பட்டவராய் அவள்விரும்புகின்ற வேலைகளைச் செய்துகொண்டு திரியும்போது அவருடைய தீநெறியொழுக்கத்தை பெற்றோர்களுணர்ந்து அவரைப்பார்த்து நீ நமது குலாசார ஒழுக்கத்தையும், லௌகீக தருமத்தையும் நோக்காது இவ்வாறுநடத்தல்உனக்குநீதியல்லவென்று அன்பினுடன் பிரியவசனங்களால் போதிக்க அந்தப்புத்திரர் அந்தப் பிரியவசனங்களைச் சற்றும் செவிகொடுத்து ஏற்றுக்கொள்ளாமல் அவர்களைப்பார்த்து நீங்களிருவரும் இன்னமும் இறவாமலிருக்கின்றீர்களே யென்று பலவிதமான கடும்சொற்களைச்சொல்லி மிகவும் கோபங்கொண்டு அவர்களைக் கைச்சலிக்க அடித்து அவர்களைவிட்டுப்பிரிந்து தானும் தன்மனைவியுமாகத் தனியே வாழ்ந்திருந்தார்கள். இவர் இப்படியிருக்குங்காலத்தில் தந்தைதாயார் அவருடையதுன்மார்க்க ஒழுக்கத்திற்கு மனம்பொறுக்காமல் இவனைவிட்டுப்பிரிந்துபோய் இறந்துபோவதே உத்தமமென்று நினைத்துக் கவலைகொண்டிருக்கும்போது காசியாத்திரை போவோர் சிலர் அந்த இடத்தில் வந்து இறங்கினார்கள். அவர்களைக் கண்டவுடன் அவர்களோடு காசியாத்திரைபோவதாகத் துணிந்து அவர்களைத் தொடர்ந்து சென்று முன்சொன்ன லோகதண்டமென்னும்நகரத்தைச்சேர்ந்தார்கள் பின்னும் யாத்திரை போவோர்களைக் கண்டு புண்டலீகரும் அவர்களோடுபோக எண்ணித் தன்னுடைய மனைவியாரைப் பார்த்துப் பெண்ணே! நான் இந்தயாத்திரைக்காரர்களுடன் சேர்ந்து நானும் காசியாத்திரை போகயிருக்கின்றேன். ஆகையால் நீயும் வருவாயாக என்று சொன்னான். அப்படி போவோமானால் அந்தக் காசிக்ஷேத்திரத்திலிருக்கின்ற அனேக அதிசயங்களையும் பார்க்கலாமென்று சொல்லி அதற்கு அவன் சம்மதித்தவுடனே இருவரும் பிரயாணப்பட்டு இரண்டு குதிரைகளின்மேல் தனித்தனியாக ஏறிக்கொண்டுபோனார்கள். அப்படிப்போகும் வழியில் தமக்கு முன்னேபோன தம்முடைய தாய் தந்தையர் முதுமைப்பருவத்தினால் நடக்க முடியாமல் தள்ளாடிக் கொண்டு வருவதைப் பார்த்தும் மனதில்கொஞ்சமும்இரக்கமில்லாமல் அயலாரைப்போல பார்த்துக்கொண்டேபோய்க் காசிக்ஷேத்திரத்தின் சமீபத்தில் ஒருசோலையில் தவம் செய்துக்கொண்டிருந்த குக்குடர் என்னும் திருநாமத்தையுடைய முனிவரது ஆசிரமத்திற்குச் சமீபமாக இறங்கினார்கள். அந்த குக்குடர்என்னும் முனிவரதுமகிமையை எடுத்துப் புகழ்ந்து சொல்வதற்கு இரண்டாயிரம் நாவையுடைய ஆதிசேஷனாலும் முடியாது. அல்லாமலும் பிரமன் முதலிய சுத்தாத்துமாக்கள் யாவரும் பரமசாதுவாகிய அவரைத்துதிசெய்து தம்முடைய துன்பங்களையெல்லாம் நீக்கிக்கொள்வார்களென்றால் அவருடைய பெருந்தவத்தின் மகிமையைப் புகழ்ந்து உரைக்க வல்லவர் யாவர்? அந்தக் குக்குடயோகீஸ்வரரானவர் தம்மைப்பெற்ற தந்தை தாயாருடைய சேவையை நாள்தோறும் செய்துக்கொண்டு அவர்களுக் கெதிரிலிருந்து பிறவித்தளையை யறுப்பதற்குரிய புராணபடனம் செய்துகொண்டிருப்பார். மேலும் அவர்களை ஒருக்ஷணப்பொழுதாயினும் பிரியாமலும் ஆகாரநித்திரைகளில் விருப்பமில்லாமலும் இருந்துகொண்டு, கங்கை முதலிய புண்ணிய தீர்த்தஸ்நான பலத்தைப்பார்க்கிலும், அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை லபித்துக்கொள்வதே மிகவும் பெரும் புண்ணியமென்று மனதில் உறுதியாக நினைத்துக் கொண்டிருப்பார். அன்றியும் தாய் தந்தையரைப் பார்க்கிலும் பெரிதாகிய தெய்வம் வேறில்லையென மனவுறுதி கொண்டவர். அவரிடத்திற்கு கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் நதியுருவான

மாதர்கள் அர்த்தராத்திரியில் வந்து ஒரு க்ஷணநேரம் அவருடைய ஊழியத்தைச் செய்து தம்மிடத்தில் உலகத்தார் மூழ்குவதால் தம்மிடத்தடைந்த பாவங்களைப் போக்கிக்கொண்டு தத்தம் ஒளியுருவங்களோடு செல்லுவார்கள். ஆகையால் அப்படிப்பட்ட தபோமகிமையுள்ள குக்குட யோகீஸ்வரருடைய புகழையெடுத்துச் சொல்லுவதற்கு எனக்குச் சாத்தியப்படாது என்று சிவபெருமானனவர் உமாதேவியாருக்குச் சொல்லிப் பின்னும் சொல்லுகிறார் எப்படியென்றால் கேட்டாயோ பார்வதி! அந்த குக்குட முனிவருடைய ஆசிரமத்திற்கு எதிரிலிருக்கின்ற தருமசாலையில் மனைவியுடன் வந்திறங்கின புண்டலீகரானவர் அந்த மகா மகிமை பொருந்தினவரான குக்குடரைப்பார்த்து மிகவும்புகழ்ப்பெற்று விளங்குவதான காசிக்ஷேத்திரமானது இன்னும் எவ்வளவு தூரத்திலிருக்கிறதென்று வினவினர். அதைக்கேட்ட அம்முனிவர் காசியென்பதையும் அது இவ்வளவு தூரத்திலிருக்கிற தென்பதையும் யானறியேனென்று மறுமொழி சொன்னார். அதற்குப் புண்டலீகர் அந்தத் தவசியைப்பார்த்து இவ்வளவு சமீபத்திலிருந்தும் காசி க்ஷேத்திரத்தைத் தரிசனம் செய்யாத உம்முடைய பிறப்பும் ஒரு பிறப்பாகுமா என்று அவமதித்துப்பேசி நகைத்துத் திரும்பிவந்து அந்தச் சத்திரத்தில் தங்கியிருந்தார். அப்படி யிருக்கையில் அன்று இராத்திரியில் பதினைந்து நாழிகைக்குமேல் முன்னே சொன்ன நதிகளாகிய கங்கை முதலியவைகள் பெண்கள் ரூபமாகவந்து நீசரூபத்தை யடைந்து குக்குட யோகீஸ்வரருடைய ஆச்சிரமத்தில் பிரவேசித்தபோது நித்திரையில்லாமல் விழித்துக்கொண்டிருந்த புண்டலீகர், அவர்களைப்பார்த்து பேய்களென்று நினைத்து மனதில் அச்சங்கொண்டார். அப்படியிருக்க, வந்த நதிப்பெண்களாகிய மூவரும் அந்த ஆச்சிரமத்திலுள்ள குப்பைகளையெல்லாம் சீத்து நீக்கித் தரையை மெழுகிக் கோலமிட்டு அலங்காரம் செய்து ஒரு நிமிஷகாலத்தில் தாம் அடைந்துவந்த கோரரூபம்நீங்கி சௌந்தரியவதிகளாயும், தேஜோமயரூபத்தைக்கொண்டும் அவருடைய ஆச்சிரமத்தினின்றும் வெளியேவந்தார். அதைக்கண்ட புண்டலீகர் பயந்து ஆச்சரியமடைந்து அப்பெண்களிடத்தில் வந்து நீங்கள் யார்?முன்னே மலினமான ரூபத்தோடு என்னுடைய ஆச்சிரமத்தில் நுழைந்தீர்கள். இப்பொழுது ஒளியுருவாய்ப் புறப்பட்டீர்கள். இப்படிப்பட்ட இருள்மிகுந்த இராக்காலத்தில் இங்கு வந்ததற்குக் காரணம் என்ன? சொல்லுங்களென்று கேட்டார். அவர்களுள்கங்கையானவள் மறுமொழி சொல்லலுற்றாள். எக்காலத்திலும் தொலையக்கூடாத பாவங்களைச் செய்த பதிதனாகிய கெட்டவுயிரே! நீ குற்றமற்ற எங்கள் முன்னே வரவுந் தகுமோ? இவ்விடம் விட்டு விலகிப்போடாவென்று கோபித்துக்கொண்டாள். கங்கையானவள் இப்படி கோபித்துக் கொண்டதைப் பார்த்த புண்டலீகரானவர் அந்தக் கங்காதேவியின் பாதத்தைக்கிட்டி தமது இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு என் தாயே! என்பாவங்களை நீயே நீக்கி யருளவேண்டும் என்று பிரார்த்தித்தார். அவரைநோக்கி, கங்கையானவள் சொல்லுவாள். அடாபாவி! என்காலை விட்டு எழுந்திரு. நீ இப்பிறப்பிலே மிகவும் தீவினைகளையேசெய்திருக்கிறாய். ஆனாலும், முற்பிறவிகளில் நீ செய்த நல்வினைப்பயனே உன்னை இந்தக் குக்குட முனிவரிடத்துக்குக் கொண்டு வந்துவிட்டது. அவரைக்கண்ட புண்ணியத்தால் எங்களையும் கண்டாய். ஆகையால் இனி நீ எந்தப்பாவமுந் தொடங்கப்பெறாதவனாய் பரிசுத்தனாகக் கடவாய். நானே கங்கை இவளோ காளிந்தி அவளோ சரஸ்வதி எங்களை விரும்பிப் பரிசுத்தமான எம்மிடத்தில் மூழ்கியும் மூவுலகத்தாரும் பிறவி நீங்கப் பேரின்பவாழ்வைப் பெறுகின்றார்கள். அப்படி வந்து மூழ்குவோருடைய பாவங்களையெல்லாம் நாங்கள் ஏற்றுக்கொண்டு அதனால் மலினரூபங்கொண்டு அந்த ரூபத்தை இந்தப்பரிசுத்த ஆத்துமாவாகிய குக்குடமுனிவருக்கு ஊழியம்செய்து மாற்றி நல்ல புதுமையான ரூபங்கொண்டு இப்பொழுது போகின்றோம் என்று சொன்னாள். இப்படியே தினந்தோறும் செய்துக்கொண்டு வருகின்றோம். எதிர்ப்பட்ட நம்முடைய பாவங்களை உடனே போக்கத் தகுந்த சிறப்பினையுடைய இந்த முனிவருடைய பெருமையைச் சொல்லவல்லவர் எவரிருக்கின்றனர்? ஒருவருமில்லை என்று சொன்னாள். அதைக்கேட்ட புண்டலீகர் எழுந்து நின்று கங்கை முதலானவர்களைப் பார்த்து உங்களுடைய பாவங்கள் யாவையும் நசிக்கப்பண்ணுகிற புண்ணியத்தை இவர் எப்படிச் செய்தார்? என்று கேட்டார். அதைக்கேட்ட கங்கையானவள் புண்டலீகரைப் பார்த்து இவர் தமது தந்தை தாய்களை வழிப்படுகிற புண்ணியமேயல்லாமல் வேறல்லவென்று சொல்லிப் பின்னர் கோடியாகங்களைச் செய்த பலனை, பூவலம்செய்துப் புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கியும் பெறுகின்றபலனும் ஒப்பற்ற காசி க்ஷேத்திரத்தை இரண்டுலட்சம் தரம் வலம் வந்து பெறும்பலனும், தாயை வணங்குவதினு

லேயே சித்திக்கும் தந்தையை ஒருதரம் வணங்கினால் உயர்ந்த ஞானமானது உண்டாகும். தாய் தந்தையர்களுடைய வழிபாட்டினாலே ஸ்ரீமந்நாராயணனும் பிரத்தியக்ஷமாவார், என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆகையால் இந்தக்கருத்தை இந்த முனிவர் தமது மனதில் திரிகரணசுத்தியோடு கொண்டு தந்தைதாயாரையன்றி வேறுதெய்வமில்லையென்று துணிந்து, தினந்தோறும் இரவும் பகலுமாக அவர்களுடைய சேவையையே செய்கிறார். நாள்தோறும் தன் தாய் தந்தையரை நிந்திப்பவன் தீயொழுக்கத்திற்சேரும்புலையனுவான். கற்ப முடிவிலும் மீளவொண்ணாத கோரநரகத்தில் அழுந்தி வருந்துவான். எத்தனை ஜன்மங்களெடுத்தாலும் பெரிய வியாதிகளால் பீடிக்கப்படுவான். அவனைக் கண்டவர்களும் மிக்க பாவிகளாவார்கள், என்று சொன்ன மாத்திரத்தில் புண்டலீகர் பயந்து ஆ! தெய்வமே என்றிரங்கி மிகவும் துன்பமடைந்து எல்லாப் பாவங்களையும் ஒழித்து ஈடேறத் தகுந்த இந்த நரஜன்மமாய்த்தோன்றியும் இதை விணாக்கிப் புண்ணியத்தைக் கைக்கொள்ளாமல் பாவத்தைக் கைக்கொண்டேன்! இதற்கு நான் என்ன உபாயம் செய்வேன் என்றேங்கியிருந்தார். மேலும் தாய் தந்தையருடைய பணிவிடை செய்வதையும் நீங்கி, அவர்களை மனம் வருந்தவும் செய்தேனல்லவா? இந்தப் பெரும்பாவத்தை எப்படி நீக்கிக்கொள்வேன் என்று பலவாறுகப் புலம்பிக்கொண்டு அந்தமாதர்களுடைய பாதங்களில் விழுந்து அழுதார். இப்படி இவர் அழுவதைக் கங்கையானவள் நோக்கி மனமிரங்கி பாவி! இனியாகிலும் மனம் தெளிந்து உன் தந்தையும் தாயுமே பெருந்தெய்வங்களென்று நம்பி அவர்களுக்கு ஊழியம் செய்வாயானல் உன்னைச் சேர்ந்த பழிபாவங்களும் கழியும்; மூவுலகத்திலும் உள்ளவர்வந்து நிறைந்து சூழ்ந்திருப்பார்; விளங்குகின்ற பெருங்கீர்த்தியும் உண்டாகும். சக்கரபாணியாகிய திருமாலின் இனியஅருளும் உன்னிடத்துண்டாகும் என்று தாய்தந்தையரைவழிபடுதலால் உண்டாகிற பயனை விஸ்தரித்துச் சொல்லிக் காளிந்தி, வாணி என்னும் இருவரோடும் கூடிச்சென்றாள். பின்பு புண்டலீகர், இந்தக் கங்கை சொன்ன புத்தி மிகவும் நன்றேயாமென்று அன்புடன்போய், குக்குடருடையதிருப்பாதங்களைச்சேவித்து பிறகு தாய் தந்தையரைத் தேடினர். இவ்விதமாகத் தேடிக்கொண்டு அவர்களைக்குதிரைமேலேற்றிக்கொண்டு காசிக்குப்போய் கயை பிரயாகை முதலான புண்ணிய தீர்த்தங்களில் முழுகுவித்து அவர்கள்செய்யுங் கர்மங்களெல்லாவற்றையும் செய்வித்து தம்முடையமனைவியும் தாமுமாக சிறிதும் சோர்வில்லாமல் அவர்களுடைய பணிவிடைகளைச் செய்துகொண்டு தம்முடைய ஊருக்குவந்து அந்த தாய்தந்தையரைத் தம்முடைய வீட்டில் இருக்கச்செய்துகொண்டு நாள்தோறும் அவர்களுக்கு எந்தச் சமயத்தில் எந்தப் பொருள் வேண்டுமோ அந்தச்சமயத்தில் அந்தப் பொருளை வரவழைத்துக் கொடுத்து பரிசுத்த ஆத்துமாவாகிய குக்குடரைப்போலப் பணிவிடைசெய்துக்கொண்டிருந்தார். இவர் இப்படியிருக்க முன் யுகத்தில் விருத்திரன் என்னும் அசுரன் தேவராஜனாகிய இந்திரனைப் பார்த்து அவனைக்கொல்ல நினைத்து பாதாளலோகத்தை யடைந்து ஓரிடத்திலிருந்துக்கொண்டு, அருமையாகிய தவத்தைச் செய்தான். அந்தச் சங்கதியை இந்திரனானவன் கேட்டு உணர்ந்து அந்த விருத்திரனானவனிருக்கின்ற இடத்திற்குச் சென்று அவனுடைய தலையைத் தன்னுடைய வச்சிராயுதத்தால் அறுத்துத் தள்ளினன். அப்பொழுது அந்த விருத்திரனானவன் அந்த இந்திரனைப்பார்த்து நான் தவம்செய்யுங்காலத்தில் என்னுடைய தலையை அறுத்துத் தள்ளின பாவத்தால் நீ செங்கல்லாய்ப் பூமியில் விழக்கடவாயென்று சபித்தான். அப்படி அவன்கொடுத்த சாபத்தினால் இந்திரனானவன் செங்கல்லாகி பூமியில் விழாமுன் ஸ்ரீலட்சுமிநாதனாகிய திருமால் திருவுள்ளமகிழும்படி பற்பலவகைப்பட்ட தோத்திரம் செய்தான். அதைத் திருச்செவிசாய்த்துக் கேட்டருளிய ஸ்ரீமந்நாராயணனானவன் அந்த இந்திரனுக்கெதிரே எழுந்தருளிவந்து, வாராய் தேவராஜனே! நான் புண்டலீகாச்சிரமத்தில் வந்து செங்கல்லுருவாய்க் கிடக்கிற உன்மேல் அடியைவைத்து உன்னை பூர்வரூபமாகச் செய்து என்னுடைய பாதத்தில் கீழே கிடக்கும்படி செய்கிறேன். ஆகையால் நீ பயப்படவேண்டாம் என்று சொன்னான். அப்படியே அன்று முதலாக அவ்விந்திரனானவன் செங்கல்லுருவமாய்த் திண்டீரவனத்தில் கிடக்கிறான். இவ்விதம் கிடத்தலால் அந்த வனமானது திண்டீர நகரமாக அதில் புண்டலீகருக்கும் ஒரு திருமாளிகை அமைந்தது. அந்த மாளிகையின்கண் புண்டலீகரானவர் சுகமாக வாழுங்காலத்தில் அவரிடத்திற்கு எழுந்தருளவேண்டுமென்று எண்ணித் தன்னுடைய தேவியைத் திருத்துதற்பொருட்டு அவளுக்கெதிரே நிற்கிற ஸ்ரீமந்நாராயணனானவன் எழுந்தருளுகின்ற தன்மையைச் சொல்லுகிறேம் கேளும். எப்படியென்றால் தம்முடைய திருவடியில் நூபுரமானது தழை

த்து நகரில் கலீலென்று சத்தஞ்செய்யவும், சிற்றிடையில் கிண்கிணிகள் கலகலவென்று ஒலிக்கவும், இருதோள்களிலும் கங்கணங்கள் விளங்கவும், இரண்டு கைகளிலும் சங்குசக்கரங்கள் மிகவும் ஜொலிக்கவும், திருமார்பில் நவரத்தின ஹாரம் பிரகாசிக்கவும், திருச்செவியில் குண்டலங்கள்மின்னவும், நெற்றியில் நெறிகுழல் அசைந்துதோன்றவும், இரத்தினச்சுட்டியும் பட்டமும் விளங்கவும், சிங்கம் ரிஷபம் யானைக்கன்று என்பவைகளின் நடையைப்போல் நடந்து நீலரத்தினகிரி வருவதுபோல் வழியில் பூமியெல்லாம். ஸ்ரீபாதத்திலுள்ள சங்கு சக்கர ரேகைகள் அழுந்தித்தோன்றவும் எழுந்தருளி புண்டரீகரானவர் தம்முடைய தந்தை தாயாரை வழிபடுஞ்சமயத்தில் அவர் பார்க்கும்படி அவருக்குப் பின்புறத்தே வந்துநின்றார். அப்படி வந்து நின்றபோது ஸ்ரீ கண்ணபிரானுடைய பசுமையாகிய ஒளியை தந்தையின் பாதங்களைத்தீண்டி நமஸ்காரஞ்செய்து கொண்டிருந்த புண்டலீகரானவர்கண்டு இந்த ஒளி யாது? என்று முகத்தைத்திருப்பி ஸ்ரீ கண்ணபிரானுனவர் சமீபமாக நிற்பதைப்பார்த்து கங்காதேவியானவள் நமக்குக்கொடுத்த வரமானது இன்றுதானே கிடைத்ததென்று மிகவுமகிழ்ந்து தலையைவணங்கி தமக்கு அருகில் கிடக்கிற செங்கல்லை எடுத்தெறிந்து இதன்மேல் கொஞ்சநேரம் நிற்பாயானல் என்னுடைய வேலையை முடித்துக் கொண்டு வருகிறேனென்று சொல்லிவிட்டுத் தம்முடைய தாய் தந்தையரது பணிவிடைகளைச் செய்து கொண்டிருந்தார். இதைக்கண்ட ஸ்ரீ கண்ணபிரானவர் இந்திரனுகியசெங்கல்லின்மேலேறி இரண்டு கைகளையும் இடுப்பின்மேல் வைத்துக்கொண்டு புண்டலீகர் தாய் தந்தையரை சேவைசெய்துக்கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தார். அப்போது புண்டலீகர் தம்முடைய தாய் தந்தையரைச் சேவைசெய்து முடிந்தபின்னர் பீதாம்பரமானது மிகவும் ஒளியை வீசும்படி பசுக்களை ஓட்டுகின்ற கோலைத் தோளின்மேல் வைத்துக்கொண்டு நிற்பவனை ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம்வந்து செங்கல்லின்மேல் சமசரணமாய் நிற்கிற அழகைக்கண்டு சாஷ்டாங்கமாகப் பணிந்து பேரானந்தக்கடலில் முழுகினர். இவ்விதமாகச் சற்றுநேரங் கழிந்தபிறகு எழுந்துநின்று பலவகையாய்த் தோத்திரஞ்செய்து கொண்டிருந்தார்.

இவர் இவ்வாறு நிற்பதைக் கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீமந்நாராயணன்பார்த்து ஓ புண்டரீகனே! உன்னைப்போன்ற பக்திமான்கள் இவ்வுலகத்தில் நான் கண்டதில்லை. ஆகையால் நீ வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளக்கடவாய் என்று நியமித்தார். அதைக்கேட்ட புண்டலீகர் பகவானைப்பார்த்து ஸ்ரீமந்நாராயணசுவாமி! திரிமூர்த்தி சொரூபங்களும் நீயேயாகி விளங்குவதனாலும், மூடர்களைக் கடைத்தேற்றுகிற குணத்தினாலும், தேவரீர் விட்டலன் என்னுந்திருநாமம்பூண்டு எக்காலத்திலும் இவ்வண்ணமாகவே எழுந்தருளியிருந்து உன்னைவந்து அடைந்து வணங்குவோர் யாவரும் சர்வ பாவம் விமோசனராகச் செய்து இந்தத் தலச்சார்பினுல் தேவரீரும் பாண்டுரங்கன் என்னுந் திருநாமத்தைப் பெற்று நித்தியவாசஞ் செய்யவேண்டும். மேலும் இந்தத்தலத்தில் எல்லாத் தீர்த்தங்களிலும் சிறந்த தீர்த்தமொன்றே யுண்டாக்கி அதில் மூழ்கினல் யாவரும் பரிசுத்தராகும்படி யமைத்தருளவேண்டும் என்று பிரார்த்தனைசெய்தார். அப்படியே பகவானும் புண்டலீகரைப்பார்த்து உத்தமனுகிய புண்டலீகா! நீ விரும்பினபடியே எல்லாம் அமையும். திரிலோகங்களிலுள்ள தீர்த்தங்களெல்லாம் இன்று நடுப்பகலிலே வரும் என்றருளிச்செய்தார். அப்படியே எல்லாத் தீர்த்தங்களும்வந்து புதிதாயுண்டாக்கப்பட்ட அந்தத் தீர்த்தத்திற் சேர்ந்தன. மேலும் ஹே பார்வதி! நான் பூர்வகாலத்தில் திரிபுரதகனஞ் செய்ததனல் மிகவும் வருந்தின வருத்தமானது நீங்கும்பொருட்டு பீமாசங்கரிதலத்தில் தவஞ்செய்து கொண்டிருந்தபோது என்னுடைய உடம்பில் வேர்வையுண்டாகிப் பெருகி பீமா என்னும் பேர்பூண்டு விளங்கிக்கொண்டிருந்தது. அது என் ஞானசக்தியைக்கொண்டு பேரொலியுடைய தாய் புண்டலீகர் மனைவரையும்வந்து அலையெறிவதாயிருந்ததை அக்காலத்தில் அங்கு வாசஞ்செய்து கொண்டிருந்த பீமசேனபைரவன் இந்தப்பேரொலியைக்கேட்டு மனம்பொறுதவனுய் ஸ்ரீகண்ணபிரான் இங்கு எழுந்தருளியிருக்கக்கண்டும் இந்தநதியானது கொஞ்சமும் அஞ்சாமல் இத்தனை வேகங்கொண்டு வருதல் தகுதியாகுமோ என்று தன்னுடைய கையிலுள்ள கதாயுதத்தையெறிந்து ஓ நதியே! இந்தத் தலத்தில் நீ உன்னுடைய வேகத்தை யடக்கிக்கொண்டு வரவேண்டுமென்று சொன்னுன். அதைக் கேட்ட அந்த நதியானது அப்படியே தன்னுடைய வேகத்தை யடக்கி ஊமையைப்போல் இரைச்சல் இல்லாமல் தன்னைக்கண்டவர்களுடைய பாவங்களையெல்லாம் நீக்கிக் கங்காநதியைப்போலவே வந்து ஸ்ரீகண்ணபிரானைக்கிட்டி இடதுபக்கமாகச்சூழ்ந்து பிறைபோலத் தென்திசையிற் பொருந்திக் கீழ்த்

திசையையடைந்து செல்லுதலால் சந்திரபாகை என்னும் பெயரையுடையதாகி முற்காலத்தில் சந்திரனானவன் தனக்கு பிரகஸ்பதிபகவானால் கொடுக்கப்பட்ட சாபத்தை நீக்கிக்கொள்ளுதற்பொருட்டு மூழ்கிச் சாபவிமோசனத்தையடைந்ததாகிய பாநு தீர்த்தத்துக்கெதிரில் புண்டலீகரிட்ட செங்கல்லின் மேல் நின்றருளின ஸ்ரீகண்ணபிரானுடைய திருவடி தாமரையைத்தரித்து வணங்கிப் பரிசுத்தமடையலாமென்று மனத்திற்கொண்டு இப்போதும் பிரகாசிக்கின்றது. அந்த நதியில் வேறு யாராவது ஸ்நானஞ்செய்து பகவானுன விட்டலனை தரிசித்தமாத்திரத்தில் அநேக ஜன்மங்களில்செய்த பாவங்களிலிருந்து நீக்கி ஸ்ரீகண்ணபிரானுக்கு பக்தர்களாவார்கள். இதை ஒருவாறு நிறுத்திச்சொல்லுகிறோம். என்னவென்றால்: தாமரைமலரில் வாசஞ்செய்பவளாகிய ஸ்ரீலட்சுமியானவள் தனக்கெதிரே நின்றுக்கொண்டிருந்த ஸ்ரீகண்ணபிரான் உன் கண்ணுக்கு எதிரே புண்டலீகர்முன் சேர்வேனென்றுபரிந்தார். அதற்குடன்படாதவளாய் தன்னுடைய இயற்கையாகிய சௌந்தரியத்தோடும் சர்வாபரணதாரானத்தால் உண்டாகிய செயற்கை அழகோடும்கூடி ஒரு களிற்றியரசனையைப் பிடியானை தொடர்ந்து வருவதுபோல விட்டலனைப் பின்தொடர்ந்துவந்து, கற்பகமரத்தின்மீது படர்ந்த ஒப்பற்ற காமர் வல்லிக்கொடிபோல அவனைப்பற்றி, முல்லையரும்புப் போன்ற நகையரும்பும்படி அவனது இடதுபக்கத்தில் நின்றனள். அப்போது நற்பதவி யடைந்துயர்ந்த இந்திரனனவன் தெய்வத்தச்சனைநோக்கி குவலயபீடம் என்னும் யானையின் கொம்பை முறித்தவனாகிய ஸ்ரீ கண்ணபிரானுடைய அருளினால் ஒளிநிறைந்த சக்கரத்தின்மேல் பண்டரியின் அழகையும், அதனிடையில் பிந்துதீர்த்தம் என்று பெயருள்ள தீர்த்தத்தின் நடுவில் மூந்துகின்றதாகிய திரிகுடரூபமாய்ச்சொல்லப்பட்டதில் அர்த்தபாத்திராவென்று சொல்லுதற்குரிய வலிமைபெற்ற ஒப்பில்லாத பீடத்தின்மேலிட்ட செங்கல்லின்மீதுவிளங்குகின்ற விட்டலனை மகிழ்விக்கத்தகுந்த ஒரு விமானத்தையும் விளங்கும்படி அமைத்து, பொற்கோபுரம் மதில் முதலாகிய பிறவற்றையும் அழகுபெறச் செய்து, ஒருபட்டணம் உண்டாக்கக்கடவாயென்று கட்டளையிட அந்தப்பிரகாரமாகவே அந்தத் தெய்வத்தச்சன் மதில் கோபுரம் விமான முதலியயாவும் பொன்னினாலும் நவமணிகளாலும் அழகுபெறச் செய்து, இப்படி எங்கும் இல்லையென்னும்படி ஒரு பட்டணமும் நியமித்து ஸ்ரீ கண்ணபிரான் திருவுள முவக்குமாறு செய்தான். அந்தப் பண்டரிநகரமானது கிருஷ்ணாநதிக்கும் கோதாவரிநதிக்கும் மத்தியில் இருக்கின்றது. அதின் நடுவில் ஜய விஜயர்கள் காக்கும்படி கோயில் விளங்கிக்கொண்டிருக்கும். அதில் ஸ்ரீமந்நாராயணரானவர் எழுந்தருளியிருப்பார். அங்கு வருபவர்களெல்லாரும்,

எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஆதியிலே பாற்கடலிற் பள்ளி கொண்ட
  வாரணங்கின் திருவடியைப் பொருந்த மார்பா
சோதியிலே கலந்தோர்க்கு முத்தி தந்த
  தூயகௌத் துவமணியைத் துவளப் பூண்ட
வேதியனே முதலானோர் தந்தா யென்று
  விசிதமுடன் துதிசெய்யும் விமல நாதா
நீதியிலே யெமைக்காக்க கிருபை கொண்டு
  நிச்சயமாய்த் தரவேண்டுந் திருத்தாள் மலரே.

என்று துதிசெய்து வணங்குவார்கள். அங்கே முனிவர் தேவர்முதலியோர் பகவானுடையசேவைக்கு முற்பட்டுவந்து நன்றாகச் சேவிக்கத்தகுந்தசமயம் பார்த்துக்கொண்டிருப்பார்கள். தும்புரு நாரதர்கள் வீணாகானம் செய்துக்கொண்டிருப்பார்கள். யக்ஷ காந்தருவர்கள் பலவகையாகிய வாத்தியங்களை முழக்கிக்கொண்டிருப்பார்கள். அரம்பை மேனகை திலோர்த்தமை முதலிய தெய்வப்பெண்கள் வகை வகையாய் நாட்டியம் செய்துக்கொண்டிருப்பார்கள். பரமபாகவதர்கள் நெடிதாகிய கருடஸ்தம்பத்தின் அருகிலிருந்து அன்போடு ஹரிபஜனை செய்வார்கள் என்று கைலாசபதியாகிய சிவபெருமான் உமாதேவியாருக்குச் சொல்லியருளினர். இதனைப் பரிசுத்த ஆத்மாக்கள் அறிவதன்றி மற்றையோருடைய மனோவாக்குகளால் அறியப்படாத திருமகளே இந்தப்பண்டரிபுரத்தில் ரகுமாயியாய்வந்து ஸ்ரீ கண்ணபிரானோடு அமர்ந்து களித்துக்கொண்டிருக்கிறாள்.

கேசி என்னும் அசுரனைக் கொன்றவனும், பதின்மாராழ்வார்களும் மங்களாசாசனம் செய்யப்பெற்றவனும், தேவர்களெல்லாரும் நாள்தோறும் வந்து சேவிக்கும்படியான பெருமையுள்ளவனும், பாண்டுரங்கன் என்னும் திருநாமத்தை யுடையவனும், பழமையாகிய வேதங்களாலும் அறியவொண்ணாதவனும், முன்காலத்தில் மூங்கில்குழலை ஊதினவனும், செங்கல்லின்மேல் நில்லென்றவுடனே நின்றவனுமான ஸ்ரீகண்ணபிரானுக்கு என்றும் வாழும் வாசஸ்தானமாயிருக்கிற இந்த பண்டரிபுரத்துக்கு

ஒப்பான பட்டணம் வேறெதுவுமில்லை. இந்தப்பட்டணத்தில் ஒருபக்கத்தில் சந்திரபாகையென்னும் நதியானது தன்னிடத்தில்வந்து முழுகுவோருடைய பாவங்களையெல்லாம் நிவர்த்தி செய்துக்கொண்டு விளங்கும். இந்தத்தலத்தில் திருமகளாகிய ரகுமாயிக்கும் பொன்மயமான ஒரு ஆலயமுண்டு. அதிலுள்ள பாண்டுரங்கப்பெருமானுடைய திருக்கோயிலின் சிறப்பை வர்ணித்துச் சொல்லுவதற்கு ஆதிசேஷனும் முடியாது. இதில் எழுந்தருளியிருக்கிற விட்டலப்பெருமான் தம்மைச் சேவிக்கவருவாரெல்லாரும் தம்மைத் தழுவிக்கொண்டு சகல பாவங்களையும் நிவர்த்திசெய்து மோக்ஷலாபத்தை யடையும்படி கோயிலின் முகப்பில் எழுந்தருளியிருப்பார் இந்த நகரத்திலுள்ளோரெல்லாரும் தங்கள் தங்களுடைய வருணாச்சிரம தருமங்களில் யாதொரு வழுவுக்களையு மடையாமல் பகவத்சேவையில் நிரந்தரமான விருப்பமுள்ளவர்களாய் விட்டலபெருமானுடைய திவ்விய விக்கிரகத்தின் திவ்வியமான சௌந்தரியத்தைப் பாதாதிகேசமாக அனுபவித்துக்கொண்டிருப்பார்கள். இதில் வேதபிரதிபாத்தியனை பகவான் திருமகளானவள் கண்டுகளிக்கும்படி இடையிற்சேர்த்த இரண்டு திருக்கரங்களோடு ஒரு மரகதமலைபோல உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் உஜ்ஜீவிக்கும்பொருட்டு எழுந்தருளியிருக்கின்றார். இந்தப்பட்டணத்தின் பெருமையையும் இதில் எழுந்தருளியிருக்கின்ற விட்டலப்பெருமானுடைய பிரபாவத்தையும் இன்னும் விசாலமாகச்சொல்ல என்னால் முடியாதென்று ஸ்ரீபார்வதிதேவியோடு சிவபெருமான் சொன்னாரென்று ஸ்ரீ நாபாஜிசித்தரானவர் மற்ற சித்தர்களுக்குச்சொல்லி இப்படியே நீங்களும் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பக்தியுள்ளவர்களாயிருந்தால் உங்களுக்கு மேலானபதவிகிடைக்குமென்று வரம்கொடுத்து அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் தமது இருப்பிடம் சென்று ஸ்ரீமந்நாராயணனை உள்ளபடியே பக்தி செய்துகொண்டு வருங்காலையில் விட்டலப்பெருமான் நாபாஜிசித்தருக்கும் உத்தமசித்தர்களுக்கும் கெருடவாகனரூடராய் சேவை அளித்து எல்லோருக்கும் நான்காம்பதவியாகிய சாயுஜ்ஜியபதவியைத் தந்தார். சுபம்! சுபம்!! சுபம்!!!

புண்டலீகர் சரித்திரம் முற்றிற்று.

---

## வாழி விருத்தம்.

வாழி வானகம் வையக மன்னனும்
வாழி மண்ணக மாந்தரு மானினம்
வாழி யன்பர்கள் வழங்கு பெரியரும்
வாழி யிந்நூல் மலிந்து பொலிகவே.

---

ஸ்ரீமகா பக்தவிஜயம் ஐந்தாம்பாகம் ஸம்பூர்ணம்.



ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரெங்காயநம:

# ஸ்ரீமகாபக்தவிஜயம் ஆறும்பாகம்.

## நாகைநாதர் சரித்திரம்.

[இது ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீனிவாச அய்யங்கார் எழுதியது.]

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மானூ ரென்றுரைக்கும் நகரினிற் றோன்றி மானிடர்தனை யெண்ணபித்தன்
தானோ வென்றெங்கும் திரிந்தரி தனது தாளிணை சிந்தையிற்பதித்து
தேனாரும் கானில் வணிகமா மகளும் களிங்கனும் பணிசெயச்சிறந்த
மானாபிமானந் துறந்து வாழ்நாகை நாதன்தன் மலர்க்கழல் பணிவாம்.

திருமகள் முகமேபோல் திகழ்வதும், மிக்க மேன்மை வாய்ந்ததுமான மானூரென்னும் கிராமத்தினில் சிவாம்ஸ முடையராய், நாகைநாதரென்னும் திருநாமத்துடனே தனக்குத் தந்தையும் தாயும் சுற்றமும் மற்றும் யாவும் ஸ்ரீமந்நாராயணனேயன்றி வேறில்லையென்று கருதுபவராய், தவநெறிச் செல்வராய், உலகினர்களுடைய அறியாமையைக் கண்டு, இன்னவர் தம்மை நாடாமலிருப்பதற்கு அவர்கள் நோக்க, தான் ஓர் பித்தன்போல் நகைத்துக்கொண்டும், தெருக்களில் உருண்டுகொண்டும், சிறுவர்களுடனே ஓடி விளையாடிக்கொண்டும், தனது சரீர முழுதும் புழுதிபடிந்து தோன்ற; தண்ணீரால் சரீரம் அலம்பப்படும் தன்மைகூட இல்லாது இடையினில் கௌபீன மொன்றேயன்றி யாரேனும் வஸ்திரம் தந்தால் அதனைக் கிழித்துப் பறக்கவிட்டுக்கொண்டு, உன்மத்தம் பிடித்தவர்போல், ஆடிப்பாடிக்கொண்டு யாராவது தன்னை அழைத்தால் அழுது ஓடிக்கொண்டும், வாயால் ஏதேதோ முணுமுணுத்துக்கொண்டும் இருப்பார். ஊரைவிட்டு காட்டினில் சென்றால் கொடிய விலங்கினங்கள் இவரைச் சூழ்ந்திருக்கும். தனது வீட்டினில் வளரும் பசுவின் கன்றுகளைத் தடவுவதுபோல, புலிகளையும் சிறுத்தைகளையும், தடவிக்கொண்டிருப்பார். சர்ப்பங்கள் அவர் சரீரத்தினையே புற்றென்று நினைத்து ஊர்வதும், வாய்வழியே போவதும், மீண்டும் வருவதும், அவரைமுத்தமிடுவதுமாய்ச் சூழ்ந்திருக்கும். தேவாங்கு என்னும் ஒரு ஜந்துவைப்போல் தலையைச் சாய்த்து, தனது கால் கைகளை யொடுக்கிக் கட்டிக்கொண்டு காணப்படுவார். சிவாலயங்களில் சென்று பூட்டியிருக்கும் கதவுகளைக் கையால் தீண்டவும் கதவுகள் திறந்து போவதால், கர்ப்பக்கிரகத்தின் உட்சென்று இலிங்கத்தின் மீது ஏறி, தன் முட்டைக் கட்டிக்கொண்டு, இரவெல்லாம் உட்கார்ந்திருந்து விடியற்காலத்தே எழுந்து, மறுபடியும் கதவுகளைச் சாத்திக்கொண்டு, ஆலயத்தைவிட்டுப் புறப்படவும், கதவுகள் தனக்குத்தானே பூட்டிக் கொள்ளும். இதை ஓர் சித்தன் கண்டு, நாகை நாதரை நோக்கி, "நீர் கடவுளின் தலைமீதிருக்கத் தகுமோ?" என்று கேட்டான். அதற்கு அவர் தன் கரத்தால் அந்த சித்தனைத்தழுவி, "நீ இவ்வுலகினைப் பார்" என்னவும், தான் கால்வைத்திருக்கும் பூமியில் ஆயிரத்தெட்டுப் பாணலிங்கங்களிருக்கக்கண்டு, திகைத்துக் கடவுள் இல்லாத இடமில்லையென்று தேறிச் சென்றான்.

இவர் ஊர்களில்வரின், இவர்மேலே சர்ப்பங்கள் சுற்றிக் கிடப்பதைக் கண்டு அருகேவர யாவரும் அஞ்சுவார்கள். சிலர் இவரைப் பைத்தியம் பிடித்தவனென்றும், வேறு சிலர் சித்தபுருஷனென்றும், பின்னும் சிலர் மோஹனமந்திரம் கற்றுக்கொண்டு, துஷ்ட மிருகங்களையெல்லாம் மோகனத்தால் மயக்கி, வனதேவதைபோல் காணப்படுகிறான் என்றும், மற்றும் சிலர் பூதபைசாசங்களும் இவருக்கு வசமாய் நடக்கிறதென்றும் சொல்லுவார்கள். மழைகாலத்திலும், பனிகாலத்திலும் கௌபீன

மின்றி, வேறு உடைகள் இல்லாது தெருக்களிலே யும் கானகத்திலேயும் உருளுவார். வேனிற்காலத் தில் கதிரவன் கிரணமுழுதும் மேனியில் படும்படி படுத்திருப்பார். தேகாபிமானம் சிறிதுமின்றி சதா வும் சர்வேஸ்வரனுன நாராயணனையே தியானித் துக்கொண்டு, தனது உள்ளத்தினைச் சர்வேஸ்வர னுக்குச் சன்னதியாக அமைத்து, அதினிருந்துறை யும் சர்வேஸ்வரனைச் சதாகாலமும் சேவை செய்து கொண்டு, மாஞபிமானமற்று தானுகவே விளங்கி வருவார்.

இப்படி இருக்கும்பொழுது களிங்கன் என் னும் பெயர் புனைந்த ஒருவன் அளவிடற்கரிய செல் வமும், மக்களும் மனைவியும் சுற்றமும் தனக்கிருந் தும் அவற்றினிடத்தில் விரக்தி பிறந்து, யாவற்றை யும் துறந்து, மிக்க வைராக்கியத்துடனே வனத் தினை நாடி வரும்பொழுது, ஓர் வனத்தினில் சிங்கத் தின் முதுகில் ஏறிக்கொண்டு, முன்னும் பின்னும் பக்கங்களிலும் புலிகள் சூழ்ந்துவர, ஜே ஜே விட் டல்! ஜே ஜே விட்டல்! என்று உயர்ந்த ஸ்தாயினில் நாமாவளி பாடிக்கொண்டு எழுந்தருளும் நாகை நாதரைக் கண்டு, இவர்தான் நமக்கு ஆசான் என்று எண்ணி, இக்கொடிய விலங்கினங்கள் நம்மைக் கொன்று விடுமே என்னும் அச்சம் சிறிதேனுமின் றித் தைரியமாய் முன்னே சென்று, அவருடைய திருவடித்தாமரைகளிலே வீழ்ந்து, தெண்டன் சம ர்ப்பித்து, எழுந்து அஞ்சலியஸ்தனுய் நின்று, "ஓ அருந்தவச் செல்வமே! யாதொரு கெதியுமின்றி, உம்மையே சரணமடைகிறேன். எனது அஞ்ஞா னத்தினைத் தவிர்த்து, சுஞ்ஞானமுண்டாகும் வண் ணம் கருணைக் கண்களால் நோக்கிக் காத்தருளும் முத்திநெறிக் கொருவித்தே! உம்மையன்றி வேறு கதி பெருதவனுகிய என்னைக் காப்பது உமதுகடன். என் உடல் உயிராயினவெல்லாம் நீ எடுத்துக்கொ ண்டு உன் உடல் உயிராயினவெல்லாம் உவந்து எனக்கு அளித்தல் வேண்டும்" என்று பிரார்த் தித்தான்.

இப்படி களிங்கன் பிரார்த்திக்கவும், அந்தப் பிரார்த்தனை மொழியைக் கேட்ட நாகைநாதர் இவன் சிஷியனுவதற்குரிய சர்வ லக்ஷணங்களெல் லாம் அமைந்தவன் என்று, தன்மனதில் நினைத்துத் தன் அருகே அழைத்து, கருணைநோக்கம் புரிந்து, அவன் செவியில் தாரகமந்திரத்தை உபதேசித்து, தனக்குச் சிஷியனுக்கிக் கொள்ளவும், ஆசானுடைய நிழல்போல் அவரைவிட்டுப்பிரியாது, தனது ஜனன நோய்க்கு மருந்து குருசேவையேயன்றி வேறல்ல வென்று நினைந்து, சதாவும் தொண்டு செய்துக் கொண்டு வந்தான். ஓர்நாள் ஆசாரியனுடைய ஆகாரத்தின் நிமித்தம் கடையில் சாமான் வாங்க வேண்டுமென்று பக்கத்திலுள்ள நகரத்தை நாடி வரும்பொழுது, மிக்க தனவந்தனுன வைசியன் ஒரு வன் தனக்குப் பிறந்த பதினுறுவயதுடைய புதல்வி யொருத்தியே யன்றி, வேறு புத்திரப்பேற்றை அடையாமல் இவளே தன் குறையை முடிக்கவந்த குலக்கொழுந்தென்று மணி பணிகளால் அலங்கரி த்து, அவளுக்குத்தக்க மணமகனைப்பார்த்து, விவா கத்திற்கு நாள் வைத்து, வெகு விமரிசையாய் விவா கத்தை நடத்தவேண்டுமென்று சாமான்களைச் சேக ரித்துக்கொண் டிருக்கும்பொழுது, அழகிலும் கல்வி யிலும் அறிவிலும் செல்வத்திலும் ஆடையாபரணங் களிலும் மிக்கவளான வைசியனுடைய புதல்வி மரணமடைந்தாள். அந்தோ! பெற்றதாயும் தந் தையும் தன்னிடம் பேசிக்கொண்டிருந்தபடியே மரணமடைந்ததைக் கண்டு, ஆறுத்துயருடன் அழு வதைக் கேட்டு, அக்கம்பக்கத்திலுள்ள பந்துக்கள் யாவரும் வந்து கூடி, தனவந்தனுன வைசியனு டைய புதல்வி மாண்டனள் என்று தெரிந்து, யாவ ரும் துக்கமுற்று, பிணத்தினை அலங்கரித்து, பாடை யினில் ஏற்றி, ஊரிலுள்ளவர்கள் யாவரும் சூழ்ந்து வர, மயானத்திற்குக் கொணர்ந்து விறகு அடுக்கி, அதன்மேல் வைக்கப்போகும் சமயத்தில், நாகை நாதருடைய சிஷ்யனுகிய களிங்கன் அம்மார்க்க மாய் வந்தான். அங்கே கூட்டங்கூடி யிருப்போர் களைக் கண்டு, யார் இறந்தது? என்று கேட்டான். அதிலொருவம்பன் களிங்கனை நோக்கி நீ ஏன் கேட் கிருய்? நீ கேட்டதினுல் இறந்தவள் எழுந்திருக்கப் போகிருளா? உனது காரியத்தைப் பார்த்துக்கொ ண்டுபோகாமல் பரதேசிப் பயலுக்கு இந்தவம்பெல் லாம் எதற்கு?" என்று கூறினுன். இதனைக்கேட்ட களிங்கன் அங்கு உட்கார்ந்து, கொஞ்சம் மண்ணைக் கிள்ளி எடுத்து, இறந்த பிணத்தின் நெற்றியில் வைத்து, "அம்மா! நீ எழுந்திரு" என்று கூறினுன். வைசியன் புதல்வியானவள் தூங்கிவிழிப்பதுபோல் எழுந்து நிற்கவும், இதனைக்கண்ட தந்தையானவன் அன்புடனே "அடிகண்ணே! மகளே! நீ பிழைத் தெழுந்தாயோ! என்குறையைப் போக்கினையோ!" என்று அவள்சமீபத்தில் செல்லும்பொழுது, அங்கு வந்திருந்த புரோகிதர் இதுவரை பிரேதரூபமாய் மந்திரங்கள்சொல்லி காஷ்டத்தில் வைக்கப்போகும் சமயத்தில் இவன் செய்த தந்திரத்தால் பிழைத்து எழுந்திருந்தாலும் உனது மகளென்று, உன்

வீட்டிற்கு வரத் தகுந்தவளன்று. 'சுடலைக்குப் போன பிணம் திரும்பாது' என்று கூறவும், அங்கு வந்திருந்த பெரியவர்களெல்லாம் புரோகிதர் கூறியதுதான் சரி. மீண்டும் இவள் நம் ஊருக்கு வருவதற்கு உரியவளல்லள் என்று கூறினார்கள். இதனைக் கேட்ட இவள் தந்தையும் சுற்றத்தாரும் இதற்கு என்ன செய்வதென்று தயங்கித் தத்தளிக்க, களிங்கன் அப்பெண்ணை நோக்கி, "அம்மா! உன்னை என் ஆசாரியனாகிய நாகைநாதர் அழைக்கிறார்" என்று கூறினான். உடனே அவள் களிங்கனுடனே விரைந்து, நாகை நாதரிருக்கும் வனத்தினை நாடிச் செல்லவும், இதனைக்கண்ட சிலர் அதிசயமடைந்தார்கள். வேறு சிலர் இவள் வீட்டிலிருக்கும்பொழுது, அங்குவந்து பிணத்தை உயிருண்டாக்கி எழுப்பித் தரப்படாதா என்று துக்கித்தார்கள். மாண்டவள் பிழைத்தும் பயனற்றுவிட்டதே என்று துக்கித்தும் தமது வீட்டினை நாடிச் சென்றார்கள்.

இப்படி இருக்கும்பொழுது களிங்கனுடனே சென்ற பெண்மணியானவள் நாகைநாதருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கவும், நாகைநாதர் களிங்கனை நோக்கி "இவள் யார்? நீ யாவும் துறந்து என்னைப்பற்றி உய்யக் கருதியதுபோய், இப்பெண்ணினையும் அழைத்துக்கொண்டு வந்திருக்கிறாயே? இந்த மாயை எளிதில் விடாதே? முற்றத் துறந்த முனிவரையும் மயக்குமன்றோ?" என்று கூறினர். இதனைக் கேட்ட களிங்கன் "சுவாமி! இவளை நான் வேண்டுமென்றுகொணர்ந்தவனல்ல" என்றும் தான் வரும் வழியில் நடந்தவற்றினை முழுதும் விபரமாய் நாகைநாதரிடம் தெரிவித்தான். அவர் அதைக்கேட்டு மகிழ்ச்சியடைந்து, "களிங்கா! நீயும் என்னைப்போல சித்தனாய்விட்டாய். உனது வைராக்கியத்தை மெச்சினேன்" என்று சொல்லி, தன்னை அடைந்த பிம்பசரை என்னும் பெண்ணுக்குத் தாரகமந்திரத்தை உபதேசித்தருளினர். அவள் அம்மந்திர உபதேசம் பெற்று, பரமானந்தமடைந்து, மானாபிமானமெல்லாம் துறந்து குரு சேவை செய்துகொண்டு, திகம்பரையாய் விகற்ப உணர்ச்சி சிறிதுமின்றி யிருந்தாள்.

இப்படியிருக்கவும் நாகைநாதருடைய பிரபாவம் உலகெங்கும் பரவியது. அக்காலத்திலே நவசித்தர்களில் மூவர் நாகைநாதரைக் கண்டு, பரிசோதிக்க வேண்டுமென்கிற எண்ணங்கொண்டு, ஒருவர் சிங்கத்தின் மேலும், வேறு இருவர் புலிகளின்மேலும் ஏறிக்கொண்டு வரும்போது, இதனை ஞான திருஷ்டியினால் உணர்ந்த நாகைநாதர் மண்சுவர் ஒன்று பர்ணகசாலைக்கு முன்பாக வைத்துக்கொண்டிருக்கும் களிங்கனை அழைத்து "மூன்று சித்தர்கள் என்னைப் பார்க்கும்பொருட்டாக வருகிறார்கள். நீ அவர்களை எதிர்சென்று அழைத்துவா" என்று ஆக்ஞாபிக்கவும், களிங்கன் அக்கணமே சிறிதுதூரம் செல்லும்போது, இடிமுழக்கினாற்போலக் குமுறும் சிங்கத்தின் நாதத்தைக் கேட்டு, நமது ஆசானைச் சோதிப்பதற்கன்றோ சிங்கத்தின்மேல் அமர்ந்து வருகின்றார்களென்று நினைத்து, இவர்களுக்கு முதலில் நமது ஆசாரியருடைய பெருமை தெரியவேண்டுமென்று யோசித்து, தான்வைத்த ஈர மண் சுவரைத் தன்பின்னேவரும்படி நியமித்து, முன்னே செல்லவும், நவசித்தர்கள் சிங்கத்தின்மேல் ஒருவரும், புலிகளின்மேல் மற்ற இருவருமா யேறிவருவதைக்கண்டு, முன்னே விரைந்துசெல்லவும், பின்னே ஈரமண்சுவரும் விரைந்தோடி வருவதையும் கண்ட சித்தர்கள் இது என்ன விந்தை! இயற்கையிலே நடக்கும் ஜந்துக்களின்வேகத்தினை நமது அட்டமாசித்தி முறையால் மயங்கவைத்து அதன்மீது நாம் ஏறி வருகிறோம். நாகைநாதரோ வெனின், நாம் யோகம் செய்யும்பொழுது ஒவ்வொருநாளும் அவரைப் பார்த்திருக்கிறோம். இவர் நாகைநாதரல்லவென்று ஐயமற விளங்குகின்றது. நம் சித்தர்கள் இதுவரையில் ஒருவரும் செய்யாத அற்புதத்தினை இவன் செய்துவிட்டான். ஜடபதார்த்தமாகிய மண்ணே நடந்துவருவது ஆச்சரியம்! ஆஹா! இது எவ்வளவு அரிதானகாரியம். சுவர் வைக்கும் பொழுதே சரிந்துவிழும் ஈரமண்சுவர் தினையளவு மண்ணாவது பூமியில் வீழாமல் விரைந்தோடி வருகின்றதே! இனி நம்வாகனங்களின்மேலேறிச் சென்றால் மிக்க அவமானமடைய வேண்டுமென்று தாங்கள் ஏறிவந்த சிங்கத்தினையும், புலிகளையும் விட்டிழிந்து, கால்நடையாகக் களிங்கன் முன்னே செல்லவும் அவன் விரைவாகச் சென்று அவர்களுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "ஓ சித்தர்களே! எனது ஆசான் தங்களை அழைக்கிறார் எழுந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

நவசித்தர்களின் பாதத்தில் வீழ்ந்து களிங்கன் பிரார்த்திக்கவும், நவசித்தர்கள் களிங்கனை நோக்கி, "நாங்கள் நாகைநாதரைச் சேவிக்க வந்தோம். அவருடைய சேவையை நீர் செய்து வைக்கவேண்டும்" என்று உபசாரமாய்ச் சொல்லி களிங்கனுடனே சென்று, நாகைநாதருடைய ஆசிரமத்திற்குள் வந்து, அவருடைய சரணாரவிந்தத்தினில் வணங்கவும், நாகைநாதர் அவர் திருவடிகளில் வீழ்ந்து,

நமஸ்கரித்து, அவர்களுக்கு மிக்க உபசாரவார்த்தைகள் கூறி, "அடியேனைப் புனிதமடையச் செய்ய வேண்டும்; நவசித்தர்களே உங்களுடைய தரிசன பலத்தினால் அடியேன் புனிதனானேன்" என்று கூறினார்.

இதனைக் கேட்ட நவசித்தர்கள் நாகைநாதரை நோக்கி, "சுவாமி! தேவரீரிடம், அநேக அற்புதமான செயல்கள் நடப்பதாய்க் கேள்வியுற்று, அதனைக் காணவேண்டி இங்குவந்தோம். உமது சிஷ்யருள் ஒருவன், இறந்துபோய் சுடுகாட்டில் கொணர்ந்து அடக்கம்செய்யும் சமயம் ஓர் வைசியனுடைய மகளை உயிர்தந்து எழுப்பி, உம்மிடம் அழைத்து வந்ததாகவும், நீர் அவளைக் கடாக்ஷித்து, சித்த புருஷரோடு ஒத்திருக்கச் செய்திருக்கிறீரென்றும் கேள்வியுற்று, இதனைக் காணவேண்டி இங்கு வந்தோம். திகம்பரையாய் உம்முடனேயிருக்கும் அந்த மங்கையாள் எங்கே?" என்று கேட்டார்கள். நாகைநாதர் நகைத்து, "இதோ என் பக்கத்திலே அவள் நின்று கொண்டிருக்கிறதைப் பார்த்தும் அவள் எங்கே என்கிறீர்களே? உங்கள் கண்களுக்கு அவள் நிற்பது தோன்றவில்லையா? என்னிடம் சோதனை புரியவேண்டுமென்றாவது அன்னவளுடைய நடை நன்றல்லவென்றாவது யார் நினைக்கிறார்களோ அவர்கள் கண்களுக்குத் தோன்றமாட்டாள்" என்று சொல்லும்பொழுதே பிம்பசரை என்னும் பெண் திகம்பரையாய்க் கந்தர்வ நங்கைபோலத் தோன்றினாள். அதைக்கண்டு இவர்கள் பிரமைகொண்டு, தமது சித்திகளையும் மறந்து, காதல் நீர் சுரந்து பெருக நிற்பதைக்கண்ட நாகைநாதர் "சித்தர்களே! ஒரு புருஷனைப் பெண்ணென்று மயங்கினீர்களே; சித்த புருஷர்களின் உள்ளமும் கலங்குமோ? இவனைப் பெண்ணென்று நினைத்த உங்கள் அறியாமையை என்னென்று கூறுவது?" என்று தெரிவித்தார். அக்கணமே பிம்பசரை என்னும் பெண்ணானவள் பதினாறுவயதுடைய இளங்குமரனாய் நிற்கக் கண்டு, சித்தர்கள் வெட்கமுற்று நாகைநாதரைப் பணிந்து விரைவாகச் சென்றார்கள்.

நாகை நாதர் அன்றுமுதல் பிம்பசரை என்னும் பெயருடைய பெண்ணை ஆணுருவாக்கி வரதயஸ்வன் என்னும் பெயரிட்டு, அவனைத் தனக்கு ஊழியஞ்செய்ய ஏற்படுத்தி வனத்திலே தபசு செய்துக்கொண்டிருந்தார். அப்பொழுது, மோகனகாம் என்னும் கிராமத்தில் வாழ்பவனும, வேதியர் குலத்திலே பிறந்தவனும், அநேக சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து அந்த ஊரிலுள்ளவர்கள் எல்லாம் பண்டிதனென்று ஆதரிக்கத்தகுந்தவனுமான ஏகரசன் என்னும் விப்பிரன் நாகைநாதருடைய பிரபாவங்களை முழுதும் கேள்வியுற்று, அவருடைய சரணாரவிந்தத்தை அடைந்து உய்ய வேண்டுமென்று எண்ணி, அவர் தவம்செய்துகொண்டிருக்கும் வனத்திற்கு வந்து அவருடைய சரணாரவிந்தத்தில் வீழ்ந்து, தெண்டம் சமர்ப்பித்து, "சுவாமி! சம்சாரம் என்னும் படுகுழியில்வீழ்ந்து, எழுந்திருக்க முடியாமல் இடர்ப்படும் என்னை உமது கருணையென்னும் கயிற்றால் பிணித்துத் தூக்கிவிடும்" எந்தையே. என்று இரண்டு தாளிணையிலும் வீழ்ந்து கிடக்கும் ஏகரசனை அன்புடனே நோக்கி, "திருவஷ்டாக்ஷரத்தினை அவனுக்கு உபதேசித்து, பரிபூரண ஞானமுண்டாக நோக்கவும்," அதனைப்பெற்றுக்கொண்டு தன் வீட்டிற்குவந்து, நாள்தோறும் தவறாமல் குரு சேவை செய்துகொண்டு வரும்சமயம் ஓர் நாள் தனது ஆசாரியனாகிய நாகைநாதர் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து, "சுவாமி! அடியேனுடைய குடிசையில் பிக்ஷை வைத்துக்கொள்ள வேண்டும்" என்று வேண்டினான். அதற்கு நாகைநாதர் நன்று சொல்லினை. நான் ஓர்நாள் உனது பூசையை ஏற்றுக்கொள்ளுகிறேன் என்பதாகக் கூறவும், குருவினுடைய பாதத்தில் வீழ்ந்து பணிந்து தன் வீட்டிற்கு வந்து விட்டான்.

ஏகரசன் தன் வீட்டிற்குவந்து நாள்தோறும் குருசேவை செய்துவிட்டுப் போகவும், நாகைநாதர் தனது சிஷ்யனான ஏகரசனிடம் விருந்துக்கு உடன்பட்டதை நினைந்து, அவனையும் சோதிக்க விரும்பி, மானுபிமானங்களும், பேதைபுத்தியும் அவனை விட்டு நீங்கியிருக்கின்றதா வென்பதையும் ஆராய்ந்து அறியக்கருதி, ஓர் நாள் விகாரவடிவுடன் கூடியவனாய் நிரம்ப மதுபானம் செய்துவிட்டு, கையில் ஓர் சட்டியொன்றை ஏந்தி, அதில் மாமிசத் துண்டுகளைப் போட்டு, அதை எடுத்துக்கொண்டு, தெருநெடுகலும் கடித்து, மென்று தின்றுகொண்டு, அதிலுள்ள எலும்புகளைத் தெருவினில் உமிழ்ந்து, குடிவெறியால் தள்ளாடி, ஏதேதோ பிதற்றிக்கொண்டு மோகனகாமென்னும் நகரத்தினை நாடிவந்து கொண்டிருந்தார். இப்படி வந்துகொண்டிருக்கையில் இவருடைய வடிவத்தினைக்கண்ட வேதியர்கள் அந்தோ! இவன் யாரோ பெரும்பாதகனாகத் தோன்றுகின்றான். குடிவெறியால் தள்ளாடித் தடுமாறி நடந்துவருகின்றான். பிராமணர்கள் வாழும் தெருவாயிற்றே. இங்கு மரியாதையாய்ச் சஞ்சரிக்கவேண்டுமே என்று சிறிதும் தெரியாமல் மாமிச

கண்டங்களை மென்று தின்றுகொண்டு எலும்புக ளைத் தெருவில் துப்புகிறான். இவன் தெருவில் வரும்பொழுதே குடித்த கள்ளின் நாற்றமும் மாமி சங்களின் துர்க்கந்தமும் நம்மைத் தெருத்திண்ணை யில் உட்கார்ந்திருக்க முடியாதபடி விரட்டுகிறது. இவனிடம் சென்றால் நம்மைத் தொட்டுவிடுவான். பின்னே பிராயச்சித்தம் செய்தாலும், அசுசி நீங்கா தென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். அப்பொ ழுது தனது வீட்டிலிருந்து பார்த்த ஏகரசன் அதோ வருவது நம் குருநாதராகிய நாகைநாதர் தான் எழுந்தருளுகிறார் என்று உணர்ந்து, விரை வாகச் சென்று அவர் திருவடிகளில் வீழ்ந்து வண ங்கினார். இதனைக்கண்ட அந்த ஊர் வேதியர்கள் யாவரும் இவனுக்குச் சித்தம் பேதித்து விட்டது. பஞ்சமனோ? வேறு எந்த இழிகுலத்தில் உதித்த வனோ? குடித்துவிட்டு மாமிசங்களையும் தின்றுகொ ண்டுவரும் இந்தப் பதிதன் கால்களில் பிராமணனா கிய ஏகரசன் வீழ்ந்து கும்பிடுகின்றானே? என்று சிலர் சொல்லவும், வேறு சிலர் நம் ஜாதியை பிறர் குறை கூறுவதற்கென்றே இப்படிச் செய்தான் என்று கூறவும், இந்தத் தேசமெங்கும் பண்டிதர் என்று புகழ்ந்து பேசும் பெருமையை இழந்து விட்டானென்று சிலர் சொல்லவும், இவன் சில நாளாய் காலையில் எழுந்து ஸ்நானஞ் செய்துவிட்டு, மடி உடுத்திக்கொண்டு ஊரைவிட்டு அகன்று, எங் கேயோ சென்றிருந்து, பகல் பதினைந்து நாழிகை க்குமேல் மீண்டும் ஊரைநோக்கி ஓடிவருகிறான். முன்போல் யாருடனும் உறவாடிப் பேசுவதில்லை. உன்மத்தம் பிடித்தவன்போல் ஒருவருடனும் பேசா திருக்கிறான் இது யாதுகாரணமோ என்பார் சிலரும், முன்னம் மானூரில் செல்வவந்தனான வைசியன் புத ல்வி இறந்ததும், அவளை மயானத்திற்கொண்டுபோய் அடக்கம் பண்ணும்பொழுது, தனது சிஷ்யனாகிய ஒருவனை அழைத்து, இறந்த வைசியன் மகளை உயி ருண்டாகச் செய்து, அவளுடனேகூடிக் குலாவும் நாகைநாதன் என்னும் வனசரனிடம் இவன்போவ தாகச் சிலர்சொல்லுகிறார்கள்! என்றும் தங்களுக்குள் பேசிக்கொண்டிருக்கவும், ஏகரசன் தன் ஆசாரிய னைக் கைலாகுகொடுத்து, அழைத்துவரும்பொழுது வேதியர்கள் எல்லோரும் ஒன்று கூடி, ஏகரசனை அழைத்து, இவன் யார்? மாமிசத்தைத் தின்றுகொ ண்டும், குடிவெறியால் ஆடிக்கொண்டுவரும் விகார வடிவினையுடைய இவனை, வணங்கி உபசரித்து கைலாகு கொடுத்து அழைத்துவருகின்ற நீ வேதி யனா? ஐயோ! இக்கணமே இவனை நம் தெருவிலிரு ந்து விரட்டிவிட்டு நீயும் சங்கல்ப ஸ்நானம் செய்து கொண்டாலன்றி, உன்னை எங்கள் ஜாதியிலிருந்து பிரித்துவிடுவோம் என்று சொன்னார்கள். அதற்கு ஏகரசன் பதில் ஒன்றும் கூறாது, தன் ஆசாரியனி டம் வந்து உபசரித்து, தன் வீட்டிற்கு அழைத் துச்சென்று, வீட்டுவாயலில் பலகை ஒன்றுபோட்டு அதனில் நிறுத்தி தீர்த்தம் கொணர்ந்து, திருவடி விளக்கி, தலையில் புரோக்ஷித்துக்கொண்டு, தன் மன மாசு கழிய ஸ்ரீபாததீர்த்தத்தினை அருந்தி, வீட்டி னுள் அழைத்துச் சென்று பலகையினில் எழுந்தரு ளச் செய்து, அர்க்கியம் அளித்து, புஷ்பங்களால் அவருடைய திருவடிகளில் அர்ச்சிக்கும்பொழுது, இதனைக்கண்ட வேதியர்கள் இவன் நம்குலத்தையே கெடுத்துவிட்டான். இவனுக்கும் நமக்கும் யாதா மொரு சம்பந்தமுமே கிடையாதென்று தீர்மானி த்துத் தங்கள் தங்கள் வீடுசேர்ந்தார்கள். இதனைக் கேட்ட ஏகரசன், சிறிதும் அஞ்சாது தன் ஆசாரிய னைப் பூசித்துக்கொண்டு, தன் அகத்திலேயே நாகை நாதர் எழுந்தருளியிருக்கவும், ஊரிலுள்ளவர்கள் தன்னை ஜாதிப்பிரஷ்டம் செய்ததைக் கூட கவனி யாமல் குரு சிஸ்ருஷையில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தான்.

அப்படியிருக்கும்பொழுது ஓர் நாள் இவனு டைய தந்தைக்குச் சிரார்த்தம் வந்தது. இனி அந்த ஊரில் பிராமணார்த்தத்திற்கு ஒருவரும் இருக்க மாட்டார்களே! சிரார்த்தம் முடங்கிவிடுமே! என்ன செய்வது? வேறு ஊருக்குச் சென்று சிரார் த்தம் செய்தால், இதற்கென்று கங்கணம் கட்டிக் கொண்டு அங்கேயும் வந்து இவனை ஜாதிப்பிரஷ்டம் செய்திருக்கிறோம் என்று சொல்லி, அங்கேயும் சிரார்த்தம் நடவாதபடி செய்து விடுவார்களே. இதற்கு என்ன செய்வது? என்று யோசித்து, தன் ஆசாரியனாகிய நாகைநாதரிடம் வந்து, அவர் திரு வடிகளில் வீழ்ந்து, தெண்டம் சமர்ப்பிவித்து, "சுவாமி! உமதுமகிமை அறியாத இந்த ஊர் வேதி யர்கள் உமக்குப் பூசைசெய்தேனென்று என்னை ஜாதிப்பிரஷ்டம் செய்துவிட்டனர். நானோ என் தந்தைக்கு சிரார்த்தம் வருகிறது. பிராமணர்கள் ஒருவராவது என் அகத்தில் போகக்கூடாதென்று முடிவு செய்திருக்கின்றார்கள். இதற்கு என்ன செய்யலாம்? தேவரீர் திருவாய் மலர்ந்தருளவேண் டும்" என்று வேண்டினான். இதனைக்கேட்ட நாகை நாதர் "இந்த ஊரினில் எத்தனை பிராமணர்களு டைய வீடுகள் இருக்கின்றனவோ அதனைச் சொல்" எனவும், "அறுபதுவீடுகளுண்டு. அவ்வளவுபேர்க

ளும் இனபந்துக்களே. இந்த சிரார்த்தத்திற்கு அவ்வளவுபேர்களும் சமபந்தியில் உட்காரக்கூடிய வரேயன்றி, வேறொருவராவது என்வீட்டுக்கு வாராதவர்கள் இல்லை" என்று கூறினன். இதனைக்கேட்ட நாகைநாதர் "உன் தந்தையினுடைய சிரார்த்தத்திற்கு எத்தனை பிராமணர்கள் வருவார்களோ அத்தனைபேருக்கும் சேர்த்து, சமையல் ஆகட்டும். உனக்கு இது பற்றிய கவலை வேண்டுவதில்லை'' என்று சொல்லவும், ஆசாரியருடைய நியமனப்படியே சமஸ்த சாமான்களையும் வாங்கி வந்து, பதினெட்டு வகைப் பொரியல்களுடனே, கூட்டு-பச்சடி-கிச்சடி-குழம்பு-ரசம்-பாயசம்-பக்ஷணங்களுடனே தளிகை செய்து வைத்துவிட்டு, தனது ஆசாரியனிடம் வந்து யாவும் தயாராகிவிட்டது. பிராமணர்கள் தான் வரவேண்டுமென்று தெரிவித்தார். அதை நாகைநாதர் கேட்டு இந்த ஊரில் உள்ள பிதிர்கள் யாவரும் வரும்படி தன்மனதில் நினைத்தார். அக்கணமே அவ்வூரிலுள்ள ஒவ்வொருவருடைய பிதிர்த்தேவதைகளும் வானத்திலிருந்து ஏகரசனுடைய வீட்டில் வந்திரங்கினர்கள். அவர்களுக்கெல்லாம் தைலம் கொடுத்து, தேய்த்துக்கொள்ளச்சொல்லி ஸ்நானம் செய்துகொண்டதும், யாவரையும் பூசித்து இலைபோட்டு உட்காரச்சொல்லி தன் தந்தை - பாட்டன் - முப்பாட்டன் மற்றும் அந்த ஊரிலுள்ள பிராமணர்களின் இறந்த தந்தையர்கள்யாவரையும் உடன் உட்காரவைத்து, விசேஷமாய்த் ததியாராதனம் செய்வித்து, சந்தன புஷ்ப தாம்பூலங்களுடனே தக்ஷிணையும் கொடுத்து, அவர்களைச் சுற்றிவந்து சேவித்து அனுப்பவும், அவர்கள் மிக்க சந்தோஷத்துடனே ஆசீர்வாதம் செய்து, அக்ஷதையைத் தலையிலே போட்டுவிட்டு, வாயலின் வழியே வெளிப்படும்பொழுது, அவ்வூரில் உள்ள வேதியர்கள் எல்லோரும், இவன் வீட்டிற்கு ஒருவனும் பிராமணர்த்தம் இருக்கப்படாதென்று ஜாதி கட்டு செய்திருக்க, இவ்வளவு பிராமணர்கள் இவன் வீட்டிற்கு எந்த ஊரிலிருந்து வந்தார்களோ? இவர்கள் யாவரோ? ஒன்றுந் தெரியவில்லையே? நாம் இவர்களைத் தடுத்து, நீங்கள் இவன்வீட்டில் உண்டமையால் உங்களையும் ஜாதிப்பிரதிஷ்டம் செய்திருக்கிறது என்று தீர்மானித்து, இவருடைய ஊருக்கு இச்செய்தியை அனுப்ப வேண்டுமென்று முடிவு செய்துகொண்டு, யாவரும் பிதிர்த்தேவதைகளின் முன்னே சென்று பார்த்தார்கள். அவர்கள் யாவரும் தம் தம் தந்தையராகயிருக்கக்கண்டு, அவர்களுடைய அடிகளில் வீழ்ந்து நமஸ்கரித்து, தங்கள் தங்களுடைய வீடுகளுக்கு அழைத்துவந்து, மிக்க சந்தோஷத்துடனே மூன்றுநாள்வரையிலும் உபசரித்து, இது நமது நண்பராகிய ஏகரசருடைய கருணையினல் இறந்த தந்தையரை மறுபடி காணப்பெற்றோம். ஏகரசன் வழிபடுகின்ற குருவானவர் ஈஸ்வராம்ஸம் பெற்றவர் என்று நினைத்து, பிதிர்த்தேவதைகளை அனுப்பிவிட்டு யாவரும் ஏகரசருடைய வீட்டிற்குச் சென்று நாகைநாதரையும் ஏகரசரையும் சேவித்து, "நாங்கள் செய்த குற்றத்தினைப் பொறுத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

அப்படி பிரார்த்தித்த பிராமணர்கள் யாவருக்கும் நாகைநாதர் பூரண அனுக்கிரகம் செய்து, அனுப்பிவிட்டு, ஏகரசனுடனே சிலநாள் நிலவுலகில் சில அற்புதங்களைச் செய்துகொண்டிருந்து முடிவில் பரமபதத்திற்கு எழுந்தருளினர்கள்.

## வாழி விருத்தம்.

மானூரில்வந்துதித்த மாதவன்தாள்வாழியே
மாசறுகாளிங்கமகிழ் மாகுருவும்வாழியே
வானூர்புக்கவளுயிரை வருவித்தோன்வாழியே
மாதுநல்லாள்வழிபட மகிழ்ந்திருந்தோன்வாழியே
தேனூரும்துழாயவனைத் தினம்துதிப்போன்வாழியே
திகழும்நவசித்தர்கர்வம் தீர்த்தளித்தோன்வாழியே
கானூருவிலங்கினத்திற் கலந்திருந்தோன்வாழியே
கருதருசீர்நாகைநாதன் கழல்கள்வாழியே.

நாகைநாதர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரெங்காயநம:

# ஸூரமனு மோகனதாசர் சரித்திரம்.

[இது ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீனிவாச அய்யங்கார் எழுதியது.]

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தண்ணரும்பொழில்சூழ்டில்லிமாநகரின் தலைவனுமக்பரென்றேதும்
பண்ணவன்தனதுமானிதிச்சாலைபண்புடையமைச்சனும்மதுரை
நண்ணியேசர்வாதிகாரமும்நடத்திநாயகன்திருவில்சாதுபூசை
பண்ணியேயுகந்தசூரமாமனுமோகனரெனும்தாசர்தாள்பணிவாம்.

முன்னம் கௌரவர்களால் அரசாண்டதும், திருமகள் கடாக்ஷம் பொருந்தியதும், கங்காநதிதீரமும் வனகூப தடாகங்களால் சிறந்து, மேன்மையுற்றதுமான அஸ்தினபுரியென்று பிரசித்தி பெற்று, சில நகரங்கள் சில காலங்களில் சிறப்புடனிருந்து பின்னே அழிந்துபோவதுபோ லில்லாமல், பண்டு இந்தப் பரதகண்டத்திற்கு எப்படி தலைநகராக விருந்ததோ அதைப்போல் இன்னும் இந்தப் பரதகண்டத்திற்குத் தலைநகராய் தனக்குரிய பெயரைமாத்திரம் மாற்றிக்கொண்டு, டில்லி என்னும் பெயரினையடைந்து, சிறப்பு வாய்ந்ததாகிய நகரத்திலிருந்து, முன்னர் சந்திரகுலத்தரசர்கள் அந்த நகரைத் தலைநகராய்க் கொண்டு, பாரதகண்ட முழுதும் எப்படியாண்டார்களோ அதைப்போல் மஹம்மதிய ராஜ்ஜியம் வந்தகாலத்திலே அந்த அஸ்தினபுரியென்னும் நகருக்கே டில்லி என்னும் பெயரை வைத்து, அதையே தலைநகராய்க்கொண்டு, பாரதகண்ட முழுவதையும் ஆக்ஷிபுரிந்து வரும்பொழுது, அக்பர் சக்கரவர்த்தியின்காலமாய் அக்பர் இருந்து அரசாண்டு வந்தான். அக்காலத்தில் அவருடைய பொக்கிஷ மந்திரி உத்தியோகத்திலே அமர்ந்தவரான ஸூரமனு மோகனரென்று ஓர் அந்தணரிருந்தார். அவர் கல்வி அறிவு, ஒழுக்கம் முதலியவைகளில் மிக்கவராய், சதா ஈஸ்வரபக்தி பூததயையுடையவராய், பரமசாந்தராய் விளங்கி வந்தார். அக்பர் சக்கரவர்த்தி ஸூரமனு மோகனருடைய நன்னடக்கையும், வாக்கு வன்மையும், சாமர்த்தியத்தையும், ஒழுக்கத்தையும் கண்டு சந்தோஷித்து, தன்ராஜ்ஜியத்தின் ஓர்பிரிவாகிய மதுராபுரிக்கு சர்வாதிகாரியாய் நியமித்து, இராஜவிருதுகள் யாவும் ஈந்து, இராஜமுத்திரையையும் கொடுத்து அனுப்பினன். ஸூரமனுமோகனர் தன் தேவியோடு அஸ்தினபுரத்தை விடுத்து, வடமதுரைக்கு வந்து, தானே சர்வாதிகாரியாய் இராஜ காரியம் யாவையும் குறைவரப்பார்த்து, தனக்குக் கீழ் உத்தியோகஸ்தர்களால் தாசீல்தார், கிராம முனிசிப், சிரஸ்ததார், அவர் காவலிலுள்ள தாலூகா கஜானா அங்கு வசூலான கிஸ்தியைச் சேர்க்கவேண்டிய உசூர் அதற்கதிகாரியான உசூர் சிரஸ்ததார் முதலிய உத்தியோகஸ்தர்கள் தனக்குக் கீழமைந்து, குடிகளிடம் வசூலாகும் கிஸ்திப்பணத்தைக் குவிக்கவும், குற்றம் செய்தோரைத் தண்டிக்கவும், கொலைபுரிந்தோரைத் தூக்கிடவும், ராஜ்ஜியத்தின்மீது படையெடுத்தோரைத் தானே தடுப்பதுமான சர்வாதிகாரமும் தனதாய்க் கொண்டு வாழ்ந்து வந்தார்.

அந்தஸூரமனு மோகனதாசர் சர்வாதிகாரம்செலுத்தும் இடமானது ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா திருவவதாரம்செய்து பிருந்தாவனமென்றும்,கோகுலமென்றும்,வடமதுரையென்றும் பெயர் பெற்றதாய், யமுனாநதிதீரமாதலால் கண்ணன் பிறந்த கடிநகரமென்றும் மாயனுகந்து விளையாடிய மதுவனமென்றும், மதுசூதன் வளர்ந்த வடமதுரையென்றும், கோபாலன்பிறந்த கோகுலமென்றும்,யாதவன் விளையாடிய யமுனாதீரமென்றும் நினைத்து, அநேக சாதுக்கள் கூட்டங் கூட்டமாய் கிருஷ்ண பரமாத்மாவைச் சேவிப்பதற்கு வந்து, பகவானைச் சேவை செய்து முடிந்து, பசிநோய் தவிர்க்க வழியின்றி வருந்துங் காலத்தில், ஓர்நாள் ஸூரமனுமோகனதாசர் கிருஷ்ணபகவானைச் சேவிப்பதற்காக சன்னதிக்குவந்து பகவானைச் சேவித்துவிட்டு திரும்பிவரும்பொழுது

சில சாதுக்கள் பசியால் வருந்துவதைக் கண்டு, அவர் திருவடிகளில் விழ்ந்து பணிந்து, "சுவாமி களே! அடியேனுடைய குடிசைக்கு எழுந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான். சாதுக்கள் சூரமனு மோகனருடனே சென்று, அவர் கொடுக்கும் மாவு-நெய்-பால்-முதலிய சாமான்களை வாங்கி, ரொட்டி-பூரி-முதலியனசெய்து பாலில் தோய்த்து, உணவுசெய்து உண்டு பரமானந்தமடைந்து, சூர மனுமோகனதாசரைப் பார்த்து, "ஐயா! நீர் இந்த மதுரா மாகாணத்திற்கு எஜமானனுய் சர்வாதிகார மும் செலுத்துகின்ற இக்காலத்தில் உமது மாகாண த்திலேயுள்ள புண்ணிய ஸ்தலங்களைச் சேவைசெய்ய வருகின்ற சாதுக்களும் தேசாந்திரிகளும் பசியால் வருந்தி, இந்தப் புண்ணியபூமியில் வயிற்றுக்கு உண வளிப்போர் இல்லையேயென்று வருந்தி, பசிப்பிணி யோடு பரதவிப்பது உம்முடைய உத்தமகுணங்க ளைக்கெடுக்குந் தன்மையாகும். நீர் நினைத்தால் இந்த மதுராபுரியில் ஆயிரம்சாதுக்களுக்கு ஆகாரம் செய் விக்கலாம். அதற்கு வருமானம் எத்தனையோ வழி களிலிருந்து வருவதால் அதிலிருந்து சிலவு செய்ய லாம்; இந்த உத்தமமானதர்மம் உமதுகாலத்தில்ஏற் பட்டாலன்றி வேறெக்காலத்திலும் ஏற்படாது. இதனை நீர் நடத்தி ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கரு ணைப் பிரசாதத்தினை யடைந்துய்யும்" என்று கூறி விட்டு சாதுக்கள் யாத்திரையாகச் சென்ருர்கள்.

சூரமனு மோகனர் சாதுக்கள் தனக்குச் சொ ன்னவார்த்தையை நினைந்து, அப்பொழுதே மதுரா புரியின் சன்னதி ஸ்தானீகரை வருவித்து, அவர் களை நோக்கி, "நாளைமுதல் இந்த மதுரை க்ஷேத்தி ரத்திற்கு எத்தனை சாதுக்கள்வரினும் அவர்களுக்கு மதுரா நாதனை சேவிப்பதற்கு சேவார்த்திகளாய் வரும் தேசாந்திரிகளுக்கும் ஐந்துவகைப் பக்ஷண ங்களுடனே சன்னதியில் தளிகை செய்து, பகவா னுக்குக் கண்டருளச் செய்து, ததியாராதனம் நட த்தவேண்டியதிருப்பதால், இதற்கு ஓர் திட்டம் ஏற் படுத்துங்கள்" என்று சொன்னர். அதற்கு அவர் கள் வராகனுக்கு ஏழுபேர்வீதம் திட்டம்போட்டு சர்வாதிகாரியாகிய சூரமனுமோகனரிடங் கொடுத் தார்கள். அவர் அதைப் பெற்றுக்கொண்டு நூறு வராகனை ஸ்தானிகரிடங் கொடுத்துத் ததியாராத னத்தை நடத்தும்படி தெரிவிக்க, அவர் அதைப் பெற்றுக்கொண்டு மறுதினம் அநேக பக்ஷணங்க ளுடன் ததியாராதனத்திற்கு வேண்டுவனவெல் லாம் தளிகை செய்து வைக்க, சூரமனுமோகனர் சேவை செய்வதற்காக சன்னதிக்கு வந்து பகவா னைச் சேவித்து, பகவானுக்குக் கண்டருளச்செய்து, பிரசாதத்தைத் தானுங் கூடயிருந்து ததியாராதன த்தை நடத்திவந்தார்.

இப்படி மதுராபுரியிலே ததியாராதனம் நடத் தவும், பிருந்தாவனம் கோகுலம் முதலிய விடங்க ளில் சேவை செய்யவரும் தேசாந்திரிகளும் சாதுக் களும் பசியால் கஷ்டப்படுகிருர்களென்று கேள்வி யுற்ற சூரமனுமோகனதாசர் அங்கும் சன்னதியி லேயே மதுராபுரியில் எப்படி ஐந்துவித பக்ஷணத் துடனே ததியாராதனம் நடத்துகிருரோ அதைப் போலவே அங்கும் நடத்தும்படி ஏற்படுத்தினர். இவ்வாறு நடந்து வருகையில், இவருடைய கைவ சமாயுள்ள செல்வமுழுவதும் சிலமாதங்களில் செல வழிந்து போயின. இனி ததியாராதனத்திற்குப் பொருளில்லாதுபோகவே தனக்குத்தானே சிந்தி க்கலாயினர். நாளை ததியாராதனத்திற்கு என்ன செய்வது? நமது கைவசமிருந்த பொருளெல்லாம் பரிபோய்விட்டதே? இனி எந்தப் பொருளைக்கொ ண்டு ததியாராதனம் நடத்துவது? என்று யோசிக் கும்பொழுது, அசூரிலே ஏராளமான பொருள் நமது ஆளுகையிலிருக்க, நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? அன்னியனுடைய பொருளைக் கொண்டு ததியாராதனம் நடத்தினல் அதன் பலன் நம்மைச் சேராது. பொருளுடையவனையே அந்தப் பலன் சென்றடையும். நான் பலனை அபேக்ஷித்து செய்ய வில்லை. சாதுக்களின் பசி நீங்கவேண்டுமென்னும் கொள்கை யொன்றைத்தவிர வேறென்றினும் என க்கு ஆசையில்லை என்று அரசனுடைய பொக்கிஷ த்திலிருக்கும் பணத்தை எடுத்து ததியாராதனம் செய்யலாம். இது மன்னவனுக்கு எப்படியும் தெரி ந்து நம் தலையை வாங்கியே விடுவான். ஆயினும் தலையைக் கொடுத்து சாதுக்களை ஆதரித்தானென் னும் பெருமைதான் நமக்கு ஏற்படுமேயன்றி, பொருளை அபகரித்தானென்னும் சிறுமை நமக்கு ஏற்படாது. இனி வேறு யோசனை செய்யவேண் டியதில்லை. அரசனுடைய அசூரிலுள்ள பொருளை முற்றும் கிருஷ்ணர்ப்பணம்செய்து ததியாராதனம் செய்கிறேன். கோபாலன் விட்டபடியே நடக்கட்டு மென்று அசூரிலிருக்கும் திரவியத்தை முழுதும் எடுத்து ததியாராதனம் செய்வதிலும், சாதுக்களு க்கு குளிருக்கு உதவியாக கம்பளம் - படுக்கை - சொம்பு முதலியவைகள் வாங்கிக் கொடுப்பதும், தன்னிடம்வந்து கேட்பவர்களுக்கு அவர்கள் விரும் பியவற்றைக் கொடுப்பதுமாய் நாள்தோறும் நட த்திவந்தார்.

இப்படி ஓரிடமேயன்றி பிருந்தாவனம், கோகுலம் முதலிய அநேக இடங்கள்தோறும் ததியாராதனம் நடந்து வந்தது. இதனால் அரசனுடைய பொக்கிஷத்திலிருந்து லக்ஷக்கணக்கான திரவியங்கள் சிலவாய்விட்டது. ஆகையால் இந்தப்பணத்திலிருந்து செய்யவேண்டியதாகிய பள்ளிச்சாலைகள், வயல்களுக்குப் பாயவேண்டிய ஜலவசதிகள், சுகாதாரத்திற்குரித்தான நகரபரிபாலன ஸ்தாபனங்கள், தேகாரோக்கியத்திற் குரித்தாய மருத்துவச் சாலைகள், ஜனங்கள் நடக்கவேண்டிய நடபாதைகள், இராஜ்ஜியத்தைக் காக்கவேண்டியவர்களான படைவீரர்களை ஆதரித்தல், வழக்காளிகளின் குற்ற விசாரணைசெய்யும் நீதிமன்றங்கள், நிலவருமானங்களைக் கவனிக்கும் தாலூகா ஸ்தாபனங்களெல்லாம் சீர்குலைந்து, இராஜாங்க காரியங்கள் முழுவதும் கேவலமுற்று, நாட்டில் பிரவாகம் வந்தாலும் வாய்க்கால்கள் ஜீரணமுற்றதை சீர்படுத்தாம லிருப்பதினால் போதுமான தண்ணீர் வயல்களுக்குப் பாயமுடியாமல் பயிர்கள் யாவும் அழிந்தன. அதனால் குணசீலரான சூர மனுமோகனதாசர் இவ்வருஷம் கிஸ்தி தேவையில்லையென்றார். போதிய விளைவில்லாத கிராமங்களுக்கு வசா செய்வதால் அசூருக்குவரும் கஜானுமுற்றும் குறைந்துபோயின. இதனைக்கண்ட அசூர் சிரஸ்ததார் மதுரை ஜில்லாவின் கேவல நிலைமையை நாம் அரசனுக்குத் தெரிவியாது போவோமாயின் இராஜாவின் சம்பளத்தை வாங்கி உண்ட நமக்குப் பாவம்வருமென்று நினைத்து, இரண்டுசேவகர்களை டில்லிமாநகரத்திற்கனுப்பி, அரசனிடம் சூரமனுமோகனருடைய செயலெல்லாம் சொல்லும்படி செய்வோம் என்று எண்ணி, தனது சேவகர்கள் இருவரைநோக்கி "ஓ நீங்கள் இப்பொழுதே டில்லிமாநகரத்திற்குச் சென்று நமது அரசரான அக்பர் சக்கரவர்த்தியிடம் நம் சர்வாதிகாரிசெய்துவரும் காரியங்களையும், அதனால் இந்த ஜில்லா அடைந்திருக்கும் நிலைமையையும் கூறிவிட்டு வாருங்கள்" என்று அனுப்பினர். அவர்கள் தன் எஜமானனாகிய சிரஸ்ததாரின் வார்த்தையைக் கேட்டு, அக்கணமே மதுராபுரியிலிருந்து புறப்பட்டு, சிறிதுநாள் வழி நடந்து, டில்லிமாநகரத்தை அடைந்து, கொலுவீற்றிருக்கும் அக்பர் பாதுஷாவின் முன்னம் சென்று வணங்கி நிற்க, அவர் இவர்களை நோக்கி "நீங்கள் எந்த ஜில்லாவைச் சேர்ந்தவர்கள்? என்ன காரியமாய் வந்தீர்கள்?" என்று கேட்டார். சேவகர்கள் மன்னவனை நோக்கி "ராஜேஸ்வரா! நாங்கள் மதுராபுரியிலுள்ள அசூர் சேவகர்கள். எங்கள் எஜமானனாகிய சிரஸ்ததார் தங்களிடம் அனுப்ப வந்தோம்" என்று கூறவும், அக்பர் சக்கரவர்த்தி அந்தச் சேவகர்களை நோக்கி, "உங்கள் எஜமானனாகிய சிரஸ்ததார் சொன்ன வார்த்தைகள் என்ன? அதனைச் சொல்லுங்கள்" என்று கேட்டார். சேவகர்கள் மீண்டும் பணிந்து, "அரசே! மதுராபுரிக்கு தங்கள் சர்வாதிகாரியாயிருக்கும் சூரமனுமோகன தாசரென்பவர் அசூரிலுள்ள செல்வமுழுவதையும் மதுராபுரியிலும், கோகுலத்திலும், பிருந்தாவனத்திலும் சேவை செய்யவரும் யாத்ரீகர்களுக்கும் சாதுக்களுக்கும் ஐந்துவகை பக்ஷணங்களுடனே சன்னதியொன்றில் ஆயிரம்பேர்கள் போஜனம் செய்யும்படி ஏற்பாடுசெய்து, சமாராதனை நடத்திவருவதோடும் யாத்திரைவாசிகளாய்வரும் சாதுக்களுக்கு சமையல் செய்யப் பாத்திரங்களும், குளிருக்குப் போர்த்திக்கொள்ள சால்வைகளும், படுப்பதற்குப் படுக்கைகளும் கொடுத்து வருகின்றார். தவிர தண்ணீர் வசதிகளுக்கும், வைத்தியசாலைகளுக்கும்; பள்ளிச்சாலைகளுக்கும், ஜனங்களுடைய சுகாதாரத்திற்கும், இராஜ்ஜியத்தைக் காக்க வேண்டிய படைகளுக்கும் சிலவு செய்யவேண்டியன முழுவதும் நின்றுபோயிற்று. வயல்களுக்குப் பாயவேண்டிய வாய்க்கால்கள் தூர்ந்துவிட்டதால், சில கிராமங்களில் நஞ்சை சாகுபடியில்லாமல் தீர்வைப்பணம் நின்றுவிட்டது. இன்னும் சிறிதுநாளில் மதுரை ஜில்லாவே பாழாய்ப் போய்விடுமென்று எங்கள் எஜமான் சொல்லி அனுப்பினர்" என்று கூறினார்கள்.

இவ்வண்ணம் சேவகர்கள் கூறிய வார்த்தையைக்கேட்ட அக்பர் சக்கரவர்த்தி கோபமேலிட்டு கண்கள் சிவந்து, புருவம் இரண்டும் நெளிந்து வில்லைப்போல் வளைந்து தோன்றவும், மீசை படபடவென்று துடிக்க, தோள்கள் இரண்டும் மலைபோல் உயர்ந்து தோன்ற, நெஞ்சுதுடிக்க தன்னுடைய அமைச்சனை நோக்கி "மந்திரி! நம்மால் யோக்கியனென்று கருதப்பட்ட சூரமனுமோகனனுடைய தீச்செயலைக் கேட்டீரோ? அவனிடம் கொண்ட அபிமானத்தால் சர்வாதிகாரத்தையும் அவன் வசம் ஒப்புவித்து, மதுராபுரிக்கு அவனே இராஜனென்று சொல்லும்வண்ணம் அவனை நான் நியமித்துரைத்ததற்கு அந்த ஜில்லாவையே அவன் பாழாக்கிவிட்டானும் இதற்காக அவனுக்கு என்னசிக்ஷை விதிப்பது?" என்று கேட்டான். அப்போது கருணையே ஓர் வடிவாய் அமைந்தவனாகிய மந்திரி அரசன் முன்னே எழுந்து நின்று, "மண்டலேஸ்வரா! சூரமனுமோகனர் இந்தச் சேவகர்கள் கூறியபடி குற்

றம் செய்பவரல்லர். அவர் சமாராதனை செய்திருக்கலாம். அது அவருடைய சம்பளத்திலிருந்து நடத்திவைக்கக் கூடுமேயன்றி அசூர்பணத்தை அபகரித்து, அதைக்கொண்டுசெய்யும் சுபாவமுடையவரல்லர். இந்தமாதத்திற்குச் சிலவு கொஞ்சம் அதிகமாகயிருக்கும். அதனால் தன் சம்பளத்தில் பற்றெழுதிக்கொண்டு, அசூரிலிருந்து முன்னதாகப் பணம் எடுத்திருக்கலாம். அதனைக்கண்ட அசூர் அதிகாரியான சிரஸ்ததார் மனம் தாளாது, சேவகர்களை அனுப்பியிருப்பானேயன்றி வேறொன்றும் நடந்திருக்கமாட்டாது. ஆகையால் தாம் எதற்கும் இப்பொழுதே ஒருதாக்கீது எழுதி, இராஜமுத்திரை வைத்து, சேவகர்கள் கையிற்கொடுத்து, இந்த வருஷம் வசூலான கிஸ்தித்தொகையின் கணக்கும், அந்தத் தொகையும் அனுப்பும்படி செய்தால், நாமே அதைச் சரிபார்த்துக் கொள்ளலாம்'' என்று கூறினன். அக்பர் சக்கரவர்த்தி மந்திரியினுடைய வார்த்தையைக்கேட்டு, சினந்தணிந்து, மந்திரியைக்கொண்டு தாக்கீது எழுதச்சொல்லி அதில் கையெழுத்திட்டு, தனது இராஜமுத்திரையிட்டு, இரண்டு சேவகர்களை முன்னே வரும்படி அழைத்து, "சேவகர்களே! நீங்கள் இதைக்கொண்டு, மதுரா நகரத்து சர்வாதிகாரியிடம் கொடுத்து, அசூரிலிருக்கும் கஜானவை, முற்றும் வண்டியில் ஏற்றச்சொல்லி, அதற்குரிய வரவு சிலவு கணக்கையும் வாங்கி வைத்துக் கொண்டு வாருங்கள்'' என்று அனுப்பினர்.

சேவகர்கள் இருவரும் டில்லிமா நகரத்தை விட்டு, மதுராபுரியைநாடிச் சிலநாள் வழிநடந்து சென்று, சர்வாதிகாரியின் அதிகாரமண்டபத்தினையடைந்து, அன்னவரைப் பணிந்து நிற்கவும், சூரமனுமோகனர் இராஜசேவகர்களைக்கண்டதும் இவர்கள் நம்மைக் கைதியாக்கிக்கொண்டு மன்னவனிடம் அழைத்துச் செல்லவந்தவர்கள் என்று நினைத்துத் தமது மனத்தை சிதறவிடாமல் இப்படிவருமென்று முன்னமேயே துணிந்தது தானே என்று திடப்படுத்திக்கொண்டு, சேவகர்களை நோக்கி, "வாருங்கள்! என்ன காரியமாய் வந்தீர்கள்?'' என்று கேட்டார். அவர்கள் சர்வாதிகாரியான சூரமனுமோகனதாசரைப் பணிந்து, "எஜமானே! இந்த அசூரிலுள்ள பொருள்களையும், அதன் கணக்குகளையும், இப்பொழுதே வண்டிகளில் ஏற்றி அனுப்பும்படி அரசர் உத்தரவிட்டு எங்களை அனுப்பினர். அவர் கொடுத்த தாக்கீது இதோயிருக்கிறது பாரும்'' என்று சூரமனுமோகனரிடம் கொடுத்தார்கள். அவர் அதைப் பிரித்துப் பார்த்து, இவர்கள் சொல்லியபடியே அதில் எழுதியிருப்பதைக் கண்டு, உடனே சேவகர்களை நோக்கி, "நீங்கள் சாப்பிட்டுவிட்டு வாருங்கள்; அதற்குள் எல்லாம் சரிப்படுத்திவைத்துவிடுகிறேன்'' என்று சொல்லி, தனது சேவகரையுங் கூட அனுப்பினர். அவர்கள் சாப்பிட்டுவருவதற்குள்ளாக இரண்டு மரப்பெட்டிகளில் நிரம்பவும் கூழாங்கற்களை நிரப்பி, பெட்டிகளைமூடி பூட்டிட்டு, அதன்மீது துணிசுற்றித் தைத்து, அரக்கினால் முத்திரைவைத்து, வசூலான தொகைக்குக் கணக்குகள் முழுவதும் அந்தப் பெட்டியின்மேல்வைத்து, அரசனுக்கு ஓர் விண்ணப்பக் கடிதமாக, "டில்லிநகரச் சக்கரவர்த்திக்குத் தங்கள் ஊழியனாகிய சூரமனுமோகன் வணக்கமாய் எழுதிக்கொண்ட விண்ணப்பம். இவ்வருஷம் வசூலான தொகை முழுவதும் சேர்ந்து எட்டுலக்ஷத்து எழுபதாயிரம் வராகனாகும். இங்கு ஓர் சக்கரவர்த்தியின் வைரநகைகள் இரண்டுகோடி பெருமதிப்புள்ளதாகயிருந்தது ஆதலால், அவைமுழுதும் அரசர்பிரானாகிய தமக்கு வேண்டுமென்று நினைத்து, இவ்வருஷம் மற்றைய சிலவுகளைக் குறைத்து, வசூலான தொகை முழுவதுமே கொடுத்து வாங்கி, இந்த இரண்டுப்பெட்டியிலும் அடக்கம்செய்து அனுப்பியிருக்கிறேன். இதனை ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று எழுதி தன் கையெழுத்துவைத்து ராஜமுத்திரையிட்டு, சுருள் செய்து, சீலைமண்பொதிந்து, அதன்மேல் முத்திரை வைத்து, இராஜசேவகர்கள் போஜனம் செய்துவிட்டு வந்ததும், ஓர்வண்டி அமர்த்தி, அதன்மேல் அவர்களைக் கொண்டே அந்தபெட்டிகளைத் தூக்கி வைக்கச்சொல்லி, அவ்விருவரும் மகிழ சன்மானங்கள் செய்து அனுப்பினர்.

அந்தச் சேவகர்கள் மிக்க சந்தோஷமடைந்து வண்டியில் ஏறிக்கொண்டு கஜானவுடன் சிலநாளில் மதுராபுரிக்கு வந்து, தர்பார்மண்டபத்தில் கொலுவீற்றிருக்கும் அக்பர் சக்கரவர்த்தியைப் பணிந்து நடந்தவற்றைச் சொல்லி, விண்ணப்பச்சுருளை அரசனிடம் கொடுக்க, அரசர்பிரான் அதனைத் தனது ராயசனிடம் கொடுத்து வாசிப்பாயென்று சொல்லவும், அவன் அதைப்பிரித்து முன்னே எழுதியபடிக்கே வாசித்தான். அரசன் திகைத்து, எனது கிஸ்தித் தொகையை என்னிடம் அனுப்புவதைவிடுத்து, எனக்கு நகைவாங்க இவனுக்கு என்ன அதிகாரமிருக்கிறது? என்ன நகை வாங்கியிருப்பான்? இதனைச் சோதிக்கவேண்டுமென்று கருதி, பொக்கிஷதாரரை வருவித்து, "மதுராபுரி கஜானவின் பூட்டுச்சாவியைக்கொண்டுவாரும்'' என்று சொல்லி

விட்டு சேவகர்களைநோக்கி "அந்த இரண்டு பெட்டிகளையும் கொண்டுவாருங்கள்" என்று நியமித்தான். சேவகர்கள் வண்டியிலிருந்து பெட்டிகளைத் தூக்கிக் கொண்டு அரசனிடம் கொணர்ந்து வைத்தார்கள். பொக்கிஷதாரர் முத்திரையைப்பிரித்து, பூட்டைத் திறந்து, பெட்டியின் கதவைத்திறக்கவும், (ஸ்ரீகோபாலகிருஷ்ண பரமாத்மா சூரமனு மோகனரைக் காப்பாற்றக் கருதி, அந்தப்பெட்டியில் இருப்பன யாவும் விலை மதிப்பிடவொண்ணாத வைரமயமாய் வைரப்பாளைகளாகவும், பாஜிபந்துகளாகவும், மதாணிப்பதக்கங்களாகவுமிருக்கும்படி கருணைபுரியவும்) பார்ப்பவர்களுடைய கண்கள் கூசும்படி வைரக்கற்கள் ஒளிவீசின. உடனே மன்னவன் ஆசனத்திலிருந்து குதித்து, அதிசயித்து, நகை மதிப்பிடுபவர்களை வருவித்து, அவர்களிடம்காட்ட, அவர்கள் இதனைநோக்கி, "இதுபோன்ற வைரங்களை நாங்கள் இதற்குமுன் எப்போதும் பார்த்ததேயில்லை. ஒவ்வொரு கற்களும் கோடிவராகன் பெறும்" என்று கூறினர்கள். அரசன் அதைக்கேட்டு மகிழ்ச்சி அடைந்து, தனது அந்தப்புரத்திற்குப் பெட்டிகளைத் தூக்கிக் கொண்டுபோகச் சொல்லிவிட்டு, உடனே சூரமனுமோகனதாசரை அழைத்து வரும்படி தனது மந்திரியை அனுப்பினன். அப்படியே மந்திரி மதுரா நகரத்திற்குப் பல்லக்கில் ஏறிச்சென்று விசாரிக்கும்பொழுது, டில்லிமா நகரத்திற்குக் கஜானா அனுப்பியதினமே தன்மனைவியுடன் வண்டி ஏறி எங்கேயோசென்றவர் இன்னும் வரவில்லையென்று சொல்லக்கேட்டு மனம் வருந்தி மீண்டும் டில்லிமா நகருக்கே வந்து சேர்ந்தான்.

மந்திரி டில்லிமாநகரம் வந்ததும் அக்பர் சக்கரவர்த்தியைப் பணிந்து, "அரசே! சூரமனுமோகனர் அன்றே அசூரிலிருந்து கஜானாவை அனுப்பிவிட்டு, ஒருவனுடனும் சொல்லாமல் தன்மனைவியுடனே எங்கேயோ சென்றுவிட்டவர் இன்னும் வரவில்லையென்றும் அந்த ஊரிலுள்ளவர்கள் சொல்லுகின்றனர். அவருடையவீடு பூட்டப்பட்டிருக்கிறது" என்று சொல்லினன். அவ்வார்த்தையைக் கேட்ட அரசன் துயரமேலிட்டு, அன்னவரை அரசன் துயர்மேலிட்டு, அன்னவரை என்று காண்பேனே என்று ஒரே ஏக்கங்கொண்டு தன் அரண்மனைக்குட் சென்று, அன்றிரவு ஆகாரம்கூட சரியாய் அருந்தாமல், அவரை எப்பொழுது காண்பேனென்னும் துக்கத்துடனே அன்றிரவு தன்தேவியுமின்றி பள்ளியறையிலேபோய்ப் படுத்துக்கொண்டு, சூரமனுமோகனரைக் காணாத ஏக்கத்தால் நெடுநேரம் தூக்கமின்றி படுக்கையிலேயே படுத்திருந்தான். அப்பொழுது வேணுகானநாதம் தன் பள்ளியறையில் கேழ்க்கவும், ஆஹா! இது என்ன ஆச்சரியம்! என்றுமில்லாத இன்று யான் கேட்டிராத வேணுகான சப்தம் என் பள்ளியறையில் கேட்கின்றதேயென்று, கண்களைத் துடைத்துக்கொண்டு, விழித்து சுற்றுமுற்றும்நோக்கும்பொழுது, தான் பெட்டியில் பார்த்த ஆபரணங்கள் முழுதையும் அப்படியே அணிந்துகொண்டு, திவ்வியாங்க சுந்தரனாய் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தன்முன்னே எழுந்தருளி வேணுகானம் செய்வதைக் கண்டு, ஆனந்த பரவசனாய்ப் படுக்கையைவிட்டு எழுந்து, அவருடைய திருவடிமுன்னேமண்டியிட்டுப் பலமுறையும் சலாம் செய்து, "மகாராஜ்! அடியேனுடைய பள்ளியறைக்குவந்து சேவைதர நான் என்னபாக்கியம் செய்தேனே! நீர் யார்? என்பதையும் அடியேன் தெரிந்துகொள்ளும்படி சொல்லவேண்டுமென்றான். மன்னா! என்னை ஸ்ரீகிருஷ்ணபகவான் என்று கூறுவார்கள். நானே உனது ராஜ்ஜியத்தினைச் சேர்ந்த மதுராபுரிக்கு நாயகன். இந்த இந்துதேச முழுதும என்னையே கடவுள் என்பார்கள் என்று சொல்லவும், அக்பர் சக்கரவர்த்தி ஆனந்தக்கண்ணீர் பெருகி, அவர் திருவடிகளில் வீழ்ந்து, "ஏழையேனை ஆதரிக்க எழுந்தருளிய கடவுளே! என் ஆண்டவனே! இந்தத் திரு ஆபரணங்கள் சூரமனுமோகனர் அடியேனுக்குக் கிரையத்திற்கு வாங்கி அனுப்பியதன்றோ! இப்பேர்ப்பட்ட ஆபரணம் உமதுதிருமேனிக்கே பொருத்தமுடையது. இதனை நீரே அணிந்துகொள்வதோடு மதுரா ஜில்லாவை தேவரீருக்கே அர்ப்பணமாகத் தந்தேன். அதைச் சூரமனுமோகனதாசரே மேல் பார்த்து, அவரது இஷ்டம்போலவே கைங்கரியம்நடக்கும்படி கிருபை செய்யவேண்டும். அன்றியும் அவர் எங்குசென்றிருக்கிறாரென்றும் எனக்குத் தோன்றாததால் மிக்க துயருறுகிறேன். அவர் இருக்கும் இடத்தையும் அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தான். அப்படி பிரார்த்திக்கவும் ஸ்ரீ பகவான் அக்பர் சக்கரவர்த்தியை நோக்கி, "அவர் இப்பொழுது பிரயாகையிலிருக்கின்றார். அவரை வருவித்து அவருக்கு மதுரை ஜில்லாவை ஒப்புவிக்கக்கடவாய்" என்றுகூறி மறைந்தருளினர். உடனே அக்பர் சக்கரவர்த்தி பிரயாகையிலிருக்கும் சூரமனு மோகனரை வருவித்து, அவரிடம் வடமதுரை ஜில்லாவை சர்வமானியமாய் விட்டு, ஸ்ரீபகவானுடைய கைங்கரியத்தைச் செய்யும்படி அனுப்ப, அவரும் அப்படியே செய்து, முடிவில் பரமபதத்திற்கு எழுந்தருளினர்.

## வாழி விருத்தம்.

மாமதுரைப்பதிவாழி மன்னவனக்பரும்வாழி
தேமறையோர்குலம்வாழி திருமகள்கேள்வனும்வாழி
சேமநிதியால்சாதுபூசனை செய்தவன்வாழி
பாமருசூரமனுமோகனனெனும் பாவலன்வாழி.

சூரமனுமோகனதாசர் சரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்காயநம:

# முகுந்தராஜன் சரித்திரம்.

[இது ஆழ்வார் திருநகரி சிங்கம் ஸ்ரீனிவாச அய்யங்கார் எழுதியது.]

விருத்தம்.

திருமகள்முகமேபோலத் திகழுசௌராஷ்ட்ரதேயத்
தொருபெருமரசாய்த்தோன்றி யுரியநற்றவத்தான்முன்னம்
மருவுசன்மதத்தினேரை வான்சிறையடைத்துமாயன்
முருகுயர்சரணம்பூண்ட முகுந்தராஜன்தாட்கொள்வாம்.

சௌராஷ்டிர தேசமென்பது தனசமர்த்தியுடையதாய், தொழில் அபிவிருத்திக்கு வேண்டிய சாதனங்களெல்லாம் அடையப்பெற்றதாய், கங்கை-யமுனை-முதலிய புண்ணிய நதிகளால் செழிப்புற்றதாய், உழவுத்தொழில் மிகுதியினல் நவதானியங்களும் செழிப்புற்று இந்தியதேசமேயன்றி கப்பல்களின் வாயிலாய் அன்னியதேசத்தவர்களுடைய பசியைத் தணிப்பதற்குப் போதிய சாதனமுடையதாய் அநேக புண்ணிய சீலர்களுக்குப் பிறப்பிடமாய், வறுமைநோயால் வருந்துவாரின்றி போதிய செல்வ வளமுடையதாய், கல்வி கேள்விகளில் மிக்கவர்களாலே நிரம்பியதாய், வர்த்தகத் தொழிலில் கைதேர்ந்தவர்களாலே குழுமியதாய், விடாமுயற்சியே சிறந்ததெனக்கொண்ட நான்கு வருணத்தவரும் குழாங்கொண்டு வாழும் நாடு. அந்த நாட்டிலே மகார்ணவமென்கிற ஓர் பட்டணமுளது. அதன் அழகையும், அதிலுள்ள புராதன கட்டிடங்களையும் பார்த்து, நமது பூர்வீகர்களின் சிற்பத்தொழிலின் வல்லபமும் அவர்களின் நாகரீகமும் தெரிந்துகொள்ள அமைந்தது. அந்த நகரின் அமைப்பு நாற்சதுரமுடையதாய், மத்தியிலே அரசனுடைய அரண்மனையும், அதைச்சுற்றி மாடவீதியும், அந்த மாடவீதியிலிருந்து நான்கு கோட்டை மதில்வரை நீண்டு செல்லும் அகன்ற தெருக்களும் நோக்கின், அந்நகரம் ஒரு இராசிச்சக்கரம்போல் தோன்றும். சிற்பசாஸ்திர முறைப்படி வகுத்த நகரமானதால், அந்த நகரின் தென்மேற்கு மூலையிலே விஷ்ணு ஆலயமும், வடகிழக்கு மூலையிலே சிவாலயமும் அமைந்து சிவாலயத்தின் அம்மன் சன்னதி வாசலிலிருந்து நீண்டு செல்லும். சன்னதித்தெரு விஷ்ணு சன்னதியிலிருந்து நீண்டு செல்லும் சன்னதி வீதியுடன் அந்த நகரத்தின் தென்கிழக்கு மூலையிலே ஒன்று சேர்கிறது. இந்த இரண்டு சன்னதி வீதியிலுமுள்ளவர்கள் பிராமணர்களாவார். விஷ்ணு ஆலயத்தின் முன்னேயுள்ள சன்னதி வீதியிலுள்ளவர்கள் வைஷ்ணவர்களும், சிவாலயத்தின் முன்னேயுள்ளவர்கள் ஸ்மார்த்த பிராமணர்களாகவும் அமைந்தது. பெருமாள்கோவில் வீதியின் பின்புறம் சரஸ்வதி நதியானது பெருக்கெடுத்து, மேற்கேயிருந்து கிழக்கு நோக்கியோடுவதால் அந்தச் சன்னதி வீதியிலுள்ளவர்களுடைய நித்திய கருமத்திற்குத் தக்க வசதியுடனே அமைந்து தோன்றுகிறது. அம்மன் சன்னதித்தெருவின் பின்புறத்திலே சரஸ்வதியென்னும் நதி வடக்கேயிருந்து தெற்குநோக்கி ஓடுகிறது. இந்த நதியே அந்தச் சன்னதித் தெருவிலுள்ளவர்களுக்கு உரிய கர்மானுஷ்டானங்கள் செய்வதற்கு அமைந்ததாகயிருக்கிறது. அந்த நகரத்திற்கு மத்தியிலிருக்கும் அரண்மனைக்கும் கோட்டைவாசலுக்கும் நேராய் நீண்டு செல்லும் வீதியே இராஜவீதியாகும். இது அரண்மனையின் கீழ்க்கோபுரவாசலிலிருந்து கீழ்க்கோட்டை வாயில்வரை மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் அமைந்தனவாய் மலையினும்பெரிய மாளிகைகளால் நிரம்பிய க்ஷத்திரிய வீரர்கள் வீதியாகும். அரண்மனையின் தெற்கு கோபுரவாசலிலிருந்து தெற்குக் கோட்டைவரை நீண்டு செல்லும் பெரியவீதியே கடைவீதியாகும்.

இந்தவீதியில்தான் பலதேசங்களிலிருந்து வர்த்தகம் செய்வதற்குவந்த தனவந்தர்களான வைசியர்களால் நிரம்பியது. மேலைக் கோபுரவாயலிலிருந்து மேலை கோட்டை வாசல்வரையில் நீண்டுசெல்லும் வீதியே உழவுத்தொழிலால் பல உயிர்களையும் காப்பாற்றும் சூத்திரவீதியாகும். இந்த வீதியைச்சார்ந்து, கோட்டையின் உட்புறத்திலே தென்வடகோடி பெரிய தெரு ஒன்றுண்டு. அந்தத்தெரு தட்டார்-கன்னார்-தச்சர்-கொல்லர்-ஸ்தபதிகள் இவர்களுடைய வீடுகளாக அமைந்தது. அரண்மனையின் வடக்குக் கோபுரவாசலிலிருந்து வடக்குக் கோட்டை வாயில் வரை நீண்டு செல்லும் தெருவே சேனநாயகர்களுடைய வீடுகளாக அமைந்தது. இந்தவீதியைச் சார்ந்ததாக கோட்டையையடுத்த கிழ்மேலோடிய வீதியொன்றுண்டு. அதுவே ஒன்றுபோல சிறுசிறு வீடுகளால் அமைந்து சேனவீரர்கள் வாழும் வீடுகளாக நிறைந்திருக்கின்றது. இவையல்லாத இடங்களெல்லாம் அழகிய தடாகங்களாலும், நந்தவனங்களாலும் சிறந்து தோன்றும். இத்தகைய சிறப்புவாய்ந்த நகரத்தினை அரசாண்டு, தனதுசெங்கோல் யாவராலும் புகழத்தக்கதாய், நீதிகுன்றாது வாழ்ந்துவரும் மன்னவன் ஒருவன் இருந்தான். அவன்பெயர் முகுந்தராஜன் என்று சொல்லுவார்கள். அவன் வைஷ்ணவனாதலால் எந்தவஸ்துவிலும் ஸ்ரீமந்நாராயணனே தங்கியிருக்கிறான் என்று நினைத்து, எவ்வுயிரையும் அருமையாய்ப் பார்த்துத் தன்னுயிர்போல் காப்பாற்றி வந்தான். இப்படி அரசாண்டு வரும் மன்னவன் விஷ்ணுபக்தனா யிருத்தலாலே காலையில் எழுந்து, தீர்த்தமாடி தனது கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ணபகவானை ஆராதனை செய்துவிட்டு, ஸ்ரீபாகவதத்தினை சிரவணம் செய்துகொண்டு வருவது வழக்கம். இப்படியிருக்க ஓர்நாள் புராணிகர் மன்னவனை நோக்கி, "பாகவத ஸ்லோகத்திற்குஅர்த்தம் செய்துகொண்டு வரும்பொழுது, ஒருவன் எவ்வளவு ஞானவைராக்கியமிருந்தாலும், எவ்வளவு கல்வி அறிவுடன் மேன்மை அடைந்திருந்தாலும், மோக்ஷவுலகத்தை அடையவேண்டின், ஞானனுஷ்டானமுடைய ஆசாரியனது அனுக்கிரகமும், உபதேசமும் வேண்டும்" என்று சொல்லினர். இதனைக்கேட்டதும், முகுந்தராஜன் தானும் மோக்ஷவுலகத்தினைப்பெற விரும்பி, ஒரு ஆசாரியனை அடைந்து உபதேசம் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று நினைத்தான். இந்த நினைப்புவந்ததும், புராணிகரை நோக்கி "சுவாமி! அடியேன் பாவனமாவதற்கு ஒரு குருநாதனை அடைய வேண்டுமென்றும், உமது சிரவணம் கேட்டதும் எனது உள்ளத்திலே கொண்டுவிட்டேன் ஆசாரியன் வருகின்றவரை சர்வேஸ்வரன் என்று கருதவேண்டுவது சிஷ்யனுடைய கடமை என்றும், தேவரீர் திருவாய்மலர்ந்தருளினீர். அத்தகைய ஞானசாரியன் எனக்கு எப்பொழுது கிடைப்பாரோ? அடியேன் அவருடைய திருவடியை அடைந்து திருமந்திரத்தை உபதேசிக்க என்று பெறுவேனோ? தெரியவில்லை. இந்த உலகமே ஒருவரை ஒருவரே மாற்றுந்தன்மையில் அமைந்திருக்கிறது. நானே சற்குரு பிரமத்தை நேரேகண்டவன். எனக்கு ஒன்றிலும் பற்றில்லை என்றும், நான் உண்ணாமை என்னும் விரதத்தைக் கைக்கொண்டவன் என்றும், படாடோபமாய்ப் பல சிஷ்யர்களுடனே வருகிறான். அவன் பகலிலே உண்பதில்லையே தவிர இரவெல்லாம் பலமுறையும் மது மாமிச பக்ஷணங்களுடனே உண்டு, யுவதிகளான பலநங்கையர் போகத்தினை அனுபவித்து மகிழ்ச்சி அடைகின்றான். இதற்கு வேண்டிய பொருளுக்கு நான் அங்கு திருமடம் கட்டுகிறேன், இங்கு தடாகம் வெட்டுகிறேன், கோவில் கட்டுகிறேன் என்று பொய்சொல்லி அறிவில்லாத ஜனங்களை ஏமாற்றி பொருள்களைக் கவர்ந்து செல்லுகின்றனர். இப்பேர்ப்பட்ட மோசக்காரரை குருவென்று நினைத்து இன்னவர்பால் உபதேசம் பெற்றுக்கொண்டு எனக்கு உபதேசம் கிடைத்துவிட்டது, மோக்ஷவுலகம் என்கைவசமாய் விட்டதென்று மகிழும் புல்லறிவாளர்கள் இந்த உலகில் நிரம்பியிருக்கிறார்கள். அன்றியும் மேலான ஆசாரிய பரம்பரையிலே பிறந்து பிறந்ததுமாத்திரமேயன்றி, கல்வி அறிவு சிறிதுமில்லாமல் ஞானபாவம் கிஞ்சித்துமின்றி, மனைவியருடனே சுகானுபோகத்தை வேண்டியமட்டும் அனுபவித்து, எனக்குப் பதினாயிரம் தலைகட்டு சிஷ்யர் இருக்கின்றனர். இதுவே எமக்கு பெரிய சொத்தென்று சொல்லிக் கொண்டு சாகுபடி செய்துகொண்டு, முதற்காலத்திலே சிஷ்ய யாத்திரைக்கென்று புறப்பட்டு, காகளம் சின்னம் முதலிய வாத்தியங்கள்முழங்க, அநேக பரிசாரகர்கள் வேலைக்காரர்கள் சுருட்டி - சாமரம் போட பல்லக்கு முதலிய ஆடம்பரத்துடனே ஊரூராய்ச் சென்று ஏழை ஜனங்களிடம் ததியாராதனத்திற்குச் சாமான்கள் கொண்டுவாருங்கள். நாளை அடுத்த ஊர் போகவேண்டியதாக யிருப்பதால் பதிவுப்படி உள்ள தக்ஷிணையைத் தலைகட்டு வரிவீதம் கொணர்ந்து சமர்ப்பித்துவிடுங்கள் என்று அரசனுடைய வரியைப் பார்க்கிலும் அன்றையத்

தினமே வரிப்பணத்தைப் பறித்துக்கொண்டு, ததியாராதனையும் நடத்திவிட்டு, வேற்று ஊர்களுக்குச் செல்கின்றனர். உபதேசமென்றால் திரு அஷ்டாக்ஷரமான எட்டெழுத்துத் தெரியுமேயன்றி வேறு ஏதும் அறியார்கள். ஆசாரிய பரம்பரையில் பிறந்த காரணத்தால் மாத்திரம் சிறந்ததன்றி, இவர்கள் செய்யும் உபதேசத்தால் என்னபயன் உண்டோ? அது எனக்குத் தெரியவில்லை. இவர்களோ சிஷ்யர்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கி, சிஷ்யர்களை மோக்ஷவுலகத்திற்கு அனுப்பப்போகிறார்கள். ஒருவன் தனக்குக் கொடுக்கவேண்டிய வரியைக் கொடுக்கவில்லையானால், அப்பொழுது ஆசாரியருக்கு வருகிற கோபம் சொல்லமுடியாது. கோபமும்-அகங்காரமும் - டம்பமும் குடிகொண்ட ஆசாரியர்களாலேயேகிரம்பிவிட்டது. ஒருவன் தனக்குப் பொருள் வேண்டியிருந்தால், தனது சொத்தை அடமானம் வைத்துப் பொருள் வாங்குவதுபோலத் தனது சிஷ்யரை வைத்து கடன்வாங்கும் குருக்களும் உண்டு. குருக்கள் என்றால் சிஷ்யரிடமுள்ள பொருளைக் கவருகின்றவர்களென்று ஏற்படுகின்றதேயன்றி, சிஷ்யருடைய அறியாமையை நீக்குவதற்கில்லை என்று தெரிகிறது. இதனாலேயே உண்மை ஞானியாய் பற்றற்றவராய் சர்வேஸ்வரனை அனுபவ ஞானத்தால் அறிந்தவராய் உத்தமர்களுடைய மகிமையும் தோன்றுவதற்கில்லாமற் போகிறது. இப்படியிருத்தலால் எக்காலத்திலே என்னுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்து வைக்கும் ஞானாசாரியன் அகப்படுவாரோ?'' என்று கேட்டான்.

இவ்வாறு மன்னவன் கூறிய வார்த்தையைக் கேட்ட புராணிகர் "மன்னவனுக்கு ஆசாரியனிடம் உபதேசம் பெறவேண்டுமென்னும் ஆசை அதிகரித்திருக்கிறது. இவனைப்போன்ற மன்னவர்கள் இவ்வாறு உபதேசம் பெற்றுக்கொண்டு, பகவத்தியானபரரானால், நம்போன்ற ஜீவனம் செய்பவர்களுக்கெல்லாம் எதேஷ்டமான வருமானம் கிடைக்கும். அன்றியும் நமது மனதுக்கிசைந்த ஒருவரை ஆசாரியராக அனுப்பினால், அவருக்கு வருகிற வருமானத்தில் நாமும் பாதியைப் பெற்றுக்கொள்ளலாம். இது நல்ல யோசனைதான்'' என்று நினைத்து, மன்னவனை நோக்கி "அரசே! உமக்கு இராஜகாரியமிருப்பதால் தக்க ஆசாரியனைத்தேடி அடைந்து, உபதேசம் பெறுவது அரிதாகும். நானே தங்கள் மனதிற்குத் திருப்தியானவரும் ஞானானுஷ்டானவருமாகிய ஆசாரியனை உம்மிடம் அனுப்புகிறேன் அவரிடம் உபதேசம் பெற்றுக்கொள்ளும்'' என்று அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு சென்றனர்.

புராணிகர் முகுந்தராஜனுக்கேற்ற ஆசாரியனைத்தேட விரும்பி, ஒரு கிராமத்திற்கு வந்து, சொர்னமயமான தேககாந்தியுடையவரும், வைஷ்ணவரும் துவாதச நாமத்தைத் திருமேனிமுற்றுமொழிதர சாத்திக்கொண்டவரும், துளசிமாலை, திருப்பணித்தாழ்வடமணிந்து, வைதீக அனுஷ்டானம் குறைவின்றி விளங்குந் தன்மையுடையவராகவும் இருக்கும் ஒருவரைக்கண்டு, இவருடைய தேககாந்தியும் வைஷ்ணவ சின்னமும் வைதீக ஒழுக்கமும் நன்றாகத் தோன்றுகிறது. இத்தகைய அங்கலக்ஷண முடையவரே ஆசாரியனாய் மன்னவனுக்கு அடையத் தகுதியுடையவர். இவரை அலங்காரம் பண்ணி ஒரு சால்வையை மேலேபோர்த்தி, பல்லக்கில் ஏற்றினால் ஸ்ரீமந்நாராயணன், என்றுதான் சொல்லவேண்டும். இவருடைய மலர்ந்த முகமும், நீண்டகண்களும், குளிர்ந்த பார்வையும், சொர்னமயமாய் விளங்கும் மேனியும், நமது அரசனுடைய உள்ளத்தைக் கவர்ந்துவிடும். ஆனாலும் கல்வி அறிவும் போதியவளவும் இல்லையேல் நமது மன்னவன் ஆசாரியனாக அங்கீகரிக்கமாட்டான்'' என்று நினைத்து, அந்த ஸ்ரீவைஷ்ணவர் முன்னே சென்று, "சுவாமி தங்களை நாடியேவந்தேன்'' என்று சொல்லவும், அந்த வைஷ்ணவரும் மிகுந்த வினயமும் கல்வி அறிவும் வாய்ந்தவராதலால், தன் முன்னே வந்து நிற்கும் புராணிகரை உற்று நோக்கி "அவர் அணிந்திருக்கும் ஆபரணங்களாலும், மேலே போர்த்தியிருக்கும் சால்வையாலும், இவர் ஒரு இராஜகிரக பண்டிதராகயிருக்கவேண்டும்'' என்று நினைத்து, சுவாமி எழுந்தருளவேண்டும். தேவரீர் எங்கிருந்து எழுந்தருளுவது? என்று கேட்டனர். புராணிகர் "சுவாமி! அடியேன் மகார்ணவநகரத் தரசனுடைய ஆஸ்தானபண்டிதனுக்கும். தேவரீரைச் சேவித்து விட்டுப் போகலாமென்பதாக வந்தேன். அடியேனுக்கு விசிஷ்டாத்துவித சித்தாந்தத்தைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொண்டு போகவேண்டுமென்னும் ஆசையால் இவ்விடத்திற்கு வந்தேன். தேவரீர் திருவுளம்பற்றி எனது உள்ளத்தில் நிகழ்ந்துகொண்டிருக்கும் சந்தேகங்களைத் தீர்த்துவைக்க வேண்டும்'' என்றார். இப்படி புராணிகர் சொல்லவும், வாமனாசாரியார் புன்முறுவல் புரிந்து பண்டிதரைப் பார்த்து, "உமக்கு வைஷ்ணவ சித்தாந்தத்தைப்பற்றிய சந்தேகங்கள் எனை? சர்வேஸ்வரனை அடைவதற்கு விசிஷ்டாத்துவித சித்தாந்தமே

சொற்பமானது. உமக்கு இதில் உள்ள சந்தேகங்களைச் சொன்னால் எனக்குத் தெரிந்தமட்டும் பதில் சொல்லுகிறேன்'' என்று சொல்லினர்.

புராணிகர் வாமனசாரியரை நோக்கி "சுவாமி! சித்து அசித்து ஈஸ்வரன் என்று மூன்றுபொருள் இருக்கிறதென்று விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே. சித்து என்பது என்ன? அசித்து என்றால் எதைச்சொல்வது? ஈஸ்வரன் என்பதற்கு அர்த்தம் விளங்கிவிட்டது. முன்னவை இரண்டிற்கும் கருத்து விளங்கும்படி சொல்லவேண்டும்'' என்று கேட்டனர். வாமனசாரியார் புராணிகரை நோக்கி "சுவாமி! சித்து என்பது சரீரத்தின் உள்ளிருந்து இயக்குகின்ற ஆன்மாவைக் குறிக்கும். இந்த ஆன்மா என்றும் அழியாததாய், எடுக்கும் சரீரங்கள்தோறும் சென்று கூடியதாய், சரீர அவஸ்தையின்விசாரம் தன்னைவந்து அடையாததாய், சுயம்புவாய், சித்துவடிவாய் விளங்குவதால், அதற்குச் சித்தென்று பெயர் அமைந்திருக்கிறது. அசித்து என்றால் அந்த ஆன்மாவை சரீரமாகவுடைய ஈஸ்வரனுக்குச் சரீரமாகாதபடி, பல பிறவியிலே புகுத்தும்படியான ஆணவ மாயாமலங்களிலே புகுத்தும் தன்மையதாய ஒன்றை அசித்து என்பது. இந்த அசித்தைப்பற்றி நிற்கும் ஆன்மாவை அதனினின்றும் வேறுபடுத்தி ஈஸ்வரனுக்கு உடமையாக்குவதுதான் விசிஷ்டாத்வைதம். இந்த ஆன்மாவை ஈஸ்வரனுக்கு உரித்தாக்குவது எப்படியெனில்; ஆன்மாவுடன்கூடிய சரீரம் செய்கின்ற காரியம் ஒவ்வொன்றும் தன்னால்செய்யப்படுகின்றது என்று எண்ணும் எண்ணம் மனதில் தோன்றாது எல்லாம் அவனாலேயே ஆகின்றது. அவன் ஆக்கிவைக்கிறான் என்று உணர்வதுதான் முதற்படியாகும். அப்படி ஆவதற்கு சரீரசுத்தியும், ஆத்மசுத்தியும் வேண்டும். சரீரசுத்தி பஞ்ச சமஸ்காரத்தாலும், ஆத்மசுத்தி நல்ல ஆசாரியனிடம் திருமந்திரோபதேசம் கேட்டாலும் அமையும். இந்த சாதனத்தால் நான் என்னும் தன்மை மாறியதும், எப்பொருளும் சர்வேஸ்வரனுடையதென்று தோன்றும். அது தோன்ற கண்ணினால் தோன்றுகின்ற வஸ்துவெல்லாம் ஈஸ்வரமயமாய் விளங்கும் அப்படி விளங்கும்பொழுது, எப்பொருளினிடத்தும் ஈஸ்வர சொரூபம் தோன்றக் காண்பதுவேதான் விசிஷ்டாத்வைத சித்தாந்தமாகும்'' என்று சொன்னார். புராணிகர் வாமனசாரியார் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைத் தெளிவாய் இனிய குரலுடனே சுருக்கமாய் யாவருடைய மனதிலும் பதியும்படி சொன்ன வார்த்தையைக் கேட்டு, இவரிடம் வேஷம்மாத்திரம் தானிருக்குமோவன்றி, விஷயமும் இருக்குமோவென்று நானினைத்தேனே. சித்தாந்த விஷயங்களில் நன்றாய் ஆராய்ச்சி செய்திருக்கிறார். இவருடைய பேச்சின் இனிமையைக் கேட்டாலே யாவரும் மயங்கிவிடுவர். வேஷமோ சொல்லும் திறமுடையதன்று. அழகோ ஸ்ரீமந்நாராயணன் என்றே சொல்லும்படி தோன்றுகிறார். இதற்கெல்லாம் மேலாய் சித்தாந்த நுணுக்கமும் அமைந்திருக்கிறதென்று மதித்து, அவரிடம் தான்வந்த காரியத்தைச் சொல்ல ஆரம்பித்தார் அதாவது, "சுவாமி! அடியேன் உம்மிடம்வந்தது ஒருகாரியத்தை நாடியேதான். அது என்னவென்றால் எமது அரசனாகிய முகுந்தராஜன் என்பவர் விஷ்ணு பக்தன். அவருக்கு நான் ஆஸ்தானபண்டிதனாயிருந்து, ஸ்ரீபாகவதத்தைப் படனம் செய்துவர அவன் சிரவணம் செய்துவருகிறான். அப்பொழுது நேற்றையதினம் நான் படனம் செய்துகொண்டு வரும்பொழுது ஒருவன் எவ்வளவு அறிவுடையவனாய் ஈஸ்வரபக்தியுடையவனாய் ஞானவானாய் அநுஷ்டானபரனாயிருந்தாலும் ஆசாரியனிடம் உபதேசம்பெறாது போவானாயின் அவன் மோக்ஷ பதவியை அடையமுடியாது'' என்று சொல்லிவிட்டேன்.

இதனைக்கேட்ட முகுந்தராஜன் தானும் நல்ல ஆசாரியனை அடைந்து உபதேசம்பெற விரும்பி, தனக்குத் தக்க ஆசாரியன் இன்னானென்று தெரிந்துகொள்ள முடியாதே என்று, என்னிடம் வருந்திச் சொல்லவும், அவனைத்தேற்றி, "நானே உனக்குத்தக்க ஆசாரியனைத்தேடி அழைத்துவருகிறேன்'' என்று மன்னவனிடம் விடைபெற்றுக்கொண்டு வந்தேன். மேலும் எனக்கு அறிமுகமானவர் அநேகம் பண்டிதர்கள் ஆசாரியராக அமர்ந்து, உபதேசம் செய்யும் யோக்கியதை யுடையவர்களாயிருந்தும், அவர்களை எல்லாம் நான் லக்ஷியம் செய்யாமல், உம்மையே மன்னவனுக்கு ஆசாரியனாகச் சேர்க்கலாமென்று கருதி, உம்மிடம் வந்தேன். அந்த முகுந்தராஜனைப்போல் உதாரத்துவம் வாய்ந்த மன்னவன் இந்த பூவுலகத்தில் ஒருவருமேயில்லை. அவனுக்கு நீர் ஆசாரியராய்விட்டால், அவன் உமக்கே உடல்-பொருள் - ஆவி என்னும் மூன்றையும் அர்ப்பணம் செய்வான். அவனும் அவனுடைய ராஜ்ஜியமும் உமக்கே சொந்தமாகும். இந்த உன்னதபதவியை உமக்குச் சேர்த்துவைக்கவேண்டும் என்கிற ஆசையுடையவனாக இங்குவந்தேன் நீர் அரசனுக்கு ஆசாரியனாகிவிட்டால் எனக்கு என்ன தருவீர்?'' என்று

சொல்லினன். இந்த வார்த்தையைக்கேட்ட வாமனுசாரியார் இந்திரபட்டம் தனக்கே கிடைத்தது போல் ஆனந்தமடைந்து, புராணிகரை நோக்கி "சுவாமி! நீர் சொல்லியபடி நான் மன்னவனுடைய ஆசாரியனுக அமைந்துவிட்டால், மன்னவனுல் கொடுக்கப்படும் பாதகாணிக்கை சன்மானம் எல்லாவற்றிலும் உமக்குப் பாதி தருகிறேன். நீர் வேறு நான் வேறு என்பதில்லை. அன்றியும் ஆசாரியர் என்றுல், அந்த ஆசாரிய பரம்பரையிற் பிறந்தவனுகவும் இருக்கவேண்டும். அதற்குரிய விருதுகள் யாவும் அமைந்திருக்கவேண்டும். நான் ஆசாரிய பரம்பரையிலேபிறந்து, அநேகமாயிரம் சிஷ்யர்களையுடையவனுய்ப் பல்லக்கு-சுருட்டி-குடை-சாமரம்-வெள்ளித்தடி-வெள்ளிபந்தம்-எக்காளம்-சின்னம் முதலிய விருதுகளும் உடையவன். இதுகளுடனே தான் நான் எங்கும் புறப்படுவது வழக்கம்" என்று சொன்னுர்.

இந்த வார்த்தையைக் கேட்ட ஆஸ்தான பண்டிதர் "சரி! எல்லாம் கூடிவிட்டது. இன்று இரவு பல்லக்குகட்டி, நாளை சூரிய உதயத்தில் மகார்ணவம் என்னும் பட்டணத்திற்குச் சென்று மன்னவனைக் காணவேண்டும். அதற்கென்று செலவிற்கு நான் திரவியம் கொணர்ந்திருக்கிறேன என்றுசொல்லி, நூறுவராகனை எடுத்து இதில் நீர் ஒப்புக்கொண்டபடி ஐம்பதுவராகன் எனக்கும் ஐம்பதுவராகன் வழிச்சிலவுக்குமாய்ப் பெற்றுக் கொள்ளும்" என்று சொல்லிக் கொடுத்து, அன்று அவர் திருமாளிகையிலேயே அமுது செய்துவிட்டு, விடிவதற்கு நான்கு நாழிகை நேரம் இருக்கும்பொழுது பல்லக்குகட்டி திருச்சின்னம் முழங்க, குடை-சாமரம்-சுருட்டி-ஆலவட்டம் முதலிய விருதுகளுடனே மகார்ணவம் என்னும் பட்டணத்திற்குவந்து ஆஸ்தான பண்டிதர் வீட்டிலே வந்து எழுந்தருளி இருந்தார்.

இப்படி இருக்கவும், பண்டிதர் அரண்மனைக்குச் சென்று மன்னவனை நோக்கி, "பரமசாந்தராய் சர்வேஸ்வரன்தானென்று சொல்லத் தகுந்தவராய் உண்மை ஞானியாய் உத்தமமான ஆசாரிய பரம்பரையில் பிறந்தவராய் அநேகமாயிரம் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து புனிதராகச் செய்தவராயுள்ள ஆசாரிய ஸ்வாமிகள் எழுந்தருளி இருக்கிருர்கள் அவரிடமே உபதேசம் பெற்றுக்கொள்ளவேண்டும்" என்று சொல்லினர். இதனைக்கேட்ட முகுந்தராஜன் "நீர் அவரைஎழுந்தருளச்செய்துவாரும்" என்று சொல்லிவிட்டு, ஆசாரியருடைய வருகையை எதிர்பார்த்து, பூரணகும்பம் ஏந்தி, பூசுரர் தன்னைச் சூழ நிற்கவும், தான் அரண்மனைவாசலிலே வந்து எதிர்பார்த்து நிற்கவும் வாமனுசாரியர் தனது பல்லக்கிலேறி உயர்ந்த சால்வை சாத்திக்கொண்டு துவாதச நாமமும் திருமணித்தாழ்வடமும் இலங்க, தன்முன்னே விருதுகள் பிடிக்க, எக்காளம்-சின்னம் என்னும் ஊதுகருவிகள் முழங்க, ஆஸ்தான பண்டிதனுடைய கிரகத்திலிருந்து மன்னவனுடைய அரண்மனையை நாடிவரவும், வேதியர் பூரணகும்பத்தைக் கையிலே கொடுக்கவும், அதனைவாங்கித் தனது பல்லக்கில் வைத்துவிட்டு, தன்னை சேவித்த வேதியர்களைப் புன்முறுவலுடனே கரங்களைக் குவித்து சேவித்தார். அப்பொழுது முகுந்தராஜன் அவருடைய தேஜசைக் கண்டு, இவர் சாக்ஷாத் கண்ணபிரான்தானேவென்று திகைத்து, விரைவாக வந்து அவருடைய திருவடிகளில் வீழ்ந்து சேவிக்கவும், தான் பல்லக்கிலிருந்து இரங்கி அரசனை ஆசீர்வதிக்கவும், மன்னவன் தனது அரண்மனைவாசலிலே தங்கப் பலகையைப் போட்டு அதில் எழுந்தருளப்பண்ணி, சொர்னகுடத்தில்கொணர்ந்த தீர்த்தத்தை அவர் திருவடிகளில் வார்த்து, அந்தத் தீர்த்தத்தைத் தனது தலையிலே புரோக்ஷித்துக் கொண்டு, அவரைக் கைலாகுகொடுத்து, அரண்மனையிலே அழைத்துச் சென்று, ஒரு பொன்னுசனத்திலே அவரை உட்காரவைத்து அவரைத் தோத்திரம் செய்து, அவருடைய அனுமதியால் தான் முன்னே அமர்ந்துக்கொண்டு, "சுவாமி! அடியேனை இந்தப்பவக்கடலினின்றும் கரையேற்றி, மோக்ஷபதவிக்கு சேர்க்கவேண்டும்" என்று வேண்டினன்.

இந்த வார்த்தைகளைக்கேட்ட வாமனுசாரியார் அரசனை நோக்கி "மன்னவா! நீ அநேக ஜன்மங்களில் செய்த பூர்வபுண்ணியத்தால் இந்த சிம்மாசன பதவியை அடைந்ததன்றி, வைஷ்ணவனுகவும்அமைந்தீர். இந்தமதமே கிரமமின்றி சர்வேஸ்வரனை அடைவதற்கு ஸ்வல்பமானது" என்று இனிய குரலுடனே அழகியசொல் நயம் பொருந்தப் பேசவும், இந்த வார்த்தைதனைக் கேட்ட மன்னவன் மகிழ்ச்சியடைந்து, இவருடைய விஷயங்கள் மிகவும் தெளிவாயிருக்கிறது. இவருக்கு அனுபவஞானம் எப்படியிருக்கிறதோ அதனை அறிந்துகொண்டு, இவரையே ஆசாரியனுக அமைய வேண்டுமென்று நினைத்து, ததியாராதனத்திற்கு வேண்டிய சாமக்கிரியைகளை ஏராளமாகத் தனது ஆஸ்தான பண்டிதருடைய வீட்டிற்கு அனுப்பிவிட்டு, வாமனுசாரியரைப் பணிந்து "சுவாமி! அடியேனைத் தன்னியனுக்குவதற்குத்

தேவரீர் இங்கேயே எழுந்தருளி யிருக்கவேண்டும்” என்று பிரார்த்தித்து, வாமனசாரியருடைய பல்லக்கைக் கட்டும்படி நியமிக்கவும், வாமனசாரியர் அரசனிடம் செலவு பெற்றுக்கொண்டு, அவனல் கொடுத்த பாதகாணிக்கையுடனே பல்லக்கிலேறி பண்டிதருடைய வீட்டிற்கு வந்து சேர்ந்தார்.

பண்டிதரும் பல்லக்கைப் பிடித்துக்கொண்டே தனது வீட்டிற்கு வந்து அரசன்கொடுத்த பாதகாணிக்கையைச் சரிபாதியாய்ப் பகிர்ந்து, தனக்கு ஒருபங்கை எடுத்துக்கொண்டு ஒருபங்கை வாமனசாரியரிடம் கொடுக்கவும், வாமனசாரியார் அதைப் பெற்றுக்கொண்டு பரமானந்தமடைந்தவராய் ஒவ்வொருநாளும் மன்னவர் அரண்மனைக்குச் சென்று விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப் பற்றித் தெளிவாய் மன்னவன் உணரும்படியாய்ச் சொல்ல, அநேக காணிக்கைகளைப் பெற்று, பண்டிதர் வீட்டுக்கு வந்து தான் கொணர்ந்ததைச் சரியாய்ப் பகிர்ந்து பண்டிதருக்கும் கொடுத்து, மகார்ணவம் என்னும் பட்டணத்திலே எழுந்தருளியிருந்தார்.

இவ்வண்ணம் வாமனசாரியார் என்பவர் ஆசாரிய பரம்பரையிலே பிறந்தவராயும் அதற்குரிய கம்பீரமான தோற்ற முடையவராயும், போதிய வளவு மதக்கல்வியில் பயிற்சியுள்ளவராயு மிருந்ததினல் முகுந்தராஜனைத் தனக்கு சிஷ்யனகக்கொண்டு அவனுக்கு உபதேசம் செய்துவிட்டு அவனல் செய்யப்படும் காணிக்கைகளையும் சரியாய்ப் பகிர்ந்து பண்டிதருக்கும் கொடுத்துவிட்டு, சிலநாள் தங்கியிருந்து மன்னவனிடம் தெரிவித்துக்கொண்டு தமது சொந்த ஊருக்கு எழுந்தருளினர். இப்படியிருக்கவும் வேறுமதத்தினராகிய ஆசாரியர்கள் யாவரும் முகுந்தராஜன் வைஷ்ணவ மதத்தினைச் சார்ந்துவிட்டானென்று கேள்வியுற்று அவனுக்குத் தமது மதத்தின் உண்மைகளை எடுத்துக்காட்டி, தமக்கு சிஷ்யனுக்கிக் கொள்ள வேண்டுமென்று கருதினவர்களாய்த் தனித்தனியே மகார்ணவமென்னும் பட்டணம் வந்து சேர்ந்து மன்னவனைக் கண்டு, தமது மதங்களின் தத்துவங்களையும், அவைகளின் உயர்வையும் எடுத்துக்காட்டி, மன்னவனை மகிழச்செய்து மிகுந்த காணிக்கைகளைப் பெற்று, அங்குள்ள திருமடங்களில் தங்கினவராய் இந்த உதாரசீலனை மன்னவனை நாம் நமது மதத்தின னுக்கினலன்றி, நமது மடங்களுக்கே பெருமை போய்விடுமென்று நினைத்து, தாமேயன்றி தம்மதங்களை ஸ்தாபிக்கக் கூடிய பண்டிதர்களையும் வருவித்துக்கொண்டு மன்னவனிடம் சென்று, எமது மதத்தில் ஏற்றம் இன்னதுதானென்று அநேக பிர்மசூத்திரங்களின் கருத்துக்களை எடுத்துக்காட்டவும், முகுந்தராஜன் அவற்றினைக் கேட்டு, “நீங்கள் சொன்னவையெல்லாம் நன்றே. இத்தகைய அரியபெரியவிஷயங்களை எடுத்துச்சொன்ன உங்களுக்கு எவ்வளவு திரவியம்வேண்டுமெனினும் நான் தருகிறேன். என்னை உங்கள் மதத்தில் சேரும்படி நீங்கள் விரும்பின் அதற்கு வாசாஞான சம்பந்தமான பிரசங்கங்களை விடுத்து வஸ்து நிர்ணயத்தினை நேர்நேராக உணர்த்தவேண்டும்” என்று தெரிவித்தான். இதனைக்கேட்ட குருக்களும் பண்டிதர்களும் உண்மைவஸ்துவான கடவுளை அடைய விரும்பின் அதற்கு முதலில் ஆசாரிய உபதேசம வேண்டும். அன்றியும், தைலதாரைபோல நீங்காத பக்திபண்ணவேண்டும். அவ்வாறுசெய்யின் ஈஸ்வரனைத்தாமே நேரில் காணலாம். அதுவுமன்றி மனோவாக்கிற்கு அதீதமானவஸ்துவினை நேர் நின்று காட்டவேண்டுமெனில் அது எப்படி முடியும்?” என்று சொல்லவும் முகுந்தராஜன் நகைத்து, ஆசாரியரையும் பண்டிதர்களையும் பார்த்து, “நீங்கள் கடவுளிடத்து நீங்காத பக்தியுடையவர்கள் தானே? உங்களுக்குக் கடவுள் தோற்றப்படானு? அவனை நீங்கள் கண்டதில்லையோ? நீங்கள் ஆசாரியராயிருந்தும் சர்வசுலபனுய் ஒரு ஆனை அழைப்பவனும் ஓடிவருபவனுன பரமாத்மனை மனோவாக்கிற்கு அதீதனென்கிறீர்கள். நீங்களே காண்டற்கரியவனுன பரந்தாமனை எப்படி நான் காணக் காட்டுவீர்கள்? உங்களுக்குப் பொருளாசையே ஒழியவில்லையே? இந்த வாசாஞானமானது சர்வேஸ்வரனை அடைவதற்குத் தினைத்துணையுமாகா. ஆதலால் நீங்கள் உங்களிருப்பிடம் சேருங்கள்” என்று சொன்னன்.

இதனைக்கேட்ட குருக்கள் மன்னவனை நோக்கி “அரசே! எங்கள் சக்தியை நீர் அறியீர். எங்களுடைய மடங்களில் எங்களைப்போல் குருவாகயிருந்த ஒவ்வொருவரும் அட்டமாசித்திகளையும் செய்து இந்த ஜகத்தினிலுள்ள யாவருக்கும் தெய்வமாய் விளங்கினர்கள். யாங்களும் வேதாந்த சாஸ்திர விசாரத்தாலும், வைதீக அனுஷ்டானத்தாலும் குறைவற்றவர்கள் இல்லை. எங்களை ஆசாரியராய்க் கொண்டவர்கள் இந்த உலகினில் எண்ணிறந்தவர்கள். உங்கள் முன்னேர்களுக்கெல்லாம் எங்கள் மடங்களில் நிரம்பிய விஸ்வாசமுண்டு. எங்கள் மடங்களில் உள்ள மண்டபங்கள் உங்கள்முன்னவராலேயே கட்டப்பட்டது. அதற்கு அடையாளமாக அந்த மண்டபத்தின் சுவரிலேயே சிலாசாசனம் செய்து வைத்திருக்கின்றனர். அங்ஙனமிருக்கவும், நீர் மாத்

திரம் எங்கள் மதத்தினை வெறுத்து, புதிதாய்த்தோன்றிய இராமானுஜ மதத்தினைச் சேர்ந்தது முறையல்ல. ஆதலின் நீரும் எமதுமதத்தினைச் சாருமென்றனர். இதனைக்கேட்ட முகுந்தராஜன் உங்கள்மதங்களின் உண்மைகளை நன்கு அறியேன். சூன்யவாதமான மாயாவாதத்தினைச் சிறந்ததென்று கொண்டு, கண்களிற் காண்பனவெல்லாம் பிர்ம மதமென்று வாய்மதம்பேசும் நீங்களோ வைஷ்ணவ சித்தாந்தத்தினைக் குறைகூறும் திறத்தினர். நீங்கள் அநுபவ ஞானமுடையவராயிருந்தால், உங்கள் மதத்தின் கொள்கைப்படி இந்த ஜகத்தை பிர்மசொரூபமாகக் காட்டுங்கள். இல்லையேல் உங்களை எளிதில்விடேன் என்று சொல்லவும், குருக்களும் பண்டிதரும் தாமே பிரபஞ்சத்தினைப் பிர்ம ஸ்வரூபமாகக் கண்டவர்களில்லை. ஆதலால் திகைத்துக்கொண் டிருந்தனர். இதனைக்கண்டமன்னவன் தனது காவலரைநோக்கி, "இவர்கள் குருக்கள் என்று பெயர் வைத்துக்கொண்டு, தமது வாசா ஞானத்தால் அறியாமையுடைய மனிதரை எமாற்றி, சிஷ்யன் என்று தமக்கு அடிமையாக்கிக்கொண்டு, பொருள்களை அவர்களிடமிருந்து கவரும் வஞ்சகர்கள். ஆதலால், இவர்களைக் கைதுசெய்து சிறைக்கூடத்திற்குக் கொண்டு செல்லுங்கள். அங்கு நின்றும் இவர்கள் பிர்மத்தியானம் செய்து பிர்மத்தைக் காணட்டும்" என்று சொல்லி விட்டுத் தனது கொலுக்கூடத்திலிருந்து எழுந்து செல்லவும், காவலர்கள் அங்கு கூடியிருந்த குருக்களையும் சாஸ்திரிகளையும் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் அடைத்து வைத்துவிட்டு மன்னவனிடம் வந்து விஷயத்தைத் தெரிவித்தனர்.

மன்னவன் ஆணையால் சிறைக்கூடம் புகுந்த குருக்களும் பண்டிதர்களும் சிறைக்கூடத்திலேயே முட்டிக்கொண்டும் மோதிக்கொண்டும் "பாழும் தெய்வமே! உனக்குக் கண்ணில்லையா என்று கடவுளை வைதுகொண்டும், அறுசுவையுடைய அருமையான உணவினையுண்டு, பஞ்சணைமெத்தையிற் படுத்து உறங்குவதுபோய் சிறிதும் காற்றேட்டமில்லாத இந்தசிறைச்சாலையிற்கிடந்து வருந்தும்செயல் வந்ததே. இதற்கென்ன செய்வோம்?" என்று கதறிக்கொண்டிருந்தனர்.

அரசன் இதனையெல்லாம் ஒற்றர்களால் அறிந்து, இவர்கள் கடவுளை அறியும் கருத்தினராயின் சுகதுக்கங்களைச் சமமாய்ப் பாவிக்கவன்றோ வேண்டும். அதனைவிடுத்து சுகம் அநுபவிக்கும்பொழுது ஆனந்தமுற்று துக்கம் நேர்ந்தவிடத்து வருந்துகின்ற இவர்களோ கடவுளைக் காணத்தகுந்தவர்கள். ஆயினும், சர்வஜீவ தயாபரனை சர்வேஸ்வரனை இவர்கள் காணத்தக்கவரில்லை ஆயினும் நானே இவர்கள் சர்வேஸ்வரனைக் காணும்படிக்குச் செய்வதோடு நானும் இவர்கள் காரணமாகச் சர்வேஸ்வரனைத் தரிசிக்கிறேனென்று தன்மனதில் நினைந்து, ஒர்நாள்சிறைச்சாலைக்காவலரை அழைத்துமுன்னே சிறைச்சாலையில் அடைத்து வைத்திருக்கும் குருக்களையும் பண்டிதர்களையும் கொண்டு, நமது ஊருக்கு மேற்கே "ஒருகுளம் வெட்டச்செய்யுங்கள்" என்று தெரிவிக்கவும், காவலர்கள் தங்களிஷ்டப்படியே "குளம்வெட்டும்படி செய்கிறோம்" என்று தெரிவித்து மன்னவனைப் பணிந்து, சிறைச்சாலைக்குச் சென்று பண்டிதர்களையும் குருக்களையும் இழுத்து வந்து குளம்வெட்டுவதற்குரிய மண்வெட்டி-கூடை-பிக்காசு முதலிய கருவிகளைக் கையிலே கொடுத்து, மன்னவன்கூறிய யிடத்திற்கு அழைத்துச் சென்று "நீங்கள் இவ்விடத்தில் விரைவினில் குளத்தைவெட்டுங்கள்" என்று சுசீரமாகச் சொல்லவும், அவர்கள் கண்ணீரைவடித்துக்கொண்டு, தலைவிதியை நொந்துகொண்டு, மண்வெட்டிகொண்டு வெட்டி கூடைகளில்போட்டு, கரையிலே கொண்டுபோய்க்கொட்டி கைகால்களும் சோர்ந்து, சரீரமும் மெலிந்து, மண்வெட்டி பிடிப்பதற்கும் வழியின்றி கைகளில் கொப்புளங்கள் தோன்றவும், கூடைதூக்கச் சக்தியின்றி தலைகள் எரியவும், கண்களில் நீர்சொரியவும், வெட்டும்பொழுதெல்லாம் ஹே சர்வேஸ்வரா! தீனபந்து! நீர் நிரபராதிகளானஎங்களைக்காக்க வரப்படாதோ! இந்தக்கொடியசிறையிலிருந்து விடுவிக்கப்படாதோ! உமது கருணைக்கு நாங்கள்மாத்திரம் இலக்கு இல்லையோ! யாதொரு குற்றமும் செய்யாத எம்மை இந்நகர் ஆள்பவன் கொடுமையாய்ச் சிறையில் அடைத்து வருத்துவது நீதியோ! இப்படி கொடுங்கோல் மன்னவனும், உமது பக்தனென்று நீர் கொள்வீராயின் நீரும் இவனுடனே சேர்ந்த கொடியவரன்றோ! நீர் எம்மை இந்தச் சிறைவாசத்திலிருந்து, அகற்றுவிடின் உமக்கு சர்வரக்ஷகன் என்னும் பெயர் போய்விடும் என்று வருந்தி, மன்னவனிட்ட வேலையைச் செய்யாது நின்றால், இந்தப்பொல்லாத காவலர் அடிப்பரே என்று குளத்தினை வெட்டிக் கொண்டிருந்தனர்.

இப்படியிருக்கவும் முகுந்தராஜன் சர்வேஸ்வரனைக் காணவேண்டுமென்னும் கருத்துடையவனாய், அவனுடைய திருவடித்தாமரைகளிலே தனது உள்ளத்தினைப் பதித்துத், தன் வாயால் அவன் நாமமே சொல்லித் தனது சரீரத்தை அவனுடைய கைங்கரி

யத்திற்கே அர்ப்பணம் செய்து, எந்தவஸ்துவையும் ஸ்ரீமந் நாராயணனாகப் பார்த்துக்கொண் டிருக்கும் பொழுது, தீனபந்துவாகிய பரந்தாமன் குருக்களும் பண்டிதர்களும் துயரத்தால் தம்மை நினைப்பதை யும் முகுந்தராஜன் தன்னையன்பால்நினைப்பதையும், தனது திருவுள்ளத்திற் கொண்டு, அந்தணர்களைச் சிறை மீட்கவும், அரசனுக்குச் சேவைதந்தருளவும் விரும்பி, நான்மறைகமழும் நாவினையும், மிஞ்சி தரித்த திருவரையினையும், ஸ்ரீகிருஷ்ணசின்னம் திகழும் திருமார்பினையும் உடையவராய்ப் பிர்மதேஜசு தனது திருமுகத்திலே துலங்க, பிர்மசாரியாக உருவம் தரித்து, ஆசாரியர்களும் பண்டிதர்களும் குளம் வெட்டிக்கொண்டிருக்கும் இடத்திற்குவந்து அவர்களைப் பார்த்து, "சுவாமிகளே! உங்களைப்பார்த்தால் உத்தமர்களாகவும் பண்டிதர்களாகவும் தோன்றுகின்றது. நீங்கள் சதாவும் சர்வேஸ்வரனைத் தியானித்துக்கொண்டு மோக்ஷவுலகினை அடைவதை விடுத்து, சாமான்னியமான கூலிவேலை செய்பவர்கள்போல மிகுந்த துன்பத்துடனே இங்கு குளம் வெட்டிக் கொண்டு வருந்துவதேனோ?" என்று கேட்கவும், அவர்கள் யாவரும்கூடி மாதவ பிர்மசாரியன் முன்னே வந்து "சுவாமி! நாங்கள் அநேக மடாலயங்களின் நிர்வாகராகிய குருக்கள். இவர்கள் யாவரும் சதுர்சாஸ்திர பண்டிதர்கள். எங்கள் விதி வசத்தால் இந்தராஜ்ஜியத்தில்வந்து, இந்த நகருக்கு மன்னவனாகிய முகுந்தராஜனை எங்கள் மதத்தினிற் சேர்க்க விரும்பி அவனுடனே எங்கள் மதத்தினில் உள்ள யேற்றங்களை எடுத்துச் சொன்னோம். அதற்கவன் நீங்கள்பேசும் வாசாஞானம் எனக்கு தேவையில்லை. கடவுளையான் காணக்காட்டுங்கள் என்றான். நாங்கள் மனோவாக்கிற்கு அதீதனான கடவுளைக் காட்டுவது எங்ஙனமென்றோம். இதற்காக எம்மைச் சிறைக்கூடத்திற்கு அனுப்பியதுமன்றி, இதோ இந்தப் பாவிகள் கையில் ஒப்புவித்து, இந்தக்குளத்தையும் வெட்டச் சொன்னான். இந்த உலகில் உள்ளவர்கள் எல்லாம் எங்கள் சிஷ்யராகயிருந்து, எம்மைப் போற்ற மடாதிபதிகளாக பல்லக்கிலேறி, பவனி போகும் சிறப்புடையோமாகிய நாங்கள் அநேக ராஜசபைகளிலும், வித்வசபைகளிலும், சன்மானங்கள் பெற்று உயர்ந்த இந்தப்பண்டிதர்களும் சிறைவாசம் செய்வதுமன்றி இந்தக் குளத்தையும் வெட்டுகிறோம். சற்று தயங்கி நின்றால் இந்தக் கொடும்பாவிகள் 'களவாடிய கள்ளர்களை வேலைவாங்கும் பொழுது எப்படி அடிப்பாரோ' அதைப்போல எங்களையும் பிரம்பால் அடிக்கின்றார்கள். இந்தக் குளம் ஆயிரம் கூலிவேலை செய்பவர்கள்கூடி வெட்டினால் குறைந்தது ஆறுமாதமாவது செல்லுமே. இதனைச் சுகவாசிகளான நாங்கள் வெட்டவேண்டுமென்று நியமித்து விட்டான். அநேகமாக எங்கள் கருவிகரணங்களெல்லாம் சோர்ந்து விட்டது. இன்னும் இரண்டு மூன்று நாளையில் எமதுயிரும் போய் விடும். எங்களை இந்த ஆபத்திலிருந்து விடுவிப்போர் யாவருமில்லாமல் அநியாயமாய் உயிர்விடப்போகின்றோம் என்று கண்ணீர்பெருக்கி முறையிட்டனர்.

இவ்வாறு முறையிடும் வேதியர்களின் மொழியைக் கேட்ட ஸ்ரீ ஹரிபரந்தாமன் அவர்களிடம் இரக்கம் காட்டி, அந்தோ! அந்தணரை இவ்வளவு கொடுமையாய் நடத்தும் மன்னவரும் இவ்வுலகத்திலிருக்கின்றனரா? இந்தக் கலியுகத்திலே நமக்குரிய சாபானுக்கிரக சக்திபோயது தான் இவ்வாறு துன்பமடைவதற்குக் காரணமாயது. ஆயினும் குற்றமில்லை. நாம் மன்னவன் ஆணைக்குக் கீழ்ப்படியவேண்டுமாயின் குற்றவாளியாக யிருக்கவேண்டும். அப்படி குற்றவாளியாக இல்லாதபோது, வேதியர்களாகிய எமக்கு மன்னவர் கீழ்ப்படிந்து வணங்க வேண்டியவரேயன்றி வேறல்ல. ஆகையினால், நீங்கள் வேலைசெய்யாமல் நிறுத்திவிட்டுக் கரையேறி விடுங்கள். இதனால் "உங்களுக்குவரும் துன்பத்திற்கு நான் ஆளாகிறேன்" என்று சொல்லவும், இந்த வார்த்தையைக்கேட்ட குருக்களும் பண்டிதர்களும் நாம்படும் துன்பத்தினைக் கண்டு, ஸ்ரீஹரியே நம்மை ரக்ஷிக்க இந்தப் பிரமசாரியாய் வந்திருக்க வேண்டும் என்று நினைத்து, ஆனந்தவெள்ளத்திலே ஆழ்ந்தினவர்களாக மண்வெட்டி - பிக்காசு - கூடை முதலியவற்றை எறிந்து விட்டு கரையில் வந்து ஓர் ஆலமரத்தின் நீழலில் உட்கார்ந்தனர்.

இப்படி உட்காரவும், இதனைக்கண்ட காவலர்கள் அடங்காத கோபத்துடனே வேதியர்கள் நிற்குமிடத்திற்கு வந்து, மிகுந்த கோபத்துடனே பிரம்புகளை ஓங்கிக்கொண்டு, நீங்கள் ஏன் வேலையை நிறுத்திவிட்டு கரையேறினீர்கள்? என்று கேட்கவும், அப்பொழுது பிர்மசாரியாய் எழுந்தருளிய மாதவன் அவர்களை நோக்கி "உங்களுக்குக் குளம்தானே வெட்டி முடிக்கவேண்டும் இவர்கள் வெட்டினால் என்ன? இவர்கள் செய்யவேண்டிய வேலை குறைவின்றி நடக்கின்றது. அதோ பாருங்கள் என்று சொல்லவும், காவலர்கள் குளம்வெட்டும் இடத்தினை நோக்கவும் ஒருவரோங்கி வெட்டாமலே பிக்காசுகள் தானே பெரியபெரிய மண்கட்டிகளை வெட்டுவதையும், மண்வெட்டிகள் தானே அக்கட்டிகளைக்

கூடைகளில் தள்ளுவதும், அக்கூடைகள் தானே அதுவே கரையில்வந்து மண்ணைக் கொட்டிவிட்டு ஓடுவதும், இமைகொட்டும் பொழுதிலேயே ஆயிரம் பேர்கள் பலமாதங்களாய்ச் செய்யவேண்டிய வேலை நடப்பதையும் பார்த்தனர். பார்த்தும் திகைத்துத் தமது மன்னவனிடம் சென்று வணங்கி "தமது ஆக்கினையால் சிறையில் அடைக்கப்பட்ட குருக்களையும், பண்டிதர்களையும்கொண்டு குளத்தை வெட்டிக்கொண்டிருக்கும்பொழுது, ஓர் பிர்மசாரியரான வேதியர்வந்து நீங்கள் வேலைசெய்யத் தேவையில்லை. கரை ஏறுங்கள். மன்னவன் உங்களுக்கு விதிக்கும் தண்டனைக்கு நானாகிறேன்" என்று சொல்லி, ஆயுதங்களைப் போட்டுவிட்டுக் கரையேறச் சொன்னார். அவர்களும் அவ்வாறே செய்தனர். நாங்கள் அவர்களிடம்சென்று வேலையைச்செய்யும்படி சொல்லவும், அந்த பிர்மசாரியரான வேதியர் "உங்களுக்கு வேலை தானே நடக்கவேண்டும். வேலை நடக்கிறதா? இல்லையா? என்பதைப்பாருங்கள்" என்று சொல்லவும், நாங்கள் குளம்வெட்டும் இடத்தினைத் திரும்பிப் பார்த்தோம். பிக்காசகள் தானே பெரிய பெரிய கட்டிகளை வெட்டுகின்றன. வெட்டிய கட்டிகளை மண்வெட்டிகள் தானே கூடைகளில் தள்ளுகின்றன கூடைகள்தானே விரைவாகக் கரையில் கொட்டுகின்றன. ஒரு இமைப்பொழுதில் ஆயிரம் கூலி ஆள்கள் பலமாதம் செய்யவேண்டிய வேலை நடந்துவிட்டது. நாம் சென்று பார்க்குமுன் குளம் வெட்டி முடிந்திருக்கும் என்று தெரிவிக்கவும் இதனைக்கேட்ட மன்னவன் அதிசயமுற்று, விரைவாக எழுந்து, குளம் வெட்டும் இடத்தினைவந்து நோக்கவும், பண்டிதர்கள் குருக்களுடனே ஆலமரத்தடியில் உட்கார்ந்திருப்பதும், குளம் வெட்டும் கருவிகள் தமக்குத் தாமே வேலைசெய்வதும், பல மாதங்கள் செய்யவேண்டியவேலை முடிந்திருப்பதும் கண்டு அங்கு புதியவராக வந்திருக்கும் பிர்மசாரியான வேதியரை உற்று நோக்கி, "இவர் ஸ்ரீமந்நாராயணனே" என்று தெரிந்துகொண்டு அவருடைய சரணாரவிந்தத்தில் விழ்ந்து தண்டம் சமர்ப்பித்து எழுந்து நின்று அஞ்சலியஸ்தனாய் நின்று, தனது வாயார தோத்திரம் செய்யவும், பகவான் அரசனை நோக்கி, "நீ நிரபராதிகளான இவர்களுக்கு இத்தகைய தண்டனை விதிக்கப்போமோ? இவர்களைச் சிறையிலிருந்து விடுவித்து இவர்களுக்குச் சன்மானம் செய்து அனுப்பும்" எனவும், அரசனும் அந்த ஆசாரியர்களுக்கும் பண்டிதர்களுக்கும் வேண்டிய சன்மானங்களைச் செய்து அனுப்பிவிட்டு, "சுவாமி! தேவரீரைச் சேவிக்கவேண்டியே அடியேன் இந்த வேதியர்களுக்கு இடரிழைத்தேன். அடியேன் அந்தணர்களுக்குச் செய்த குற்றத்தினைப்பொறுத்து என்னை ரக்ஷிக்க வேண்டும். உமது திருவுருவத்தைச் சேவிக்க வேண்டி, நான் செய்த பூஜையினை ஏற்றுக்கொண்டு அடியேனைக் காத்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

ஸ்ரீபகவான் அக்கணமே பஞ்சாயுதங்களுடனும், கௌஸ்துவமணி துலங்கும் திருமார்புடனும், திவ்ய கிரீட கேயூரங்களுடனும், அன்றலர்ந்த செந்தாமரைமலரைப் பழிக்கும் திருக்கண்களுடனும், திருமகள் சமேதனாய் நின்று சேவைதந்தருளவும், முகுந்தராஜன் ஸ்ரீயப்பதியான ஸ்ரீமந்நாராயணனைச்சேவித்து, அவருடைய திவ்யநாமங்களைப்பாடி தனதுராஜசெல்வத்திலுள்ள ஆசை எல்லாம் அற்று, பகவத் சேவையிலே விருப்பம் செல்ல தோத்திரம் செய்து நிற்கவும், ஸ்ரீபக்வான் முகுந்தராஜனை நோக்கி, "நீ உண்மையான பக்தி செய்ததால் என்னைச் சேவிக்கப் பெற்றனை. நீ இன்னும் பலநாள் இருந்து உனது அரசுரிமையும் கவனித்து; வருடம் தோறும் பண்டரிபுரத்துக்குச் சென்று என்னைத் தரிசித்து, முடிவில் பரமபதத்தினை அடைவாய்" என்று திருவாய்மலர்ந்தருளிவிட்டு அந்தரத்யானமாக மறைந்தருளினார்.

முகுந்தராஜன் பிர்ம ருத்ரேந்திராகிய தேவர்களாலும் காண்டற்கரியவராகிய ஸ்ரீயப்பதியைத் தனது கண்களாற் கண்டு பிர்மானந்தம் கொண்டு, அவருடைய நாமசங்கீர்த்தனம் செய்துகொண்டு சிலநாளிருந்து முடிவில் வைகுந்தமா நகரத்திற்கு எழுந்தருளி நித்யானந்தமடைந்தார்.

## வாழி விருத்தம்.

மையருமலரான்கேள்வன் மாமலர்ப்பதங்கள்வாழி
துய்யராமடியார்தங்கள் துணைமலரடிகள்வாழி
செய்கோலோச்சியாண்டு தீர்தனதடியைமேய
பொய்யருமுகுந்தராஜன் பொன்னடிக்கமலம்வாழி.

முகுந்தராஜன் சரித்திரம் முற்றிற்று.